"திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை" ஸீரீஸ் நெ. ௧.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்திருவடிகளே சரணம்.

உயர்வறவுயர் நலமுடையவனை அயர்வறுமமரர்களதிபதியால் மயர்வறமதிநலமருளப் பெற்று, அந்தமிழால் நற்கலைகளாய்ந்துரைத்த ஆழ்வார்கள் பன்னிருவருள், மங்களாசாஸநத்தில் முற்றுள்ளவாழ்வார்கள் தங்களார்வத் தளவுதானன்றிப் பொங்கும் பரிவாலே 'பெரியாழ்வார்' என்னும் பெயர்பெற்ற பட்டர்பிரான் அருளிச்செய்த

## திருப்பல்லாண்டும்,

# பெரியாழ்வார் திருமொழியும்.

இவை,

பெருமாள்கோயில்

பிரதிவாதி பயங்கரம்-அண்ணங்கராசாரியரால்,

முன்னோருரைகளை முற்றுந்தழுவி இலக்கணமுறைமைக்கிணங்கும்வகையால் எல்லார்தமக்கு மின்பம்பயக்குமாறு எளியநடையில் தெளிய எழுதப்பட்ட

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் உரையுடன்,

வ. தாமோதர முதலியாரால்

தம்முடைய

பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

மதராஸ்:
1914.



இதன் விலை ரூபா 3.] [வி. பி. சார்ஜு தனி.



பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்ஸ்வாமி.

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.





# ப தி ப் பு ரை.

**அருளிச்செயல்களி லன்புற்று மருளற்ற மதிபெற்ற ஆரிய நண்பர்காள்!**

இந்தவுலகி லிருள் நீங்க வந்துதித்து அந்தமிழால் நற்கலைக ளாய்ந்துரைத்த
ஆழ்வார்களின் அருளிச்செயல்களாகிய திவ்வியப் பிரபந்தங்களின் அரும்பெரும்
பொருள்களை ஆடவர், பெண்டிர், பெரியோர், பேதையர் என்னும் வாசியற
அனைவரும் அநாயாஸமாக அறிந்து அந்தமில் பேரின்பமடைந் துய்யுமாறு முன்
னோருரைகளை முற்றுந் தழுவி இலக்கண முறைமைக்கு இணங்கும் வகையால்
எல்லார் தமக்கு மின்பம் பயக்கும் பரிசு எளிய நடையில் தெளியதோ ருரை
யெழுதி வெளியிட வேணுமென்னும் விருப்பம் அடியேனுக்கு நெடுநாளாக
நெஞ்சிற் குடிகொண்டிருந்தது; இருக்கையில், பல பெரியோர்களின் பேராணை
யும், பல்லாண்டுகளாகப் பற்பல தொன்னூற்களை அச்சியற்றிவருகின்ற சென்
னைப் பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்து அதிபதிகளான தாமோதர முதலியாரவர்க
ளின் வேண்டுகோளும் அவ்விருப்பத்தை நிறைவேற்றவல்ல நல்லதோர் தரு
ணம் வாய்க்கும்வகை செய்து, அதற்கு உரிய முயற்சியில் என்னைத் தூண்டின
மையால், 'விரலுக்குத் தகாத வீக்க' மென்னும் பழமொழியை விரியச்செய்வே
னாக, ''**திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகை**'' என்னும் பெயரால் ஓர் நாலாயிர
வுரையை வரையத் தொடங்கினேன். பின்னர், மேற்கூறிய சனமனம் பொருந்
திய தாமோதர முதலியாரவர்களைக்கொண்டு இதனை அச்சிட்டு வெளியிடுவிக்க
வும் துணிவுண்டாயேனாயினேன்.

இவ்வுரைக்கு மூலமோ திவ்ய ப்ரபந்தம்; அம்மூலந்தனக்கு விஷயமோ
* அயர்வறுமமரர்களதிபதி. மூலகர்த்தாக்களோ * மயர்வற மதிநல மருளப்

பெற்றோர். பாஷையோ இலக்கிய இலக்கண வரம்பு மிக்குடைய பழைய செழிய தெய்வத்தமிழ். ஆதரித்தவர்களோ * ஞானங்கனிந்து நலங்கொண்டு நாடொறும் நையும் ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையரான நற்குரவர். இவ் வகை வைலக்ஷண்யங்கள் விசேஷித்து அமையப்பெற்ற அருளிச்செயல் எங்கே! ஐயம் திரிபு அறியாமை யென்னும் குற்றங்கள் மூன்றனோடு கூடிய சிற்றறிவினனாய் முக்குணங்கட்கு வயப்பட்டொழுகுகின்ற சிறியேனாகிய யானெங்கே! விஷயத்தின் பெருமையையும் எனது சிறுமையையும் நோக்குங்கால், தெள்ளறிவுடைய சீரியோர் பலர் சேர்ந்து செய்தற்குரிய இச்செயலை யான் மேற்கொண்டது என்றனக்கே விலவறச் சிரிப்பை விளையாநின்றது.

> " புகழ்தரு மறைக்கு மேலோன் புடார்ச்சன புரத்தின் மேன்மை
> நிகழ்தர நிகழ்த்த வல்லை நீகொலென் றனது நெஞ்சே!
> இகழ்தர வெழுந்த நாணு மிச்சையுந் தினம்போ ராடி
> அகழ்தர நாணந் தோற்ற தாசையே வென்ற தம்மா "

எனக் கூறியதற்கேற்ப, இவ்வரிய பெரியசெயலில் நாணமிக் குடையேனாயினும், பலர்க்கும் இது பயன்படச் செய்யவேண்டுமென்னும் பேரவாவால் நாணத்தை விடுத்து வெளிவர விசைந்தேன்.

> " தெருளுற்ற வாழ்வார்கள் சீர்மையறி வாரார்
> அருளிச் செயலையறி வாரார்—அருள்பெற்ற
> நாத முனிமுதலா நந்தே சிகரையல்லால்
> பேதைமன மேயுண்டோ பேசு."

என்று மாயரரங்கனுக் கிடருள்செய்த விசதவாக் சிகாமணியான மணவாள மாமுனிகள் தாமே அருளிச்செய்வரானால், சீலமில்லாச் சிறியனாய யானோ இவ் வருளிச்செயல்களின் திறமாராய வல்லேன்!

இனி, இத்திவ்ய ப்ரபந்தங்களின் உட்புகுந்து செல்வார்க்குச் சில பாடல்கள் சொல்லுந் தொடரு மசையுஞ் சீரும் அடியுந் தொடையும் சந்தமுமாகிய இவை தொன்னூ லிலக்கணமாய தொல்காப்பிய முதலியவற்றிற்கும் பின்னூலிலக்கணமாய நன்னூல் முதலியவற்றிற்கும் மாறுபட்டிருக்குமெனக் கூறற்கு இடந்தரும். ஆயினும், அவ்விடங்களில் வியாக்கியானங்களையும் வழங்கிவரும் பாடங்களையும் இலக்கண விதிகளையுந் தழுவி எனது ஸ்வாதந்திரியத்திற்கு இறையும் இடந்தாராது எவ்வளவு திருத்தம் செய்பலாமோ, அவ்வளவு இன்றியமையாத திருத்தங்களை என் சிற்றறிவிற்கு எட்டியவாறு செய்துளேன். அருளிச்செயற் பாடங்களில் மாறுபாடுகள் நேர்தற்குப் பலவகைக் காரணங்கள் உள்ளன. இவை ஸம்ஸ்கிருத வேதம்போல் விஜாதீய பாஷையிலன்றித் தென்னாட்டிலுள்ளார்க்குப் பிறப்பாதி இறப்பீறாக வ்யவஹார விஷயமாகிவருகின்ற தமிழ்ப்பாஷையிலாதலால், அச்சொற்களின் பொருள்நிலைமையை உள்ளவாறு உணராது ஆபாத வுணர்ச்சியாகச் சிற்சில சொற்களுக்குத் தம் நெஞ்சில் தோன்றியவாறு பொருள் நினைத்து அப்பொருட்கு ஏற்பச் சொற்களையும் உச்சரித்துவருவது பலர்க்கு இயல்பாயிருப்பதை அடியேன் பரிசீலித்திருக்கின்றேன். சில நிதர்சனங்களுங் காண்மின்;—

| சுத்தபாடம். | ஸ்வச்சந்த பாடம். |
|---|---|
| 1. இராக்கதர் வாழிலங்கை. | 1. இராக் **கதிர்**வாழி லங்கை. |
| 2. பல்பறை கொட்டநின்று. | 2. பல்பறை **கூட்டனென்**று. |
| 3. அசோதைக்குப் போத்தந்த. | 3. அசோதைக்குப் **போய்த்** தந்த. |
| 4. தப்பின பிள்ளைகளைத் தன மிகு சோதிபுக. | 4. தப்பின பிள்ளைகளைத் **தலி** மிகு சோதிபுக. |
| 5. தங்கிய பொன்வடமுந் தாளநன் மாதுளையின் பூவொடு. | 5. தங்கியபொன்வடமுந் **தாது** நன்மாதளையும் பூவொடு. |
| 6. என்மணி வண்ணனிலங்கு பொன் தோட்டின்மேல். | 6. என்மணி வண்ண னிலங்குபொன் **தோட்டில்**மேல். |
| 7. ஆரத்தழுவாவந்தச்சோவச்சோ. | 7. ஆரத்தழு**வாய்**வந்தச்சோவச்சோ |
| 8. மஞ்சளும் செங்கழுநீரின் வாசிகையும். | 8. மஞ்சளும் செங்கழு **நீரும்**...... |
| 9. சொப்படநான் சுட்டுவைத்தேன். | 9. சொப்**பிட** நான் சுட்டுவைத்தேன். |
| 10. எருதுகளோடு பொருதி. | 10. எருதுகளோடு பொருதும். |
| 11. சீமாலிகனவனோடு. | 11. சிமாலி கணவனோடு. |
| 12. இமையவர்க்கென்று மரியாய். | 12. இமையவர்க் **கோன்றம**றியாய். |
| 13. எம்மைச்சரணென்று கொள்ளென் றிரப்ப. | 13. எம்மைச்சர**ணென்று** கொள்ளென் றிரப்ப. |
| 14. பேசவுந் தரியாத பெண்மையின். | 14. பேசவுந் **தெரி**யாத பெண்மயில், |
| 15. நீங்கள் தேனித்திருமினோ. | 15. நீங்கள் **தேறித்** திரிமினோ. |
| 16. அன்றுமுத லின்றறுதியாக. | 16. அன்றுமுத லின்றறுதியா. |
| 17. அங்கோர் நிழலில்லை நீரில்லை. | 17. அங்கோர் நிழலில்லை **நீரு**மில்லை. |
| 18. இனியென் திருக்குறிப்பே. | 18. **இனி உன்** திருக்குறிப்பே. |
| 19. ஆயர் சிறுமியரோமுக்கு. | 19. ஆயர் **சிறுமயிரோ** உமக்கு. |
| 20. கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில். | 20. கருத்தைப் பிழைப்பித்**தகஞ்**சன் வயிற்றினில். |
| 21. ஒட்டராவந் தென்கைப்பற்றி. | 21. ஒட்ட **ராய்வந்** தென்கைப் பற்றி. |
| 22. ஊழியான் கைத்தலத்திடரில் குடியேறி. | 22. ஊழியான் கைத்தல**த்து - இடரில்** குடியேறி. |
| 23. அழகப்பிரானார் தம்மை யென்னெஞ்சத் தகப்படத் **தழுவ** நின்று. | 23. .........**தழுவி** நின்று. |
| 24. வாழ்த்திமால்கொள் சிந்தையராய். | 24. வாழ்த்திமால் **கொண்ட** சிந்தையராய். |
| 25. வீசி மேல்நிமிர்ந்த தோளினில்லை யாக்கினாய். | 25. .........நிமிர்ந்த **தோள் இல்லை** யாக்கினாய். |
| 26. சலமிலா வணிலும் போலேன். | 26. சலமிலா **வணிலம்போ**லே. |

இவ்வைபோல்வன பல்லாயிரமெடுத்துக் காட்டலாம். கீழ்க்கூறிய பாட பேதங்கள், 'பல ஸ்ரீகோசங்களை அவிழ்த்துக் கட்டினோம்' என்று பெருக்க

மதித்திருப்பாருடைய அநுஸந்தானங் கொண்டறிந்து எழுதப்பட்டனவேயன்றி, அறிவு நாற்றமே யற்றிருப்பார் வாயினிற்கொண்டு குறிக்கப்பட்டனவல்ல.

எழுத்துப் பயிற்சியென்பதற்கே அவகாசமற்ற சிறுவர்கள் வடமொழி வேதத்தை ஓதி உருச்சொல்லி உறுதியாக அமைத்துக்கொண்டு பாராயணம்பண்ணத் தொடங்கினால், அச்சிறுவர் வாய்மொழியில் ஒரு எழுத்துப்பிழையும் நம்மால் கண்டறிய முடியவில்லை. அச்சிறுவர்களே இத்திவ்ய ப்ரபந்தங்களை ஓதி உருவேற்றிச் சேவித்தால் 'இஃது ஏதோ வேறு பாஷை' என்று தோன்றும்படியான நிலைமை நேர்கின்றது.

வடமொழி வேதத்தில் வல்லவரெனப் புகழ்பெற்றுள்ளாரனைவரும் அவ்வேதத்தை முதலெழுத்தாதி முடிவெழுத்தீறாக எழுதத் தொடங்குவர்களானால் ஒருவகைப் பிழையுமின்றி வெகு அழகிதாக எழுதித் தலைக்கட்டிவிடுவர்கள்; அங்ஙன் தமிழ் வேதத்தில் விசேஷமான வல்லமைபெற்றவர்கள் அத்தமிழ் வேதத்தை எழுதத் தொடங்குவர்களானால், "அந்தோ! ஆழ்வார்கள் இத்திவ்ய ப்ரபந்தங்களை அருளிச் செய்யாதொழியலாகாதா?" என நினைத்து மனங்கொதிக்கும்படியான நிலைமை நேரிடுமென்பதில் ஐயுறுவார் ஆருமில்லையே.

"இம்மாறுபாடுகள் எழுதுவோராலே யன்றி, சந்தைசொல்லிக் கற்குங்கால் முன்னுருச் சொல்வார் ஒன்று சொல்லப் பின்னுருச் சொல்வார் அதனை வேறாகக்கொண்டு பாடஞ்செய்ய, இவ்வாறே பரம்பரையாகப் பல உண்டாயினவாம். அன்றியும் இலக்கிய இலக்கணப் பயிற்சியின்றித் தாமே புத்தகத்தைப்பார்த்து, ("உனதடியே சரணமே" என்பதை, "உனதடியே சாணமே" என்றாற் போல) தமக்குத் தோற்றியவாறே உருச்செய்வதனால் பாடல்கள் பிழைபடவும் இடமுண்டு. இன்னும், என்று, இன்றி, நின்றீர்கள், வாழ்கின்ற என்பனபோலு மிடங்களில், என்னு, இன்னி, நின்னீர்கள், வாழ்கின்ன, என்று அத்தியாபகர்கள் பெரும்பாலும் உச்சரித்துவருதலால், புற்றரவு என்பது - 'புத்தரவு' எனவும், "பொன்றோய் வரைமார்பு" என்பது - "பொன்றோய் வரைமார்பு" எனவும், "வன்றாளி னிணைவணங்கி" என்பது - "வன்றாளினிணைவணங்கி" எனவும் பிழைபட உச்சரிக்கப்பட்டாற்போலச் சில பிழைகள் உச்சாரண வகையினால் உண்டாயிருத்தல் கூடும். மற்றும் பொருள்தெளிவு காரணமாகச் சில வேறுபாடுகள் தோன்றியிருக்கலாம்: உதாரணமாக, "மற்றொன்றும் வேண்டா" என்னும் வெண்பாவில், "திருமாலைபாடுஞ் சீர்த்தொண்டரடிப்பொடியெம்-பெருமானை யெப்பொழுதும் பேசு" என்றவிடத்தும், "மைதைசேர் பூம்பொழில் சூழ்" என்னும் வெண்பாவில், "அடியவர்கள் வாழ வருந்தமிழ் நூற்றந்தாதி-படிவிளங்கச் செய்தான் பரிந்து" என்றவிடத்தும் வெண்பாத்தளை பிறழவந்தமை காணலாம்" என்பர் ஒரு நண்பர்.

இனி, இவ்வகைப் பிறழ்வுகள் நேர்தற்குக் காரணம் யாதென்று ஆராயப்புகில், இலக்கண இலக்கியங்களை ஆய்ந்து ஓய்ந்து உணராமல் இத்திவ்ய ப்ரபந்தங்களை ஓதுவதே இவ்வநர்த்தங்கட்கு உரிய காரணமெனத் தேர்ந்துணரலாகும். மற்ற பாஷைகளைப்போலன்றி இத்தமிழ்ப்பாஷை தென்னாட்டினர்க்கு ஸஹஜ

பாஷையாக அமைந்ததனால் சொல்வாசியறிவதற்கு இடமற்றொழிந்தது. உதா ரணமொன்று காண்மின்;—"அஞ்சவுரப்பாள்யசோதை ஆணாடவிட்டிட்டிருக் கும்" என்ற நாய்ச்சியார் திருமொழிப் பாசுரத்தில், 'சீறமாட்டாள்' என்னும் பொருளதான "உரப்பாள்" என்ற சொல்லின்வாசியை அறியாதார்பலர்," அஞ்ச உரைப்பாள்யசோதை" என்று மாறுபடப் பாடங்கொண்டு, "யசோதையானவள் கண்ணபிரான் அஞ்சும்படிக்குச் சிலவார்த்தைகளைச் சொல்லுவளாம்" என்று பொருளும் உபந்யஸிப்பர்கள்; இவ்வகை உபந்யாஸ விசேஷங்களைப் பல பரமை காந்திகளிடத்துக் கேட்டுளோம். "எங்ஙனே சொல்லினு மின்பம் பயக்குமே" என்று ஆழ்வார்தாமே அருளிச் செய்தனராதலால் இவ்வுபந்யாஸங்களிற் குறை கூறுவது கூறுவார்க்கே குறையாமத்தனை யென்பர். நிற்க.

இனி, வடமொழி தென்மொழிகளிற் சிறந்த வல்லமைபெற்றுப் பெரியோர் பாடே விசேஷார்த்தங்களையுங் கேட்டுணர்ந்துள்ள கல்வித் தலைவர்களை அடி பணிந்து அருளிச்செயற் பாடங்களைப் பிழையறத் திருத்திக்கொண்டு ஓது முணர்வினர் சிறுபான்மையரே. பல தமிழ்ப் புலவர்கள்கூடி ஆராய்ந்து அச்சிடு வித்துள்ள நாலாயிர மூலப்பிரதிகள் பல பார்க்கப்பட்டன; அவற்றிலும் திருத்த முறாத பாடப் பிழைகள் பல உள்ளனவென்றே எமது கொள்கை.

இராமாநுச நூற்றந்தாதியில், "உண்ணின் றுயிர்களுக் குற்றனவே செய்து" என்னும் தொண்ணூற்றைந்தாம் பாட்டின் ஈற்றடி - "மண்ணின் தலத்துதித்து மறைநாலும் வளர்த்தனனே" என்றே ஆங்காங்கு ஓதப்பட்டுவரு கின்றது; அச்சுப் பிரதிகளிற் பாடமுமிதுவே. ஆனால் இவ்வடியில் தளையோசை தட்டிக்கிடக்கின்றமையை எவரும் ஆராய்ந்திலர்; இவ்விடத்திற்கு மணவாள மாமு னிகள் அருளிச்செய்த உரையிலுங் கண்களை ஊன்றவைத்திலர். இனி அறிவுடை யார் ஆராயப்புகில், "மண்ணின் தலத்துதித் துய்மறை நாலும் வளர்த்தனனே" எனத்திருத்தி ஓதுவதே உரியதாமென்பர். (இதன் விவரணம்:—) "எம்பெரு மானார்......ஸ்ரீ வைகுண்டத்தில் நின்றும் பூதலத்திலே தஜ்தசொஷஷுமா மற அவதரித்து ஸர்வோஜ்ஜீவந சாஸ்த்ரமான ருகாதி சதுர்வேதத்தையும் அஸங் குசிதமாக நடத்தியருளினார்" என்பது பெரிய ஜீயருரை யருளிச்செயல்; இதில் "ஸர்வோஜ்ஜீவந சாஸ்த்ரமான" என்ற ஒரு விசேஷணவாக்கியம் மூலத்தில் எச்சொல்லை நோக்கியதென்று விமர்சித்தால், வழங்கிவரும் பாடத்தில் அதற்கு உரிய சொல் யாதொன்றுங் காணப்படவில்லை. கட்டளைக் கலித்துறையின் முக் கிய இலக்கணமாகிய வெண்டளை பிறழுவந்தமைக்குப் பரிஹாரவகையும் புலப் படவில்லை. இக்குறை யிரண்டும் தீரும்வகை "உய்மறைநாலும் வளர்த் தனனே" என ஓதல் வேண்டும்; உய் என்பதன் பொருளாகவே "ஸர்வோஜ் ஜீவந சாஸ்த்ரமான" என்ற வாக்கியம் ஜீயருரையிற் காணப்படுகின்றதென் றுணர்க. எனவே, உய் என்கிற விதனையொழித்து ஓதினால் வியாக்கியாந வாக்கிய மொன்று வீணாய் நிற்பதுடன் இலக்கணப் பிழையும் இடம்பெற்று நிற்குமென்ற தாயிற்று.

ஆரியர்காள்! இவ்வாறாக வியாக்கியான வழியையும் இலக்கண கதியையுந் தழுவி நுண்ணுணர்வினால் ஆராயவேண்டிய அம்சங்கள் அனேகங்களுள்ளன.

அவ்வாராய்ச்சியைப் பயன் பெறுவிப்பதற்காகவே அடியேன் இவ்வகை முயற்சியில் மனஞ் செலுத்தினன். இப்பதிப்பில் பெரும்பாலும் மூலபாடங்கள் பூருவர்களின் வியாக்கியானங்களோடும் இலக்கணங்களோடும் பொருந்திப் பிழையறப் பொலிவுறுமென்றே வலிய நினைத்துளேன். ஆனால் இப்புத்தகம் அச்சிடப் பெறுகின்ற இடத்திற்கும் அடியேனிருக்குமிடத்திற்கும் வெகு விப்ரகர்ஷமுள்ளமைபற்றிப் பிழைதிருத்தங்கள் தபால்மூலமாகவே நடைபெறவேண்டி யிருக்கின்றமையாலும், முக்குணங்களும் மாறிவரும் மானுடவியற்கைக்குரிய சோர்வு சோம்பல்களின் வெல்லுதற்கருமையினாலும், இரவிலும் விரைவிலுமாகக் காரியங்களைச் செய்யவேண்டி யிருந்தலாலும் அடியேனுடைய வெளிக்கண்ணுக்கும் உட்கண்ணுக்கும் இலக்காகாமற் பல பிழைகள் இப்பதிப்பில் நேர்ந்திருக்கக்கூடும். அவற்றைக் கண்டுபிடித்துத் திருத்துவதற்கு ஏற்ற அவகாசம் அரிதாயிருப்பதனாலும், பரிசோதநாதிகாரம் பிறர்க்கே உரித்தாதலாலும் அதனில் யான் கை வைக்கக் கருதுகின்றிலேன். மூலத்தில் நேர்ந்துள்ள அச்சுப்பிழைகளைமாத்திரம் திருத்தவேண்டியது ஆவச்யகமாதலால், அதில் என் கண்ணுக்கு எட்டிய பிழைகளைத் திருத்துகின்றேன் ;—

| பக்கம். | பாட்டு, அடி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௯௯ | கக-உ | வில்விபுத்தூர் | வில்விபுத்தூர் |
| எக | அ-௪ | தக்மாமணிவண்ணன் | தக்கமாமணிவண்ணன் |
| எஉ | ௯-௩ | சிறுக்காலுறைத்தொன்றும் | சிறுகாலுறைத்தொன்றும் |
| அ௫ | ௫-௪ | கண்பலசெய்த | கண்பலபெய்த |
| ௯எ | க-௩ | வுரவுங்காணேன் | வரவுங்காணேன் |
| கஉஅ | ௩-௪ | இறுக்கன்று | சிறுக்கன்று |
| கஉ௯ | ௫-௪ | யூராந்தாற்கோர் | யூர்ந்தாற்கோர் |
| க௪க | ௪-௩ | கண்ணனெ வெள்ளறை | கண்ணனே வெள்ளறை |
| க௪௯ | ௯-௩ | கொதுகுலமுடை | கோதுகலமுடை |
| உ௯௪ | உ-௪ | காத்ததுமோ | கார்த்ததுமோ |
| உஎ௪ | ௩-உ | தேவனைக்சிக்கென | தேவனைச்சிக்கென |
| உ௯௯ | ௯-க | குடங்கையில் மண்கொண்டதுனர் | குடங்கையில்மண்கொண்டளந்து |
| ௩௩0 | உ-க | சலம்பொதியுடம்பில் | சலம்பொதியுடம்பின் |
| ௩௩௫ | அ-உ | அரசினையவிய | அரசனையவிய |
| ௩௩௯ | க0-௩ | முன்றினில் தோன்றி | மூன்றினில்தோன்றி |
| ௩அ0 | ௫ உ | வளைப்பகம் வகுத்துக்கொண்டிருந்தென் | வளைப்பகம் வகுத்துக்கொண்டிருந்தேன் |
| ௩அ0 | ௫-௪ | கொம்பொசித்தானே | கொம்பொசித்தானே |
| ௪0அ | அ-௪ | சித்தநின்பாலதறிதி யென்றே | சித்தநின் பாலதறிதியன்றே |

அன்றியும், அடியேன் இவ்வுரையெழுதத் தொடங்குங்கால், பதவுரையும் சில இலக்கணக் குறிப்புகளுமே எழுதவேண்டியவையெனக்கருதி அவ்வண்ணமே இருநூறு பாட்டளவும் எழுதித் தலைக்கட்டியபின்னர், 'இவ்வுரையை இன்னுஞ் சிறிது விரித்தெழுதினால் பண்டிதரோடு பாமரரோடு வாசியற அனைவர்க்கும்

ஆநந்தகரமாயிருக்கும்' என்று அறிஞர்பலர் அறிவித்தமையாலும், "பொழிப்பே யகல நுட்பமெச்சமெனப் பழிப்பில் பல்லுரை" என்றபடி-கருத்துரைத்தல், கண்ணழித்தல், [அதாவது-பதவுரை,] பொழிப்புத் திரட்டல், அகலங்கூறல் என நான்குவகைப்பட்ட உரைகள் உரைத்தல் இலக்கணமாதலாலும், "ஆற்றிலிருந்து" [உ-கo] என்ற திருமொழி முதலாக மிக்க சுருக்கமும் மிக்க பெருக்கமுமின்றி ஆவசியகமான அம்சங்களை விடாமல், தாத்பர்யார்த்தம், விசேஷார்த்தம், ஸ்வாபதேசார்த்தம் முதலியவை யெல்லாவற்றையும் எனது அறிவுக்கு எட்டியவரை எழுதிப் **பெரியாழ்வார் திருமொழி**யை ஒருவாறு தலைக்கட்டினேன். இவ்வுரை வெகு விரைவில் எழுதப்பட்டு வந்தமையால் அப்போது தோன்றாது விடுபட்ட சில விஷயங்கள் இப்போது எனது நெஞ்சினிற் றோன்றினமையால், அவற்றையெல்லாம் இங்கு எழுதுவதில் மிக விரிவாமென நினைத்து, ஆவச்யகமாகத் தோற்றுகின்ற அம்சங்களைமாத்திரம் இங்குச் சுருக்கி எழுதப்புகுகின்றேன்.

## உரை அநுபந்தம்.

1. திருப்பல்லாண்டின் முதற்பாட்டில், "பலகோடி நூறாயிரம்" எனப் பாடங்கொள்ளில், இப்பாட்டை அறுசீராகப் பிரிக்க. "பல்கோடி நூறாயிரமும்" எனக் கொள்ளில் எழுசீராகப் பிரிக்க. பின் கூறிய பாடமே சிறக்கும். "சேவடி செவ்வி திருக் காப்பு" என்பதினும் "செவ்வடி செவ்வி திருக்காப்பு" என ஓதுதல் சிறக்கும்.

2. "**மல்லாண்ட திண்டோள்**"—ஆயுதங்களின் உதவியின்றிச் சரீரவலிவையே கொண்டு செய்யும் யுத்தம் **மற்போர்** எனப்படும்.

3. பெரியாழ்வார் திருமொழியில் [க-க-உ.] "**நாவோர் நம்பிரானெங்குத்தானென்பார்**"—**எங்கு, தான்** என்று பிரித்துரைப்பாருமுளர்.

4. [க-க-ங.] "**ஆணொப்பாரிவன் நேரில்லைகாண்**"—"ஆணொப்பான்" என்றும் பாடமுண்டு; "ஆணொப்பான்" என்பதற்கு, ஆணொப்பால் என்று பொருள்: [**ஆண்**—மூன்றாம் வேற்றுமையுருபு.] பும்ஸ்த்வலக்ஷணத்தால் இவனுக்கு எதிரில்லை யென்று தேர்ந்த பொருள்.

5. [க-ரு-உ.] "காளநன்மேகமவை" = "கல்லொடுகால் பொழிய" என்ற பாடத்தில், '**காலோடு கல் பொழிய**' என விகுதிபிரித்துக் கூட்டி இயைத்து, காற்றையும் கல்லையும் வர்ஷிக்க, எனப் பொருள் கொள்க.

6. [க-ரு-அ.] "**என் அவலங்களைவாய்**"—**அவலம்**—ஊளஷம் என்ற வடசொல் விகாரம். தௌர்ப்பல்யமென்பது பொருள்.

7. [க-கூ-கo] "**மாதுளையின்பூவோடு**"—'மாதளையின்' எனினும் ஒக்கும்.

8. [க-எ-உ.] "அக்குவட முடுத்து" = 'அனந்த சயனன்' என்று ஓதுதலினும், '**அனந்த சயன்**' என்றோதுதல் செய்யுளின்பத்திற்குச் சிறக்குமென்பர்.

9. [க-ள-சு.] "**கருகார்க்கடல்வண்ணன்**"—"கருங்கார்க்கடல்" என இனமிக வேண்டியிருக்க, அங்ஙன் மிகாது நின்றது எதுகையோசை யின்பம் பொருந்துதற்காக வென்ப.

10. [௧-௭-௮.] “**மக்களுலகினிற் பெய்தறியா**”—‘பெய்தறியாது’ என்றிருந்தால் செய்யுளிலக்கணத்தோடு நன்கு பொருந்தும். (**அளபெடை.**)

11. [௧-௭-௧௦.] “பெருநீர்த்திரை யெழு கங்கை **யினிலும்**” என்று பாடமானால் செய்யுளிலக்கணத்திற்குச் சேரும்.

12. [௩-௧-௫.] “கண்பல பெய்த” என்றும், “கண்பல பெய்து” என்றும் இரண்டு பாடமே வியாக்கியானத்திற்குச் சேரும். “கண்பல **செய்த**” என்றபாடம் மறுக்கத்தக்கதே.

13. [௨-௨-௭.] “**பெண்டிர் வாழ்வார்**”—“பெண்டீர் வாழ்வார்” என்று ஓதுவதும் உரியதே; இரண்டுவகையும் இலக்கணத்திற்குப் பொருந்தியதே.

14. [௨-௨-௮.] “ஒருமுலையை வாய்மடுத்து **ஒரு முலையை நெருடிக் கொண்டு**”—இவ்விடத்திற்குப் பெரிய ஜீயருரையில், “ஒரு முலையைத் திருப்பவளத்திலே வைத்து ஒருமுலையைத் **திருக்கையாலே பற்றி** நெருடிக்கொண்டு” என்றுரைக்கப்பட்டுள்ளமையால், “ஒரு முலை**கை** நெருடிக்கொண்டு” என்று பாடமாகவேணு மென்பர் சிலர். ஒரு முலை—ஒரு முலையை, **கை**— கையினாலே, எனப் பொருள்காண்க.

15. [௨-௩-௭.] “தலை நிலாப்போதே யுன்காதைப் பெருக்காதே விட்டிட்டேன் குற்றமே **யென்னே**” = “குற்றமே **யன்றே**” என்றபாடம் அந்தாதித்தொடைக்குப் பொருந்ாதென்று மறுக்கப்பட்டது. அதுவே ருஜுவான பாட மெனில் **அதனையே** கொள்க. “குற்றமே யென்னே” எனப்பிரயோகிப்பது இலக்கண நெறிக்கு அத்துணைச் சிறவாதாயினும், “சுஷ்டஸ்தாநதோஷ:” “ஸாத்வஸ்தாநதோஷ:” “நிரங்குசா: கவய:” என்றிவை முதலான வடநூல் நியாயங்களை அடியொற்றி மனந்தெளியலாம். கம்பர் முதலிய கவிகள் இவ்வாறு பிரயோகித்து முளர்.

16. [௨-௫-௭.] “**பிண்டத்திரளையும்**”— **திரளை**— ‘திரள்’ என்ற சொல்லின் மேல் இரண்டாம் வேற்றுமையுருபு ஏறியதன்று; ‘திரளை’ என்பதே சொல்வடிவு.

17. [௨-௬-௧.] “மின்னிலங்கு பூண்”— “மின்னிலங்கும் பூண்விபீடண நம்பிக்கு” என்று ஓதுக. இப்பாடத்தில் தளை பிறழாமை காண்க; இதுவே ஆன்றோர் பாட மென்றருளிச் செய்யக் கேட்டேன்.

18. [௨-௭-௮.] “**சீமாலிகனவனோடு**”— இப்பாட்டில் அருளிச் செய்யப்பட்ட விருத்தாந்தம் மற்றொரு ரிஷியினாலும் ஒரு புராணத்திலுங் கூறப்படாமல், இவ்வாழ்வாரால் ஸ்வயமாகவே ஸாக்ஷாத் கரித்து அருளிச்செய்யப் பட்டதென்பது— மேல், [௫-௪-௬.] “**உன்னுடைய விக்கிரமம்**” என்ற பாட்டின் **வியாக்கியானத்தில்** பெரியவாச்சான் பிள்ளையால் அருளிச் செய்யப் பட்டுள்ளமை காண்க.

19. “பன்றியுமாமையுமீனமுமாகிய” [௩-௩-௭.] என்ற பாட்டின் ஈற்றடியில் “தீமை செய்வார்கள்” என்ற விடத்து, “தீமைகள் செய்வார்” என்றும் மாற்றி ஓதுவர்.

20. [௩-௬-௭.] "புவியுள் நான் கண்டதோரற்புதம்" என்ற பாட்டின் குறிப்புரையில் [222-வது பக்கம், மூன்றுவது வரியில்] '(குள்ள)' என்றிருப்பதைக் **குறள்** எனத் திருத்திவாசிக்க; "செவிக்குணவில்லாத போழ்து சிறிது, வயிற்றுக்கு மீயப் படும்" என்பது திருவள்ளுவர் குறள்.

21. "குழலிருண்டு சுருண்டேறிய குஞ்சி" [௩-௬-௧௧.] என்ற பாட்டின் இரண்டாமடியில் "கொழித் தெழுந்த" என்பதைக் "கொழித்திழிந்த" எனத் திருத்தலாம். உள்ளவாறே இருப்பினுமொக்கும். இருவகையாகவுமோதுவர்.

22. "அண்டத்தமரர் பெருமான்" [௩-௮-௭.] என்ற பாட்டின் மூன்றுமடியில், "கோவலர்பட்டங்கவித்து" என்பதினும் "கோவலப்பட்டங்கவித்து" என்றோதுதல் சிறக்கும். பொருள் ஒன்றே. பகரமெய்—புணர்ச்சிவிகாரம்; "சில விகாரமா முயர்திணை" என்றுராகலின்.

23. [௩-௧௦-௨.] "**அல்லியம் பூமலர்க் கோதாய்**"—இப்பாட்டில் அருளிச்செய்யப்பட்டுள்ள வ்ருத்தாந்தமும் மாலிகவ்ருத்தாந்தம்போலவே பெரியாழ்வார் தாமாகவே ஸாக்ஷாத்கரித்ததென்பது—"உன்னுடைய விக்கிரமம்" [௫-௪-௬.] என்ற பாட்டின் வியாக்யானத்திற் பெரிய வாச்சான்பிள்ளையினால் அருளிச் செய்யப்பட்டுளது.

24. "**திக்குநிறை புகழாளன்**" [௩-௧௦-௧.] என்ற பாட்டின் ஈற்றடி—"வைத்துக்கொண்டுகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே" என்பதாம். இதில் முதலிலுள்ள '**வைத்**' என்ற இரண்டெழுத்துகளை மூன்றுமடியோடு கூட்டிவிட்டு, "துக்கொண்டுகந்தனளால்" என்பதை நான்காமடியாகச் சில தமிழ்ப்புலவர் பதிப்பித்துளர். இங்ஙன் பிரியாதொழியில், எதுகை யின்பம் குறையுறுகின்றதென்று கருதினர்போலும்! அந்தோ! இவர்களின் புலமை மிக வியக்கத்தக்கதே. "வளவெழுந்தவளமாட" (திருமாலை, ௪௫.] "குத்துவிளக்கெரிய," "மாரிமலை முழஞ்சில்" இவைமுதலிய பாசுரங்களைப் பரிசீலிக்க.

25. "கொலையானைக் கொம்புபறித்து" [௪-௧-௩.] என்ற பாட்டின் ஈற்றடியில் "**அங்குத்தைக்** கண்டாருளர்" என்றவிடத்து, "**அங்குற்றுக்** கண்டாருளர்" என்று பாடாந்தரங் கூறுவாருமுளர்.

26. "**மன்னர் மறுக**" [௪-௨-௭.] என்ற பாட்டினீற்றடியில் "தென்னன் கொண்டாடும்" என்றவிடத்துக் குறிப்புரையில், ' [illegible] ' [ஸுந்தர பாஹுஸ்தவம்-௧௨௮.] என்ற ஆழ்வானருளிச்செயல் சேர்த்து அநுஸந்திக்கத்தக்கது.

27. "**நாவகாரியம்**" [௪-௪-௧.] என்ற பாட்டில் மூன்றுமடியில் "மூவர் காரியமுந் திருத்தும் முதல்வனை" என்பதற்கு, பிரமன் விஷ்ணு சிவன் என்னும் மூவரின் தொழிலாகிய படைப்பு, அளிப்பு, துடைப்பு என்பன மூன்றையும் தானேசெய்து தலைக்கட்டும் முதல்வனை யென்று பொருள்கூறுவாருமுளர்.

28. "கொம்பினார் பொழில்வாய்" [௪-௪-௩.] என்ற பாட்டினீற்றடியில், "இவரிவரென் றுசைகள் தீர்வனே" என்றவிடத்து, "இவரென்றென் றுலைசகள் தீர்வனே" என்பதும் ஒருபாடமென்பர்.

29. "சீதநீர்புடை சூழ்" [௪-௪-௧௧.] என்ற பாட்டின் ஈற்றடி "ஏதமின்றி யுரைப்பவரிருடீகேசனுக் காளரே" என ஓதப்பட்டு வருகின்றது; இப்

பாடத்தில் ஓசையின்பம் மிக வேறுபட்டுக் கிடக்கின்றது. இதனை ஆராய்ந்ததில், "**ஏத மின்றி யுரைப்ப வர்இரு டீக வீசனுக் காளரே**" என்ற பிராசீந பாடமிருக்குமெனத் தோன்றுகின்றது; "ஹ்ருஷீகேசன்" என்ற வடசொல், தென்மொழியில், "இருடீகேசன்" எனத் திரிவதுபோலவே "**இருடீகவீசன்**" என்றும் திரியும்; இது அருமையானதன்று. ஆனால், "இருடீகேசனுக்காளரே" என்றே * இமவந்தந் தொடங்கி இருங்கடலளவு மோதப்பட்டு வருகின்றமையால் அப்பாடமே நமக்குஞ் சார்வு.

30. "சோர்விறைப் பொருள்வைத்ததுண்டாகில்" [ச-ரு-௩.] என்ற பாட்டின் முதலடியில், "சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து" என்பதினும், "......சுற்று மிருந்தார்" என்றோதுதல் பூருவர்களின் வியாக்யானத்திற்கும் செய்யுளிலக்கணத்திற்குஞ் சேர்ந்திருக்குமெனப் பதிப்பித்துள்ளார் சிலர்; "**இருந்து**" என்ற பாடத்தில் விரோதமில்லை.

31. "குன்றுடு கொழுமுகில்போல்" [ச-அ-௧.] என்ற பாட்டின் ஈற்றடியில், "**தேன்றலுலா மதிளரங்கம்**" என்றவிடத்து, 'தென்றல் **உலாம்** மதிள்' எனப்பிரிக்க. பதவுரையில் '**உலா**' எனப் பிரிக்கப்பட்டுள்ளது அச்சுப்பிழை. **உலாம்** என்பது—'உலாவும்' என்பதன் குறை. "பெண் **உலாஞ்** சடையினானும்" என்றதுங்காண்க.

32. "கருளுடைய பொழில் மருதும்" [ச-௧-௩.] என்ற பாட்டின் மூன்றாமடியில், "**ஏணிவாங்கி**" என்பதற்கு, 'புநராவ்ருத்தி ஸங்கல்பத்தை விலக்கி' எனப் பொருள்கூறுதலும் பொருந்துமென்ப. இவ்வர்த்தம் ரஹஸ்ய த்ரயஸார வியாக்கியானத்திற் காணப்பட்டது.

அன்றியும், ஷை பாட்டின் பதவுரையில், '**ஏற்றி**' என்னும் பதத்தின் உரைக்குப்பின்னர், "(அங்கு நின்றும் அர்ச்சிராதி மார்க்கமாக)" என்ற வாக்கியம் அநவதாநத்தினால் எழுதப்பட்டது; அதை விலக்கி வாசிக்க.

உரையின் அநுபந்தம் முற்றிற்று.

---

ஆரியப் புலவீர்காள்! இவ்வாறு குறிப்பிடவேண்டிய விஷயங்கள் இன்னும் பல கிடப்பினும் விரிவு பெரிதுடைத்தாமென்று அஞ்சி நிற்கின்றேன். 'கரடிக்குப் பிடித்தவிடமெல்லாம் மயிர்' என்பதுபோல, இவ்வுரையில் புலவர்கட்குப் பார்த்தவிடமெல்லாம் பிழையாகவே தோற்றுமாயினும், தமது வாத்ஸல்யகுணத்தையே பாராட்டியருள்வது அப்புலவர்க்குக் கடமையாம்.

அன்றியும், இப்பதிப்பில் அருளிச்செயல் மூலம் செய்யுளிலக்கணப்படி ஒருவகையாகச் சீர்பிரித்து அச்சிடப்பட்டு வருகின்றமையால், எழுத்துக் கூட்டுமவர்களின் அநவதாநத்தினால் சீர்களின் பிரிவுக்குறிகள் சிறுபான்மை மாறுபட்டுக் காணப்படும். அம்மாறுபாட்டையும் புலவர் பரிசோதித்துக்கொள்க.

"அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்—குற்றமே கூறி விடும்."

பிரமாதீச ஸு
கார்த்திகை ஸ்ரீ
பெருமாள் கோயில்.

இங்ஙனம்:—
பிரதிவாதி பயங்கரம்
**அண்ணங்கராசிரியன்.**

## பேரியாழ்வார் மங்களாசாஸநஞ் செய்தருளின
## திருப்பதிகள் பத்தொன்பதுக்குப் பாசுரக் குறிப்பு.

| | |
|---|---|
| க. திருவரங்கம். | கருவுடை மேகங்கள் [உ-எ-உ.], |
| | சீமாலிகனவனோடு [உ-எ-அ.] |
| | வண்டுகளித்திரைக்கும் [உ-கூ-கக.] |
| | கன்னிநன்மாமதிள் சூழ்தரு [ங-ங-உ.] |
| | மாதவத்தோன் [ச-அ-முழுதும்.] |
| | மாவடியைத் தம்பிக்கு [ச-கூ-முழுதும்.] |
| | துப்புடையாரையடைவது [ச-க0-முழுதும்.] |
| உ. திருவெள்ளறை. | உன்னையுமொக்கலையில் [க-ரு-அ.] |
| | இந்திரனோடு பிரமன் [உ-அ-முழுதும்.] |
| ங. திருப்பேர்நகர். | கொங்குங் குடந்தையும் [உ-சு-உ.] |
| | கொண்டல்வண்ணவிங்கே [உ-கூ-ச.] |
| ச. திருக்குடந்தை. | கொங்குங் குடந்தையும் [உ-சு-உ.] |
| | குடங்களெடுத்தேறவிட்டு [உ-எ-எ.] |
| ரு. திருக்கண்ணபுரம். | ...உன்னையுமொக்கலையில் [க-ரு-அ.] |
| சு. திருமாலிருஞ்சோலை. | உன்னையுமொக்கலையில் [க-ரு-அ.] |
| | சுற்றிநின்றாயர் [ங-சு-ரு.] |
| | அலம்பாவெருட்டா [ச-உ-முழுதும்.] |
| | உருப்பிணி நங்கைதன்னை [ச-ங-முழுதும்.] |
| | துக்கச்சுழலையை [ரு-ங-முழுதும்.] |
| எ. திருக்கோட்டியூர். | வண்ணமாடங்கள் [க-க-க.] |
| | கொங்குங்குடந்தையும் [உ-சு-உ.] |
| | நாவகாரியம் [ச-ச-முழுதும்.] |
| அ. ஸ்ரீவில்லிபுத்தூர். | ...மின்னனையநுண்ணிடையார் [உ-உ-சு.] |
| கூ. திருக்குறுங்குடி. | ...உன்னையுமொக்கலையில் [க-ரு-அ.] |
| க0. திருவேங்கடம். | சுற்றுமொளிவட்டம் [க-ச-ங.] |
| | என்னிதுமாயம் [க-அ-அ.] |
| | தென்னிலங்கைமன்னன் [உ-சு-கூ.] |
| | மச்சொடுமாளிகையேறி [உ-எ-ங.] |
| | போதர்கண்டாயிங்கே [உ-கூ-சு.] |
| | கடிபார்பொழிலணி [ங-ங-ச.] |
| | சென்னியோங்கு [ரு-ச-க.] |
| கக. திருவயோத்தி. | தார்க்கிளந்தம்பிக்கு [ங-கூ-அ.] |
| | காரார்கடலைபடை [ங-கூ-க0.] |
| | வாரணிந்தமுலைமடவாய் [ங-க0-ச.] |
| | மைத்தகுமாமலர் [ங-க0-அ.] |
| | வடதிசை மதுரை [ச-எ-கூ.] |
| கஉ. சாளக்கிராமம். | ...வடதிசைமதுரை [ச-எ-கூ.] |

கரு. வதரியாச்ரிரமம். ...வடதிசைமதுரை [௪-ள-க.]
கச. திருக்கண்டங்கடிநகர். ...நங்கையைமூக்கும் [௪-ள-முழுதும்.]
கடு. துவரை [த்வாரகை.] ...வடதிசைமதுரை [௪-ள-க.]
கசு. வடமதுரை [கோவர்த்தனம்] { வானிளவரசு [ரு-சு-ரு.] / வடதிசைமதுரை [௪-ள-க.]
கள. திருவாய்ப்பாடி [கோகுலம்] { தீயபுந்திக்கஞ்சன் [உ-உ-டு.] / மூலையேதும் வேண்டேன் [உ-ரு-ள.] / விண்ணின்மீதமரர்கள் [ரு-௪-க0.] / புவியுள் நான்கண்டது [ரு-சு-ள.]
கஅ. திருப்பாற்கடல். { ஆலத்திலையான் [உ-சு-சு.] / பையரவினணைப்பாற்கடலுள் [௪-க0-டு.]
ககூ. பரமபதம். { வானிளவரசு வைகுந்தக்குட்டன் [ரு-சு-ரு.] / வடதிசை மதுரை [௪-ள-க.] / தடவரைவாய் [டு-௪-க0.]

குறிப்பு:—"மானமரு மென்னோக்கி" [ரு-க0-டு.] "சித்திரகூடத்திருப்ப" [ரு-க0-சு.] என்ற இரண்டு பாசுரமும் தில்லைத்திருச்சித்திர கூடமென்னுந் திருப்பதியை மங்களாசாஸநம் பண்ணுகிற பாசுரங்களல்லாமையால், அதனைத் தவிர்த்துப் பத்தொன்பது திருப்பதிகள் குறிக்கப்பட்டன. அதனையுங்கூட்டிக் கணக்கிடுவார்பக்ஷத்தில் இருபதெனக் கொள்க.

மண்ணி லரங்கமுதல் வைகுந்த நாடளவும்
எண்ணு திருப்பதிபத் தொன்பதையும்—நண்ணுவார்
கற்பார் துதிப்பார் கருதுவார் கேட்டிருப்பார்
பொற்பாத மென்றலைமேற் பூ.

ஸ்ரீ
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருப்பல்லாண்டிலும் பெரியாழ்வார் திருமொழியிலும் அருளிச்செய்யப்பட்டுள்ள பகவத்கதைகளின் அடைவும், அக்கதைகள் அமைந்த பாட்டுக்களின் தலைப்பு மெழுதப்படுகின்றன.

### 1. கண்ணபிரான் மல்லரை மடிவித்தது.

| | பக்கம். | தெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பல்லாண்டு பல்லாண்டு | 10 | 6. ஏவிற்றுச் செய்வான் | 287 |
| 2. காயமலர் நிறவா கருமுகில் | 54 | 7. விற்பிடித்திறுத்து | 334 |
| 3. இருமலைபோ லெதிர்ந்த மல்லர் | 101 | 8. கருளுடைய பொழில்மருதும் | 351 |
| 4. எருதுகளோடு பொருதி | 135 | 9. பருப்பதத்துக் கயல்பொறித்த | 420 |
| 5. நல்லதோர் தாமரைப்பொய்கை | 240 | ஆ பாட்டுக்கள்—9, | |

## 2. இராமபிரான் இலங்கையைப் பாழாளாக்கியது.


| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. வாழாட்பட்டு நின்றீருள்ளீர் | 11 | 8. வல்லாளன் தோளும் | 284 |
| 2. குரக்கினத்தாலே குரைகடல் | 64 | 9. கனங்குழையாள்பொருட்டா | 298 |
| 3. வல்லாளிலங்கை மலங்க | 96 | 10. எரிசிதறுஞ்சரத்தால் | 298 |
| 4. மின்னிடைச்சீதைபொருட்டா | 131 | 11. தங்கையை மூக்கும் | 329 |
| 5. தென்னிலங்கை மன்னன் | 131 | 12. பெருவரங்க ளவைபற்றி | 342 |
| 6. * புள்ளினைவாய்பிளந்திட்டாய் | 134 | 13. பருவரங்களவைபற்றி | 347 |
| 7. காரார் கடலை யடைத்திட்டு | 261 | 14. மரவடியைத் தம்பிக்கு | 348 |


## 3. நரசிங்கவுருக்கொண்டதும், இரணியன் மார்வை இடந்ததும்.


| நெ. | பக்கம் | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. எந்தை தந்தை தந்தை | 13 | 8. கதிராயிரமிரவி | 272 |
| 2. பிறங்கிய பேய்ச்சி | 28 | 9. பூதமைந்தொடுவேள்வி | 306 |
| 3. கோளரியின்னுருவம் | 50 | 10. கொம்பினார் பொழில்வாய் | 309 |
| 4. அன்னமுமீனுருவும் | 58 | 11. வல்லெயிற்றுக் கேழலும் | 345 |
| 5. அளந்திட்ட தூணை | 64 | 12. உரம்பற்றி யிரணியனை | 359 |
| 6. குடங்களெடுத்தேறவிட்டு | 136 | 13. நம்பனை நவின்றேத்த | 384 |
| 7. முன்னரசிங்கமதாகி | 218 | 14 மங்கிய வல்வினைநோய் | 390 |


## 4. வாணன் தோள்களைத் துணித்தொழித்தது.


| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் | 14 | 3. மாவலி தன்னுடைய | 295 |
| 2. வல்லாளன் தோளும் † | 284 | 4. அன்று வயிற்றிற்கிடந்து | 409 |


## 5. கஞ்சனாயுதச் சாலையிற் கண்ணன் சிலை முறித்தது.


| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. எந்நாளெம்பெருமான் | 16 | 2. விற்பிடித்திறுத்து | 334 |


## 6. காளிய நாகத்தின் கொழுப்படக்கியது.


| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. எந்நாளெம்பெருமான் | 16 | 7. அஞ்சுடராழியுன்கையகத்து | 184 |
| 2. காயமலர் நிறவா | 54 | 8. தேனுகன்பிலம்பன்காளிய | 218 |
| 3. பஞ்சவர் தூதனாய் | 76 | 9. பஞ்சவர் தூதனாய் | 257 |
| 4. காயுநீர்புக்குக் கடம்பேறி | 82 | 10. காளியன் பொய்கை | 258 |
| 5. கன்றினைவா லோலைகட்டி | 119 | 11. கஞ்சனுங் காளியனும் | 293 |
| 6. தடம்படு தாமரைப் | 156 | ஆக பாட்டுக்கள்—11. | |


## 7. அசோதையும் ஆய்ச்சியரும் கண்ணன் வாயினில் வையங்கண்டது.


| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. கையுங் காலும் நிமிர்த்து | 23 | 2. வாயுள் வையகங்கண்ட | 23 |


---

* "காவலனைத் தலைகொண்டாய்" என்றதில் நோக்கு.

† பெரிய ஜீயருரையில், "வல்லாளன்" என்பது வாளரக்கனுக்கு அடைமொழியாக்கி உரைக்கப்பட்டுள்ளமையால், அவ்வுரையின்படி இதில் வாணன்தோள்துணித்த கதை அமைந்திலது.

## 8. கோவர்த்தனமேந்திக் கோநிரை காத்தது.


| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பத்துநாளுங் கடந்த | 24 | 7. அட்டுக்குவிசோற்றுப் பருப்பதமும் (முழுதும்) | 200 |
| 2. கோளரியின்னுருவம் | 50 | 8. தலைப்பெய்து குமுறி | 333 |
| 3. முலையேதும் வேண்டேன் | 109 | 9. குன்றெடுத்தா நிரை காத்த வாயா | 371 |
| 4. போதர்கண்டாய் இங்கே | 149 | 10. வண்ணமால்வரையே குடையாக | 384 |
| 5. தேனுகனாவி செகுத்து | 157 | | |
| 6. குன்றெடுத்தா நிரை காத்த பிரான் | 193 | | |


## 9. பூதனை முலையைச் சுவைத்துயிருண்டது.


| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பிறங்கிய பேய்ச்சி | 28 | 10. கஞ்சன் புணர்ப்பினில் வந்த | 117 |
| 2. நாள்களோர் நாலைந்து | 31 | 11. பேயின் முலையுண்ட | 122 |
| 3. கச்சொடு பொற்சுரிகை | 41 | 12. பள்ளத்தில் மேயும் | 123 |
| 4. வஞ்சனைபால் வந்த | 42 | 13. * கஞ்சன் கறுக்கொண்டு | 142 |
| 5. வானவர்தாம் மகிழ | 51 | 14. கள்ளச் சகடு மருதும் | 142 |
| 6. அளந்திட்ட தூணை | 61 | 15. தன்னைத் தமர் கட்டுவிட்டு | 153 |
| 7. செப்பாடுடைய | 104 | 16. தன்னேராயிரம் பிள்ளை | 163 |
| 8. வாவென்று சொல்லியென் | 113 | 17. வன்பேய் முலையுண்டதோர் | 211 |
| 9. பேய்ச்சி முலையுண்ணக் | 116 | 18. பொல்லா வடிவுடைப் | 270 |


## 10. குவலயாபீடத்தைக் கொன்றொழித்தது.


| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. இருங்கைம்மதகளிறு | 29 | 8. கஞ்சனுங் காளியனும் | 298 |
| 2. நம்முடை நாயகனே | 51 | 9. விற்பிடித்திறுத்து வேழத்தை | 334 |
| 3. காய மலர் நிறவா | 64 | 10. கருளுடைய பொழில்மருதும் | 351 |
| 4. புள்ளினை வாய்பிளந்திட்டாய் | 134 | 11. தோட்டமில்லவளாத் தொழு | 390 |
| 5. இன்பமதனை யுயர்த்தாய் | 143 | 12. வண்ணமால்வரையே குனிட | 384 |
| 6. கொலையானைக் கொம்புபறித்து | 274 | 13. பருப்பதத்துக் கயல்பொறித்த | 420 |
| 7. ஒருவாரணம் பணிகொண்டவ | 286 | ஆக பாட்டுக்கள்—13. | |


## 11. தாம்பாலாப்புண்டது.


| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. அதிருங்கடல் நிறவண்ணனை | 30 | 3. சேப்பூண்ட சாடுசிதறி | 93 |
| 2. பெருமாவுரலில் | 31 | 4. ஆய்ச்சியர் சேரியளை | 158 |


## 12. இரட்டை மருதுகளின் இடையே தவழ்ந்ததும், அம்மருதமரங்களை முறித்தருளியதும்.


| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பெருமாவுரலில் பிணிப்பு | 31 | 5. கும்மாயத்தொடு வெண்ணெய் | 165 |
| 2. மத்தளவுந்தயிரும் வார்குழல் | 53 | 6. மாயச்சகடுதைத்து | 261 |
| 3. பேயின் முலையுண்ட | 122 | 7. கஞ்சனுங்காளியனும் | 293 |
| 4. கள்ளச்சகடு மருதும் | 142 | 8. கருளுடைய பொழில் மருதும் | 351 |


* இப்பாட்டில் முலையைச் சுவைத்து உயிருண்டமை கூறப்படாதொழியினும் பேய்ச்சியின் விருத்தாந்தம் பிரஸ்தாவிக்கப்பட்டமை காண்க.

## 13. சகடாஸுரனைத் திருவடியாற் சாடியது.


| தொ. | பக்கம். | தொ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. நாள்களோர் நாலைந்து | 31 | 8. பேயின் முலையுண்ட | 122 |
| 2. வானவர்தாம் மகிழ | 51 | 9. கள்ளச்சகடு மருதும் | 142 |
| 3. செப்பூண்ட சாடுசிதறி | 93 | 10. பொன்போல் மஞ்சனமாட்டி | 164 |
| 4. கஞ்சன்றன்னால் புணர்க்கப்பட்ட | 99 | 11. வேடர் மறக்குலம்போலே | 244 |
| 5. கண்ணைக்குளிரக் கலந்து | 112 | 12. மாயச்சகட முதைத்து | 261 |
| 6. வாவென்று சொல்லியென் | 113 | 13. நாடு நகருமறிய | 325 |
| 7. கஞ்சன் புணர்ப்பினில் | 117 | 14. கருளுடைய பொழில்மருதும் | 351 |


## 14. ஊழியில் உலகங்களை விழுங்கியதும், பின்பு உமிழ்ந்ததும்.


| தொ. | பக்கம். | தொ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. வண்டமர் பூங்குழல் | 32 | 5. மண்ணும் மலையும் மறிகடல் | 280 |
| 2. மண்ணும் மலையும் கடலும் | 35 | 6. கோட்டு மண்கொண்டிடந்து | 299 |
| 3. உய்ய வுலகுபடைத்து | 49 | 7. குற்றமின்றிக் குணம்பெருக்கி | 302 |
| 4. ஞாலமுற்று முண்டாலிலை | 236 | 8. சழக்கு நாக்கொடு புன்கவி | 375 |


## 15. ஆலந்தளிரிற் பாலனாய்த் துயின்றது.


| தொ. | பக்கம். | தொ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பாலகனென்று பரிபவம் | 46 | 4. அண்டத்தமரர்கள் சூழ | 138 |
| 2. உய்ய வுலகுபடைத்துண்ட | 49 | 5. ஞாலமுற்று முண்டாலிலை | 236 |
| 3. ஆலத்திலையானரவினணை | 129 | 6. தோயம்பரந்த நடுவு | 275 |


## 16. குறளுருக்கொண்டதும், மாவலியின் செருக்கை மடிவித்ததும்.


| தொ. | பக்கம். | தொ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. சிறியனென்றென்னிளஞ் | 46 | 10. பெருப்பெருத்த கண்ணாலை | 238 |
| 2. நம்முடை நாயகனே | 51 | 11. வெண்ணிறத்தோய் தயிர் | 247 |
| 3. அன்னமு மீனுருவுமாளரியும் | 58 | 12. கோட்டுமண் கொண்டிடந்து | 299 |
| 4. மாணிக்கக் கிண்கிணியார்ப்ப | 60 | 13. சலம்பொதியுடம்பின் | 330 |
| 5. வெண்கலப் பத்திரங்கட்டி | 85 | 14. குறட்பிரமசாரியாய் | 358 |
| 6. சத்திரமேந்தித் தனியொரு | 86 | 15. நெடுமையாலுலகேழும் | 378 |
| 7. மன்னன்றன் தேவிமார் | 125 | 16. நம்பனை நவின்றேத்த | 384 |
| 8. செண்பக மல்லிகையோடு | 138 | 17. மாணிக்குறளுருவாய | 391 |
| 9. மாவலி வேள்வியில்மாண் | 159 | 18. சென்றுலகங் குடைந்து | 410 |


## 17. மத்ஸ்யாவதாரஞ் செய்தருளியது.


| தொ. | பக்கம். | தொ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. * நம்முடை நாயகனே | 51 | 3. பன்றியு மாமையு மீனமும் | 18 |
| 2. அன்னமுமீனுருவும் | 58 | ஆக பாட்டுக்கள்—3. | |


## 18. பின்னையைப் புணர எழ்விடை செற்றது.


| தொ. | பக்கம். | தொ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. நம்முடை நாயகனே நான்மறையின் | 51 | 3. எருதுகளோடு பொருதி | 13 |
| 2. துப்புடையாயர்கள் தம் | 55 | 4. தோயம்பரந்த நடுவுசூழலின் | 37 |


---

* "நான்முகனுக் கொருகால் தம்மனையானவனே" என்றதில் நோக்கு.

### 19. கன்றினால் விளவெறிந்தது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. வானவர் தாம் மகிழ | 51 | 4. கற்றினம் மேய்த்து | 123 |
| 2. காரிகையார்க்கு முனக்கும் | 111 | 5. கரும்பார் நீள்வயல் | 167 |
| 3. கன்றினைவாலோலை கட்டி | 119 | 6. பன்றியுமாமையும் | 185 |

### 20. ஸுரனைச் தேநுகா செற்றது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. வானவர் தாம் மகிழ | 51 | 3. தேநுகன்பிலம்பன் | 218 |
| 2. தேநுகனாவி செகுத்து. | 157 | ஆ. பாட்டுக்கள்—3. | |

### 21. முராஸுரனை முடித்தருளியது.

1. வானவர் தாம் மகிழவன் சகடம் 51.

### 22. நரகாஸுரனை நாசஞ் செய்தது

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. வானவர்தாம் மகிழ வன்சகடம் | 51 | 2. கிழக்கிற் குடிமன்னர் | 124 |

### 23. வைதிகன் பிள்ளைகளைத் தாயோடு கூட்டியது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. துப்புடையாயர்கள்தம் | 55 | 2. பிறப்பகத்தே மாண்டொழிந்த | 339 |

### 24. அன்னமாய் அவதரித்தது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. அன்னமுமீனுருவும் | 58 | 2. துன்னியபேரிருள் | 81 |

### 25. ஆமையாய் அவதரித்தது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. அன்னமுமீனுருவும் | 58 | 2. பன்றியுமாமையும் | 185 |

### 26. கடலரசனை அச்சமுறுத்தியது.

1. பரந்திட்டு நின்ற படுகடல்தன்னை 63

### 27. கடலில் அணைகட்டியது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. குரக்கினத்தாலே குரைகடல் | 64 | 3. காரார் கடலையடைத்திட்டு | 261 |
| 2. மின்னிடைச் சீதைபொருட் | 131 | 4. கொலையானைக் கொம்புபறி | 274 |

### 28. கடல்கடைந்ததும், அமரர்க்கு அமுதளித்ததும்.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. அடைந்திட் டமரர்கள் | 65 | 3. நம்பனே நவின்றேத்தவல்லார் | 384 |
| 2. அங்கமலப் போதகத்தில் | 102 | 4. கடல்கடைந் தமுதங்கொண்டு | 415 |

### 29. கண்ணன் காமனுக்குத் தந்தையானது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. ஒருகாலிற் சங்கொருகாலில் | 70 | 2. காமர்தாதை கருதலர் சிங்கம் | 385 |

30. கூனியின் கூனை நிமிர்த்தருளியது.

1. நாறியசாந்தம் நமக்கிறை நல்கென்ன 76

31. கண்ணன் துரியோதனன்பக்கல் தூதுசென்றது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. கழன்மன்னர் சூழ | 77 | 4. பஞ்சவர் தூதனாய் | 76 |
| 2. ஒன்றே யுரைப்பான் | 128 | 5. பஞ்சவர் தூதனாய் | 257 |
| 3. சீரொன்று தூதாய் | 129 | 6. காதம்பலவுந் திரிந்து | 401 |

32. அர்ச்சுநனுக்குச் சாரதியாய் நின்றது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. போரொக்கப்பண்ணி | 78 | 3. வெள்ளை விளிசங்குவெஞ்சுடர் | 278 |
| 2. நாந்தகமேந்திய நம்பி | 84 | ஆ பாட்டுக்கள்—3. | |

33. சுக்கிரன்கண்ணைத் துரும்பாற் கிளறியது.

1. மிக்க பெரும்புகழ்மாவலி வேள்வியில் 79

34. நமுசியை வானிற் சுழற்றியது.

1. என்னிது மாயமென்னப்பனறிந்திலன் 80

35. சங்கரன் கொண்ட சாபந்துடைத்தது.

1. கண்டகடலும் மலையுமுலகேழும் 80

36. பாரிஜாத தருவைப் பறித்துக் கொணர்ந்தது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. கற்பகக்காவுகருதிய | 88 | 2. என்னுதன் தேவிக்கு | 251 |

37. கஞ்சனைக் கொன்றது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. இருட்டிற் பிறந்துபோய் | 92 | 5. அஞ்சன வண்ணனை | 173 |
| 2. கஞ்சன்றன்னால் புணர்க்கப்பட்ட | 99 | 6. கஞ்சனுங் காளியனும் | 293 |
| 3. கறுத்திட்டெதிர் நின்ற | 128 | 7. * விற்பிடித்திறுத்து | 334 |
| 4. எருதுகளோடு பொருதி | 135 | 8. நெடுமையாலுலகேழும் | 378 |

38 இராமபிரான் நாட்டைத் துறந்து காட்டைச் சென்றது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. கொங்கைவன் கூனி | 95 | 4. கலக்கியமா மனத்தனளாய் | 265 |
| 2. மாற்றுத்தாய் சென்று | 254 | 5. கூன்றொமூத்தை சிதகுரைப்ப | 341 |
| 3. தார்க்கிளந் தம்பிக்கு | 259 | ஆ பாட்டுக்கள்—5. | |

39. களிற்றைக் காத்து முதலையை முடித்தது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பதக முதலைவாய் | 96 | 5. துப்புடையாரையடைவது | 265 |
| 2. தாழை தண்ணும்பல் | 160 | 6. வண்ணமால்வரையே குடை | 384 |
| 3. ஒரு வாரணம் பணி | 284 | 7. நம்பனை நவின்றேத்த | 384 |
| 4. கைந்நாகத்திடர்கடிந்த | 363 | ஆ பாட்டுக்கள்—7. | |


* "அரசனையுதைத்த" என்றதில் நோக்கு.

40. கண்ணபிரான் ஆய்ச்சியரோடு குரவை கோத்தது.

1. சோர்ந்தம்பிரானென் றிரந்தாலுங் கொள்ளாய் 107

41. மிதிலையிற் சிலை முறித்தது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. முலையேதும் வேண்டேன் | 109 | 3. திக்குநிறை புகழாளன் | 270 |
| 2. செறிந்த கருங்குழல் | 263 | 4. நாந்தகஞ் சங்குதண்டு | 273 |

42. அரிஷ்டாஸுரனை அழித்தருளியது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. காரிகையார்க்கு முனக்கும் | 111 | 2. கஞ்சனுங் காளியனும் | 203 |

43. கோக்கின்வாயைக் கீண்டொழித்தது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பள்ளத்தில் மேயும் | 123 | 3. புள்ளினைவாய் பிளந்திட்டாய் | 134 |
| 2. கறுத்திட்டெதிர் நின்ற | 128 | ஆக பாட்டுக்கள்—3. | |

44. உந்திக்கமலத்திற் பிரமனைப் படைத்தது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. உந்தியெழுந்த வுருவமலர் | 125 | 3. கண்ணு நான்முகனைப் படைத்தானே | 382 |
| 2. மையரவினணைப் பாற்கடலுள் | 369 | ஆக பாட்டுக்கள்—3. | |

45. மராமரமேழையு மெய்தருளியது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. கன்றுகளோடச் செவியில் | 116 | 2. கொலையானை கொம்புபறித்து | 274 |

46. சூர்ப்பணகியின் செருக்கைச் சிதைத்தது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. புள்ளினைவாய் பிளந்திட்டாய் | 134 | 3. வல்லாளன் தோளும் | 284 |
| 2. தார்க்கிளந்தம்பிக்கு | 259 | 4. தங்கையை மூக்கும் | 329 |

47. குடக்கூத்தாடியது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. குடங்களெடுத்தேறவிட்டு | 136 | 2. போதர்கண்டாயிங்கே | 149 |

48. மாலிகன் தலையை ஆழியாலறுத்தது.

1. சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய் 136

49. காகத்தின் ஒருகண்ணைக் குருடாக்கியருளினது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பொற்றிகழ்சித்திரகூடப் | 130 | 2. சித்திரகூடத்திருப்ப | 267 |

50. விபீடணனுக்கு அரசளித்தது.

| செ. | பக்கம். | செ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. தென்னிலங்கைமன்னன் | 131 | 2. காரார்கடலையடைத்திட்டு | 261 |

51. ஆய்ச்சியர்துகில்கொண்டு மரமேறியது.

1. குண்டலந்தாழக் குழல்தாழ நாண்டாழ 156

### 52. வராஹாவதாரஞ் செய்தருளியது.


| நெ. | பக்கம். |
|---|---|
| 1. வானத்தெழுந்த மழை | 161 |
| 2. பன்றியுமாமையுமீனமும் | 185 |
| 3. வானத்திலுள்ளீர் வலியீர் | 206 |
| 4. மண்ணும் மலையும் மறிகடல் | 280 |
| 5. கோட்டுமண் கொண்டிடந்து | 299 |
| 6. ஆசைவாய்ச் சென்ற | 311 |
| 7. வல்லெயிற்றுக் கேழலுமாய் | 345 |
| 8. தோட்டமில்லவளாத்தொழு | 380 |
| 9. வயிற்றில் தொழுவை | 388 |

ஆ பாட்டுக்கள்—9.


### 53. ஆயிரங்கண்ணனுக்கிட்ட சோற்றைக் கண்ணனுண்டது.


| நெ. | பக்கம். |
|---|---|
| 1. கேட்டறியாதனகேட்கின்றேன் | 187 |
| 2. அட்டுக்குவிசோறு | 200 |
| 3. ஆனுயர் கூடியமைத்த | 285 |

ஆ பாட்டுக்கள்—3.


### 54. ப்ரலம்பாஸுரனைப் பாழ்படுத்தியது.


| நெ. | பக்கம். |
|---|---|
| 1. தேனுகன்பிலம்பன் | 218 |
| 2. கருளுடைய பொழில்மருதும் | 351 |


### 55. பரசுராமனைப் பரிசழித்தது.


| நெ. | பக்கம். |
|---|---|
| 1. என்வில்வலிகண்டுபோ | 252 |
| 2. நெறிந்த கருங்குழல் | 263 |


### 56. தாடகையுயிரை யொழித்தருளியது.


1. என்வில்வலிகண்டுபோவென் றெதிர்வந்தான் * 252


### 57. உருப்பிணியுடன்பிறந்தவனைப் பங்கப்படுத்தியது.


| நெ. | பக்கம். |
|---|---|
| 1. உருப்பிணிநங்கையை | 253 |
| 2. உருப்பிணி நங்கைதன்னை | 292 |


### 58. பரதனுக்குப் பாதுகையு மரசுமளித்தது.


| நெ. | பக்கம். |
|---|---|
| 1. முடியொன்றி மூவுலகங் | 257 |
| 2. தார்க்கிளந்தம்பிக்கு | 259 |
| 3. மரவடியைத்தம்பிக்கு | 348 |

ஆ பாட்டுக்கள்—3.


### 59. மல்லிகைமாலையாற் பிராட்டி பெருமாளைக்கட்டியது.


1. அல்லியம் பூமலர்க்கோதாயடிபணிந்தேன் 264


### 60. பெருமாள் குஹனோடு தோழமை கொண்டது.


1. வாரணிந்த முலைமடவாய் வைதேவி விண்ணப்பம் 265


### 61. மாயமானின்பின்சென்று பிராட்டியைப் பிரிந்தது.


1. மின்னொத்த நுண்ணிடையாய் மெய்யடியேன் விண்ணப்பம் 268


### 62. பிராட்டிகையில் மாருதி மோதிரமளித்தது.


1. மைத்தகு மாமலர்க்குழலாய் வைதேவி விண்ணப்பம் 269


### 63. ஜநஸ்தாநத்திலரக்கரை யழித்தது.


. கொலையானைக் கொம்புபறித்துக் கூடலர்சேனை † 274


---

* "முதுபெண்ணுயிருண்டான்" என்றதில் நோக்கு.

† "கூடலர் சேனைபொருதழிய" என்றதில் நோக்கு.

64. ருக்மிணியைத் தேரேற்றிக்கொள்ளும்போது எதிர்ந்துவந்த அரசரோடு பொருதது.

1. நீரேறு செஞ்சடை நீலகண்டனும் நான்முகனும் 276

65. பதினாறுயிரம் தேவிமாரோடு கூடியது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பொல்லாவடிவுடைப் பேய்ச்சி | 277 | 3. மன்னு நரகன்றன்னை | 294 |
| 2. எட்டுத்திசையு மெண்ணிறந்த | 291 | 4. பதினாறுமாயிரவர் | 353 |

66. ஆழியால் இரவியைமறைத்துச் சயத்திரதனைக் கொல்வித்தது.

1. நாழிகைகூறிட்டுக் காத்துநின்ற 279

67. அர்ச்சுனனது தேர்க்குதிரைகளின் விடாயை மோழையெழுவித்துத் தீர்த்தது.

1. மன்னர் மறுகமைத்துனன்மார்க்கொரு தேரின்மேல் 288

68. மலயத்வஜராஜன் மாலிருஞ்சோலையில் மண்டியது.

1. மன்னர் மறுகமைத்துனன்மார்க்கொரு தேரின்மேல் 288

69. சிசுபாலன் நெஞ்சிலுமொருகால் நன்மை பிறப்பித்தது.

1. பலபல நாழஞ்சொல்லிப்பழித்த சிசுபாலன்றன்னை 296

70. துரியோதனாதியரைத் துலைத்தது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. பாண்டவர் தம்முடைய | 297 | 3. காதம்பலவுந் திரிந்து | 401 |
| 2. திரைபொரு கடல்சூழ் | 335 | 4. எத்தனைகாலமு மெத்தனை | 408 |

71. கண்ணபிரான் குருந்தொசித்தது.

1. குருந்தமொன் றொசித்தானொடுஞ்சென்று கூடி 307

72 உலகளந்த திருவடியிற் கங்கைபெருகியது.

1. அதிர்முகமுடைய வலம்புரி குமிழ்த்தி 331

73. பலராமாவதாரம்.

1. உழுவதோர் படையுமுலக்கையும் வில்லும் 333

74. பரசுராமாவதாரம்.

| நெ. | பக்கம் | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. உழுவதோர்படையும் | 333 | 2. உன்னுடைய விக்கிரமம் | 419 |

75. ஸாந்தீபிநியின் மகனை மீட்டுக்கொணர்ந்தது.

1. மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் 338

76. அபிமந்யுவின் மகனை உயிர்மீட்டருளியது.

| நெ. | பக்கம். | நெ. | பக்கம். |
|---|---|---|---|
| 1. மருமகன்றன் சந்ததியை | 340 | 2. மைத்துனன்மார்காதலியை | 357 |

77. பாண்டவர்கட்குக் குருவாய்நின்று ரக்ஷணஞ்செய்தது.

| நெ. | | பக்கம். | நெ. | | பக்கம். |
|---|---|---|---|---|---|
| 1. | மருமகன்றன் சந்ததியை | 340 | 3. | எத்தனைகாலமுமெத்தனை | 408 |
| 2. | மைத்துனன்மார் காதலியை | 357 | | ஆ பாட்டுக்கள்—3. | |

78. மதுகைடபரை மடி

1. * பருவரங்களவை பற்றிப்படையாலித்து 347

79. கேசியின்வாயைக் கீண்டெறிந்தது.

1. கருளுடையபொழில் மருதுங் கதக்களிறும் † 351

80. ரைவதக மலையிற் கண்ணபிரானை நாரதமுனிவர் புகழ்ந்தது.

1. ஆமையாய்க் கங்கையா யாழ்கடலாய் 353

81. தசாவதாரம்.

1. தேவுடையமீனமாயாமையாயேனமாய் 360

82. தேவகியின் மக்களறுவரைக் கஞ்சன்கல்லிடைமோதி முடித்தது.

1. துக்கச் சுழலையைச் சூழ்ந்துகிடந்த 397

83. பாண்டியநாடன் மேருமலை முடியில்
மகரகேது நாட்டியது.

1. பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர் 420.


(*)

# குறிப்பு.

இனி, இக்கதைகளின் விவரத்தை உணரவிரும்புமவர்களின் ஸௌகர்யத்தின்பொருட்டு, இத்திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில் இவற்றின் விவரம் எழுதப்பட்டுள்ளவிடம் குறிக்கப்படுகின்றது. உரையில் எழுதப்படாது விடுபட்ட சிலகதைகளின் விவரமும் இப்போது எழுதப்படுகின்றது.

| | |
|---|---|
| க. கண்ணபிரான் மல்லரை மடி[வித்தது] | [நல்லதோர் தாமரைப் பொய்கை] என்ற பாட்டின் குறிப்புரையில் இதன் விவரத்தைக் காண்க. பக்கம்—240. |
| உ. இராமபிரான் இலங்கையைப் [பாழாளாக்கியது. | இதன் விவரம் லோகப்ரஸித்தம். |
| ங. நரசிங்க வுருக்கொண்டதும், இரணியன் மார்பை இடந்ததும். | [உரம் பற்றியிரணியனை.] பக்கம்—359. |
| ச. வாணன்தோள்களைத் துணித்தொழித்தது. | [மாவலி தன்னுடைய மகன்.] பக்கம்—295. |

* "இருவரங்கமெரித்தானை" என்றதில் நோக்கு.

† "கேசவன்" என வருமிடங்களையுங் கூட்டிக்கொள்க.

௫. **கம்ஸன் சிலையைக் கண்ணன் முறித்தது.** இதன் விவரம் வருமாறு :—வில்விழா வென்கிற வியாஜம் வைத்துக் கண்ணபிரானையும் பலராமனையும் அழைத்துவரும்படி கம்ஸனால் நியமிக்கப்பட்ட அக்ரூரனுடைய பிரார்த்தனைக்கிணங்கக் கண்ணபிரான் நம்பி மூத்தபிரானுடன் புறப்பட்டு மதுரையிற்புகுந்து நடுவழியில் ஒரு துஷ்டவண்ணானைக்கொன்று அவனிடமிருந்த சிறந்த ஆடைகளை யெடுத்துச் சாத்திக்கொண்டு ராஜ வீதியில் வருகிறவளவிலே மாலாகாரரையும் கூனியையும் அநுக்ரஹித்துப் பின்பு கம்ஸனுடைய ஆயுதச்சாலையிற்புகுந்து அங்குச் சேமித்து வைக்கப்பட்டிருந்த கம்ஸ தநுஸ்ஸை யெடுத்துக் கண்ணபிரான் முறித்தெறிந்தன னென்பதாம்.

௬. **காளியன் கொழுப்பையடக்கியது.** இதன் விவரம் வருமாறு :—யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்து கொண்டு அம்மடுமுழுவதையும் தன்விஷாக்கினியினாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு உதவமாட்டாதபடி செய்த காளியனென்னுங் கொடிய ஐந்தலை நாகத்தைக் கண்ணபிரான் தண்டிக்கக் கருதி, அம்மடுவிற்கு அருகிலுள்ள தொரு கடம்பமரத்தின் மேலேறி அம்மடுவிற்குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின் மேலேறித்துவைத்து நர்த்தனஞ் செய்து நசுக்கி வலியடக்குகையில்; மாங்கலியபிக்ஷை யிட்டருள வேண்டுமென்று தன்னைவணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற் சென்று வாழும்படி விட்டருளினன் என்பதாம்.

௭. அசோதையும் ஆய்ச்சியரும் கண்ணன் வாயினில் வையங் கண்டது. — இதன் விவரத்தை, [கையுங்காலும்][வாயுள் வையகம் (பக்கம்—23) இப்பாட்டுக்களின் பதவுரையிற் காண்க.

௮. கோவர்த்தன மெடுத்துக் கோநிரைகாத்தது — இதன் விவரத்தை, [அட்டுக்குவி சோற்றுப் பருப்பதம்] என்றதிருமொழியின் அவதாரிகையிற் காண்க. பக்கம் 200.

௯. பூதனைமுலையைச் சுவைத்து உயிருண்டது. — [பொல்லாவடிவுடைப் பேய்ச்சி துஞ்ச]பக்கம்-277

௧0. குவலயாபீடத்தைக் கொன்றொழித்தது. — இதன் விவரம் வருமாறு :—வில்விழாவென்கிற வியாஜம் வைத்துக் கம்ஸனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணபலராமர்கள் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவ்வரண்மனைவாயில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவிநிறுத்தப்பட்ட குவலயாபீட மென்னும் மதயானை சீறிவர, அவ்யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பது போல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக் கொண்டு அடித்து அவ்யானையை உயிர்தொலைத்து விட்டு உள்ளே போயின ரென்பதாம்.

௧௧. தாம்பாலாப்புண்டது. — இதன் விவரம் லோகப்ரஸித்தம். [பெருமாவுரலில்] உரையிலுங் காணலாம். பக்கம்—31.

௧௨. இரட்டைமருதமரங்களை முறித்தது. — [கருளுடைய பொழில் மருதும்] பக்கம்—351.

௧௩. சகடனைச்சாடியது. — இதன் விவரம் வருமாறு :— நந்தகோபர் திருமாளிகையில் ஒருவண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலிற் பள்ளி கொண்டிருந்த கண்ணன், ஒரு கால் அச்சகடத்திற் கம்ஸனால் ஏவப்பட்ட அஸுரனொருவன் வந்து ஆவேசித்துத் தன்மேல் விழுந்து தன்னைக் கொல்ல முயன்றதை அறிந்து, பாலுக்காக அழுகிறபாவனையிலே தன் சிறிய திருவடிகளை

மேலேதூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்ட மாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுடட்பட அழிந்ததென்பதாம்.

கச. ஊழியில் உலகங்களை விழுங்கியது. { [மண்ணும் மலையுங் கடலும்-] பக்கம்—35.

கரு. ஆலந்தளிரிற் பாலனாய்த் துயின்றது. { கல்பத்தின் முடிவில் உலகங்களை யெல்லாம் எம்பெருமான் தன் திருவயிற்றில் வைத்து, ஓராலந் தளிரிலே கண்வளர்ந்தருள்வது பிரசித்தம்.

கசா. மாவலியை வலியடக்கியது. { [குறட் பிரமசாரியாய்] பக்கம்—358.

கஎ. மத்ஸ்யாவதாரம் { [அன்னமுமீனுருவும்.] பக்கம் 58.

கஅ. ஏழ்விடை செற்றது. { [நம்முடை நாயகனே.] பக்கம் 51.

ககூ. கன்றினால் விளவெறிந்தது. { [கரும்பார் நீள்வயல்.] பக்கம் 167.

உO. தேனுகனைச் செற்றது.
உக. முரனைமுடித்தது.
உஉ. நரகனை நாசஞ்செய்தது. { [வானவர்தாம்மகிழ.] 51.

உங. வைதிகன் பிள்ளைகளைத் தாயொடு கூட்டியது. { [துப்புடையாயர்கள்தம்.] பக்கம்—55.

உச. ஹம்ஸாவதாரம் { [துன்னிய பேரிருள்சூழ்ந்து.] பக்கம்—81.

உரு. கூர்மாவதாரம். { [அன்ன முமீனுருவு மாளரியும்.] பக்கம்—58.

உசா. சடலரசனை அச்சமுறுத்தியது. { [பரந்திட்டு நின்ற படுகடல்.] பக்கம்—63.

உஎ. கடலில் அணைகட்டியது. { [காரார் கடலை யடைத்திட்டு.] பக்கம்—261.

உஅ. கடல் கடைந்து அமரர்க்கு அமுதளித்தது. { [கடல் கடைந்த முதங் கொண்டு.] பக்கம்—415.

உகூ. கண்ணன் காமனுக்குத் தந்தையானது. { [ஒருகாலிற் சங்கொருகாலில்.] பக்கம்—70.

ஙO. கூனியின் கூனை நிமிர்த்தது. { [நாறியசாந்தம் நமக்கு.] 76.

ஙக துரியோதனனிடம் தூது போனது. { [காதம் பலவுந்திரிந்துழன்றேற்கு.] பக்கம்—402.

ஙஉ. அர்ச்சுநனுக்குச் சாரதியானது. { இவ்வரலாறு லோகப்ரஸித்தம். [மெச்சூது சங்கமிடத்தான்] உரையிலுங் காண்க; பக்கம்—89.

ஙங. சுக்கிரன் கண்ணைக் கிளறியது. { [மிக்க பெரும்புகழ்] பக்கம்—79.

ஙச. நமுசியை வானிற் சுழற்றியது. { [என்னிதுமாயம்] பக்கம்—80.

ஙரு. **சங்கரன் கொண்ட சாபந் துடைத்தது.** இதன் விவரம் வருமாறு:—ஒரு காலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதெனக் கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளி யெடுத்துவிட; அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக் கொள்

ஞாதலும், அவன் இதற்கு என் செய்வதென்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந் தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இக்கபாலம் கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலும் பலதலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்சிரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது, அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்பதாம். இவ்வரலாற்று முகத்தால், எம்பெருமானுடைய பரத்துவத்தை வெளியிட்டவாறு.

௩௬. பாரிஜாத தருவைப்பறித்துக் கொணர்ந்தது. { [என்னாதன் தேவிக்கு.] பக்கம்—251.

௩௭. **கஞ்சனைக் கொன்றது.** இவ்வரலாறு வருமாறு:—தன்னைக் கொல்லப் பிறந்த தேவகீபுத்திரன் யசோதையினிடம் ஒளித்துவளர்தல் முதலியவரலாறுகளை நாரதன் சொல்லக் கேட்டுக் கம்ஸன் அதிக கோபங் கொண்டு கண்ணனைக் கொல்ல நிச்சயித்து, வில்விழாவென்கிற வியாஜம் வைத்துக் கண்ணனை மதுரைக்கு வரவழைத்துப் பலவகையில் வதைக்க வழிதேடுகையில் கம்ஸஸபையிலே கண்ணபிரான் வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின் மேலேறி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டனன் என்பதாம்.

௩௮. இராமன் நாடு துறந்தது { [மாற்றுத்தாய் சென்று, பக்கம்—254.] [கூன்றுமுழத்தை சிதகுரைப்ப, 341.]

௩௯. **களிற்றைக் காத்து முதலையை முடித்தது.** இதன் விவரம் வருமாறு:—இந்திரத்யும்நனென்னும் அரசன் மிக்க விஷ்ணுபக்தி யுடையனாய் ஒருநாள் விஷ்ணுபூஜை செய்கையில் அகஸ்தியமாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூஜிப்பதிற் செலுத்தி யிருந்ததனால் அவ்விருடியின் வருகையை அறிந்திடானாய் அவனுக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன், தன்னை அரசன் அலட்சியஞ் செய்தானென்று மாறுபடக் கருதிக் கோபித்து, 'நீ, யானைபோலச் செருக்குற்றிருந்ததனால், யானையாகக்கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் காட்டில் ஒருயானையாகத் தோன்றினனாயினும், முன் செய்த விஷ்ணுபக்தியின் வைபவத்தினால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரை மலர்களைக் கொண்டு திருமாலை அர்ச்சித்து வருகையில், ஒருநாள், பெரியதொரு தாமரைத் தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறித்தற்குப் போய் இறங்கியபொழுது, அங்கே முன்பு நீர் நிலையில் நின்று தவஞ் செய்து கொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றியிழுத்து அதனாற் கோபங் கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூ என்னும் கந்தருவன் அவ்யானையின் காலைக் கௌவிக் கொள்ள, அதனை விடுவித்துக் கொள்ள முடியாமல் கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் பெரிய திருவடியின் மீதேறி அங்கு எழுந்தருளித் தனது சக்கராயுதத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன்வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முத்தியை அருளினன் என்பதாம்.

௪௦. கண்ணபிரான் ஆய்ச்சியரோடு குரவை கோத்தது. { குரவைக்கூத்தின் விவரம் [சோத்தம் பிரானென்றிரந்தாலுங் கொள்ளாய்] என்ற பாட்டினுரையிற் காண்க. பக்கம்—107.

௪௧. பிறிலேயிற் சிலேமுறித்தது. ⟨ [திக்கு நிறைபுகழாளன்.] பக்கம்—270.

௪௨. அரிஷ்டாஸுரனை அழித்தது. இதன் விவரம் வருமாறு:—கண்ணனை நலியக் கருதின கஞ்சனால் ஏவப்பட்டு மிகவும் பயங்கரமான ரிஷபத்தின் உருக்கொண்ட அரிஷ்டாஸுரன் திருவாய்ப்பாடியிற் புகுந்து கோநிரையையும் கன்றுகளையும் கோவலரையும் பலவாறாக நலியத் தொடங்க, அடியார்துயரத்தைப் பொறுக்கமாட்டாத கண்ணபிரான் அக்காளையின்மேற் கடுங்கோபங்கொண்டு, அதன் இரண்டு கொம்புகளையும் பிடித்துச் சிறிதுதூரம் நெட்டிக் கொண்டு போய்க் கீழே விழும்படி தள்ளி மீதேறி மிதித்துநின்று அவ்விரண்டு கொம்புகளையும் வேருடன் பறித்து, அவைகளையே வஜ்ராயுதமாக இரண்டு திருக்கைகளிலுந்தாங்கி உறுதியாகப் பிடித்துப் பின் பாய்ச்சல் கொண்டு கிறுகிறென்று சுழற்றி முன் பாய்ந்து வந்து மோதி அடித்து உதைத்தார்; அவ்வளவில் அவ்வசுரன் மூக்கினும் வாயினும் உதிரத்தைக் கக்கிக் கொண்டும், கிடுகிடென்று நடுங்கி உதைத்துக் கொண்டும் பிராணபயமடைந்து மூத்திரபுரீஷங்கள் செய்து கொண்டும் ஒருதரங் கதறி ஒரிரைச்சலிட்டு உயிரைத் துறந்தான் என்பதாம். இவ்வசுரன் பெயர் அரிஷ்டநேமி என்றும் வழங்கும்.

௪௩. கொக்கின் வாயைக் கீண்டொழித்தது. } [பள்ளத்தில் மேயும்.] பக்கம்—123.

௪௪. உந்திக்கமலத்திற் பிரமனைப் படைத்தது. } திருமால் உலகங்களனைத்தையும் படைத்தற் பொருட்டுத் தனது திருநாபிக்கமலத்தில் நான்முகனைப்படைத்த வாலாறு உலகப்பிரசித்தம்.

௪௫. மராமர மெய்தது. ⟨ [கொலையானைக் கொம்புபறித்து.] பக்கம்—274.

௪௬. சூர்ப்பணகா பங்கம். ⟨ [தார்க்கிளந் தம்பிக்கு.] பக்கம்—259.

௪௭. குடக்கூத்தாடியது. ⟨ [குடங்களெடுத் தேறவிட்டு.] பக்கம்—136.

௪௮. மாலிகன் தலையை ஆழியாலறுத்தது. } [சீமாலிகனவனோடு.] பக்கம்—136.

௪௯. காகத்தின் கண்ணைக் குருடாக்கியது. } [சித்திரகூடத் திருப்ப.] பக்கம்—267.

௫0. விபீஷணனுக்கு அரசளித்தது. } [காரார் கடலையடைத்திட்டு.] பக்கம்—261.

௫௧. ஆய்ச்சியர்துகில் கொண்டு மரமேறியது. } [குண்டலந்தாழ.] பக்கம்—156.

௫௨. வராஹாவதாரம். ⟨ [வானத்தெழுந்த.] பக்கம்—161.

௫௩. இந்திரனுக்கிட்ட சோற்றைக் கண்ணனுண்டது. } [ஆனுயர் கூடி.] பக்கம்—285.

௫௪. பிரலம்பாஸுரனைப் பாழ்படுத்தியது. இதன் விவரம் வருமாறு:—ப்ரலம்பனென்னும் பெயரையுடைய ஒருகொடிய அஸுரன் ஸ்ரீக்ருஷ்ண பலராமர்களையும்

மற்றுமுள்ள கோவலர்யாவரையும் வதைசெய்து தான் வெற்றிபெறக் கருதித் தனது மாயையினால் ஒருகோபால குமாரனைப்போல் வேஷம் பூண்டு, அக்கோபாலர்களெவர்க்கும் தன்னிடத்தில் ஸஜாதீயபுத்தி பிறக்கும் படி அவர்களை மயக்கி, நெஞ்சிற் கபடத்துடன் அவர்களுடன் கலந்து நேசித்திருந்தான். ஸர்வஜ்ஞனாகிய கண்ணபிரான் இக்கபடச் செய்தியை நன்குணர்ந்து அவனைச் சிக்ஷித்தொழிப்பதற்குத் தக்க சூழ்ச்சிகளைச் செய்து கொண்டிருந்தும், அவ்வஸுரனுக்கு 'இவன் நம்மிடத்தில் மிக்க அன்பு கொண்டே இருக்கின்றான்' என்று தோற்றும்படி நடனஞ் செய்து, ஒருநாள் கோபாலகுமாரர்களனைவரையும் விளித்து, "நாமனைவருமொன்று சேர்ந்து இரவி மறையுமளவும் ஸந்தோஷமாய்ச் சில சிலைகளை ஓரிடத்தில் ஸ்தாபித்துக் குறிவைத்துப் பந்துகளடித்து அவ்விளையாட்டினால் வருகிற ஜயாபஜயங்களையடைந்து அவற்றுக்குத் தக்க பந்தியங்களையுமனுபவிப்போம் வாருங்கள்" என்றழைக்க, அனைவரும் அதற்கு உடன்பட்டுவர, பின்பு கண்ணபிரான் தான் ஒரு பேருத்தியும், ஸ்ரீதாமனென்னும் கோபாலன் தனக்கு எதிர்ப் பேருத்தியும், தன்னுடைய பக்ஷத்தில் மாயாகோபாலப்ரலம்பன் ஒருபேருத்தியும், அவனுக்கெதிர் பலராமன் ஒருபேருத்தியுமாக ஏற்படுத்தி, மற்ற கோபாலர்களைச் சிறிய உத்திகளான சேவகர்களாக வகுத்து அவர்கள் யாவரையுங் கணக்குசெய்து இரண்டு பக்ஷத்திற்கும் ஸமமாகப் பாகித்து, இரண்டு இனமாகப் பிரிந்தவர்களுடன் ஸ்ரீப்ருந்தாவன மஹாவிசாலமார்க்கங்களிற் சென்று மஹாவிருக்ஷங்களையும் பெரிய சிலைகளையும் குறிகளாக்கிக் கைகளிற் பந்துகளேந்திப் பாண்டீரகமென்கிற ஆலமரத்தின் நிழலிற் சேர்ந்து, "இவ்வாட்டத்தில் தோற்றவர்கள் ஜயித்தவர்களைச் சுமந்து கொண்டு, பசுக்கூட்டங்கள் பிரிந்து அப்புறம் சிதறிப் போகாமல் அம்மந்தைகளைப் பிரதக்ஷிணமாகவந்து மடக்க வேண்டியது; மஹாவ்ருக்ஷ சிலாலக்ஷியங்களைத் தொட்டு அத்தானத்தில் வந்து இறங்கவேண்டியது" என்று எல்லாரும் சபதமேற்படுத்திக் கொண்டு விளையாடிக் கொண்டிருக்கையில், ஒருகால் கண்ணன்வகுப்பில் தோல்வி நேரிட, அப்போது ஸ்ரீதாமனென்பவனைக் கண்ணபிரானும், பலராமனைப் பிரலம்பனும் வாஹநமாகிச் சுமந்து கொண்டு ஸமயபந்தத்தின்படி லக்ஷ்யப்ரதக்ஷிணஞ் செய்யப் போனார்கள்; பலராமனைச் சுமந்து கொண்டு செல்லுகிற பிரலம்பன் மாத்திரம் தீயகருத்தினனாய் லக்ஷியஸ்தானத்தைத் தாண்டிப்போக, பலராமன் தனதுசக்தி விசேஷத்தினால் அவனுக்குச் சுமக்கமுடியாத பாரமாகிவிட, அவன் மிகவும்வருந்தி நடக்கமாட்டாதவனாய் அந்தக் கோபாலவேஷத்தை விட்டு நிஜாகாரமாகிய கொடிய ராக்ஷஸரூபத்தைப் பூண்டு ஊழிப்பெருங்காற்றினுங் கடியனாக விரைந்து ஆகாயமார்க்கத்திற் செல்ல, பலராமன் அவனது கோரமானவடிவைக் கண்டு இவன் அஸுரனேயென்று நிச்சயித்துத் தனது ஸங்கர்ஷணம்சபலத்தினால் முஷ்டிபிடித்து அவனது சிரோபாகத்திற்குச் சரியாகப்பாய்ந்து, கைமுட்டியினால் அவன்சிரம்பிளந்து சிந்நபிந்நமாய் அழியும்படி ஓர்அறை அறைந்து ஒரே குட்டாகக் குட்டினார்; உடனே அவ்வஸுரன் தலைபிளந்து சிந்நபிந்நமாகச் சிதைய, அவனது சரீரமெங்கும் செந்நீராறாய்ப் பெருக, முகத்தினின்றும் ரக்தமாம்ஸங்கள் ஒழுக, கதறிக்கொண்டு பூமியில் விழுந்து உயிரொழிந்தனன் என்பதாம். (பலராமனாற் செய்யப்பட்ட இவ்வஸுரவதத்தைக் கண்ணபிரான் செய்தருளியதாகக் கூறுவது ஒற்றுமை நயம் பற்றியாம்.)

௫௫. பரசுராமனைப் பரிசழித்தது. } [என்வில் வலிகண்டுபோ.] பக்கம்—252.

௫௬. தாடகையுயிரை யொழித்தது. } [என்வில் வலிகண்டுபோ.] பக்கம்—252.

| | | |
|---|---|---|
| ருஎ. ருக்மணிப் பங்கப் படுத்தியது. | [உருப்பிணி நங்கையை.] | பக்கம்—253. |
| ருஅ. பரதனுக்குப் பாதுகை தந்தது. | [முடியொன்றி.] | 257. |
| ருகூ. மல்லிகைமாலையாற் பிராட்டி பெருமாளைக் கட்டியது. | [அல்லியம் பூமலர்.] | 264 |
| சு0. குஹப் பெருமாளுடன் தோழமைகொண்டது. | [வாரணிந்த முலைமடவாய்.] | பக்கம்—265. |
| சுக. பஞ்சவடியிற் பிராட்டியைப் பிரிந்தது. | [மின்னொத்த நுண்ணிடை.] | பக்கம்—268. |
| சுஉ. பிராட்டிகையில் மாருதி மோதிரமளித்தது. | [மைத்தகுமா மலர்க்குழலாய்.] | பக்கம்—269. |

சுஙு. **ஜநஸ்தாநத்திலரக்கரை யழித்தது.** இதன் விவரம் வருமாறு:— இலக்குமணனால் அங்கபங்கம் பண்ணப்பட்டு ராமலக்ஷ்மணரிடத்துக் கறுக்கொண்டு சென்ற சூர்ப்பணகையால் தூண்டப்பட்டுக் **கரன்** மிகப் பெரியசேனைகளுடனும், அறுபது லக்ஷம்படை வீரர்களுடனும், பதினாலாயிரம் ரதாதிபதிகளுடனும், சேனைத்தலைவர் பதினால்வருடனும், தூஷணன் த்ரிசிரஸ் என்னும் முக்கிய ஸேநாதிபதிகளுடனும் வந்து எதிர்க்க, இராமன் இலக்குமணனைச் சீதைக்குக் காவலாக வைத்துவிட்டுத்தான் தனியே நின்று பொருது அவர்களனைவரையுங் கொன்றிட்டனன் என்பதாம்.

| | | |
|---|---|---|
| சுச. ருக்மிணியைத் தேரேற்றிக் கொள்ளும்போது எதிர்ந்துவந்த அரசரோடு பொருதது. | [உருப்பிணிநங்கையை.] | பக்கம்—253. |
| சுரு. பதினாறாயிரம் தேவிமாரோடு கூடியது. | [மன்னு நரகன்றன்னை.] | பக்கம்—294. |
| சுசா. ஆழியால் இரவியையமறைத்தது. | [நாழிகை கூறிட்டு.] | பக்கம்—278. |
| சுஎ. அர்ஜுனனது தேர்க்குதிரைகளின் விடாயைத் தீர்த்தது. | [மன்னர்மறுக.] | 288. |
| சுஅ. மலயத்வஜராஜன் மாலிருஞ் சோலையில் மண்டியது. | [மன்னர்மறுக.] | 288. |
| சுகூ. சிசுபாலன் நெஞ்சிலுமொருகால் நன்மை பிறப்பித்தது. | [...வபலநாழம்.] | 296. |

எ0. துரியோதநாதியரைத் துலைத்தது. [பாண்டவர்தம்முடைய, 297] [காதம் பலவும், 401] இவற்றினுரைகளிற் காண்க.

**எக. கண்ணபிரான் குருந்தொசித்தது.** இதன் விவரம் வருமாறு :—கண்ணனைக் கொல்லும் பொருட்டுக் கம்ஸனால் ஏவப்பட்ட பல அஸுரர்களில் ஒருவன், கண்ணபிரான் மலர்கொய்தற்பொருட்டு விரும்பியேறும் பூத்தமா மொன்றிற் பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும்போது தான் முறிந்து வீழ்ந்து அவனை வீழ்த்திக் கொல்லக்கருதியபோது, மாயவனான கண்ணபிரான் அம்மாத்தைக் கைகளாற் பிடித்துத் தன்வலிமை கொண்டு முறித்து அழித்தனன் என்பதாம்.

எஉ. உலகளந்த திருவடியிற் கங்கை பெருகியது. [அதிர் முகமுடைய.] பக்கம்—331.

எ௩. பலராமாவதாரம். [துக்கச் சுழலையை.] 397.

எச. பரசுராமாவதாரம். [நெறிந்த கருங்குழல்.] 263.

எரு. ஸாந்தீபிநியின் மகனைமீட்டுக் கொணர்ந்தது. [மாதவத்தோன் புத்திரன்.] 338.

எசா. அபிமந்யுவின்மகனை உயிர் மீட்டருளியது. [மருமகன்றன் சந்ததியை.] 340.

எஎ. பாண்டவர்கட்குக் குருவாய் நின்று ரக்ஷணஞ் செய்தது. [மருமகன்றன் சந்ததியை.] 340.

**எஅ. மதுகைடபரை மடிவித்தது.** இதன் விவரம் வருமாறு :—பிரமதேவனது திநப்பிரளயத்தில் இவ்வுலக மெல்லாம் பெருங்கடலினால் எங்கும் நீர்மயமாயிருந்த பொழுது அவ்வெள்ளத்தில் திருமால் அரவணையில் அமர்ந்திருக்கையில், அத்திருமாலினிடத்தினின்று ரஜஸ்தமோகுணங்களின் வடிவமாகத் தோன்றி "எம்மை நீ கொலைபுரிக என்று தம்வாயாற் சொல்லிய பின்னரே தம்மைப் பிறர் கொல்லலாகும்" என்று வரம் பெற்ற மதுகைடபரிருவரும் அப்பிரளயநீரைக் குழப்பிக்கொண்டு பேராரவாரத்துடன் சென்று பிரமதேவனைக்கண்டு அவனிடத்தினின்று வேதங்களை யெல்லாம் பறித்துக்கொண்டு அப்பிரளய வெள்ளத்தில் மறைந்தனராக, அப்போது தான்செய்ய வேண்டுவது இன்னதெனத் தேறாது திகைப்புக் கொண்ட அப்பிரமன் பின்னர்ச் சிறிது தெளிந்து திருமாலைத் துதித்துத் தனக்கு நேர்ந்த ஆபத்தை முறையிட, அக்கடவுள் ஹயக்ரீவாவதாரஞ் செய்து அக்கடலிற்புக்கு இனியதோரிசையைப் பாட, அவ்வினியகீதத்தைக் கேட்ட அவ்வசுரர்கள் அவ்வேதங்களை ஓரிடத்து வைத்திட்டு அவ்வொலிவந்த வழியைப்பிடித்துச் செல்லுமளவில் திருமால் அவ்வேதங்களுள்ள விடத்திற் சென்று அவற்றைக் கொணர்ந்து பிரமனுக்குத்தந்தருள, அப்போது ஒருவரையுங் காணாதவராய் வேதங்களும் எடுத்துக்கொண்டு போகப்பட்டதை யுணர்ந்த அவ்வசுரர்கள் மிகச்சினந்து அரவணையில் அறிதுயிலமரும் பரப்பொருளைக் கிட்டிப்போர்செய்யத் தொடங்கவே, திருமாலுக்கும் அவ்வசுரர்க்கும் வெற்றி தோல்விகளின்றி நெடுங்காலம் பெரும்போர்

நிகழ்ந்ததாக, முடிவில் திருமாலை நோக்கி அவர்கள் 'உனது ஆற்றலுக்கு உவந்தோம்; வேண்டும்வரம் பெற்றுக்கொள்' என்ன; அக்கடவுள் 'யான் உங்களைக் கொல்ல வேணும்' என்று வரம் வேண்ட, அவர்களும் அதற்கு இணங்குகையில், திருமாலும் 'உங்கட்கு வேண்டும் வரங் கொண்மின்' என்ன; ஒருவரும் இறவாத இடத்தில் நாங்கள் இறக்கவேண்டும்' என்று அவர்கள் வேண்ட, திருமாலும் அங்ஙனமே வரமளித்துத் தனது தொடையைக்கொண்டு அவர்களை இறுக்கிக் கொன்றிட்டனன் என்பதாம். (இவ்வாலாறு சிறிது வேறுபடக் கூறப்படுதலுமுண்டு.)

எகூ. **கேசியின்வாயைக் கீண்டெறிந்தது.** இதன் விவரம்:—கம்ஸனால் ஏவப்பட்ட அஸுரர்களில் கேசியென்பவன் குதிரையின் உருவத்தோடு ஆயர்கள் அஞ்சிநடுங்கும்படி கனைத்துத்துரத்திக் கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன்வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களை யுதிர்த்து உதடைப் பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன் என்பதாம்.

அ0. ரைவதகமலையிற் கண்ணபிரானை நாரதமுனிவர் புகழ்ந்தது. [ஆமையாய்க் கங்கையாய்.] பக்கம்—353.

அக. தசாவதாரம். (இதன் விவரத்தைத் தனித்தனியாகக் கண்டுகொள்க.)

அஉ. தேவகியின் மக்களாறுவரைக் கஞ்சன் கல்லிடை மோதியது. [**தூக்கச் சுழலையை.**] **பக்கம்—397.**

அங. பாண்டிய நாடன் மேருமலை முடியில் மகரகேது நாட்டியது. [பருப்பதத்துக் கயல் பொறித்த.] 420.

---

ஆரியர்காள்! இப்பெரியாழ்வாரருளிச் செயலில் மேற்குறித்த எண்பத்துமூன்று கதைகள் அடங்கியுள்ளனவாக அடியேனால் தேர்ந்தெடுக்கப்பட்டன; இவற்றின்விவரமும் ஒருவாறு காட்டப்பட்டது. அடியேனுடைய கண்ணுக்குப் புலப்படாமல்மற்றுஞ் சிலகதைகள் ஷை அருளிச்செயலில் அமைந்திருக்குமாயின் பெரியார் அவற்றைப் பரிசீலித்து இவற்றுடன் கூட்டிக்கொள்க.

ஸ்ரீமஹாபாரதம், ஹரிவம்சம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீபாகவதம், ஸ்ரீராமாயணம் முதலிய பல இதிஹாஸ புராணங்களில் பகவத்கதைகளின் விவரம் கூறப்பட்டிருக்கின்றது. ஒரு வ்ருத்தாந்தமே புராண பேதத்தால் மாறுபடுவது முண்டு. அம்மாறுபாடுகளையும் ஆராய்ந்து ஷை கதைகளையும் விரிவாக எழுதி, இன்ன இன்ன புராணத்தில் இன்ன இன்ன விதமாகக் கூறப்பட்டிருக்கின்றதென்று பேதவகைகளையும் விளங்கக் காட்டி, இவ்வாறாகவே நாலாயிரத்திலுமுள்ள பகவத்கதைகளையெடுத்தெழுத வேணுமென்று பேரவாக் கொண்டுளேன். "விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்."

இப்பெரியாழ்வார், "பல்லாண்டு" என்னுந் தொடக்கப்பாசுரத்தில் "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா" என்று அருளிச்செய்த விருத்தாந்தத்தையே முடிவில் "பருப்பதத்துக் கயல் பொறித்த" என்றபாட்டிலும் "மல்லடர்த்தாய்"

என்பதனாற் கூறியருளின ராதலால், எம்பெருமானது மற்றைச் சேஷ்டிதங்களிற் காட்டில் இச்சேஷ்டிதத்திற் குண்டானவாசி அறியற் பாலது. திருமங்கையாழ்வார் "சூழ்புனற் குடந்தையே தொழுது" என்று திருக்குடந்தையில் தொடங்கி, "தண் குடந்தைக் கிடந்தமாலை" என்று திருக்குடந்தையிலேயே சாத்தினாற் போலு மன்றே இஃது.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



"மன்னு மணவாள மாமுனிவன் மாண்புரைக்கு
மன்னபுக ழண்ணங்க ராசிரியன்—மன்னுபெரி
யாழ்வா ரருள்செய்த வந்தமிழ்ப்பா வாழ்பொருளைத்
தாழ்வாது மின்றியுரைத் தான்."



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திவ்யப்ரபந்ததிவ்யார்த்த தீபிகையின்

# முகவுரை.

—∞✣∞—

நெடியானருள்சூடும் படியான் சடகோபன்
அடிசேரடியார்கட் கடையாவிடர்பாடே.

அருமறைமுடியி னரும்பொருளறியும்
வரவரமுனியின் திருவடிசரணே.

வரவரமுனியடி வணங்கும்வேதியர்
திருவடியிணைகளென் சிரமேற்சேர்கவே.

*அந்தமிழி லாழ்வார்க ளாய்ந்தளித்த வாரமுதப்*
*பந்தமெனும் பாமாலைப் பல்பொருளைப் பலரறிய*
*அந்தமில்சீ ராரியர்க ளாழ்கடல்போ லளித்தனரால்*
*புந்தியினிற் பொருள்புகவே புல்லுரையொன் றுரைக்கேனே.*

*இல்லறத்தினியற்கைதனையிகழ்ந்துநெஞ்சா லிறுதியிலாச்சிரமஞ்சேரிளையாழ்வார்போ*
*அல்லிமகளன்பனடிக் கடிமைசெய்யு மழகியநன்மணவாளச் சீயர்தாமும் [ல்*
*வல்லபர வாதிபயங்கரனார்வம்சத் தணிவிளக்கா மனந்தகுருவரனார்தாமும்*
*நல்லறிவை நாடோறு மடியனேற்கே நல்குவரென் றையமற நம்புகேனே.*

*பொய்கைமுனிபூதம்பேய்மழிசையர்கோன் புகழ்க்குருகைநகரரசன்புதுவையர்கோன்*
*துய்யபுகழ்ச்சேரலர்கோன்தொண்டர்தாள்தூள் தூமதிசேர்பாண்பெருமாள்மங்கையர்*
*செய்யவிசைமதுரகவிசீர்கொள்கோதை சீரரங்கத்தமுதனொடுஞ்சீயர்சொன்ன [கோன்*
*செய்யதமிழ்ச்செழுங்கவியிற்சேர்கருத்தைச் சிறக்கவுரைசெய்திடநான்சிந்தித்தேனே,*

*குருகையர்கோன் நாதமுனிமுனிவர்கோமான் கூர்மதிசேர்கூரநாதர்குமரர் பட்டர்*
*அருளுடைய நஞ்சீயரடிசேர்பிள்ளை அணிவடக்குத்திருவீதியமரும்பிள்ளை*
*திருமருவுமுலகுருவருளால்வாழுஞ் சீர்திருவாய்மொழிப்பிள்ளை சீயர்காத்த*
*அருமறைபா லாழ்வார்களருளால்வந்த அந்தமிழினுழ்பொருளையறிவாராரே.*

*முன்னோர்களருளியவவ்வுரைகள்தன்னில்*
*மொழியாததொன்றில்லைமுழுதுங்கண்டோம்*
*என்னேயின்றிவனொருவனிறுமாந்தொன்றை*
*யியம்புகின்றானென்றிகழ்வீரீதுகேண்மின்*
*பின்னோர்கள்பேதைமையின்பெருமைதன்னால்*
*பேருரையிற்பயனிறையும்பெறமாட்டாரென்*
*றிந்நோக்கோடிவ்வுரைநானெழுதப்புக்கே*
*னெழின்மதியோரெஞ்ஞான்றுமிகழார்தாமே.*

பதவுரையிற்பொருள்விரியாப்பாசுரத்திற்
பரக்கவதன்கருத்தையிதிற்பொழித்துரைப்பேன்
மிதமறச்சொல்மூலத்திற்கதைகள்தன்னைப்
புராணவழிக்கண்டெடுத்துவிரியச்சொல்வேன்
விதவிதமாவிருந்தவிலக்கணங்கள்சொல்வேன்
வேண்டிடத்துத்துறைபகுதிவிகுதிசொல்வேன்
மதியிலியேனாயினுநான்மதியால்மிக்க
வல்லார்வாய்வழிகேட்டு வரைகின்றேனே.

நன்னூலை நன்று நவின்றிலேன் நாவில்நான்
தொன்னூலுந் தொட்டறியேன் தூய்மையிலேன்—எந்நூலும்
ஆய்ந்துணரு மாரியர்த மாரருளி லாழ்ந்தடியேன்
வாய்ந்தனனே வல்லவனாய் வந்து.

*சந்தனப்பொதியச் செந்தமிழ்த் தடவரையையுடைய தென்னாட்டிலே அருந்தமிழாய்ந்தறிந்த ஆரியர்காள்! ஸ்ரீவைஷ்ணவ ஸமயத்திற்சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகிற ஆழ்வார்கள் பன்னிருவர். புறவிருள்பாற்றும் ஆவாதசாதித்தரினும் பெருமைபெற அகவிருளொழித்த இவர்களுடைய சரிதவிபவங்களுக்கு ஓரெல்லையில்லை. அவை வடமொழியில், ப்ரஹ்மாண்ட, பாத்ம, ஸ்காந்தேத்யாதி புராணங்களிலும், நாரதீய, வ்ருத்தபாத்ம, (ப்ருஹத்பாத்ம) உபபுராணங்களிலும், எதிர்காலவரலாறுகளை விவரிக்குமிடத்துக் கூறப்பட்டுள்ளனவாகப் பிரசித்தமாயிருத்தல்மாத்திரமன்றி, திவ்யஸூரிசரிதம், ப்ரபந்நாம்ருதம், என்றவடநூல்களிலும், குருபரம்பராப்ரபாவமென்கிற மணிப்ரவாளக்ரந்தத்திலும், பிரபந்தசாரம், உபதேசரத்தினமாலையென்னுந் தமிழ்ப்பிரபந்தங்களிலும் பெருக்கமாகவுஞ் சுருக்கமாகவும் பேசப்பட்டுள்ளன. இவற்றிற்கூறப்படாமற் பிறநூல்களாலும் கர்ணபரம்பரையாலுமே அறியத்தக்க ஐதிஹ்யங்களும் அளவற்றுள்ளன.

எல்லாவுலகங்களினும் மேம்பட்டு மேலிடத்துள்ளதாய், ஒப்புயர்வின்றி விளங்கும் இயற்கைப்பேரொளியுடையதாய், கமலக்கண்ணனது கருணைப் பெருக்கின் வடிவமான 'விரஜை' யென்னும் விமலநதியை எல்லையாகப் பெற்றதாய, § "சிறுகாலையிலா நிலையோதிரியா, குறுகாநெடுகா குணம் வேறுபடா, உறுகால்கிளர் பூதமெலாமுகினும், மறுகாநெறி" என்றபடி கலை முஹூர்த்தம் முதலிய காலபரிணாமங்களும் நிலைவேறுபாடும் சுருக்கமும் பெருக்கமும் குணவேற்றுமையும் உற்பத்திவிநாசங்களுமின்றி ஒன்று போருபடிப்பட விருப்பதாய், அந்தமில் பேரின்பத்தை அநுபவிக்குமிடமாய், மனமொழிகளுக்கு எட்டாத மஹிமையுடையது, பரமபதமென்கிற திவ்யலோகம்.

அங்கு, ஸ்ரீவைகுண்டநகரிலே, செம்பொன்செய்கோயிலிலே திருமாமணிமண்டபத்திலே "சென்றாற் குடையாம்" என்றபடி ஸகலவிதகைங்கரி

§ கம்பராமாயணம்-ஆரணியகாண்டம்-சரபங்கர் பிறப்புநீங்கு படலம், உ௦.

யங்களைச்செய்கிற ஆதிசேஷனது ஸ்வரூபமான சிரீயசிங்காதனத்திலே ஸ்ரீபூமிநீளைகளென்னுந் தேவிமார் மூவரோடுங்கூடி வீற்றிருந்து நித்யமுக்தர்களுக்கு நிரதிசயாநந்தத்தை அநுபவிப்பித்தருளுகிற ஸகலகல்யாணகுணகணபரிபூர்ணனை ஸர்வேச்வரன் திருவாழிஞ்ஜ்-உதியாகிய அந்த நலமந்தமில்லதோர் நாட்டிலுள்ளார் எப்பொழுதும் பரமஸுகத்தையே நுகர்ந்து வருதல் போல, அவ்வுலகத்துக்குக் கீழ்ப்பட்டுள்ள லீலாவிபூதியாகிய ஸகல லோகங்களிலுமுள்ள பலவுயிர்களும் தம்தம்முயற்சியால் அப்பெரும் பதவியைப்பெற்று இன்புற்றுவாழலாம்படியிருக்க, அங்ஙனஞ் செய்யாது தன்னைத்கரிசித்தல், தொழுதல், சேர்தல், தியானித்தல், துதித்தல் முதலிய பணிவிடைகளைப் புரிந்து ஈடேறும்பொருட்டுத் தன்னாற்கொடுத்தருளப்பட்ட கண் கை கால் மனம் வாய்முதலிய அவயவங்களை அவ்வத்தொழிலில் உபயோகித்து உய்வுபெறாமல் ஸமித்து வெட்டிவருதற்குத் தந்த வாளைக்கொண்டு அதுசெய்யாது பகலின்வாலைத் தறிப்பார்போலவும், களை பறிக்கக் கொடுத்த கருவியைக்கொண்டு அஃதாற்றாது கண்ணைக்கலக்கிக் கொள்வார் போலவும், ஆறுகடந்து கரையேறுமாறு கொடுத்த புணையைக் கொண்டு அதுபுரியாது அந்நீர்ப்பெருக்குவழியாற் கடலிடைப்புக்கிடுவார் போலவும் அவ்வுறுப்புக்களைச் சப்தாதிவிஷயாந்தரங்களிலே செல்லவிட்டு * மாரனார்வரி வெஞ்சிலைக்காட்செய்து * மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து இறந்து, கரையற்ற கருமப்பெருங்கடலினுள் அமிழ்ந்துவருந்தி அலைவதை உற்றுநோக்கி, அவ்வான்மாக்களையும் அழிவில்வீட்டை அடைவிக்க வேண்டுமென்று இயல்பாக எழுந்த இன்னருளாலே அவ்வுயிர்கள் நல்வழி தீவழிகளை நன்றாகப்பகுத்துணர்ந்து நடக்குமாற்றை அறிவித்தற்பொருட்டு தன்கட்டளைரூபமான வேதங்களைவெளியிட்டருளி, அரியபெரிய அவ்வேதங்களின் ஆழ்ந்த மறைபொருளைச் சில்வாழ்நாட் பலபிணிச் சிற்றறிவினராகிய சேதநர் ஐயந்திரிபறத் தெள்ளிதில் தெரிந்துகொள்ளுதற்கு உபயோகமாம்படி அவற்றிற்கு அங்கமான அங்கசாஸ்திரங்களையும் முனிவர் முதலானோரைக்கொண்டு வெளியிட்டருளினன்.

பேரிருளிலே திரிவார்க்குப் பொருள்விளக்கம் பிறக்குமாறு கைவிளக்குக்கொடுத்தாற்போல, அநாதி அஜ்ஞாநாந்தகாரத்தில் அகப்பட்டவர்க்கு அர்த்தஜ்ஞாநப்ரகாச முண்டாகுமாறு இப்படி சாஸ்திரதீபத்தைக் காட்டிக் கொடுக்கவும், விழியிலார்க்கு விளக்குப் பயன்படாதவாறுபோல, பகவத் பக்தியாகிற ஸித்தாஞ்ஜநத்தினால் நெஞ்சென்னும் உட்கண்ணின் குருடு தீராத உலகத்தார்பலர்க்கு அந்த ப்ரமாண ப்ரதீபமும் முழுப்பயன்படாதாயிற்று. அவர்கள் சாஸ்திரங்களின் ஸித்தாந்தத்தைத்தீரத்தெளிய ஆய்ந்து ஓய்ந்து உணராமல் நுனிப்புல் மேய்ச்சலாக மேல்நோக்காப் பார்த்தறிந்து நிலையில்லாதவற்றை நிலையுடையன வென்றும், நிலையினவற்றை நிலையில வென்றும் விபரீதமாகத் துணிந்து அர்த்தகாமங்களில் மிகவுமபிமுகரும் மோக்ஷத்தில் அதிவிமுகருமாய் அழிந்துபோவதை ஆலோசித்து, கருணைக் கடலான எம்பெருமான், தன் ஆணைசெல்லாத இடங்களில் அரசன்தானே

நேரிற்சென்று தண்டம் நடத்துதல் போலவும், கிணற்றினுள் வீழ்ந்த குழந்தையையெடுக்கத் தாய்தானும் மதனுட்குதித்தல் போலவும், தானே ராமக்ருஷ்ணாதிரூபத்தால் * ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்திங்குப் பிறந்து பரத்வத்தை இருந்தது தெரியாதபடி விட்டு ஸௌலப்யத்தையே தலைமைக்குணமாகக்கொண்டு உலகத்தோ டொத்துவாழ்ந்து துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனஞ்செய்து அறத்தை நிலைநிறுத்தித் தன்வடிவழகாலும் உபதேசமுகத்தாலும் அனுட்டான மூலமாகவும் ப்ரஜைகளைத் தன்வசப்படுத்தத் தொடங்கிய வளவிலும், பலர் அநாதி கர்மவாஸனையாலே சீர்திருந்தாமல் அத்திருவவதார மூர்த்திகள் திறத்து மநுஷ்யபுத்தியையேபண்ணித் தம்மைப்போலவே அவர்களைப் பாவித்து எதிரம்புகோத்துப் போருக்குநின்றும், * கேட்பார் செவிசுடுகீழ்மை வசைகளையே வைதும் விச்வரூபத்தையுமுட்பட இந்திரஜாலமென்று இகழ்ந்தும் அதமகதிகளை அடையலாயினர்.

அதுகண்டு திருமால் திருவுள மிரங்கி 'இனி இவர்களை வசீகரித்தற்கு வழியாதோ?' என்று திருமகளோடு தீர்க்காலோசனைசெய்து 'தீபகங்காட்டி மிருகம்பிடிப்பார்போல, இவர்களினத்தவ ரென்னலாம்படியான சேதநரைக்கொண்டு இவர்களைக் கைப்பற்றுவதே உத்தமமான உபாயம்' என்றறுதியிட்டு ஸ்ரீபூமிநீளாதேவிகளையும் ஸ்ரீபஞ்சாயுதங்களையும் ஸ்ரீவத்ஸ கௌஸ்துபவநமாலாதி சிஹ்நங்களையும் அநந்தகருட விஷ்வக்ஸேநாதியரையும் பார்த்து, நீங்கள் ஏற்றபடி பூலோகத்தில் பலசாதிகளிலும் பிறந்து பிரபஞ்சத்தவரைப் பிறவிப்பெருங்கடலினின்று கரையேற்றி வாருங்கள்' என்று ஆணையிட்டனுப்ப, அவர்கள் அப்பணியைச் சிரமேற்கொண்டு ஆழ்வாராதியராக அவதரித்தார்கள்.

இவர்கள், எம்பெருமானுடைய ஸகலமங்கள குணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவரானதலால், இவர்களுக்கு 'ஆழ்வார்' என்று திருநாமம் வழங்குதல் மரபு.

இவர்கள், ருஷிகள்போலத் தாமாக மிகமுயன்று தத்துவஞானத்தைப் பெறுதலின்றி எம்பெருமான்தானே வந்து தன்னைக் காட்டிக்கொடுக்கக் கண்டு ஜ்ஞாநபக்தி விரக்திகளை எளிதிற்பெற்று, சிலர்க்கு விலக்காக மறுக்கப்படுகிற வேதம்போலன்றி யாவர்க்கும் ஒருங்கே உதவும்படி ஸகலவேத வேதாங்கரஹஸ்யார்த்தங்களைத் தமிழ்த்திவ்வியப் பிரபந்தங்களாக அருளிச்செய்து தம்முடைய அநுபவத்தைப் பிறர்க்கு உணர்த்தி உலகத்தை வாழ்வித்தருளுதலால், கூறுதற்கரிய வீறுபெறுவர்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் என ஆழ்வார்கள் பதின்மர். நம்மாழ்வார் திருவடிகளான மதுரகவிகளையும், பெரியாழ்வார் திருமகளான ஆண்டாளையுங்கூட்டி 'ஆழ்வார்கள் பன்னிருவர்' என்பது ஸம்ப்ரதாயம்.

திருமாலின் வேறுதசாவதார மென்னலாம்படியான வீறுபாடுடைய இவர்களது திருவவதாரக்கிரமம்-

"பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
அய்ய னருள்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட
நாதனன்பர் தாள்தூளி நற்பாணன் நன்கலியன்
ஈதிவர்தோற் றத்தடைவா மிங்கு."

என்று முறைமை பெற்றிருக்கும். இவர்களுள் நம்மாழ்வார், மற்றையாழ்வார்களைப்போல இவ்வுலகவுணர்ச்சி நடையாடாநிற்க எம்பெருமானருளால் ஒருகாலவிசேஷத்திலே தத்துவஞானமுதலியன தோன்றப்பெற்று அநுபவித்தவரன்றி, திருத்துழாய் மணத்தோடே முளைக்குமாபோலே அவதரிக்கும்போதே இயற்கையில் ஞானபக்திகளையுடையராய் அந்நிலை என்றும் மாறாதிருந்ததனால் தலைவராகக் கூறப்பட்டு, இதுவேகாரணமாக அவரை அவயவியாகவும், மற்றையாழ்வார்களை அவர்க்கு அவயவமாகவும் நிரூபித்தல் ஏற்றிருக்கும்.

அங்ஙனம் உருவகப்படுத்துமிடத்து, நம்மாழ்வாருக்கு, பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும், பொய்கைபேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முகமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரை மார்பாகவும், திருமங்கையாழ்வாரைக் கொப்பூழாகவும், மதுரகவியாழ்வாரைத் திருவடியாகவும் உரைப்பது - ஸம்ப்ரதாயம்.

இதற்கேற்ப, "[illegible] ॥" என்றொரு பரமைகாந்திவசநமும் காண்கிறது.

இப்படி ஒப்புயர்வற்ற இவ்வாழ்வார்கள் * உயர்வறவுயர் நலமுடையவனை அயர்வறுமமரர்களதிபதியால் மயர்வற மதிநலமருளப்பெற்று அருளிச்செய்தருளின திவ்யப்ரபந்தங்களின் விவரம்:—

(க) பொய்கையாழ்வார் அருளிச்செய்தது—முதல்திருவந்தாதி; பாட்டு, க௦௦

(உ) பூதத்தாழ்வார்...இரண்டாந்திருவந்தாதி; பாட்டு, க௦௦

(ங) பேயாழ்வார்...மூன்றாந்திருவந்தாதி; பாட்டு, க௦௦

(ச) திருமழிசையாழ்வார்...நான்முகன்திருவந்தாதி; பாட்டு, ௯௬
திருச்சந்தவிருத்தம்; பாட்டு, க௨௦

(ரு) நம்மாழ்வார்...திருவிருத்தம்; பாட்டு, க௦௦; திருவாசிரியம்—எ; பெரியதிருவந்தாதி—அஎ; திருவாய்மொழி, ககo௨

(௬) குலசேகராழ்வார்...பெருமாள் திருமொழி; பாட்டு, ௧௦௫

(௭) பெரியாழ்வார்...திருப்பல்லாண்டு; பாட்டு—௧௨; பெரியாழ்வார் திருமொழி, ௪௬௧

(௮) தொண்டரடிப்பொடியாழ்வார்...திருமாலை—௪௫; திருப்பள்ளியெழுச்சி, ௧௦

(௯) திருப்பாணாழ்வார்...அமலனாதிபிரான்; பாட்டு, ௧௦

(௧௦) திருமங்கையாழ்வார்...பெரியதிருமொழி; பாட்டு, ௧௦௮௪ திருக்குறுந்தாண்டகம்—௨௰; திருநெடுந்தாண்டகம்—௩௰; திருவெழுகூற்றிருக்கை—௧; சிறிய திருமடல்—௧; பெரியதிருமடல்—௧.

(௧௧) மதுரகவியாழ்வார்...கண்ணிநுண் சிறுத்தாம்பு; பாட்டு, ௧௧

(௧௨) ஆண்டாள்...திருப்பாவை—௩௰; நாய்ச்சியார் திருமொழி—௧௪௩

ஆக, ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்கள் இருபத்து நான்குக்கு; பாட்டு, ௩௭௭௬.

எம்பெருமானார் விஷயமாகத் திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த இராமாநுசநூற்றந்தாதியின் நூற்றெட்டுப்பாட்டுக்களையுங்கூட்டிக் கணக்கிடின், ௩௮௮௪.

[இங்கு அபிப்ராயபேதங்கள்.]

தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களுள் சிலருடைய கொள்கை:—ஸ்ரீமணவாளமாமுனிகள் திருவடிகளாகிய அஷ்டதிக்கஜங்களுள் ஒருவரான அப்பிள்ளை அருளிச்செய்த ஆழ்வார்கள் வாழித்திருநாமங்களுள் கலியன் வாழித் திருநாமத்தில், "இலங்கெழுகூற்றிருக்கை யிருமடலீந்தான்வாழியே இம்மூன்றில் பட்டிருநூற்றிருபத்தேழிசைத்தான் வாழியே" என்று திருமடல்களிரண்டையும் இருநூற்றிருபத்தாறு பாட்டாகப்பிரித்து, (இராமாநுசநூற்றந்தாதி யொழியவே) நாலாயிரமாகக் கணக்கிட்டுள்ளாராதலால், சிறியதிருமடலை, ௭௮—பாட்டாகவும், பெரியதிருமடலை, ௧௪௮—பாட்டாகவுங்கொண்டு கணக்கிட்டு, 'நாலாயிரம்' என்று நாடெங்கும் வழங்குவதை நலமாக்கவேணுமென்பர்;

இதற்கு, ஆராய்ந்துணர்ந்த அறிஞர்கள் அருளிச்செய்யும்படி:—இப்போது அச்சிடுவிக்கப்பட்டுள்ள ஆழ்வார்கள் வாழித்திருநாமங்களை அபியுக்தஸார்வபௌமரான அப்பிள்ளை அருளிச்செய்தாரென்பது, இலக்கணநெறியறியாதார் கொள்கை; ஏனெனில்? அவ்வாழித் திருநாமங்களில் இலக்கணநடைக்கு இணங்காத அம்சங்களைக் கூறியிருப்பதுந்தவிர அவற்றிலுள்ள பலவடிகள் யாப்பிலக்கணத்துக்கு எதிராகக் காணப்படாநின்றன, எங்ஙனே யென்னில்; நம்மாழ்வார் வாழித்திருநாமத்தில், "ஈனமறவந்தாதி யெண்பத்தேழீந்தான் வாழியே, இலகு திருவாய்மொழி யாயிரத்தொருநூற்றிரண்டுரைத்தான் வாழியே" என்பது இரண்டாமடியாகக் காண்கிறது; ஆசிரியவிருத்தமாகிய இப்பாட்டில், ஒன்று மூன்று நான்காமடிகள் எண்சீர்க்கழிநெடிலடிகளாக அமைந்திருக்க, இவ்விரண்டாமடி

யொன்றுமே பத்துச்சீர்கள் கொண்டுள்ளதனாலும், மேற்குறித்த கலியன் வாழித் திருநாமத்திலும் "இலங்கெழு கூற்றிருக்கை யிருமடலீந்தான் வாழியே இம்மூன்றிற்பாட்டிருநூற்றிருபத்தேழிசைத்தான் வாழியே" என்ற மூன்றாமடியில் அங்ஙனமே சீர்கள் மிகுந்துள்ளதனாலும், இவைபோல்வன மற்றும்பலபிழைகள் காணப்படுதலாலும், இலக்கணம்படியாத பரமைகாந்திகள் பணித்த இவ்வாழித் திருநாமங்களை அப்பிள்ளை அருளிச்செய்தாரென்பது ஏசலுக்கிடமாம்.

அன்றியும், திருமடல்களை ஒவ்வொருபாட்டாகக் கொள்ளாமல் அரையுங் காலும் முக்காலுங்கூடின பலபாட்டுக்களாகக் கொள்ளுதல் இலக்கண நெறிக்கு இறையேனு மிணங்காதென்பதையுஞ் சிறிதுவிவரிக்கின்றேன்;— ஈற்றடி முச்சீரடியாகவும் மற்றையடி நாற்சீரடியாகவும்பெற்று, காய்ச்சீரும் மாச்சீர்விளச்சீர்களும் இருவகை * வெண்டளைகளுங்கொண்டு, மற்றைச்சீருந் தளையும்பெறாமல், நாள் மலர் என்ற ஓரசை வாய்பாடுகளுள் ஒன்றினாலாவது, காசு பிறப்பு என்ற ஈரசைவாய்பாடுகளுள் ஒன்றினாலாவது முடிந்து, ஒருவிகற்பத்தாலாயினும் இருவிகற்பத்தாலாயினும் வருவது வெண்பாவென்று பொதுப்படக்கூறி, இரண்டடியால் வருவது குறள் வெண்பாவென்றும், மூன்றடியால் வருவது சிந்தியல் வெண்பாவென்றும், நான்கடிகளாய் இரண்டாமடியின் இறுதிச்சீர் முதலிரண்டடிகளின் எதுகையையுடைய தனிச்சொலலாய்வர நிற்பது நேரிசைவெண்பா வென்றும், நான்கடிகளாய்த் † தனிச்சொல் இன்றிவருவது இன்னிசைவெண்பாவென்றும், ஐந்தடி முதல் பன்னிரண்டடியளவும் வருவது பஃறொடைவெண்பா வென்றும், பன்னிரண்டடிக்கு மேற்படின் கலிவெண்பா வென்றும் விசேஷித்து யாப்பிலக்கண நூல்களில் கூறப்பட்டுள்ளமைக்கேற்ப, திருமடல்களிரண்டையும் கலிவெண்பாவாகக்கொண்டு ஒவ்வொரு மடலையும் ஒவ்வொரு பாட்டாகக் கொள்ளுவதே ஏற்கும். இம்மடல்களிரண்டிலும் முற்றும் ஒரே எதுகையாக அமைந்தமையையும், ஈற்றடி முச்சீராகவந்தமையையும் நன்குநோக்குக.

அன்றியும், சங்கத்துச்சான்றோர் இயற்றிய 'பன்னிருபாட்டியல்' என்ற இலக்கணநூலில் இனவியலில் மடலிலக்கணஞ் சொல்லுமிடத்து "பாட்டுடைத் தலைமக னியற்பெயர்க் கெதுகை, நாட்டிய வெண்கலிப்பாவதாகி ......காமங் கவற்றக் கரும்பனை மடன்மா, ஏறுவ ராடவ ரென்றனர் புலவர்" என்றதையுங் கண்டுதெளியலாம்.

இனி, தூப்புல் வேதாந்ததேசிகன் அருளிச்செய்த 'பிரபந்தசார' மென்னும் பிரபந்தத்தில், "சிறியமடல்பாட்டு முப்பத்தெட்டிரண்டும்" என்று சிறிய திருமடலை நாற்பதுபாட்டாகவும், பெரியதிருமடலை "சீர்பெரிய

* "காய்முன் நேரும் மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது வெண்டளை"

† தனிச்சொல் பெற்றாலும் பலவிகற்பத்தால்வரின் இன்னிசைவெண்பாவேயாம். ‡ இரண்டாமடியொழிந்த அடிகளில் தனிச்சொற் பெற்றுவருவதும் இதுவே.

மடல்தனிற்பாட்டெழுபத்தெட்டும்" என்று எழுபத்தெட்டுப் பாட்டாகவும் பிரித்தருளிச்செய்து, "பரகாலன்சொல், அத்தனுயர் வேங்கடமாற்காயிரத் தோடான விருநூற்றோ ரைம்பத்து மூன்றும், முத்திதருமெதிராசர் பொன்னடிக்கே மொழிந்த வமுதர்பாடல் நூறுமெட்டும், எத்திசையும் வாழ விசைபாடிவைத்த வென்பவை நாலாயிரமு மெங்கள்வாழ்வே" என்று இராமாநுச நூற்றந்தாதியையுங்கூட்டி நாலாயிரம் பாட்டாகக் கணக்கிட்டுள்ளார் ; இதற்குப் போக்கென்? என்பர்—வடகலைஸம்ப்ரதாயஸ்தர் சிலர்:—

"[illegible] ,
[illegible] ।
[illegible]
[illegible] ॥ "

என்று அந்தத் தூப்புல் பிள்ளைதாமே அதிகரணஸாராவளியில் அருளிச்செய்த ச்லோகத்தை இங்குநினைக்கப் பெற்றேன். இதொழிய வேறு உத்தரம் சொல்லவல்லேனல்லேன்

"திருமடலை அவரவர்கள் தம்தம் கருத்தின்படி பலபாட்டுக்களாகப் பிரித்தற்கு இலக்கணநூல்கள் இறையாயினும் இசைந்து இடந்தருமோவென்று எனது சிற்றறிவுக்கெட்டியவரை ஆராய்ந்துபார்த்து மறிந்ததொன்றில்லை" என்றருளிச்செய்வர். இதுநிற்க.

இங்ஙனமாகில், 'நாலாயிரம்' என நாடெங்கும் வழங்குவது சேரும்படி யெங்ஙனே யென்னில்; நாலாயிரக்கணக்குக்கு நூறு இருநூறு குறைந்தாலும் மிகுந்தாலும் நாலாயிரமென்றே வழங்கலாம்; [உதாரணம்.] நம் ஆழ்வார்கள் "வாணனாயிரந் தோள்துணித்த" என்றும், "இண்டவாணனீரைஞ்ஞூறு தோள்களைத்துணித்த" என்றுமருளிச்செய்தமை அனைவருமறிவர்; பரமசிவன் பிரார்த்தனையால், பாணாஸுரனை ‡ நான்குகைகளோடும் உயிரோடும் எம்பெருமான் விட்டருளினனென்பது ஸ்ரீபாகவதாதிகளில் ப்ரஸித்தம்; இனி, கீழ்க்குறித்த ஆழ்வார்பாசுரங்களுக்கும் இப்புராணவரலாற்றுக்கும் ஐககண்டியம் பண்ணப்புக்கால், ஆயிரத்துக்கு நாலைந்து குறையினும் ஆயிரமென்றேசொல்லலாமென்று அனைவருமங்கீகரிக்கவேண்டுமே. இனி, திருவாய்மொழி ஆயிரத்து நூற்றிரண்டு பாட்டாயிருக்க, ஆழ்வார்தாமே "குருகூர்ச்சடகோபன்சொன்ன ஓராயிரம்" என்று பலவிடங்களிலும் அருளிச்செய்தமை சேரும்படியெங்ஙனே? யென்றுகேட்பார்க்கும், நூற்றெட்டுப் பாட்டுக்களமைந்த பிரபந்தத்தை 'இராமாநுச நூற்றந்தாதி' யென்கை சேரும்படியெங்ஙனே? யென்று கேட்பார்க்கும் - ஆயிரத்துக்கு நூறு ஐம்பது மிகுந்தாலும் ஆயிரமென்றே வழங்கலாமென்றும், நூற்றுக்குப் பத்து

‡ ஹரிவம்ச விஷ்ணுபர்வத்தில், ௧௨௬-வது அத்தியாயத்தில், இரண்டுகைகளோடு விட்டருளினதாக வரலாறுகாண்கிறது; ப்ரக்ருதத்தில் இரண்டுவகையும் துல்யம்.

எட்டு மிருந்தாலும் நூற்றெட்டுச் சேர்ந்து முன்றே வழங்கலாமென்றும் மறுமொழியுரைத்த லில் மயங்குவாரில்லையே. இவ்வாறாகவே நாலாயிரமென்ற வ்யவஹாரத் தையுஞ் சேர்வித்துக்கொள்ளவேண்டுமென்று முன்னோர்மொழிந்தமுறை. இவ்வாறு வடநூல்கள் பலவற்றிலுங் காண்கிறது; ஆயிரத்தெட்டு ச்லோ கங்களமைந்த ஸ்தோத்ரத்தைப் பாதுகாஸஹஸ்ரமென்றும், எழுபத்திரண்டு ச்லோகங்களமைந்த ஸ்தோத்ரத்தை யதிராஜஸப்ததி யென்றும், இவை போல்வன பலவழக்கங்களுங்காணலாம். ஆகையால், திருமடல்களை ஒவ் வொருபாட்டாகக் கொள்ளினும் நாலாயிரமென வழங்குதற்கு வசை யொன்று மில்லையென்க. இதுஒழிய.

இத்திவ்யப்ரபந்தங்களுட் சிலவற்றுக்கும் பலவற்றுக்கும் முழுமைக் கும் வியாக்கியான மருளிச்செய்தவர்கள்:—திருக்குருகைப்பிரான் பிள்ளான், நஞ்சீயர், வடக்குத்திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், வாதிகேஸரி அழகியமணவாளசீயர், திரு வாய்மொழிப்பிள்ளை, மணவாளமாமுனிகள், அப்பிள்ளை, பிள்ளைலோகஞ் சீயர். [வடகலைஸம்ப்ரதாயத்துக்குச்சேர, சிற்சில திவ்யப்ரபந்தங்களுக்குப் பெரியபரகாலஸ்வாமி, வேதாந்தராமாநுஜஸ்வாமி, ரங்கராமாநுஜஸ்வாமி முதலானோர் ஸங்க்ஷேபவியாக்கியானங்கள் செய்துள்ளார்.] ஆகிய இப்பூரு வர்களருளிச்செய்த வியாக்கியானங்களுள் ஒன்றேனும் தமிழிலக்கண நடையை அடியொத்திப் பதவுரைவிளக்கிப் பொழிப்புரைவிரிக்கத் தலைப் படவில்லை; பெரும்பாலும் ரஸாநுபவத்தையே தலைமையாகக்கொண்டரு ளிச்செய்யப்பட்ட உரைகளாயிராநின்றன. இக்குறைகண்டு சில பின்புள் ளார், மேற்படி வியாக்கியானங்களை அச்சிடுவிக்கும்போது ஒருபதவுரையு மெழுதிக் கூடவச்சிட்டு வெளியிட்டுள்ளார்; அது பலவிடங்களில் இலக் கணநடையைத் தொடரப்பெறாதும், மயங்கவைத்தலென்னுங் குற்றத் துக்குக் கொள்கலமாகவுங் காணப்படாநின்றமையை அறிஞரனைவரு மாராய்ந்துணர்வர்; "பன்னியுரைக்குங்காற் பாரதமாம்."

வடமொழியுந் தென்மொழியும் விரவிய மணிப்ரவாளநடையில் எழு தப்பட்டுள்ள பூர்வாசார்ய வ்யாக்யாநங்க ளெல்லாவற்றையும் அரும்பத வுரைகளையுந்தழுவித் தமிழ்நடையில் ஒருரை இயற்றப்புகின் வெகுவிரி வாய விடுமாதலால், அங்ஙனஞ் செய்யாது, அவற்றைப் பெரும்பாலுந் தழுவிச் சிறுபான்மை உசிதமாக வேறுசிலவிஷயங்களையும் புதிதாகச் சேர்த்து எனது சிற்றறிவுக்கு ஏற்ப ஒருரையெழுதத் தொடங்கலாயினேன்.

இதில், அவசியமான பதப்ரயோஜனங்களையும், இன்றியமையாத இலக்கணக்குறிப்புக்களையும், முக்கியமான புராணவரலாறுகளையும் எடுத் துக்காட்டி, பதப்பொருள், கருத்து, விசேஷார்த்தம், சொற்சுவை, பொ ருட்சுவை, யாப்பிலக்கணம் முதலியவற்றை ஆங்காங்கு வேண்டுழி இனிது விளக்குவதோடு, ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயமுறைகளையும், அகப்பொருள் துறையிலக்கண வகைகளையும் உள்ளவிடத்து விவரித்துவருமாறு முயன்

றிருக்கின்றேன். அன்றி, பூர்வாசார்யர்களுடைய வியாக்கியானங்களின் வாக்கியங்களும் உரியவிடங்களில் இதில் எடுத்தாளப்படும்; "முன்னோர் மொழிபொருளேயன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" (நன்னூல்) என்பது இலக்கண மாதலால்.

திருக்கோவையார்க்கு உரைசெய்யத் தொடங்கிய நல்லறிவுடைய தொல்பேராசிரியர்தாமே அந்நூலுரைப் பாயிரத்தில், "பரமகாரணன் திருவருளதனால், திருவாதவூர்மகிழ் செழுமறைமுனிவர், ஐம்பொறி கையிகந் தறிவாயறியாச், செம்புலச் செல்வராயினராதலின், அறிவன் நூற்பொருளும் உலக நூல்வழக்குமென, இருபொருளும்நுதலி யெடுத்துக்கொண்டனர், ஆங்கவ்விரண்டனுள், ஆகமநூல்வழியின் நுதலியஞான, யோகநுண் பொருளினை யுணர்த்துதற்கரிது, உலகநூல்வழியின் நுதலியபொருளெனும், அலகில்தீம்பாற் பரவைக்கண் எம், புலனெனுங் கொள்கலன் முகந்த வகைசிறிது, உரையா மரபின் உரைக்கற்பாற்று" என்றதனால், அந்நூலின் உட்கிடைப் பொருளேயன்றி வெளிப்படைப்பொருளும் உணர்த்துதற்கு எளியதன்றென்றனரென்றால், அந்நூலினும் மேம்பட்டுள்ள நம் ஆழ்வார்களருளிச்செயல்களின் ஸ்வாபதேசம் அந்யாபதேசமென்னும் இருவகைப் பொருளையும் உள்ளபடி வெளியிடுதற்குச் சிற்றறிவுடைய சிறியேனாகிய யானோ உரியேன்?; அல்லேனாயினும் பூர்வாசார்யர்களது அருளிச்செயல்களையே பற்றுக்கோடாகக் கொண்டு இவ்வுரையெழுதத் தொடங்கினேன்.

முக்குணங்களும் மாறிவரும் மானுடவியற்கையாலாய கைப்பிழையும் அச்சுப்பிழையும், இரவிலும் விரைவிலும் எழுதவேண்டியிருக்கின்றமைபற்றி நேரும் பிறழ்வுமாகிய பலகுற்றங்குறைகளைப் பெரியோர் தமது இயற்கை நற்குணத்தாற் பொறுத்தருளுமாறு பிரார்த்திக்கின்றேன். குற்றங்குறைகளை யெடுத்துக் காட்டுவார் பக்கல் பெருநன்றிபாராட்டுவதுடன், அவற்றை அப்போதைக்கப்போது திருத்திவரவுங் கருத்துறுவேன்.

இவ்வுரையில், பூர்வவ்யாக்யாநங்களி லொன்றிலு மருளிச்செய்யப் படாத அவிருத்தார்த்தங்கள் சிற்சிலவிடங்களில் மேலையார் மொழிந்தபடி எழுதப்படுமாதலின், அவற்றை ஸ்வகபோலகல்பிதங்களாகக் கருதி எஞ் ஞான்று மிகழாதொழியவேணும்; பெரியதிருமொழியில் "இரக்கமின்றி யெங்கோன்செய்ததீமை" என்றபாட்டின் வியாக்கியானத்தில், "ஆடையைப் பாரில்லை" என்றவிடத்துப் பெரிய வாச்சான்பிள்ளை அருளிச்செய்துள்ள ஐதிஹ்யத்தை ஆராய்ந்தருளி இவ்வேண்டுகோளைத் தெள்ளியார் பலர் பயன்பெறுவிக்கத் தலைப்படுவார்களாயின், * தலையல்லால் கைம்மாறிலேனே.

குற்றங் குறைகண்டு கூறுங் குரவாகட
கேற்றைக்குங் கைம்மாறு மென் தலையே—கற்றோர்கள்
கல்லா வடியேனைக் கண்ணுற் றிகழாரேல்
எல்லா மெளிதா மெனக்கு.

இங்ஙனம், ஸ்ரீவைஷ்ணவதாஸன்.
பெருமாள்கோயில் பிரதிவாதி பயங்கரம்,
அண்ணங்கராசாரியன்.
தென்னண்டைமாடவீதி,
சின்னகாஞ்சீபுரம்.

## பதிப்புக்குறிப்புகள்.

அருந்தமிழ்ப்புலவீர்காள்!

(க) இப்பதிப்பில், அருளிச்செயல் மூலம் தமிழிலக்கணநெறிக்கிணங்கச் சீர்பிரித்து அச்சிடப்படுமாதலின், அத்யாபகபாடத்தை ஓதவிரும்பும் மாணாக்கர்கட்கு இதுகொண்டு பெறுவதொரு பேறில்லை. அன்றியும், அத்யாபகர்கள் ஸேவாகாலத்தில் நிறுத்துமிடங்கள் பெரும்பான்மை வியாக்கியானப் பொருத்தமற்றிராநின்றமை அபியுக்தர்களுக்கு அறிவரிதன்று; ஓரிடத்தை யெடுத்துங் காட்டுகின்றேன்:—திருப்பல்லாண்டில், "எந்நாளெம்பெருமான்" என்றபாட்டில், பொருட்சேர்த்திக்குப்பொருந்த "உன்றனக்கடியோமென்றெழுத்துப்பட்ட" என்றிவ்வளவிலே நிறுத்த வேண்டியிருக்க, அங்ஙனன்றி, இரண்டாமடியிலுள்ள 'அந்நாளே' என்பதையும் முதலடியோடு கூட்டிநிறுத்துவது * இமவந்தந்தொடங்கி இருங்கடலளவும் ஸாம்ப்ரதாயிகம்போல நிகழாநின்றது. நாலாயிரத்துள், ஒவ்வொருபாட்டின் அடிகளின் கடைசியில் நிறுத்தப்படாமல் வியாக்கியாநாநுகுணமாகப் பூருவர்கள் நிறுத்திஸேவித்துவரும் இடங்கள் கருகூஅ; வியாக்கியாநாந்வயவிபரீதமாக நிறுத்துமிடங்கள்—ககஙரு; இனி இவற்றையெல்லாம் திருத்தி, நிறுத்தவேண்டுமிடங்களில் அடையாளங்கள் கொடுத்து நிறுத்திப் பதிப்பிப்பதனால் பயனென்பது இறையும் பெறாதொழிவதில்லை என்பதைப் பலவகைகளாலறிந்து, இலக்கணநடைக்கிணங்கப் பதிப்பிக்க வேண்டுமென்றறுதியிடப்பட்டது.

(உ) நாலாயிரத்தினுள் அருளிச்செய்யப்பட்டுள்ள புராணகதைகள் முழுதும் மூலக்ரந்தங்களிலிருந்து விரிவாகத் தெளிய ஆராய்ந்தெடுத்தெழுதப்பட்டு, முதலாயிரவுரைப்பதிப்பு முற்றுப்பெற்ற பின்னர், "அருளிச்செயற்கதையடைவு" என்பதொரு வசனநூலாக அச்சிடுவிக்கப்படும்.

(ஙு) பெரியாழ்வார்திருமொழிஉரை முடியப்பதிப்பித்தபின்னர், யாப்பிலக்கணச் சுருக்கமும், பெரியாழ்வார் திருமொழியின் ஒவ்வொருதிருப்பதிகத்துக்கும் விருத்தவிலக்கணவாராய்ச்சியும் பதிப்பிக்கப்படும்.

---

## தனியன்.

சிறப்புப்பாயிரத்துக்கு வைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் 'தனியன்' என்று பெயர்வழங்கும். அது—நூலின் சிறப்பையாயினும் நூலாசிரியர் சிறப்பையாயினும் இரண்டையுமாயினும் எடுத்துக்கூறுவது. நூலினுட்சேராமல் அதன்புறத்தே தனித்துநிற்றல்பற்றித் தனியன் என்பது காரணப்பெயராம். இதில் 'அன்' என்னும் ஆண்பால் விகுதி உயர்வுகுறித்தற்பொருட்டு அஃறிணைப்பெயரோடு வந்ததென்க; 'திருக்கோவையார்' 'நாலடியார்' என்பவற்றில் 'ஆர்' விகுதிபோல. இத்தனியன் பூர்வாசார்யர்களால் ஒவ்வொரு பிரபந்தத்துக்கும் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது. ஸம்ஸ்கிருதச்லோகரூபமாயுஞ் சிலஉள. இவற்றுக்கெல்லாம் விரிவுரை இயற்றியருளினார் பிள்ளைலோகஞ்சீயர். "தன்னாசிரியன் தன்னொடுகற்றோன், தன்மாணாக்கன் தகுமுறைகாரனென், றின்னோர்பாயிரமியம்புதல் கடனே" என்ற நன்னூற் சூத்திரத்தினால், தனியனருளிச்செய்வதில் அதிகாரமுடையார் இன்னாரென்றறியலாம்.

ஸ்ரீ

# பெரியாழ்வார்.

---

இவ்வாழ்வார் அருளிச்செய்த திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி என்ற திவ்யப்ரபந்தங்களிரண்டிலும் மங்களாசாஸநம்செய்யப் பெற்ற திருப்பதிகள்—௨௰.

அவையாவன:—

(௧) திருவரங்கம்.
(௨) திருவெள்ளறை.
(௩) திருப்பேர்நகர்.
(௪) திருக்குடந்தை
(௫) திருக்கண்ணபுரம்.
(௬) சித்திரகூடம்.
(௭) திருமாலிருஞ்சோலை.
(௮) திருக்கோட்டியூர்.
(௯) ஸ்ரீவில்லிபுத்தூர்.
(௰) திருக்குறுங்குடி.
(௧௧) திருவேங்கடம்.
(௧௨) திருவயோத்தி.
(௧௩) சாளக்கிராமம்.
(௧௪) வதரியாச்சிரமம்.
(௧௫) கண்டங்கடிநகர்.
(௧௬) துவரை.
(௧௭) வடமதுரை.
(௧௮) திருவாய்ப்பாடி.
(௧௯) திருப்பாற்கடல்.
(௨௰) பரமபதம்.

இவற்றுள், மற்றை ஆழ்வார்களால் பாடப்பெறாமல், இவ்வாழ்வாரொருவரால்மாத்திரம் பாடப்பெற்ற திருப்பதி—கண்டங்கடிநகர், ஒன்றே.

---

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# பொதுத் தனியன்கள்.



## நம்பெருமாள் அருளிச்செய்தது.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் ।
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ॥ * * *

பதவுரை.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் — திருமலையாழ்வார் என்னும் திருவாய்மொழிப்பிள்ளையின் திருவருளுக்குப் பாத்ரபூதராய்

தீபக்த்யாதி குணார்ணவம் — ஞானம், பக்தி முதலிய நற்குணங்களுக்குக் கடல்போன்றவராய்

யதீந்த்ரப்ரவணம் — எம்பெருமானார் பக்கலிலே ப்ராவண்யமுடையரான

ரம்யஜாமாதரம் முநிம் வந்தே — ஸ்ரீமணவாளமாமுனிகளை வணங்காநின்றேன்.

குறிப்பு:— "யதீந்த்ரப்ரவணம்" என்கிற விது - மணவாளமாமுனிகளுக்கு அஸாதாரணமான நிரூபகம். ... ... ... ...

## கூரத்தாழ்வான் அருளிச்செய்தது.

லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம் ।
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் — ஸ்ரிய:பதியைத் தொடக்கத்திலே உடைத்தாய்

நாதயாமுநமத்யமாம் — ஸ்ரீமந்நாதமுனிகளையும், ஆளவந்தாரையும் இடையிலே உடைத்தாய்.

𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯 } எமக்கு ஆசார்யரான எம்பெருமானாரை முடிவிலே
𑌨𑍍𑌤𑌾𑌂 } உடைத்தான

𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌂—ஆசார்யபரம்பரையை வணங்குகின்றேன்.

குறிப்பு:— உடையவர்தாம் குருபரம்பரைக்கு நடுநாயகமாயிராநின்றாரேயாகிலும், ஆழ்வானுக்கு ஸாக்ஷாதாசார்யரானமை பற்றி, இவ்வருளிச் செய்தருளினார். ... ... ... ... ...

## இதுவும் ஆழ்வானருளிச் செய்தது.

𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮-
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

𑌯𑌃—யாவரொரு எம்பெருமானார், 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂—எந்நாளும்

𑌅𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮 } எம்பெருமானுடைய திருவடித்தாமரையிணைகளா
𑌰𑍁𑌕𑍍𑌮𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌃 } கிற ஸுவர்ணத்திலுள்ள மிகுந்தவிருப்பத்தாலே.

𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿—அத்திருவடிகளுக்குப் புறம்பாயுள்ள விஷயங்களை

𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇—த்ருணப்ராயமாகத் திருவுள்ளம் பற்றினாரோ,

𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌃—எமக்கு ஆசார்யராய்

𑌭𑌗𑌵𑌤𑌃—ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணராய்

𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃—தயாகுணத்துக்கு முக்யஸமுத்ரம் போன்றவரான

𑌅𑌸𑍍𑌯 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯—இப்படிப்பட்ட எம்பெருமானாருடைய

𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇—திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்.

குறிப்பு:— இந்த ச்லோகம் ஆழ்வானருளிச்செய்த பஞ்சஸ்தவத்தில் முதல் ஸ்தவமான ஸ்ரீவைகுண்டஸ்தவத்தின் முதல் ச்லோகம். "𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌃" என்கிற விசேஷணத்தால் எம்பெருமானார்க்கு க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யத்வம் விவக்ஷிதம். ... ... ... ... ...

## ஆளவந்தார் அருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌂 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌲𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌲𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

𑌮𑌾𑌤𑌾, 𑌪𑌿𑌤𑌾, 𑌯𑍁𑌵𑌤𑌯𑌃—தாயும், தமப்பனும், ஸ்த்ரீகளும்,

𑌤𑌨𑌯𑌾𑌃, 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃—பிள்ளைகளும், ஐச்வர்யமும்

𑌸𑌰𑍍𑌵𑌂—(மற்றுமுள்ள) ஸகலபதார்த்தங்களும்

𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌂—நான் பிறந்தவம்சத்தில் பிறந்தவர்களுக்கு

**நியமேந யதேவ**—நியதமாக எந்தத்திருவடியிணையே ஆகின்றதோ,

**ந: குலபதே:**—நம்குலகூடஸ்தரான நம்மாழ்வாருடைய

**வகுளாபிராமம்**—மகிழ்மாலையாலே அலங்க்ருதமாய்

**ஸ்ரீமத்**—வைஷ்ணவஸ்ரீயோடே, நித்யஸம்யுக்தமாயிருந்துள்ள

**தத் அங்க்ரியுகளம்**—அந்தத் திருவடியிணையை

**மூர்த்நா ப்ரணமாமி**—(என்) தலையினால் ஸேவியாநின்றேன்.

**குறிப்பு:**—இது ஆளவந்தாரருளிச்செய்த ஸ்தோத்ரரத்நத்தில் ஐந்தாம் ச்லோகம். "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய்தந்தையுமவரேயினியாவாரே" என்று ஆழ்வார் எம்பெருமான் விஷயத்தில் அநுஸந்தித்தருளின பாசுரத்தை, இவர் அவ்வாழ்வார் விஷயத்திலே அநுஸந்திக்கிறார்.—"ப்ரபந்நஜநகூடஸ்தம் ப்ரபத்யே ஸ்ரீபராங்குஶம்" என்றத்தை ஸ்மரிப்பது. ... ... ... ...

## ஸ்ரீபராசர பட்டரருளிச்செய்தது.

> பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத
> ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் ।
> பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஸ்ராந்
> ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ॥

**பூதம்**—பூதத்தாழ்வாரையும்

**ஸரஶ்ச, மஹதாஹ்வய, பட்டநாத, ஸ்ரீபக்திஸார, குலசேகர, யோகிவாஹாந்**—பொய்கையாழ்வாரையும், பேயாழ்வாரையும், பெரியாழ்வாரையும், திருமழிசையாழ்வாரையும், குலசேகராழ்வாரையும், திருப்பாணாழ்வாரையும்,

**பக்தாங்க்ரிரேணு, பரகால, யதீந்த்ரமிஸ்ராந்**—தொண்டரடிப்பொடியாழ்வாரையும், திருமங்கையாழ்வாரையும், எம்பெருமானாரையும்,

**ஸ்ரீமத்பராங்குஶமுநிம்**—நம்மாழ்வாரையும்

**நித்யம் ப்ரணதோஸ்மி**—நாடோறும் ஸேவியாநின்றேன்.

**குறிப்பு:**—'ஸரஶ்ச' என்றும், 'ஸாரஶ்ச' என்றும், 'ஸரஸ்ச' என்றும் மூன்றுவகைப்பாடங்கள் வழங்குகின்றன.

போதத் தனியன்களின் உரை முற்றிற்று.





பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிரப்பிரபந்தத்துள்

# முதலாயிரம்.

(*)

## திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழிகளின் தனியன்கள்.

### நாதமுனிகள் அருளிச்செய்தது.

குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந்
நரபதிபரிக்லுப்தம் சுல்கமாதாதுகாம: ।
ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி ॥

ய:—யாவரொரு பெரியாழ்வார்
நரபதிபரிக்லுப்தம்—ஸ்ரீவல்லபதேவனென்றராஜாவால்ஏற்படுத்தப்பட்ட
சுல்கம்—வித்யாசுல்கத்தை
ஆதாதுகாம:—கைப்பற்ற ஆசைகொண்டவராய்
குருமுகமநதீத்ய—ஆசார்யமுகத்தால் அப்யஸியாமலே
அசேஷாந் வேதாந் ப்ராஹ—ஸமஸ்தமான வேதங்களை உரைத்தாரோ,
ரங்கநாதஸ்ய—அழகியமணவாளனுக்கு

ஸாக்ஷாச் ச்வசுரம்—நேரான மாமனாரும்
அமரவந்த்யம்—தேவதைகளால் தொழத்தக்கவரும்
த்விஜகுலதிலகம்—ப்ராஹ்மணவம்சத்துக்குத் திலகம் போன்றவருமாகிய
தம் விஷ்ணுசித்தம் நமாமி—அந்தப் பெரியாழ்வாரை வணங்குகிறேன்.

## பாண்டியபட்டர் அருளிச்செய்தது.

### (இருவிகற்ப நேரிசைவெண்பா.)

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகால்
சொன்னார் கழற்கமலஞ் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோங் கீழ்மையினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

### பதவுரை.

மின் ஆர்—"ஒளி நிறைந்த,
தட—பரப்பும் உயர்த்தோங்குகையுமுள்ள
மதிள்—திருமதிலாலே
சூழ்—சூழப்பட்ட
வில்லிபுத்தூர் என்று—ஸ்ரீவில்லிபுத்தூர்" என்று
ஒருகால்சொன்னார்—ஒருதரம் உச்சரித்தவருடைய
கழல்கமலம்—திருவடித்தாமரைகளை
சூடினோம்—சிரமேற்கொண்டோம்;
முன்நாள்—"புருஷார்த்தம் வெளியாகாத காலத்தில்
கிழி—பொருள்முடிப்பை
அறுத்தான் என்று—அறுத்தருளினவர்" என்று
உரைத்தோம்—சொல்லப்பெற்றோம்;
நெஞ்சமே—ஓ! நெஞ்சே!
வந்து—நீ அநுகூலமாய் வரப்பெற்று
கீழ்மையினில்—அதோகதியாகிற நரகத்தில்
சேரும்—சேருகைக்குடலான
வழி—வழியை
அறுத்தோம்—அறப்பண்ணினோம்.

குறிப்பு:— விஷயாந்தரங்களில் செல்லாது ஆழ்வார்பக்கலிலே செல்லப்பெற்றமைக்கு மனமகிழ்ந்து 'நெஞ்சமே' என்று கொண்டாடுகிறபடி. மதிள்-மதில், போலி. 'கீழ்மை இனிச்சேரும்' என்றும், 'கீழ்மேனிசேரும்' என்றும், 'கீழ்மையினிற் சேரும்' என்றும் மூன்று பாடங்கள் உண்டு. வந்து-வர என்றபடி, எச்சத்திரிபு.

### (இதுவும் அங்ஙனமே.)

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்
றீண்டிய சங்க மெடுத்தூத—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

பாண்டியன்—வல்லபதேவனென்கிற பாண்ட்ய ராஜன்
கொண்டாட—ப்ரசம்ஸிக்க,
பட்டர்பிரான்—"ப்ராஹ்மணர்களுக்கு உபகாரகரான பெரியாழ்வார்
வந்தான் என்று—எழுந்தருளினார்" என்று
ஈண்டிய—திரள் திரளான
சங்கம்—சங்குகளை
எடுத்து—கையில் கொண்டு
ஊத—(பலர்) ஊத,
வேண்டிய—(விஷ்ணுபாரம்யஸ்தாபநத்துக்கு) ஆவச்யகங்களான

| | |
|---|---|
| வேதங்கள்—வேதவாக்யங்களை | அருத்தான்—அருத்தருளின பெரியாழ் [வாருடைய |
| ஓதி—உபந்யஸித்து | பாதங்கள்—திருவடிகளானவை |
| விரைந்து—விளம்பியாமல் [த்வரித்து] | யாமுடைய—நமக்கு |
| கிழி—வித்யாசுல்கமாகவைத்த பொருள் [முடிப்பை | பற்று—சரண்யம். |

குறிப்பு:—"ஈண்டிய"—ஈட்டம்—திரள். "சங்கம் மடுத்தூத" "சங்கம் அடுத்தூத" "சங்கம் எடுத்து ஓத" என்னும் பாடங்களுண்டு. "சங்கம்" என்று—வித்வத்ஸமூஹத்தைச்சொல்லிற்றாய், "எடுத்து ஓத" என்று—ஓரோவிடங்களில் அந்யபரங்களாய்க்கிடந்த வேதவாக்யங்களை ஸ்வமதஸாதகங்களாக எடுத்து ஓதினவளவிலே என்றபடி. சங்கம்—ஸம்ஸத்; ஶங்கம். மடுத்து—வாயிலே வைத்து. அடுத்து—கிட்டி. "எடுத்து[தோ]த" என்கிற பாடமொன்றுமே மோனைக்குச் சேரும். "யாம் உடைய" என்று பிரித்து, 'நாம் ஆச்ரயமாகவுடைய' என்றலுமொன்று.



ஸ்ரீ

## பெரியாழ்வார் வைபவம்.

பெரியாழ்வாராகிறார்—ஸ்ரீ வில்லிபுத்தூரிலே ப்ராஹ்மணோத்தமரான * வேயர் தங்கள் குலத்திலே ஆனிமாஸத்திலே ஸ்வாதிநக்ஷத்ரத்திலே முகுந்தபட்டரின் குமாரராய் அவதரித்து "விஷ்ணுசித்தர்" என்னுந் திருநாமத்தையுடையராயிருப்பாரொருவர். இவர் வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே சேஷத்வ முறையையுணர்ந்து பகவத்விஷயத்திலே கிஞ்சித்கரிக்கத்திருவுள்ளமாய், இவ்விஷயத்துக்குப் பூவிடுகையே உகப்பென்றறுதியிட்டு வடபெருங் கோயிலுடையானுக்கு * நாட்கமழ் பூம்பொழிலாகத் திருநந்தவனம் செய்து திருமாலைகட்டிச் சாத்திப் போருகிறகாலத்திலே;—

பாண்ட்யகுல திலகனான ஸ்ரீ வல்லபதேவனென்கிற ராஜா பரமதார்மிகனாகையாலே சிறியத்தைப் பெரியது நலியாதபடி தென்மதுரையிலேயிருந்து ராஜ்யம் பண்ணிக்கொண்டு போருகிறகாலத்திலே, அந்தராஜா நகரசோதநார்த்தமாக வருகிறவளவிலே ஒரு ப்ராஹ்மணன் அங்கே ஒரு திண்ணையிலே கிடக்கக்கண்டு ராஜா அவனையெழுப்பி 'நீயார்?' என்று கேட்க, அவனும் 'நான் ஒருப்ராஹ்மணன், கங்கையாடி வருகிறேன்' என்ன, 'ஆனால் உனக்குத் தெரிந்த ச்லோகமொன்று சொல்லிக்காணாய்' என்ன, அந்தப்ராஹ்மணன், *"வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிஸார்த்தமர்த்தம் திவஸம் யதேத। வார்த்தக்யஹேதோர் வயஸா நவேந பரத்ரஹேதோரிஹ ஜந்மநா ச" என்கிறச்லோகத்தைச் சொல்ல, ராஜாவும் இத்தைக்கேட்டு, வ்யுத்பந்நனாகையாலே, "த்ருஷ்டத்தில் நமக்கொரு குறையுமில்லை, இனி அத்ருஷ்டயத்நம் பண்ணும்படி எங்ஙனே!" என்று வ்யாகுல

* இந்த ச்லோகத்திற்குப் பொருள்:—வர்ஷாகாலமாகிய ஆடி ஆவணி புரட்டாசி ஐப்பசியென்னும் நான்கு மாஸங்களில் ஸுகமாக வாழும்பொருட்டு மற்றுள்ள எட்டுமாஸங்களிலும் ப்ரயத்நம் செய்யக்கடவன்; இரவில் ஸுகமாக வாழுகைக்காகப் பகலில் பாதிபொழுது ப்ரயத்நம்செய்யக்கடவன்; கிழத்தனத்தில் ஸுகமாக வாழ்தல் பொருட்டு யௌவநவயஸ்ஸிலே முயற்சிசெய்யக்கடவன்; பரலோகார்த்தத்தின் பொருட்டு இந்த லோகத்திலே உண்டான மநுஷ்ய ஜந்மத்தாலே முயலக்கடவன் என்றவாறு.

ளுய், தன்புரோஹிதரான செல்வநம்பியைப் பார்த்து "புருஷார்த்த நிர்ணய பூர்வகமாக அத்ருஷ்ட ஸித்திக்கு உபாயமேது?" என்று கேட்க; அவரும் வித்வான்களைத்திரட்டிப் பரதத்வ நிர்ணயம் பண்ணுவித்து அவ்வழியாலே பெறவேணும்" என்றருளிச்செய்ய; ராஜாவும், 'அப்படியே, ஆகிறது' என்று பஹுத்ரவ்யத்தைக் கிழிச்சீரையிலே வித்யாசுல்கமாக ஒரு தோரணத்திலே கட்டுவித்து வித்வான்களை ஆஹ்வாநம் பண்ணச் செலுல்லுகிற அளவிலே;

வடபெருங்கோயிலுடையான் இவ்வாழ்வாரைக்கொண்டு லோகத்திலே பரதத்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக இவ்வாழ்வாருடைய ஸ்வப்நத்திலேயெழுந்தருளி, "நீர் போய்க்கிழியை அறுத்துவாரும், வேதார்த்தப்ரதிபாதநத்துக்கு நாம்கடவோம், அது உமக்கு ஹுமன்று" என்று ஆழ்வாரை நிர்ப்பந்தித்தருள, ஆழ்வாரும் *சிற்றஞ்சிறுகாலேயெழுந்திருந்து விஸ்மிதராய், பாண்டியனுடைய வித்வத்கோஷ்டியேற எழுந்தருளினவளவிலே, செல்வநம்பியும் ராஜாவும் அப்யுத்தாநப்ரணாமபூர்வகமாக ஆழ்வாரை ஆதரிக்க, இத்தைக்கண்ட வித்வான்கள் இவர்க்கு வேதாப்யாஸம் சிறிதுமில்லையென்னும்புத்தியாலே ராஜாவை அதிக்ஷேபிக்க, அவ்வளவிலே செல்வநம்பி ஆழ்வாரைத் தெண்டனிட்டு, "வேதாந்தப்ரதிபாத்யமான பரதத்வத்தை நிச்சயித்தருளிச்செய்யவேணும்" என்று விஜ்ஞாபித்தவளவிலே, ஆழ்வாரும் நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே ஸகலவேத ஸாரார்த்தங்களையும் தது பப்ரும்ஹணங்களான இதிஹாஸபுராணார்த்தங்களையும் ஸாக்ஷாத்கரித்து ஸ்ரீமந் நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று அநேகச்ருதிஸ்ம்ருதிதிஹாஸபுராண திவசநோபந்யாஸவிசேஷங்களாலே பஹுமுகமாக ப்ரதிபாதித்தருளிச்செய்கையாலே வித்யாசுல்கமாகத்தோரணத்திலே கிழியாகக்கட்டிவைத்த தநம் இவர்முன்னே தானே தாழவளைய, ஆழ்வாரும் அதிப்ரீதியோடே "விரைந்துகிழியறுத்தான்" என்னும்படியே அக்கிழியை அறுத்துக்கொண்டருளினர்.

இத்தைக்கண்டு, அதிக்ஷேபித்தவித்வான்களோடு அநுவர்த்தித்த ராஜாவோடு வாசியற ஸர்வரும் விஸ்மிதராய்க்கொண்டு ஆழ்வார்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து, மிகவும்ப்ரீதியோடே அவரை யானைகழுத்தின்மேலே ஏறியருளப்பண்ணி, அந்த வித்வான்கள் சத்ரசாமரதாளவ்ருந்தாதிகள் தரித்து ஸேவிக்க, *சண்டியசங்கமெடுத்தூத, ராஜா இவர்க்குப் 'பட்டர்பிரான்' என்றுதிருநாமம்சாத்தி, தானும்ஸபரிகரனாய் ஸேவித்துக்கொண்டு நகரிவலம்வருகிற அம்மஹோத்ஸவத்தைக் காண்கைக்காக ஸர்வேச்வரன் தானும் பிராட்டியுமாய்ப்பெரியதிருவடிமேற்கொண்டு ப்ரஹ்மருத்ராதிகளாலேஸேவ்யமானனாய் திவ்யமங்களவிக்ரஹவிசிஷ்டனாய்க்கொண்டு, நெருங்கிநிற்கிற இத்திரளோடு ஸந்நிஹிதனாக, இத்தைக்கண்ட ஆழ்வார், ஸ்வஸம்ருத்தியைக்கண்டு இறுமாவாதே, '* நலமந்தமில்லதோர்நாட்டிலே வீற்றிருக்கக்கடவவன், கலி ஸாம்ராஜ்யம்பண்ணுகிற *இருள்தருமாஞாலத்திலேவந்து சக்ஷுர்விஷயமாவதே! இவ்வஸ்துவுக்கு என்னாநிங்கு வருகிறதோ' என்னுமதிசங்

கையாலே யானைகழுத்தில் கிடக்கிற மணிகளைத்தாளமாகக்கொண்டு, "இந்த ஸௌந்தர்யாதிகளுக்கு, ஒருதீங்கும்வாராதொழியவேணும்" என்றுமங்களாசாஸநம்பண்ணியருளி, இவ்விஷயத்துக்குத்தாமொருவரே மங்களாசாஸநம் பண்ணுகை போராதென்று, தமக்குத் தோன்றீண்டிகளான ஐச்வர்யகைவல்யபகவச்சரணார்த்திகளையும் மங்களாசாஸநயோக்யராம்படி திருத்திச் சேர்த்துக்கொண்டு பல்வகையாலும் திருப்பல்லாண்டுபாடியருளினர்.

அநந்தரம், அந்தராஜாவையும் விசேஷகடாக்ஷம் செய்தருளி, அவனாலே ஸத்க்ருதராய் ஸ்ரீவில்லிபுத்தூரிலெழுந்தருளி, தனக்குக்கிடைத்த ஸத்காரங்களையெல்லாம் வடபெருங்கோயிலுடையானுக்கே ஸமர்ப்பித்து, அநந்தரம் க்ருஷ்ணாவதாரத்திலே மிகவும் ப்ரவணராய், "கண்ணன்கேசவன் நம்பி பிறந்தினில்" என்று—க்ருஷ்ணன் அவதரித்ததுமுதலாக, "வென்றிசேர்பிள்ளை நல்விளையாட்டம்" என்கிற அதிமாநுஷசேஷ்டிதமான க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தை, இவர் ஜாவஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணி அநுகரித்து நன்றாக அநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீத்யதிசயத்தாலே பெரியாழ்வார்திருமொழி என்கிற திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்து, *சித்தம்நன்கொருங்கித்திருமால்மேல் சென்றசிந்தையராய்க்கொண்டு, *சாயைபோலப்பாடவல்ல ஸஜ்ஜநங்களுக்கு உபகரித்தருளி உலகத்தை வாழ்வித்தருளினர்.



## உபதேச ரத்தினமாலை.

" இன்றைப் பெருமை யறிந்திலையோ ஏழைநெஞ்சே !
இன்றைக்கென் னேற்ற மெனிலுரைக்கேன்—நன்றிபுனை
பல்லாண்டு பாடியநம் பட்டர்பிரான் வந்துதித்த
நல்லானி யிற்சோதி நாள். (௧௬)

மாநிலத்தில் முன்னம் பெரியாழ்வார் வந்துதித்த
ஆனிதன்னிற் சோதியென்று லாதரிக்கும்—ஞானியருக்
கொப்போ ரிலையிவ் வுலகுதனி லென்றுநெஞ்சே !
எப்போதுஞ் சிந்தித் திரு. (௧௭)

மங்களா சாசனத்தில் மற்றுள்ள வாழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றிப்—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வா ரென்னும் பெயர். (௧௮)

கோதிலவா மாழ்வார்கள் கூறு கலைக்கெல்லாம்
ஆதி திருப்பல்லாண் டானதுவும்—வேதத்துக்
கோமென் னுமதுபோ லுள்ளதுக்கெல் லாஞ்சுருக்காய்த்
தான்மங் கலமா தலால். (௧௯)

உண்டோ திருப்பல்லாண் டுக்கொப்ப தோர்கலைதான்
உண்டோ பெரியாழ்வார்க் கொப்பொருவர்—தண்டமிழ்நூல்
செய்தருளு மாழ்வார்கள் தம்மிலவர் செய்கலையில்
பைதனெஞ்சே! நீயுணர்ந்து பார்." (௨௦)



பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

# திருப்பல்லாண்டு.



மங்களாசாஸநப்ரபந்தமென்பது - சேர்ந்தபொருள். ஆழ்வார் ஒவ்வொரு பாசுரத்திலும் 'பல்லாண்டு' என்ற சொல்லால் எம்பெருமானை வாழ்த்துதலால், இப்பெயர் வழங்கலாயிற்று இதனை, பல்லாண்டென்று இந்நூல் தொடங்குவதனால் முதற்குறிப்பென்னுமிலக்கணத்தால் வந்த பெயரென்றுஞ் சொல்லுவர்; 'அமலனாதிபிரான்' 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' இவை போலே பல் ஆண்டு—பல வருஷம்; அது இங்கு, 'பலவருஷங்களிலும் எம்பெருமானுக்கு ரக்ஷையுண்டாகவேணும்' என்ற பொருளைப்பெறுவிக்குமென்க. "எப்பொருளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர், செப்பின ரப்படி செப்புதல் மரபே." என்ற நன்னூற்சூத்திரத்தை நினைக்க. திரு—உயர்வைவிளக்கும் அடைமொழி; ஸ்ரீராமாயணம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீபாஷ்யம் என்பன போல.

இப்பிரபந்தத்திற்குத் தென்கலைஸம்ப்ரதாயத்தில், பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வியாக்கியான மொன்றுமே கிடைத்துள்ளது. வடகலைஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த வியாக்கியானங்கள் இரண்டு மூன்றுள்ளன.

"மங்களாசாஸநம் ஸ்வரூபவிருத்தமன்றோ வென்னில், ஜ்ஞாநதசையில் ரக்ஷ்யரக்ஷகபாவம் தன் கப்பிலே கிடக்கும்; ப்ரேமதசையில் தட்டுமாறிக்கிடக்கும் அவன் ஸ்வரூபத்தை அநுஸந்தித்தால் அவனைத்தடகாகக்கொண்டு தன்னை நோக்கும்; ஸௌகுமார்யத்தை அநுஸந்தித்தால் தன்னைத்தடகாகக் கொண்டு அவனை நோக்கும்." "ஒருநாள் முகத்திலேவிழித்தவர்களை வடிவழகு படுத்தும்பாடாயிற்றிது." "ஆழ்வார்களெல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார்; அவர்களுக்கு இது காதாசித்கம்; இவர்க்கு இது நித்யம்." இத்யாதி ஸ்ரீவசநபூஷண வாக்கியங்களையும், அவற்றுக்கான மணவாளமாமுனிகள் வியாக்கியான பங்க்திகளையும் நன்கு நோக்குக.

பிரபந்தசாரம்.

"சேயணிக்கு வில்லிபுத்தூர் நகரி தன்னிற்
பெருஞ்சோதி தனிற்றோன்றும் பெருமானே முன்
சீரணிக்கு பாண்டியன்றன் னெஞ்சு தன்னிற்
றுயக்கறமால் பரத்துவத்தைத் திறமாச் செப்பி
வாரணமேன் மதுரைவலம் வரவே வானின்
மால்கருட வாகனனாய்த் தோன்ற வாழ்த்தும்
ஏரணிபல் லாண்டுமுதற் பாட்டு நானூற்
றெழுபத்தொன் றிரண்டுமெனக் குதவு நீயே."

---

கையாலே யானைகழுத்தில் கிடக்கிற மணிகளைத்தாளமாகக்கொண்டு, "இந்த ஸௌந்தர்யாதிகளுக்கு, ஒருதீங்கும்வாராதொழியவேணும்" என்று மங்களா சாஸநம்பண்ணியருளி, இவ்விஷயத்துக்குத்தாமொருவரே மங்களாசாஸநம் பண்ணுவதாக போராதென்று, தமக்குத் தோள்தீண்டிகளான ஐச்வர்யகைவல்யபுகவச்சரணார்த்திகளையும் மங்களாசாஸநயோக்யராம்படி திருத்திச் சேர்த்துக்கொண்டு பல்வகையாலும் திருப்பல்லாண்டுபாடியருளினார்.

அநந்தரம், அந்தராஜாவையும் விசேஷகடாக்ஷம் செய்தருளி, அவனாலே ஸத்க்ருதராய் ஸ்ரீவில்லிபுத்தூரிலெழுந்தருளி, தனக்குக்கிடைத்த ஸத்காரங்களையெல்லாம் வடபெருங்கோயிலுடையானுக்கே ஸமர்ப்பித்து, அநந்தரம் க்ருஷ்ணாவதாரத்திலே மிகவும் ப்ரவணராய், "கண்ணன்கேசவன் நம்பி பிறந்தினில்" என்று—க்ருஷ்ணன் அவதரித்ததுமுதலாக, "வென்றிசேர்பிள்ளை நல்விளையாட்டம்" என்கிற அதிமாநுஷசேஷ்டிதமான க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தை, இவர் ஸோவஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணி அநுகரித்து நன்றாக அநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீத்யதிசயத்தாலே பெரியாழ்வார்திருமொழி என்கிற திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்து, *சித்தம்நன்கொருங்கித்திருமால்மேல் சென்றசிந்தையராய்க்கொண்டு, *சாயைபோலப்பாடவல்ல ஸஜ்ஜநங்களுக்கு உபகரித்தருளி உலகத்தை வாழ்வித்தருளினார்.



## உபதேச ரத்தினமாலை.

"இன்றைப் பெருமை யறிந்திலையோ ஏழைநெஞ்சே!
இன்றைக்கென் னேற்ற மெனிலுரைக்கேன்—நன்றிபுனை
பல்லாண்டு பாடியநம் பட்டர்பிரான் வந்துதித்த
நல்லானி யிற்சோதி நாள். (கசு)

மாநிலத்தில் முன்னம் பெரியாழ்வார் வந்துதித்த
ஆனிதன்னிற் சோதியென்று லாதரிக்கும்—ஞானியருக்
கொப்போ ரிலையிவ் வுலகுதனி லென்றுநெஞ்சே!
எப்போதுஞ் சிந்தித் திரு. (கஎ)

மங்களா சாசனத்தில் மற்றுள்ள வாழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றிப்—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வா ரென்னும் பெயர். (கஅ)

கோதிலவா மாழ்வார்கள் கூறு கலைக்கெல்லாம்
ஆதி திருப்பல்லாண் டானதுவும்—வேதத்துக்
கோமென் னுமதுபோ லுள்ளதுக்கெல் லாஞ்சுருக்காய்த்
தான்மங் கலமா தலால். (கசு)

உண்டோ திருப்பல்லாண் டுக்கொப்ப தோர்கலைதான்
உண்டோ பெரியாழ்வார்க் கொப்பொருவர்—தண்டமிழ்நூல்
செய்தருளு மாழ்வார்கள் தம்மிலவர் செய்கலையில்
பைதனெஞ்சே! நீயுணர்ந்து பார்." (உ0)



பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

# திருப்பல்லாண்டு.



மங்களாசாஸநப்ரபந்தமென்பது - தேர்ந்தபொருள். ஆழ்வார் ஒவ்வொரு பாசுரத்திலும் 'பல்லாண்டு' என்ற சொல்லால் எம்பெருமானை வாழ்த்துதலால், இப்பெயர் வழங்கலாயிற்று இதனை, பல்லாண்டென்று இந்நூல் தொடங்குவதனால் முதற்குறிப்பென்னுமிலக்கணத்தால் வந்த பெயரென்றுஞ் சொல்லுவர்; 'அமலனாதிபிரான்' 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' இவை போலே பல் ஆண்டு—பல வருஷம்; அது இங்கு, 'பலவருஷங்களிலும் எம்பெருமானுக்கு ரக்ஷையுண்டாகவேணும்' என்ற பொருளைப்பெறுவிக்குமென்க. "எப்பொருளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர், செப்பின ரப்படி செப்புதல் மரபே." என்ற நன்னூற்சூத்திரத்தை நினைக்க. திரு—உயர்வைவிளக்கும் அடைமொழி; ஸ்ரீராமாயணம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீபாஷ்யம் என்பன போல.

இப்பிரபந்தத்திற்குத் தென்கலைஸம்ப்ரதாயத்தில், பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வியாக்கியான மொன்றுமே கிடைத்துள்ளது. வடகலைஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த வியாக்கியானங்கள் இரண்டு மூன்றுள்ளன.

"மங்களாஶாஸநம் ஸ்வரூபவிருத்தமன்றோ வென்னில், ஜ்ஞாநதசையில் ரக்ஷ்யரக்ஷகபாவம் தன் கப்பிலே கிடக்கும்; ப்ரேமதசையில் தட்டுமாறிக்கிடக்கும் அவன் ஸ்வரூபத்தை அநுஸந்தித்தால் அவனை நடக்காகக்கொண்டு தன்னை நோக்கும்; ஸௌகுமார்யத்தை அநுஸந்தித்தால் தன்னைக்கடகாகக் கொண்டு அவனை நோக்கும்." "ஒருநாள் முகத்திலேவிழித்தவர்களை வடிவழகு படுத்தும்பாடாயிற்றிது." "ஆழ்வார்களெல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார்; அவர்களுக்கு இது காதாசித்கம்; இவர்க்கு இது நித்யம்." இத்யாதி ஸ்ரீவசநபூஷண வாக்கியங்களையும், அவற்றுக்கான மணவாளமாமுனிகள் வியாக்கியான பங்க்திகளையும் நன்கு நோக்குக.

பிரபந்தசாரம்.

"சோணிந்த வில்லிபுத்தூர் நகரி தன்னிற்
பெருஞ்சோதி தனிற்றோன்றும் பெருமானே முன்
சீரணிந்த பாண்டியன்றன் னெஞ்சு தன்னிற்
றுயக்கறமால் பரத்துவத்தைத் திறமாச் செப்பி
வாரணமேல் மதுரைவலம் வரவே வானின்
மால்கருட வாகனனாய்த் தோன்ற வாழ்த்தும்
ஏரணிபல் லாண்டுமுதற் பாட்டு நானூற்
றெழுபத்தொன் றிரண்டுமெனக் குதவு நீயே."

பெரியாழ்வார்திருவடிகளேசரணம்.



பெரியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு.



*அவதாரிகை:—முதற்பாட்டில், எம்பெருமானுடைய திருவடிகளுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார்.*

பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு
பலகோடி நூறா யிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா வுன்
சேவடி செவ்விதிருக் காப்பு. (க)

பதவுரை.

மல் ஆண்ட—மல்லர்களை நிரஸித்த
திண் தோள்—திண்ணிய தோள்களையுடையனாய்
மணி—நீலமணிபோன்ற
வண்ணா—திருநிறத்தையுடையவனே!
பல் ஆண்டு பல் ஆண்டு—பலபல வருஷங்களிலும்
பல் ஆயிரம் ஆண்டு—அநேகப்ரஹ்மகல்பங்களிலும்
பல கோடி நூறு ஆயிரம்—இப்படி உண்டான காலமெல்லாம்
உன்—உன்னுடைய
சே அடி—சிவந்த திருவடிகளினுடைய
செவ்வி—அழகுக்கு
திருக்காப்பு—குறைவற்ற ரக்ஷை உண்டாயிடுக.

குறிப்பு.—'சாணூரன்' முதலான மல்லர்கள் கண்ணபிரானை யெதிர்த்த போது அவர்களைத் தன்தோள்வலியாலே வென்ற வீரத்தின் வீறுபாடு ஸ்ரீபாகவதாதிகளில் விரியும். திண்மை - வலியுடைமை. 'பல்லாண்டு' என்றனிது - மங்களாசாஸநத்துக்கு மரபான சொல். [மரபு - ஸம்ப்ரதாயம்] "பல்கோடி நூறாயிரமும்" என்பது மொருபாடம். "சேவடி" எனினும், "செவ்வடி" எனினும் ஒக்கும். செவ்விய அடியென்றும், சிவந்த அடியென்றும் பொருள்படும். "காப்பு"—'கா'—பகுதி; 'பு'—விகுதி.

இப்பாட்டை மேலிற்பாட்டோடு சேர்த்து ஒரு பாட்டாக அநுஸந்திப்பது - ஸம்ப்ரதாயம். (க)

*அ:—இரண்டாம் பாட்டில், உபய விபூதி யோகத்தைக்குறித்து மங்களாசாஸநம் பண்ணுகிறார்.*

அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி யாயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறை யும்சுட ராழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்குமப் பாஞ்சசன் னியமும் பல்லாண்டே. (௨)

அடியோமோடும்–தாஸபூதர்களாய் அடியேன் தொடக்கமாயுள்ள[ளோடும்
நின்னோடும்–ஸ்வாமியான தேவரோடும்
பிரிவு இன்றி–பிரிவில்லாமல்
ஆயிரம் பல்லாண்டு - (இந்த ஸம்பந்தம்) [நித்யமாய்ச் செல்லவேணும்;
வடிவு ஆய்–(உனக்கு) நிரூபகபூதையாய்
நின்–உன்னுடைய
வல மார்பினில்–திருமார்பின் வலது [பக்கத்தில்
வாழ்கின்ற–பொருந்தியிராநின்றுள்ள
மங்கையும்–நித்யயௌவநசாலிநியான பெரிய பிராட்டியார் தொடக்கமான [நாய்ச்சிமார்களும்
பல்லாண்டு—;
வடிவு ஆர்–(உன்) திருமேனியை வ்யாபித்திருக்கிற
சோதி–ஜ்யோதிஸ்ஸையுடையனாய்
வலத்து–வலத்திருக்கையிலே
உறையும்–நித்யவாஸம் பண்ணுமவனாய்
சுடர்–பகைவரை எரிக்குமவனான
ஆழியும்–திருவாழியாழ்வானும்
பல்லாண்டு—;
படை–ஸேனைகளையுடைய
போர்–யுத்தங்களில்
புக்கு–புகுந்து
முழங்கும்–கோஷிக்கக்கடவ
அ–அளவற்ற பெருமையையுடைய
பாஞ்சசன்னியமும்–ஸ்ரீபாஞ்சஜந்யாழ் [வானும்
பல்லாண்டு.— [ப—ஈற்றசை.]

குறிப்பு:—'போர் படை புக்கு முழங்கும்' என்று இயைத்து 'யுத்தங்களில் ஆயுதமாகப்போய் முழங்காநின்றுள்ள' என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்ரீபாஞ்சஜந்யம் தனது பெருமுழக்கத்தால் பகைவரை அஞ்சுவித்து அழித்தலால் ஆயுதவர்க்கத்தின் பாற்படும். பாஞ்சஜந்யம் - வடசொல்; "பஞ்சசனனுடலிற் பிறந்து" இத்யாதி. (௨)

அ:—மூன்றும்பாட்டில், பகவத்ப்ராப்திகாமர்களை, "எம்பெருமானை மங்களாசாஸநம்பண்ண வாருங்கோள்!" என்று அழைக்கிறார்.

வாழாட் பட்டுநின் றீருள்ளி ரேல்வந்து மண்ணும் மணமுங்கொண்மின்
கூழாட் பட்டுநின் றீர்களை யெங்கள் குழுவினில் புகுதலொட்டோம்
ஏழாட் காலும் பழிப்பிலோம் நாங்க ளிராக்கதர் வாழிலங்கை
பாழா ளாகப் படைபொரு தானுக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௩)

வாழ் ஆள் பட்டு } கைங்கர்யரூபமான போகத்துக்குப் பொருந்தி
நின்றீர்–நிலைநின்றவர்களாய்
உள்ளீர் ஏல்–இருப்பீர்களானால்
வந்து–(விரைந்து) வந்து
மண்ணும்–(திருமுளைத்திருநாளுக்குப்) பு[ழுதிமண் சுமக்கையையும்
மணமும்–(இக்கல்யாணத்துக்கு) அபி[மானிகளாயிருக்கையையும்
கொண்மின்–ஸ்வீகரியுங்கோள்;
கூழ்–சோற்றுக்காக
ஆள் பட்டு–(பிறர்க்கு) அடிமையோலை [யெழுதிக்கொடுத்து
நின்றீர்களை–(கண்டவிடமெங்கும் பரந்[து) நிற்கிற உங்களை
எங்கள்–(அநந்யப்ரயோஜநரான) எங்க[ளுடைய
குழுவினில்–திரளிலே
புகுதலொட்டோம்–சேரவொட்டோம்.

நாங்கள்—நாங்களோவென்றால்
ஏழ் காலும் } முன்னேழ் பின்னேழ் நடுவேழாகிய இருபத்தொருதலை [முறைகளிலும்
பழிப்பு இலோம்—குற்றமற்றிராநின் [றோம்;
இராக்கதர்—ராவணு(ஞ)ராக்ஷஸர்கள்
வாழ்—வாழ்கைக்கு ... மான
இலங்கை—லங்கையானது
பாழ் ஆள் ஆக—பாழ்த்த ஆளையுடைய [தாம்படி
படை—ஆயுதங்களைக்கொண்டு
பொருதானுக்கு—போர் செய்தருளின எம் [பெருமானுக்கு
பல்லாண்டு கூறுதும்—திருப்பல்லாண்டு [பாடுமவரா யிராநின்றோம்.

குறிப்பு:—ஒருவர்க்கு ஒருவர் அடிமை விலையோலை எழுதித்தரும்போது 'மண்ணுக்கும் மணைக்கும் உரியனாகக்கடவேன்' என்றெழுதுவது வழக்கம். மண்ணுவது—ஸ்வாமிக்கு ஒரு மங்களமுண்டானால் அங்குரார்ப்பணத்துக்குப் புழுதி மண் சுமக்கை; அந்த ந்யாயத்தாலேயிறே நம் ஆழ்வார்களுக்கு இது க்ருத்யமாய்ச் செல்லுகிறது. இனி, மணைமாவது—அந்த கல்யாணத்துக்குத் தான் அபிமாநியாயிருக்கை; இவ்விரண்டும் கைங்கர்யங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். நின்றீர்களோ—முன்னிலை. 'குழு' என்றும் 'குழாம்' என்றும் கூட்டத்துக்குப் பெயர்; இன்—இடைச் சாரியை; இல் - ஏழாம்வேற்றுமையுருபு. பழிப்பு - ப்ரயோஜநாந்தர பரத்வத்தாலும், ஸாதநாந்தரபரத்வத்தாலும் வரக்கடவ பழிக்கு ஆளாகை. (௩)

அ:—நாலாம்பாட்டில், ஆத்மாநுபவமாகிற கைவல்யத்தில் காமுகராயிருக்குமவர்களைப் 'பல்லாண்டுபாட வாருங்கோள்' என்றழைக்கிறார்.

ஏடு நிலத்தி லிடுவதன் முன்னம்வந் தெங்கள் குழாம்புகுந்து
கூடு மனமு டையீர்கள் வரம்பொழி வந்தொல்லைக் கூடுமினோ
நாடு நகரமு நன்கறிய நமோநா ராய ணாயவென்று
பாடு மனமுடைப் பத்தருள் ளீர்வந்து பல்லாண்டு கூறுமினே. (௪)

ஏடு - பொல்லாங்கான
நிலத்தில்—மூலப்ரக்ருதியிலே
இடுவதன் முன்னம்—(உங்களைச்) சேர்ப் [பதற்குமுன்னே
எங்கள் குழாம்—எங்கள் திரளிலே
வந்து புகுந்து—வந்து ப்ரவேசித்து
கூடும்—கூடுகைக்குறுப்பான
மனம் உடையீர்கள்—கருத்துடையவர் [களாயிருந்திகோளாகில்
வரம்பு ஒழி வந்து-(ஸ்வாநுபவத்தளவிலே இட்டுக்கொண்ட) வரம்பை ஒழித்து
ஒல்லை—விரைவாக [கோள்;
கூடுமின்—(எங்கள் திரளிலே) கூடுங்
நாடும்—நாட்டுப்புறங்களிலுள்ள ஸாமாந் [யஜ்ஞரும்
நகரமும்—நகரவாஸிகளான விசேஷஜ்ஞ [ரும்
நன்கு அறிய—நன்றாக அறியும்படி
நமோ நாராயணாய என்று—திருமந்த்ரத் [தை அநுஸந்தித்து
பாடும்—(அதையே) பாடுகைக்கு டான
மனம் உடை—கருத்தமைந்த
பத்தர் உள்ளீர்—பக்திமான்களாயிருப்பீர் [களாகில்
வந்து பல்லாண்டு கூறுமின் } வந்து திருப்பல்லாண்டு பாடுங்கோள்.

குறிப்பு:—'ஏடு—ஸூக்ஷ்மசரீரமானது, நிலத்தில் - ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே, இடுவதன் முன்னம்—லயிப்பதற்கு முன்னே' என்றும்

நிர்வஹிப்பர். "நிலம்"—நில்-பகுதி; அம்-விகுதி; நித்யமாய் நிற்கக்கடவதென்று பொருள். "வரம்பொழிய" என்கிறவிது - 'வரம்பொழி' என்று-சுடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது. எம்பெருமானுடைய ஸ்வரூப ரூப குணவிபூதிகளை அநுபவிக்க இட்டுப்பிறந்து "ஜராமரண மோக்ஷாய"என்று ஸ்வாநுபவத் தளவிலே ஒரு வரம்பை யிட்டுக்கொண்டிருப்பர்களிறே, அத்தை ஒழிக்கச் சொல்லுகிறது இங்கு. 'நாடு' என்பதும் 'நகரம்' என்பதும், தத்தத்தேசவாஸி ஜநங்களிடத்தில் லாக்ஷணிகம். (ச)

அ:—அஞ்சாம்பாட்டில், ஐச்வர்யார்த்திகளைப் பல்லாண்டுபாட அழைக்கிறார்.

அண்டக் குலத்துக் கதிபதி யாகி யசுர ரிராக்கதரை
யிண்டக் குலத்தை யெடுத்துக் களைந்த விருடீகே சன்றனக்குத்
தொண்டக் குலத்தி லுள்ளீர்வந் தடிதொழு தாயிர நாமஞ்சொல்லிப்
பண்டைக் குலத்தைத் தவிர்ந்துபல் லாண்டுபல் லாயிரத் தாண்டென்மினே.

அண்டம் குலத்துக்கு—அண்டங்களின்
[திரளுக்கு
அதிபதி ஆகி—நியந்தாவாய்
அசுரர்—அஸுரர்களும்
இராக்கதரை—ராக்ஷஸர்களுமாகிற
இண்டர் குலத்தை—சண்டாளர்களின்
[கூட்டத்தை
எடுத்து—சேரத்திரட்டி
களைந்த—நிர்மூலமாகப் போக்கின
இருடீகேசன்தனக்கு—ஹ்ருஷீகேசனுக்கு
[எம்பெருமானுக்கு]
தொண்டர் குலத்தில்—அடிமைசெய்யப்
[பிறந்தவர்களின் வம்சத்திலே

உள்ளீர் - பிறந்துள்ள நீங்கள்
வந்து—(எங்கள் திரளிலே) வந்து
அடி—எம்பெருமான் திருவடிகளை
தொழுது—ஸேவித்து
ஆயிரம் நாமம்—(அவனது) ஸஹஸ்ரநாம
[ங்களை
சொல்லி—அநுஸந்தித்து
பண்டைக் குலத்தை—(பகவத்வைமுக்ய
[மாகிற) பூர்வஜந்மத் தினின்றும்
தவிர்ந்து—ஒழிந்து
பல்லாண்டு பல்லாயிரத் [தாண்டு என்மின் } பலகாலும் மங்களாசாஸநம்பண்ணுங்கோள்.

குறிப்பு:—அண்டம், குலம்,அதிபதி, அசுரர்,இராக்கதர், இருடீகேசன், நாமம் - வடசொற்களும் திரிபுமாம். இண்டர்+குலம், இண்டக்குலம். தொண்டர்+குலம், தொண்டக்குலம்: "சில விகாரமா முயர்திணை" என்ற சூத்திரமறிக. "இண்டைக்குலம்" என்ற பாடத்தில் நெருங்கின திரள்என்க. பண்டு+குலம், பண்டைக்குலம்; "ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே" என்ற நன்னூற்சூத்திர மறிக. (ரு)

அ:—கீழ்மூன்றும்பாட்டில் அழைக்கப்பட்ட அநந்யப்ரயோஜநர், தங்கள் ஸ்வரூபாதிகளைச் சொல்லிக்கொண்டு வந்து புகுருகிறார்கள்.

எந்தை தந்தைதந் தைதந்தைதம் மூத்தப்ப னேழ்படி கால்தொடங்கி
வந்து வழிவழி யாட்செய்கின் றோந்திரு வோணத் திருவிழவில்
அந்தியம் போதி லரியுரு வாகி யரியை யழித்தவனைப்
பந்தனை தீரப்பல் லாண்டுபல் லாயிரத் தாண்டென்று பாடுதுமே. (சு)

எந்தை-நானும், என் அப்பனும்
தந்தை-அவனுக்கப்பனும்
தந்தை-அவனுக்கப்பனும்
தந்தை-அவனுக்கப்பனும்
தம் மூத்தப்பன்-அவனுக்கப்பனும் பாட்
[டனும் (ஆகிய)
ஏழ் படி கால் தொடங்கி-ஏழுதலை
[முறைகள் தொடங்கி
வந்து-(மங்களாசாஸநத்துக்கு உரிய
[தசைகளிலே) வந்து
வழி வழி-முறை முறையாக
ஆள் செய்கின்றோம்-கைங்கர்யம் பண்ணு

திரு ஓணம் திரு விழவில்-திருவோண
[மென்கிற திருநாளிலே,
அந்தியம் போதில்-அஸ்தமயவேளையில்
அரி உரு ஆகி-(நரங்கலந்த) சிங்கத்தின்
[ரூபத்தையுடையனாய்
அரியை-ப்ரஹ்லாத சத்ருவான ஹிரண்
[யனை
அழித்தவனை-ஸம்ஹரித் தருளின ஸர்
[வேச்வரனுக்கு
பந்தனை தீர-அந்த (ஸம்ஹாரத்தால்
[வந்த) அனுக்கம் தீரும்படியாக
பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்று—,
பாடுதும்-பாடுமவர்களாயிரா நின்றோம்.
[என்று, வந்து கூடுகிறார்கள்.]

குறிப்பு:—எந்தை - எம் தந்தை; இதில் 'யாம்' என்றபகுதி 'எம்' என்று விகாரப்பட்டது; தை - முறைப்பெயர் விகுதி. முதுமை+அப்பன், மூத்தப்பன். 'அரியுருவாகி'—அரி - 'ஹரி' என்னும் வடசொற்றிரிபு. ஹரிசப்தத்துக்குப் பத்துப்பொருள்களுண்டென்பர் வடநூலார். "அரியை"—[அரி:] வடசொல்; பகைவனென்று பொருள். அழித்தவனை - உருபு மயக்கம். (௬)

அ:—நாலாம்பாட்டில் அழைக்கப்பட்ட கைவல்ய நிஷ்டர்கள் தங்கள் ஸ்வபாவத்தைச் சொல்லிக்கொண்டு வந்து புகுருகிறார்கள்-ஏழாம்பாட்டில்.

தீயிற் பொலிகின்ற செஞ்சுட ராழி திகழ்திருச் சக்கரத்தின்
கோயிற் பொறியாலே யொற்றுண்டு நின்று குடிகுடி யாட்செய்கின்றோம்
மாயப் பொருபடை வாணனை யாயிரந் தோளும் பொழிகுருதி
பாயச் சுழற்றிய வாழிவல் லானுக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௭)

தீயில் - சந்த்ரஸூர்யாதி தேஜ: பதார்த்
[தங்களிற் காட்டில்
பொலிகின்ற-மேலாக விளங்குகின்ற
செம் சுடர்-சிவந்த தேஜஸ்ஸையுடைய
[னாய்
ஆழி-மண்டலாகாரமாய்
திகழ்-ஜ்வலியா நின்றுள்ள
திருச் சக்கரத்தின் கோயில் } ஸ்ரீஸுதர்சநாழ்வான் எழுந்தருளியிருக்கும் இடத்தின்
பொறியாலே-சிஹ்நத்தாலே
ஒற்றுண்டு நின்று-சிஹ்நிதராய்
குடி குடி-வம்சபாரம்பர்யமாக
ஆள் செய்கின்றோம்-அடிமை செய்து
[போரா நின்றோம்;
மாயம்-க்ருத்ரிமமாக

பொரு-போர்செய்யக் கடவ
படை யுடைய
வாணனை-பாணாஸுரனுடைய
ஆயிரம் தோளும்-ஆயிரந் தோள்களி
[னின்றும்
பொழி-(மழையாகப்) பொழியாநின்ற
குருதி-ரக்த (ப்ரவாஹ) மானது
பாய-வழிந்து ஓடும்படியாக
சுழற்றிய-(அம்பெருமான் திருக்கையா
[லே) சுழற்றப்பெற்ற
ஆழி-திருவாழியாழ்வானை
வல்லானுக்கு-ஏந்திநிற்கவல்ல ஸர்வேச்
[வரனுக்கு
பல்லாண்டு கூறுதும்-திருப்பல்லாண்டு
[பாடுகிறோம்,
[என்று, வந்து கூடுகிறார்கள்.]

குறிப்பு:—"தீயில் பொலிகின்ற" - அக்நியிலே தப்தமான என்றலுமொன்று. "சக்கரத்தின் கோயில்"-சிஷ்யர்களுக்குத் திருவிலச்சினை சாத்துகைக்காக ஆசார்யபுருஷர்கள் பேணிப்போரும் ஸ்ரீஸுதர்சநம். இவ்விரண்டடிகளாலும் சக்ராங்கிதத்வம் சொல்லுகிறது. மாயம்-ஆச்சர்யமாக,என்றுமாம் 'படை' என்று – ஆயுதத்தையும் சொல்லிற்றாகலாம். "மாய" என்று வினையெச்சமாகக்கொண்டு, '(எதிரிகள்) உருமாய்ந்துபோம்படி'என்றுமாம். திருவாழியாழ்வான் ஸ்வாச்ரயஸ்தலத்திலிருந்துகொண்டே காரியம் நிர்வஹிக்க வல்லனென்பார் 'சுழற்றிய' என்றார். (எ)

அ:—அஞ்சாம்பாட்டில் அழைக்கப்பட்ட ஐச்வர்யார்த்திகள் இசைந்து வந்து கூடுகிறார்கள்.

நெய்யெடை நல்லதோர்சோறும் நியதமு மத்தாணிச் சேவகமுங்
கையடைக் காயும் கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்
மெய்யிட நல்லதோர் சாந்தமுந் தந்தென்னை வெள்ளுயி ராக்கவல்ல
பையுடை நாகப் பகைக்கொடி யானுக்குப் பல்லாண்டு கூறுவனே. (அ)

நெய் எடை—நெய்யோடு ஒத்த நிறையை [யுடையதாய்
நல்லது—மிக்க சுவையையுடைத்தாய்
ஓர்—(அத்யந்த) விலக்ஷணமுமான
சோறும்—ப்ரஸாதத்தையும்
நியதமும்—நியதமாக [ஸர்வதா]
அத்தாணி—பிரிவில்லாத
சேவகமும்—ஸேவையையும்
கை—(எம்பெருமான் தன்) திருக்கையால் [விட்ட
அடைக்காயும்-வெற்றிலைப் பாக்கையும்
கழுத்துக்கு—கழுத்தில் இடுதற்குரிய
பூணொடு—(கண்டிகை முதலிய) ஆபர[ணங்களையும்
காதுக்கு—காதில் இடுதற்குரிய
குண்டலமும்—குண்டலத்தையும்
நல்லது—மிக்க வாஸனையை யுடைத்தாய்
மெய் இட—உடம்பிலே பூசுகைக்குரிய
ஓர்—ஒப்பற்றதான
சாந்தமும்—சந்தனத்தையும்
தந்து—ப்ரஸாதித்தருளி
என்னை—அடியேனை
வெள்உயிர் ஆக்க வல்ல } பரிசுத்தாத்மாவாக ஆக்கத்தக்கவல்லமையையுடையனும்,
பை உடை—படங்களையுடைய
நாகம்—ஸர்ப்பத்துக்கு
பகை—விரோதியான பெரிய திருவடியை
கொடியானுக்கு—த்வஜமாகவுடையனான [ஸர்வேச்வரனுக்கு
பல்லாண்டு கூறுவன்—திருப்பல்லாண்டு [பாடக்கடவேன்.

குறிப்பு:—"நெய்யெடை" என்றும், "நெய்யிடை" என்றும் பாடம். எடை - நிறை; ஒரு வீசைச் சோற்றுக்கு ஒருவீசை நெய் சேர்க்கை; இத்தால் ஐச்வர்யத்தின் பெருமை சொல்லுகிறது. அன்றிக்கே, இடையென்று நடுவாய், நெய்யின் நடுவே சில சோறுமுண்டென்னுதல். "இடையிடமென்ப மற்று மிடப்பெயர் நுசுப்புமாமே" என்ற நிகண்டுவை நினைக்க; [நுசுப்பு - நிறை.] "அடைக்காய்"—அடை என்று இலைக்குப் பெயர்; ["அடை யிலை கனமே யப்ப மடுத்தல் செல்வழியைப்போம்"என்று நிகண்டு.] இங்கு வெற்றிலையைச் சொல்லுகிறது. காய் என்று - பாக்கைச் சொல்லுகிறதிங்கு. "கை அடைக்காய்" - கைநிறைந்த அடைக்காய் என்று

மாம். சாந்தமென்கிறவிது – 'சந்தநம்' என்னும் வடசொல்லின் விகாரம். நியதம், சேவகம், குண்டலம், நாகம் - வடசொற்கள். (அ)

அ:—மூன்றும்பாட்டில் அழைக்கப்பட்டு, ஆறும்பாட்டிலே வந்துகூடப்பெற்ற அநந்யப்ரயோஜநர்பாசுரத்தாலே அவர்களோடு கூடிப் பல்லாண்டுபாடுகிறார்.

உடுத்துக் களைந்தநின் பீதக வாடை யுடுத்துக் கலத்ததுண்டு
தொடுத்த துழாய்ம லர்சூடிக் களைந்தன சூடுமித் தொண்டர்களோம்
விடுத்த திசைக்கரு மந்திருத் தித்திரு வோணத் திருவிழவில்
படுத்தபைந் நாகணைப் பள்ளிகொண்டா னுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

உடுத்து–திருவரையிலே சாத்தி
களைந்த–கழித்துப்பொகடப்பட்ட
நின்–தேவரீருடையதான
பீதக ஆடை–திருப்பீதாம்பரத்தை
உடுத்து–தரித்து
கலத்தது–(தேவர் அமுதுசெய்த) கலத்தில் மிகுந்த ப்ரஸாதத்தை
உண்டு–ஸ்வீகரித்து,
சூடி–(தேவர் திருமுடியிலே) சூடி
களைந்தன–களையப்பட்டதாய்
தொடுத்த–(அழகிதாகத்) தொடுக்கப்பட்டதான
துழாய் மலர்–திருத்துழாய் மலர்களை
சூடும்–முடித்துக்கொள்ளுகிற
இ–இப்படிப்பட்ட சேஷத்வசாஷ்டையையுடைய
தொண்டர்களோம்–அடியார்களாயிராநின்றோம் நாங்கள்
விடுத்த–நியமித்தருளின
திசை–திக்கிலுள்ள
கருமம்–காரியத்தை
திருத்தி–குறையறச்செய்து தலைக்கட்டி
படுத்த–படுக்கப்பட்டு (அதனால்)
பை–விகஸித்த பணங்களையுடைய
நாக அணை–திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியின்மேலே
பள்ளிகொண்டானுக்கு–திருக்கண் வளர்ந்தருளுகிற உனக்கு
திரு ஓணத் திரு விழவில் } திருவோணமென்கிற திருநாளிலே
பல்லாண்டு கூறுதும்—.

ிப்பு:—பீதகம் - வடசொல். துழாய் - 'துளஸீ' என்னும் வடசொல் 'விடுத்த' என்பது - திசைக்கருமத்துக்கு அடைமொழி [விசேஷணம்]. திசைக்கருமம் - வடசொல் திரிபுத் தொடர். நாக அணை - நாகணை தொகுத்தல் விகாரம். பள்ளிகொண்டானுக்கு - முன்னிலைப் படர்க்கை; வழூவமைதி; சிலர், "உடுத்துக் களைந்த நன்பீதகவாடை" என்றுபாடங்கொண்டால்தான் "பள்ளிகொண்டானுக்கு" என்று படர்க்கையாக அருளிச்செய்திருப்பது சேருமென்பர்; அதுவ்யாக்யாந ஸம்ப்ரதாய விருத்தமென்று மறுக்கப்பட்டது. (௯)

அ:—பத்தாம்பாட்டில்; முன்பு கேவலராயிருந்து பின்பு பாகவதரானவர்களுடன் கூடிப்பல்லாண்டு பாடுகிறார்—ஆழ்வார்.

எந்நா ளெம்பெரு மானுன் றனக்கடி யோமென் றெழுத்துப்பட்ட
வந்நா ளேயடி யோங்க ளடிக்குடில் வீடுபெற் றுய்ந்ததுகாண்
செந்நாள் தோற்றித் திரும துரையுட் சிலைகுனித் தைந்தலைய
பைந்நா கத்தலைப் பாய்ந்தவ னேயுன்னைப் பல்லாண்டு கூறுதுமே.

எம்பெருமான்—எமக்கு ஸ்வாமியானவனே!
உன்றனக்கு—'உனக்கு
அடியோம் என்று—அடிமைப்பட்டவர்களாயிராநின்றோம் நாங்கள்' என்று
எழுத்துப்பட்ட—ஆவணையோலையெழுதிக்கொடுத்த
எநாள்—நாள் எதுவோ,
அநாளே—அந்த நாளே
அடியோங்கள்—சேஷபூதர்களான எங்களுடைய
குடில்—வீட்டிலுள்ள புத்ரபௌத்ராதிஸந்தானமெல்லாம்
அடி—அடிமைப்பட்டதாய்
வீடு பெற்று—மோக்ஷத்தைப்பெற்று
உய்ந்தது—உஜ்ஜீவித்தது;
செம்நாள்—ச்லாக்யமான திருநாளிலே
தோற்றி—திருவவதரித்து
திரு மதுரையுள்—திரு வடமதுரையில்
சிலை—(கம்ஸனுடைய தச்சாலையிலுள்ள)வில்லை
ஐந்தலைய—ஐந்து தலைகளையுடையதாய்
பை—பரந்த பணங்களையுமுடையதான
நாகம்—கா6
தலை—தலையின்மேலே
பாய்ந்த —எறப்பாய்ந்தருளின ஸர்வேச்வரனே!
உன்னை—உன் விஷயமாக
பல்லாண்டு கூறுதும்—.

குறிப்பு:—"பெருமான்" - பெருமை பொருந்தியவன் என்க. அன்றிக்கே, 'மான்' என்கிறவிது 'மஹாந்'என்ற வடசொல்லின் சிதைவாய், 'பெருமான்' என்று மிகவும் மஹானாயிருப்பவனைக் கூறும். குடில் - 'குடீரம்' என்னும் வடசொல்லின் விகாரம். வீடுபெற்று-ஸாம்ஸாரிக துக்கங்களால்விடப்பெற்று என்றலுமொன்று. காண்—முன்னிலையசை. (௧௦)

அ:—ஐந்தாம்பாட்டில் அழைக்கப்பட்டு எட்டாம்பாட்டில் வந்து கூடின ஐச்வர்யார்த்திகள்பாசுரத்தாலே பல்லாண்டு பாடுகிறார்.

அல்வழக் கொன்றுமில் லாவணி கோட்டியர் கோனபி மானதுங்கன்
செல்வனைப் போலத் திருமாலே நானு முனக்குப் பழவடியேன்
நல்வகை யானமோ நாராய ணாவென்று நாமம் பலபரவிப்
பல்வகை யாலும் பவித்திர னேயுன்னைப் பல்லாண்டு கூறுவனே.

திருமாலே—ச்ரிய: பதியே!
அல் வழக்கு—அநீதிகளில்
ஒன்றும்—ஏகதேசமும்
இல்லா—இல்லாதவராய்
அணி (ஸம்ஸாரத்துக்கு) ஆபரணமான
கோட்டியர்—திருக்கோட்டியூரில் உள்ளவர்களுக்கு
கோன்—நிர்வாஹகராய்
அபிமான துங்கன்—வைஷ்ணவாபிமானத்தாலே சிறந்தவராயுமுள்ள
செல்வனை போல—செல்வ நம்பியைப்போல்
நானும்—அடியேனும்
உனக்கு—தேவருக்கு
பழ அடியேன்—அநாதி கிங்கரனாயிராநின்றேன்;
பல் வகையாலும்—பஹுமுகமாக
பவித்திரனே—பரிசுத்தனான ஸர்வேச்வரனே!
நல் வகையால்—விலக்ஷண ப்ரகாரமாக
நமோ நாராயணா என்று—திருமந்த்ரத்தை அநுஸந்தித்து
பல நாமம்—ஸஹஸ்ரநாமங்களை
பரவி—வாயாரச்சொல்லி
உன்னை—தேவர் விஷயமாக
பல்லாண்டு கூறுவன்—.

குறிப்பு:—அல்வழக்கு - அல்லாதவழக்கு, வழக்கல்லாதது; விபரீதவ்யவஹாரமென்றபடி. கோட்டி - கோஷ்டீ வாரமென்று வடநூலார் வழங்கு

வர். ஸவிதா-ஸூர்ய:-வடசொல்தொடர். செல்வன்-வல்லபதேவனென்னும் அரசனுக்கு மந்திரி. நல்வகையாவது - அர்த்தாநுஸந்தாநம். பவித்திரன் - வடசொல் திரிபு. நாராயணா - கடைக்குறை. (கக)

அ:—நிகமத்தில, இப்பிரபந்தம் கற்பார்க்குப் பலம்சொல்லுகிறது.

பல்லாண் டென்று பவித்திர னைப்பர மேட்டியைச் சார்ங்கமென்னும்
வில்லாண் டான்றன்னை வில்லிபுத்தூர் விட்டு சித்தன் விரும்பியசொல்
நல்லாண் டென்று நவின்றுரைப்பார் நமோநா ராய ணாயவென்று
பல்லாண் டும்பர மாத்துமனைச் சூழ்ந்திருந் தேத்துவர் பல்லாண்டே. கஉ.

பவித்திரனை—ஸ்வத:பரிசுத்தனாய்
பரமேட்டியை—பரமபதத்தில் எழுந்தருளி [யிருக்குமவனாய்
சார்ங்கம் என்னும்—ஸ்ரீசார்ங்கம் என்கிற
வில்—தனுஸ்ஸை
ஆண்டான்தன்னை—கையில் ஆளுமவனான [எம்பெருமான் விஷயமாக
வில்லிபுத்தூர்—வில்லிபுத்தூரில் அவதரித்
விட்டுசித்தன்—பெரியாழ்வார் [த
பல்லாண்டு என்று—'மங்களமுண்டாகவே [ணும்' என்று
விரும்பிய—ப்ரேமத்தாலே அருளிச்செய்த
சொல்—இப்பாசுரங்களை,
நவின்று—(நன்றாகக்) கற்று
நல் ஆண்டு என்று—'இப்பாசுரம் சொல்லு [கைக்கு ஏகாந்தகாலம் இது' என்று
உரைப்பார்—அநுஸந்திக்குமவர்கள்
'நமோ நாராயணாய' என்று—;
பல் ஆண்டும்—காலமுள்ளதனையும்
பரமாத்துமனை—பரமாத்துமாவான எம்பெ [ருமானை
சூழ்ந்து இருந்து—சுற்றிநின்று
பல்லாண்டு ஏத்துவர் — மங்களாசாஸநம் [பண்ணப் பெறுவர்கள்.

குறிப்பு—பரமேட்டி—"பரமேஷ்டீ" என்னும் வடசொற்றிரிபு. [பரமே ஸ்தாநே திஷ்டதீதி-பரமேஷ்டீ.] சார்ங்கம்—வடசொல். விட்டு சித்தன்—விஷ்ணுசித்த:. சூழ்ந்திருந்து பல்லாண்டேத்துகை-பரமபதத்திலேயென்க.

அடிவரவு:—பல் அடி வாழ் அண்டம் எந்தை தீ நெய் உடுத்து எந்நாள் அல் வழக்கு பல்லாண்டு வண்ணம்.

[ஆதி கூறுதும், அநந்தரம் கூறுமின், அண்டம் என்மின், எந்தை பாடுதும், தீ உடுத்து எந்நாள் கூறுதும், நெய்யும் அல்லும் கூறுவனே.]

பெரியாழ்வார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

திருப்பல்லாண்டு உரை முற்றுப்பெற்றது.

ஸ்ரீ

# பெரியாழ்வார் திருமொழி.

பெரியாழ்வாருடைய சிறந்தவார்த்தையென்பது, இதன்பொருள்: பெரியாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய திவ்யப்ரபந்தமென்பது, கருத்து. திருமொழி என்பது மேன்மையான சொற்களினாலாகிய நூலைக்குறித்தலால் அடையடுத்த கருவியாகுபெயராம். பெரியாழ்வார் திருமொழி என்றதொடர் ஆறும் வேற்றுமைத் தொகையும், திருமொழி என்பது-பண்புத் தொகையுமாம். 'நாய்ச்சியார் திருமொழி' 'பெருமாள் திருமொழி' என்ற இடங்களிற்போல, 'பெரியாழ்வார் திருமொழி' என்ற பெயரிலும் தொக்குநின்ற ஆறும் வேற்றுமையுருபு-செய்யுட்கிழமைப் பொருளதென அறிக. திருமொழி என்பதை, மேன்மையையுடையசொல் என இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும்தொக்க தொகையாகவுங் கொள்ளலாம். பெரியாழ்வார் திருமொழி என்றவிடத்து, நிலைமொழி உயர்திணைப் பெயராதலால், அதன்முன் வருமொழி முதல்வலி இயல்பாயிற்று; "பொதுப்பெயருயர்திணைப் பெயர்களீற்றுமெய், வலிவரின் இயல்பாம் ஆவி ய ர முன், வன்மை மிகா" என்ற சூத்திரவிதி உணர்க. "ஏனை உயிர்வழி வவ்வும்" என்ற விதிப்படி, பெரிய+ஆழ்வார், பெரியவாழ்வார் எனப் புணராது, பெரியாழ்வார் என்று நின்றது - தீர்க்கசந்தி; [வடமொழிப்புணர்ச்சி]. 'குலசேகராழ்வார்' என்றவாறுபோல. பெரிய - 'பெருமை' என்னும் பண்பினடியாப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; பண்புப்பகுதி ஈறுபோய் இடைஉகரம் இகரமாயிற்று. நிற்க.

இப்பிரபந்தத்திற்கு, திருவாய்மொழிப்பிள்ளை திருவாய்மலர்ந்தருளிய ஸ்வாபதேசவியாக்கியானமொன்று பூர்ணமாகக் கிடைத்துள்ளது; நாலாயிரத்துக்கும் எஞ்சாது வியாக்கியானமருளிய பெரியவாச்சான்பிள்ளை இப்பிரபந்தத்துக்கு அருளிச்செய்த வியாக்கியானம் நான்குபத்துவரை லுப்தமாக, பிறகு, விசதவாக்சிகாமணியான ஸ்ரீமணவாளமாமுனிகள், அதுவரை உருரை அருளிச்செய்துள்ளார்; அதற்குமேல் நான்கு திருவாய்மொழிகளுக்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே லோபியாமலுள்ளது.

---

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழி.

## அவதாரிகை.

ஸ்ரிய:பதியான ஸர்வேச்வரன், காலம் ஸாம்ராஜ்யம் பண்ணும் விபூதியிலேவந்து தோற்றினவாரே, இவ்வஸ்துவுக்கு என்ன தீங்கு வருகிறதோவென்று அஞ்சி மங்களா சாஸநம் பண்ணியருளினார் - திருப்பல்லாண்டிலே.

க்ருஷ்ணாவதாரமென்றால் ஆழ்வார்களெல்லாரும் போரப் பரிவராயிருப்பர்களாயிற்று; அதுக்கடி - க்ருஷ்ணனுக்குண்டான விரோதிபாஹுள்யாதிகளிறே. பெரியாழ்வார்தாம் மற்றையாழ்வார்களைப் போலன்றிக்கே இவ்வவதாரத்திலே விசேஷத: ப்ரவணராயிருப்பர். "விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்டகோவலன்" என்றிறே தாமே. இப்படி க்ருஷ்ணப்ராவண்யத்தாற் சிறந்த இவ்வாழ்வார், அந்தக்ருஷ்ணாவதார ரஸத்தையெல்லாம் அநுபவிக்கக்கோலி, அது செய்யுமிடத்தில், ரிஷிகளைப்போலே கரையிலே நின்று அவதாரகுண சேஷ்டிதங்களைச் சொல்லிப் போகையன்றிக்கே பாவநாப்ரகர்ஷத்தாலே மௌவ ஜந்மத்தை ஆஸ்தாநம் பண்ணி யசோதாதிகள் சொல்லும் பாசுரத்தைத் தாம் அவர்களாகப் பேசி அநுபவித்துத் தலைக்கட்டுகிறார் - இப்ரபந்தத்திலே.

முதல் திருமொழியில்—க்ருஷ்ணாவதாரோத்தர க்ஷணத்தில் திருவாய்ப்பாடியிலுள்ளார்பண்ணின உபலாளநாதிகளை (த்திருக்கோட்டியூரில் நடந்தனவாக) அநுஸந்தித்து இனியராகிறார்.

வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ண மெதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தளறாயிற்றே. (க)

வண்ணம்—அழகுபொருந்திய
மாடங்கள்—மாடங்களாலே
சூழ்—சூழப்பட்ட
திருக்கோட்டியூர்—திருக்கோட்டியூரில்
கேசவன்—ப்ரசஸ்தகேசயுக்தனாய்
நம்பி—கல்யாணகுணபரிபூர்ணனான
கண்ணன்— ஸ்ரீக்ருஷ்ணன்
இன் இல்—(நந்தகோபருடைய) இனிய [திருமாளிகையிலே
பிறந்து—திருவவதரித்தருளின வளவிலே, (திருவாய்ப் பாடியிலுள்ளார்)
எண்ணெய்—எண்ணெயையும்
சுண்ணம்—மஞ்சள்பொடியையும்
எதிர் எதிர் தூவிட—(ஸந்தோஷத்தாலே [ஒருவர்க்கொருவர்) எதிர்த்துத் தூவ,
கண்—விசாலமாய்
நல்—விலக்ஷணமான
முற்றம் — (நந்தகோபர் திருமாளிகையில்) [திருமுற்றமானது
கலந்து—(எண்ணெயும் மஞ்சள்பொடியும் [துகையுண்டு) தன்னிலே சேர்ந்து
அளறு ஆயிற்று—சேறாய்விட்டது ;
[ஏ—ஈற்றசை.]

குறிப்பு:—வண்ணம் - வர்ணம்; தமிழில் இதொரு தனிச்சொல் என்பாருமுளர். சூழ்திருக்கோட்டியூர் - வினைத்தொகை. 'கேசவன்' என்னும் வடசொல்லுக்கு மூவகை வ்யுத்பத்திகள் உண்டு. பிறந்து - 'பிறக்க' என்னும் செயவெனெச்சத்தின் திரிபு "சொல்திரியினும் பொருள்திரியா வினைக்குறை" என்ற நன்னூற் சூத்திரம்பற்றிக. இன் இல் - பண்புத்தொகை. 'பிறந்தினில்' என்று ஒரு முழுச்சொல்லாய், 'பிறந்தவளவிலே' என்றும் பொருள் தரும். எள் + நெய், எண்ணெய். சுண்ணம் - 'சூர்ணம்' என்ற வடசொல் திரிபு. தூவிட - தூவியிட. கண்ணன்முற்றம் - கண்ணன் அவதரித்தபோதே அவனையே திருமாளிகைக்கு நிர்வாஹகனாக ஸ்ரீநந்தகோபர் நினைத்திருக்கையாலே, கண்ணனுடைய முற்றமென்றுமாம். (க)

ஓடு வார்விழு வாருகந் தாலிப்பார்
நாடு வார்நம்பி ரானெங்குத் தானென்பார்
பாடு வார்களும் பல்பறை கொட்டநின்
றாடு வார்களு மாயிற்றாய்ப் பாடியே.

ஆய்ப்பாடி—திருவாய்ப்பாடியானது,
ஓடுவார்—(ஸம்ப்ரமித்து) ஓடுவாரும்
விழுவார்—(சேற்றிலே வழுக்கி) விழுவாரும்
உகந்து—உகப்புக்குப்போக்குவீடாக
ஆலிப்பார்—கோஷிப்பாரும்
நாடுவார்—(பிள்ளையைத்) தேடுவாரும்
நம் பிரான்—'நமக்கு உபகாரகனான கண்ணன்
எங்குத்தான் என்பார்—எங்கே இராநின்றான்?' என்பாரும்
பாடுவார்களும்—பாடுவார்களும்
பல் பறை—பலவகை வாத்யங்கள்
கொட்ட—முழங்க
நின்று—அதற்குப் பொருந்தநின்றுமாக
ஆயிற்று—ஆய்விட்டது.

குறிப்பு:—க்ருஷ்ணாவதாரத்தால் திருவாய்ப்பாடியில் விகாரமடையாதாரொருவருமில்லையென்பார், ஆய்ப்பாடியே ஓடுவாரும்......ஆடுவருமாக ஆயிற்றென்றார். பிரான் - 'ப்ரபு' அல்லது, 'விராட்' என்னும் வடசொல்லின் சிதைவு என்பர். "எங்குற்றான்" எனினும் இழுக்காது.

பேணிச் சீருடைப் பிள்ளை பிறந்தினில்
காணத் தாம்புகு வார்புக்குப் போதுவார்
ஆணொப் பாரிவன் நேரில்லை காண்திரு
வோணத் தானுல காளுமென் பார்களே.

சீர் உடை—ஸ்ரீமானான
பிள்ளை—க்ருஷ்ணன்
பேணி—(கம்ஸாதிகள் கண்படாதபடி தன்னைக்) காத்துவந்து
பிறந்தினில்—பிறந்தவளவில்
தாம்—ஆய்ப்பாடி ஆயர்கள்
காண—(கண்ணனைக்) காண்கைக்காக
புகுவார்—உள்ளே நுழைவாரும்
புக்கு—உள்ளேபோய் (கண்டு)
போதுவார்—வெளிப்புறப்படுவாரும்,
ஆண் ஒப்பார் — "பும்ஸ்த்வஸாம்யமுடையாரில்
இவன் நேர்—இவனோடு ஒத்திருப்பார்
இல்லை—(யாரும்) இல்லை; (இவன்)
திரு ஓணத்தான்—ச்ரவண நக்ஷத்ரத்தில் அவதரித்த ஸர்வேச்வரனுடைய
உலகு—விபூதிகளையெல்லாம்
ஆளும்—ஆளக்கடவன்"
என்பார்கள் — என்று சொல்லுவாருமாக ஆனார்கள்.

குறிப்பு:—சீர் - 'ஸ்ரீ' என்னும் வடசொல் சிதைவு. பிள்ளை - இளமைப் பெயர். காண் - முன்னிலையசை; தேற்றப்பொருளதாகவுமாம். திருமதுரையிலே திருவவதரித்த கண்ணனைத் திருவாய்ப்பாடியில் பிறந்தானாகச்சொல்லுதற்கு அடி - கம்ஸனுக்குத்தப்பிப் பிழைத்துத் திருவாய்ப்பாடியில் புகுந்தபின்பு பிறந்தானாக நினைத்திருக்கை. உலகு - 'லோகம்' என்னும் வடசொல், திரிபு. என்பார்கள் - விகுதி மேல்விகுதி.

உறியை முற்றத் துருட்டிநின் றாடுவார்
நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்
செறிமென் கூந்த லவிழத் திளைத் தெங்கும்
அறிவ ழிந்தன ராய்ப்பாடி யாயரே.

ஆய்ப்பாடி—திருவாய்ப்பாடியிலுள்ள
ஆயர்—இடையர்கள்
உறியை — (பால் தயிர் சேமித்துவைத்த) [உறிகளை
முற்றத்து—முற்றத்திலே
உருட்டிநின்று—உருட்டிவிட்டு
ஆடுவார்—கூத்தாடுவாரும்
நறு—மணம்மிக்க
நெய் பால் தயிர்—நெய்யையும் பாலையும் [தயிரையும்
நன்றாக—நிச்சேஷமாக
தூவுவார்—தானம் பண்ணுவாருமாய்
செறி மென்—நெருங்கி மெத்தென்ற
கூந்தல்—மயிர்முடியானது
அவிழ—அவிழ்ந்துகலையும்படி
திளைத்து—நர்த்தநம்பண்ணி
எங்கும்—சேரியடங்கலும்
அறிவு அழிந்தனர்—க்ருத்யாக்ருத்யவிவேக [சூந்யரானார்கள்

குறிப்பு:—உறியை உருட்டி - உறிகளில் சேமித்துவைத்த பாத்ரங்களை உருட்டி; ஆகுபெயர். பிள்ளைக்கு நன்மை உண்டாகவேணுமென்று நெய் முதலியவற்றைத் தூவினபடி. கூந்தல் - 'குந்தளம்' என்ற வடசொல் மரூஉ.

கொண்ட தாளுறி கோலக் கொடுமழுத்
தண்டி னர்பறி யோலைச் சயனத்தர்
விண்ட முல்லை யரும்பன்ன பல்லினர்
அண்டர் மிண்டிப் புகுந்துநெய் யாடினார்.

தாள்கொண்ட—கால்நெருக்கத்தையுடைய
கோலம்—அழகியதாய்
கொடு—கூர்மையையுடைத்தான
மழு—மழுக்களையும்
தண்டினர்—தடிகளையுமுடையராய்
பறி — (தாழைமடலினின்றும்) பறிக்கப் [பட்ட
ஓலை—ஓலைகளால் (சமைக்கப்பட்ட)
சயனத்தர்—படுக்கையையுடையராய்
விண்ட—விகஸித்த
முல்லை அரும்பு அன்ன — முல்லையரும்பு [போன்ற
பல்லினர்—பற்களையுடையரான
அண்டர்—இடையரானவர்கள்
மிண்டி—(ஒருவர்க்கொருவர்) நெருங்கி
புகுந்து—(க்ருஷ்ணமந்திரத்திலே) புகுந்து
நெய் ஆடினார்—நெய்யாடலாடினார்கள்.

குறிப்பு:—(கொண்டதாள்) தாள் - கால், நெடுங்கயிறு; கொண்ட - நெருங்கின; 'நெருக்கிப் பின்னப்பட்ட' என்றபடி. மழு-கோடாலிமுதலிய இருப்பாயுதம். சயநம் - வடசொல். 'விண்டின்முல்லை' என்றும் பாட

மூண்டு; மிண்டு - மலை; அதிலுள்ள முல்லை நெருங்கிப் பூத்தாற்போலே யிருக்கிற பல்லையுடைய ஆய்ச்சிகளென்கை. அண்டர் - பகைவர், தேவர், இடையர்; "அண்டரே பகைவர் வானோர் ஆயரென்றுருகுமுப்பேர்" என்று நிகண்டுகொள்க. இங்கு இடையரைக்கூறும். 'மிண்டி' என்றதனால், கூட்டத்தின் மிகுதி தோற்றும். (ரு)

கையுங் காலும் நிமிர்த்துக் கடாரநீர்
பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழித் தாளுக்கங் காந்திட
வைய மேழுங்கண் டாள்பிள்ளை வாயுளே.

கையும்—திருக்கைகளையும்
காலும்—திருவடிகளையும்
நிமிர்த்து—(நீட்டி) நிமிர்த்து
கடாரம்—கடாரத்தில் (காய்ச்சின)
நீர்—திருமஞ்சனத்தீர்த்தத்திலே
பசு சிறு மஞ்சளால்—குறுங்கண்ணுள்ள பசு [மஞ்சளால்
பைய—திருமேனிக்குப்பாங்காக
ஆட்டி—ஸ்நாநம் செய்வித்து
ஐய—மெல்லிதான
நா—நாக்கை
வழித்தாளுக்கு — வழிக்கப்புகுந்த யசோதைக்கு (வழிக்கைக்கு அநுகூலமாக)
அங்காந்திட—(கண்ணன்) வாயைத்திறக்க, (யசோதையானவள்)
பிள்ளை—கண்ணபிரானுடைய
வாயுள்—வாயினுள்ளே
வையம் ஏழும்—உலகங்களையெல்லாம்
கண்டாள்—6

குறிப்பு:—கடாரம் - 'கடாஹம்' என்னும் வடசொல் ஈறுதிரிந்தது. பைய - ம்ருதுவாக. குறுங்கண்ணுள்ள - நெருங்கின கணுக்களையுடைய மஞ்சளால் நீராட்டுகை - மஞ்சள் பூசி நீராட்டுகை. அங்காத்தல் - வாய்திறத்தல். வையம் - (பொருள்கள்) வைக்கப்படுமிடம்; வை - பகுதி; அம் - விகுதி; வடமொழியாரும், 'வஸுந்தரா, வஸுமதீ' என்பர். ஏழும் என்றது - உபலக்ஷணம்; எல்லாமென்றபடி. (சா)

வாயுள் வையகங் கண்ட மடநல்லார்
ஆயர் புத்திர னல்ல னருந்தெய்வம்
பாய சீருடைப் பண்புடைப் பாலகன்
மாய னென்று மகிழ்ந்தனர் மாதரே.

வாயுள்—(பிள்ளையின்) வாயினுள்ளே
வையகம்—உலகங்களை
கண்ட—ஸாக்ஷாத்கரித்த
நல் மடவார்—லாவண்யத்தையும் மடப்பத்தையுமுடைய
மாதர்—ஸ்த்ரீகளானவர்கள், ("இவன்)
ஆயர் புத்திரன் அல்லன் — இடைப்பிள்ளையல்லன்,
அரு தெய்வம்—பெறுதற்கரிய தெய்வம்,
பாய சீர் உடை — பரம்பின குணங்களையுடையனாய்
பண்பு உடை—நீர்மையையுடையனான
பாலகன்—(இந்த) சிறுப்பிள்ளையானவன்
மாயன்—ஆச்சர்யசக்தியுக்தன்"
என்று—என்று (ஒருவர்க்கொருவர்) சொல்லிக்கொண்டு
மகிழ்ந்தனர்—ஆநந்தித்தார்கள்.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில், வாயுள்வையகங்கண்டாள் யசோதை ஒருத்தியேயாகச்சொல்லி, இதில், மற்றும் பலருங்கண்டதாகச் சொல்லுகை

கூடுமோவென்னில், கூடும்; யசோதை தான் கண்டபிறகு அருகு நின்றார்க்குங்காட்ட, கண்ணபிரான் தன் வைபவத்தை யெல்லாருமறிகைக்காக அவர்களுக்கும் திவ்ய சக்ஷுஸ்ஸைக்கொடுத்துக் காட்டினனெனக்கொள்க. மடப்பம் - ஸ்த்ரீகளுக்கு உரிய குணங்களில் ஒன்று; அதாவது - ஹவ்யதை. மடநல்லார்-நல்மடவார், எதிர்நிரனிறைப்பொருள்கோள். புத்ரன்-வடசொல்; 'புத்' என்னும் நரகத்தில் தாய்தந்தையர் புகாதபடி காக்குமவன் என்று பொருள்; எனவே, பிள்ளைபெறாதார் அந்நரகிற் புகுவார்களென்றவாறு. அருந்தெய்வம் - பண்புத்தொகை. மாதர் - விரும்பப்படும் அழகுடையவள்; தொல்காப்பியச் சொல்லதிகார உரிச்சொல்லியலில் "மாதர்காதல்" என்றபடி இது உரிச்சொல்லாதலால் பன்மையாகாது; ஆயினும், இங்கு பன்மைப்பொருளைத்தரும். பாலகன் - வாலகன், வாலகன். (எ)

பத்து நாளும் கடந்த விரண்டாநாள்
எத்தி சையும் சயமரங் கோடித்து
மத்த மாமலை தாங்கிய மைந்தனை
உத்தா னஞ்செய் துகந்தன ராயரே.

பத்து நாளும் கடந்த-பத்துநாளுங்கழிந்த
இரண்டாம் நாள்-இரண்டாநாளான நாமகரண தினத்திலே
எ திசையும்-எல்லாத்திக்குக்களிலும்
சயம் மரம்-ஜயதோரணங்களை
கோடித்து-நாட்டி அலங்கரித்து,
மத்தம்-மதித்த யானைகளையுடைத்தாய்
மா-மிகப்பெரிதான
மலை-கோவர்த்தநபர்வதத்தை
தாங்கிய-(ஒற்றைக்கைவிரலால்) ஏந்தின
மைந்தனை-மிடுக்கையுடைய கண்ணனை
ஆயர்-இடையரானவர்கள்
உத்தானம் செய்து-கைத்தலத்திலேவைத்துக்கொண்டு
உகந்தனர்-ஸந்தோஷித்தார்கள்.

குறிப்பு:—"மைத்த மாமலை" என்பர் சிலர்; மைத்த - (சோலைகளின் நிழலீட்டாலே) கறுத்த. மா - பெருமையை உணர்த்தும்போது, உரிச்சொல். மைந்தன் - மிடுக்கை உடையவனும், பிள்ளைத்தனமுடையவனும். "மைந்தனே திறலோன் சேயாம்" என்றான் - மண்டலபுருடன். மைந்து - மிடுக்கு; அத்தையுடையவன் - மைந்தன். உத்தானம்-நிமிர்ந்து கிடத்தல்; வடசொல். (அ)

கிடக்கில் தொட்டில் கிழிய வுதைத்திடும்
எடுத்துக் கொள்ளின் மருங்கை யிறுத்திடும்
ஒடுக்கிப் புல்கி லுதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால் நான்மெலிந் தேன்நங்காய்.

நங்காய்-பூர்ணைகளான ஸ்த்ரீகளே! [இப்பிள்ளையானவன்]
கிடக்கில்-(தொட்டிலில்) கிடந்தானாகில்
தொட்டில்-தொட்டிலானது
கிழிய-கிழிந்துபோம்படி
உதைத்திடும்-உதையாநின்றான்;
எடுத்துக்கொள்ளில்-(இவனை இடுப்பில்) எடுத்துக்கொண்டால்
மருங்கை-இடுப்பை
இறுத்திடும்-முறியாநின்றான்;
ஒடுக்கி-(இவனுடையகைகால்களை) ஒடுக்கி
புல்கில்-மார்வில் அணைத்துக்கொண்டால்

| | |
|---|---|
| உதரத்து—வயிற்றிலே | இளமையால் — (இப்பிள்ளைக்கு) இல்லா [மையால் |
| பாய்ந்திடும்—பாயாநின்றான்; | |
| மிடுக்கு — (இச்சேஷ்டைகளைப் பொறுக்க வல்ல) சக்தி | நான்—தாயாகிய நான் |
| | மெலிந்தேன்—மிகவும் இளைத்தேன். |

குறிப்பு:—கிடக்கை - படுக்கை. இங்கு, தொட்டில் என்று - ஏணையாக லாம். ஒடுக்கி - வ்யாபாரக்ஷமனல்லாதபடி செய்து. உதரம் - வடசொல். மிடுக்கு இலாமையால்-இந்த சேஷ்டைகளை ஸஹிக்கவல்ல ஸாமர்த்யம் எனக் கில்லாமையால் எனினும் ஒக்கும். மெலிவு - இளைப்பு, வருத்தம். நங்காய் - [சாதியொருமை] ஜாத்யேகவசநம்; நங்கைமீர் என்றபடி. (௯)

அவ:—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்குப் பலம்சொல்லித் தலைக் கட்டுகிறார்.

சேந்நே லார்வயல் சூழ்திருக் கோட்டியூர்
மன்னு நாரணன் நம்பி பிறந்தமை
மின்னு நூல்விட்டு சித்தன் விரித்தவிப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே. (௧௦)

| | |
|---|---|
| செம் நெல்—செந்நெல்தாந்யங்களால் | விரித்த -விஸ்தரித்து அருளிச்செய்த, |
| ஆர்—நிறையப்பெற்ற | மின்னு—விளங்கா நின்ற |
| வயல்—கழனிகளாலே | நூல்—யஜ்ஞோபவீதத்தையுடையரான |
| சூழ்—சூழப்பட்ட | விட்டுசித்தன்—பெரியாழ்வாருடையதாய் |
| திருக்கோட்டியூர்—திருக்கோட்டியூரிலே | பன்னு—ஜ்ஞாநிகள் எப்போதும் அநுஸந் [திக்கக்கடவதான |
| மன்னு—பொருந்திவர்த்திக்குமவனாய் | |
| நாரணன்—நாராயணசப்தவாச்யனாய | இ பாடல்—இப்பாசுரங்களை |
| நம்பி—ஸர்வகுண பூர்ணனான ஸர்வேச்வ [ரன் | வல்லார்க்கு—ஓதவல்லவர்க்கு |
| பிறந்தமை -திருவவதரித்தபடியை | பாவம் இல்லை—பாபமில்லை. [ஏ—தேற்றம்.] |

குறிப்பு:—நாரணன் - 'நாராயணன்' என்னும் வடசொற்சிதைவு. நூல். சாஸ்த்ரங்களுமாம்; இரட்டுறமொழிதல். விரித்த - 'விவரணம்' என்ற வட சொல்லடியாய்ப்பிறந்ததொரு விகாரச்சொல் என்னலாம். இல்லை - ப்ரத்வம் ஸாபாவமும், அத்யந்தாபாவமுமாகலாம். பாவம் - பாபம். (௧௦)

அடிவரவு:—வண்ணம் ஓடி பேணி உறி கொண்ட கை வாய் பத்து கிடக்கில் செந்நெல் சீதம்.

முதல் திருமொழி உரை முற்றிற்று.

———

# பெரியாழ்வார் திருமொழி

## இரண்டாம் திருமொழி

### சீதக்கடல்.

—·······—•

#### அவதாரிகை.

இப்படி திருவவதரித்த கண்ணபிரானுடைய திவ்யவிக்ரஹவைலக்ஷண்யத்தை அவ்வக்காலங்களில யசோதைப்பிராட்டி அநுபவித்தாப்போலே ஆழ்வாரும் தத்பாவ யுக்தராய்க்கொண்டு, திருவடிதொடங்கித் திருமுடியீறாக அநுபவித்த ப்ரகாரத்தை அப்போது அவள் பேசின பாசுரந்தாலே பேசுகிறார் - இரண்டாந்திருமொழியில்.

சீதக் கடலுள் ளமுதன்ன தேவகி
கோதைக் குழலா ளசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள்கா ணீரே பவளவா யீர்வந்து காணீரே. (க)

சீதம்—குளிர்ந்திராநின்றுள்ள
கடல்—திருப்பாற்கடலிலே
உள் அமுது அன்ன } உள்ளமுதாகப்பிறந்த பிராட்டியோடொத்த
தேவகி—தேவகிப்பிராட்டியால்,
கோதை—பூமாலையால் அலங்கரிக்கப்பட்ட
குழலாள்—கேசபாசத்தையுடைய
அசோதைக்கு—யசோதைப்பிராட்டிக்கு
போத்தந்த—போகவிடப்பட்டவனாய்
பேதை—அறிவின்மையையுடையனாய்
குழவி—சிசுவான கண்ணபிரான்
பிடித்து—(தன்கைகளால்) பிடித்து
சுவைத்து—ஆஸ்வாதித்து
உண்ணும்—திருப்பவளத்தில்வைத்து) புஜியாநின்றுள்ள
பாதம் கமலங்கள்—திருவடித்தாமரைகளை
காணீர்—வந்துகாணுங்கோள்;
பவளம்—பவளம்போல் சிவந்த
வாயீர்—அதரத்தையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—சீதம் - வடசொல். உள்ளமுது - உவமையாகுபெயர்; அமுதில் வரும் பெண்ணமுதிறே. தேவகி - வடசொல். அசோதை - ஆதிதிரிந்த வடசொல். போத்தந்த - முழூச்சொல். பேதைக்குழவி - "[illegible]" என்னுமாபோலே. பேதை - உரிச்சொல்; பேதைமை - அவிவேகம். குழவி- சிசு. பாதக்கமலங்கள் - வடமொழித்தொடர். "[illegible]" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவச்லோகத்தை இங்கு அநுஸந்திக்க. பவளம் - ப்ரவாளம். (க)

முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற் போலெங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட் டிருந்தவா காணீரே ஒண்ணுத லீர்வந்து காணீரே. (உ)

| | |
|---|---|
| முத்தும் - முத்துக்களையும் | பாதங்கள் - திருவடிகளிலுள்ள |
| மணியும் - ரத்நங்களையும் | பத்து விரலும் - விரல்கள் பத்தும் |
| வயிரமும் - வஜ்ரங்களையும் [யும் | ஒத்திட்டிருந்த ஆ - ஒன்றோடொன்று |
| நல் பொன்னும் - மாற்றுயர்ந்த பொன்னை | [த்து அமைந்திருக்கும்படியை |
| தத்திப்பதித்து - மாறிமாறிப்பதித்து. | காணீர்:—ஒள் நுதலீர் - ஒளிபொருந்திய |
| தலைப்பெய்தாற்போல் - சேர்த்தாற்போ | [நெற்றியையுடையீர்காள்! |
| எங்கும் - திருமேனியெங்கும் [லே | வந்து காணீர்;— |
| மணி வண்ணன் - மணிபோன்ற வர்ணத் | |
| [தையுடையனான கண்ணனுடைய | |

குறிப்பு:—முத்தும் மணியும் வயிரமும் - வடசொல்; விகாரமும்; இவை மற்றுமுள்ள ரத்நங்களுக்கும் உபலக்ஷணம். "தத்திப்பதித்து என்றது - த்த்தப்பதிதமென்றும், மாறப்பதித்தென்றபடி" என்றுரைப்பார் - திருவாய்மொழிப்பிள்ளை. தலைப்பெய்தால், ஒத்திட்டு - முழுச்சொற்கள். ஆ - ஆறு என்பதில ஈறு கெட்டது; ஆறு - ப்ரகாரம். ஒள் நுதல் - பண்புத்தொகை. நுதல் - 'ஙிடிலம்' என்றவடசொல் விகாரம். (உ)

பணைத்தோ ளிளவாய்ச்சி பால்பாய்ந்த கொங்கை
அணைத்தார வுண்டு கிடந்தவிப் பிள்ளை
இணைக்காலில் வெள்ளித் தளைநின் றிலங்கும்
கணைக்கா லிருந்தவா காணீரே காரிகை யீர்வந்து காணீரே. (ங)

| | |
|---|---|
| பணை - மூங்கில்போன்ற | இ பிள்ளை - இந்தக் கண்ணபிரானுடைய |
| தோள் - தோள்களையுடையளாய் | இணை - சேர்த்தியழகு அமைந்த |
| இள - இளமைப்பருவத்தையுடையளான | காலில் - திருவடிகளில் |
| ஆய்ச்சி - யசோதையினுடைய | வெள்ளி தளை நின்று - வெள்ளித்தண் |
| பால் பாய்ந்த - பால்சொரிகிற | [டை நின்று |
| கொங்கை - முலையை | இலங்கும் - விளங்காநிற்கிற |
| அணைத்து - (திருக்கையால்) அணைத்துக் | கணைக்கால் இருந்த ஆ - கணைக்காலிருந்த |
| [கொண்டு | [படியை, |
| ஆர - வயிறு நிரம்ப | காணீர்!—; |
| உண்டு - (பாலை) அமுதுசெய்து | காரிகையீர் - அழகுடையபெண்காள்! |
| கிடந்த - (களித்துக்) கிடந்த | வந்து காணீர்!!— |

குறிப்பு:—"பணை வயல் பரியின்பந்தி பருத்தல் வேய் அரசு பீடாம்" என்று நிகண்டு காண்பதால், பணைத்தோள் - பருத்ததோளையுடையாளென்றுமாம். தோள் - 'தொஃ' என்ற வடமொழியின் விகாரம் ஆய்ச்சி - 'ஆயன்' என்பதின் பெண்பால். இப்போது இவளை வர்ணிக்கிறது - அழகுக்கும் பருவத்துக்குமீடாக ஸம்போக பரவசையாயிராதே பிள்ளையை ஸ்நேஹித்து நோக்கிக்கொண்டு போருமவளென்னுமிடம் தோற்றுகைக்காக. காரிகை - அழகு; அதனையே தலைமையாகவுடையார் - காரிகையார். (ங)

உழந்தாள் நறுநெய் யோரோதடா வுண்ண
இழந்தா ளெரிவின லீர்த்தெழில் மத்தின்
பழந்தாம்பா லோச்சப் பயத்தால் தவழ்ந்தான்
முழந்தா ளிருந்தவாகா ணீரே முகிழ்முலை யீர்வந்து காணீரே. (௪)

உழந்தாள் - (நெய் முதலியவற்றை) ப்ரயாஸப்பட்டுத்தடாவிலே சேர்த்த யசோதையினுடைய
நறு நெய் - மணம் மிக்க நெய்யை
ஓரோ தடா - ஒவ்வொரு தடாவாக
உண்ண - (கண்ணன்) அமுதுசெய்தவளவில்
இழந்தாள் - (பிள்ளையைத்) தான் இழந்தவளாக நினைத்த யசோதை
எரிவினால் - வயிற்றெரிச்சலாலே
ஈர்த்து - கையைப்பிடித்திழுத்து
எழில் மத்தின் - அழகிய மத்தினுடைய
பழ தாம்பால் - (சுற்றிக்கட்டத்தகுமளவாயுண்டான) பழமைபொருந்திய தாம்பை
ஓச்ச - (அடிப்பதாகக்) கையிலெடுக்க
பயத்தால் - அச்சத்தாலே
தவழ்ந்தான் - (அத்தைத்தப்பிப்போவதாகத்) தவழ்ந்த கண்ணனுடைய
முழந்தாள் இருந்த ஆ - முழங்கால்களிருந்தபடியை
காணீர்!—;
முகிழ் முலையீர் - முகிழ்த்த முலையையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—உழவு - ஆயாஸம். பிள்ளையை இழந்தாளாக நினைக்கைக்கடி- உண்ட நெய் பிள்ளைக்கு ஸாத்மியாது என்ற நினைவு. ஓரோ=ஓ - அசை. "ஓரோதடா" என்ற பாடத்தில் தளைதட்டும். ஈர்த்தல்-இழுத்தல். மத்து- கடைகருவி; "மந்த:" என்னும் வடசொல்லின் திரிபு. பழந்தாம்பு - பண்புத் தொகை; தாம்பு - "தாமா" என்னும் வடசொல்விகாரம். தாம்பால் - உருபு மயக்கம். பயம் - ஐயம். முகிழ்முலை - குவிந்தெழுந்தமுலை; வினைத்தொகை.

பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத் துண்டிட்
டுறங்குவான் போலே கிடந்தவிப் பிள்ளை
மறங்கொ ளிரணியன் மார்வைமுன் கீண்டான்
குறங்குகளை வந்துகா ணீரே குவிமுலை யீர்வந்து காணீரே. (ரு)

முன்—முற்காலத்திலே
மறம் கொள்—த்வேஷங்கொண்ட
இரணியன்—ஹிரண்யனுடைய
மார்வை—மார்பை
கீண்டான்—பிளந்தவனாய்,
பிறங்கிய—(கொடுமையால்வந்த) ப்ரகாசத்தையுடைய
பேய்ச்சி—பூதனையினுடைய
முலை—முலையை
சுவைத்து—(பசையறும்படி) ஆஸ்வாதித்து
உண்டிட்டு—அமுதுசெய்து
உறங்குவான் போலே—(ஒன்றுமறியாமே) உறங்குமவனைப்போலே
கிடந்த—படுத்திருப்பவனான
இ பிள்ளை—இந்தக் கண்ணனுடைய
குறங்குகளை—திருத்துடைகளை
வந்து காணீர்!—;
குவி முலையீர்—குவிந்த முலைகளையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—பிறங்கல் - ப்ரகாசித்தல். பேய்ச்சி - 'பேயன்' என்பதின் பெண்பால். சுவைத்துண்கை - உறிஞ்சி உண்கை. மறம் - கோபமுமாம். "மறஞ்சினம் பிணக்குக் கூற்றுமலைந்த சேவகமுமாகும்". இரணியன்- "ஹிரண்யன்" என்றவடசொல் விகாரம். "மார்வம் முன்கீண்டான்" என்னும் பாடம். மார்வம்=அம் - சாரியை. குவிமுலை - வினைத்தொகை. (ரு)

மத்தக் களிற்று வசுதேவர் தம்முடைச்
சித்தம் பிரியாத தேவகி தன்வயிற்றில்
அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்
முத்த மிருந்தவா காணீரே முகிழ்நகை யீர்வந்து காணீரே. (சு)

மத்தம்—மதத்தையுடைய
களிறு—யானைகளை நிர்வஹிக்குமவரான
வசுதேவர்தம்முடை—ஸ்ரீவஸுதேவருடை[ய
சித்தம் பிரியாத—மனத்தைவிட்டுப்பிரியாத
தேவகிதன்—தேவகியினுடைய
வயிற்றில்—வயிற்றிலே
அத்தத்தின் பத்தாம் நாள் - ஹஸ்தநக்ஷத்[ரத்துக்குப்பத்தாவதான திருநாளிலே
தோன்றிய - திருவவதரித்த
அச்சுதன் - கண்ணபிரானுடைய
முத்தம் இருந்த ஆ—சண்ணமிருந்தபடியை காணீர்!—;
முகிழ் நகையீர் - புன்சிரிப்பையுடைய[பெண்காள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—மத்தம் - 'மதம்' என்றவடசொல் விகாரம். களிறு + வசுதேவர், களிற்றுவசுதேவர்; "நெடிலோடுயிர்த்தொடர்க்குற்றுகரங்களுள், டறவொற்றிரட்டும்" என்ற நன்னூற் சூத்திரமுணர்க. வசுதேவர், சித்தம்-வடசொல். அத்தம் - 'ஹஸ்தம்' என்றவடசொல்விகாரம். அத்தத்தின்பத்தாநாள் கீழ்முறையில் ரோஹிணியும், மேல்முறையில் திருவோணமுமாம். அச்சுதன்—அச்யுதன்; தான் என்றும் நழுவாதவன் என்றும், ஆச்ரிதரை நழுவவிடாதவனென்றும் பொருள். முத்தம் - பாலிசர்களின் குஹ்யாவயவ (சிச்ந) த்துக்கு ஆகுபெயர்; ரஸிகர்கள் முத்தமிடுகைக்குரிய வஸ்துவிறே. 'சண்ணம்' என்றும், 'மொட்டு' என்றும், இதனையே மேலுமருளிச் செய்துளர். நகை - ஆபரணமென்றுகொண்டு இரட்டுறமொழிதலுமாம்.

இருங்கைம் மதகளி றீர்க்கின் றவனைப்
பருங்கிப் பறித்துக்கோண் டோடுபர மன்றன்
நெருங்கு பவளமு நேர்நாணு முத்தும்
மருங்கு மிருந்தவா காணீரே வாணுத லீர்வந்து காணீரே. (எ)

இரு கை - பெரிய துதிக்கையையுடைய
மத களிறு - மத்தகஜமானகுவலயாபீடத்[தை
ஈர்க்கின்றவனை - தன்வசமாகநடத்தாநின்[றுள்ள பாகனை
பருங்கி - கொன்று
பறித்துக்கொண்டு - (யானையின்கொம்புக[ளை) முறித்துக்கொண்டு
ஓடு—ஓடின
பரமன்தன் - பரமபுருஷனை கண்ணனு[டைய
நெருங்கு - செறியக்கோத்த
பவளமும் - பவளவடமும்
நேர் நாணும் - நேரிதான அரைநாணும்
முத்தும் - முத்துவடமும் (இவற்றோடே[சேர்ந்த)
மருங்கும் இருந்த ஆ - திருவரையும் இரு[ந்தபடியை
காணீர்!—;
வாள் நுதலீர் - ஒளிபொருந்திய நெற்றி யையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—கை + மதகளிறு, கைம்மதகளிறு; "எண்மூவெழுத்தீற்றெவ்வகைமொழிக்கும், முன்வரு ஞநமயவக்களியல்பும், குறில்வழியத்தனியைந்நொது முன்மெலி, மிகலுமாம்" என்ற நன்னூற்சூத்திரமறிக இரு - பெருமையை உணர்த்துகையில் உரிச்சொல். குவலயாபீடம் - கண்ணனைமுடிப்பதாகக்கருதிக் கம்ஸன் வரவிட்ட யானை. அன்றிக்கே, [இருங்கை இத்யாதி.] வரில் விளையாடுகிற இடைப்பிள்ளைகளில் லீலோபகரணங்களில் ஆனையாக

ஒன்றைப்பண்ணி, அத்தையிழுத்துக்கொண்டு திரிகிறவனை அடர்த்துப் பறித்துக்கொண் டோடாநிற்கும் பரமனென்றுமாம். "ஓடும்பரமன்" என்ற பாடம் தனைக்குச்சேராதென்று மறுக்கப்பட்டது. வாள்-ஒளியை உணர்த்துகையில் உரிச்சொல். (எ)

வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து
தந்தக் களிறுபோல் தானே விளையாடும்
நந்தன் மதலைக்கு நன்று மழகிய
உந்தி யிருந்தவாகா ணீரே ஒளியிழை யீர்வந்து காணீரே. (அ)

வந்த - (தன்னோடுவிளையாட) வந்த
மதலை குழாத்தை - சிறுபிள்ளைகளின்கூட்[டத்தை
வலிசெய்து - பலாத்கரித்து
தந்தம் - (முகிழ்த்த) கொம்பையுடைய
களிறு போல் - யானைக்குட்டிபோல்
தானே - தானேமுக்கியனாய்நின்று
விளையாடும் - விளையாடுமவனாய்
நந்தன் - நந்தகோபர்க்கு
மதலைக்கு - (விதேயனான) பிள்ளையாகிய [கண்ணனுடைய
நன்றும் அழகிய - மிகவுமழகிதான
உந்தி இருந்த ஆ - நாபிஇருக்கிறபடியை காணீர்!—;
ஒளி - ஒளியால்விஞ்சின
இழையீர் - ஆபரணங்களணிந்த பெண்கா[ள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—மதலை - சிறுவன்; "மதலையே கொன்றைபிள்ளை" என்று நிகண்டு. மதலைக்குழாம் - * தன்னேராயிரம் பிள்ளைகளுண்டிறே. வலி செய்து - 'நான் ஒருவனுமேவிளையாட, நீங்கள் பார்த்திருக்கக்கடவீகோள்' என்று அடம்பிடித்தென்றபடி. தந்தம் + களிறு, தந்தக்களிறு; "மவ்வீறொற் றொழிந்து...வன்மைக்கினமாத்திரிபவுமாகும்." (அ)

அதிருங் கடனிற வண்ணனை யாய்ச்சி
மதுர முலையூட்டி வஞ்சித்து வைத்துப்
பதறப் படாமே பழந்தாம்பா லார்த்த
உதர மிருந்தவாகா ணீரே ஒளிவளை யீர்வந்து காணீரே. (கூ)

அதிரும் - கோஷிக்கையையே இயல்வாக[வுடைய
கடல் நிறம் - கடலினது நிறம்போன்ற
வண்ணனை - நிறத்தையுடைய கண்ணனு[க்கு
ஆய்ச்சி - யசோதையானவள்
மதுரம் முலை ஊட்டி - இனிய முலைப்பா[லை ஊட்டி,
வஞ்சித்துவைத்து - (மேல், தான் இவனை [க்கட்டத்தேடுகிறதை இவனறியவொ[ண்ணாதபடி) வஞ்சனைகளைப்பண்ணி
பதறப்படாமே - (தன்நினைவு)தப்பாதபடி
பழ தாம்பால் - பழகின கயிற்றாலே
ஆர்த்த - கட்டிவைத்த
உதரம் இருந்த ஆ - வயிறுஇருந்தபடியை காணீர்!—;
ஒளி வளையீர் - ஒளிமிக்கவளையையுடைய [பெண்காள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—'அதிரும்' என்று கடற்கு அடைமொழி கொடுத்தமையால், கண்ணபிரானுடைய அடங்காமை தோற்றும் இவனுக்கும் கடலுக்கும், ஸாம்யம் ஸாதாரணதர்மமென்க. நிறம் + வண்ணன், நிறவண்ணன்; மதுரம் + முலை, மதுரமுலை; "மவ்வீறொற்றொழிந்து உயிரீறு ஒப்பவும்." பதறப்படாமே - பின்னை இங்குமங்கும் பதறவொண்ணாதபடி என்றுரைப்பர் சிலர். "பதரப்படாமே" என்றும் காண்கிறது. உதரம - வடசொல். (கூ)

பெருமா வுரலிற் பிணிப்புண் டிருந்தங்
கிருமா மருத மிறுத்தவிப் பிள்ளை
குருமா மணிப்பூண் குலாவித் திகழுந்
திருமார் விருந்தவா காணீரே சேயிழை யீர்வந்து காணீரே. (௧௦)

பெரு மா உரலில் - மிகப்பெரிய உரலோ[டு]
பிணிப்புண்டு இருந்து - கட்டுண்டிருந்து
அங்கு - அந்த தசையிலே
இரு மா மருதம் - இரண்டுபெரிய மருத[மரங்களை]
இறுத்த - முறித்தருளின
இ பிள்ளை - இக்கண்ணபிரானுடைய,
குரு மா - மிகவும்சிறந்த
மணி பூண்—கௌஸ்துபாபரணமான து
குலாவி திகழும் - அசைந்துவிளங்காநின்[றுள்ள]
திருமார்வு இருந்த ஆ காணீர்!—;
சே இழையீர் - செவ்விய ஆபரணங்களையுடைய பெண்காள்!
வந்து காணீர்!!—.

குறிப்பு:—பெருமா - மீமிசைச்சொல்; ஒருபொருட் பன்மொழி. மருத மிறுத்தகதை:—கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பலவிளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்தயசோதை கண்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற்கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலையிழுத்துக்கொண்டு அங்கிருந்த இரட்டைமருதமர [யமளார்ஜுநந]த்தின் நடுவே எழுந்தருள, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், நாரதர்சாபத்தாலே அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன், மணிக்ரீவன் என்னும் குபேரபுத்திரரிருவரும் சாபந்தீர்ந்து சென்றனரென்பது. குரு - வடசொல். பூணப்படுவது-பூண். செம்மை + இழை, சேயிழை; பண்புப்பெயர்த் திரிபு. (௧௦)

நாள்களோர் நாலைந்து திங்க ளளவிலே
தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்
வாள்கோள் வளையெயிற் றருயிர் வவ்வினன்
தோள்க ளிருந்தவாகா ணீரே சுரிகுழ லீர்வந்து காணீரே. (௧௧)

நாள்கள்—(கண்ணன்பிறந்தபின்புசென்ற)[நாட்கள்]
ஓர் நாலு ஐந்து திங்கள் அளவிலே—ஒரு[நாலைந்துமாதத்தளவிலே]
தாளை நிமிர்த்து—காலைத்தூக்கி
சகடத்தை—சகடாஸுரனை
சாடிப் போய்—உதைத்துவிட்டு,
வாள் கோள்—ஒளிகொண்டதாய்
வளை—வளைந்திராநின்றுள்ள
எயிறு—கோரப்பற்களையுடையபூதனையின்
ஆர் உயிர்—அரிய உயிரை
வவ்வினன்—முடித்தகண்ணனுடைய
தோள்கள் இருந்த ஆ காணீர்!—;
சுரி குழலீர்—சுருண்ட கேசத்தையுடைய[பெண்காள்!]
வந்து காணீர்!!—.

குறிப்பு:—சகடம் - வடசொல். கண்ணபிரான் தனித்துக் கண்வளர்ந்தருளுகிற விடத்திலே அஸுராவேசத்தாலே நலிவதாகவந்து கிட்டின சகடத்தை, முலைவரவு தாழ்க்கச் சீறிநிமிர்த்த திருவடியாலே கண்ணனுதைத்து முறித்தகதை ஸ்ரீபாகவதத்தில் விரியும் வாள்கொள்வளை எயிறு-அன்மொழித்தொகை. அருமை + உயிர், ஆருயிர்; 'ஈறுபோதல்... ஆதிநீடல்,

மைத்தடங் கண்ணி யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல நிறத்துச் சிறுப்பிள்ளை
நெய்த்தலை நேமியுஞ் சங்கும் நிலாவிய
கைத்தலங்கள் வந்துகா ணீரே கனங்குழை யீர்வந்து காணீரே. (கஉ)

மை—அஞ்ஜநாலங்க்ருதமாய்
தட—கர்ணாந்தவிச்ராந்தமான
கண்ணி—கண்களையுடைய
அசோதை—யசோதைப்பிராட்டியாலே
வளர்க்கின்ற—வளர்க்கப்படுகின்றவனாய்,
தலை செய்—உயர்ந்த க்ஷேத்ரத்திலே (அல [ர்ந்த)
நீலம் நிறம்—கருநெய்தல்பூவினதுபொன்ற [நிறத்தையுடையனான
சிறு பிள்ளை—(இந்த) பாலக்ருஷ்ணனு [டைய,
நெய்—கூர்மைபொருந்திய
தலை—நுதியையுடைய
நேமியும்—திருவாழியும்
சங்கும்—திருச்சங்கும்
நிலாவிய—அமைந்திராநின்றுள்ள
கைத்தலங்கள்—உள்ளங்கைகளை
வந்து காணீர் !—;
கனம்—பொன்னால்செய்த
குழையீர்—காதணிகளையுடையபெண்காள் !
வந்து காணீர் ! !—.

குறிப்பு:—தலை - உயர்வைக்குறிக்கும்; வடநூலார், தலையை 'உத்தமாங்கம்' என்பர்களிறே. அன்றி, தலை என்கிறவிது - ஏழாம்வேற்றுமையுருபாய், செய்த்தலை – வயலிலே (அலர்ந்த) என்றும் பொருள்தரும். 'நீலம்' என்னும் நிறத்தின்பெயர், அந்நிறத்தையுடைய மலருக்குப் பண்பாகுபெயராம். நிறத்து = அத்து - சாரியை. நேமி . வடசொல். நிலாவிய- நிலவிய. கனம் - 'கநகம்' என்ற வடசொற்சிதைவு. அன்றி, 'வநம்' என்ற வடசொல்லாகக்கொண்டு, கநமான ச்ரோத்ராபரணமணிந்தவர்களெனினுமொக்கும். (கஉ)

வண்டமர் பூங்குழ லாய்ச்சி மகனைக்
கொண்டு வளர்க்கின்ற கோவலக் குட்டற்கு
அண்டமு நாடு மடங்க விழுங்கிய
கண்ட மிருந்தவா காணீரே காரிகை யீர்வந்து காணீரே. (கங)

வண்டு அமர்—வண்டுகள்படிந்திருக்கிற
பூ குழல்—பூஅணிந்தகுழலையுடையளான
ஆய்ச்சி—யசோதைப்பிராட்டியானவள்
மகனை கொண்டு—(தன்) புத்ரனாகஸ்வீகரி [த்து
வளர்க்கின்ற—வளர்க்கப்பெற்றவனாய்
கோவலர்—ஸ்ரீநந்தகோபருடைய
குட்டற்கு-பிள்ளையான கண்ணபிரானு [டைய,
அண்டமும்—அண்டங்களையும்
நாடும்—(அவற்றினுள்ளேகிடக்கிற) சேத [நாசேதநங்களையும்
அடங்க—முழுதும்
விழுங்கிய—(ப்ரளயகாலத்தில்) கபளீகரி [த்த
கண்டம் இருந்த ஆ—கழுத்திருந்தபடியை
காணீர் !—;
காரிகையீர் ! வந்து காணீர் ! !—.

குறிப்பு:—கோ - பசு, மாடு; அவற்றை மேய்க்கவல்லவர் = கோவலர்- இடையர். குட்டன் - குழந்தை, மகன். குட்டன்+கு, குட்டற்கு; இடையில் உகரச்சாரியை பெற்றால், 'குட்டனுக்கு' என்றும். அண்டம், கண்டம்- வடசொற்கள். (கங)

எந்தொண்டை வாய்ச்சிங்கம் வாவென் றெடுத்துக்கொண்
டந்தொண்டை வாயமு தாதரித் தாய்ச்சியர்
தந்தொண்டை வாயாற் றருக்கிப் பருகுமிச்
செந்தொண்டை வாய்வந்து காணீரே சேயிழை யீர்வந்து காணீரே. (கச)

தொண்டை—"கொவ்வைக்கனிபோன்ற வாய்—அதரத்தையுடைய என் சிங்கம்—எனது சிங்கக்குருகே! வா என்று—(என்பக்கல்) வா" என்று எடுத்துக்கொண்டு—(இடுப்பில்) எடுத்துக் [கொண்டு ஆய்ச்சியர்—இடைப்பெண்களாலே அம் தொண்டை—அழகியகொவ்வைபோ [ன்ற வாய்—(கண்ணனுடைய) அதரத்தில் அமுது—(ஊறுகிற) அம்ருதத்தை ஆதரித்து—விரும்பி, தம்—தங்களுடைய தொண்டை வாயால்—கோவைவாயை தருக்கி—(கண்ணன்வாயோடே) நெருக்கி பருகும்—பானம்பண்ணப்பெற்ற செம் தொண்டைவாய் } இந்தச்சிவந்த கோவைவாயை வந்து காணீர்—; சேயிழையீர்! வந்து காணீர்!!-

குறிப்பு:—தொண்டை - கொவ்வை; "தொண்டை ஆதொண்டை கொவ்வை தூங்குயானைத் துதிக்கை" என்று நிகண்டு. சிங்கம் - அண்மை விளி. கண்ணபிரானைச் 'சிங்கக்குருகு' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. சிங்கமென்னுஞ்சொல், ஆடவரில் தலைமையை உணர்த்தும். ஏறு என்னுஞ் சொல்லுமங்ஙனமே. 'ராஜஸிம்ஹன்' 'ராஜபுங்கவன்' என்பர் வடநூலாரும். ஸந்யாஸிகளைக்குறிக்கும் 'சீயர்' என்னுஞ்சொல்லும் இத்திறத்ததே; சீயம் - சிங்கம்; அதுபோன்றவர் - சீயர்; தலைவர் என்றபடி. ஜீயர் என்கை மரபு என்பர்; ["எப்பொருளெச்சொலி னெவ்வாறுயர்ந்தோர், செப்பின ரப்படி செப்புதல் மரபே."] அம்-அழகு; "அம் அழகைச்சொல் நீராம்." வாயால் - உருபுமயக்கம்; 'வாயால் பருகும்' என்றும் இயையும். அடிதோறும் 'தொண்டை' யென்று வந்ததனால் யமகமாகாது; பொருள் ஒன்றேயாகலின். (கச)

நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்துநீ ராட்டுமிந் நம்பிக்கு
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்
மூக்கு மிருந்தவா காணீரே மொய்குழ லீர்வந்து காணீரே. (க(

அசோதை—யசோதைப்பிராட்டியால் நோக்கி — (கண்ணபிரான் திருமேனியின் [மென்மைக்குத்தக்கபடி) பார்த்து [ஆராய்ந்து நுணுக்கிய—அரைக்கப்பட்ட மஞ்சளால்—மஞ்சட்காப்பாலே, நாக்கு வழித்து—; நீராட்டும்—ஸ்நாநம்செய்விக்கப்படாநின்ற இ நம்பிக்கு—இக்கண்ணபிரானுடைய வாக்கும்—திருவாக்கும் நயனமும்—திருக்கண்களும் வாயும்—அதரஸ்புரணமும் முறுவலும்—புன்சிரிப்பும் மூக்கும் இருந்தஆ—மூக்குமிருந்தபடியை காணீர்!—; மொய் குழலீர்—செறிந்தகுழலையுடைய [பெண்காள்! வந்து காணீர்!!—.

குறிப்பு:—'மஞ்சளால்' என்றது - 'நீராட்டும்' என்றத்தோடு இயையும். வாக்கு, நயனம் - வடசொற்கள். [வாயும்முறுவலுமித்யாதி.] கீழ்ப்பாட்டி

லேயே வாயிருந்தபடியைக் காட்டியதாயிற்றாதலால், இங்கு 'வாயும்' என்றதற்கு 'வாய்ந்திராநின்றுள்ள' என்று பொருள் கொள்ளவேணுமென்பாருமுளர். மொய்குழலீர் - விளித்தொகை. (௧௫)

விண்கோ ளமரர்கள் வேதனை தீரமுன்
மண்கோள் வசுதேவர் தம்மக னாய்வந்து
திண்கோ ளசுரரைத் தேய வளர்கின்றான்
கண்க ளிருந்தவாகா ணீரே கனவளை யீர்வந்து காணீரே. (௧௬)

விண் கொள்—ஸ்வர்க்காதிலோகங்களை [இருப்பிடமாகக் கொண்ட
அமரர்கள்—தேவதைகளுடைய
வேதனை தீர—துன்பங்கள்தீரும்படி
முன்—முன்னே
மண்கொள்—பூமியை இருப்பிடமாகக்கொ[ண்ட
வசுதேவர்தம்—வஸுதேவர்க்கு
மகனாய் வந்து—பிள்ளையாய்வந்துபிறந்து
திண்கொள்—வலிமைகொண்ட
அசுரர்—அஸுரர்கள்
தேய—கூயிக்கும்படி [டைய
ன்ற கண்ணனு
கண்கள் இருந்த ஆ காணீர் !—;
கனம் வளையீர்—கநககங்கணத்தையுடைய [பெண்காள் !
வந்து காணீர் ! !—.

குறிப்பு:—விண் - 'வியத்' என்ற வடசொற்சிதை வென்பர்சிலர். "விண்முகில் சுவர்க்கம் வானும்." அமரர் - வடசொல். என்றுமிறவாதவர். வேதனை—அஸுரராக்ஷஸாதிகளால் நேர்ந்த கஷ்டம்; வடசொல். அசுரரை-உருபுமயக்கம். "அசுரர்தேய" என்றிருந்தால் தளைதட்டும்; "மாமுன்னிரையும்" 'தேய' என்கிறவிச்சை 'தேய்க்க' என்று பிறவினையாகக்கொண்டு, அசுரரை அழிக்க என்றலுமொன்று. (௧௬)

பருவம் நிரம்பாமே பாரெல்லா முய்யத்
திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற
உருவு கரிய வொளிமணி வண்ணன்
புருவ மிருந்தவா காணீரே பூண்முலை யீர்வந்து காணீரே. (௧௭)

பருவம்—வயது
நிரம்பாமே—முதிருவதற்குமுன்னமே,
பார் எல்லாம்—பூமியிலுள்ளாரெல்லாரும்
உய்ய—உஜ்ஜீவிக்கும்படியாக
திருவின் வடிவு ஒக்கும்—பிராட்டியின்வடிவுபோன்றவடிவையுடையளா[ன
தேவகி-தேவகிப்பிராட்டியாலே
பெற்ற—பெறப்பட்டவனும்
உருவு கரிய—உருவால்கறுத்ததாய்
ஒளி—உஜ்ஜ்வலமான
மணி—மணிபோன்ற
வண்ணன்—வடிவையுடையனுமான கண்ணபி[ரானுடைய
புருவம் இருந்த ஆ காணீர் !—;
பூண் முலையீர்—ஆபரணம்பூண்ட முலையை[யுடையபெண்காள் !
வந்து காணீர் ! !—.

குறிப்பு:—[பருவமித்யாதி.] இத்தால், சக்ரவர்த்தி திருமகனிற்காட்டில் கண்ணபிரானுக்கு வாசிசொல்லுகிறது; அவன் பருவம் நிரம்பின பின்பே விரோதிகளைமுடித்து அநுகூலரைவாழ்வித்தது. பருவம் - 'பர்வ' என்னும் வடசொல். பார் - இடவாகுபெயர், பார் எல்லாம் - ஒருமைப் பன்மை மயக்கம். (௧௭)

மண்ணும் மலையும் கடலு முலகேழு
[illegible] ளைகரு
வண்ண மெழில்கொள் மகரக் குழையிவை
திண்ண மிருந்தவா காணீரே சேயிழை யீர்வந்து காணீரே. (கஅ)

மண்ணும்—பூமியையும்
மலையும்—மலைகளையும்
கடலும்—கடல்களையும்
உலகு ஏழும்—ஸப்தலோகங்களையும்
உண்ணுந் திறத்து – திருவயிற்றிலேவைக்
ல்
மகிழ்ந்து—உகந்து
உண்ணும்—திருவயிற்றிலேவைத்த

பிள்ளைக்கு-(இக்)கண்ணபிரானுடையதான
எழில் வண்ணம் கொள்—அழகியநிறங்கொ
[ண்ட
மகரம் குழை இவை—இம்மகரகுண்டலங்
[களின்
திண்ணம் இருந்த ஆ-திண்மைஇருந்தபடி
—; [யை
செயிழையீர்! வந்து காணீர்!!—.

குறிப்பு:—மலையேழும், கடலேழும், உலகேழும் என்றுமியைக்கலாம். மகிழ்ந்து–'இவற்றை ப்ரளயங்கொள்ளாதபடி காக்கப்பெற்றோமே'யென்று மகிழ்ச்சி. மகரம் - வடசொல். திண்ணம் - 'அம்' விகுதிபெற்ற பண்புப் பெயர். கண்டார் கண்ணையும் நெஞ்சையும் கவரும்படியான திண்மை. ()

முற்றிலுந் தூதையும் முன்கைம்மேல் பூவையுஞ்
சிற்றி லிழைத்துத் திரிதரு வோர்களைப்
பற்றிப் பறித்துக்கொண் டோடும் பரமன்றன்
நெற்றி யிருந்தவா காணீரே நேரிழை யீர்வந்து காணீரே (கக)

சிற்றில்—சிறுவீடுகளை
இழைத்து—கட்டி
திரிதருவோர்களை—திரிகிற எங்களுடைய
முற்றிலும்—(மணல்கொழிக்கிற)சிறுசுளகு
[களையும்
தூதையும்—(மணற்சோறாக்குகிற) சிறுபா
[னைகளையும்
முன் கை மேல்—முன்கைமேல் (நின்று
பூவையும்—நாகணவாய்ப்புள்ளையும்

பற்றி-(எங்கள் கையைப்) பிடித்து (பலாத்
[கரித்து)
பறித்துக்கொண்டு—அபஹரித்துக்கொண்டு
ஓடும்—ஓடுமவனுடைய
பரமன் தன்—(தீம்பில்) சிறந்தவனான கண்
[ணபிரானுடைய
நெற்றி இருந்த ஆ காணீர்!—;
நேர்—நேர்த்தியையுடைய
இழையீர்—ஆபரணங்களணிந்த பெண்
வந்து காணீர்—. [காள்!

குறிப்பு:—முற்றில் - சிறியமுறம்; தூதை - சிறுபானை; இவை மணல் விளையாட்டுக்கு உபகரணம். சிறு + இல், சிற்றில்; சிற்றிலிழைக்கையாவது-மணலாலே சிறுவீடு கட்டுகை. திரிதருவோர்களை - உருபுமயக்கம்; தா - [தரு] துணைவினை. (கக)

அழகிய பைம்பொன்னின் கோலங்கைக் கொண்டு
கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப
மழகன் றினங்கள் மறித்துத் திரிவான்
குழல்க ளிருந்தவாகா ணீரே குவிமுலை யீர்வந்து காணீரே. (உ0)

அழகிய—அழகியதாயும்
பைம்பொன்னின்—பசும்பொன்னால் செய் [யப்பட்டதுமான
கோல்—கோலை [மாடுமேய்க்குங்கருவி.]
அம் கை—அழகியகையிலே
கொண்டு—பிடித்துக்கொண்டு
கழல்கள்—(கால்களிலுள்ள) வீரக்கழல் [களும்
சதங்கை—சதங்கைகளும்
கலந்து—தன்னிலேசேர்ந்து
எங்கும் ஆர்ப்ப—போமிடமெல்லாமொலிக்
மழ—இளமைபொருந்திய [
கன்று இனங்கள்—கன்றுகளின் திரள்களை
மறித்து—(கைகழியப்போகாமல்) மடக்கி
திரிவான் – திரியுமவனான கண்ணபிரானு [டைய
குழல்கள்—திருக்குழல்களானவை
இருந்த ஆ காணீர்!—;
குவி முலையீர்! வந்து காணீர்!!—.

குறிப்பு:—பசுமை + பொன், பைம்பொன்; "ஈறுபோதல்" இத்யாதி. மழ - உரிச்சொல். (௨0)

சுருப்பார் குழலி யசோதைமுன் சொன்ன
திருப்பாத கேசத்தைத் தென்புதுவைப் பட்டன்
விருப்பா லுரைத்த விருபதோ டொன்று
முரைப்பார்போய் வைகுந்தத் தொன்றுவர் தாமே. (௨௧)

சுரும்பு ஆர்—வண்டுகள்படிந்துநிறைந்த
குழலி—கூந்தலையுடையளான
அசோதை—யசோதைப்பிராட்டியால்
முன்—க்ருஷ்ணாவதாரஸமயத்திலே
சொன்ன—சொல்லப்பட்ட
திருப்பாதகேசத்தை—பாதாதிகேசாந்தவர் [ணநப்பாசுரங்களை
தென் புதுவை—அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரு
பட்டன்—(நிர்வாஹகரான) ஆழ்வார் [க்கு
விருப்பால்—மிக்க ஆதரத்தோடு
உரைத்த—அருளிச்செய்த
இருபதோடு ஒன்றும்—இவ்விருபத்தொரு [பாட்டுக்களையும்
உரைப்பார்தாம்—ஓதுமவர்கள்
போய்—(இம்மண்டலத்தைக்கடந்து) போ [ய்
வைகுந்தத்து—ஸ்ரீவைகுண்டத்திலே
ஒன்றுவர்—பொருந்தப்பெறுவர்கள்.
[ஏ—தேற்றம்.]

குறிப்பு:—சுரும்பு + ஆர், சுருப்பார்; "மென்றொடர்மொழியுட் சில வேற்றுமையில், தம்மினவன்றொடர்" என்ற நன்னூற் சூத்திரமறிக. பாத கேசம் - வடசொற்றொடர். (௨௧)

அடி:—சீத முத்து பணை உழ பிறங்கிய மத்த இருங்கை வந்த அதிரும் பெருமா நான் மை வண்டு எம் நோக்கி விண் பருவம் மண் முற்றில் அழகிய சுருப்பார் மாணிக்கம்.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## மூன்றாந்திருமொழி.

962

## மாணிக்கங்கட்டி.

(2053)

—•—*—•—

**அவதாரிகை:**—யசோதைப்பிராட்டியானவள் வளர்பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்தித் தாலாட்டினபடியைத் தத்காலம்போலே விரும்பி யநுபவித்துப் பேசுகிறார் இத்திருமொழியில்.

**மாணிக்கங் கட்டி வயிர மிடைகட்டி**
**ஆணிப்பொன் னாற்செய்த வண்ணச் சிறுத்தொட்டில்**
**பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்**
**மாணிக் குறளனே தாலேலோ வைய மளந்தானே தாலேலோ.** (க)

*மாணிக்கம்—மாணிக்கத்தை*
*கட்டி—(இரண்டருகும்) கட்டி*
*இடை—நடுவில்*
*வயிரம்—வயிரத்தை*
*கட்டி—கட்டி*
*ஆணிப்பொன்னால்—மாற்றுயர்ந்தபொன்னால்*
*செய்த—செய்யப்பட்ட*
*வண்ணம்—அழகிய*
*சிறு தொட்டில்—சிறியதொட்டிலை*
*பிரமன்—சதுர்முகனானவன்*
*பேணி—விரும்பி*
*உனக்கு—உனக்கு*
*விடுதந்தான்—அனுப்பினான்;*
*மாணி குறளனே – ப்ரஹ்மசாரிவாமநாவதாரம்பண்ணின கண்ணனே! தாலேலோ!-*
*வையம்—உலகங்களை*
*அளந்தானே—(த்ரிவிக்ரமனாய்) அளந்தவனே! தாலேலோ—.*

—மாணிக்கம் - நவரத்நங்களுள் ஒன்று; இது செந்நிறமுடையது; [நூல்களில் கருமாணிக்கமெனவருதல் இல்பொருளுவமையாம்.] ஆணிப்பொன் - மாற்றறிதற்குக்கொள்ளும் உயர்தரப்பொன்; இதுக்கு மேலே மாற்றில்லையென்னும்படியான சிறந்த பொன் என்றுமுரைப்பர். மாணிக்குறளன் = [illegible] தால் ஏல் ஓ = தால் - "தாலு" என்றவடசொல் விகாரம், நாவென்றுபொருள்; ஏல் ஓ— அசைச்சொற்கள்; குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு பெண்கள் 'உளு உளு உளு ஆயி!' என்று உள்நாவை நாவாலே ஒலித்துச்சீராட்டுதலைத்'தாலேலோ' என்று வழங்குதல் மரபு. மாணிக்கம், வயிரம், வண்ணம், பிரமன் - வடசொல் விகாரங்கள். (க)

**உடையார்கன மணியோ டொண்மா தளம்பூ**
**இடைவிரவிக் கோத்த வெழில்தெழ் கினோடு**
**விடையேறு காபாலி யீசன்விடு தந்தான்**
**உடையா யழேலழேல்தா லேலோ வுலக மளந்தானே தாலேலோ,** (உ)

உடை ஆர்-இருவரைக்குச்சேரும்படியான
கனம் மணியோடு-பொன்மணியையும்
இடை-நடுவே
விரவி-கலந்து
கோத்த-கோக்கப்பட்ட
எழில்-அழகிய
தெழ்கிளேறும்-இடைச்சரிகையையும்,
ஒள் மாதளம்பூ- அழகியமாதளம்பூக்கோ
[வையான அரைவடத்தையும்
விடை ஏறு-ரிஷபவாஹநனும்
காபாலி-கபாலதாரியாய்
ஈசன்-ஸ்வவ்யூஹத்துக்குநியாமகனுமாகு
விடுதந்தான்—; [ரன்
உடையாய்-ஸ்வாமியான கண்ணனே!
அழேல் அழேல்-அழாதேகொள், அழா
தாலேலோ—; [தேகொள்;
உலகம் அளந்தானே! தாலேலோ—.

குறிப்பு:—உடை-அரைக்கு ஆகுபெயர். 'கனகமணியோடு' என்றும் பாடமுண்டென் றுரைப்பர்சிலர்; மோனைகெடுவதுடன் தளையும் தட்டுதலால் அப்பாடம் கொள்ளத்தகாது. தெழ்கு-இடுப்பில் சொருகப்படுவதொரு கத்தி. விடை-'வ்ருஷ' என்னும் வடசொல் விகாரம். காபாலி-கபாலி; நீட்டல் விகாரம். உடையாய்='உடையான்' என்பதன்விளி. (௨)

எந்தம் பிரானு ரெழில்திரு மார்வர்க்குச்
சந்த மழகிய தாமரைத் தாளர்க்கு
இந்திரன் றானு மெழிலுடைக் கிண்கிணி
தந்துவ னாய்நின்றான் தாலேலோ தாமரைக் கண்ணனே தாலேலோ (௩)

எம்தம்பிரானார்-எமக்குஸ்வாமியாய்
எழில்-அழகிய
திருமார்வர்க்கு-திருமார்பையுடையராய்
சந்தம் அழகிய-நிறத்தாலழகிய
தாமரை தாளர்க்கு-தாமரைபோன்ற திரு
[வடிகளையுடையரான தேவர்க்கு
இந்திரன் தானும்-தேவேந்த்ரனானவன்
எழில்உடை-அழகையுடைய
கிண்கிணி-கிண்கிணியை
தந்து-கோணர்ந்துஸமர்ப்பித்து
உவனாய்நின்றான்-அதூரவிப்ரக்ருஷ்டனா
[யிராநின்றான்;
தாலேலோ!—;
தாமரைக்கண்ணனே! தாலேலோ—.

குறிப்பு:—திருமார்வர்க்கு, தாளர்க்கு - முன்னிலைப் படர்க்கை. தாமரைத்தாளர்க்கு, தாமரைக்கண்ணனே - உவமைத்தொகை. இந்திரன் தானும்—தான் - அசை; உம்மை - இசைநிறை. அன்றி, 'அப்படிப்பட்ட மஹேந்த்ரனுங்கூட' என்று முரைக்கலாம். உவன்—மிகவும் ஸமீபத்திலும் மிகவும் தூரத்திலுமின்றி நடுவிலுள்ளவன்; உகரச்சுட்டடியாப்பிறந்த ஆண்பாற்பெயர். ... ... ... ... ... ... ... (௩)

சங்கின் வலம்புரியுஞ் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச் சரிவளையும் நாணு மரைத்தொடரும்
அங்கண் விசும்பி லமரர்கள் போத்தந்தார்
செங்கட் கருமுகிலே தாலேலோ தேவகி சிங்கமே தாலேலோ. (௪)

சங்கில்-சங்குகளில் (சிறந்த)
வலம்புரியும்-வலம்புரிச்சங்கையும்
சே அடி-செவ்விய திருவடிகளில் (சாத்த
கிண்கிணியும்-சதங்கைகளையும் [த்தகுந்த
அம் கை-அழகிய கைகளுக்குஉரிய
சரி-முன்கைவளைகளையும்
வளையும்-தோள்வளைகளையும்
நாணும்-பொன்னரைநாணையும்

அரை தொடரும்-அரைவடத்தையும்
அம் கண் - அழகிதாய் விசாலமான
விசும்பில் - ஸ்வர்க்கத்திலுள்ள
அமரர்கள் - தேவர்கள்
போத்தந்தார் - அனுப்பினார்கள்; [ய்
செம் கண் - சிவந்த கண்களையுடையயா
கரு முகிலே - காளமேகம்போன்றவடிவை [யுமுடையையான கண்ணனே!, தாலேலோ—;
தேவகி - தேவகியின்வயிற்றிற்பிறந்த
சிங்கமே - சிங்கக்குருகே!—தாலேலோ—.

குறிப்பு:—சங்கில் + வலம்புரி, சங்கின்வலம்புரி; "குறில்செறியா லள அல்வழிவந்த..." என்ற நன்னூற்சூத்திரத்தினிறுதியில் 'பிற' என்றமிகையை நோக்குக. நாண் - திருமார்வுக்கு அலங்காரமாகச் சாத்தத்தக்க நாணுகவுமாம். செங்கண் + கருமுகில், செங்கட்கருமுகில். கருமுகிலே - முற்றுவமை. (௪)

எழிலார் திருமார்பிற் கேற்கு மிவையென்
றழகிய வைம்படையு மாரமுங் கொண்டு
வழுவில் கொடையான் வயிச்சி ரவணன்
தொழுது வனாய்நின்றான் தாலேலோ தூமணி வண்ணனே தாலேலோ.

எழில் ஆர் - "அழகுமிக்கிருந்துள்ள
திருமார்பிற்கு - வக்ஷஸ்தலத்துக்கு
இவை ஏற்கும் என்று - இவைபொருந் [தும்" என்று
அழகிய - அழகியவையான
ஐம் படையும் - பஞ்சாயுதங்களையும்
ஆரமும் - முத்துவடத்தையும்
கொண்டு - எடுத்துக்கொண்டு,
வழு இல் - குற்றமற்ற
கொடையான்-ஔதார்யத்தையுடையனு
வயிச்சிரவணன் - குபேரனானவன் [ன
தொழுது - (இவற்றைத்திருவுள்ளம்பற்ற [வேணுமென்று) அஞ்ஜலிபண்ணிக் [கொண்டு
உவனாய் நின்றான், தாலேலோ—;
தூ மணி - பழிப்பற்றநீலமணிபோன்ற
வண்ணனே - வடிவையுடையகண்ணனே! தாலேலோ—.

குறிப்பு:—திருமார்பு இன் கு - திருமார்பிற்கு; இன் - சாரியை; 'திருமார்வுக்கு' என்றும் பாடம். ஐம்படை - சக்கரம், சங்கு, கதை, வில், வாள்; இவற்றிற்கு முறையே ஸுதர்சநம், பாஞ்சஜந்யம், கௌமோதகீ, சார்ங்கம், நந்தகம் என்றுபெயர். படை - பகைவரைப் படுத்தற்குக் கருவியாவது; படுத்தல்—அழித்தல்; ஐ—கருவிப்பொருள்விகுதி. ஆரம்—ஹாரம். கொடைக்கு வழுவாவது—ப்ரதிப்ரயோஜநத்தைக் கணிசிக்கை. வயிச்சிரவணன் - 'வைச்ரவணன்' என்ற வடசொல்விகாரம். 'வயிச்சிராவணன்' என்றபாடம் சாலவும் சேராது; இப்பதிகம் வெண்டளையால் வந்த கலித்தாழிசையாகையால் 'வயிச்சி' என்ற புளிமாச்சீர்முன் 'மாமுன்நிரையும்" என்றவிதிப்படி நிரையசை வரவேண்டுதலின்; "அரவை 'அரா' என்னுமாபோலே 'வயிச்சிரவணன்' என்கிறவித்தை 'வயிச்சிராவணன்'என்று நீட்டிக்கிடக்கிறது" என்று பெரியஜீயருரை அச்சுப்பிரதிகளில் காணப்படுகின்றவாக்யம் பரமைகாந்தி காலக்ஷேபபரர்களால் ஓலைச்சுவடிகளில் டிப்பணியாக எழுதிவைக்கப்பட்டு, பிறகு வ்யாக்யாநபங்க்தியாகவே சேர்த்தச்சிடப்பட்டதென்பதில் இறையும் ஐயுறவேண்டா; "குறியதன்கீழ்ஆக் குறுகலுமதனோடு, உகரமேற்றலுமியல்புமாகுமின்" என்ற நன்னூற்சூத்திரத்தின் பொருளை நன்குணர்

வர்; 'அரா' என்கிறவிதுவே 'அர' என்றும் 'அரவு' என்றும் செய்யுளில் ஆமென்று தெளிவராதலின், ப்ரஸித்தமாகச்சொல்லப்பட்ட கிழ்வாக்யம் இலக்கணமறியாதார் எழுதிற்றென்பதை எளிதிலறியலாம். அன்றி, 'வயிச்சிரா வண்ணன்' என்றிருந்தால் தளைதட்டாதென்பாருமுளர்; அப்பாடத்தில், நீட்டல், விரித்தல்என்ற இரண்டு விகாரங்கள் வீணாகக்கொள்ளவேண்டிய கௌரவமுண்டு. 'வயிச்சிரவணன்' என்றபாடமே சிறக்கும். ... (ரு)

ஓதக் கடலி லொளிமுத்தி னாரமுஞ்
சாதிப் பவளமுஞ் சந்தச் சரிவளையும்
மாதக்க வென்று வருணன் விடுதந்தான்
சோதிச் சுடர்முடியாய் தாலேலோ சுந்தரத் தோளனே தாலேலோ. (சு)

ஓதம் - அலையெறிப்பையுடைய
கடலில் - ஸமுத்ரத்தில் (உண்டாய்)
ஒளி - ஒளியையுடைத்தாய்
முத்தின் - முத்துக்களால்கோக்கப்பட்ட
ஆரமும் - ஹாரத்தையும்
சாதி - நல்லஜாதியிலுண்டான
பவளமும் - பவழவடத்தையும்
சந்தம் - அழகுபொருந்திய
சரி - முன்கைவளைகளையும்
வளையும் - தோள்வளைகளையும்

மா தக்க என்று } 'விலையில்சிறந்து தகுதியாயிருந்துள்ளவை' என்று
வருணன் - வருணதேவனானவன்
விடுதந்தான்—;
சோதி சுடர்-மிக்கஜ்யோதிஸ்ஸையுடைய
முடியாய்-கிரீடத்தையணிந்தகண்ணனே!
தாலேலோ!—;
சுந்தரத் தோளனே } அழகிய திருத்தோள்களையுடைய கண்ணனே!
தாலேலோ—.

குறிப்பு:—சாதி - ஜாதி. பவளம் - 'ப்ரவாளம்' என்னும் வடசொல்மரூஉ. தக்க - ஈறு கெட்டவினைமுற்று. வருணன்-வடசொல். சோதிச்சுடர்-மீமிசைச்சொல்; ஒருபொருட் பன்மொழி. முடியாய் - 'முடியான்', என்பதன் விளி. சுந்தரம் - வடசொல் விகாரம். ... ... ... (சு)

கானார் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்
வானார் செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்
தேனார் மலர்மேல் திருமங்கை போத்தந்தாள்
கோனே யழேலழேல்தா லேலோ குடந்தைக் கிடந்தானே தாலேலோ.

தேன் ஆர் - தேன்நிறைந்துள்ள
மலர் மேல் - (செந்தாமரை)மலரிலுறைகின்ற
திரு மங்கை - பெரியபிராட்டியார்,
கான் ஆர் - காட்டிலுண்டான
நறு துழாய் - பரிமளத்தையுடைய துளஸியாலே
கை செய்த - கைத்தொழில்தோன்றப்பண்ணின
கண்ணியும் - மாலையையும்
வான் ஆர் - ஆகாசவ்யாபியாய்
செழு - செழுமைதங்கியிருந்துள்ள

சோலை - சோலையிலே (வளர்ந்த)
கற்பகத்தின் - கல்பவ்ருக்ஷத்தின் (பூக்களால்தொடுத்த)
வாசிகையும் - திருநெற்றிமாலையையும்
போத்தந்தாள் - அனுப்பினாள்,
கோனே - ஸர்வஸ்வாமியானகண்ணனே!
அழேல் அழேல் தாலேலோ!—;
குடந்தை - திருக்குடந்தையிலே
கிடந்தானே - கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனே!
தாலேலோ—.

குறிப்பு:—காரம் 'க்ஷாரம்' என்ற வடசொல் விகாரம். காறுந்துழாய் - நன்னிலத்திலே வளருகையாலே தழைத்துப் பரிமளப்ரசுரமான திருத்துழாய். கற்பகம் - கல்பகம். குடந்தை - கும்பகோணம்; 'குடமூக்கு' என்பது முழுப்பெயர்; அதில் ஏகதேசமான 'குடம்' என்ற சொல்லைமாத்திரங்கொண்டு 'த்' என்ற எழுத்துப்பேறும் ஐவிகுதியும் பெறுவித்துக் குடந்தையென்றார்; 'வில்லிபுத்தூர்' என்றமுழுப்பெயரில், 'புது' என்றமாத்திரத்தைக்கொண்டு 'புதுவை' என்பதுபோலவும், குருகூரைக் குருகையென்றும், அழுந்தூரை அழுந்தையென்றும், நாகூரை நாகையென்றும், தஞ்சாவூரைத் தஞ்சையென்றும், இடந்தூரை இடவெந்தையென்றும், திருச்சேறூரைத் திருச்சேறையென்றும், பெருங்குளத்தைக் குளந்தையென்றும் அருளிச்செய்தல்போலவும் குடமூக்கூரைக் குடந்தையென்றாரென்று கொள்ளவேணும். தூப்புல்பிள்ளைதாமும், நவரத்தினமாலையிலும், மும்மணிக்கோவையிலும், திருவயிந்திரபுரத்தை 'அயிந்தை' என்றருளிச்செய்திருப்பதும் நோக்கத்தக்கது. (எ)

கச்சொடு பொற்சுரிகை காம்பு கனவளை
உச்சி மணிச்சுட்டி யொண்டா ணிரைப்பொற்பூ
அச்சுத னுக்கென் றவனியாள் போத்தந்தாள்
நச்சு முலையுண்டாய் தாலேலோ நாரா யணாவழேல் தாலேலோ. (அ)

கச்சொடு - கச்சுப்பட்டையையும்
பொன் - ஸ்வர்ணமயமான
சுரிகை - உடைவாளையும்
காம்பு - சித்ரக்காம்பன் சேலையையும்
கனம் - கநகமயமான
வளை - தோள்வளைகளையும்
மணி - ரத்நப்ரசுரமாய்
உச்சி - உச்சியிலே சாத்தத்தக்கதான
சுட்டி - சுட்டியையும்
ஒள் தாள் - ஒளிமிக்க தாள்களையுடைத்தாய்
நிரை - ஒழுங்கான
பொற்பூ - பொற்பூவையும்
அச்சுதனுக்கு என்று - 'கண்ணபிரானுக்கு (க்கொடுங்கோள்)' என்று
அவனியாள் - பூமிப்பிராட்டியானவள்
போத்தந்தாள் - அனுப்பினாள்;
நஞ்சு - விஷமேற்றின
முலை - (பூதனையின்) முலையில் பாலை
உண்டாய் - உண்ட கண்ணனே!
தாலேலோ;
நாராயணா! அழேல்! தாலேலோ—.

குறிப்பு:—சுரிகை - 'க்ஷுரிகா' என்றவடசொல்திரிபு. காம்பு - சிறிய கீற்றுக்களையுடைய வஸ்த்ரம். 'கனகவளை' என்றபாடமும் சேரும். பொற்பூவுக்குத்தாள்களாவன - அதில்கூறுகூறாயிருப்பன சிலவுண்டே, அவை. பொன் + பூ, பொற்பூ. அவனி - வடசொல். நஞ்சு + முலை, நச்சுமுலை. உண்டாய் - விளி. ... ... ... ... ... ... ... (அ)

மெய்த்திமிரு நானப் பொடியோடு மஞ்சளும்
செய்ய தடங்கண்ணுக் கஞ்சனமும் சிந்துரமும்
வெய்ய கலைப்பாகி கொண்டுவளாய் நின்றாள்
ஐயா வழேலழேல்தா லேலோ அரங்கத் தணையானே தாலேலோ. (கூ)

மெய் - திருமேனியிலே
திமிரும் - பூசுகைக்கிடான
காணம் பொடியோடு - கஸ்தூரி, கருப்பூர
[ம், சந்தநம்முதலிய ஸுகந்தப்
[பொடிகளையும்
மஞ்சளும் - மஞ்சள்பொடியையும்,
செய்ய - சிவந்ததாய்
தட - விசாலமாயுள்ள
கண்ணுக்கு - கண்களில் (சாத்த)
அஞ்சனமும் - மையையும்,
(திருநெற்றியில்சாத்துகைக்கு)
சிந்தூரமும் - ஸிந்தூரத்தையும்,

வெய்ய கலை பாகி } வெவ்விய ஆண்மானை வாஹநமாகவுடைய துர்க்
[கையானவள்
கொண்டு - எடுத்துக்கொடு வந்து
உவளாய் நின்றாள் - அநுராகிப்ரக்ருஷ்
[டையாயிராநின்றாள் ;
ஐயா - ஸ்வாமியானகண்ணனே !
அழேல் அழேல் தாலேலோ—;
அரங்கத்து - ஸ்ரீரங்கத்திலே
அணையானே - (திருவனந்தாழ்வானைப்)
[படுக்கையாகவுடையவனே !
தாலேலோ—.

குறிப்பு:—அஞ்சனம், சிந்தூரம் - வடசொற்கள். வெய்ய - வெம்மை பொருந்திய; 'வெம்மை' என்று ஆசைக்கும் பேராகையாலே, 'விரும்பப் படும் நூற்கலைகளை நடத்துகிற ஸரஸ்வதி' என்று முரைக்கலாம். கலை- 'கலா' என்ற வடசொல் திரிபு. 'ஐயன்' எனினும், 'அய்யன்' எனினும் ஒக் கும்; 'ஆர்யன்' என்ற வடசொல் விகாரம். ... ... ... (௯)

அவ:—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்குப் பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வஞ்சனை யால்வந்த பேய்ச்சி முலையுண்ட
அஞ்சன வண்ணனை யாய்ச்சிதா லாட்டிய
செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன்சொல்
எஞ்சாமை வல்லவர்க் கில்லை யிடர்தானே. (௧௦)

வஞ்சனையால் வந்த - வஞ்சகவேஷத்தோ
[டேவந்த
பேய்ச்சி - பூதனையினுடைய [ஞ்
முலை உண்ட - முலையை அமுதுசெய்தவ
அஞ்சனம் வண்ணனை } மைபோன்ற நிறத்தையுடைய ஞனகண்ணபிரானை
ஆய்ச்சி - யசோதைப்பிராட்டி
தாலாட்டிய - தாலாட்டினபடிகளை,
செம் சொல் மறையவர் } செவ்விய சொற்கள்நிறைந்த வேதத்தைநிரூபகமாக
[வுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள்

சேர் - நித்யவாஸம்பண்ணப்பெற்ற
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூரிலவதரித்த
பட்டன் - பெரியாழ்வார்(அருளிச்செய்த)
சொல் - இப்பாசுரங்களை
எஞ்சாமை - குறைவுபடாமல்
வல்லவர்க்கு - ஓதவல்லவர்களுக்கு
இடர் இல்லை- துன்பமொன்றுமில்லையாம்.
தான் ஏ - அசை.

குறிப்பு:—வஞ்சனை - வஞ்சநா. அஞ்சனவண்ணன் - வடசொற்றொடர். மறை = அர்த்தங்களை மறைத்துக்கூறுவது - வேதம்; ஐ - விகுதி. பட்டன்- ப்ராஹ்மணரில் ஓர்வகுப்பைச் சேர்ந்தவன்; பாடுமவனுக்கும் பெயர். (௧௦)

அடி:—மாணி உடை என் சங்கில் எழில் ஓதக் காலூர் கச்ச மெய் வஞ்சனை தன்.

மூன்றாம் திருமொழி உரை முற்றிற்று.

———

## நாலாந்திருமொழி.

## தன்முகத்துச்சுட்டி.

அவதாரிகை:—கண்ணபிரானுக்குத் தொட்டில் பருவம்போய் தவழ்ந்து விளையாடத்தக்க பருவமானபின்பு, அவன் நிலாமுற்றத்தே போந்துதவழ்ந்து புழுதியளைவது, சந்த்ரனையழைப்பதானபடியை யசோதைப்பிராட்டி அநுபவித்து, அவனுக்கு உகப்பாகச் சந்த்ரனை வரச்சொல்லித் தான் பலகாலுமழைத்த ப்ரகாரத்தை ஆழ்வார்தாமும் அநுபவபூர்வகமாகப்பேசி இனியராகிறார் - தன்முகத்துச் சுட்டியில்.

தன்முகத் துச்சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்துபோய்ப்
பொன்முகக் கிண்கிணி யார்ப்பப் புழுதி யளைகின்றான்
என்மகன் கோவிந்தன் கூத்தி னையிள மாமதீ
நின்முகங் கண்ணுள வாகில் நீயிங்கே நோக்கிப்போ. (க)

இள - இளமைதங்கிய
மா மதீ - அழகியசந்திரனே!,
தன் முகத்து - தன்முகத்தில்(விளங்குகிற)
சுட்டி - சுட்டியானது [யவும்
தூங்கத் தூங்க - பலகாலும்தாழ்ந்து அசை
பொன் முகம் - அழகியமுகத்தையுடைய
கிண்கிணி - சதங்கைகளானவை
ஆர்ப்ப - கணகணவென்றொலிக்கவும்
தவழ்ந்து போய் - (முற்றத்தில்) தவழ்ந்து [போய்
புழுதி - தெருப்புழுதிமண்ணை
...
என் மகன் - எனக்குப்பிள்ளையான
கோவிந்தன் - கண்ணபிரானுடைய
கூத்தினை - சேஷ்டைகளை,
நின் முகம் - உன்முகத்தில்
கண் உள ஆகில் - கண்உண்டேயானால்
நீ இங்கே நோக்கி போ - நீ இங்கேபார்த் [துப்போ.

குறிப்பு:—தூங்குதல் - தாழ்தல். கோவிந்தன்-வடசொல். கூத் இன் - சாரியை; கண்ணபிரான் சந்த்ரனைக் கையில் கொள்ளவேணுமென்று ஆடுகிறகூத்து. மா - அழகுக்கும்பேர். இங்கே='இஹ' என்றவடசொல் மரூஉ என்றுரைப்பர் சிலர். ... ... ... ... ... (க)

என்சிறுக் குட்ட னெனக்கோ ரின்னமு தெம்பிரான்
தன்சிறுக் கைகளாற் காட்டிக் காட்டி யழைக்கின்றான்
அஞ்சன வண்ணனோ டாட லாட வுறுதியேல்
மஞ்சில் மறையாதே மாமதீ மகிழ்ந் தோடிவா. (உ)

மா மதீ!—;
எனக்கு - (தாயாகிய) எனக்கு
ஓர் இன் அமுது } விலக்ஷணமாய் மதுரமாயிருப்பதொரு அம்ருதம்போன்றவ [னாய்
எம் பிரான் - எனக்கு உபகாரகனான [ன்
என் சிறுக் குட்டன் - என் மகனான கண்ண
தன் சிறு கைகளால் - தன்னுடையசிறிய [கைகளால்
காட்டிக் காட்டி - பலகாலும் (உன்னையே) [காட்டி
அழைக்கின்றான் - அழையாநின்றான்
அஞ்சனம் வண்ணனோடு } மைபோன்றவடிவையுடைய இக்கண்ணபிரானோடு
ஆடல் ஆட - விளையாட
உறுதியேல் - கருதினாயாகில்
மஞ்சில் - மேகத்திலே
மறையாதே - சொருகிமறையாமல்
மகிழ்ந்து ஓடி வா - உகந்து ஓடிவா.

குறிப்பு:—அமுது - 'அம்ருதம்' என்ற வடசொல் சிதைவும். உறுதி = முன்னிலையொருமை வினைமுற்று; கருத்தாவிகுதியாகில். ... (உ)

சுற்று மொளிவட்டஞ் சூழ்ந்து சோதி பரந்தெங்கும்
எத்தனை செய்யிலு மென்மகன் முகம்நே ரொவ்வாய்
வித்தகன் வேங்கட வாண னுன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே அம்பு லீகடி தோடிவா. (ங)

அம்புலீ - சந்த்ரனே!
ஒளி - ஒளிபொருந்திய
வட்டம் - மண்டலமானது
சுற்றும் - நாற்புறமும்
சூழ்ந்து - சுழன்று
எங்கும் - எல்லாத்திசைகளிலும்
சோதி - ஜ்யோதிஸ்ஸாலே
பரந்து - வ்யாபித்து
எத்தனை செய்யிலும் - இவையெல்லாம் [செய்தாலும்
என் மகன் - என்கண்ணபிரானுடைய
முகம் - திருமுகமண்டலத்துக்கு
நேர் ஒவ்வாய் - ஒருபடியாலும் ஒப்பாக [மாட்டாய்!
வித்தகன் - ஆச்சர்யப்படத்தக்கவனாய்
வேங்கடம் - திருவேங்கடமலையிலே
வாணன் - நன்றாகவாழுமவனான இக்கண் [ணபிரான்
உன்னை விளிக்கின்ற - உன்னை அழைக்கிற
கைத்தலம் - திருக்கைத்தலத்தில்
நோவாமே - நோவுமிகாதபடி
கடிது ஓடி வா - சீக்கிரமாய் ஓடிவா.

:—வட்டம் = 'வ்ருத்தம்' என்ற வடசொல் மரூஉ. முகம் - வடசொல். வித்தகன் - 'விதக்³த⁴:' என்ற வடசொல் மரூஉ என்பர் சிலர்; 'வித்தகன்' என்ற சொல்லுக்கு 'அறிஞன்' என்று மொருபொருள் நிகண்டுகளில் காணப்படுகையால் 'விஜ்ஞாநு' என்ற வடசொல் விகாரமென்பர் சிலர். வேங்கடம் — தன்னையடைந்தவர்களது பாவமனைத்தையும் ஒழிப்பதனால் இப்பெயர் பெற்றது; வேம் - பாவம்; கடம் - எரித்தல். இனி, வேம் - அழிவின்மை; கடம் - ஐச்வர்யம் எனக்கொண்டு, அழிவற்ற ஐச்வர்யங்களைத் தன்னையடைந்தார்க்குத் தருதலால் இப்பெயர்கொண்ட தென்றலுமுண்டு. வாழ் + நன், வாணன்; மரூஉமொழி; ["இடையுரிவடசொலின்" இத்யாதி.] தலம் - ஸ்தலம். நோவாமே - எதிர்மறை வினையெச்சம்; கைநோவு மிகப்போகாதபடி என்று கருத்து. ... ... ... ... (ங)

சக்கரக் கையன் தடங்கண்ணால்
மலர விழித்து ஒக்கலை மேலிருந் துன்னையே சுட்டிக் காட்டுங்காண்
தக்க தறிதியேல் சந்திரா சலஞ்செய் யாதே
மக்கட் பெறாத மலட னல்லையேல் வாகண்டாய். (ச)

சந்திரா - சந்த்ரனே!
சக்கரம் - திருவாழி ஆழ்வானை
கையன் - திருக்கையிலணிந்தகண்ணபிரா [ன்
ஒக்கலைமேல் - (என்) இடுப்பின்மேல்
இருந்து - இருந்துகொண்டு
தட கண்ணால் - விசாலமானகண்களாலே
மலர விழித்து - மலரப்பார்த்து
உன்னையே - உன்னையே [முன்,
சுட்டிக் காட்டும் - குறித்துக்காட்டாநின்
தக்கது - (உனக்குத்) தகுதியானதை
அறிதியேல் - அறிவாயாகில்,
(அன்றியும்,)
மக்கள் பெறாத - பிள்ளைபெறாத
மலடன் அல்லையேல் } மலடன் அல்லையாகில்
சலம் செய்யாதே - கபடம்பண்ணாமல்
வா கண்டாய் - வந்துவிடாய்.

குறிப்பு:—தடங்கண்ணால் என்கிறவித்தை உருபுமயக்கமாகக்கொண்டு 'தடங்கண்களை மலாத்திறந்து' என்று உரைப்பினுமாம். அறிதி - 'இ' என்ற முன்னிலை யொருமை விகுதிபெற்ற வினைமுற்று. சலம் - 'ஜலம்' என்ற வடசொல் திரிபு. மக்கள் - உயர்திணை ஆண்பெண் இருபாற்கும் பொதுப்பெயர்; இதற்குப் பன்மையொழிய வேறு இயல்புகிடையாது. மலடன் - வந்த்யன்; 'மலடி' என்பதன் ஆண்பால். அல்லை - 'ஐ' என்னும் முன்னிலை யொருமை விகுதிபெற்ற குறிப்புவினைமுற்று. [மக்கள் பெறாத மலடனல்லையேல்] பிள்ளை குட்டி பெற்றிருப்பார்க்கு அவற்றை உகப்பிக்கும்வகை தெரியுமிறே என்று கருத்து. 'நீ இவனருகே வாராவிடில், உன்னை சிக்ஷித்தல்லதுவிடான்' என்பது தோன்ற, 'சக்கரக்கையன்' என்றாள். "ஆழி கொண்டுன்னை யெறியும்" என்பர்மேல்; காண், கண்டாய் - முன்னிலையசைச்சொற்கள். ... ... ... ... ... ... (௪)

அழகிய வாயி லமுத வூறல் தெளிவுறா
மழலைமுற் றாத விளஞ்சொல்லா லுன்னைக் கூவுகின்றான்
குழகன் சிரீதரன் கூவக் கூவநீ போதியேல்
புழையில வாகாதே நின் செவிபுகர் மாமதீ!. (௫)

புகர் - தேஜஸ்வியாய்
மா - பெருமைபொருந்தியிராநின்ற
மதீ - சந்த்ரனே!,
அழகிய வாயில் - அழகிய திருப்பவளத்தி[லே]
ஊறல் - ஊறுகைபொருந்தின [= ஊறு[கின்றுள்ள]
அமுதம் - ஜலமாகிறஅம்ருதத்தோடேகூடி
தெளிவுறா - உருத்தெரியாததாய்
மழலை முற்றாத } மழலைத்தனத்துக்குள் முற்று தலில்லாதிருக்கிற
இள சொல்லால் - இளம்பேச்சாலே

உன்னைக் கூவுகின்றான்
குழகன் - எல்லாரோடும்கலந்திருப்பவனாய்
சிரீதரன் - ச்ரிய:பதியான இக்கண்ணபி[ரான்]
கூவக் கூவ - (இப்படி) பலகாலழையா[நிற்கச்செய்தே]
நீ போதியேல் - நீபோவாயேயானால்
நின் செவி - உன் காதுகளானவை
புழை இல - துளையில்லாதவையாக
ஆகாதே - ஆகாதோ?
[ஆகவே ஆகும்.]

குறிப்பு:—ஊறல் - ஊற்று; 'அல்' விகுதிபெற்ற தொழிற்பெயர். தெளிவுறா - 'உறு' என்பது - தனக்கென வேறுபொருளின்றிப் பகுதிப்பொருள் விகுதியாய் வந்தமையால், துணைவினை; தெளியா என்றபடி; நீர் நிறைந்த வாயால் பண்ணும் சப்தோச்சாரணத்துக்கு ஸ்பஷ்டத்வமாகிற தெளிவு இல்லையிறே. மழலைச்சொல் - குதலைவார்த்தை. குழகன் - ஸௌசீல்யவிசிஷ்டன். சிரீதரன் - ஸ்ரீதரன். போதி - முன்னிலை யொருமைவினைமுற்று. புழை - துளை. செவி - 'ச்ரவஸ்' என்றவடசொல் மரூஉ. ... (௬)

தண்டொடு சக்கரஞ் சார்ங்க மேந்துந் தடக்கையன்
கண்துயில் கொள்ளக் கருதிக் கொட்டாவி கொள்கின்றான்
உண்ட முலைப்பா லறாகண் டாயுறங் காவிடில்
விண்டனில் மன்னிய மாமதீ! விரைந் தோடிவா. (௬)

விண் தனில் - ஆகாசத்திலே
மன்னிய - பொருந்திய
மா மதீ!—;
தண்டொடு - 'கௌமோதகி' யென்னும் [கதையையும்
சக்கரம் - திருவாழியாழ்வானையும்
சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கமென்னும்வில்லையும்
ஏந்தும் - ஏந்தியிராநின்றுள்ள
தட - விசாலமான
கையன் - கைகளையுடைய இக்கண்ணபிரான்
கண் துயில்கொள்ள கருதி - திருக்கண்வளர்ந்தருள
கொட்டாவி கொள்கின்றான் - கொட்டாவிவிடாநின்றான்;
உறங்காவிடில் - (இப்போது இவன்) உறங்காதொழிந்தால்
உண்ட - அமுதுசெய்யப்பட்டிருக்கிற
முலைப் பால் - ஸ்தந்யமானது
அறா - ஜரிக்கமாட்டாது;
(ஆகையால்,)
விரைந்து ஓடி வா—.

குறிப்பு:—தண்டு - "டிஓஷ." [விரைந்தோடிவா] நீ இவனருகே வந்தாலொழிய இவன் உறங்கான்; உறங்கினாலொழியப் பால்ஜரியாது; ஆகையால், சடக்கென வரவேணும். ... ... ... ... (சா)

பாலக னென்று பரிபவஞ் செய்யேல் பண்டொருநாள்
ஆலி னிலைவ ளர்ந்த சிறுக்க னவனிவன்
மேலெழப் பாய்ந்து பிடித்துக் கொள்ளும் வெகுளுமேல்
மாலை மதியா தேமா மதிமகிழ்ந் தோடிவா. (எ)

மா மதி!—;
பாலகன் என்று - 'இவனொருசிறுபயலன்றோ' என்று
பரிபவம் செய்யேல் - திரஸ்கரியாதே கொள்;
பண்டு ஒருநாள் - முன்பொருகாலத்திலே
ஆலின் இலை - ஆலந்தளிரிலே
வளர்ந்த - கண்வளர்ந்தவனாகப் புராணங்களிலே சொல்லப்படுகிற
சிறுக்கன் அவன் - அந்தசிறுப்பிள்ளையானவன்
இவன் - இவனாகிறான்காண்;
வெகுளும் ஏல் - (இவன்) சீறினானாகில்
மேல் எழப் பாய்ந்து - (உன்மேல்) ஒரு பாயலாகப் பாய்ந்து
பிடித்துக்கொள்ளும் - (உன்னைப்) பிடித்துக்கொள்வான்;
(ஆகையால்,)
மாலை - இம்மஹாபுருஷனை
மதியாதே - அவமதியாமல்
மகிழ்ந்து ஓடிவா—.

குறிப்பு:—பாலகன், பரிபவம் - வடசொற்கள். செய்யேல் - எதிர்மறை யேவலொருமைமுற்று. "மேலெழ" = 'எழ' என்கிறவினை எச்சத்திரிபாகக்கொண்டு 'மேலெழுந்துபாய்ந்து' என்று முரைக்கலாம். வெகுள்வு-கோபம். மதி - அண்மைவிளி. ... ... ... ... (எ)

சிறியனென் றென்னிளஞ் சிங்கத் தையிக ழேற்கண்டாய்ச்
சிறுமையின் வார்த்தையை மாவ லியிடைச் சென்றுகேள்
சிறுமைப் பிழைகொள்ளில் நீயுமுன் தேவைக் குரியைகாண்
நிறைம திநெடு மால்விரைந் துன்னைக் கூவுகின்றான். (அ)

நிறை மதி - பூர்ணசந்த்ரனே!
என் இள சிங்கத்தை } எனக்குச் சிங்கக்குருகுபோன்ற கண்ணபிரானை
சிறியன் என்று - (உபேக்ஷிக்கைக்கு உறுப்பான) சிறுமையையுடையவனாக
இகழேல் - அவமதியாதேகொள்;
சிறுமையில் - (இவனுடைய) பால்யத்தில் நடந்த
வார்த்தையை - வ்ருத்தாந்தத்தை
மாவலி இடை சென்று கேள் } மஹாபலியிடம்போய் கேட்டுக்கொள்;

('இப்படியுள்ளவன்விஷயத்தில்)
சிறுமை - சிறுமைநினைத்தவிது
பிழை கொள்ளில் - மஹாபராதம்' என்றுல்
(அப்போது,) நீயும்-
உன் தேவைக்கு - (அவன்விஷயத்தில்) நீ பண்ணக்கடவ தாஸ்யத்துக்கு
உரிமை - தகுந்தவனாவாய்;
(அதெல்லாமப்படிநிற்க;)
நெடு மால் - ஸர்வஸ்மாத்பரனான இவன்
விரைந்து உன்னை கூவுகின்றான்—.
['மகிழ்ந்து ஓடிவா' என்று வருவிக்க.]

குறிப்பு:—வார்த்தை-வடசொல்திரிபு; "வார்தா ப்ரவ்ருத்திர் வ்ருத்தாந்த:" என்றான் அமரஸிம்ஹன். மாவலி - மஹாபலி. இடை - ஏழாம் வேற்றுமையுருபு. மதி - அண்மைவிளி ... ... ... ... (௮)

தாழியில் வெண்ணெய் தடங்கை யார விழுங்கிய
பேழை வயிற்றெம் பிரான்கண்டா யுன்னைக் கூவுகின்றான்
ஆழிகொண் டுன்னை யெறியு மையுற வில்லைகாண்
வாழ வுறுதியேல் மாம திமகிழ்ந் தோடிவா. (௯)

மா மதி!—;
தாழியில் - தாழியிலே (சேமித்திருக்கிற)
வெண்ணெய் - வெண்ணெயை
தட - பெரிதான
கை ஆர - கைநிறைய (அள்ளி)
விழுங்கிய - அமுதுசெய்த
பேழை வயிறு - பெருவயிற்றையுடையனான
எம் பிரான் - என்கண்ணபிரான்
உன்னை கூவுகின்றான்—;

(இப்படி அழைக்கச்செய்தேயும் நீவாராதிருந்தால், உன்தலையை அறுக்கைக்காக,)
ஆழிகொண்டு - திருவாழியாலே
உன்னை எறியும் - உன்னைவெட்டிவிடுவன்;
ஐயுறவு இல்லை - ஸம்சயமேயில்லை;
வாழ உறுதியேல் - வாழக்கருதினாயாகில்
மகிழ்ந்து ஓடி வா—.

குறிப்பு:—'பேழை' என்று பெட்டிக்கும் பேராதலால், வெளி உறிகளில் வைத்த வெண்ணெய்க்குப் பெட்டிபோன்ற வயிற்றையுடைய என்றும் பொருள் கொள்ளலாம்; உவமைத்தொகை. எறிதல் - அடித்தல், உதைத்தல், குத்தல், வெட்டல், வீசல். ஐயுறவு - ஸந்தேஹம்; 'உறு' என்ற துணைவினையையும், 'உ' என்ற விகுதியையும் பெற்ற தொழிற்பெயர்; 'ஐயமுறவு' என்பதன் தொகுத்தல். ... ... ... (௯)

மைத்தடங் கண்ணி யசோதை தன்மக னுக்கிவை
ஒத்தன சொல்லி யுரைத்த மாற்ற மொளிபுத்தூர்
வித்தகன் விட்டு சித்தன் விரித்த தமிழிவை
எத்தனை யுஞ்சொல்ல வல்ல வர்க்கிட ரில்லையே. (௧௦)

மை—அஞ்ஜனவர்ணமாய்
தட—விசாலமாயிருக்கின்ற
கண்ணி—கண்களையுடையளான
அசோதை—யசோதையானவள்
தன் மகனுக்கு—தன்மகனான கண்ணனுக்கு
ஒத்தன—[illegible] சொலவுக்கும் சேர
சொல்லி[illegible] திருப்பவழத்தைச்சொல்லி
உரைத்த—(சந்த்ரனைநோக்கிச்) சொன்ன
இவை மாற்றம்—இப்பாசுரத்தை
ஒளி—ப்ரகாசப்ரசுரமான

புத்தூர்—ஸ்ரீவில்லிபுத்தூரில் [illegible]
விட்டுசித்தன்—(மங்களாசாஸநம்) [illegible]
விட்டுசித்தன்—பெரியாழ்வாராலே
விரித்த—விரித்து அருளிச்செய்யப்பட்ட
தமிழ்—த்ராவிட பாஷாரூபமான
இவை—இப்பாசுரங்கள்பத்தையும்
எத்தனையும்—ஏதேனுமொருபடியாக
சொல்ல வல்லவர்க்கு—ஓதவல்லவர்களுக்கு
இடர் இல்லை—துன்பமொன்றுமில்லை.
[ஏ—தேற்றம்]

குறிப்பு:—கண்ணி = இ - பெண்பால் விகுதி. ஒத்தன - [[illegible]] எத்தனையும் - அவிச்வாஸ பூர்வகமாகச் சொல்லினு மமையுமென்க. "எங்ஙனே சொல்லினுமின்பம் பயக்குமே" என்றாற்போல. ... ... ... ... ... (௧0)

அடி:—தன் என் சுற்றும் சக்கரம் அழகிய தண்டு பாலகன் சிறியன் தாழி மை உய்ய.

நாலாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## அஞ்சாந்திருமொழி.

## உய்யவுலகு.

—ooo—

அவதாரிகை:—கண்ணபிரானுடைய பருவத்துக்கீடாக அவன் செங்கீரையாடு கிறபடியைக் காணவிரும்பி, அவனைப் பலபடி புகழ்ந்து 'எனக்காக ஒருகால் செங்கீரை யாடவேணும்' என்று பலகாலும் அபேக்ஷித்து அந்தச்சேஷ்டிதரஸத்தை யசோதைப்பிராட்டி அநுபவித்தபடி, ஆழ்வார் தாமும் தத்காலம்போலே அநுபவித்து அவள் பேசினாற்போலேபேசி இனியராகிறார் - உய்யவுலகில்.

கண்ணபிரானை ஸ்தோத்ரபூர்வகமாகச் 'செங்கீரையாடவேணும்' என்று பலகால் வேண்டுகையும், அந்த சேஷ்டிதங்களை அநுபவிக்கையுமே - யசோதைப்பிராட்டி யோடு இவ்வாழ்வாருக்கு ஸாம்யம்; மயர்வறமதிநல மருளப்பெற்றவராகையாலே எம்பெருமான் படிகளடங்கலும் ஆழ்வாருக்கு நன்றாக ப்ரகாசிக்கையாலே [illegible] யத்தாலே அவதாராந்தர சேஷ்டிதங்களையும், இவ்வவதாரந்தன்னிலே உத்தரகால சேஷ்டித விசேஷங்களையும், பரத்வாதிகளிலுண்டானபடிகளையும், உகந்தருளின நிலங்களில் நிலையில் தோற்றுகிற குணவிசேஷங்களையுமெல்லாம் தம்முடைய ப்ரேமாதிசயத்தாலே இவ்வஸ்துவுக்கு விசேஷணமாக இட்டுச் சொல்லி புகழ்ந்து அந்த சேஷ்டித ரஸத்தை அநுபவிக்கை - இவ்வாழ்வாருக்கு விசேஷம்.

உய்ய வுலகுபடைத் துண்ட மணிவயிறு
ஊழி தோறூழிபல வாலி னிலையதன்மேல்
பைய வுயோகுதுயில் கொண்ட பரம்பரனே
பங்க யநீணயனத் தஞ்ச னமேனியனே
செய்ய வளின்னகலஞ் சேம மெனக்கருதிச்
செல்வு பொலிமகரக் காது திகழ்ந்திலக
அய்ய வெனக்கொருகா லாடு கசெங்கீரை
ஆயர் கள்போரேறே யாடு கவாடுகவே. (க)

உய்ய-(ஆத்மாக்கள்) உஜ்ஜீவிக்கைக்காக
உலகு-லோகங்களை
படைத்து-ஸ்ருஷ்டித்து,
(பின்புப்ரளயம்வந்தபோது,-அவற்றை)
உண்ட-உள்ளேவைத்துரக்ஷித்த .[னே !
மணி வயிறு - அழகியவயிற்றையுடையவ
பல் ஊழி ஊழி தொறு-பலகல்பங்கள்தோ
[றும்
ஆலின் இலை அதன்மேல்-ஆலிலையின்மே
பைய-மெள்ள [ல்
உயோகு } யோகநித்ரை செய்தரு
துயில்கொண்ட } ளின
பரம்பரனே-பரப்மாத்பரனானவனே !
பங்கயம்-தாமரைமலர்போன்று
நீள்-நீண்டிருக்கின்ற
நயனம்-திருக்கண்களையும்
அஞ்சனம்-மைபோன்ற
மேனியனே-திருமேனியையுமுடைய ஸர்
[வேச்வரனே !
செய்யவள்-செந்தாமரைமலரிற்பிறந்த
[பிராட்டிக்கிருப்பிடமான

நின் அகலம்-உன் திருமார்வானது
(இந்தநர்த்தநத்தால் அசையாமல்)
சேமம் என } ரக்ஷையை உடைத்தாகவே
கருதி } ணுமென்று நினைத்துக்
[கொண்டு,
செல்வு பொலி - ஐச்வர்யஸம்ருத்திக்கு
[ஸூசகங்களான
மகரம்-திருமகரக்குழைகளோடுகூடின
காது-திருக்காதுகளானவை
திகழ்ந்து இலக-மிகவும்விளங்கும்படி,
அய்ய-ஆர்யனே !
எனக்கு-எனக்காக
ஒருகால்-ஒருவிசை
செங்கீரை ஆடுக-செங்கீரையாடியருள
[வேணும் ;
ஆயர்கள்-இடையர்களுக்குவிதேயனாய்
போர் } யுத்தோந்முகமான ரிஷபம்போ
ஏறே } லே செருக்கியிராநின்றகண்ண
ஆடுக ! ஆடுக !!—. [னே !
[ஏ-ஈற்றசை.]

குறிப்பு:—மணி - அழகுக்கும்பேர்; [“மணி நவமணியே கண்டை வனப்போடு கருமை நன்மை” என்று நிகண்டு.] பைய - ஆலந்தளிர் அசையாதபடி. உயோகு - 'யொம' மென்னும் வடசொல் விகாரம். பரம்பரன்- பரத்வத்துக்கு எல்லை நிலமாயிருப்பவன்; 'பரபரன்' என்று வடசொல். பங்கயம் - பங்கஜம். [செய்யவளித்யாதி.] செங்கீரையாடும்போது, பெரிய பிராட்டியார்க்கு உறைவிடமாகிய திருமார்பானது அசையாமல் க்ஷேமமாயிருக்கவேணு மென்னுந் திருவுள்ளத்துடனே ஆடவேணுமென்று வேண்டுகிறபடி. சேமம் - க்ஷேமம். செல்வு - ஐஶ்வர்யம் ஒருவரிடத்தும் நிலைத்து நில்லாமல் இங்குமங்கும் செல்கையையே இயல்வாக உடைத்தாயிருக்குமிறே; 'உ' விகுதிபெற்ற தொழிலாகுபெயர். திகழ்ந்திலக - ஒருபொருட் பன்மொழி. 'செங்கீரை - “தாய்மார் முதலானார், பிள்ளைகளைத் தாங்களே அசைத்தாடுவிப்பதொரு நர்த்தந விசேஷம்” என்றுரைப்பர் - பெரியஜீயர்;

"பிள்ளைகள் இருவரையும் முழந்தாள்களும் மூன்றித் தலைமிர்த்தியாடல்" என்றுரைத்தான் - ஒருதமிழன்; 'பிள்ளைகளுடைய ந்ருத்தவிசேஷங்களிலே 'செங்கீரை' என்று ஒரு துறையுண்டு - தமிழர் சொல்லுவது, அதாதல்; அன்றிக்கே, 'கீர்' என்று பாட்டாய், அதுக்கு நிறம் சிவப்பாகி, பாட்டுக்குத்தகுதியாக ஆடு என்று நியமிக்கிறாராதல்" என்றுரைப்பர் - திருவாய்மொழிப்பிள்ளை. போரேறு - முற்றுவமை. ... ... (௧)

கோளரியின்னுருவங் கொண்டவுணன்னுடலங்
குருதி குழம்பியெழக் கூருகிராற்குடைவாய்
மீளவவன்மகனை மெய்ம்மைகொளக்கருதி
மேலையமரர்பதி மிக்குவெகுண்டுவரக்
காளநன்மேகமவை கல்லொடுகார்பொழியக்
கருதிவரைக்குடையாக் காலிகள்காப்பவனே
ஆளவெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (௨)

கோள்—மிடுக்கையுடைய
அரியின்—(நர) சிங்கத்தின்
உருவம் கொண்டு—வேஷங்கொண்டு
அவுணன்—ஹிரண்யனுடைய
உடலம்—சரீரத்தில்
குருதி—ரத்தமானது
குழம்பி எழ—குழம்பிக் கிளரும்படியாகவும்
அவன்—அவ்வஸுரனுடைய
மீள—மறுபடியும்
மகனை—தன் மகனைப்ப்ரஹ்லாதனை
மெய்ம்மை கொள கருதி—ஸத்யவாதி யென்று நினைக்கும்படியாகவும் திருவுள்ளம்பற்றி
கூர் உகிரால்—கூர்மையான நகங்களாலே
குடைவாய்—(அவ்வசுரனுடலைக்) கிழித்தருளினவனே!,
மேலை—மேன்மைபொருந்திய
அமரர் பதி—தேவேந்த்ரன்
மிக்கு வெகுண்டு வர—மிகவுங் கோபித்து வந்தவளவிலே
காளம்—கறுத்தவையாயும்
நல்—நன்மையுடையவையுமான
மேகம் அவை—மேகங்களானவை
கல்லொடு—கல்லோடுகூடின
கார் பொழிய—வர்ஷத்தைச்சொரிய,
கருதி—('இம்மலையே உங்களுக்கு ரக்ஷகம், இச்சோற்றை இதுக்கிடுங்கோள்' என்று முன்பு இடையர்க்குத்தான் உபதேசித்ததை) நினைத்து
வரை—(அந்த) கோவர்த்தநகிரியை
குடையா—குடையாகக்கொண்டு
காலிகள்—பசுக்களை
காப்பவனே—ரக்ஷித்தருளினவனே!
ஆள—(இப்படி ரக்ஷிக்கைக்குருப்பான) ஆண்பிள்ளைத்தனமுடையவனே!
எனக்கு.........பூர்வவத்.

குறிப்பு:—அரி - 'ஹரி' என்ற வடசொல் திரிபு. உருவம் - ரூபம். உடலம்—அம் - சாரியை. குருதி - 'ருதிரம்' என்னும் வடசொல் மரூஉ. [மீளவித்யாதி] 'தூணிலுமிருப்பன் துரும்பிலுமிருப்பன்' என்று மகன் சொல்லிற்றை ஹிரண்யனுக்கு மெய்ப்பிக்கைக்காகத் தூணில் தோன்றி உரத்தைக்கிழித்தான். [மேலையித்யாதி.] இடையர் இந்திரனுக்கிடக்கடவ சோற்றைக் கண்ணபிரான் விலக்கி மலைக்கு இடுவித்தமையால் இந்திரன் சீறி மேகங்களை ஏவி ஏழுநாள் விடாமழைபெய்விக்க, கண்ணபிரான் கோவர்த்தநமலையைக் குடையாக வெடுத்துக் காத்தருளின தன்மையையுணர்க.

நம்மு டைநாயகனே நான்ம றையின்பொருளே
　நாவி யுணற்கமல நான்மு கனுக்கொருகால்
தம்ம னையானவனே தரணி தலமுழுதுந்
　தார கையின்னுலகுந் தடவி யதன்புறமும்
விம்ம வளர்ந்தவனே வேழ முமேழ்விடையும்
　விரவி யவேலைதனுள் வென்று வருமவனே
அம்ம வெனக்கொருகா லாடு கசெங்கீரை
　ஆயர் கள்போரேறே ஆடு கவாடுகவே. (ரு)

நம்முடை—உங்களுக்கு
நாயகனே—நாதனானவனே!
நால் மறையின்—நாலுவேதங்களுடைய
பொருளே—பொருளாயிருப்பவனே!
நாவியுள்—திருநாபியில் முளைத்திரா நின்ற
நல் கமலம்—நல்தாமரைமலரிற்பிறந்த
நான்முகனுக்கு—ப்ரஹ்மாவுக்கு,
ஒருகால்—(அவன்) வேதத்தைப்பறிகொடுத்
　[துத் திகைத்தகாலத்தில்
தம்மனை ஆனவனே—தாய்போலேபரிவனு
　[னவனே!
தரணிதலம் முழுதும்—பூமியடங்கலும்
தாரகையின் உலகும்—நக்ஷத்ரலோக மடங்
　[கலும்
தடவி—திருவடிகளால் ஸ்பர்சித்து
அதன் புறமும்— அதற்குப்புறம்பாயுள்ள
　[தேசமும்
விம்ம—(எங்குமொக்கப்) பூர்ணமாம்படி
வளர்ந்தவனே — த்ரிவிக்ரமனாய் வளர்ந்த
　[வனே!
வேழமும்—குவலயாபீடமென்ற யானையும்
ஏழ்விடையும்—ஏழுரிஷபங்களும்
விரவிய — (உன்னை ஹிம்ஸிப்பதாக) உன்
　[னோடேவந்துகலந்த
வேலைதனுள்—ஸமயத்திலே
வென்று—(அவற்றை) ஜயித்து
வருமவனே—(வீர ஸ்ரீதோற்ற) வந்தவனே!
அம்ம—ஸ்வாமியானவனே!
எனக்கு......பூர்வவத்.

குறிப்பு:—நம்முடை - 'உடைய' என்ற எழுத்துருபின், ஈற்றுயிர்மெய் கெட்டது. நாயகன் - வடசொல். நான்குமறையாவன - ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம், இவற்றுக்குப்பொருள் எம்பெருமானிறே. நாவி- நாபி:. [ஒருகால் இத்யாதி.] எம்பெருமானிடத்துப் பெற்ற வேதங்களை மது கைடபர்களென்னு மசுர ரிருவர்கையிலே பறிகொடுத்துத் திகைத்து நின்ற பிரமனுக்கு அவற்றை மீட்டுக்கொடுத்தா னெம்பெருமானிறே. தம்மனை = தம் அன்னை; தொகுத்தல். தரணிதலம் - தாரணிதலம். தாரகை - வட சொல் திரிபு. ஏழ்விடையும் வென்றகதை:—கண்ணபிரான், நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம்புணர, அவள் தந்தையின் ஏற்பாட்டின்படி, யாவர்க்கு மடங்காத அஸுராவிஷ்டமான ஏழெருதுகளையும் ஏழுதிருவுருக் கொண்டு சென்று வென்று வலியடக்கித் தழுவினனென்பது. விரவுதல் - கலத்தல். வேலை - வேளை. ... ... ... ... (ரு)

வான வர்தாம்மகிழ வன்ச கடம்முருள
　வஞ்ச முலைப்பேயின் நஞ்ச முதுண்டவனே
கான கவல்விளவின் காயு திர்க்கருதிக்
　கன்று துகொண்டெறியுங் கருநி றவென்கன்றே

தேனு கனும்முர னுந் திண்டி றல்வெந்நரக
னென்ப வர்தாம்மடியச் செருவ திரச்செல்லு
மானை யெனக்கொருகா லாடு கசெங்கீரை
ஆயர் கள்போரேறே யாடு கவாடுகவே. (௫)

வானவர்தாம்—தேவர்கள்
மகிழ—மகிழும்படியாகவும்
வல் சகடம்—வலிவுள்ள சகடாஸுரன்
உருள—உருண்டு உருமாய்ந்துபோம்படியாகவும்
வஞ்சம்—வஞ்சனையையுடையளான
பேயின்—பூதனையினுடைய
முலை—முலைமேல் தடவிக்கிடந்த
நஞ்சு—விஷத்தை
அமுது உண்டவனே } அம்ருதத்தை அமுதுசெய்யுமாபோலே அமுதுசெய்தருளினவனே!
கானகம்—காட்டிலுள்ள
வல்—வலிமைபொருந்திய
விளவின்—விளாமரத்தினுடைய
காய்—காய்களானவை
உதிர—உதிரும்படி
கருதி—திருவுள்ளத்திற்கொண்டு
கன்று அதுகொண்டு } கன்றான அந்த வத்ஸாஸுரனைக் கையில்கொண்டு
எறியும்—(விளவின்மேல்) எறிந்தவனாய்
கரு நிறம்—கறுத்தநிறத்தையுடையனாய்
என் கன்றே—என்னுடைய கன்றானவனே!
தேனுகனும்—தேனுகாஸுரனும்
முரனும்—முராஸுரனும்
திண் திறல்—திண்ணியவலிவையுடையனாய்
வெம்—கொடுமையுமுடையனான
நரகன்—நரகாஸுரனும்
என்பவர்தாம்—என்றிப்படி சொல்லப்படுகிற இப்பப்பூடுகளடங்கலும்
மடிய—மாளும்படியாக
செரு—யுத்தத்திலே
அதிர—மிடுக்கையுடையவனாய்க்கொண்டு
செல்லும்—எழுந்தருளுமவனான
ஆனை—ஆனைபோன்ற கண்ணனே!
எனக்கு......பூர்வவத்.

?ப்பு:—"நஞ்சமதுண்டவனே" என்றும் பாடமுண்டு; முலையில் தடவிக்கிடந்த அந்தக் கொடிய விஷத்தை உண்டவனே! என்றுபொருளாம். [கானகமித்யாதி.] விளாமரமாய் நின்ற ஓரஸுர [கபித்தாஸுர]ன் மீது, கன்றாயிருந்த ஓரஸுர [வத்ஸாஸுர]னை விட்டெறிந்து இரண்டையுஞ்சேர முடித்தருளினானிறே. கன்றே! - இளமையைச்சொன்னபடி; உவப்பினால் உயர்திணை அஃறிணையாயிற்று; திணைவழுவமைதி. தேனுகன் - தேநுகஸ். இவன், கழுதையான வடிவைக்கொண்டு காட்டுக்குள்ளே கண்ணனை நலிவதாக வந்தவன். இவ்விவரம்:—கண்ணபிரான் பலராமனோடும் ஆயர்சிறுவர்களோடும் மாடுமேய்த்துக்கொண்டு, பழங்கள் அழகாக மிகுதியாய்ப் பழுத்து வாசனைவீசிக்கொண்டிருந்த ஒருபனங்காட்டையடைந்து, அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக் கொண்டுவருகையில், அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன்பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங்கொண்ட தேனுகாசுரன் கோபமுண்டு ஓடிவந்து எதிர்த்துப்போர்செய்ய, உடனே கண்ணன் அதிலாகவமாய்ப் பின்னங்காலிரண்டையும்பற்றி அவ்வசுரக்கழுதையைச் சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின்மேலெறிந்து அழித்தனனென்பதாம். முரனையும், நரகனையும் மடித்தவிவரம்:—எம்பெருமான் வராஹாவதாரம்செய்து, பூமியைக்கோட்டாற்குத்தியெடுத்தபொழுது, எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும், அஸமயத்தில் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை

பூண்டவனுமான நரகனென்பவன், ப்ராக்ஜ்யோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகலப்ராணிகளையும் நலிந்து, தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும், ராஜாக்களுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம்புணர்வதாகக் கருதித் தன்மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும், மந்தரகிரிசிகரமான ரத்நபர்வதத்தையும், தேவர்தாயான அதிதிதேவியின் குண்டலங்களையுங் கவர்ந்துபோனதுமன்றி, இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டுபோகச் சமயம்பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால், கண்ணபிரான், கருடனை வரவழைத்து, பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன் மேலேறி அந்நகரத்தையடைந்து சக்ராயுதத்தை ப்ரயோகித்து, அவன் மந்த்ரியான முரன்முதலிய பல அஸுரர்களையும், இறுதியில் அந்நரகாஸுரனையும் அறுத்துத்தள்ளி அழித்து, அவன் பலதிசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொருநூறு கன்னிகைகளையும் த்வாரகையிற் கொண்டுசேர்த்து மணஞ்செய்துகொண்டனனென்பதாம். ஆனை - முற்றுவமை; அண்மைவிளி. (௬)

மத்த ளவுந்தயிரும் வார்கு ழனன்மடவார்
வைத்த னநெய்களவால் வாரி விழுங்கியொருங்
கொத்த விணைமருத முன்னி யவந்தவரை
யூரு கரத்திணொடு முந்தி யவெந்திறலோய்
முத்தி னிளமுறுவல் முற்ற வருவதன்முன்
முன்ன முகத்தணியார் மொய்கு ழல்களலைய
அத்த வெனக்கொருகா லாடு கசெங்கீரை
ஆயர் கள்போரேறே யாடு கவாடுகவே. (௭)

வார் குழல்-நீண்ட மயிர்முடியையுடைய [ராய்
நல் மடவார்-நன்மையையும்மடப்பத்தையு [முடையரான ஸ்த்ரீகளாலே
வைத்தன-சேமித்துவைக்கப்பட்டவையா [ய்
மத்து-மத்தாலே
அளவும்-அளாவிக்கடைகைக்கு உரிய
தயிரும்-தயிரையும்
நெய்-நெய்யையும்
களவால்-திருட்டுவழியாலே
வாரி-கைகளால் அள்ளி
விழுங்கி-வயிறார உண்டு,
உன்னிய-உன்னை நலியவேணுமென்னும் [நினைவையுடையராய்
ஒருங்கு-ஒருபடிப்பட
ஒத்த-மனம் ஒத்தவர்களாய்
இணை மருதம்-இரட்டைமருதமரமாய்க் [கொண்டு
வந்தவரை-வந்துநின்ற அஸுரர்களை
ஊரு கரத்தினொடும்-தொடைகளாலும் கை [களாலும்
உந்திய-இரண்டுபக்கத்திலும் சரிந்துவிழு [ம்படிதள்ளின
வெம் திறலோய்-வெவ்வியவலிவையுடை [யவனே!
அத்த-அப்பனே!
முத்து-திருமுத்துக்கள் (தோன்றும்படி)
இன்-இனிதான
இள முறுவல்-மந்தஹாஸமானது
முற்ற-பூர்ணமாக
வருவதன் முன்-வருவதற்குமுன்னே
முன்னம் முகத்து-முன்முகத்திலே
அணி ஆர்-அழகுமிகப்பெற்று
மொய்-நெருங்கியிராநின்ற
குழல்கள்-திருக்குழல்களானவை
அலைய-தாழ்ந்து அசையும்படி
எனக்கு...பூர்வவத்.

குறிப்பு:—பம்மர்சலு ஈகவுருத்தரத்தம் ஐபாவைத்திற்கு ஆசியபடி ஷேற்றவிடத்தில் குறிக்கப்பட்டது; அந்த ப்ரக்ரியைக்கும் இப்பாட்டின் உரையிலும், பெரியஜீயர் உரையிலுமுள்ள இன்ற ப்ரக்ரியைக்கும் வைஷம்யங்காணப்படும்; ஆயினும், புராணபேதங்கொண்டாவது, யுகபேதங்கொண்டாவது வைஷம்யத்தைச் சமிப்பித்துக்கொள்ளுக. மேல், "பொய்ம்மாய மருதானவசுரரை" என்று மருளிச்செய்வர்; சாபத்தாலே மாமாய்நின்ற வற்றிலே இரண்டு அஸுரர்கள் ஆவேசித்தனரென்னலாம். ஊரு,கரம்-வடசொற்கள். திறலோய் -'திறலோன்' என்பதின் ஈறுதிரிந்தவிளி; "ஆ ஓவா கனும் செய்புளுரித்தே" என்ற சூத்திரமறியத்தக்கது. திருப்பற்களை 'முத்து' என்கை - பரிபாஷை; ஆகுபெயருமாம். (௭)

காய மலர்நிறவா கருமு கில்போலுருவா
கான கமாமடுவிற் காளி யனுச்சியிலே
தூய நடம்பயிலுஞ் சுந்த ரவென்சிறுவா
துங்க மதக்கரியின் கொம்பு பறித்தவனே
ஆய மறிந்துபொரு வானெ திர்வந்தமல்லை
அந்த ரமின்றியழித் தாடி யதாளிணையாய்
ஆய வெனக்கொருகா லாடு கசெங்கீரை
ஆயர் கள்போரேறே யாடு கவாடுகவே. (௮)

காயமலர்–காயாம்பூப்போன்ற
நிறவா–திருநிறத்தையுடையவனே !
கரு முகில் போல்–காளமேகம்போன்ற
உருவா–ரூபத்தையுடையவனே !
கானகம்–காட்டிலே
மா மடுவில்–பெரியமடுவினுள்ளேகிடந்த
காளியன்–காளியநாகத்தினுடைய
உச்சியிலே–தலையின்மீது
தூய–மநோஹரமான
நடம்–ந்ருத்தத்தை
பயிலும்–செய்தருளின
சுந்தர–அழகையுடையவனே !
என் சிறுவா–எனக்குப்பிள்ளையானவனே!
துங்கம்–அத்யுந்நதமாய்
மதம்–மதத்தையுடைத்தான
கரியின்–குவலயாபீடத்தினுடைய
கொம்பு–தந்தங்களை
பறித்தவனே–முறித்தருளினவனே !
ஆயம் அறிந்து } மல்லயுத்தம்செய்யும் வகையறிந்து
பொருவான்–யுத்தம்செய்வதற்காக
எதிர்வந்த–எதிர்த்துவந்த
மல்லை–மல்லர்களை
அந்தரம் இன்றி–(உனக்கு) ஒரு அபாயமுமில்லாதபடி
அழித்து–த்வம்ஸம்செய்து
ஆடிய–(இன்னம்வருவாருண்டோ என்று) கம்பீரமாய்ஸஞ்சரித்த
தாள் இணையாய்–திருவடிகளையுடையவனே!
ஆய–ஆயனே !
எனக்கு...பூர்வவத்.

குறிப்பு:—துங்கமதக்கரி - வடசொற்றொடர். ஆயம்–சூதுக்கும் பேராகையாலே சூதுவழி யறிந்து போர்செய்யவந்த மல்லரையென்றுமுரைக்கலாம். பொருவான் - போர்செய்வதற்கு; வான் - விகுதி; அன்றிக்கே, ஆன் - வினையெச்சவிகுதி, வ் - எதிர்கால இடைநிலை என்பது ஒரு சாரார்கொள்கை. (௮)

துப்பு டையாயர்கள்தம் சொல்வ ழுவாதொருகால்
தூய கருங்குழனற் றோகை மயிலனைய
நப்பி னைதன்திறமா நல்வி டையேழவிய
நல்ல திறலுடைய நாத னுமானவனே
தப்பி னபிள்ளைகளைத் தனமி குசோதிபுகத்

அப்ப வெனக்கோருகா லாடு கசெங்கீரை
ஆயர் கள்போரேறே யாடு கவாடுகவே. (எ)

துப்பு உடை—மிடுக்கையுடையரான
ஆயர்கள் தம்—இடையர்களுடைய
சொல்—வார்த்தையை
வழுவாது—தப்பாமல்
ஒருகால்—ஒருகாலத்திலே
தூய—அழகியதாய்
கரு—கறுத்திராநின்றுள்ள
குழல்—கூந்தலையுடையளாய்,
நல் தோகை—நல்லதோகையையுடைய
மயில் அனைய—மயில்போன்றசாயலையுடை [யளான
நப்பினை தன் திறமா—நப்பின்னைப்பிராட் [டிக்காக
நல்—(கொடுமையில்) நன்றான
விடை ஏழ்—ரிஷபங்களேழும் [பான]
அவிய—முடியும்படியாக [ழ்முடிவுக்குறப்
நல்ல திறல் உடைய } நன்றான மிடுக்கையுடைய [னாய்

நாதன் ஆனவனே—அவ்விடையர்களுக்கு [ஸ்வாமியானவனே!
தப்பின—கைதப்பிப்போன
பிள்ளைகளை—வைதிகன்பிள்ளைகளை,
தன—தன்னுடைய
மிகு சோதி—நிரவதிக தேஜோரூபமா [னபரமபதத்திலே
புக—செல்லும்படியாக
தனி—தனியே
ஒரு—ஒப்பற்ற
தேர்—தேரை
கடவி—நடத்தி
(அங்குநின்றும் பிள்ளைகளைக்கொணர்ந்து)
தாயொடு கூட்டிய—தாயோடுகூட்டின
என் அப்ப—என் அப்பனே!
எனக்கு...பூர்வவத்.

குறிப்பு:—'நாதனும்' என்றவிடத்து, உம்மை • இசைநிறையென்னலாம். [தப்பினபிள்ளைகளை இத்யாதி.] ஒரு ப்ராஹ்மணனுக்கு முறையே பிறந்த மூன்றுபிள்ளைகள் பிறந்த அப்பொழுதே பெற்றவளுமுட்பட முகத்தில்விழிக்கப் பெறாதபடி இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே நான்காம்பிள்ளையை ஸ்த்ரீ ப்ரஸவிக்கப் போகின்றவளவிலே, அந்த அந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒருபிள்ளையையாயினும் தேவரீர்பாதுகாத்துத் தந்தருளவேண்டும்' என்று ப்ரார்த்திக்க, கண்ணன் 'அப்படியே செய்கிறேன்' என்று அநுமதி செய்தபின்பு, ஒருயாகத்தில் தீக்ஷிதனாயுள்ள கண்ணபிரான் எழுந்தருளக் கூடாதென்பதுபற்றி அர்ஜுநன் 'நான்போய் ரக்ஷிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞைசெய்து ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய் ப்ரஸவக்ருஹத்தைச் சுற்றும் காற்றுமுட்பட ப்ரவேசிக்கவொண்ணாதபடி சரக்கூடங்கட்டிக் காத்துக்கொண்டு நிற்கையில், பிறந்தபிள்ளையும் வழக்கப்படி பிறந்தவளவிற்காணவொண்ணாது போய்விடவே, ப்ராஹ்மணன்வந்து அர்ஜுநனைமதித்து 'க்ஷத்ரியாதம! உன்னாலன்றோ என்பிள்ளை போம்படியாயிற்று; கண்ணன் எழுந்தருளிக் காப்பதை நீயன்றோ கெடுத்தாய்' என்று

கிருத்து; கண்ணன் பக்கலிலே இழுத்துக்கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனைவிடு, உனக்குப்பிள்ளை நான்கொணர்ந்து தருகிறேன்' என்றருளிச்செய்து, ப்ராஹ்மணனையும் அர்ஜுநனையும் தன்னுடன்கொண்டு தேரிலேறி அர்ஜுநனைத் தேர்செலுத்தச்சொல்லி அத்தேர்க்கும் இவர்கட்கும் திவ்யசக்தியைத் தன்ஸங்கல்பத்தால் கல்பித்து இவ்வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவுங் கொண்டுபோய் அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தேஜோரூபமான பரமபதத்திலே-தன்னில மாகையாலே தானே போய்ப்புக்கு, அங்கு நாய்ச்சிமார் தங்கள்ஸ்வாதந்த்ர்யங் காட்டுகைக் காகவும், கண்ணபிரானுடைய திவ்யஸௌந்தர்யத்தைக் கண்டு களிக்கைக்காகவும் அழைப்பித்துவைத்த அந்தப்பிள்ளைகள் நால்வரையும் அங்குநின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங்குலையாமற் கொண்டுவந்து கொடுத்தருளினனென்ற வரலாறு அறிக. தப்பினபிள்ளைகளைத் தாயொடு கூட்டிய என்று இயையும். "தனிமிகுசோதிபுக" என்ற அத்யாபகபாடத்தை மறுக்க. ... ... ... ... ... ... (எ)

உன்னை யுமொக்கலையிற் கொண்டு தமில்மருவி
யுன்னொ டேதங்கள்கருத் தாயி னசெய்துவருங்
கன்னி யரும்மகிழக் கண்ட வர்கண்குளிரக்
கற்ற வர்தெற்றிவரப் பெற்ற வெனக்கருளி
மன்னு குறுங்குடியாய் வெள்ள றையாய் மதிள்சூழ்
சோலை மலைக்கரசே கண்ண புரத்தமுதே
என்ன வலங்களைவா யாடு கசெங்கீரை
ஏழு லகும்முடையா யாடு கவாடுகவே. (அ)

மன்னு - (ப்ரளயத்துக்குமழியாமல்) பொருந்தியிருக்கக்கடவ
குறுங்குடியாய் - திருக்குறுங்குடியிலே எழுந்தருளியிருக்குமவனே!
வெள்ளறையாய் - திருவெள்ளறையிலே வர்த்திக்குமவனே!
மதிள் சூழ் - மதிளாலேசூழப்பட்ட
சோலைமலைக்கு - திருமாலிருஞ்சோலை மலைக்கு
அரசே - அதிபதியானவனே!
கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே நிற்கிற
அமுதே - அம்ருதம்போன்றவனே!
என் அவலம் - என் துன்பங்களை
களைவாய் - நீக்குமவனே!
உன்னை - (மநோஹரனான) உன்னை
ஒக்கலையில் - இடுப்பிலே
கொண்டு - எடுத்துக்கொண்டு
தம் இல் - தங்கள் அகங்களிலே
மருவி - சேர்ந்து
உன்னொடு - உன்னோடு
தங்கள் - தங்களுடைய
கருத்து ஆயின செய்து - நினைவுக்குத்தக்கபடி பரிமாறி
வரும் - மறுபடியுங் கொண்டுவாராநிற்கிற
கன்னியரும் - இளம்பெண்களும்
மகிழ - (இச்செங்கீரையைக்கண்டு) ஸந்தோஷிக்கும்படியாகவும்
கண்டவர் -(மற்றும்)பார்த்தவர்களுடைய
கண் - கண்களானவை
குளிர - குளிரும்படியாகவும்
கற்றவர் - (கவிசொல்லக்) கற்றவர்கள்
தெற்றி வர - பிள்ளைக்கவிகள் தொடுத்துவரும்படியாகவும்,
பெற்ற - உன்னைமகனாகப்பெற்ற
எனக்கு - என்விஷயத்திலே
அருளி - க்ருபைசெய்து
செங்கீரை ஆடுக—;
ஏழ் உலகும் - ஸப்தலோகங்களுக்கும்
உடையாய் - ஸ்வாமியானவனே!
ஆடுக ஆடுக

குறிப்பு:—உன்னையும் = உம்மை - இசைநிறை. தங்கள் கருத்தாயின செய்கையாவது - தழுவிமுழுசி உச்சிமோந்து முத்தமிடுகை முதலியன செய்கை. ... ... ... ... ... ... ... (அ)

பாலொ டுநெய்தயிரொண் சாந்தொ டுசெண்பகமும்
பங்க யநல்லகருப் பூர முநாறிவரக்
கோல நறும்பவளச் செந்து வர்வாயினிடைக்
கோம ளவெள்ளிமுளைப் போல்சி லபல்லிலக
நீல நிறத்தழகா ரைம்ப டையின்நடுவே
நின்க னிவாயமுத மிற்று முறிந்துவிழ
ஏலு மறைப்பொருளே யாடு கசெங்கீரை
ஏழு லகுமுடையா யாடு கவாடுகவே. (கூ)

ஏலும் - தகுதியான
மறை - வேதத்தினுடைய
பொருளே - அர்த்தமானவனே !
பாலொடு - பாலோடேகூட
நெய் - நெய்யும்
தயிர் - தயிரும்
(ஆகிய இவற்றைப்பலகால் அமுது செய்கையாலும்)
ஒண் சாந்தொடு - அழகிய சந்தநத்தோடு
செண்பகமும் - செண்பகம்முதலிய மலர்களும்
(ஆகிய இவற்றைப்பலகால் சாத்துகையாலும்)
பங்கயம் - தாமரையும்
நல்ல - உத்தமமான
கருப்பூரமும் - கர்ப்பூரமுமாகிய இவை
நாறி வர - கலந்துபரிமளிக்க,
கோலம் - அழகிய
நறு பவளம் - நற்பவளம்போல்
செம் - அழகியதாய்
துவர் - சிவந்திருக்கிற
வாயின் இடை - திருவதரத்தினுள்ளே
கோமளம் - இளையதான
வெள்ளி முளை போல் - வெள்ளிமுளை போலே
சில பல் - சிலதிருமுத்துக்கள்
இலக - விளங்க,
நீலம் நிறத்து - நீலநிறத்தையுடைத்தாய்
அழகு ஆர் - அழகுநிறைந்திராநின்ற
ஐம்படையின் நடுவே - பஞ்சாயுதத்தின் நடுவே
நின் - உன்னுடைய
கனி - கொவ்வைக்கனிபோன்ற
வாய் - அதரத்தில் ஊறுகின்ற
அமுதம் - அம்ருதஜலமானது
இற்று முறிந்து விழ - இற்றிற்று விழ
ஆடுக...பூர்வவத்.

குறிப்பு:—இற்று = இறு : பகுதி. இற்றுமுறிந்து - ஒருபொருட் பன்மொழி. ... ... ... ... ... ... ... (கூ)

செங்க மலக்கழலிற் சிற்றி தழ்போல்விரலிற்
சேர்தி கழாழிகளுங் கிண்கி ணியுமரையில்
தங்கி யபொன்வடமுந் தாள நன்மாதுளையின்
பூவொ டுபொன்மணியும் மோதி ரமுங்கிறியும்
மங்க லவைம்படையுந் தோள்வ ளையுங்குழையும்
மகர மும்வாளிகளுஞ் சுட்டி யுமொத்திலக
எங்கள் குடிக்கரசே யாடு கசெங்கீரை
ஏழு லகுமுடையா யாடு கவாடுகவே. (கం)

எங்கள் குடிக்கு - எங்கள் வம்சத்துக்கு
அரசே - ராஜாவானவனே!
செம் கமலம் - செந்தாமரைப்பூப்போன்ற
கழலில் - திருவடிகளில்
சிறு இதழ் போல் - (அந்தப்பூவினுடைய) [உள்ளிதழ்போலே சிறுத்திருக்கிற
விரலில் - திருவிரல்களில்
சேர் திகழ் - சேர்ந்து விளங்காநின்ற
ஆழிகளும் - திருவாழிமோதிரங்களும்
கிண்கிணியும் - சதங்கைகளும்
அரையில் தங்கிய - அரையில் சாத்தியி [ருக்கிற
பொன் வடமும் - பொன் அரைநாணும்
தாள - தாள்களையுடைத்தாய்
நல் - நல்லதான
மாதுளையின் பூவொடு - மாதுளம்பூவோடே
பொன் மணியும் - (நடுநடுவே கலந்துகோ [த்த) பொன்மணிக்கோவையும்
மோதிரமும் - திருக்கைமோதிரங்களும்
கிறியும் - (மணிக்கட்டில்சாத்தின) சிறுப் [பவளவடமும்
மங்கலம் - மங்களாவஹமான
ஐம்படையும் - பஞ்சாயுதமும்
தோள் வளையும் - திருத்தோள்வளைகளும்
குழையும் - ச்ரோத்ராபரணங்களும்
மகரமும் - மகரகுண்டலங்களும்
வாளிகளும் - (திருச்செவிமடல்மேல் சாத் [தின) வாளிகளும்
சுட்டியும் - திருநெற்றிச்சுட்டியும்
ஒத்து - அமைந்து
இலக - விளங்கும்படி

பூர்வவத். (௧௦)

**அவதாரிகை:**—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

அன்ன முமீனுருவு மாள ரியுங்குறளு
மாமை யுமானவனே யாயர் கணாயகனே
என்ன வலங்களைவா யாடு கசெங்கீரை
யேழு லகுமுடையா யாடு கவாடுகவென்
றன்ன நடைமடவா ளசோதை யுகந்தபரி
சான புகழ்ப்புதுவைப் பட்ட னுரைத்ததமிழ்
இன்னி சைமாலைகளிப் பத்தும்வல் லாருலகி
லெண்டி சையும்புகழ்மிக் கின்ப மதேய்துவரே. (௧௧)

அன்னமும் - "ஹம்ஸரூபியாயும்
மீன் உருவும் - மத்ஸ்யரூபியாயும்
ஆள் அரியும் - நரஸிம்ஹரூபியாயும்
குறளும் - வாமநரூபியாயும்
ஆமையும் - கூர்மரூபியாயும்
ஆனவனே - அவதரித்தவனே!
ஆயர்கள் - இடையர்களுக்கு
நாயகனே - தலைவனானவனே!
என் அவலம் - என் துன்பத்தை
களைவாய் - நீக்கினவனே!
செங்கீரை ஆடுக - செங்கீரை ஆடவேணு [ம்,
ஏழ் உலகும் - ஸப்தலோகங்களுக்கும்
உடையாய் - ஸ்வாமியானவனே!
ஆடுக ஆடுக என்று - பலகாலு மாடவே [ணும்" என்று,
அன்னம் நடை - ஹம்ஸகதியை யுடைய [ளாய்
மடவாள் - மடப்பத்தையுமுடையளான
அசோதை - யசோதைப்பிராட்டியாலே
உகந்த - உகந்துசொல்லப்பட்ட
பரிசு-ப்ரகாரத்தை,
ஆன - ஸம்ருத்தமான [நிறைந்த]
புகழ் - புகழையுடையரான
புதுவைப் பட்டன் - பெரியாழ்வார்
உரைத்த - அருளிச்செய்த
இன் இசை - இனிய இசையையுடைய
தமிழ் மாலைகள்—தமிழ்த்தொடைகளான
இ பத்தும் - இப்பத்துப்பாசுரங்களையும்
வல்லார் - ஓதவல்லவர்கள்
உலகில் - இந்தலோகத்தில்
எண் திசையும் - எட்டுத்திசைகளிலும்
புகழ் - கீர்த்தியையும் [(பரந்த)
மிகு இன்பமது—மிக்கஇன்பத்தையும்
எய்துவர் - பெறுவர்கள்.

குறிப்பு:—[அன்னமும்.] பிரமதேவனிடத்திலிருந்து வேதங்களைக் கொள்ளைகொண்டு கடலில்மூழ்கிமறைந்து உலகமெங்கும் பேரிருளை மூட்டி நலிந்த மதுகைடபர்களைக், கடலினுள்புக்குக் கொன்று வேதங்களை மீட்டுக்கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தவரலாறு அறிக. [மீனுருவும்.] பிரமதேவன்முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக்கொண்டிருந்த நான்கு வேதங்களையும் சோமுகனென்ற அசுரன் கவர்ந்துகொண்டு பிரளய வெள்ளத்தினுள் மறைந்து செல்ல, அதனையுணர்ந்து திருமால், ஒரு பெருமீனுகத்திருவவதரித்து அப்பெருங்கடலினுள்புக்கு அவ்வசுரனைத் தேடிப்பிடித்துக்கொன்று, முன்பு அவன் கவர்ந்துசென்றவேதங்களை மீட்டுக்கொணர்ந்து அவற்றைப்பிரமனுக்குக் கொடுத்தருளினனென்ற வரலாறுகாண்க. [ஆளரியும்] ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைப் பலபடிகளால் நலிந்த ஹிரண்யனைமுடிக்க நரஸிம்ஹரூபியாய் அவதரித்தகதை பிரசித்தம். [குறளும்.] மஹாபலியின் மிறுக்கைக்குலைப்பதற்காக வாமநவேஷம்பூண்டு யஜ்ஞவாடத்தேறச் சென்றவரலாறும் பிரசித்தம். [ஆமையுமானவனே!.] முன்னொருகாலத்தில் இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச்சென்று திருமகளைப்புகழ்ந்துபாடி அவளால் ஒருபூமாலைபிரஸாதிக்கப்பெற்ற ஒருவித்யாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன்கைவீணையில் தரித்துக்கொண்டு ப்ரஹ்மலோகவழியாய் மீண்டுவருகையில், துர்வாசமஹாமுனி எதிர்ப்பட்டு அவளைவணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன்பெருமையை உணர்ந்து அதனைச்சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆநந்தத்தோடு தேவலோகத்திற்குவருது, அப்பொழுது, அங்குவெகு உல்லாஸமாக ஐராவதயானையின்மேற் பவனிவந்துகொண்டிருந்த இந்திரனைக்கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால்வாங்கி அந்தயானையின்பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதவிலங்கு அதனைத் துதிக்கையாற்பிடித்து இழுத்துக்கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முனிவரன்கடுங்கோபங்கொண்டு இந்திரனைநோக்கி 'இவ்வாறு செல்வச்செருக்குற்ற நினது ஐஶ்வர்யங்களெல்லாம் கடலில ஒளிந்துவிடக்கடவன' என்றுஶபிக்க, உடனே தேவர்செல்வம்யாவும் ஒழிந்தன; ஒழியவே, அசுரர்வந்துபொருது அமரரைவெல்வாராயினர்; பின்பு இந்திரன் தேவர்களோடுதிருமாலைச் சரணமடைந்து, அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி, அசுரர்களையுந்துணைக்கொண்டு மந்தரமலையைமத்தாகநாட்டி, வாசுகியென்னும் மஹாநாகத்தைக்கடைகயிறாகப்பூட்டிப் பாற்கடலைக்கடையலாயினர்; அப்பொழுது, மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்கள் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின் கீழேசென்று அதனைத்தனது முதுகின்மீதுகொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமற் கடைதற்குஉபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனனென்பது பிரசித்தம். மிக்கின்பம்—தொகுத்தல்விகாரமெனக்கொண்டு, மிக்க + இன்பம், என்றுபிரிக்கலாம. ... ... ... ... (கக)

அஞ்சாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## ஆறுந்திருமொழி.

## மாணிக்கக்கிண்கிணி.



**அவதாரிகை:**—அநந்தரம், சப்பாணி கொட்டுதலாகிற சேஷ்டிதத்தை அநுபவிக்கக் கோலி, கண்ணபிரானை ப்ரார்த்தித்து, அந்தசேஷ்டித ரஸத்தை யசோதைப் பிராட்டி அநுபவித்தாப்போலே அநுபவித்து இனியராகிருர் - மாணிக்கக்கிண் கிணியில்.

மாணிக்கக் கிண்கிணி யார்ப்ப மருங்கின்மேல்
ஆணிப்பொன் ஞற்செய்த வாய்பொன் னுடைமணி
பேணிப் பவளவாய் முத்திலங் கப்பண்டு
காணிகொண்ட கைகளாற்சப் பாணி கருங்குழற் குட்டனே சப்பாணி. (க)

ஆணி பொன்ஞல் செய்த } மாற்றுயர்ந்த பொன் ஞல் செய்த
ஆய்–(வேலைப்பாட்டிற் குறைவில்லாதபடி) [ஆராய்ந்த
பொன் மணி–பொன்மணிக்கோவையை
உடை–உடைய
மருங்கின் மேல்–இடுப்பின்மேலே
மாணிக்கம் கிண்கிணி } (உள்ளே) மாணிக்கத்தை யிட்ட அரைச்சதங்கை
ஆர்ப்ப–ஒலிசெய்யவும்
பவளம்–பவழம்போன்ற
வாய்–வாயிலே
முத்து–முத்துப்போன்ற பற்கள்
இலங்க–விளங்கவும்,
பண்டு–முற்காலத்திலே
காணி–பூமியை
கொண்ட – (மஹாபலிசக்ரவர்த்தியினிடத் [தில் நின்றும்) வாங்கிக்கொண்ட
கைகளால்–திருக்கைகளாலே
பேணி–விரும்பி
சப்பாணி–சப்பாணிகொட்டி யருளவே [ணும்;
கரு–கருநிறமான
குழல்–கூந்தலையுடைய
குட்டனே–பிள்ளாய்!
சப்பாணி–சப்பாணிகொட்டியருளவேணு [ம்.

குறிப்பு:—பொன் - ஸ்ப்ருஹணீயமான, உடைமணி - அரைவடத்தை உடைத்தான, மருங்கின்மேல்—, என்று முரைக்கலாம். சப்பாணி - ‘ஸஹ, பாணி’ என்ற இரண்டு வடசொற்கள் சேர்ந்து விகாரப்பட்டுவந்த தென்னலாம்; ‘ஒருகையுடன்கூட’ என்று அதன்பொருள்; இத்தொடர்மொழி-ஒருகையுடன்கூட மற்றொருகையைச் சேர்த்துக் கொட்டுதலாகிய விளையாட்டைக் காட்டும்: வினை வருவித்து முடிக்கப்பட்டது; மேற்பாட்டுக்களிலும் வினைவராத இடங்களில் இங்ஙனமே. ... ... (க)

பொன்னரை நாணொடு மாணிக்கக் கிண்கிணி
தன்னரை யாடத் தனிச்சுட்டி தாழ்ந்தாட
என்னரை மேல்நின் றிழிந்துங்க ளாயர்தம்
மன்னரை மேற்கொட்டாய் சப்பாணி மாயவ னேகொட்டாய் சப்பாணி. (உ)

பொன்–ஸ்வர்ணமயமான
அரை நாணொடு–அரைநாணோடுகூட
மாணிக்கம் கிண்கிணி } (உள்ளே) மாணிக்கமிட்ட அரைச்சதங்கையும்
தன் அரை–தனக்கு உரிய இடமாகிய [அரையிலே
ஆட–அசைந்து ஒலிக்கவும்
தனி–ஒப்பற்ற
சுட்டி–சுட்டியானது
தாழ்ந்து–(திருநெற்றியில்) தொங்கி
ஆட–அசையவும்

என் அரை மேல் நின்று } என்னுடைய மடியிலிருந்து
இழிந்து–இறங்கிப்போய்
உங்கள்–உன்னுடைய (பிதாவான)
ஆயர்தம் மன் – இடையர்கட்கெல்லாம் [தலைவரான நந்தகோபருடைய
அரை மேல்–மடியிலிருந்து
சப்பாணி கொட்டாய்—;
மாயவனே–அற்புதமான செயல்களை [யுடையவனே!
சப்பாணி கொட்டாய்—;

குறிப்பு:—கண்ணபிரான், தன்மடியிலிருந்து சப்பாணிகொட்டுவதைப் பார்பபதைக் காட்டிலும் தகப்பனார் மடியிலிருந்து சப்பாணிகொட்டுவதைப் பார்த்தால் அவனுடைய ஸர்வாங்க ஸௌந்தர்யங்களையும் கண்ணாரக்கண்டு உகக்கலாமென்பதுபற்றி இங்ஙனம் வேண்டினபடி. உங்கள்-ஒருமையிற்பன்மை, எண்வழுவமைதி. மன் - பெருமையையுடையவனுக்கு ஆகுபெயர். ... ... ... ... ... (உ)

பன்மணி முத்தின் பவளம் பதித்தன்ன
என்மணி வண்ண னிலங்குபொற் றோட்டின்மேல்
நின்மணி வாய்முத் திலங்கநின் னம்மைதன்
அம்மணி மேற்கோட்டாய் சப்பாணி யாழியங் கையனே சப்பாணி. (௩)

என்–என்னுடைய
மணி வண்ணன் – நீலமணிபோன்ற நிற [முடையவனே!
பல்–பலவகைப்பட்ட
மணி–ரத்நங்களையும்
முத்து–முத்துக்களையும்
இன் பவளம்–இனியபவழத்தையும்
பதித்த–அழுத்திச் செய்யப்பட்டதும்
அன்ன–அப்படிப்பட்டதுமான [அழகிய [துமான]
இலங்கு–விளங்குகின்ற

பொன் தோட்டின் மேல் } பொன்னாற்செய்த தோடென்னுங் காதணியினழகுக்கு மேலே
நின் மணி வாய் முத்து } உன்னுடைய அழகியவாயிலேமுத்துப்போன்றபற்கள்
இலங்க–விளங்கும்படி (சிரித்துக்கொண்டு)
நின் அம்மைதன்–உன்தாயினுடைய
அம்மணி மேல்–இடையிலிருந்து
சப்பாணி கொட்டாய்—;
ஆழி–திருவாழிமோதிரத்தை
அம் கையனே – அழகிய கையிலுடையவ [னே
சப்பாணி—.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் ப்ரார்த்தித்தபடி நந்தகோபர்மடியிற் சப்பாணிகொட்டும் கண்ணனைத் தன்மடியிலேயே வரவிரும்பி யசோதைப் பிராட்டி அழைக்கிறாள்; அம்மைதன் - தன்மையிற்படர்க்கை. இனி 'அம்மை' என்பதைப் படர்க்கையாகவே கொண்டு, நந்தகோபருடைய மடியிலிருந்து சப்பாணி கொட்டுவதைக் காண்பதிலுங்காட்டில் கண்ணனைப் பிள்ளையாகப்பெறும் பாக்கியத்தையுடைய தாயின்மடியிலிருந்து சப்பாணிகொட்டுவதைக் காண்கை தமக்கு மிகவும் உகப்புக்குறுப்பாயிருக்

கையாலே ஆழ்வார் அத்தை அபேக்ஷிக்கிறாராகவுமாம். பதித்த + அன்ன = பதித்தன்ன; பெயரெச்சத்தின் அகரவீறு தொகுத்தல்; பதித்து அன்ன என்றும் பிரிக்கலாம். ஆழி - ஸ்ரீஸுதர்ஸநாழ்வானுமாம். ... (௩)

தூநிலா முற்றத்தே போந்து விளையாட
வாநிலா வம்புலீ சந்திரா வாவென்று
நீநிலா நின்புக ழாநின்ற வாயர்தங்
கோநிலாவக் கொட்டாய்சப் பாணி குடந்தைக் கிடந்தானே சப்பாணி. (௪)

வான்—ஆகாசத்திலே
நிலா—விளங்குகின்ற
அம்புலீ—அம்புலியே!
சந்திரா—சந்த்ரனே!
தூ - வெண்மையான
நிலா - நிலாவையுடைய
முற்றத்தே - முற்றத்திலே
போந்து - வந்து,
நீ - நீ
விளையாட - (நான்) விளையாடும்படி
வா - வருவாயாக'
என்று - என்று (சந்த்ரனை அழைத்து)
நிலா - நின்றுகொண்டு
நின் - உன்னை
புகழாநின்ற - புகழ்கின்ற
ஆயர்தம் - இடையர்களுடைய
கோ - தலைவராகிய நந்தகோபர்
நிலாவ - மனமகிழும்படி
சப்பாணி கொட்டாய்—;
குடந்தை கிடந்தானே! சப்பாணி—.

குறிப்பு:—நின் புகழாநின்ற - உன் சேஷ்டைகளைக்கண்டு மனமகிழ்ந்து உன்னைக் கொண்டாடுகின்ற இடையர். 'நிலா' என்ற சொல்மூன்றனுள், முதலது - பெயர்ச்சொல்; இரண்டாவது - வினைத்தொகை; மூன்றாவது - 'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகாலவினையெச்சம்; 'நில்லா' என்பதன் தொகுத்தல். நிலாவுதல் - விளங்குதல். ... (௪)

புட்டியிற் சேறும் புழுதியுங் கொண்டுவந்
தட்டி யழுக்கி யகம்புக் கறியாமே
சட்டித் தயிருந் தடாவினில் வெண்ணெயுமுண்
பட்டிக்கன் றேகொட்டாய் சப்பாணி பற்பநா பாகொட்டாய் சப்பாணி. (௫)

புட்டியில் - திருவரையிற் படிந்த
சேறும் - சேற்றையும்
புழுதியும் - புழுதிமண்ணையும்
கொண்டுவந்து - கொணர்ந்துவந்து
அட்டி - (என்மேல்) இட்டு
அழுக்கி - உறைக்கப்பூசி
அகம் புக்கு - வீட்டினுள் புகுந்து
அறியாமே - (எனக்குத்) தெரியாதபடி
சட்டி தயிரும் - சட்டியில் வைத்திருக்கும் [தயிரையும்
தடாவினில் - தடாக்களிலிருக்கிற
வெண்ணெயும் - வெண்ணெயையும்
உண் - உண்ணுகின்ற
பட்டி கன்றே - பட்டி மேய்ந்துதிரியும் [கன்றுபோன்றவனே!
சப்பாணி கொட்டாய்—;
பற்பம் நாபா - (ப்ரஜாபதி பிறப்பதற்குக் [காரணமான) தாமரைப்பூவைக்கொ [ண்ட நாபியையுடையவனே!
சப்பாணி கொட்டாய்—.

குறிப்பு:—[புட்டியிலித்யாதி] கண்ணன் புழுதியில் விளையாடும்போது, உடம்பில் வியர்வை நீருண்டாக, அவ்வேர்வைநீரால் நனைந்து புழுதிபடிந்த இடம் சேறாகவும் நனையாதவிடம் புழுதிமண்ணாகவுமிருக்கும். அப்படியே

வந்து தன்மேலணைந்தால் அந்தச்சேறும் புழுதியும் தன்மேலும் படிந்துவிடுமாதலால் 'அட்டி அமுக்கி' எனப்பட்டது. பட்டிக்கன்றே - பட்டிதின்று திரியுங் கன்றுபோலே நெய்பால் தயிர்களைக் களவிலுல் தின்றுதிரிவதையே பொழுதுபோக்காகவுடையவனே! என்றவாறும். பற்பநாபன் - வஜூநாஸ்.

தாரித்து நூற்றுவர் தந்தைசொற் கொள்ளாது
போருய்த்து வந்து புகுந்தவர் மண்ணாளப்
பாரித்த மன்னர் படப்பஞ் சவர்க்கன்று
தேருய்த்த கைகளாற் சப்பாணி தேவகி சிங்கமே சப்பாணி. (சு)

தந்தை - (எல்லார்க்கும்) பிதாவாகிய உனது
சொல் - பேச்சை
தாரித்து கொள்ளாது - (மனத்திற்) கொண்டு அங்கீகரியாமல்
போர் உய்த்து வந்து - யுத்தத்தை நடத்துவதாக் கருவத்துடன்) வந்து
புகுந்தவர் - (போர்க்களத்தில்) ப்ரவேசித்தவரும்
மண் - ராஜ்யத்தை
ஆள - (தாமே) அரசாளுவதற்கு
பாரித்த - முயற்சிசெய்த
மன்னர் - அரசர்களுமாகிய
நூற்றுவர் - நூற்றுக்கணக்காயிருந்த துர்யோதநாதிகள்
பட - மாண்டுபோகும்படி
அன்று - (பாரதயுத்தம் நடந்த) அக்காலத்திலே
பஞ்சவர்க்கு - பஞ்சபாண்டவர்களுக்கு (வெற்றி உண்டாக)
தேர் உய்த்த - (பார்த்தஸாரதியாய்நின்று தேரை ஓட்டின
கைகளால் - திருக்கைகளாலே
சப்பாணி—;
தேவகி சிங்கமே - தேவகியின் வயிற்றிற் பிறந்த சிங்கக்குட்டிபோன்றவனே!
சப்பாணி—.

குறிப்பு:—தாரித்து - 'தரித்து' என்பதன் நீட்டல். நூற்றுவர், பஞ்சவர் - தொகைக்குறிப்பு. மண் - 'ஜ்மா' என்றவடசொல் விகாரமென்னலாம். உய்த்து = உய்க்க: எச்சத்திரிபு ... ... ... (சு)

பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை
இரந்திட்ட கைம்மே லெறிதிரை மோதக்
கரந்திட்டு நின்ற கடலைக் கலங்கச்
சரந்தொட்ட கைகளாற் சப்பாணி சார்ங்கவிற் கையனே சப்பாணி. (எ)

பரந்திட்டு நின்ற - (எல்லைகாண வொண்ணாதபடி) பரவியுள்ள
படு - ஆழமான
கடல் - ஸமுத்ரமானது
தன்னை இரந்திட்ட - (வழிவிடுவதற்காகத் தன்னையாசித்த
கை மேல் - கையின்மேலே
எறி திரை - வீசுகின்ற அலைகளினால்
மோத - மோதியடிக்க,
கரந்திட்டு நின்ற - (முகங் காட்டாமல்) மறைந்து கிடந்த
கடல் - அக்கடலுக்கு உரிய தேவதையான வருணன்
கலங்க - கலங்கிவிடும்படி
சரம் - அம்புகளை
தொட்ட - தொடுத்துவிட்ட
கைகளால் சப்பாணி—;
சார்ங்கம் வில் - ஸ்ரீசார்ங்கமென்னும் தநுஸ்ஸை
கையனே - (அப்போது) கையில்தரித்தவனே;
சப்பாணி.

குறிப்பு:—சக்ரவர்த்திதிருமகன் வாநரஸேனைகளுடன் புறப்பட்டுப் போய்க் கடற்கரையையடைந்து 'லங்கைக்குப்போக வழிவிடவேணும்' என்று கடலரசனாகியவருணனை வேண்டி அங்கு தர்ப்பஸயநத்தில் படுத்து ப்ராயோபவேஸமாகப் பலநாள் கிடக்கவும் வருணதேவன் பெருமாள்பெருமையை இறையேனுமறியாமல் தன்னைச்சரணம்புகுந்த அவன்கைமேல் அலையேறாதுப்படி அநாதரித்திருக்க, பெருமாள் சீறி அக்கடலை வற்றுவிப்பதற்காக ஆக்நேயாஸ்த்ரத்தைத் தனது அம்பொன்றிலே தொடுத்துவிடத் தொடங்கவே, ஸமுத்ரராஜன் கொதிப்படைந்து அஞ்சியோடிவந்து பெருமாளைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டும்படி ஒடுங்கி நின்றனனென்ற வரலாறு இங்கு உணரத்தக்கது. 'பாந்திட்டு' 'இராந்திட்டு' 'கரந்திட்டு' என்ற மூன்றிடங்களிலும், இடு - துணைவினை. படு-(ரத்நம் முதலியவை) உண்டாகின்ற என்றுமாம். எறிதிரை - வினைத்தொகை. கடலை=ஐகாரம் - அசை; இனி, உருபுமயக்கமாகக்கொண்டு, கடல்மேல் என்றுரைத்து, 'கடலைச்சாந்தொட்ட' என்று இயைப்பினுமாம். "கடல் கலங்க" என்றிருந்தால் தளைகட்டுமென்க. (எ)

குரக்கினத் தாலே குரைகடல் தன்னை
நெருக்கி யணைகட்டி நீணீ ரிலங்கை
அரக்க ரவிய வடுகணை யாலே
நெருக்கிய கைகளாற் சப்பாணி நேமியங் கையனே சப்பாணி (அ)

குரை — கோஷியாநின்ற
கடல்தன்னை—ஸமுத்ரத்தை
நெருக்கி—(இரண்டுபக்கத்திலும்) தேங்கும் [படிசெய்து
குரங்கு—குரங்குகளினுடைய
இனத்தாலே—கூட்டங்களைக்கொண்டு
அணை கட்டி—ஸேதுவைக்கட்டிமுடித்து
நீள் நீர்—பரந்துள்ள ஸமுத்ரத்தினால் சூழ [ப்பட்ட
இலங்கை—லங்கையிலுள்ள

அரக்கர்—ராக்ஷஸர்களெல்லாம்
அவிய—அழிந்துபோம்படி
அடு கணையாலே — கொல்லுந்தன்மையை [யுடைய அம்புகளைக்கொண்டு
நெருக்கிய—நெருங்கப்போர்செய்த
கைகளால் சப்பாணி—;
நேமி—திருவாழி ஆழ்வானை
அம் கையனே—அழகியகையிலேந்தினவ [னே!
சப்பாணி—.

குறிப்பு:—குரங்கு + இனம் = குரக்கினம்; வேற்றுமைப் புணர்ச்சியில் மென்றொடர் வன்றொடராயிற்று; "மென்றொடர் மொழியுட் சிலவேற்றுமையில், தம்மினவன்றொடர்" என்னுஞ் சூத்திரவிதி அறிக. குரைகடல்-வினைத்தொகை. நீர் - கடலுக்கு ஆகுபெயர். அரக்கர்—'ரக்ஷஸ்' என்ற வடசொல் திரிபு. ... ... ... ... ... ... ... (அ)

அளந்திட்ட தூணை யவன்தட்ட வாங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்க வுருவாய்
உளந்தொட் டிரணிய ஞெண்மார் வகலம்
பிளந்திட்ட கைகளாற் சப்பாணி பேய்முலை யுண்டானே சப்பாணி. (கூ)

அளந்திட்ட—(தானே) அளந்துகட்டின
தூணை—கம்பத்தை
அவன்—அந்த ஹிரண்யாஸுரன் (தானே)
தட்ட—புடைக்க,
ஆங்கே—(அவன் புடைத்த) அந்த இடத்தி [லேயே
வாள் உகிர்—கூர்மையானநகங்களையுடைய
சிங்கம் உரு ஆய்—நரஸிம்ஹமூர்த்தியாய்
வளர்ந்திட்டு - வளர்ந்த வடிவத்துடன் [தோன்றி,
(ஒருகால் இவ்விரணியனும் அநுகூலனு கக்கூடுமோ! என்று)
உளம் - (அவ்விரணியனது) மநஸ்ஸை
தொட்டு-பரிசோதித்துப்பார்த்து (பின்பு)
இரணியன் - அவ்விரணியனுடைய
ஒள் - ஒளிபொருந்திய
மார்பு அகலம் - மார்பின் பரப்படங்கலும்
பிளந்திட்ட - (நகத்தாற்) பிளந்த
கைகளால் சப்பாணி—;
பேய் - பேய்மகளான பூதனையின்
முலை - முலையை
உண்டானே - உண்டவனே!
சப்பாணி—.

குறிப்பு:—அளந்திட்ட தூணவது - முன்பே நரசிங்கமூர்த்தியை உள்ளே வைத்துக்கட்டிய தூண் என்று சொல்லமுடியாதபடி தானே தனக்குப் பொருந்தப்பார்த்துக்கட்டினது; தூண் - 'ஸ்தூணா' என்ற வடசொல் விகாரம். அவன் தட்ட - 'கையிலே நரசிங்கத்தை அடக்கிக்கொண்டுவந்து பாய்ச்சினார்கள்' என்னவொண்ணாதபடி, தானே அமுன்று புடைக்க வென்கை, உளம் - 'உள்ளம்' என்பதன் தொகுத்தல். இரணியன் - ஹிரண்யன். ஒண்மார்பென்றது - நரஸிம்ஹத்தினுடைய கோபாக்கினியாலும் தன்வயிற்றிலுள்ள பயாக்கியாலும்பிறந்த பரிதாபத்தாலே பொன்மயமான மார்பு உருகி ஒளிவிட்டு உகிரால் எளிதாகக்கிழிக்கும்படி யாயிற்றென்ற கருத்தைக்காட்டும். மார்பு அகலம் - அகலமான மார்பு என்றுமாம். (௯)

அடைந்திட் டமரர்க ளாழ்கடல் தன்னை
மிடைந்திட்டு மந்தரம் மத்தாக நாட்டி
வடஞ்சுற்றி வாசுகி வன்கயி றாகக்
கடைந்திட்ட கைகளாற் சப்பாணி கார்முகில் வண்ணனே சப்பாணி.(௧௦)

(துர்வாசமுனி சாபத்தினால் தாம் இழந்த ஐச்வர்யத்தைப் பெறுதற்காக)
அமரர்கள் - தேவர்கள்
அடைந்திட்டு - (உன்னைச்) சரணமடைய, (நீ)
ஆழ் கடல்தன்னை - ஆழமான க்ஷீராப்தியை (உன்னுடைய படுக்குமிடமென்று பாராமல்)
மிடைந்திட்டு - நெருக்கி
மந்தரம் - மந்தரபர்வதத்தை [படி
மத்து ஆக - (கடைவதற்குரிய) மத்தாகும்
நாட்டி - நேராக நிறுத்தி
வாசுகி - வாஸுகியென்னும் பாம்பாகிய
வல் வடம் - வலியகயிற்றை
(அந்த மந்தரமலையாகிற மத்திலே)
கயிறு ஆக சுற்றி - கடைகயிறாகச்சுற்றி
கடைந்திட்ட - கடைந்த
கைகளால் சப்பாணி—;
கார் முகில் வண்ணனே - காளமேகம்போன்ற நிறமுடையவனே!
சப்பாணி—.

குறிப்பு:—அடைந்திட்டு - அடைந்திட; எச்சத்திரிபு. எம்பெருமான், தேவர்களையும் அஸுரர்களையும் முதலிற் கடையும்படிவிட்டு, பின்பு அவர்கள் இளைத்துநிற்க, தான் இரண்டு ரூபத்தையெடுத்துக்கொண்டு தேவர்கள்

பக்கத்திலும் அஸுரர்கள் பக்கத்திலும்போய் அவர்களுக்கு ஸஹாயமாக நின்று அமுதம் தோன்றுமளவும் கடைந்தனனென அறிக; "தானவரும்ப ருள்ளா, யீருரு நின்று கடைந்தது" என்றதுங்காண்க. மிடைந்திட்டு-மிடைத்திட்டு [நெருக்கி] எனப் பிறவினைப் பொருள்கொள்க; எதுகை நோக்கிவந்த வழூவமைதி. மந்தரம், வாசுகி - வடசொற்கள். (௧௦)

அவ:—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

ஆட்கொள்ளத் தோன்றிய வாயர்தங் கோவினை
நாட்கமழ் பூம்பொழில் வில்லிபுத் தூர்ப்பட்டன்
வேட்கையி னாற்சொன்ன சப்பாணி யீரைந்தும்
வேட்கையி னாற்சொல்லு வார்வினை போமே. (௧௧)

| | |
|---|---|
| ஆள் கொள்ள - (அனைவரையும்) அடிமை [கொள்வதற்காக | வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரிலவதரித் [த |
| தோன்றிய - திருவவதரித்த | பட்டன் - பெரியாழ்வார் |
| ஆயர்தம் கோவினை - இடையர்களுக்குத் தலைவனை கண்ணனிடத்தில் | சொன்ன - அருளிச்செய்த |
| வேட்கையினால் - ஆசையினால், | சப்பாணி ஈரைந்தும் - சப்பாணி கொட்டுதலைக் கூறிய பத்துப்பாசுரங்களை |
| நாள் - எந்நாளிலும் | வேட்கையினால் - இஷ்டத்தோடு [யும் |
| கமழ் - மணம்வீசுகின்ற | சொல்லுவார் - ஓதுகிறவர்களுடைய |
| பூ - புஷ்பங்கள் நிறைந்த | வினை - பாபங்கள் |
| பொழில் - சோலைகளையுடைய | போம் - அழிந்துபோம். |

குறிப்பு:—கோ + இன் + ஐ - கோவினை: இன்-இடைச்சாரியை. மூன்றாமடியில் "வேட்கையாற்சொன்ன" என்ற அத்யாபகபாடம் - தளைதட்டுதலாற் பொருந்தாதென்க; "வேட்கையினால்" என்பது பெரியோர்களின் பாடம். தாளகோசங்களையுங் காண்க. ... ... ... (௧௨)

அடி:—மாணிக் பொன் பன் நாகிலா புட்டி தாரித்து பரந்து குரக்கினம் அளந்து அடைந்து ஆட்கொள்ளத் தொடர்.

ஆருந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

---

## ஏழாந்திருமொழி.

## தொடர் சங்கிலிகை.

—oo:o:oo—

**அவதாரிகை:**—கண்ணபிரான் தளர்நடை நடந்ததைத் தத்காலத்திலே யசோதைப்பிராட்டிகண்டு அநுபவித்தாப்போலே ஆழ்வார்தாமும் தம்முடைய ப்ரேமபாரம்யத்தாலே தம்மை அவளாகப்பாவித்து, கண்ணனுடைய அந்தச்சேஷ்டிதத்தை ப்ரத்யக்ஷம்போலக்கண்டு அநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

தொடர்சங் கிலிகை சலார்பிலா ரென்னத் தூங்குபொன் மணியொலிப்பப்
படுமும் மதப்பு னல்சோர வாரணம் பையநின் றூர்வதுபோல்
உடன்கூ டிக்கிண் கிணியார வாரிப்ப வுடைமணி பறைகறங்கத்
தடந்தா ளிணைகொண் டுசார்ங்க பாணி தளர்நடை நடவானோ. (க)

சங்கிலிகை தொடர் - இரும்புச்சங்கிலியின்தொடர்
சலார் பிலார் என்ன - 'சலார் பிலார்' [என்று சப்திக்கவும்
தூங்கு - தொங்குகின்றனவும்
பொன் - பொன்கயிற்றிற்கட்டி யிருப்ப [னவுமான
மணி - மணிகள்
ஒலிப்ப - ஒலிக்கவும்
படு - உண்டான
மும்மதம் புனல் - மூன்றுவகையான மத [நீர்
சோர - பெருகவும்
நின்று - இருந்துகொண்டு
வாரணம் - யானை
பைய - மெல்ல
ஊர்வது போல் - நடந்துபோவதுபோல,
கிண்கிணி - காற்சதங்கைகள்
உடன் கூடி - தம்மிலே தாம் கூடி
ஆரவாரிப்ப - சப்திக்கவும்
உடை - திருவரையில் கட்டிய
மணி - சிறுமணிகள்
பறை கறங்க - பறைபோல் சப்திக்கவும்
சார்ங்கம் - சார்ங்கமென்னும் வில்லை
பாணி - கையிலேந்திய பிள்ளையாகிய [இவன்
தட தாள் இணை கொண்டு - (தன்னுடைய) பெரிய பாதங்களிரண்டினால்
தளர்நடை - இளநடையை
நடவானோ - நடக்கமாட்டானோ? [நடக்கவேணும்.]

குறிப்பு:—சங்கிலிகை - 'ஶ்ருங்கலிகா' என்ற வடசொல் திரிபு. சலார் பிலார் - ஒலிக்குறிப்பு. மூன்று + மதம் = மும்மதம்: "மூன்றனுறுப்பழிவும் வந்ததுமாகும்" என்னும் சூத்திரவிதி அறிக; கன்னமிரண்டும் குறியொன்றுமாகிய மூவிடங்களிலுந் தோன்றும் மதம் வாரணம் - வடசொல். உடன் கூடிக் கிண்கிணி ஆரவாரிப்ப - அரைச்சதங்கை (நழுவிவிழுந்து திருவடிகளிலேசேர்ந்து இழுப்புண்டு வருகையாலே அதிலுண்டான சதங்கைகள்) தம்மிலேகூடிச் சப்திக்க என்றுமாம். இணைதாள் - தமக்குத் தாமே ஒப்பான திருவடிகள் என்றலுமொன்று. சார்ங்கபாணி - வடசொற்றொடர். தளர் நடை - (திருவடிகளை நன்றாகப் பதியவைத்து நடக்கும் பருவமன்றாகையாலே) தட்டித்தடுமாறி நடக்கும் நடை. ... ... ... (க)

செக்க ரிடைநு னிக்கொம்பில் தோன்றுஞ் சிறுபிறை முளைப்போல
நக்க செந்துவர் வாய்த்திண்ணை மீதே நளிர்வெண்பல் முளையிலக

அக்கு வடமு டுத்தாமைத் தாலி பூண்டவ னந்தசயனன்
தக்கமா மணிவண் ணன்வாசு தேவன் தளர்நடை நடவானே. (உ)

செக்கரிடை - செவ்வானத்திலே
நுனி கொம்பில் - கொம்பின் நுனியிலே
தோன்றும் - காணப்படுகிற
சிறு பிறை முளை போல - சிறியபிறைச் சந்திரனாகிய முளையைப்போல,
நக்க - சிரித்த
செம் துவர் வாய் - மிகவுஞ் சிவந்தவாயாகிய
திண்ணை மீது - மேட்டிடத்தில்
நளிர் வெள் பல் முளை - குளிர்ந்த வெண்மையாகிய பல்லின் முளைகள்
இலக - விளங்க
அக்கு வடம் - சங்குமணி வடத்தை
உடுத்து - (திருவரையில்) தரித்து
ஆமைத் தாலி - ஆமையின் வடிவமாகச் செய்யப்பட்ட தாலியை
பூண்ட - கழுத்திலணிந்துகொண்டவனும்
அனந்தசயனன் - திருவனந்தாழ்வான்மேலே படுப்பவனும்
தக்க மா மணி வண்ணன் - தகுதியான நீலமணிபோன்ற நிறத்தை யுடையவனும்
வாசுதேவன் - வஸுதேவபுத்ரனுமான இவன்
தளர்நடை நடவானோ—.

குறிப்பு:—'சந்திரன் எங்கே இருக்கிறான்' என்றால், 'அந்த மரக்கிளைக்கு மேலிருக்கிறான்' என்று உலகவழக்கிற் காட்டவேண்டி யிருப்பதனால், 'நுனிக்கொம்பில் தோன்றுஞ் சிறுபிறைமுளை' என்றார். இங்ஙனம் அறியும் அறிவு - ஶாகாசந்த்ரந்யாய மெனப்படும். சிறுபிறை முளையென்றது- மூன்றாம்பிறையை யென்பர். நக்க வாய் எனவும், இலக நடவானோ எனவும் இயையும். மாமணி - நீலரத்நம்; மா - கறுப்புக்கும் பெயர். ... (உ)

மின்னுக் கொடியு மோர்வெண் டிங்களுஞ் சூழ்பரி வேடமுமாய்ப்
பின்னல் துலங்கு மரசிலையும் பீத கச்சிற் றுடையோடும்
மின்னிற் பொலிந்ததோர் கார்முகில் போலக் கழுத்தினிற் காறையோடுந்
தன்னிற் பொலிந்த விருடீ கேசன் தளர்நடை நடவானோ. (ங)

மின் கொடி - கொடிமின்னலும்
ஓர் வெண் திங்களும் - அதனோடு சேர்ந்திருப்பதும் களங்கமில்லாததுமான (முழுவதும்) வெண்மையாயுள்ள ஒரு சந்த்ரனும்
சூழ் - (அவ்விரண்டையுஞ்) சுற்றிக்கொண்டிருக்கும்
பரிவேடமும் ஆய் - பரிவேஷத்தையும்போல
பின்னல் - (திருவரையில் சாத்தின) பொற்பின்னலும்
துலங்கும் அரசிலையும் - விளங்குகின்ற அரசிலைபோல வேலைசெய்ததொரு திருவாபரணமும்
பீதகம் சிறு ஆடையொடும் - (இவ்விரண்டையுஞ் சூழ்ந்த) பொன்னாலாகிய சிறிய வஸ்த்ரமும் ஆகிய இவற்றோடும்,
மின்னில் - மின்னலினால்
பொலிந்தது - விளங்குவதாகிய
ஓர் - ஒப்பற்ற
கார் முகில் போல - காளமேகம்போல
கழுத்தினில் காறையொடும் - கழுத்திலணிந்த காறையென்னும் ஆபரணத்தோடும் (கூடிய)
தன்னில் பொலிந்த - (இவ்வாபரணங்கள் திருமேனிச்சுமை என்னும்படி இயற்கையான) தனது அழகினால் விளங்குகின்ற
இருடீகேசன் - 'ஹ்ருஷீகேசன்' என்ற திருநாமமுடைய இவன்
தளர்நடை நடவானோ—.

குறிப்பு:—மின் + கொடி = மின்னுக்கொடி: "மின் பின் பன் கன் தொழிற்பெயரனைய" எனச் சிறப்புவிதிகாண்க. பரிவேடம் - 'பரிவேஷம்' என்ற வடசொற்றிரிபு; சந்த்ரனைச் சுற்றிச் சிலகாலங்களிற் காணப்படும் ரேகை; இது—ஊர்கோள் எனவும்படும். பொற்பின்னலும் அதைச் சேர்ந்து விளங்குகின்ற அரசிலைப்பணியும் இவ்விரண்டையுஞ் சூழ்ந்துகொண்டு விளங்குகின்ற பீதகச் சிற்றாடையும் - முறையே, மின்னற்கொடியையும் அதைச்சார்ந்து விளங்கும் களங்கமற்ற சந்திரனையும் இவ்விரண்டையுஞ் சூழ்ந்து கொண்டிருக்கும் ஊர்கோளையும் போலுமென்க; இல்பொருளுவமை; [கஉ-டு தொவ.] அரசிலைப்பணிக்கு வெண்திங்களை உவமையாகச் சொன்னதனால், அவ்வாபரணம் வெள்ளியினாற் செய்யப்பட்டதெனவிளங்கும். கருநிறக்கழுத்திற் பொற்காறை விளங்குவது—காளமேகத்திற் செந்நிற மின்னற்கொடி விளங்குவதுபோலும். சிற்றாடையொடும் காறையொடும் பொலிந்த என்றும், தன்னிற்பொலிந்த என்றுங் கூட்டிப் பொருள்காண்க.

கன்னற் குடந்தி றந்தாலொத் தூறிக் கணகண சிரித்துவந்து
முன்வந்து நின்று முத்தந்தரு மென்முகில் வண்ணன் திருமார்வன்
தன்னைப்பெற் றேற்குத் தன்வாய முதந்தந் தென்னைத் தளிர்ப்பிக்கின்றான்
தன்னேற்று மாற்ற லர்தலைகள் மீதே தளர்நடை நடவானோ (ச)

கன்னல் குடம் - கருப்பஞ்சாறு நிறைந்த குடம்
திறந்தால் - பொள்ளல்விட்டால் (அப் பொள்ளல்வழியாகச் சாறுபொசிவதை)
ஒத்து - போன்று
ஊறி - (வாயில் நின்றும் நீர்) சுரந்துவடிய
கணகண சிரித்து - கணகணவென்று சப்தமுண்டாகும்படி சிரித்து
உவந்து - ஸந்தோஷித்து
முன் வந்து நின்று - என்முன்னே வந்து நின்று
முத்தம் தரும் - (எனக்கு) முத்தங்கொடுக்கும் தன்மையுள்ளவனும்
என் முகில் வண்ணன் - எனது முகில்போன்ற திருநிறத்தையுடையவனும்
திரு - பெரியபிராட்டியாரை
மார்வன் - மார்பிற்கொண்டுள்ளவனுமான இவன்
தன்னை பெற்றேற்கு - தன்னைப்பெற்ற எனக்கு
தன் - தன்னுடைய
வாய் அமுதம் - அதராம்ருதத்தை
தந்து - கொடுத்து
என்னை - (தன்னைப் பிள்ளையாகப்பெற்ற பாக்யத்தையுடைய) என்னை
தளிர்ப்பிக்கின்றான் - தழைக்கச்செய்கிறான்; (இவன்,)
தன் எற்றும் - தன்னோடு எதிர்க்கிற
மாற்றலர் - சத்ருக்களுடைய
தலைகள் மீதே - தலைகளின்மேலே (அடியிட்டு)
தளர்நடை நடவானோ—.

குறிப்பு:—தன்வாயில் நின்றும் இக்ஷுரஸம்போல் இனிமையான நீர் வெளிப்பட்டு வடியும்படி சிரித்துக்கொண்டுவந்து எனக்கு முத்தங்கொடுக்குந் தன்மையுள்ளவன் கண்ணனென்பது—முன்னிரண்டடிகளின் கருத்து. கணகண - வாய்விட்டுச் சிரிக்கும்போது உண்டாகின்ற ஒலிக்குறிப்பு. (ச)

முன்னலோர் வெள்ளிப் பெருமலைக் குட்டன் மொடுமொடு விரைந்தோடப்
பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக் குட்டன் பெயர்ந்தடி யிடுவதுபோற்

பன்னி யுலகம் பரவி யோவாப் புகழ்ப்பல தேவனேன்னும்
தன்நம்பி யோடப் பின்கூடச் செல்வான் தளர்நடை நடவானோ. (௫)

முன் - முன்னே
நல் - அழகிய
ஓர் - ஒப்பற்ற
வெள்ளி பெருமலை - பெரிய வெள்ளிமலை
குட்டன் - குட்டி [பெற்ற
மொடுமொடு - திடுதிடென்று
விரைந்து - வேகங்கொண்டு
ஓட - ஓடிக்கொண்டிருக்க,
பின்னை - (அந்தப்பிள்ளையின்) பின்னே (தன் செருக்காலே அப்பிள்ளையைப் பிடிப்பதற்காக)
தொடர்ந்தது - தொடர்ந்ததாகிய
ஓர் - ஒப்பற்ற
கரு மலை - கருநிறமான மலைபெற்ற
குட்டன் - குட்டி
பெயர்ந்து - தானிருக்கு மிடத்தைவிட்டுப் [புறப்பட்டு
அடி இடுவது போல் - அடியிட்டுப் போவதுபோல,—
உலகம் - லோகமெல்லாங்கூடி
பன்னி - (தங்களாலானவரையிலும்) [ஆராய்ந்து
பரவி - ஸ்தோத்ரஞ்செய்தும்
ஓவா - முடிவுகாணமுடியாத
புகழ் - கீர்த்தியையுடைய
பலதேவன் என்னும் - பலராமன் என்கிற
தன் நம்பி ஓட - தன்னுடைய தமையன் (முன்னே) ஓடிக்கொண்டிருக்க
பின் கூட செல்வான் - (அவனைப்பிடிக்க வேணுமென்ற எண்ணத்தினால் அவன் [பின்னே உடன் செல்பவனான இக்கண் [ணபிரான்
தளர்நடை நடவானோ—.

குறிப்பு:—பலராமன் வெண்மை நிறமுள்ளவனாதலால் அவன் ஓடுதற்கு வெள்ளிமலையீன்ற குட்டியோடுவதையும், கண்ணன் கருநிறமுள்ளவனாதலால் அவன் பின்னே தொடர்ந்தோடுதற்குக் கருமலையீன்ற குட்டி தொடர்ந்தோடுவதையும் உவமை குறித்தார். காரியம் காரணத்தை ஒத்திருக்கும் என்ற கொள்கையை அநுஸரித்து இங்ஙனருளிச் செய்தனரென்க. நம்பி - ஆண்பாற் சிறப்புப்பெயர்; இங்கு, தமையனென்ற பொருளைக்காட்டிற்று. அன்றி, பலராமனுக்கு 'நம்பி மூத்தபிரான்' என்று ஒரு பெயர் ஸம்ப்ரதாயத்தில் வழங்குதலால், அதன் ஏகதேசமாகிய 'நம்பி' என்கிறவித்தால் அப்பெயர் முழுவதையுங் குறித்தாருமாம். மொடுமொடு - நடக்கும்போது தோன்றும் ஒலிக்குறிப்பு; விரைவுக்குறிப்புமாம். ... (௫)

ஒருகா லிற்சங் கொருகாலிற் சக்கர முள்ளடி பொறித்தமைந்த
இருகா லுங்கொண் டங்கங்கெழு தினுற்போ லிலச்சினை படநடந்து
பெருகா நின்ற வின்பவெள்ளத் தின்மேற் பின்னையும் பெய்துபெய்து
கருகார்க் கடல்வண் ணன்காமர் தாதை தளர்நடை நடவானோ. (௬)

கரு கார் கடல் வண்ணன் - மிகவும் கருநிறமுள்ள ஸமுத்ரம்போன்ற திரு [நிறமுடையவனும்
காமர் தாதை - காமதேவனுக்குப் பிதாவுமான இப்பிள்ளை,—
ஒரு காலில் - ஒருபாதத்திலே
சங்கு - சங்கமும்
ஒரு காலில் - மற்றொருபாதத்தில்
சக்கரம் - சக்ரமும்
உள் அடி - பாதங்களின் உட்புறத்திலே
பொறித்து - ரேகையின்வடிவத்தோடுகூடி
அமைந்த - பொருந்தியிருக்கப்பெற்ற
இரு காலும் கொண்டு - இரண்டுதிருவடிகளினாலும்

அங்கு அங்கு - அடிவைத்த அவ்வவ்விடங் [களிலே
எழுதினால் போல் - சித்திரித்ததுபோல
இலச்சினை பட - அடையாளமுண்டாம்ப
நடந்து - அடிவைத்து, [டி
(தனது வடிவழகைக்கண்டு)
பெருகாநின்ற - பொங்குகிற
இன்பம் வெள்ளத்தின் மேல் - ஆநந்தமாகிற ஸமுத்ரத்துக்கு [மேலே
பின்னையும் - பின்னும்
பெய்து பெய்து - (ஆநந்தத்தை) மிகுதி [யாக உண்டாக்கிக்கொண்டு
தளர்நடை நடவானோ—௬.

குறிப்பு:—கண்ணபிரானாகிய பிள்ளைக்குப் புருஷோத்தம சின்னமாகிய சங்கசக்ரரேகைகள் உள்ளங்காலிலிருத்தலால் அத்தாள்களைவைத்து நடக்குமிடமெல்லாம் சங்கசக்ரத்தி னுருவங்களை யெழுதினாற் போலாகின்றன வென்பது - முன்னிரண்டடியின்கருத்து. கரு கார் கடல் என்பதற்கு-கரிய பெரிய கடலென்றும், கறுத்துக் குளிர்ந்த கடலென்றும், காளமேகம் போலவும் கடல்போலவு மென்றும் பொருள் கொள்ளலாம். இலச்சினை-லக்ஷணம். கண்ணன், மந்மதனுடைய அம்சமாகிய ப்ரத்யும்நனுக்கு ஜநகனாகையால், காமர் தாதையாயினான். 'காமன் தாதை' என்றும் பாடமுண்டாம்; பொருளொன்றே. இவ்வடைமொழியால், கண்ணபிரானது அழகின் மேன்மை தொனிக்கும். தாதை - தாத:. ... ... (௬)

படர்பங் கயமலர்வாய்நெ கிழப்பனி படுசிறு துளிபோல
இடங்கொண்ட செவ்வா யூறி யூறி யிற்றிற்று வீழநின்று
கடுஞ்சேக் கழுத்தின் மணிக்கு ரல்போ லுடைமணி கணகணெனத்
தடந்தா ளிணைகொண் டுசார்ங்க பாணி தளர்நடை நடவானோ. (எ)

படர் - படர்ந்திருக்கிற [பெருத்திருந்து
பங்கயம் மலர் - தாமரைப்பூ [ள்ள]
வாய் நெகிழ - (மொட்டாயிராமல்) வாய் [திறந்துமலர
(அதில் நின்றும் பெருகுகின்ற)
பனி படு - குளிர்ச்சி பொருந்திய
சிறு துளி போல - (தேனினுடைய) சிறு [த்த துளியைப்போலே
இடம் கொண்ட - பெருமைகொண்டுள்ள
செவ்வாய்-(தனது) சிவந்தவாயினின்றும்
ஊறி ஊறி - (ஜலமானது) இடைவிடா [மற் சுரந்து
இற்று இற்று வீழ நின்று - (நடுவே) முறிந்து முறிந்து கீழேவிழும்படி நின் [று,—
கடும் சே - கொடிய ரிஷபத்தின்
கழுத்தில் - கழுத்திலே கட்டப்பட்டுள்ள
மணி - மணியினுடைய
குரல் போல் - ஒலிபோலே
உடை மணி - (தனது) திருவரையிற் கட் [டிய மணி
கணகண என - கணகணவென்றொலிக்க
தடந்தாளிணை - முதற்பாட்டிற்போல் பொருள்காண்க.

குறிப்பு:—பங்கயம்—பங்கஜம். இற்று = இறு - பகுதி. கணகண + என — கணகணென; தொகுத்தல் விகாரம். ... ... (எ)

பக்கங் கருஞ்சி றுப்பாறை மீதே யருவிகள் பகர்ந்தனைய
அக்கு வடமி ழிந்தேறித் தாழ வணியல்குல் புடைபெயர
மக்க ளுலகி னிற்பெய்த றியாம ணிக்கு ழவியுருவின்
தக்மா மணிவண் ணன்வாசு தேவன் தளர்நடை நடவானோ. (அ)

கரு - கருநிறமான
சிறு - சிறிய
பாறை - மலையினுடைய
பக்கம் மீது - பக்கத்திலே (மேடும்பள்ளமுமான இடங்களிற் பாய்கிற)
அருவிகள் - நீரருவிகள்
பகர்ந்து அனைய - ப்ரகாசிப்பதை ஒத்திருக்கிற (திருவரையிற்சாத்திய)
அக்கு வடம் - சங்குமணிவடமானது
ஏறி இழிந்து தாழ - உயர்ந்தும் தாழ்ந்தும்தொங்கி ப்ரகாசிக்கவும்
அணி - அழகிய
அல்குல் - நிதம்பம்
புடை - பக்கங்களிலே
பெயர - அசையவும்
உலகினில் - உலகத்திலுள்ள
மக்கள் - மனிதர்
பெய்து அறியா - பெற்றறியாத
மணி குழவி உருவின் - அழகிய குழந்தைவடிவத்தையுடையவனும்
தக்க - இத்யாதி, இரண்டாம்பாட்டிற்போலப் பொருள் காண்க.

குறிப்பு:—[பக்கமித்யாதி.] கருநிறத்தையுடைய திருவரையிற்சாத்திய வெண்ணிறமான சங்குமணி வடமானது, தளர்நடை நடக்கும்போது முன்பின்னாக மாறிமாறி ப்ரகாசிப்பதானது - கரிய சிறுமலையின் பக்கத்திலே வெள்ளருவி மேடும் பள்ளமுமான இடங்களில் ப்ரகாசிப்பதை ஒத்திருக்கிறபடி. அல்குல் - தொடையிடுக்குக்கும் அரைக்கும் இடையிலுள்ள இடம்; குறி. பாறை—இலக்கணையால் மலையை உணர்த்திற்று. பகர்ந்தனைய- 'பகர்ந்ததனைய' என்பதன் விகாரம் அன்றி, வினையெச்சத்திரிபாகக்கொண்டு- பகர்ந்தால் (அதை) அனைய என்று கொள்ளினும் இழுக்காது. பக்கம்- 'பக்ஷம்' என்ற வடசொல் திரிபு. குழ - இளமை; உரிச்சொல்; அதனை உடையது - குழவியெனக் காரணக்குறி; இ - பெயர் விகுதி. ... (அ)

வெண்புழு திமேற்பெய்து கொண்டளைந்த தோர்வே ழத்தின் கருங்கன்றுபோல்
தெண்புழு தியாடித் திரிவிக் கிரமன் சிறுபுகர் படவியர்த்
தொண்போ தலர்கம லச்சிறுக் காலுறைத் தொன்றும் நோவாமே
தண்போது கொண்ட தவிசின் மீதே தளர்நடை நடவானோ. (கூ)

திரிவிக்கிரமன் - (தனது) மூவடியால் (உலகங்களை) அளந்தவனாகிய இவன்
வெள் புழுதி - வெளுத்த புழுதியை
மேல் பெய்துகொண்டு - மேலேபோகட்டுக்கொண்டு
அளைந்தது - அளைந்ததாகிய
ஓர் வேழத்தின் கரு கன்று போல் - ஒரு கரிய குட்டியானை போல,
தெள் புழுதி - தெளிவான புழுதியிலே
ஆடி - விளையாடி
சிறு புகர் பட - சிறிது காந்தி உண்டாக
வியர்த்து - வேர்த்துப்போய்,
போது - உரியகாலத்திலே
அலர் - மலர்ந்த
ஒள்—அழகிய
கமலம் - தாமரைப்பூவை ஒத்த
சிறு கால் - சிறியபாதங்கள்
உறைத்து - (ஏதேனும் ஒன்று) உறுத்த (அதனால்)
ஒன்றும் நோவாமே-சிறிதும் நோவாதபடி
தண் போது கொண்ட - குளிர்ந்த புஷ்பங்களையுடைய
தவிசின் மீது - மெத்தையின்மேலே
தளர்நடை நடவானோ—.

குறிப்பு:—கருநிறமான கண்ணன் திருமேனியிற்படிந்த புழுதியில் வேர்வைநீர் அழகியதாய்க் காணப்படுதலால், 'புழுதியாடிச் சிறுபுகர்பட வியர்த்து' எனப்பாராட்டிக்கூறினார். உறைத்து - உறைக்க; எச்சத்திரிபு. வெண்புழுதி, தெண்புழுதி, ஒண்போது, தண்போது - பண்புத்தொகைகள். (கூ)

திரைநீர்ச் சந்திர மண்டலம் போற்செங் கண்மாற் கேசவன்றன்
திருநீர் முகத்துத் துலங்கு சுட்டி திகழ்ந்தெங்கும் புடைபெயரப்
பெருநீர்த் திரையெழு கங்கை யிலும்பெ ரியதோர் தீர்த்தபலந்
தருநீர்ச் சிறுச்சண் ணந்துள்ளஞ் சோரத் தளர்நடை நடவானோ. (கo)

செம் கண் மால் - சிவந்த கண்களையும் கருநிறத்தையுமுடைய
கேசவன் - கேசவனென்னுந் திருநாமமுடைய இவன்,—
திரை நீர் - அலைகின்ற நீரையுடைய ஸமுத்ரத்தின் நடுவில் (அசைந்து தோன்றுகிற)
சந்திரன் மண்டலம் போல் - ப்ரதிபிம்ப சந்த்ரமண்டலத்தைப்போல
தன் - தன்னுடைய
திரு நீர் - அழகிய ஒளியையுடைய
முகத்து - திருமுகத்திலே
துலங்கு - விளங்குகின்ற
சுட்டி - சுட்டியானது
எங்கும் - எல்லாவிடத்திலும்
திகழ்ந்து - ப்ரகாசித்துக்கொண்டு
புடை பெயர - இடமாகவும் வலமாகவும் அசையவும்,
பெரு நீர் - சிறந்த தீர்த்தமாகிய
திரை எழு கங்கையிலும் - அலையெறிகிற கங்கையிற் காட்டிலும்
பெரியது - அதிகமான
ஓர் - ஒப்பற்ற
தீர்த்த பலம் - தீர்த்த பலத்தை
தரும் - கொடுக்கின்ற
நீர் - ஜலத்தை உடைத்தான
சிறு சண்ணம் - சிறிய சண்ணமானது
துள்ளம் சோர - துளிதுளியாகச் சொட்டவும்
தளர்நடை நடவானோ—.

குறிப்பு:—கருநிறத்தனான கண்ணனது திருநெற்றியிலசைந்துகொண்டு விளங்குஞ் சுட்டிக்கு, கருநிறமான கடலின் நடுவில் அசைந்துகொண்டு தோன்றும் சந்த்ர ப்ரதிபிம்பம் ஏற்ற உவமையாம். சிறுச்சண்ணம்-பெல்லாகுட்டி எனவழங்குகலறிக, [குறி.] ... ... ... (கo)

அவ:—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

ஆயர் குலத்தி னில்வந்து தோன்றிய வஞ்சன வண்ணன்றன்னைத்
தாயர் மகிழ வொன்னார் தளரத் தளர்நடை நடந்ததனை
வேயர் புகழ்விட் டுசித்தன் சீரால் விரித்தன வுரைக்கவல்லார்
மாயன் மணிவண் ணன்றாள் பணியும் மக்களைப் பெறுவர்களே. (கக)

ஆயர் குலத்தினில் வந்து - இடையர் குலத்திலே வந்து
தோன்றிய - அவதரித்த
அஞ்சனம் வண்ணன் - மைபோன்ற கருநிறமுடையனான கண்ணன்
தன்னை - தன்னை (கண்டு)
தாயர் - தாய்மார்கள்
மகிழ - மனமுகக்கவும்
ஒன்னார் - சத்ருக்கள்
தளர - வருத்தமடையவும்
தளர்நடை நடந்ததனை - தளர்நடை நடந்ததை
வேயர் - வேயர்குடியிலிருப்பவரெல்லாராலும்
புகழ் - புகழப்பெற்ற
விட்டுசித்தன் - பெரியாழ்வார்
சீரால் - சிறப்பாக
விரித்தன - விவரித்துச்சொன்ன பாசுரங்களை
உரைக்க வல்லார் - சொல்லவல்லவர்கள்
மாயன் - ஆச்சர்யமான குணங்களையுடையவனும்
மணி - நீலமணிபோன்ற
வண்ணன் - நிறமுடையனுமான எம்பெருமானுடைய
தாள் - திருவடிகளை
பணியும் - வணங்கவல்ல
மக்களை - பிள்ளைகளை
பெறுவர்கள் - அடைவார்கள்.

குறிப்பு:—'தாயர்' எனப் பன்மையாகக் கூறியது - பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் எனத் தாய்மார் ஐவராதலாலும், சிறுதாய முதலியோரும் தாய்மாரே யாவராதலாலுமாம். தொட்டிற்பருவத்திலேயே பூதனை, சகடாஸுரன் முதலியோர்களை முடித்ததனால், கண்ணபிரான் மெல்ல அடியிட்டு நடக்கத்தொடங்கியபோதே 'இனி, இவனால் நமக்கு என்னதீங்கு நேரிடுமோ!' என்று கம்ஸாதிகள் நடுங்கி ஒடுங்கினராதலால் 'ஒன்னார்தளர' என்றாரென்க. ஒன்னார் — ஒன்றார்; (தம்மோடு மனம்) பொருந்தாதவர்; எனவே, பகைவராவர். பெரியாழ்வார் பிறந்தகுடி - வேயர்குடி எனப்படும். 'சிராவிரித்தன' என்றும்பாடமாம்; பொருந்தாதவே ... ... ... ... ... (கக)

அடி:—தொடர் செக்கர் மின்னுக் கன்னல் முன்னல் ஒருகால் படர் பக்கம் வெண் நிரை ஆயர் பொன்.

ஏழாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

---

## எட்டாந்திருமொழி

## பொன்னியற் கிண்கிணி.



**அவதாரிகை:**—கண்ணபிரான் குழந்தைப்பருவத்துக்குத் தகுதியாக ஓடிவந்து தன்னை அணைத்துக்கொள்ள வேணுமென்று யசோதைப்பிராட்டி வேண்டி அநுபவித்தாற்போலே, ஆழ்வார் தாமும் தம்மை அந்த யசோதைப்பிராட்டியாகப் பாவித்து, அந்த கண்ணபிரான் தம்மை அணைத்துக்கொள்ள வேணுமென்று விரும்பி அநுபவித்து இனியராகிறார் - இத்திருமொழியில்.

பொன்னியற் கிண்கிணி சுட்டி புறங்கட்டித்
தன்னிய லோசை சலன்சல னென்றிட
மின்னியல் மேகம் விரைந்தெதிர் வந்தாற்போல் [வச்சோ.
என்னிடைக் கோட்டரா வச்சோவச்சோ வெம்பெரு மான்வாரா வச்சோ

பொன் இயல் - பொன்னாற்செய்த
கிண்கிணி - அரைச்சதங்கை பாதச்சதங் [கைகளையும்
சுட்டி - சுட்டியையும்
புறம் - (அததற்கு உரிய) இடங்களிலே
கட்டி - அணிந்து
தன் - சதங்கைக்கு
இயல் - பொருந்திய
ஓசை - சப்தமானது
சலன் சலன் என்றிட - சலன்சலனென்று [ஒலிக்க
மின் இயல் - மின்னலோடுபொருந்திய
மேகம் - மேகமானது
விரைந்து - வேகமாக ஓடிவந்து
எதிர் வந்தால் போல் - எதிரேவந்தாற் [போலே
என் இடைக்கு ஓட்டரா } என் இடையி லிருக்க (விரும்பி) ஓடிவந்து
அச்சோ அச்சோ - (என்னை) அணைத்துக் [கொள்ளவேணும், அணைத்துக்கொள்ள [வேணும்;
எம் பெருமான் - எங்களுடைய தலைவனே!
வாரா - வந்து
அச்சோ அச்சோ—.

குறிப்பு:—**கிண்கிணி** - சேவடிக் கிண்கிணி, அரைக்கிண்கிணியென்ற இரண்டையுங்காட்டும். மிகவும் ஒளிவீசுகின்ற ஆபரணங்களை அணிந்து கொண்டுள்ள கண்ணன் ஓடிவருவது - மின்னலைக் கொண்டுள்ள மேகம் விரைந்து ஓடிவருவதை ஒக்கும். உபமேயத்தில், 'சலன்சலனென்றிட' என்றதனால், உபமானத்தில் சிறிய இடிகளிடித்தலைக் கொள்க. குழந்தைகள் தாய்மாரிடுப்பில் ஏறுவதற்காக ஓடிவந்து அத்தாய்மார்களைத் தழுவி அணைத்துக்கொள்ளும் இயல்பைப் பிரார்த்திக்கிறபடி. 'அச்சோ' என்பது - முற்காலத்திலே குழந்தையை 'அணைத்துக்கொள்' என்று வேண்டுதற்கு ஏற்ற குறிப்புச்சொல்லாக விருந்ததெனக் கொள்ளத்தகும்; இனி, 'அச்சோ' என்பது, அதிசயத்தைக் குறிப்பதோ ரிடைச்சொல்லெனக் கொண்டு, கண்ணன் தன்னை அணைத்துக்கொள்ளுதலை நினைக்கும்போது தோன்றும் பரமாநந்தத்தில்மூழ்கி நெஞ்சுருகிச் சொல்லிடிந்து வாய்விட்டுச் சொல்ல மாட்டாமல் அவ்வாஶ்சர்யத்தை ஒருதரத்துக்கிருதரம் 'அச்சோ அச்சோ' என்கிறாள் என்னவுமாம்; எனவே, இது - இங்கு, 'அணைத்துக்கொள்' என்ற பொருளை ஸந்தர்ப்பத்தால் குறிப்பிக்கின்றதென்க. மேகம் - வடசொல். ஓட்டம்+தரா=ஓட்டரா, விகாரப்புணர்ச்சி; ["ஓட்டரா வந்தென் கைப்பற்றி" என்ற பாசுரமுங்காண்க.] ஓட்டரா, வாரா - 'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகாலவினையெச்சம்: ஓட்டந்து, ஓடி வந்து என்றுபொருளாம்; ["ஓட்டந்து பாய்ந்திடுகின்ற" என்றதுங்காண்க.] (க)

சேங்கம லப்பூவில் தேனுண்ணும் வண்டேபோற்
பங்கிகள் வந்துன் பவளவாய் மொய்ப்பச்
சங்குவில் வாள்தண்டு சக்கர மேந்திய
அங்கைக ளாலேவந் தச்சோவச்சோ வாரத் தழுவாவந் தச்சோவச்சோ. (உ)

செங்கமலம் பூவில் - செந்தாமரைப் பூவில்
தேன் உண்ணும் - தேனைக்குடிப்பதற்காக [மொய்க்கின்ற
வண்டே போல் - வண்டுகளைப்போல
பங்கிகள் வந்து - (உனது) கூந்தல் மயிர்கள் வந்து
உன பவளம் வாய் - பவளம்போற் செந்நிறமான உனதுவாயில்
மொய்ப்ப - மொய்த்துக்கொள்ளும்படி
வந்து - ஓடிவந்து
சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
வில் - ஸ்ரீசார்ங்கத்தையும்
வாள் - நந்தகத்தையும்
தண்டு - கௌமோதகியையும்
சக்கரம் - ஸுதர்சநாழ்வானையும்
ஏந்திய - (பூவேந்தினாற்போல்) தரித்துக்கொண்டுள்ள
அம் கைகளாலே - அழகியகைகளாலே
அச்சோ அச்சோ—;
வந்து - ஓடிவந்து
ஆர தழுவா - த்ருப்தி உண்டாகும்படி நன்றாகத்தழுவி
அச்சோ அச்சோ—.

குறிப்பு:—ஓடிவிளையாடும்போது வாரின கூந்தலும் கலைந்துவிடுமாதலால் அங்ஙனங்கலைந்து தொங்கும் கறுத்தமயிர்கள் செந்நிறமான வாயிற்படிதல் - செந்தாமரைப்பூவில் கருவண்டுகள் மொய்த்துக்கிடத்தலை ஒத்திருக்கு மென்க. பங்கி - ஆண்மயிர், "பங்கியே பிறமயிர்க்கும் பகருமாண்

மயிர்க்கும்பேராம்'' என்ற நிகண்டுகொண்க. வாள்-'வாள:' என்றவடசொல் விகாரம். தண்டு - தண்டு. தழுவா=கீழ்ப்பாட்டில் 'வாரா' என்றது போலக் கொள்க. இப்பாட்டில் இரண்டாமடியில் தளைதட்டாநின்றது; இவ்வாறே பாடங்காண்கிறது. (உ)

பஞ்சவர் தூதனாய்ப் பாரதங் கைசெய்து
நஞ்சுமிழ் நாகங் கிடந்தநற் பொய்கைபுக்
கஞ்சப் பணத்தின்மேற் பாய்ந்திட் டருள்செய்த
அஞ்சன வண்ணனே யச்சோவச்சோ வாயர் பெருமானே யச்சோவச்சோ.

பஞ்சவர் - பாண்டவர்களுக்காக
தூதன் ஆய் - (துர்யோதநாதிகளிடம்) [தூதனாய்ப்போய்,
(அந்த துர்யோதநாதிகள் தன் சொற்படி இசைந்து வாராமையால்)
பாரதம் - பாரதயுத்தத்தை
கைசெய்து - அணிவகுத்துச்செய்து
நஞ்சு - விஷத்தை
உமிழ் - கக்குகின்ற
நாகம் - (காளிய) ஸர்ப்பம்
கிடந்த - இருந்த
நல் பொய்கை - கொடிய மடுவிலே
புக்கு - புகுந்து
அஞ்ச . (ஆய்ச்சிகளும் ஆயரும்) பயப்படும்படி
பணத்தின் மேல் - (அப்பாம்பின்) படத்திலே
பாய்ந்திட்டு - குதித்து
(நடமாடி அக்காளியனை இளைப்பித்துப் பின்பு அவன் ப்ரார்த்திக்க)
அருள் செய்த - (அப்பாம்பின் ப்ராணனை [க்கருணையால் விட்டிட்ட
அஞ்சனவண்ணனே! அச்சோ அச்சோ-;
ஆயர் - இடையர்களுக்கு
பெருமானே - தலைவனானவனே!
அச்சோ அச்சோ—,

குறிப்பு:—காளியனை அடக்கியது முன்னும், பாரதம் கை செய்தது அதற்குப் பின்னும் நடந்ததாயினும் அம்முறையைக் கருதாமல் இங்ஙன மருளிச் செய்தாரென்க. 'கைசெய்து' என்றவிடத்து, கை - தமிழ் உப ஸர்க்கமென்பர். நல் பொய்கை - எதிர்மறையிலக்கணை [விபரீதலக்ஷணை]; அஞ்ச - காளியன் அஞ்சும்படி எனினுமொக்கும். பணம் - 'ஃபணா' என்ற வடசொல் விகாரம். ... ... ... ... . (௩)

நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத்
தேறி யவளுந் திருவுடம் பிற்பூச
ஊறிய கூனினை யுள்ளே யொடுங்கவன்
றேற வுருவினா யச்சோவச்சோ வெம்பெரு மான்வாரா வச்சோவச்சோ.

நாறிய—நல்லவாஸனை வீசுகின்ற
சாந்தம்—சந்தனத்தை
நமக்கு—எங்களுக்கு
இறை—கொஞ்சம்
நல்கு என்ன—கொடு என்று(நீ) கூனியைக் [கேட்க.
அவளும்—அந்தக்கூனியும் ('இவாகட்குக் கொடுத்தால் நம்மைக் கம்ஸன் தண்டிப் பனோ?' என்று அஞ்சாமல்)
தேறி—மனம் தெளிந்து
திரு உடம்பில்—(உனது) திருமேனியிலே
பூச—சாத்த,
ஊறிய—வெகுநாளாயிருக்கிற
கூனினை—(அவளுடைய) கூனை
உள்ளே—(அவள்) சரீரத்திற்குள்ளே
ஒடுங்க—அடங்கும்படி
அன்று—அக்காலத்திலே
ஏற—நிமிர்த்து
உருவினாய்—உருவினவனே!
அச்சோ அச்சோ—;
எம்பெருமான்! வந்து அச்சோ அச்சோ.

குறிப்பு:—அக்ரூரன் கம்ஸனது கட்டளையினாலே கண்ணபிரானை மதுரைக்கழைக்க, கண்ணன் கம்ஸனைக்கொல்ல நினைத்துப் பலராமனுடன் புறப்பட்டு மதுரையிற்புகுந்து நடுவழியில் ஒரு துஷ்டவண்ணானைக்கொன்று அவனிடமிருந்த சிறந்த ஆடைகளையெடுத்துச் சாத்திக்கொண்டு ராஜவீதியிலெழுந்தருளுகிற வளவிலே, சந்தநத்தைக் கையிலேந்திவருகிற கூனியொருத்தியைக்கண்டு 'அம்மே! நமக்கும் நம் அண்ணர்க்கும் பூசலாம்படி சந்தநம் கொடுக்கவல்லையோ?' என்று கேட்க, அவளும் கண்ணபிரான் திருக்கண்களால் மனமிழப்புண்டு மறுக்கமாட்டாமையாலும் 'வெண்ணெயிலே பழகின இவர்கள் சந்தநத்தின்வாசி அறிவர்களோ' என்னுமத்தாலும் மட்டமான சந்தநங்களைக்காட்ட, அவற்றுக்கெல்லாம் ஒவ்வொருகுறை சொல்லிக்கழித்து 'அண்ணருடம்புக்கும் நம்முடம்புக்கும் ஏற்ற வெகுநேர்த்தியான வாஸனையையுடைய சந்தநத்தில் சிறிது தா' என்றுவிரும்பிச்சொல்ல அவளும் இவன் சந்தநத்தின் வாசியறிந்தபடியையும் விரும்பின சீர்மையையும் வடிவழகையுங்கண்டு மகிழ்ந்து 'கம்ஸனுக்குக்கொண்டுபோகிற இத்தை இவர்களுக்குத் தந்தால் தண்டம் நேருமே' என்றும் அஞ்சாமல் உள்ளந்தேறி உத்தமமான சந்தநத்தையெடுத்து 'இத்தைத் திருவுள்ளம்பற்றுங்கள்' என்று ஆதரத்தோடு ஸமர்ப்பிக்க, அப்பூச்சைத் திருமேனியி லணிந்துகொண்ட கண்ணபிரான் 'இவள் அநந்யப்ரயோஜநமாய்க் கிஞ்சித்கரித்தாள்' என்று உகந்து, அவள் முதுகில் வேர்விழுந்ததோ வென்னும்படி உறைத்துக்கிடந்த கூனை நிமிர்த்துவிடக் கடவோமென்று திருவுள்ளம்பற்றி, நடுவிரலும் அதற்கு முன்விரலும் கொண்ட நுனிக்கையினாலே அவளை மோவாய்க்கட்டையிற் பிடித்துத் தன்திருவடிகளினால் அவள் கால்களை அமுக்கியிழுத்துத்தூக்கிக் கூன் சரீரத்துக்குள் அடங்கிவிடும்படி கோணல் நிமிர்த்தி அவளை மகளிரிற் சிறந்த உருவினளாக்கினனென்ற வரலாறுகாண்க சாந்தம்- 'சந்தநம்' என்னும் வடசொல்லின் மரூஉ. கூன் + இன் + ஐ = கூனினை; இன்- இடைச்சாரியை. ... ... ... ... ... (ச)

கழல்மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி
எழலுற்று மீண்டே யிருந்துன்னை நோக்குஞ்
சுழலைப் பெரிதுடைத் துச்சோ தனனை
அழல விழித்தானே யச்சோவச்சோ வாழியங் கையனே யச்சோவச்சோ.

கழல்—வீரக்கழலையணிந்த
மன்னர்—ராஜாக்கள் [வில்
சூழ—தன்னைச் சுற்றியிருக்க (அவர்கள் நடு
கதிர் போல்—ஸூர்யன்போல
விளங்கி — ப்ரகாசமாயிருந்து ('கண்ணனுக்கு எழுந்திருத்தல் குசல ப்ரச்நம்பண்ணுதல் முதலிய மர்யாதை ஒன்றும் செய்யக்கூடாது' என்று கட்டளையிட்டிருந்த தானே தனக்குந் தெரியாமல்)
எழல் உற்று—(முதலில்) எழுந்திருந்து
மீண்டு—மறுபடியும்
இருந்து—(தானெழுந்தது தெரியாதபடி) உட்கார்ந்துகொண்டு
உன்னை—உன்னை
நோக்கும்—(பொய்யாஸநமிடுதல் முதலிய வற்றால் கொல்வதாகப்) பார்த்த
பெரிது சுழலை உடை—மிகவும் (வஞ்சனையான) ஆலோசனையையுடைய
துச்சோதனனை—துர்யோதநனை (திருவுள்ளத்திலுள்ள சீற்றமெல்லாம் பார்வையிலே தோன்றும்படி)
அழல விழித்தானே—உஷ்ணமாகப் பட்டிதவனே! [தவனே!
அச்சோ அச்சோ—;
ஆழி—திருவாழியாழ்வானை
அம் கையனே—அழகியகையி லேந்தினவனே!
அச்சோ அச்சோ—. [னே!

குறிப்பு:—கண்ணபிரான் பாண்டவதூதனுய் துர்யோதநனிடமெழுந்தருள, அக்கண்ணன் வருகையை அறிந்த துர்யோதநன் 'கண்ணன் வரும்போது ஒருவருமெழுந்து மர்யாதை செய்யலாகாது' என்று உறுதியாய் நியமித்துத் தானும் ஸபையிலே உறுதியுடனிருக்க, கண்ணபிரான் அங்கேற எழுந்தருளின வளவிலே ஸபையிலிருந்த அரசர்களனைவரும் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் ஜ்யோதிஸ்ஸைக்கண்டு பரவஸராயெழுந்திருந்துவிட, துர்யோதநன் தானும் துடைநடுங்கி எழுந்திருந்துவிட்டு, உடனே கறுக்கொண்டு தானெழுந்தது தெரியாதபடியிருக்க, கண்ணன் தனக்காக இட்டிருந்த க்ருத்ரிமாஸநத்திலே உட்காரும்போது அவ்வாஸநம் நெறுநெறெனமுறிய அப்போது பேருரு எடுத்துக்கொண்டு துர்யோதநனை உருத்துப்பார்த்தன னென்க. இந்தஸந்நிவேசந் தோற்ற எழுந்தருளியிருக்குமிடம் பெருமாள்கோயிலில் 'திருப்பாடகம்' என்னுந் திவ்வியதேசம். பாடு அகம் = பாடு-பெருமை; ["பாடிடம் பெருமை யோசை" என்பது நிகண்டு.] அது தோற்ற எருந்தருளியிருக்குமிடம்—பாடகம்; "அரவுநீள் கொடியோனவையுளாசனத்தை அஞ்சிடாதே யிடவதற்குப், பெரியமாயேனி அண்ட மூடுருவப் பெருந்திசையடங்கிட நிமிர்நதோன்" என்றதையுணர்க. கழல் - வீரக்குறியாகக் காலில்பூணுவதோ ராபரணம்; "கழல் கழங்கொடு செருப்புக் காலணி காலின்நாற்பேர்" என்று நிகண்டுகாண்க. சுழலை - 'சூழலை' என்பதன் குறுக்கல்; (மூன்றும் வேற்றுமை;) சூழல் - ஆலோசித்தல்: சூழ் - பகுதி; அல்-தொழிற்பெயர் விகுதி. 'சுழலை' என்று மொருதனிச்சொல் உண்டென்னலாம்; ["சுழலையில் நின்றுய்துங்கொலோ."] அச்சோ தநன் - வடசொற்சிதைவு. ... ... ... ... (ரு)

போரொக்கப் பண்ணியிப் பூமிப் பொறைதீர்ப்பான்
தேரொக்க வூர்ந்தாய் செழுந்தார் விசயற்காய்க்
காரொக்கு மேனிக் கரும்பெருங் கண்ணனே
ஆரத் தழுவாவந் தச்சோவச்சோ வாயர்கள் போரேறே யச்சோவச்சோ.

இ பூமி—இந்தப் பூமியினுடைய
பொறை—பாரத்தை
தீர்ப்பான்—தீர்ப்பதற்காக
போர்—யுத்தத்தை
ஒக்க—(திர்யோதநாதிகளோடு) ஸமமாக
பண்ணி—செய்து,
செழு—செழுமைதங்கிய
தார்—மாலையையுடைய
விசயற்கு ஆய்—அர்ஜுநனுக்காக
தேர்—(அவனுடைய) தேரை
ஒக்க—(எதிரிகள்தேர் பலவற்றிற்கும் இது ஒன்றுமே) ஸமமாம்படி
ஊர்ந்தாய்—பாகனாய்ச்செலுத்தினவனே!

கார் ஒக்கும்—மேகத்தோடு ஒத்த
மேனி—திருமேனியில்
கரும் பெருங் கண்ணனே—கரியவாகிப்புடைபரந்த கண்களையுடையவனே!
வந்து—ஓடிவந்து
ஆர—நன்றாக
தழுவா—தழுவிக்கொண்டு
அச்சோ அச்சோ—;
ஆயர்கள்—இடையர்களுக்கு (அடங்கி நிற்கின்ற)
போர் ஏறே—போர்செய்யுந் தன்மையுள்ள ரிஷபம்போன்றவனே!
அச்சோ அச்சோ—.

குறிப்பு:—துர்யோதநாதிகளுக்குப் பதினொரு அக்ஷௌஹிணி சேனையும், பாண்டவர்களுக்கு ஏழு அக்ஷௌஹிணி ஸேனையுமாயிருக்கவும், இவ்விரு திறத்தாரும் போர்செய்யும்போது இருவரும் சரிசமமாக யுத்தஞ்செய்பவர்களாகவே நிற்குமாறு செய்தனன் கண்ணபிரானென்க. பகைவர்களோடு போர்புரியும்போது தும்பைப்பூமாலையும், வெற்றிகொண்டபோது வாகைப்பூமாலையும் வீரர் சூடுவரெனக்கூறுதல் தமிழர்வழக்கமாதலால், இவ்விருபூமாலையையும் அவ்வப்போது அர்ஜுநன் அணிவனென்பதைத் தெரிவிக்க, பொதுவாகச் 'செழுந்தார்விசயன்' என்றார். தீர்ப்பான்=தீர் - பகுதி; பான்-விகுதி; அன்றி, ஆன் - வினையெச்சவிகுதி, ப்-எதிர்கால இடைநிலை என்பது-ஒருசாரார் கொள்கை. விசயன் - அர்ஜுனனுக்கு, 'விஜயன்' என்று வடமொழிநாமம் வழங்குமென்றறிக. ... ... ... (சு)

மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில்
தக்கதி தன்றென்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பாற் கிளறிய
சக்கரக் கையனே யச்சோவச்சோ சங்க மிடத்தானே யச்சோவச்சோ.

மிக்க பெரும் புகழ்—(ஔதார்யத்தால்) மிகுந்த கீர்த்தியையுடைய
மா வலி—மஹாபலி (செய்த)
வேள்வியில்—யாகத்திலே (வாமநனாய்ச் சென்ற உனக்கு அந்தமஹாபலி நீகேட்டதைக்கொடுக்க முயன்றவளவிலே,)
இது—'நீகொடுக்கிற இது
தக்கது அன்று—தகுதியானதன்று'
என்று—என்று முறையிட்டு
தானம்—பூமிதானத்தை (அவன் தத்தம்பண்ணும்போது நீர்விழவொட்டாமல்)
விலக்கிய—தடுத்த
சுக்கிரன்—சுக்ராசார்யனுடைய
கண்ணை—ஒருகண்ணை
துரும்பால்—(உன்கையிலணிந்திருந்த) தர்ப்பபவித்ரத்தின் நுனியால்
கிளறிய—கலக்கின
சக்கரம் கையனே—சக்ராயுதமேந்திய கையையுடையவனே!
அச்சோ அச்சோ—;
சங்கம்—பாஞ்சஜந்யத்தை
இடத்தானே—இடக்கையிலேந்தினவனே!
அச்சோ அச்சோ—.

குறிப்பு:—மாவலி - மஹாபலி. தானம் - தாநம். சுக்கிரன் - மஹாபலியின் ஆசார்யனான சுக்ரன்; வாமநமூர்த்தியின் வடிவழகாலும் மழலைச் சொல்லாலும் மனமகிழ்ந்த மஹாபலி மூவடிமண்ணைக் கொடுக்க யத்நித்தவளவிலே, சுக்ராசார்யன் எம்பெருமானது வடிவையும் வந்தவகையையும் பேச்சையும் ஊன்றிப்பார்த்து 'இவன் ஸர்வேஸ்வரன், தேவகார்யம் செய்யும் பொருட்டு உன்செல்வத்தையெல்லாம் பறித்துப்போகவந்தான்; ஆகையால் நீ இவனுக்கொன்றும் தரத்தகாது' என்று தாநத்தைத்தடுக்க, அவன் அதை ஆதரியாமல் தாரைவார்த்துத் தத்தம் செய்யப்புக, ஜலபாத்ரத்தின் [திருக்காவிரி] த்வாரத்திலே அந்த சுக்ரன் புகுந்துகொண்டு நீர் விழவொட்டாமல் தடுக்க, ஸ்ரீவிஷ்ணு, த்வாரம் சோதிப்பவன்போல, தன்னுடைய திருக்கையிலணிந்த தர்ப்ப பவித்ரத்தின் நுனியால் அவன் கண்ணைக் குத்திக்கலக்க, அவனும் கண்கெட்டு அங்குநின்றும் வெளிப்பட,

சென்று மாவலியிடத்தில் நீரேற்றுப் பெற்றனனென்க. 'தரும்பாற்கிள ரிப சக்கரம்' என்றதனால், "கருதுமிடம் பொருது - கைந்நின்ற சக்கரத்தன்" என்கிறபடியே திருமால் விரும்பிய இடங்களில் விரும்பின வடிவங் கொண்டு செல்லுந் தன்மையையுடைய திருச்சக்கரமே பவித்ரத்தின் வடிவத்துடன் நின்று சுக்ரன் கண்ணைக் கலக்கிற்றென்பது பெறப்படும். (எ)

என்னிது மாயமென் னப்ப னறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டள வாயென்ன
மன்னு நமுசியை வானிற் சுழற்றிய
மின்னு முடியனே யச்சோவச்சோ வேங்கட வாணனே யச்சோவச்சோ.

(வாமநனுய்ச்சென்ற திருமால் மாவலியிடத்தில் நீரேற்றுத் திரிவிக்கிரமனுய் வளர்ந்து அளக்கப்புகும்போது, அதுகண்ட மஹாபலிபுத்ரனை நமுசி ஓடிவந்து,)

இது–'(யாசிக்கும்போதிருந்த வடிவம்மாறி யளக்கிற) இது
என் மாயம்–என்ன மாயச்செய்கை!;
என் அப்பன்–என்தகப்பன்
அறிந்திலன்–(நீசெய்யும் இந்தமாயத்தை) அறியவில்லை,
முன்னைய வண்ணமே கொண்டு–நீயாசிக்கவந்தபோதிருந்தவடிவத்தையேகொண்டு
அளவாய்–அளப்பாயாக'
என்ன–என்றுசொல்ல,
மன்னு–(இப்படி) பிடிவாதமாய் நின்ற
நமுசியை–(அந்த) நமுசியென்பவனை
வானில்–ஆகாசத்திலே
சுழற்றிய–சுழலச்செய்த
மின்னு முடியனே–விளங்குகின்ற கிரீடத்தையுடையவனே!
அச்சோ அச்சோ–;
வேங்கடம்–திருமலையிலே
வாணனே–வாழுமவனே!
அச்சோ அச்சோ—.

குறிப்பு:—நமுசி, திரிவிக்கிரமனோடு வெகுநாழி வழக்காடி, எம்பெருமான் சொன்ன ஸமாதாநங்களைக் கேளாமல் தான் பிடித்த திருவடியின் பிடியை விடாமல் உறுதியாயிருக்க, எம்பெருமான் வளர்ந்ததிருவடியினால் அவனை ஆகாசத்திலே கொண்டுபோய்ச் சுழன்றுவிழும்படிசெய்த வரலாறு காண்க. 'சுழற்றிய' என்ற பெயரெச்சம் முடியனைக்கொண்டு முடியும். வாழ்+நன்=வாணன்; [மரூஉ.] "கொண்டளவாய் என்ற" என்றும் பாடமோதலாம். ... ... ... ... ... (அ)

கண்ட கடலும் மலையு முலகேழும்
முண்டத்துக் காற்ரு முகில்வண்ணு ஓஓவென்று
இண்டைச் சடைமுடி யீச னிரக்கொள்ள [சோ.
மண்டை நிறைத்தானே யச்சோவச்சோ மார்வில் மறுவனே யச்சோவச்

கண்ட–'கண்ணுற்கண்ட
கடலும்–ஸமுத்ரங்களும்
மலையும்–மலைகளும்
உலகு ஏழும்–கீழ்ஏழ் மேல் ஏழ்என்ற பதினைன்கு லோகங்களும் (ஆகிய எல்லாவற்றையுமிட்டு நிறைக்கப்பார்த்தாலும்)
முண்டத்துக்கு – (என்கையிலிருக்கிற ப்ரஹ்ம) கபாலத்துக்கு
ஆற்ரு–போதாவாம்;
முகில் வண்ணு–மேகவண்ணனே!
ஓஓ!–ஓஓ!' [ஹாஹா!]
என்று–என்றுகூப்பிட்டு

இண்டை—நெருங்கின
சடை முடி—ஜடாபந்தத்தையுடைய
ஈசன்—சிவன்
இரக்கொள்ள—பிச்சையெடுக்க,
மண்டை—(அவன்கையிலிருந்த) ப்ரஹ்ம கபாலத்தை
நிறைத்தானே—(மார்பிலிருந்து உண்டான ரக்தத்தால்) நிறையச்செய்தவனே!
அச்சோ அச்சோ—;
மார்வில்—திருமார்பிலே
மறுவனே—ஸ்ரீ வத்ஸமென்னும் மச்சத்தை யுடையவனே!
அச்சோ அச்சோ—.

குறிப்பு:—மஹாப்ரயாஸங்கள் பட்டும் நிறைக்கமுடியாத ப்ரஹ்மகபாலத்தின் தன்மையைக் காட்டிற்று - முதலிரண்டடி. ஒழு - 'ஒ' என்னும் இரக்கக்குறிப் பிடைச்சொல் அளபெடுத்து வந்தது. இனி, கண்ட கடலிலும் மலைகளிலும் உலகேழிலும் (திரிந்தும்) முண்டத்துக்கு ஆற்று என்றுமாம். 'உண்டத்துக்கு ஆற்று' என்றெடுத்து, [எங்கேதிரிந்தும் மிகவருந்தியும்] கபாலத்திற்கு வேண்டிய உணவையிடுதற்கு முடியாமல் ஈசன் 'முகில் வண்ணா ஓஓ' என்று இரக்கொள்ள என்று முரைக்கலாம். 'முண்டத்துக்கு' என்ற பாடத்தில் மூன்றுஞ் சீரோடும், 'உண்டத்துக்கு' என்ற பாடத்தில் இறுதிச் சீரோடும் மோனைத்தொடர் காண்க. சடை - ஜடா. இரக்கொள்ள = இர - முதனிலைத் தொழிற்பெயர். ... ... (கூ)

துன்னிய பேரிருள் சூழ்ந்து லகைமூட
மன்னிய நான்மறை முற்று மறைந்திடப்
பின்னிவ் வுலகினிற் பேரிருள் நீங்கவன்
றன்னம தானானே யச்சோவச்சோ வார்மறை தந்தானே யச்சோவச்சோ.

மன்னிய—நித்யஸித்தமான
நால் மறை—சதுர்வேதங்களும்
முற்றும்—முழுவதும்
மறைந்திட—மறைந்துவிட (அதனால்)
துன்னிய—நெருங்கிய
பேர் இருள்—பெரிய அஜ்ஞாநாந்தகாரம்
சூழ்ந்து—பரவி
உலகை—லோகங்களை
மூட—மறைத்துக்கொள்ள,
பின்—பின்பு
இ உலகினில்—இந்த லோகங்களில்
பேர் இருள்—(அந்த) மிகுந்த அஜ்ஞாநாந்தகாரமானது
நீங்க—நீங்கும்படி
அன்று—அக்காலத்தில்
அன்னம் அது ஆனானே—ஹம்ஸமாய் அவதரித்தவனே!
அச்சோ அச்சோ—;
ஆர் மறை தந்தானே—(அந்த ரூபத்தோடு) அருமையான வேதங்களை உபகரித்தவனே!
அச்சோ அச்சோ—.

குறிப்பு:—முன் ஒரு கல்பத்தின் அந்தத்தில் சதுர்முகன் துயிலுகையில் அவன் முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக் கொண்டிருந்த நான்கு வேதங்களையும் மஹாபலிஷ்டனாய், அருந்தவங்கள் செய்து பெருவரங்கள் பெற்ற சோமுகனென்னும் அசுரன் கவர்ந்து கொண்டு ப்ரளயவெள்ளத்திலுள் மறைந்துசெல்ல, அதனையுணர்ந்து திருமால் ஒருபெருமீனாகத் திருவவதரித்து அப்பெருங்கடலி னுட்புக்கு அவ்வஸுரனைத் தேடிப் பிடித்துக்கொன்று, அவன் கவர்ந்து சென்ற வேதங்களை

மீட்டுக் கொணர்ந்து, ஸாரத்தையும் அஸாரத்தையும் பிரிக்குந்தன்மையுள்ள ஹம்ஸமாய்த்தோன்றிப் பிரமனுக்கு உபதேசித்த வரலாறு காண்க. நான்மறைகளாவது—ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன; இவை வேதவ்யாஸரால் பிரிக்கப்பட்ட பிரிவின் பெயர்களாதலால் அதற்கு முன்னிருந்த தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் என்ற நான்கும் என்றுகொள்ளுதல் தகும். அன்னம்—'ஹம்ஸம்' என்பதன் விகாரம். "அருமறைதந்தானே" என்றபாடத்தில் தளைதட்டுதலால் "ஆர்மறை தந்தானே" என்றுபாடமோதுவது ஒக்குமென்பர்: ஆர்='அருமை' என்ற பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு இடையுகரங்கெட்டு 'ஆர்' என நின்றது; ["ஈறுபோதல்... ஆதிநீடல்" இத்யாதி.] (கo)

நச்சுவார் முன்னிற்கும் நாரா யணன்றன்னை
அச்சோ வருகவென் றுய்ச்சி யுரைத்தன
மச்சணி மாடப் புதுவைக்கோன் பட்டன்சொல்
நிச்சலும் பாடுவார் நீள்விசும் பாள்வரே. (கக)

நச்சுவார் முன் } (தன்னை) விரும்பிப் பக்திபண்ணுமவர்களுடையமுன்னே
நிற்கும்—வந்து நிற்குந்தன்மையுள்ள
நாராயணன் தன்னை } நாராயணனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை
ஆய்ச்சி—இடைக்குலத்தவளான யசோதை (அணைத்துக்கொள்ளுகையிலுண்டான விருப்பம் தோன்றும்படி)
அச்சோ வருக என்று உரைத்தன } 'அச்சோவருவாயாக' என்று சொன்னவற்றை,

மச்சு அணி—பலநிலைகளால் அழகிய
மாடம்—மாளிகைகளையுடைய
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு
கோன் - நிர்வாஹகரான
பட்டன் - பெரியாழ்வார்
சொல் - சொன்ன இப்பத்துப்பாசுரங்களையும்
பாடுவார் - பாடுமவர்கள்
நிச்சலும்—எப்போதும்
நீள் விசும்பு—பரமாகாசமாகிற பரமபதத்திற்கு
ஆள்வர்—நிர்வாஹகராவர்.

குறிப்பு:—நிச்சலும் பாடுவார் என்று நேரேகூட்டவுமாம். நீள்விசும்பு—"பரமே வ்யோமந்" இத்யாதி வைதிகவாக்யங்கள் காண்க. ... (கக)

அடி:—பொன் செங்கமலம் பஞ்சவர் நாறிய கழல் போர் மிக்க என்னிது கண்ட துன்னிய நச்சு வட்டு.

ஏட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## ஒன்பதாந்திருமொழி.

## வட்டு நடுவே.



**அவதாரிகை:**—கண்ணபிரான் ஓடிவந்து தன்னை முதுகிற் கட்டிக்கொள்வதை யசோதைப் பிராட்டி அக்காலத்திலே விரும்பிக் கூறினாற்போலே ஆழ்வார் தாமும் தம்மை அவளாகப் பாவித்துத் தம்முதுகில் கண்ணன்வந்து கட்டிக்கொள்வதாகப் பாவநாப்ரகர்ஷத்தா லநுபவித்து இனியராகிறார் - இத்திருமொழியில்.

வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க
மொட்டு நுனையில் முளைக்கின்ற முத்தேபோற்
சொட்டுச்சொட் டென்னத் துளிக்கத் துளிக்கவென்
குட்டன்வந் தென்னைப் புறம்புல்குவான் கோவிந்த னென்னைப் புறம்புல்கு [வான்.

என் குட்டன் - என்பிள்ளை.
வட்டு நடுவே - இரண்டு நீலரத்நவட்டுகளின் நடுவே
வளர்கின்ற - வளர்ந்துகொண்டிருப்பதான
மாணிக்கமொட்டு - இந்திரநீலமயமான அரும்பினுடைய
நுனையில் - நுனியிலே
முளைக்கின்ற - உண்டாகின்ற
முத்தே போல் - முத்தைப்போல
சொட்டுசொட்டு என்ன - சொட்டுச் சொட்டென்றவோசையுண்டாம்படி (அம்மாணிக்க மொட்டு)
துளிக்க துளிக்க - பலதரம் துளியாநிற்க,
வந்து - ஓடிவந்து
என்னை - என்னுடைய
புறம் - முதுகை
புல்குவான் - கட்டிக்கொள்வான்;
கோவிந்தன் என்னை புறம்புல்குவான்—.

குறிப்பு:—‘வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க மொட்டு’ என்றது-கண்ணபிரானது குறியை யென்க; [குறி - குஹ்யாவயவம்.] நிறத்தாலும் ஆகாரத்தாலும் உவமை ‘முளைக்கின்ற முத்து’ என்றது - அதில் நின்று வெளிவருகிற சிறுநீரை உபமேயத்தைச் சொல்லாது உபமானத்தை மாத்திரம் சொல்லி அதனால் உபமேயத்தைப் பெறவைத்தது - இடக்கரை அடக்கவேணுமென்ற கருத்தினாற் போலுமென்ப. சிறுநீர்த் துளிகள் இற்று இற்று மீண்டும் வருதலால், ‘சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க’ என்றார். என்னை-உருபுமயக்கம். புல்குவான்—அணைத்துக்கொண்ட படியைச் சொல்லுகிறது; இனி: ‘அணைத்துக்கொள்வானாக’ என்று விரும்பினதாகவும் கொள்ளலாம். ... ... ... ... (க)

**கிண்கிணி கட்டிக் கிறிகட்டிக் கையினிற்**
**கங்கண மிட்டுக் கழுத்தில் தொடர்கட்டித்**
**தங்கணத் தாலே சதிரா நடந்துவந்**
**தென்கண்ண னென்னைப் புறம்புல்குவா னெம்பிரா னென்னைப் புறம்புல்கு [வான்.**

என் கண்ணன் - என்கண்ணபிரான்,—
கிண்கிணி - அரைச்சதங்கையை
கட்டி - கட்டிக்கொண்டும்
கிறி - சிறப்பவளவடத்தை
கையினில் - கையிலே
கட்டி - கட்டிக்கொண்டும்
கங்கணம் - தோள்வளையை
இட்டு-(தோள்களில்) சாத்திக்கொண்டும்
கழுத்தில் - திருக்கழுத்திலே
தொடர் - சங்கிலியை
கட்டி - அணிந்துகொண்டும்
தம் கணத்தாலே - (இன்னுமணிந்துகொண்டுள்ள) திருவாபரணங்களின் திரளோடுங்கூட
சதிர் ஆ நடந்து வந்து - அழகாக நடந்து [வந்து
என்னை புறம் புல்குவான்—;
எம்பிரான் என்னை புறம் புல்குவான்—.

குறிப்பு:—கங்கணம் - வடசொல். திருவாபரணங்களைச் சொல்லும் ப்ரகரணமாதலால், சொல்லப்படா தொழிந்த திருவாபரணங்களையுங் கூட்டித் 'தம் கணம்' என்றது. கணம் - 'கணம்' என்ற வடசொல் திரிபு. தன் கணத்தாலே என்று பாடங்கொண்டு, தன்னுடைய கண்ணால் (என்னைக் கடாக்ஷித்துக்கொண்டு) எனினுமமையும்; இப்பொருளில் 'கண்' என்பது மூன்றும் வேற்றுமையுருபை ஏற்கும்போது அத்துச்சாரியை பெற்றுவந்த தெனவேண்டும். ... ... ... ... ... (௨)

கத்தக் கதித்துக் கிடந்த பெருஞ்செல்வம்
ஒத்துப் பொருந்திக்கொண் டுண்ணாது மண்ணாள்வான்
கொத்துத் தலைவன் குடிகெடத் தோன்றிய
அத்தன்வந் தென்னைப் புறம்புல்குவா னாயர்க ளேறென் புறம்புல்குவான்.

கத்தக் கதித்து கிடந்த } மிகவுஞ்செழுத்து (உனக்கு எனக்கென்று பிணங்கும்படி) இருந்த
பெருஞ் செல்வம் - மிகுந்த ஐச்வர்யத்தை
ஒத்து - (தன்பந்துக்களான பாண்டவர்களோடு) ஒத்து
பொருந்திக்கொண்டு - மனம்பொருந்தி [யிருந்து
உண்ணாது - அநுபவியாமல்
மண் - பூமியை
ஆள்வான் - (தான் அத்விதீயனாய்) ஆளவேணுமென்று நினைத்தவனான
கொத்து தலைவன் - (தம்பிமார்களும் பந்துக்களும் ஸேனைகளுமாகிய) திரளுக்குத் தலைவனாகிய துர்யோதநன்
குடி கெட—(தன்) குடும்பத்தோடு பாழாம்படி
தோன்றிய - திருவவதரித்த
அத்தன் - ஸ்வாமி
வந்து என்னை புறம் புல்குவான்—;
ஆயர்கள் ஏறு—இடையர்களுக்குள் சிறந்த கண்ணபிரான்
என் புறம் புல்குவான்—.

குறிப்பு:—கத்தக்கதித்து - "பக்கப்பருத்து," "தக்கத்தடித்து" என்பன போன்ற ஒருவகைக் குறிப்பிடைச்சொல். ஏறு—ஆகுபெயரால்,செருக்கு, நடை, காம்பீர்யம் முதலிய குணங்களால் காளைபோன்ற இளவீரனைக் குறிக்கும். ... ... ... ... ... ... ... (௩)

நாந்தக மேந்திய நம்பி சரணென்று
தாழ்ந்த தனஞ்சயற் காகித் தரணியில்
வேந்தர்க ளுட்க விசயன் மணித்திண்டேர் [ன்.
ஊர்ந்தவ னென்னைப் புறம்புல்குவா னும்பர்கோ னென்னைப் புறம்புல்குவா

நாந்தகம் - 'நந்தகம் என்னும் வாளை
ஏந்திய - கையிலணிந்துள்ள
நம்பி - பெரியோனே!
சரண் - (நீ எனக்கு) ரக்ஷகன்'
என்று - என்றுசொல்லி
தாழ்ந்த - (தன்னை) வணங்கிய
தனஞ்சயற்கு ஆகி } அர்ஜுநனுக்குப் பக்ஷபாதியாயிருந்து
தரணியில் - இப்பூமியிலே
வேந்தர்கள் - (எதிரிகளான) ராஜாக்கள்
உட்க - அஞ்சிக்கலங்கும்படி
விசயன் - அந்த அர்ஜுநனது
மணி திண் தேர் - அழகியவலியதேரை
ஊர்ந்தவன் - (ஸாரதியாயிருந்து) செலுத்தின இவன்
என்னை புறம் புல்குவான்—;
உம்பர் - நித்யஸூரிகளுக்கு
கோன் - நிர்வாஹகனான இவன்
என்னை புறம் புல்குவான்—.

குறிப்பு:—நாந்தகம் - 'நந்தகம்' என்ற வடசொல் நீண்டுகிடக்கிறது. நம்பி - உயர்திணை ஆண்பாற் சிறப்புப்பெயர்; "நம்பி ஆடூஉ, விடலை கோ வேள் குரிசில் தோன்றல், இன்னன ஆண்பெயராகுமென்ப" என்பது நன்னூல். சரண் - 'ஶரணம்' என்ற வடசொற் சிதைவு; அந்தச்சொல் - உபாயத்தையும், வீட்டையும், காவலையுங் குறிக்கும். தனஞ்சயன் - ധநஜயன்; அர்ஜுநனுக்கு மறுபெயர்; இது - தர்மபுத்ரன் ராஜஸூயயாகம் செய்யக் கோலினபோது பலராஜாக்களையும் வென்று மிக்க பொருளைக் கொணர்ந்ததனாலும், வெற்றியையே செல்வமாக வுடையவனென்ற காரணத்தாலும் வந்த பெயராம். தரணி - ധரணீ. உட்க - (நெஞ்சு) உளுக்கும்படியாக மணித்தேர் - மணிகளமைத்துச் சமைத்த தேரென்றுமாம். உம்பர் - மேலுலகு; அங்குள்ளார்க்கு ஆகுபெயர். ... ... (ச)

வெண்கலப் பத்திரங் கட்டி விளையாடிக்
கண்பல செய்த கருந்தழைக் காவின்கீழ்ப்
பண்பல பாடிப்பல் லாண்டிசைப் பப்பண்டு
மண்பல கொண்டான் புறம்புல்குவான் வாமன னென்னைப் புறம்புல்குவா[ன்]

பண்டு - முன்னொருகாலத்திலே
வெண்கலம் பத்திரம் } வெண்கலத்தாற்செய்த பத்திரத்தை
கட்டி - (அரையிற்)கட்டிக்கொண்டு
விளையாடி - விளையாடி
பல கண் செய்த—பலபீலிக்கண்களைக் கொண்டு செய்யப்பட்ட
கரு தழை - பெரியகுடையாகிற
காவின் கீழ் - சோலையின் கீழேயிருந்து
(மாவலியிடத்தில் மூவடிமண்ணை இரந்துபெற்று,)
பல பண் பாடி } (அநுகூலரானவர்கள்) பலவிதராகங்களைப் பாடிக்கொண்டு
பல்லாண்டு இசைப்ப } மங்களாசாஸநம்செய்ய
பல மண் கொண்டான் } பல [ஸகலமான] லோகங்களையுமளந்து தன்னதாக்கிக்கொண்ட இவன்.
புறம் புல்குவான்—;
வாமனன் என்னை புறம்புல்குவான்—.

குறிப்பு:—பத்திரம் - வடசொல்; இலை என்பது பொருள்; வெண்கலத்தாலே இலைவடிவமாகச் செய்து குழந்தையினரையிற் கட்டுதல் முற்காலத்தில் ப்ராஹ்மணர்களின் வழக்கம்போலும்: அங்ஙனம், வாமநாவதாரம் செய்த ஸ்ரீவிஷ்ணு தன் திருவரையிலணிந்து கொண்டனனென்க; இனி,

முதலடியால் கண்ணபிரானது பால்யதசையில் லீலைவகையைச் சொல்லிற்றாகவுமாம். "கண் பலபெய்து" என்று பாடமாகில், கருந்தழை - பீலிப்பிச்சத்தினுடைய, பல கண் - பலகண்களையும், பெய்து - தலையில் அணிந்துகொண்டு, காவின் கீழ் விளையாடி - சோலைநிழலிலே விளையாடியென்று உரைக்கவேண்டும். பீலித்தழையைத் தலையிலேகட்டுகை - ஜாதிக்கு உரிய செய்கையாம் 'மண்' என்றசொல் - ஆகுபெயரால் பூமியைக்காட்டும்; அச்சொல் - இங்கு, உலகம் என்ற பொதுப்பொருளைத் தந்தது. ... (௫)

சத்திர மேந்தித் தனியொரு மாணியாய்
உத்தர வேதியில் நின்ற வொருவனைக்
கத்திரியர் காணக் காணிமுற் றுங்கொண்ட
பத்திரா காரன் புறம்புல்குவான் பாரளந் தானென் புறம்புல்குவான். (௬)

உத்தரவேதியில் நின்ற } உத்தரவேதியிலிருந்த
ஒருவனை—(ஔதார்யத்தில்) அத்விதீயனான மஹாபலியினிடத்திலே,
சத்திரம் - குடையை
ஏந்தி - (கையில்) பிடித்துக்கொண்டு
தனி - ஒப்பற்ற
ஒரு மாணி ஆய் } ஒரு ப்ரஹ்மசாரி வாமநனாய்(ப்போய்)
கத்திரியர் - (அவனுக்குக் கீழ்ப்பட்ட) க்ஷத்ரியர்கள்
காண - பார்த்துக்கொண்டிருக்கையில்
காணி முற்றும் - உலகம் முழுவதையும்
கொண்ட - (நீரேற்றளந்து தன்னதாக்கிக்கொண்ட
பத்திரம் - விலக்ஷணமான
ஆகாரன் - வடிவையுடையனான இவன் புறம் புல்குவான்—;
பார்—பூமியை
அளந்தான் - (திரிவிக்கிரமனாய்) அளந்த இவன் என் புறம் புல்குவான்—.

குறிப்பு:—சத்திரம் - 'ഛത്രം' என்றவடசொல் திரிபு. உத்தரவேதி-ஆஹவநீயாக்நிக்கு உத்தரதிக்கிலே யாகபசுவைக் கட்டுகின்ற யூபஸ்தம்பத்தை நாட்டிய வேதிகை; இச்சொல் - இங்கு, யாகபூமியைக் காட்டுமென்னலாம். கத்திரியர் - 'க்ஷத்ரியா:' என்ற வடசொற்றிரிபு. ['கத்திரிவர்' என்பது - அத்யாபகபாடம்.] பத்திராகாரன் - ഭദ്രാகார:. .. (௬)

போத்த வுரலைக் கவிழ்த்ததன் மேலேறித்
தித்தித்த பாலுந் தடாவினில் வெண்ணெயும்
மெத்தத் திருவயி றார விழுங்கிய
அத்தன்வந் தென்னைப் புறம்புல்குவா னாழியா னென்னைப் புறம்புல்குவான்.

பொத்த உரலை - (அடியில்) ஓட்டையாய் விட்டதொரு உரலை(க் கொண்டுவந்து)
கவிழ்த்து - தலைகவிழ்த்துப்போட்டு
அதன் மேல் ஏறி - அவ்வுரலின்மேலேறி
தடாவினில் - மிடாக்களிலேயுள்ள
தித்தித்த பாலும் - மதுரமானபாலையும்
வெண்ணெயும் - வெண்ணெயையும்
திரு வயிறு ஆர - வயிறுநிரம்ப
மெத்த விழுங்கிய - மிகுதியாக விழுங்கின
அத்தன் - தலைவன்
வந்து என்னை புறம் புல்குவான்—;
ஆழியான் - (இப்படிக் களவுகண்டு உண்கையில்) ஆழ்ந்து தேறியவன்
என்னை புறம் புல்குவான்—.

குறிப்பு:—திருவாய்ப்பாடியிலுள்ளார் தந்தம் தயிர் நெய் பால்களைக் கண்ணனுக் கெட்டாதபடி உயர உறிகளின்மேலே சேமித்துவைக்க, அது கண்டு கண்ணபிரான் ஒரு பொத்தவுரலைத்தேடிக் கண்டுபிடித்து உருட்டிக் கொண்டுவந்து தலைகீழாகக் கவிழ்த்துப்போட்டு அதன்மேலேறி உறியை யெட்டி அதிலுள்ளவற்றை விழுங்குவனும். [பொத்தவுரலை] நல்லவுரலானால் அதை நடுவே யாரேனும் சிலர் கார்யார்த்தமாகத் தேடிவந்து தன்னைப் பிடித்துக் கொள்ளக்கூடுமென்று பொத்தவுரலைத் தேடிப்பிடித்தானென்பது விசேஷார்த்தம். பொத்தவுரல் - 'பொத்தலுரல்' என்பதன் மரூஉ வென்னலாம்; 'பொத்தல்' என்பதில் ஈற்றுமெய்கெட்ட தென்றலுமொன்று. (எ)

மூத்தவை காண முதுமணற் குன்றேறிக்
கூத்துவந் தாடிக் குழலா லிசைபாடி
வாய்த்த மறையோர் வணங்க விமையவர்
ஏத்தவந் தென்னைப் புறம்புல்குவா னெம்பிரா னென்னைப் புறம்புல்குவான்.

மூத்தவை - வயசு சென்ற இடைச்சனங்கள்
காண - காணும்படியாக
முது மணல் குன்று ஏறி - நெடுநாளாய்க்குவிந்து (மேடாயிருந்த) மணற்குன்றின் மேலேறியிருந்து
வாய்த்த (தன்னுடைய சேஷ்டிதத்தைக் காணும்படி) கிட்டின
மறையோர் - ப்ரஹ்மர்ஷிகள்
வணங்க - தன்னைக்கண்டு வணங்கவும்
இமையவர் - தேவர்கள்
ஏத்த - ஸ்தோத்ரஞ்செய்யவும்
குழலால் இசை பாடி - வேய்ங்குழலினால் ராகம்பாடிக் கொண்டும்
உவந்து - ஸந்தோஷித்து
கூத்து ஆடி - கூத்தாடியும் நின்று
வந்து என்னை புறம் புல்குவான்—;
எம்பிரான் என்னை புறம்புல்குவான்—.

குறிப்பு:—கண்ணபிரான் எல்லாருங் காணும்படியாக மிகவுமுயர்ந்ததொரு மணற்குன்றின்மே லேறிநின்று தான் விரும்பின பெண்களின்பேரைச் சொல்லுதலும் தன்மேல் கோபங்கொண்டிருக்கும் பெண்களின் காலைக்கையைப் பிடித்துக்கொண்டு பொறுப்பித்தலும் முதலான ஒலியின் குறிப்புகள் தன்னோடுபழகும் பெண்களுணரும்படி புல்லாங்குழலூதியும், நிலவறைகளிற் கிடக்கும் பெண்களும் அவ்விடத்தை விட்டோடிவந்து காண்கையாலே மிகவும் மனமுகந்து கூத்தாடியும் நிற்க, அவனுடைய சேஷ்டிதரஸத்தை அநுபவித்து ரிஷிகளும் தேவர்களும் வணங்கித்துதிக்க, இப்படிக் கூத்தாடின அழகோடே அப்பிரான்வந்து என்னைப்புறம்புல்க வேணுமென்பது - கருத்து. மூத்தவை - பலவின்பால் வினையாலணையும் பெயர்: மூத்த அவை என்றுபிரித்து, பெயரெச்சத்து ஈற்று அகரம்தொக்கதென்றால், வயசுமுதிர்ந்துள்ள கூட்டமென்று பொருளாம். அவை = 'ஸபா' என்ற வடசொல் 'சபை' எனத்திரிந்து, அது 'சவை' என்றாய், சவை அவை ஆயிற்றென்ப. 'வாய்ந்த மறையோர்' என்றதொடர் - (எதுகைக்கேற்ப)° வாய்த்த மறையோர் என விகாரப்பட்டதென்றால், (கண்ணன் யாவருந்) காண முதுமணற்குன்றேறிக் குழலாலிசைபாடிக் கூத்துவந்தாட, மூத்த அவை - மூத்த ஸபையாய்த்திரண்ட இடையர்கள்,

**இமையவர்** - கண் இமையாதவர்களாயிருந்து, ஏத்த-துதிக்கவும், வாய்த்த **மறையோர்** - (நிலவறைகளிலே) பொருந்திய மறைதலையுடைய பெண்கள் (குழலோசைவழியேகிட்டிக், கண்ணன் கூத்தாடுவதைக்கண்டு அவனது திருவடியின் ஸௌகுமார்யத்தை நினைத்து அக்கூத்தை நிறுத்துவதற்காக) வணங்கவும் இப்படிக் கூத்தாடின செவ்வியோடே வந்து என்னைப்புறம் புல்கவேணுமென்று பொருள் பணிக்க; அப்போது, ஆடி - ஆட; எச்சத் திரிபு. ... ... ... ... ... ... (அ)

கற்பகக் காவு கருதிய காதலிக்
கிப்போழு தீவனென் றிந்திரன் காவினில்
நிற்பன செய்து நிலாத்திகழ் முற்றத்துள் [வான்.
உய்த்தவ னென்னைப் புறம்புல்குவா னும்பர்கோ னென்னைப் புறம்புல்கு

இந்திரன் காவினில் - இந்த்ரனுடைய உத்யாநவநத்திலிருந்த
கற்பகம் காவு - கற்பகச் சோலையை
கருதிய - (தன்வீட்டிற்கொண்டு வைக்க வேணுமென்று) விரும்பிய
காதலிக்கு - (தனக்கு) ப்ரியையான ஸத்ய பாமைப் பிராட்டிக்கு
இப்பொழுது - 'இப்பொழுதே
ஈவன் - கொணர்ந்து தருவேன்'
என்று - என்றுசொல்லி,
நிலா திகழ் - நிலா விளங்குகின்ற
முற்றத்துள் - (அவள்வீட்டு) முற்றத்தில்
நிற்பன செய்து - இருப்பனவாகச்செய்து
உய்த்தவன் - தழைக்கும்படிசெய்தவன்
என்னை புறம் புல்குவான்—;
உம்பர் கோன் - (அன்று தன்பராக்ரமத்தைக்காட்டிய) தேவாதிதேவன்
என்னை புறம் புல்குவான்—.

குறிப்பு:—கண்ணபிரான் ஸத்யபாமையின் உகப்புக் குறிப்பாக, தேவலோகத்திலிருந்து பாரிஜாத வ்ருக்ஷத்தைக் கொணர்ந்து த்வாரகையில் நாட்டினமை ப்ரஸித்தம். இந்திரன்காவு - நந்தநவநம். மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்பவ்ருக்ஷம், ஹரிசந்தநம் எனத் தேவலோகத்து மரங்கள் ஐந்து; அவ்வைந்தையும் கல்பவ்ருக்ஷமென்று ஸாதாரணமாக வழங்குதலுமுண்டு; இங்கு, பாரிஜாதத்தைக் கற்பகமென்றார். இம்மரங்களில் ஒவ்வொன்றுமே பெருஞ்சோலையாகத் தழைத்திருக்குமாதலால், கற்பகக்காவு எனப்பட்டது. ஒரு மரத்தையே காவு என்று கூறியதற்கு ஏற்ப 'நிற்பன செய்து' என்று பன்மையாகக் கூறினர்போலும். ஐந்துமரங்களையுங் கொணர்ந்தா னென்பாருமுளர். இனி, 'நிற்பதுசெய்து' என்று (ஒருமையாகப்) பாடமிருப்பின் நலம். ஈவன்=ஈ - பகுதி; அன் - தன்மையொருமைவிகுதி; வ் - எதிர்கால இடைநிலை. ... ... ... ... (கூ)

ஆய்ச்சியன் றாழிப் பிரான்புறம் புல்கிய
வேய்த்தடந் தோளிசொல் விட்டுசித் தன்மகிழ்ந்
தீத்த தமிழிவை யீரைந்தும் வல்லவர்
வாய்த்தநன் மக்களைப் பெற்று மகிழ்வரே. (கய)

வேய் - மூங்கில்போன்ற
தட - பெரிய
தோளி - தோள்களையுடையளான
ஆய்ச்சி - யசோதையானவள்,
ஆழி பிரான் - சக்ராயுததரனுகிய ப்ரபுவா[ன கண்ணன்
அன்று - அக்காலத்திலே
புரம்புல்கிய - புறம்புல்குவதைக்கூறிய
சொல் - சொல்லை
விட்டுசித்தன் - பெரியாழ்வார்
மகிழ்ந்து - (தாம் அநுபவித்து) ஸந்தோ[ஷித்து
ஈத்த - (உலகத்தார்க்கு) உபகரித்த
தமிழ் இவை ஈர் ஐந்தும் - தமிழ்ப்பாசுரமாகிய இப்பத்துப் பாசுரங்களையும்
வல்லவர் - ஓதவல்லவர்கள்
வாய்த்த—(மங்களாசாஸநத்தில் விருப்பம்) [பொருந்திய
நல் மக்களை - நல்ல புத்ரர்களை
பெற்று - அடைந்து
மகிழ்வர் - ஆநந்திப்பர்கள்.

குறிப்பு:—'ஈந்த' என்கிறது - செய்யுளின்பம் நோக்கி, ஈத்த என்று கிடக்கிறது. நன்மக்கள் - சிஷ்யர்களென்றுமாம். [நயனாசார்யருக்கு ப்ரதிவாதிபயங்கரம் அண்ணவைப்போல.] இப்பத்து ஒன்பது திருமொழி களிலேயே நூறுபாசுரங்களாய் விட்டபடியால், இவ்வொன்பது திருமொழியிலேயே முடிந்ததென்க. ... ... ... ... (கம)

அடி:—வட்டு கிண்கிணி கத்த நார்தகம் வெண்சலம் சத்திரம் பொத்த மூத்தவை சற்பசம் ஆய்ச்சி மெச்சூது.

முதற்பத்து உரை முற்றிற்று.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து

## முதல் திருமொழி - மெச்சூது.



**அவதாரிகை:**—சிறுபிள்ளைகள் பூச்சிகாட்டி விளையாடுவதுபோலக் கண்ண பிரான் தானும் மாநுஷபாவனைக்கேற்பப் பூச்சிகாட்டி விளையாடியதை அக்காலத்தி லுள்ள இடைப்பெண்கள் கண்டு அநுபவித்து உகந்தாப்போலே, ஆழ்வார் தாமும் பாவநாப்ரகர்ஷத்தாலே அச்சேஷ்டிதத்தை ப்ரத்யக்ஷ ஸமமாகக்கண்டு அநுபவித்து இனியராகிறார் - இத்திருமொழியில். இது - கோபிமார் பாசுரமென்பதை, மேல் "புரட்டி அந்நாளெங்கள் பூம்பட்டுக்கொண்ட அரட்டன்" என்பதனாலறிக.

மெச்சூது சங்க மிடத்தான்நல் வேயூதி
பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்ப்
பத்தூர் பெறாதன்று பாரதங் கைசெய்த
அத்தூத னப்பூச்சி காட்டுகின்றா னம்மனே யப்பூச்சி காட்டுகின்றான். (க)

மெச்ச - (அனைவரும்) கொண்டாடும்படி
ஊது - ஊதுகின்ற
சங்கம் - பாஞ்சஜந்யத்தை
இடத்தான் - இடக்கையில் ஏந்தியுள்ளவ[னும்
நல் வேய் - நல்ல வேய்ங்குழலை
ஊதி - ஊதுபவனும்,
பொய் சூதில் - க்ருத்ரிமமான சூதிலே
தோற்ற - (தம்முடைய சொத்துக்களை யெல்லாம்) இழந்தவர்களாய்
பொறை உடை - பொறுமைசாலிகளான
மன்னர்க்கு - பாண்டவர்கட்கு
ஆய் - (தான் எல்லாவகைத்) துணையுமாயி[ருந்து (துர்யோதநாதிகளிடத்துத் தூதுபோய்க் கேட்டுப் பார்த்தும் அவர்களிடத்தி னின்றும்)
பத்து ஊர் - பத்து ஊரையும்
பெறாது - அடையமுடியாமல்
அன்று - அக்காலத்திலே
பாரதம் - பாரதயுத்தத்தை
கைசெய்த - அணிவகுத்துச்செய்த
அ தூதன் - அந்தப் பாண்டவதூதனான கண்ணன்
அ பூச்சி காட்டு கின்றான் } அப்படிப்பட்ட [மிகவும் பயங்கரமான] பூச்சிகா[ட்
அம்மனே - அம்மா!
அப்பூச்சி காட்டுகின்றான்—.

குறிப்பு:—கண்ணபிரான், பாண்டவர் துர்யோதநாதிகள் என்ற இருவரையும் ஸந்திசெய்விக்கைக்காகத் துர்யோதநாதியரிடந் தூதாகச்சென்று 'பாண்டவர்களும் நீங்களும் பகைமைகொள்ள வேண்டாம்; ராஜ்யத்தில் இருவருக்கும் பாகமுண்டு; ஆதலால் ஸமபாகமாகப் பிரித்துக்கொண்டு ஸமாதாநமாக அரசாட்சிசெய்து வாழுங்கள்; அதற்கு ஸம்மதியில்லாவிடில், தலைக்கு இரண்டிரண்டு ஊராகப் பாண்டவர் ஐவர்க்கும் பத்து ஊரைக் கொடுங்கள்; அதுவும் அநிஷ்டமாகில் பாண்டவர்கள் குடியிருக்கும்படி ஓரூரையாவது கொடுங்கள்' என்று பலபடி அருளிச்செய்ய, அந்தச் சொல்லுக்குச் சிறிதும் ஸம்மதியாமல் 'பராக்ரமமிருந்தால் போர்செய்து ஜயித்துக்கொள்ளட்டும்; இந்தப்பூமி வீரர்க்கே உரியது' என்றிப்படி திக்காரமாக மறுத்துச்சொல்லவே, தான் பாண்டவ பக்ஷபாதியாயிருந்து எதிரிகளைத் தோற்பித்தனனென்க. மெச்ச—ஊது=மெச்சூது; தொகுத்தல் விகாரம். கண்ணன் பசுநிரை மேய்க்கும்போது திருச்சங்கையும் வேய்ங்குழலையும் கொண்டிருப்பனாதலால் அவனை, 'மெச்சூது சங்கமிடத்தான் நல்வேயூதி' என்றார்: "ஆநிரையினம் மீளக்குறித்த சங்கம்," "கேயத்தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததும்" என்பனகாண்க. ஊதி - ஊதுமவன்; பெயர்ச்சொல்; வினையெச்சமன்று; ஊது - பகுதி, இ - கருத்தாப்பொருள் விகுதி. ஆகவே 'ஊதிப்பொய்ச்சூதில்'என இரட்டியாது, 'ஊதிபொய்ச்சூதில்' என இயல்பாயிற்று. "கழல் சூடி கைந்நின்ற வேற்கைக்கலியன்" என்றவிடத்திற்போல. துர்யோதநன் தான் புதிதாய மண்டபங்கட்டி அதைக்காண்பதற்கென்றொரு வ்யாஜமிட்டுப் பாண்டவர்களைத் தனது ஹஸ்திநாபுரிக்கு வரவழைத்துத் தந்த்ரமாகச் சகுநியைக்கொண்டு சூதாடுவிக்க, அச்சூதில் தர்மபுத்ரன் ராஜ்யத்தையும் தம்பியரையும் மனைவியையும் தன்னையுந் தோற்றனாதலால், பாண்டவர் பொய்ச்சூதில் தோற்ற மன்னராயினர். இவர்கள் தமக்குள்ள பொறுமையை மாத்திரம் சூதில் தோற்றிலராதலால், பொறையுடை மன்னருமாயினர்.—பூச்சிகாட்டுதலையே அப்பூச்சி காட்டுதலென்று

வழங்குதலு முண்டெனக் கொள்ளினுமாம். அப்பூச்சி காட்டுகையாவது- கண்ணை இறுக்குவது, மயிரால் முகத்தை மறைத்துக்காட்டுவது முதலா கச்செய்யும் பயங்கரமான பாலசேஷ்டைகள். அம்மனே - அச்சத்திறைச் சொல்லும் சொல்லு. இந்தப்பாசுரத்தி னீற்றடியைக் குறித்து ஓர் ஐதிஹ்யம்:—இப்பாசுரத்தை நம்பெருமாள் ஸந்நிதியில் உடையவர் கோஷ்டியிலே 'உய்ந்தபிள்ளை' என்பாரொரு அரையர் அபிநயிக்குமளவில் 'அத்தூதன்' என்னும்போது ஸ்ரீக்ருஷ்ணனையும், 'அப்பூச்சி' என்னும்போது கண்இமையை மடக்கிக்கொண்டு வருவதையுங்காட்டி அபிநயிக்க, உடையவர்பின்னே எழுந்தருளியிருந்த எம்பார், தம் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அரையரும் தாம்முன் அபிநயித்ததைவிட்டு எம்பார்காட்டியது போலவே எம்பெருமான் திருத்தோள்களில் சங்குசக்கரங்கள் தரித்துக்கொண் டிருப்பதை அபிநயிக்க, உடையவர் மிகவுமுகந்து, 'கோவிந்தப்பெருமாள் [எம்பார்]! இருந்ீரோ?' என்றாராம்: இதனால் ஏற்படுவதாவது- தூதனுய்த் தன் ஸௌலப்யத்தை வெளியிட்டு 'நம்மிலே ஒருவன்' என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி யிருப்பவன் அவர்கள் அஞ்சும்படி சில காலங்களில் ஈச்வரத்வ சிஹ்நங்களைக் காட்டுகின்றானென்பது; இது ஈற்றடிக்கு உள்ளுறைபொருள் [ஸ்வாபதேசம்]. ... ... ... (க)

மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும்
பலர்குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன்
சிலைவளையத் திண்டேர்மேல் முன்னின்ற செங்க
ணலவலைவந் தப்பூச்சி காட்டுகின்றா னம்மனே யப்பூச்சி காட்டுகின்றான்.

மலை புரை - மலையை ஒத்த
தோள் - தோள்களையுடைய
மன்னவர் - அரசர்களான
மா ரதரும் - மஹாரதரும்
மற்றும் பலர் உம் - மற்றும் பலவகை அரசர்களும்
குலைய - அழியவும்
நூற்றுவரும்-(துர்யோதநாதிகள்) நூறு பேரும்
பட்டு - மரணமடைந்து
அழிய - உருவழிந்துபோகவும்
பார்த்தன் - அர்ஜுநனுடைய
சிலை - (காண்டீவமென்னும்) வில்
வளைய - (மஹாவீரர்களையும் அலக்ஷ்யமாகக்கொண்டு) வளையவும்
திண் தேர் மேல் - (அந்த அர்ஜுநனுடைய) வலிய தேரின்மேல்
முன் நின்ற - (ஸாரதியாய்) முன்புறத்தில் நின்ற
செங் கண்—(வாத்ஸல்யஸூசகமாகச்) சிவந்த கண்களையுடையனுய்
அலவலை—(அர்ஜுநனுடைய வெற்றியைப்) புகழ்பவனை கண்ணன்
வந்து****அப்பூச்சி காட்டுகின்றான்—.

குறிப்பு:—[மலைபுரைதோள்] பருத்தவடிவத்திலும், ஒருவராலும் சலிப்பிக்கமுடியாதபடி உறுதியாயிருத்தலிலும் தோளுக்கு மலைஉவமை யென்க. தேர்வீரர்—அதிரதர், மஹாரதர், ஸமரதர், அர்த்தரதர்என நால்வகைப்படுவராதலால், 'மாரதரும் மற்றும்' என்றார். (அஸஹாயராய்த் தாம் ஒரு தேரின்மேலிருந்து தமது ரதகஜதுரகபதாதிகளுக் கழிவுவாராமல் காத்துக்கொண்டு பல்லாயிரம் தேர்வீரர்களோடு பொருது வெல்லும் வல்லமையுள்ளார்—அதிரதர் என்றும், கீழ்ச் சொன்னபடியே தாமிருந்து பதினோரா

யிரம் தேர்வீரரோடு பொருபவர்—மஹாரதர் என்றும், ஒரு தேர்வீரரோடு தாமும் ஒருவராய் நின்று எதிர்க்கவல்லவர்—ஸமரதர் என்றும், அங்ஙனமே பொருது, தம் தேர்முதலியவற்றை இழந்துவிடுபவர்-அர்த்தரதர் என்றுஞ் சொல்லப்படுவர்.) 'மன்னவரும்' என்ற விடத்திலுள்ள உம்மை, 'பலர்' என்பதோடுகூட்டப்பட்டது. மாரதர்—மஹாரதர் என்ற வடசொல் திரிபு. பார்த்தன்—வடசொல்; 'ப்ருதா' [குந்தி] என்பவளுடைய மகன். அலவலை—அர்த்தத்தின் உத்கர்ஷத்தையும் ஸ்ரோதாவினுடைய நிகர்ஷத்தையும் பாராமல் ரஹஸ்யார்த்தங்களைச் சொல்லுமவன்; வரம்பு கடந்து பேசுபவன். இப்படியெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணன் செய்தது—த்ரௌபதியின் விரித்தகூந்தலை முடிக்கும் பொருட்டாம். ... ... (உ)

காயுநீர் புக்குக் கடம்பேறிக் காளியன்
தீய பணத்திற் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி
வேயின் குழலூதி வித்தக ளாய்நின்ற
ஆயன்வந் தப்பூச்சி காட்டுகின்றா னம்மனே யப்பூச்சி காட்டுகின்றான்.

காயும் – (காளியனுடைய விஷாக்நியால்) [கொதிக்கின்ற
நீர்–மடுவின் ஜலத்திலே
புக்கு–புகுந்து (கலக்கி)
(அம்மடுவினுள்ளிருந்த காளியனென்னும் பாம்பைக் கோபத்தோடு படமெடுக்கச் செய்து)
கடம்பு ஏறி – (அம்மடுவின் கரையிலிருந்த) கடம்பமரத்தின்மேலேறி,
காளியன்–அந்தக்காளியனுடைய
தீய பணத்தில்–கொடியபடத்திலே
சிலம்பு ஆர்க்க – (தன் திருவடியிலணிந்து கொண்டிருந்த) சிலம்பு சப்திக்கும்படி
பாய்ந்து–குதித்து
ஆடி–கூத்தாடி,
(இச்செய்கையைக்கண்டு என்னதீங்கு வருமோ! என்று கலங்கினவர் மகிழ)
வேயின் குழல் ஊதி – மூங்கிலினாலாகிய குழலை [ஊதி
(இப்படி)
வித்தகன் ஆய் நின்ற – விஸ்மயநீயனாயிருந்த
ஆயன்–கண்ணபிரான்
வந்து***அப்பூச்சி காட்டுகின்றான்–

குறிப்பு:—தீயபணம்=படம் விஷமிருத்தற்கு உரிய இடமாதலாலும், கோபத்தைத் தெரிவித்தலாலும். ... ... ... (ங)

இருட்டிற் பிறந்துபோ யேழைவல் லாயர்
மருட்டைத் தவிர்ப்பித்து வன்கஞ்சன் மாளப்
புரட்டியந் நாளெங்கள் பூம்பட்டுக் கொண்ட
அரட்டன்வந் தப்பூச்சி காட்டுகின்றா னம்மனே யப்பூச்சி காட்டுகின்றான்.

இருட்டில்–இருள்நிறைந்த நடுநிசியில்
பிறந்து–மதுரையிலே தேவகீபுத்ரனாகத் [தோன்றி
போய்–(அங்குநின்றும் அப்போதே ஆய்ப்பாடிக்குப்) போய்,
ஏழை–அவிவேகிகளான [மையையுடைய
வல் – (தன்னைப்பற்றியிருக்கும்) மனவலி
ஆயர்–இடையர்களின் (கண்ணனிடத்திலுள்ள ப்ரேமத்தாலும் கம்ஸனிடத்திலுள்ள கோபத்தாலும் தானே கம்ஸனைக்கொல்லவல்லவர்கள் போலேசெருக்கிச்சொல்லுகிற)
மருட்டை–மருள்வார்த்தைகளை
தவிர்ப்பித்து–போக்கி,

| | |
|---|---|
| வல் கஞ்சன்—கொடிய கம்ஸன் | எங்கள்—எங்களுடைய |
| மாள—மாண்டுபோம்படி | பூ பட்டு—அழகிய பட்டுப்புடவைகளை |
| புரட்டி—(அவனை மயிரைப்பிடித்து அடித்துப் பூமியிலிட்டுப்) புரட்டி, | சொண்ட—வாரிக்கொண்டுபோன |
| அ நாள்—(நாங்கள் யமுனையில் நீராடிய) [அக்காலத்திலே | அரட்டன்—தீம்பனுனகண்ணன் |
| | வந்து***அப்பூச்சி காட்டுகின்றான்— |

குறிப்பு:—'பிள்ளைபிறப்பது எப்போது!' என்று உருவினவாள் உருவியபடி கம்ஸன் கிற்கையாலே அவனுடைய கண்ணிற்படாதபடியிருக்கவேணுமென்று மாஹாந்தகாரவ்யாமானதொரு ராத்ரியிலே தேவகீ புத்ரனாய்த் தோன்றி, அப்போதே ஸ்ரீவஸுதேவரை யெடுத்துப் போம்படி கட்டளையிட்டுத் தேவகி தன்னைப்பிரியும் பிரிவால் கதறத் தான் திருவாய்ப்பாடியிற் புகுந்து வளர்ந்தருளின வரலாறு அறிக. [ஆயர் மருட்டைத் தவிர்ப்பித்து] கம்ஸன் பூதநாதிகள் மூலமாகக் கண்ணனை நலிய நினைத்திராநின்றானென்றறிந்த இடையர்கள் தாங்களே கம்ஸனைக் கொல்வார்போலச் சிலமருட்டு வார்த்தைகளைச் சொல்ல, 'நீங்களெல்லாரும் வேணுமோ? நானே செய்வேன்' என்று சொல்லித் தன் பேச்சாலே அவர்கள் அந்த மருட்டு வார்த்தைகளைச் சொல்லாதபடி தவிர்ப்பித்து என்பது பொருள். மருட்டு—மருளையுடையது; அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கைக்குறிப்பு வினையாலணையும் பெயர்: 'இருள்' 'மருள்' என்ற பெயர்ச் சொற்களின்மேல் 'டு' என்ற விகுதி ஏறப் பெற்றது; "து று டுக் குற்றியலுகரவீற்ற, ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பினுகும்" என்பது-நன்னூல். பூ + பட்டு = பூம்பட்டு, "பூப்பெயர்முன் னினமென்மையுந்தோன்றும்." என்ற சிறப்புவிதி அறிக. ... (ச)

சேப்பூண்ட சாடு சிதறித் திருடிநெய்க்
காப்பூண்டு நந்தன் மனைவி கடைதாம்பால்
சோப்பூண்டு துள்ளித் துடிக்கத் துடிக்கவன்
றாப்பூண்டா னப்பூச்சி காட்டுகின்றா னம்மனே யப்பூச்சி காட்டுகின்றான்.

| | |
|---|---|
| சே பூண்ட—எருதுகள் கட்டுதற்கு உரிய | நந்தன் மனைவி—நந்தகோபன் தேவியான [அவ்யசோதை |
| சாடு—சகடம் | கடை தாம்பால்—(தயிரைக்) கடையும் தாம் [பாலே (அடிக்க) |
| (அஸுராவேசத்தாலே தன்னைக் கொல்ல வர, முலைக்காக அழுகிறபாவனையாலே தன் திருவடியைத் தூக்கி அச்சகடத்தை) | துள்ளி துடிக்க துடிக்க சோப்பூண்டு } துள்ளி மிகவுந்துடிக்கும்படி அடியுண்டு (அதனோடு நில்லாமல்) |
| சிதறி—உருக்குலையும்படி உதைத்து | அன்று—அக்காலத்தில் |
| நெய்க்கு—நெய்க்கு ஆசைப்பட்டு | ஆப்பூண்டான்—(எங்கும் சலிக்கமுடியாதபடி உரலில்) கட்டுண்டவனுமாகிய க[ண்ணன் |
| திருடி—களவுசெய்து | அப்பூச்சி காட்டுகின்றான்***—. |
| ஆப்பூண்டு—(உடைமைக்கு உரியவர்கையில், அகப்பட்டுக்கொண்டு (அவர்கள் யசோதைகையிற் காட்டிக்கொடுக்க,) | |

குறிப்பு:—சாடு—'சகடம்' என்ற வடசொல்லின் சிதைவு. ஆப்பூண்டு நந்தன் மனைவிகடைதாம்பால் சோப்பூண்டு —'என்மகன்மேல் வீண்பழி விளை

த்திடேல்மின்; களவுகண்டதுண்டாகில் கையும்பிடியுமாய்ப் பிடித்துக் கொணருங்கள்' என்று சொல்லிய தாயான தன்முன்பே ஆய்ச்சிமார் கண்ணைக் கொண்டியோடே கண்டுபிடித்துக்கொணர, அதுகண்டயசோதை, 'நான் பிள்ளைபெற்று வளர்க்கிறது மிகவு மழகிதாயிருந்தது!' என்றுசொல்லித் தன்னைத்தானே மோதிக்கொண்டு அவர்கள் முன்னே தன்வயிற்றெரிச்சலெல்லாந் தோன்றும்படி அடிக்க அடியுண்டு என்றபடி ஆப்பூண்டு, சோப்பூண்டு, ஆப்பூண்டான்—'ஆப்புண்டு,' 'சோப்புண்டு' 'ஆப்புண்டான்' என்பவற்றின் நீட்டல் விகாரம்.   ...   ...   ...   (ரு)

செப்பிள மென்முலைத் தேவகி நங்கைக்குச்
சொப்படத் தோன்றித் தொறுப்பாடி யோம்வைத்த
துப்பமும் பாலுந் தயிரும் விழுங்கிய
அப்பன்வந் தப்பூச்சி காட்டுகின்று னம்மனே யப்பூச்சி காட்டுகின்றுன்.

செப்பு—ஸ்வர்ணகலசங்கள்போன்ற
இள மெல் } இளமையும் மென்மையையு
முலை } முடைய முலைகளையுடைய
தேவகி நங்கைக்கு—தேவகிப் பிராட்டிக்கு
[(மகனுக)
சொப்பட தோன்றி—நன்றுகப்பிறந்து,
தொறுப்பாடியோம்—ஆய்ப்பாடியி லுள்ள
[வர்களாகிய நாங்கள்

வைத்த—சேமித்துவைத்த
துப்பமும்—நெய்யையும்
பாலும்—பாலையும்
தயிரும்—தயிரையும்
[விழுங்கி]ய—உட்கொண்ட
அப்பன்—ஸ்வாமி [உபகாரகன்]
வந்து***அப்பூச்சி காட்டுகின்றுன்—.

குறிப்பு:—செப்பு-முலைகளுக்கு நிறத்திலும் வடிவிலும் உவமை. சொப்படத்தோன்றி—ஸர்வேஶ்வரத்வசிஹ்நங்களோடு தோன்றி. தொறு - பசு, பாடி - இடம்; எனவே, பசுக்கூட்டங்கள் நிரம்பிய 'கோகுலம்' என்று ப்ரஸித்திபெற்ற திருவாய்ப்பாடியாயிற்று. சில ஆய்ச்சிமார் எங்களுடைய இருக்கின நெய்யையும் காய்ந்தபாலையும் தோய்ந்த தயிரையும் கண்ணன் உண்ணப்பெற்றோமே! என்றீடுபட்டு 'அப்பன்' என்றனரென்க.   (சு)

தத்துக்கொண் டாள்கொலோ தானேபெற் றுள்கொலோ
சித்த மனையா ளசோதை யிளஞ்சிங்கம்
கொத்தார் கருங்குழற் கோபால கோளரி
அத்தன்வந் தப்பூச்சி காட்டுகின்று னம்மனே யப்பூச்சி காட்டுகின்றுன்.

(இந்தப்பிள்ளையை யசோதை)
தத்து கொண்டாள் } தத்தபுத்ரனுக வ
கொல் ஓ } ளர்த்துக் கொண்டா
(அல்லது) [ளோ
தானே பெற்றுள் } ஸ்வயமாகவே [மெய்
கொலோ } நொந்து] பெற்றெடு
[த்தாளோ
சித்தம் அனையாள் - (கண்ணனுடைய) ம
[னக்கருத்தை ஒத்து நடப்பவளாகிய
அசோதை—யசோதையினுடைய

இள சிங்கம்—சிங்கக்குட்டிபோன்றவனும்
கொத்து ஆர் } பூங்கொத்துக்களை யணி
கரு குழல் } ந்த கரிய கூந்தலையுடைய
[வனும்
கோபாலர் } இடையர்கட்கு (அடங்காத)
கோள் அரி } மிடுக்கைக்கொண்ட சிங்கம்
[போன்றவனுமாகிய
அத்தன்—ஸ்வாமியான இவன்
வந்து***அப்பூச்சி காட்டுகின்றுன்—.

குறிப்பு:—யசோதைப்பிராட்டி ப்ரஸவிக்குங்காலத்திலே அருகிலிருந்தவர்கள் 'இவள் தத்தபுத்ரஸ்வீகாரம் செய்யவில்லை; ஆனல் இவள் பிள்ளை

பெறுகிறபோது இவளைப்பேணிப் பார்த்திருந்த நாங்கள் அப்போதாக அயர்ந்து தூங்கிவிட்டபடியால், பிள்ளை பெற்றதையுங் கண்டிலோம்; ((“ஊஊஶேவ ஹ்யவ ஙஸாஹஸா யஶோதா ஜாதகோ-தூஜஷூ” என்று - யசோதையும் அப்போது மோஹித்துக்கிடந்து உணர்ந்த பின்பிறே இவனைக்கண்டது.)) உணர்ந்தபின்பு இவள் ‘நான் பெறறேன்’ என்றுசொல்லக் கேட்டோம்’ என்று சொல்லும்படியாக ஸ்ரீக்ருஷ்ணன் தோன்றினனுதலால் ‘தத்துக்கொண்டாள் கொலோதானே பெற்றாள் கொலோ’ என்றனர்; அன்றியும், இக்கண்ணபிரானுடைய லோகவிலக்ஷணமாய் அதிமாநுஷமான குணசேஷ்டிதங்களைக் கண்டவர் இப்பிரானை இவள்பிள்ளையென்று சொல்ல முடியாதபடியும், யசோதைதானும் “இம்மாயம் வல்லபிள்ளைநம்பி! உன்னை என் மகனே யென்பர் நின்றார்” என்று சொல்லும்படியும் ஸ்ரீக்ருஷ்ணனிருப்பதும் இவ்வாறு கூறுதற்குக் காரணமாகும். பிறர்க்கு அடங்காமையும் செருக்கும்பற்றி, கண்ணனுக்குச் சிங்கக்குட்டி உவமை; தாய்க்கு அடங்காதவன் ஊர்க்கு அடங்கானுதலால், ‘அசோதையிளஞ்சிங்கம் கோபாலகோளரி’ என்றார். தத்து-‘ஊத்தம்’ என்ற வடசொற்சிதைவு. கொல்-இடைச்சொல்; ஐயப்பொருளது. சித்தம்-விதூம். கோபாலர் + கோளரி = கோபால கோளரி; “இடையுரி வடசொலினியம்பிய கொளாதவும்...யாவர்க்கு நெறியே” என்ற புறனடைச் சூத்திரமறிக. (“சிலவிகாரமாமுயர்திணை” என்பதும் விதியாம்.) **கோள்**—மிடுக்கு; முதனிலைதிரிந்த தொழிற் பெயர். (எ)

கொங்கைவன் கூனிசொற் கொண்டு குவலயத்
துங்கக் கரியும் பரியு மிராச்சியமும்
எங்கும் பரதற் கருளிவன் கானடை
அங்கண்ண னப்பூச்சி காட்டுகின்றா னம்மனே யப்பூச்சி காட்டுகின்றான்.

கொங்கை-(முதுகில்) முலையெழும்பினுற்போன்ற
வல்-பலிஷ்டமான
கூனி-கூனையுடையளான மந்தரையினுடைய
சொல்-சொல்லை
கொண்டு-அங்கீகரித்து
எங்கும்-எல்லாவிடங்களிலுமுள்ள
குவலயம் } இப்பூமியில் (இருப்பவற்றுள்)
துங்கம் } சிறந்தனவான
கரியும்-யானைகளையும்
பரியும்-(அங்ஙனொத்த) குதிரைகளையும்
இராச்சியமும்-ராஜ்யத்தையும்
பரதற்கு-பரதாழ்வானுக்கு
அருளி-கொடுத்துவிட்டு
வல் கான் அடை } கொடியகாட்டை அடைந்த
அம் கண்ணன்-அழகிய கண்ணையுடையனுன இவன்
அப்பூச்சி காட்டுகின்றான்***—.

குறிப்பு:—யஶெஃரூகூ [ஒற்றுமைநய]த்தால் ராமக்ருஷ்ணரிருவரையும் ஒருவராகவேகொண்டு ஆழ்வார் இங்ஙனருளிச்செய்கின்றனரென்க. கொங்கை-கூனுக்கு அடைமொழி; வல்-கூனிக்கு அடைமொழி. பெருமாளுடைய வநயாத்ரைக்கு மூல்காரணம் கூனியானமைபற்றிக் ‘கூனி சொற்கொண்டு’ என்றார். குவலயத்துங்கக்கரி-வடசொற்றொடர். இராச்சியம்-ராஜ்யம்; வடசொல்திரிபு. [அங்கண்ணன்.] **கண்**-தயையாகவுமாம்; பட்டாபிஷேகத்துக்காகக் கட்டின காப்போடே காட்டுக்குப்போகச் சொன்னபோதும் முகங்கருகாமல் மலர்ந்து முடிதவிர்ந்து சடை புனைந்து நாட்டைவிட்டுக் காட்டுக்குப்போன பெருமாளுடைய மஹாகுணத்தை வியந்து, அவனது தயையை அழகிதாகக் கொண்டாடுகிறபடி. ... ... (அ)

பதக முதலைவாய்ப் பட்ட களிறு
கதறிக்கை கூப்பியென்கண் ணகண்ண வென்ன
உதவப்புள் ளூர்ந்தங் குறுதுயர் தீர்த்த
அதகன்வந் தப்பூச்சி காட்டுகின்றா னம்மனே யப்பூச்சி காட்டுகின்றான்.

பதகம்—பாதிக்குந் தன்மையையுடைய
முதலை—முதலையின்
வாய்—வாயிலே
பட்ட—அகப்பட்ட
களிறு—ஸ்ரீ கஜேந்த்ராழ்வான்
கதறி—(தன்வருத்தந்தோன்றக்) கூப்பிட்டு
கை கூப்பி—கையைக்குவித்துக்கொண்டு
என் கண்ண கண்ண என்ன—'என்னுடைய கண்ணனே!' என்று பலகால [ழைக்க
அங்கு—அப்போதே
உதவ—(அந்தயானைக்கு) உதவும்படி
புள் ஊர்ந்து—பெரியதிருவடியை வாஹநமாகக்கொண்டு சென்று
உறு துயர்—(அந்தயானையின்) மிக்கவருத்தத்தை
தீர்த்த—போக்கின
அதகன் — (ஆச்ரிதரக்ஷணத்தில்) மிடுக்கையுடையவன்
வந்து *** அப்பூச்சிகாட்டுகின்றான்—.

குறிப்பு:—பதகம் - "பாதகம்" என்றவடசொல் விகாரம்; 'பாதகம்' என்பதன் (குறுக்கல்) விகாரமெனக்கொண்டால் (ஸாபமாகிற) பாபத்தை யுடையவனென்று பொருளாம். உறுதுயர் - ப்ரயாஸப்பட்டுப் பறித்தபூ பயனற்றுப்போகின்றதே என்னுந் துயர்; "உயிர்போகிறதே" என்றதுயரன்று. உறு - மிகுதியைக் குறிப்பதோர் உரிச்சொல். களிறு - யானையின் ஆண்மைப்பெயர்; (பெண்மைப்பெயர் - பிடி.) களி - மதக்களிப்பு; அதனையுடையது - களிறு எனக்காரணக்குறி; று - பெயர்விகுதி; ஒன்றன்பால் விகுதியெனக் கொள்ளலாகாது; பால்பகா அஃறிணைப்பெயராதலால். அதகன் - ஹதகன்; ஆஸ்ரிதவிரோதியை ஹநநம்பண்ணுமவன். (கூ)

வல்லா ளிலங்கை மலங்கச் சரந்துரந்த
வில்லா ளனைவிட்டு சித்தன் விரித்த
சொல்லார்ந்த வப்பூச்சிப் பாட லிவைபத்தும்
வல்லார்போய் வைகுந்தம் மன்னி யிருப்பரே. (கo)

வல்—பலசாலிகளான
ஆள்—வீரர்களையுடைய
இலங்கை—லங்கையானது
மலங்க—பாழாம்படி
சரம் துரந்த—அம்பைச் செலுத்திய
வில் ஆளனை—வில்லையேந்திய ஸ்ரீராமனாக (முன்பு) திருவவதரித்த கண்ணனைப் பற்றி,
விட்டுசித்தன்—பெரியாழ்வார்
விரித்த—பரக்கக்கூறிய
சொல் ஆர்ந்த—சொல் நிரம்பிய
அப்பூச்சி பாடல் இவை பத்தும்—அப்பூச்சிகாட்டுதலைப் பற்றிய இப்பத்துப்பாசுரங்களையும்
வல்லார்—வல்லவர்
போய்—(அர்ச்சிராதிமார்க்கமாகப்) போய்
வைகுந்தம்—ஸ்ரீ வைகுண்டத்திலே
மன்னி இருப்பர் — நித்யவாஸம் பண்ணப் [பெறுவர்.

குறிப்பு:—இச்செய்யுள், வெண்டளையால் வந்த தரவுகொச்சகக்கலிப் பாவாதலால் "விட்டுசித்தன் விரித்தன" என்றுபாடமானால் தளைக்குப்பொருந்தும். ஸரம் - வடசொல். ... ... ... ... (கo)

அடி:—மெச்சூ மலை காயும் இருட்டு சேப்பூண்ட செப்பு தத்துக் கொங்கை பதகம் வல்லாள் அரவணை.

முதல்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# முகவுரையின் அநுபந்தம்,



இத்திவ்யப்ரபந்ததிவ்யார்த்த தீபிகையின் முதல் ஸஞ்சிகையின் முதலிற் சேர்த்து யாம் வெளியிட்டுள்ள முகவுரையையும் பாட்டுக்களின் உரையையுங் கண்ணுற்ற எமது உயரன்பரான உயிர்நண்பர் சிலர் தமது மனமகிழ்ச்சியை யறிவித்து, "ஆயினும் இவற்றில் ஸம்ப்ரதாய நெறிக்குச் சேராத சில விஷயங்கள் எழுதப்பட்டுள்ளதனால் அவற்றை யடையத் திருத்தி வெளியிடுதல் பெரியோர்களின் திருவுள்ளத்துக்குப் பாங்கா யிருக்கும்" என்று-தங்களுள்ளத்தில் மிகக்குற்றமாகத் தோற்றின சிலவிஷயங்களை யெடுத்தெழுதியுள்ளார்: அவையாவன:—

(க) முகவுரையில், [ச-வது பக்கத்தில்] எம்பெருமானுடைய நியமனத்தினால் நித்யஸூரிகள் நிலவுலகத்தில்வந்து ஆழ்வாராதியராக அவதரித்தனர் என்ற கருத்துப்பட எழுதியுள்ள வாக்கியங்கள், "ஆழ்வார்கள் நித்ய ஸம்ஸாரிகளாய்ப் போந்தவர்கள்" என்ற பூர்வாசாரியர்களின் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்த பத்ததிக்குப்போர விருத்தங்களாகத் தோற்று நின்றன.

(உ) அன்றியும், [அவ்விடத்திலேயே,] "ஸகலவேத வேதாங்க ரஹஸ்யார்த்தங்களைத் தமிழ்த்திவ்வியப் பிரபந்தங்களாக அருளிச்செய்து" என்றெழுதியுள்ளதனால், 'ஆழ்வார்கள் ரஹஸ்யார்த்தங்களைச் சேர்த்துப் பிரபந்தங்கள் செய்தருளினார்கள்' என்று ஆழ்வார்களுக்குக் கர்த்ருத்வமும் ப்ரபந்தங்களுக்குப் பௌருஷேயத்வ நவீநத்வாதிகளும் புலப்படா நின்றன; இதுவும், அருளிச்செயல்களெல்லாம் அருந்தமிழ்வேதமென்றும், 'ஸம்ஸ்கிருதவேதத்திற்குப்போல இவற்றிற்கும் நித்யத்வ, அபௌருஷேயத்வாதி தர்மங்களடையக் குறையற உள்ளன' வென்றும் முறையிட்டுள்ள நம் ஆசார்யர்களின் திருவுள்ளத்திற்குப் பாங்கலவாகத் தோற்றுநின்றது.

(௩) இன்னமும், [௬-வது பக்கத்தில்,] அருளிச்செயல்களைக் கணக்கிடும்போது சிறிய திருமடலையும் பெரியதிருமடலையும் தனித்தனி ஒவ்வொரு பாட்டாகக் கணக்கிட்டுள்ளதும், நெடுநாளாகப் பூருவர்கள் பேணி அநுஸந்தித்துப்போரும் வாழித்திருநாமங்களை அப்பிள்ளை அருளிச்செய்தாரென்பது இலக்கணநெறி யறியாதார் பேச்சென வரைந்ததும் பெரியோர் மனத்தைப் போரப் புண்படுத்தா நிற்கும்.

(ச) பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து மூன்றாந்திருமொழி மாணிக்கக் கிண்கிணியில் ஐந்தாம்பாட்டின் மூன்றாமடியில், அநாதியாகப் பூருவர்கள் ஆதரித்து ஓதியுமோதுவித்தும் வருகின்ற "வயிச்சிராவணன்" என்ற

பாடத்தை மாற்றியுள்ளதும், பெரியஜீயர் அருளிச்செய்த அதனுரையிற் காணப்படுகின்ற சிலபங்க்திகள் பின்புள்ள பரமைகாந்தி காலக்ஷேபபரர்களால் ப்ரக்ஷிப்தங்களாயினவென் றெழுதியுள்ளதும் ஸம்ப்ரதாய நிஷ்டைக்குப் பொருந்தாது.

(ரு) 'தாலேலோ' 'செங்கீரை' 'சப்பாணி' முதலானவற்றிற்கு இலக்கணமெழுதா தொழிந்தது இவ்வுரைக்குப்பெருத்த குறையாம். என்றிவையாம்.

ஆரியர்காள்! ஆராய்ந்தெழுதப்பட்டுள்ள இவ்வைந்து விஷயங்களுக்கும் அடியேன் உத்தரமெழுதக் கடமைப்பட்டிருக்கின்றேன். "மதியிலியேனுயினு நான் மதியால்மிக்க வல்லார் வாய்வழிகேட்டு வரைகின்றேனே" என்று முகவுரையில் அடியேன் வெளியிட்டுள்ள ப்ரதிஜ்ஞையைப் பரிசீலிக்க வல்ல பெரியோர்கள் * முன்னோர் மொழிந்த முறைதப்பாமற்கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே, தன்னெஞ்சில் தோற்றினதேசொல்லி யிதுசுத்த வுபதேசவர வாற்றதென்னும் மூர்க்கர்களின் குழுவினி லடியேனைப் புகுதவொட்டார்களென்று பெருக்க விச்வஸித்திராநின்றேன். மூலாதாரமின்றி ஒருவரியுமெழுதத்துணியேனென்பதை மீண்டும் வற்புறுத்தி விளம்புகின்றேன். அதனை இங்குச் சிறிது விவரித்துங் காட்டுகின்றேன்.

(க) நித்யஸூரிகள் நிலவுலகத்தில்வந்து ஆழ்வாராதியராக அவதரித்தனர் என்று முகவுரையில் அடியேன் எழுதியுள்ளது மெய்யே. நம்பிள்ளை ஸ்ரீபாதம்பணிந்து ஸகல ரஹஸ்யார்த்தங்களும் சிக்ஷிக்கப்பெற்ற பின்பழகிய பெருமாள்சீயர் அருளிச்செய்த ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தின் ப்ரவேசத்திறுதியில், "ஸ்ரீவத்ஸகௌஸ்துப வைஜயந்தீ வநமாலைகளையும் ஸ்ரீபூமிநீளைகளையும் ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களையும் அநந்தகருட விஷ்வக்ஸேநப்ரப்ருதிகளையும்பார்த்து 'நீங்கள்போய் லீலாவிபூதியிலே நாநாவர்ணங்களிலும் அவதரித்து அகிலாத்மோத்தாரணம்பண்ணுங்கோள்' என்று நியமித்தருள ......த்ரமிட பூபாகத்திலே நிமக்நரையுயர்த்த நாநாவர்ணங்களிலே வந்தவதரிக்க, ஸர்வேச்வரனும் அவர்களுக்கு மயர்வறமதி நலமருளி அவர்கள் முகேந ஸர்வாதிகாரமான த்ரவிடவேதரூப திவ்யப்ரபந்தங்களை ப்ரகாசிப்பித்தருளினான்" என்றருளிச்செய்துள்ளமையாலும், இவர்தாமிப்படியருளிச்செய்கைக்கு அடியாக திவ்யஸூரிசரிதமென்னும் சிறந்த காவ்யத்தில் முதல் ஸர்க்கத்தில், "—சேஷ சேஷாசநாத்யாஶ்ச ஸூரயோ ஹி ஸஹஸ்ரச: । நாநாவர்ணகுலோத்பந்நா நாநாதேசேஷு வாஸிந: ॥ ௩௯ ॥ நாநாவ்யாபாரநிஷ்டாஶ்ச நாநாகௌசலவ்ருத்தய: । ஶூத்ராயாஜ்ஞவிதேஶ்ச ஸர்வேர்ணாவிதக்ரமை: ॥" ௪௰ ॥......"நித்யஸூரீம்ஶ்ச சக்ராம்ஶ்ச ஹேதீம்ஶ்ச க்ஷிதௌ ஹரேர்வபு: । ஸம்ப்ரேஷ்ய ஸ யயாஶ்லாநவதாராய ஸூரிதமே ॥" ௬௧ । "சக்ராத்யைர் வைநதேயஶ்ச ஸூரயோ வதீர்ணா ஸம்ஸாரே" இத்யாதிகள் கருடவாஹந பண்டிதர் அருளிச்செய்துள்ளமையாலும் இவற்றை அடியொற்றி அடியேன் எழுதியுள்ளதும் பூர்வாசார்ய ஸூக்தி விச்வாஸிகளான பெரியோர்களால் ஆதரிக்கப்படும். ஆழ்வார்

கள் * மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்கும் ஸம்ஸாரிகளாய்ப் போந்தவர்கள் என்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தத்தில் அடியேனுக்கு விப்ரதிபத்திலேசமுமில்லை. திருவாய்மொழி ஈட்டுப்ரவேசத்திலும், திருவிருத்தத்தின் ஈட்டுப் ப்ரவேசத்திலும் "இவர் ஸம்ஸாரிகளில் ஒருவராமித்தனை" என்று நிஷ்கர்ஷித்தருளிச்செய்திருப்பதை அறிந்துளேன். இனி, நித்யஸூரிகள் தாமே ஆழ்வாராதியராக அவதரித்தனர் என்பவர்க்குக் கருத்து யாதெனில், நித்யஸூரிகளுடைய ஜ்ஞாநஶக்த்யாதிரூப-ஸம்ஸ்காரவிஶேஷ மென்பதேயாம். பார்க்கவம், மார்க்கண்டேயம், பாத்மம் முதலான புராணங்களில் 'பாஞ்சஜந்யாம்ஶம்' 'ஶார்ங்காம்ஶகம்' 'ஸ்ரீநந்தகாம்ஶகம்' 'சக்ராம்ஶகம்' என்றிப்படியுள்ள ப்ரக்ரியையினாலும் ஸம்ஸ்காரவிஶேஷ மென்கிற அர்த்தமே பெறப்படும்; அதாவது: நித்யஸூரிகள் ஸம்ஸாரிசேதநர்களைத் தந்தாமுடைய ஜ்ஞாநஶக்த்யாதிரூப ஸம்ஸ்காரங்களாலே வியாபித்தனர் என்றவாறு. இப்பொருள் வெளிப்படையாக விளங்குமாறு எழுதாமல் பூருவர்களைப்போலவே அடியேனும் ஸூக்ஷ்மமாக எழுதியுள்ளது குறையெனத் தோற்றுதல் தகும்; அங்ஙனன்றி ஸம்ப்ரதாய விருத்தமென்றால் * நெஞ்சூடுருவவேவுண்டு நிலையுந் தளர்ந்து நைவேனே.

(உ.) இனி, இரண்டாவது விஷயத்தை ஆராய்வாம். திவ்யப்ரபந்தங்கள் பௌருஷேயங்களென்றும் அநித்யங்களென்றும் தமிழ்வேதமன்றென்றும் அடியேன் கனவிலுங்கருதிற்றிலேன். "திவ்யப்ரபந்தவைபவவிவேக:" என்று வடமொழியில் இயற்றி அடியேன் மூன்று வருஷங்களுக்குமுன் வெளியிட்டுள்ள சிறுநூலைக் கண்ணுற்றால் இவ்விஷயத்தில் அடியேனுடையவும் பூர்வாசார்யர்களுடையவும் ஸித்தாந்த மின்னதென்று தெற்றெனவிளங்கும். "ஸகலவேத வேதாங்கரஹஸ்யார்த்தங்களைத் தமிழ்த்திவ்யப் பிரபந்தங்களாக அருளிச்செய்து" என்று அடியேனெழுதியுள்ளதனால் எந்த ஸித்தாந்தத்துக்கு என்னசீர்மை குலைந்ததோ! அறிகிலேன். அழகியமணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்யஹ்ருதயத்தில் இவ்வருளிச்செயல்களுக்கு வேதஸாம்யத்தைப் பரக்க அருளிச்செய்த வநந்தரம் "அன்றிக்கே ஸ்வரூபரூபகுண விபூதிசேஷ்டிதங்களை...... வேதோபப்ரும்ஹணமென்பர்கள்" என்னும் ஸூத்ரத்தினால் வேதோபப்ரும்ஹணஸாம்யமு மருளிச்செய்யப்பட்டுள்ளதென்பதை ஆய்ந்துணரவேண்டும். "தமிழ்த்திவ்யப் பிரபந்தங்களாக அருளிச்செய்து" என்ற எனது வாக்கியத்தினால் ஆழ்வார்களுக்கு கர்த்ருத்வம் ஆபாதத: தோற்றக்கூடும்; "அநாதிநிதநா ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா" என்று-பிறப்பிறப்பற்ற வேதஸந்தர்ப்பம் பிரமன் வாக்கில் நின்றும் ஆவிர்ப்பவித்ததென்றமாத்திரங்கொண்டு அதற்குப் பௌருஷேயத்வம் அநித்யத்வம் முதலியன சொல்லவொண்ணாதாப்போலே இவற்றுக்குங்கொள்க. ஆகவே இங்குக் கர்த்ருத்வமாவது ஆவிஷ்கர்த்ருத்வமென்றதாயிற்று. இவ்வளவு நிரூபிக்கவேண்டும்படியான அருமைபொருந்திய வாக்கியங்களை அடியேன் எழுதியுள்ளதைக் குறையாக நினைக்கில் இவ்விவரணத்தி

னால் அவற்றின்கருத்தை நிறைத்துக்கொள்க. முகவுரையை வெகுசுருக்கமாக எழுதி முடிக்கவேணுமென்றகருத்துடன் எழுதும்போது இக்குறைகளெல்லாம் விளைந்தனவென்று அறுதியிடுக.

(ரு) இனித்திருமடல் கணக்குவகுப்பைப்பற்றிச் சிறிது ஆராய்வேன். இத்திருமடல்களைப் பலபாட்டுக்களாகப்பிரித்தவர் அப்பிள்ளையென்பது அவர் அருளிச்செய்தவாழித்திருநாமத்தினால் விளங்குமென்று விளம்புவார்வாயை மூடுவிப்பதற்காக முகவுரையில், அவ்வாழித்திருநாமங்களிலுள்ள சிலபாட்டுக்களையெடுத்து இவற்றில் இலக்கணப் பொருத்தமறச் சீர்களின் ஏற்றத்தாழ்வு காணப்படாநின்றமையால் இவை அப்பிள்ளை யருளிச்செய்தவை யென்பது ஏசலுக்கிடமாமென்று அடியேன் எழுதியிருக்கின்றேன். இதைக் கடாக்ஷித்தருளின திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம்-உ-வே. (சின்ன) கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அடியேன்மீதுள்ள ஸௌஹார்த்தத்தினால் "இவ்வாழித் திருநாமங்களில் இலக்கணக்குறை காண்பதற்குக்காரணம் அச்சிட்டவர்களின் அறிவின்மையேயாமத்தனை" என்று தெரிவித்ததுமன்றித் தம் திருமாளிகையிலுள்ள ஏட்டுப்பிரதியிற் பாடத்தையுமெடுத் தெழுதி யனுப்பினார். நம்மாழ்வார் வாழித்திருநாமத்தில் நான்காமடியை "இசைகொள்மறையாயிரநூற் றிரண்டுரைத்தான் வாழியே" என்றும், கலியன்வாழித்திருநாமத்தில் முதலடியைக் "கலந்ததிருக் கார்த்திகைக்கார்த்திகை வந்தோன் வாழியே" என்றும், மூன்றாமடியை "நலந்திகழாயிரத் தெண்பத் தொடுநாலான் வாழியே" என்றும், ஆறாமடியை "இம்மூன்றி லிருநூற்று மூவொன்பான் வாழியே" என்று மிவ்வாறாகத் திருத்திக்கொண்டால் ஒரு குறையுமில்லை; இதுவே ப்ராசீநபாடமாகும் என்று மெழுதியருளினர். இவ்வாழித்திருநாமங்களுக்குத் தனியனாகிய "அம்புவியிலாழ்வார்கள்" என்ற பாட்டில் "செப்புளான் றனமாய்ச்சேர்ந்த பெரு (பொருள்) வாழிசெய்த, அப்புளான் தானே யரண்" என்று காணப்படுதலால் 'இவ்வாழித்திருநாமங்களருளிச்செய்தவர் அப்புள்ளார்' என்றுவிளங்குகின்றதேயென்று அடியேனெழுதியதற்கு 'அதில் ஈற்றடியை "அப்பிள்ளைதானேயரண்" என்றுதிருத்துவது தகும்; இதுவே பழையபாடம்' என்று உத்தரமுமருள்செய்தனர். ஆயினும் இவ்வடியை இவ்வாறு திருத்துவது எதுகையின்பத்திற்கு மிகவும் மாறுபடாநின்றதே! யென்று நெஞ்சு குறுகுறுத்துக் கிடவாநின்றது. இதெவ்வாறாயினும், இவ்வாழித்திருநாமங்களை அப்பிள்ளை யருளிச்செய்தாரென்றே முழுமனமாய்க்கொள்கின்றேன். திருமடல்களுக்குக் கணக்கு வகுத்த விஷயத்தை விமர்சிக்கப்புக்கால் ஒருவழியிலும் மநஸ்ஸமாதாநம் பிறந்ததில்லை. படாப்பாடுபட்டாயினும் இக்கணக்குவகுப்பை இலக்கண நெறிக்குப் பொருத்துவோமென்று பலநூற்களைப் புரட்டிப்பார்த்தும் பல தமிழ்ப்புலவர்களை யடிபணிந்தும் பயனிறையும் பெற்றிலேன். முன் முகவுரையில் "பன்னிருபாட்டியல்" என்ற இலக்கணநூலினின்று மேற்கோளாக எடுத்தெழுதிய பகுதியின்கீழ், "இவ்வாறுவந்தன மங்கையர்கோன் அருளிச்செய்த பெரியதிருமடல் சிறியதிருமடல் என்பன" என்று-நூலாராய்ச்சியில்

நுண்மதிபெற்ற செந்தமிழ்ப்பத்திராசிரியர் உரைத்துள்ளதையும் புதிதாக இங்கெடுத்துக்காட்டவேண்டிற்று. அன்றியும், வச்சணந்திமாலை என்னும் வெண்பாப்பாட்டியற் செய்யுளியலில் மடலிலக்கணஞ் சொல்லவந்த "உற்ற வறம்பொருள்வீ டெள்ளி யுயர்த்தின்பம், பொற்றொடி காதற் பொருட்டாகப்—பெற்றி,யுரைத்த கலிவெண்பா மடலிறைவ னெண்பேர், நிரைத்த வெதுகை நிறுத்து" என்ற வெண்பாவையும் புதுக்கக் காணப்பெற்றேன். இவ்வாறு பழைய நூற்களைப் பார்க்கப் பார்க்க 'மடல் ஒரேபாட்டு' என்பதற்கே வலம் விளங்குகின்றது; பலபாட்டெனப் பகரப் பிரமனும் வல்லனல்லனே. தவிரவும் அத்யாபகர்கள் இம்மடல்களை ஸேவித்துவரும் முறைமையைப் பார்க்கிலும் இப்பாகுபாட்டின் பொருத்தமின்மை போதரும்: சிறிய திருமடலில் "காரார்வரைக்கொங்கை" என்று தொடங்கி, "இப்பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே" என்னுமளவும் தொடக்கப் பாசுரமாக் கொண்டு அதனையிரட்டித்துச் சேவித்துவருகின்றனர்; இது அப்பிள்ளையினதாகக்கூறும் கணக்குப்பிரிவின்படி இரண்டேகாலரைக்கால் பாட்டாகத் தேறுகின்றது. பெரியதிருமடலில், "மன்னியபல் பொறிசேர்" என்று தொடங்கி "என்னும் விதானத்தின்கீழால்" என்னுமளவும் தொடக்கப்பாசுரமாக்கொண்டு அதனை இரட்டித்துச்சேவித்துவருதலின் இஃது அப்பிரிவின்படி இரண்டேமுக்காலரைக்கால் பாட்டாகத் தேறுகின்றது. ஆகவே அப்பிள்ளை வகுத்த கணக்குப்பிரிவைப் பெரியோர்கள் ஏற்றுக்கொண்டிலர் என்றே அறுதியிடவேண்டா நின்றது. முதற்பாட்டொன்றையேயன்றோ இரட்டித்துச்சேவிப்பது மற்றைப்பிரபந்தங்களின் ஸம்ப்ரதாயம். இனி, திருப்பல்லாண்டில் பொருட்பொருத்தத்துக்குச்சேர'பல்லாண்டு' 'அடியோமோடும்' என்ற இரண்டு பாசுரங்களையும் ஒன்றாகச்சேர்த்து ஸேவிப்பதுபோல இத்திருமடலிலும் ஒக்குமென்னக் குறையென்னென்னில்; பெரியதிருமடலில் "என்னும்விதாநத்தின்கீழால்" என்னுமளவில் நிறுத்துவதில் பொருட்பொருத்தமென்னோ! அறிகிலேன்.

ஆரியர்காள்! இம்மடலை ஒரேபாட்டென்று இன்றாக அடியேன் தான் றோன்றியாய் எழுதிற்றிலேன். அறிவிற்சிறந்தோர் அச்சிடுவித்துள்ள நாலாயிரமூலப்பிரதிகளின் பலபதிப்புக்களிலும் "இம்மடல் இலக்கணப்படி ஒரே பாடல் "என்று குறிப்பிட்டே யிருக்கின்றனர். அதனை அடியொற்றியே அடியேன் இவ்வாறு துணிந்தெழுதலாயினேன். இங்ஙனாகில், அப்பிள்ளையின் அருளிச்செயலை ஆற்றிலோ விடுவது எனில், இதற்கடியேன் என்சொல்லவல்லேன்? மணவாளமாமுனிகளுக்குப் பின்புள்ளார் அருளிச்செய்தவற்றில் கா[illegible] ப்ராமாண்யங்கொள்வார் யாருமில்லை. பிரமாண விரோதமற்ற பாகத்தைமாத்திரம் பேணுதலே நலம்; அன்றேல் பற்பலசங்கடங்கள் சாலவிளையும். இவ்வளவென்? உபதேசரத்தினமாலையில் " அன்போடழகிய மணவாளச்சீயர்" என்றபாட்டால் போரக்கொண்டாடப்பெற்ற வாதிகேஸரி அழகிய மணவாளசீயர் அருளிச்செய்தவற்றிலுமன்றோ சிலபாகங்கள்

ஸ்வாதந்த்ர்யங்களென்று பெரியோர்களால் மறுக்கப்பட்டுள்ளன. அதனைவிரிக்குச்சுருங்கச் சொல்லவும் வல்லேன்;

(௧) திருவிருத்தத்தில் "கடல்கொண்டெழுந்ததுவானம்" என்றபாட்டுக்கு அகப்பொருள் துறை காலமயக்கு என்று நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் மிடற்றொலியாக அருளிச்செய்தருளவும், இவர் தம் ஸ்வாபதேச வுரையில் "இது காலமயக்கமன்று" என்று வெட்டொன்று துண்டிரண்டாக மறுத்தெழுதியுள்ளார். இவர்தாம் பெரியவாச்சான்பிள்ளை திருக்குமாரர் திருவடிகளாம். இவரருளிச்செய்த திருவாய்மொழி பன்னீராயிரப்படி யுரையிலும் இவ்வகை மறுப்புக்கள் பலகாட்டுவேன்.

(௨) ரஹஸ்யத்ரயவிவரணமாக இவரருளிச்செய்த தத்வதீபதீபப்ரகாசங்களிலு மிவ்வாறு சில கண்டதுண்டு. எங்ஙனேயென்னில்; திருமந்த்ரப்ரகரணத்தில் "ஸகல ப்ரணவவஜிதஸ்ய ஶ்ரஸ்ய ஸவாயிகாரத்வஸிஷ்" தே" என்று-ப்ரணவம் ஸர்வாதிகாரமன்றென்றதையும்;

(௩) சரமச்லோகப்ரகரணத்தில் "ஸவயமாநு" என்ற விடத்திலுள்ள ஸவஸ்ஹபத்துக்குப் பொருளுரைக்குமிடத்து, "ஸவஸ்ஹபத்தாலே...... நித்யகர்மங்களைச் சொல்லுகிறது" என்று முமுக்ஷுப்படியில் பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்தருளின அர்த்தத்தை அநுவதித்து, "தந்ந" என்று மறுத்தெழுதியதையும் மாண்மதியோர் மதியாரிறே. இப்படி இவர்க்குள்ள ஸ்வாதந்த்ர்யத்தைத் திருவுள்ளம்பற்றியே மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் "தம்பெரியபோதமுடன்" என்று இவரைப் பற்றி விசேஷித்தருளிச்செய்தாரென்பது ஸம்ப்ரதாயப்ரவர்த்தகர்களின் பாசுரம். 'பன்னியுரைக்குங்காற் பாரதமாம்' என்று விட்டொழிகின்றேன்.

இனி, இத்திருமடல்களை ஒவ்வொருபாட்டாக வற்புறுத்தியதனால் பல பெரியோர்கள் திருவுள்ளம் புண்பட்டு 'தான்றோன்றிப்படியாயிருந்ததீ!' என்று வெறுத்தருளுவதாகப் பலவகைகளாலடியே னுணர்ந்தமையாலும், "அப்பிள்ளைதிருவுள்ளப்படி சிறியதிருமடலை ௭௭-பாட்டாகவும், பெரிய திருமடலை ௧௪௮-பாட்டாகவும் கணக்கிட்டு நாலாயிரம் என்ற வ்யவஹாரத்தை ஸம்ப்ரதாயமாகவே நிர்வஹித்தாலொழிய இவ்வுரையை மேலையார் மதியார்; இதில் தமிழருடைய பக்ஷத்தைப் பூர்வபக்ஷமாகவும் அப்பிள்ளை திருவுள்ளத்தை ஸித்தாந்தமாகவுங்கொண்டு உபபாதித்தெழுதுவதே தகுதியாகும்" என்று திருநாங்கூர், பிரதிவாதிபயங்கரம் கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி என்ற திருநாமமுடைய எனது உயிர்நண்பர் மிகவும் நிர்ப்பந்தித்து நியமித்தருளுகையாலும் இவ்விஷயத்தில் அடியேன் ஸ்வாதந்த்ர்யம் வஹிக்கலாகாதென்றறுதியிட்டு அந்யமதத்தைத் தலைக்கட்டக்கருதி இவையெழுதத்தொடங்கி "விநாயகம் ப்ரகாஸயாமி வாஸம்" என்கிற கணக்கிலே இவ்வளவுந் தலைக்கட்டியிருக்கின்றேன். "ஸந்தோஷபகுதந்தோ ஷாவதிதம்" இவற்றையெல்லாமவர் கண்ணுறுவாராயின் 'விலைகொடுத்து

விண்கொண்டோமாகாதே!' என்று திருவுள்ளம் நொந்து வெறுக்கக்கூடுமாகையால் இனி அந்த நிக்ரஹத்துக்கிலக்காகாதொழியுமாறு வரைகின்றேன்.

திருமடல்களைப் பலபாட்டுக்களாகப் பிரித்தல் இலக்கணமுறைமைக்கு எவ்வகையாலும் இணங்காதாயினும் 'ஔசித்யம்' என்கிற பிரமாணத்தின் படி அங்ஙன் பிரித்தருளினது ஒக்குமென்க; அதாவது-சிறியதிருமடலிலும் பெரியதிருமடலிலுமாகச் சேர்ந்து மொத்தம் சஉஉ அடிகள் அமைந்துள்ளன, இவற்றில் இரண்டிரண்டடிகளை ஒவ்வொரு பாட்டாகக்கொண்டு கணக்கிட்டால் ஓரக்ஷரமும் மிச்சமாகாதபடி சரிசமமாக-உஉ௬ பாட்டுக்கள் தேறி, அதனால் நாலாயிரக்கணக்கு நன்னர் நிறைவேறுகின்றதென்ற ஔசித்யத்தை உட்கொண்டு அங்ஙன் பிரித்தருளிற்றென்று விவரங் காண்க. இப்பேச்சிற் பலர்க்குப் பலசங்கைகள் பிறக்கக்கூடுமாயினும் "ஷூூரிகவஸ்ரு மதிஸ்ரீஷதீயா" என்கிற நியாயத்தை உட்கொண்டு இதனை மறுக்க முயலாது இசைதலே அமையுமென்றொழிக. இவ்வகை நிர்வாஹம், ஸ்ரீமத் பரமஹம்ஸ. காஞ்சீ. வாதிகேஸரி அழகியமணவாளராமாநுஜஜீயர்ஸ்வாமி, வித்வான். பிரதிவாதிபயங்கரம் அநந்தாசாரியர்ஸ்வாமி, திருக்கண்ணபுரம் திருவேங்கடாசாரியர்ஸ்வாமி, காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமி முதலான ஸத்ஸம்ப்ரதாயஜ்ஞ ஸார்வபௌமர்களின் திருவுள்ளத்துக்குப் பொருந்துமென்க. ஆனதுபற்றி இந்த நிர்வாஹத்தையே ஸித்தாந்தமாக அனைவருந்திருவுள்ளம்பற்றி அகமகிழ்க. உதஹ்ரூஉதிவிஷூரெண.

(ச) இனி, "வயிச்சிரவணன்" என்ற திருத்தப் பொருத்தத்தைப்பற்றிச் சிறிது ஆராய்வேன். "வழுவில் கொடையான் வயிச்சி ராவணன்" என்ற பாடமும், அதனுரையிற் காணும் சிலபுதியவாக்கியங்களும் எவ்வகையாலும் இலக்கணப் புலவர்களால் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா என்பதை அடியேன் அப்பாட்டின் உரையிலே விரித்தெழுதியிருக்கின்றேன். "வயிச்சிரவணன்" என்ற பாடமே சிறக்கும் என்பது வயிரப்பூச்சே. இனி, "வயிச்சிராவண்ணன்" என்னும் பாடம் இலக்கணத்துக்குப் பொருந்துமாயினும் ஒருபயனுமின்றி நீட்டல், விரித்தல் என்ற இரண்டு செய்யுள் விகாரங்கள் கொள்ளவேண்டிவருதலின், இது "சீருந்தளையுஞ் சிதையவருமிடத்தே, செய்யுள்விகாரங்கொள்ளற்பாற்று" என்ற தமிழர் நிர்ணயத்துக்கு விருத்தமாமாதலாலும், இப்பொருளையே தாத்பர்ய பர்யவஸாநமாகக் கொண்டு பிறந்துள்ள "ஊவிரொஷஂ ஊஷஂக யெ-ாஸ ஹஜொஷூஂ நகாரயெஸ" என்றவடமொழியிலக்கண நிர்ணயத்துக்கும் பொருந்தாமையாலும் 'வயிச்சிராவண்ணன்' என்கிறபாடம் எடுத்துக்கழிக்கவுந் தக்கதன்று. "ஊவஜஂவஈிஜூா கூ-ஜொஷ்ருஂகொரா தி" யாமத்தனை. வடமொழி வியாகரணம் படிப்பானொருமாணக்கன் "வாகாஜஹணஂ" என்றொரு பதத்தைப்படிக்க, அதுகேட்ட ஆசிரியன் பொருளுணராமல் 'சிச்சா! அங்ஙனன்றுகாண், வாகாஷமீஹ்ரஹணஂ" என்று திருத்திவாசி' என்ன; ஏகாதசிதிதியில் ஸூர்யனுக்காகிலும் சந்திரனுக்காகிலும் கிரஹணமில்லையே' என்ன, பிறகு ஆசிரியன் "ராகா

ஸம்ப்ரஹணம்''எனத் திருத்தினருமென்றிவைபோல்வன பலகதைகள் நினைவுக்கு வாராநின்றன.

“அரவை ‘அரா’ என்னுமாபோலே” என்றுதொடங்கி ஜீயருரையின் அச்சுப்பிரதிகளில் காணப்படுகின்ற வாக்கியங்கள் இலக்கணநெறியறியாதவர்களால் டிப்பணியாக எழுதிவைக்கப்பட்டதென்பதை அப்பாட்டினுரையிலேயே அடியேன் விரித்துரைத்துளேனாதலால் அதைநோக்கி இங்குப்பன்னியுரைக்கவேண்டிற்றொன்றுமில்லை. நம்முடைய ஸம்ப்ரதாயக்ரந்தங்களில் அச்சுப்பிரதிகளிலும் சிலஓலைஸ்ரீகோசங்களிலும் இவ்வாறு நேர்ந்துள்ள பிறழ்வுகள் பேச்சுக்கு நிலமல்லவென்பதை அடியேன்யாரிடத்து முறையிட்டு மனக்கவலைதீர்வேனோ! இவற்றில் முக்கியமாகத் தோன்றின சில அம்சங்களையிங்குச் சுருக்குகின்றேன்.

பெரியதிருமொழியில் பத்தாம்பத்து, ஐந்தாந்திருமொழி மூன்றும்பாட்டில் “தாம்மோதரக்கையால்” என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை உரையில், “அன்றியே, அலங்க்ருதமான கைகளாலே கட்ட. ‘தாம் மோதரக்கையால்’ என்றுபிரித்து; மோதரத்தை மோதிரமென்று வ்யவஹரிக்கிறவித்தனை. படாகை, கணறு என்கிற இவற்றைப் பிடாகை, கிணறு என்கிறாப்போலே” என்கிறவாக்கியம் காண்கிறது. இது பொருந்துமாற்றைப் புலவர்களே ஆராய்க. இங்கு உண்மையாதெனின்? ஆய்ச்சியர் தாம் தாம்பால் ஆர்க்க, கையால் மோதர [அடிக்க] என்று அந்வயித்துப் பொருளுரைத்தல் மாத்திரம் சுத்ததாளகோசங்களிற் காண்கிறது. வேறொரு பொருள்காட்டி அதற்கோருவமைகூறியது பின்புள்ளார்பணியாமத்தனை. “கஜூாக—ஹணா௦ தாகி—கெஷா௦” உதாஷி॥ அன்றியும், திருநெடுந்தாண்டகத்தில் “மைவண்ணநறுங்குஞ்சி” என்றபாட்டுக்குப் பட்டர் (அல்லது நம்பிள்ளை) அருளிச்செய்த விரிவுரையில் “கைவண்ணந்தாமரை” என்றவிடத்து “ஷ்ராயஃ வ்ரவடிநேவ—௦வஸா௦ வெளநகேவ—௩௭௦ நிவாரயநு” என்கிறதேசிகன் ஸ்ரீஸூக்தியை மேற்கோளாகக்காட்டிஅச்சிட்டிருக்கிறது.பட்டர்காலத்துக்கும் (அல்லது நம்பிள்ளைகாலத்துக்கும்) தேசிகன்காலத்துக்கு மிடையிலுள்ள வ்யவதானத்தினளவறிந்தார் இதனை என்னாகை எண்ணுவர். இன்னமும், பிள்ளை உலகாசிரியர் அருளிச்செய்த தனிசரமத்திலும் “கத—லெவ்௦வலக்ஷ ஜெவ”என்கிற தேசிகன் ஸ்ரீஸூக்தியைப் பூர்ணமாக எழுதிக்கிடக்கிறது; பிள்ளையுலகாசிரியர் ரஹஸ்யங்களெழுதித் தலைக்கட்டினபிறகு தேசிகன் எழுத்துக் கருவியைக் கையிற் பிடித்தருளினார் என்னும் ஸாரவித்துக்கள் இதனை என்னென்பர்?.

ஈடுமுப்பத்தாறாயிரப்படியைத் தெலுங்குலிபியில் மிக்க வியப்பாகப் பல உரைகளுடன் முதலில் அச்சிடுவித்தவர்கள் அவற்றினிடை யிடையில் தாமாகப் பலவாக்கியங்களைப் பலவிடங்களில் எழுதிச்சேர்த்து, அவற்றின் கீழ்“இவ்வாக்கியம் ப்ரக்ஷிப்தம்”என்று தாமே குறித்து மிருக்கின்றார்கள். மற்ற ஆறாயிரப்படியாக்கியானங்க ளச்சிடுவித்தவர்கள் அவற்றினிடையில்

வாறு பல வாக்கியங்களெழுதிச் சேர்த்தச்சிடுவித்தும் அவை தம்மாற் புதிதாகச் சேர்க்கப்பட்டனவென்பதைக் குறிப்பியாதொழிந்தனர். இவ்வளவே வாசியென்க. அன்றியும், ஒரு பிரபந்தத்திற்குப் பல உரைகளுண்டானால், அவற்றுள் ஒருரையை அச்சிட்டுவரும்போது அதனிடையில் மற்றொருரையிலாவது அரும்பதவுரையிலாவது உள்ள சிலவாக்கியங்களை ஆகர்ஷித்தச்சிடுவதும் அவ்வுண்மையைத் தாமே வெளியிடுவதும் மேற்குறித்த பகவத்விஷய முத்ராபகர்களின் பணியென்பதை அனைவரும் பிரத்தியக்ஷமாகக் காணலாம்; இவ்வாறும்போது அரும்பதவுரைகாரர்களின் வாக்கியங்கள் சிலவிடங்களில் பெரும்பாலும் பிரமாணப்பொருத்தமற்றிராநின்றமையால் அவர்களின் மேதையேதத்தைச் சிலர் வியாக்கியாதாக்களான ஆசிரியர்களினுடையனவாகக்கொண்டு கைதட்டிச் சிரிக்கின்றனரேயென்று *கொள்ளிமேலெறும்புபோலக் குழையுமாலென்றனுள்ளம்.

அரும்பதவுரைகாரர்கள் மோசம்போனவிடங்கள் அளவறக் காட்டக்கூடுமாயினும் இங்கொன்றைக்காட்டுகின்றேன். திருவாய்மொழியில் முதற்பத்து நான்காந்திருமொழியில் "என் நீர்மைகண்டிரங்கி" என்ற நான்காம் பாட்டின் ஈட்டில், இப்பாட்டின்மேல் ஆக்ஷேபித்த ஒருதமிழனுக்குப்பட்டர் உத்தரமாக அருளிச்செய்த குறுந்தொகைப்பாட்டொன்றைக்கண்டு, அடையவளைந்தானரும்பதவுரையில் பாடமெடுத்தவாறும் பொருளுரைத்தவாறும் மிகவியப்பே. "ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க, பாசியற்றே பசலை காதலர், தொடுவுழித் தொடுவுழிநீங்கி, விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்பது குறுந்தொகையில், நூஙஙூ-வது கவி; இதனை அவ்வரும்பதவுரையில் சங்கத்தார்குறள் என்றெழுதிப் பாடத்தையும் மாறுபடக்கொண்டு அதற்கேற்பப் பொருளையு மெழுதினர் இவற்றையெல்லாமடியேன் பல பெரியோர் முகமாக்கேட்டு உண்மை விளம்பினால் 'இன்றாக இவன் தமிழ்படித்து முன்னோரைப்பழிக்க ஒருப்பட்டானோ' என்று சிலர் சீறுபாறென்பர்.

இவ்வாறு யாம்மூதலிக்க முயல்வது என்றியவென்னில்; பூருவர்களின் வியாக்கியானங்களில் இடையிடையே பின்புள்ளார்வாக்கியங்களையுஞ் சிலர் சேர்த்துப் பதிப்பித்திருக்கின்றமையால் அவற்றில் பிராமாண்யங் கொள்ளற்பாற்றன்றென்பதைக் கூறுதற்காக வென்க. தவிரவும், பூருவர்கள் பணித்த சிலவாக்கியங்களுக்குப் பின்புள்ளார் யதாவஸ்திதரீதியிற் பொருளுணராது தங்கள்மதிக்கேற்பத் திருத்தியு மச்சிடுவித்து வருகின்றனர்; இதற்கு யாம் காட்டப்புகு முதாரணத்தினால் பேதையருமிதைப் பெருக்க மதிக்கலாம். ஸ்ரீராமாயணத்தில் "கௌஸல்யா ஸுப்ரஜா ராம" என்றஸ்லோகத்தைப் பெரிய வாச்சான் பிள்ளைமுதலானோர் வியாக்கியானித்தருளுமிடத்து "உண்ணப்புக்கு வாயைமறப்பாரைப் போலே" என்றருளிச் செய்தமைக்கிணங்க, மஹாவிஜராஜீயம் என்ற (ஸ்ரீராமாயணத்தின்) ஸம்ஸ்கிருதவியாக்கியானத்தில் "ஹா ஜநகாயா விஸ்லேஷ[illegible]" என்றெழுதியிருந்ததைக் கண்ட பின்புள்ளார் சிலர், இது பொருந்தா தெனக்கருதி

திருத்திப் பதிப்பித்திருக்கின்றனர். இவ்வாறு மோசங்கள் பல்லாயிரமெடுத்துப் பகரலாம். ஆனபின்பு, இம்மாதிரியாகவே "வழுவிற் கொடையான் வயிச்சிரவணன்" என்றவிடத்து உரையிலும் ஏறிக்கிடக்கிற சிலவாக்கியங்களின் பொருத்தமின்மையை யாம் விளங்கக் காட்டிச் சரியான பாடத்தை வெளியிட்டமைக்கு அழுக்காறு கொள்ளாமல் அநுமோதிப்பதே அழகிதென்றொழிக. "வயிச்சிரவணன்" என்றபாடம் யாம் புதிதாகக்கொண்டதுமல்ல; சில அச்சுப்பிரதிகளிலும் "'வயிச்சிரவணன்" என்றும்பாடம்' என்று குறிப்பிக்கப் பட்டுள்ளது காண்க.

இப்படி பூருவாசாரியர்கள் அருளிச்செய்யாத பலவிஷயங்கள் ஊடு சேர்த்தச்சிடப்பட்டுள்ளமையை எனது நண்பரொருவரிடத்து யான் ஒருமுறை உரைக்க, அதுகேட்ட அவர், 'இது வியப்பன்று காண், ஒன்றிரண்டு வாக்கியங்களுக்கன்றோ நீ வியந்து விளம்புவது; பெரியதொருவிஷயம் யான் சொல்லக் கேளாய், "யமகரத்நாகரம்" என்றொரு வடநூல் வியாக்கியானத்துடன் அச்சிட்டு வெளியிடப்பெற்றிருக்கின்றது; மூலம் உரை என்ற இரண்டும் கூரத்தாழ்வான் அருளிச்செய்தவையென்று அச்சியற்றியுள்ளார்; அவ்வுரைத் தொடக்கத்தில் "ஶ்ரீவத்ஸாங்க: பராஶராநுஜ: । ஸ்வயமேவ யமகாகரவிவ்ருதிம் க்ருதவானஹோ ॥" என்றொரு ஶ்லோகங்காண்கிறது; ஆழ்வானுக்குப் பாராசரர் என்றொரு மறுதிருநாமமுண்டென்கை சேருமாறு எங்ஙனேயோ? இத்திருநாமம் இவர்க்கு இருந்ததாகில் ஆளவந்தார்க்குச்சரமஸமயத்தில் மூன்றுந்திருவிரல் முடங்காதொழியுமே. அன்றியும் இந்நூலின் இரண்டாவது ஆஶ்வாஸத்தில் பதினைந்தாம் ஶ்லோகத்தின் வியாக்கியானத்தில், எம்பெருமானாரருளிச்செய்த ஶ்ரீபாஷ்யத்தில் தஹராதிகரணத்திலுள்ளதொரு வாக்கியத்தை அநுவதித்தெழுதி "அதிற் சொன்னபொருள் எம்மால் சாரீரத்தில் கண்டிக்கப்பட்டுள்ளது: கண்டநயுக்திகள் முதலியவற்றின் விரிவை அங்கே கண்டுகொள்வது" என்ற கருத்துப்படச் சில வரிகள் காண்கின்றன; இவ்வபசாரத்தை ஆழ்வான்மீது ஏறிடுவது அதிஸாஹஸம் என அறுதியிட்டேன் என்று கூறினர். இவ்வகை விபர்யாஸங்கள் பலரால் பலபல பகரப்படுகின்றன.

உள்ள நூற்களை ஒளித்தலும், இல்லாத நூற்களை வெளியிடுதலும், உள்ளபங்க்திகளை விட்டிடுவதும் இல்லாத பங்க்திகளை அச்சிடுவதும் அனேகர்க்கு இயல்பாயிற்றென்பதை எளிதிலுணர்ந்தார் எண்ணிறந்துளர்.

இப் பிரசங்கத்தில் மற்றொரு ஆவசியக விஷயம் நினைவுக்கு வந்தது. "விவக்ஷிதம் ஹ்யநபேக்ஷிதாகாங்க்ஷோ ஸாதிஹ்ருதயம்"॥ அச்சுக்காரர்களின் சேஷ்டைஸம் சிலவிடங்களில் அதிகமான அநர்த்தங்கட்கும் அடியாகின்றது. எங்ஙனே யெனில்;—முதல் திருவந்தாதியின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத் தொடக்கத்தில், "ஆழ்வார்களிற் காட்டில் பகவத்விஷயத்திலுண்டான அவகாஹநத்தாலே முதலாழ்வார்கள் மூவரையும் நித்யஸூரிகளோபாதியாக நினைத்திருப்பர்கள். 'இன்கவிபாடும் பரமகவிகள்' என்றும், 'செந்

லும் காலப்பழமையாலே இன்னவிடமென்று நிச்சயிக்கப் போகாது" என்று அச்சுப்புத்தகங்களிற் காண்கிறது. இதன் அரும்பதவுரையில் "இவை யிரண்டு ஸங்கதியும் ஸ்வாரஸமன்று; பிழையுந் தெரியாது, வந்தவிடங்களிலே கண்டுகொள்வது" என்றிருக்கக் காண்கிறது. மேற்குறித்த வியாக்கியான பங்க்தியினால் தேறுவதென்னெனில், பொய்கை பூதம் பேயாழ்வார்கள் அவதரித்தது யுகாந்தரத்திலாகையால் இன்னவிடத்தில் அவதரித்தனர் என்பது நிச்சயிக்க முடியாதென்று பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளமெனப் பெறபபட்டது. இதனைப்பலர் உண்மையாகக் கொண்டு 'பொய்கையார் அவதாரம் கச்சியில், பூதத்தார் அவதாரம் திருக்கடன் மல்லையில், பேயார் அவதாரம் மயிலையில்' என்று விவரித்துக் கூறுகின்ற திவ்யஸூரி சரிதம், குருபரம் பராப்ரபாவம், திருவந்தாதித் தனியன்கள், (தேசிக னருளிச்செய்த) பிரபந்தசாரம், உபதேச ரத்தினமாலை முதலான பிரபந்தங்களைப் பணித்தவர்கள் அத்துணை பிராமாணிகர்க ளல்லரெனப் பன்னியுரைக்கின்றனர் அடியேனுஞ் சிலகாலம் அவர்திரளிற் புக்கிருந்தேன். ஒருகால் திருநாராயணபுரம் விடைகொண்டிருந்த போது அங்குள்ள பாடசாலைப் புத்தகசாலையில் ஷை திருவந்தாதி வியாக்கியாந தாளஸ்ரீகோசத்தைத் தேடியெடுத்துப் பார்த்ததில் அச்சுக்காரர் திறத்தில் ஒருநாழிகை ஒன்பதாமஷ்டகம் ஓத நேர்ந்தது. அந்தத்தாளகோசத்திற் கண்ட பாடம்:—"...........'இன்கவிபாடும் பரமகவிகள்' 'செந்தமிழ்பாடுவார்' என்னுமிவர்கள் அவதரித்தது ஓரோ தேசங்களிலே யாகிலும் ஞானப்பெருமையாலே இன்னவிடத்தவரென்று நிச்சயிக்கவொண்ணாதிறே" என்பதாம். இது "ஆழ்வார்களிற்காட்டில்" இத்தியாதி முதல் வாக்கியத்திற்கு விவரணமென்க இவ்வாழ்வார்கள் ஓரோ விடங்களிலே இவ்வுலகி லவதரித்தனரே யாகிலும் இவர்களது ஞானப்ரபாவத்தைப் பார்த்தால் 'அடியார்நிலாகின்ற வைகுந்தமோவையமோ நுந்நிலையிடமே?' என்றாற்போலச் சங்கிக்க வேண்டும்படியான நிலைமையாயிருக்கின்றதென்றவாறு. "அத்ரிஜமதக்நி பங்க்திரதவஸுநந்தஸூநுவானவனுடைய யுகவர்ணக்ரமாவதாரமோ, வ்யாஸாதிவதாவேசமோ, மூதுவர் கரைகண்டோர் சீரியரிலே யொருவரோ, முன்னம் நோற்ற அனந்தன் மேற் புண்ணியங்கள் பலித்தவரோ என்று சங்கிப்பர்கள்" (ஆசார்யஹ்ருதயம்) என்று நம்மாழ்வார் திறத்திலு மொருவாறான சங்கையுண்டாகச் சொல்லிற்றிறே. இதன் விரிவை வேறிடத்தில் வரைவாம். மேற்குறித்த தாளகோசபாடத்தின்மேலும் சில தார்க்கிகர் கோடியேற்றுவர்; அவற்றின் விரிவுக்கு இங்கு இடமில்லையென்க.

ஆனபின்பு அச்சுப்புத்தகங்களை ஸ்வத: ப்ரமாணங்களாகக் கொள்ளுமவர்கள் அக்கொள்கையை நீத்துக்கொள்கவென்று உறுதியாய்க்கூறிக்கோரித் தலைக்கட்டுகின்றேன்.

(ரு) இனி, ஐந்தாவது விஷயத்தைப்பற்றி எழுதுகின்றேன். தாலேலோ, செங்கீரை, சப்பாணி முதலியவற்றிற்கு இலக்கணங்கூறுமிடத்து...

ரைக்குக் குறையென்றதற் கிசைகின்றேன். இவ்விலக்கண ஆராய்ச்சிக்காக யாம் பற்பலநூற்களைப் புரட்டிப்பார்த்தும் பல்லாயிரம் புலவர்களைக் கேட்டுப் பார்த்தும் அறியப்பெற்ற தொன்றில்லை. வச்சணந்திமாலை முதலான சில பாட்டியல்களில், "சாற்றிய காப்புத் தால் செங்கீரை சப்பாணி, மாற்றரிய முத்தமே வாரானை-போற்றரிய, அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே, பம்புசிறு தேரோடும் பத்து" என்று பிள்ளைக்கவிகள்பாடும் வகை பகரப்பட்டுளதேயன்றி ஒன்றிலுமவற்றினிலக்கணமுணர்த்தக் கண்டிலேன். இதனை யாராயினுங் கண்டுபிடித்துக் காட்டுவாராயின் தலையல்லாற் கைம் மாறிலேனே.

இனி மற்றொருவிஷயமுங் கவனிக்க;— முன் முகவுரையுடன் சேர்த்து யாம் வெளியிட்டுள்ள பதிப்புக்குறிப்பில் அத்யாபகர்களின் பாடத்தை யிகழ்ந்துரைத்ததாகச் சிலர்மயங்கி உள்வெதும்புவதாகச் செவியிற்பட்டது, "[illegible]" ॥ அத்யாபகர்களின் பாடத்துக்கும் வியாக்கியானத்துக்கும் பலவிடங்களிற் பொருத்தமில்லையென் றெழுதிற்றுண்டு; இதில் யாது குற்றமோ அறியேன். அப்பாடமும் அநாதிபரம்பரையாகவே அநுவர்த்தித்து வருதலால் அதனை யார் இகழவல்லார். பெரிய திருமொழியின் ஈற்றுப் பாசுரமாகிய "குன்றமெடுத்து" என்றபாட்டில் "மன்றில் புகழ்மங் கைமன்க லிகன்றி சொல்" என்கிற சுத்தபாடத்தைஒழித்து "மன்றில் மலிபுகழ்"எனப் பெரியோரனைவரும் சிறியேன் யானும் ஸேவித்துவருவது அத்யாபக பாடத்திலுள்ள அபிநிவேசாதிசயத்தா லென்றறுதியிட்டு ஐயமறுக்க.

இப்பிரகரணத்தில் வரையவேண்டியவிஷயங்களுக்கு வரையறையில்லையாயினும் நூல்விரிவுக்கஞ்சி நிற்கின்றேன். இதில்மதிமுன்னாகவும் மருள்மூலமாகவும் நேர்ந்துள்ள பிழைகளைப் பெரியோர்தாமே பொறுத்தருள்வாராக.

பரிதாவிஞு
புரட்டாசிமீ
30உ

இங்ஙனம், ஸ்ரீவைஷ்ணவதாஸன்
பிரதிவாதிபயங்கரம்-அண்ணங்கராசாரியன்.
பெருமாள் கோயில்.

## இரண்டாந்திருமொழி,

## அரவணையாய்.

---

**அவதாரிகை:—** கண்ணபிரான் பகல்முழுதும் விளையாடி யிளைத்துப், பொழுது போனதையும் முலையுண்பதையும் மறந்து உறங்கிப்போய் பொழுதுவிடிந்து நெடும்போதாயும் கண்விழியாதிருக்கவே, யசோதைப் பிராட்டி அப்பிரானைத் துயிலெழுப்பி முலையுண்ணுமையை அவனுக்கறிவித்துத் தன்முலையை யுண்ணவேணுமென்று நிர்ப்பந்தித்து விரும்பி ஊட்டினபடியை ஆழ்வார்தாமு மநுபவிக்க விரும்பித் தம்மை அவ்யசோதைப் பிராட்டியாகவே பாவித்துக்கொண்டு அவனை அம்மமுண்ண வெழுப்புதல் முதலியவற்றைப் பேசி இனியராகிறார் - இத்திருமொழியில்.

அரவ ணையா யாய ரேறே யம்ம முண்ணத் துயிலெ ழாயே
இரவு முண்ணு துறங்கி நீபோ யின்று முச்சி கொண்ட தாலோ
வரவுங் காணேன் வயிற சைந்தாய் வனமு லைகள் சோர்ந்து பாயத்
திருவு டைய வாய்ம டுத்துத் திளைத்து தைத்துப் பருகி டாயே. (க)

அரவு அணையாய்—சேஷசாயியானவனே!
ஆயர் ஏறே — இடையர்களுக்குத் தலைவ[னே
நீ இரவும் உண்ணாது } நீ (நேற்று) இரவும் முலை உண்ணாமல்
உறங்கி போய்—உறங்கிப்போய்விட
இன்னும்—இப்போதும்
உச்சி கொண்டது—(பொழுதுவிடிந்து) உ[ச்சிப்போதாய் விட்டது;
ஆல்—ஆதலால்
அம்மம் உண்ண—முலையுண்பதற்கு
துயில் எழாய் — (தூக்கந்தெளிந்து படுக்கையிலிருந்து எழுந்திருக்கவேணும்;
வரவும் காணேன் — (நீயே எழுந்திருந்து அம்மமுண்ணவேணுமென்றுசொல்லி) வருவதையுங் கண்டிலேன்;
(உனக்குப்பசியில்லையென்போமென்றால்,)
வயிறு அசைந்தாய்—வயிறுந்தளர்ந்து நின்[றாய்;
வன முலைகள்—(எனது) அழகிய முலைகள் (உன்மேல் அன்பினால் நெறித்து,)
சோர்ந்து பாய — பால்வடிந்து பெருகிக்[கொண்டிருக்க
உடைய—அழகை உடைய
வாய் மடுத்து—(உன்) வாயைவைத்து
திளைத்து—செருக்கி
உதைத்து—கால்களாலே உதைத்துக்கொ[ண்டு
பருகிடாய்—முலையுண்பாய்.

குறிப்பு:—[அரவணையாய்] எம்பெருமான் திருவனந்தாழ்வானாகிற படுக்கையைவிட்டு க்ருஷ்ணனாகத் தோன்றினாலும், "சென்றாற் குடையாம்" என்கிறபடியே அவ்வக்காலத்துக்கு ஏற்ற கோலங்கொண்டு அடிமை செய்பவனை அத்திருவனந்தாழ்வான் கண்ணபிரானுக்குத் திருப்பள்ளி மெத்தையாய் இனிது தூங்குவதற்கு உதவுகின்றானென்க. 'அம்ம முண்ண' என்றது - கண்ணனுடைய குழந்தைப் பருவத்திற்குத் தக்கபடியாக யசோதை சொல்லியதாகும். சிங்கம் முதலியவற்றின் ஆணை யுணர்த்துகின்ற 'ஏறு' என்ற பெயர், இலக்கணையால் 'ப்ரதாநன்' என்ற பொருளைத்தரும். இரண்டாமடியின் ஈற்றிலுள்ள ஆல்—'ஆதலால்'என்பதன் சிதைவு; இனி, ஆல், ஓ-இரண்டும் இரக்கப் பொருளைக் குறிப்பன வென்றுமாம் வயிறசைந்தாய்: நன்னூலார், "சினைவினைசினையொடும் முதலொடுஞ் செறியும்" என்றாராத

லின், சினை வினைமுதலோடு செறிந்ததென்க. "வனப்புமுலை" என்கிறவிது-'வனமுலை' என்று விகாரப்பட்டதென்பர்; "வனமே நீரும் வனப்பு மீமமுந், துழாயும் மிகுதியுங் காடுஞ் சோலையும், புற்றுமனவே புகலுமெண் பேரே" என்ற நிகண்டின்படி 'வனம்'என்ற சொல்லே அழகைக் குறிக்குமென்பதும் பொருந்தும். ... ... ... ... (க)

வைத்த நெய்யுங் காய்ந்த பாலும் வடித யிரும் நறுவெண் ணெயும்
இத்த னையும் பெற்ற றியே னெம்பி ரான்நீ பிறந்த பின்னை
எத்த னையுஞ் செய்யப் பெற்றா யேதுஞ் செய்யேன் கதம்ப டாதே
முத்த னைய முறுவல் செய்து மூக்கு றிஞ்சி முலையு ணாயே. (உ)

எம் பிரான்-எமது உபகாரகனே!
வைத்த நெய்யும்-உருக்கிவைத்த நெய்யும்
காய்ந்த பாலும்-(ஏடுமிகுதியாகப் படியும்படி) காய்ந்தபாலும்
வடி தயிரும்-(உள்ளநீரை) வடித்துக் கட்டியாயிருக்கிற தயிரும்
நறு வெண்ணெயும் - மணம்மிக்க வெண்ணெயும்
இத்தனையும்-(ஆகிய) இவையெல்லாவற்றையும்
நீ பிறந்த பின்னை-நீ பிறந்த பிறகு
பெற்று அறியேன்-கண்டதில்லை;
எத்தனையும்-(நீ) வேண்டினபடியெல்லாம்
செய்யப் பெற்றாய்-நீ செய்யலாம்;
ஏதும் செய்யேன்-(அப்படி நீ செய்வதற்காக நான் உன்னை) ஒன்றும்செய்யமாட்டேன்;
கதம் படாதே-நீ கோபியாதே கொள்;
முத்து அனைய முறுவல் செய்து-முத்தைப்போல் வெண்ணிறமாக மந்தஸ்மி...
மூக்கு உறிஞ்சி-மூக்கை உறிஞ்சிக்கொண்டு
முலை உணாய்-முலை உண்பாயாக.

குறிப்பு:—இத்தனையும் பெற்றறியேன்-(நெய்பால் முதலியவற்றில்)சிறிதும் [illegible]க்கக்கண்டிலேன் என்றுமாம். கதம்-கோபம். குழந்தைகள், மூக்குறிஞ்சி முலையுண்ணுதல்-இயல்பு. ... ... (உ)

தந்தம் மக்க ளழுது சென்றால் தாய்மா ராவார் தரிக்க கில்லார்
வந்து நின்மேற் பூசல் செய்ய வாழ வல்ல வாசு தேவா
உந்தை யாருன் திறத்த ரல்ல ருன்னை நானொன் றுரப்ப மாட்டேன்
நந்த கோப னணிசி றுவா நான்சு ரந்த முலையு ணாயே. (ங)

தம் தம் மக்கள்-தங்கள் தங்களுடையபிள்ளைகள்
அழுது-அழுதுகொண்டு
சென்றால்-(தம்தம்வீட்டுக்குப்) போனால்
தாய்மார் ஆவார் - (அக்குழந்தைகளின்) தாய்மார்கள்
தரிக்க கில்லார்-பொறுக்க மாட்டாதவர்களாய்
வ[illegible] - (தம் [illegible] அழைத்துக்)
நின்மேல் பூசல் செய்ய-உன்மேல் பிணங்க
வாழ வல்ல-(அதைக்கண்டு) மகிழவல்ல
உந்தையார்-உன்தகப்பனார்
உன் திறத்தர் அல்லர்-உன்விஷயத்தைக் கவனிப்பவரல்லர்;
நான்-(அபலையான) நானும்
உன்னை-(தீம்பில் கைவளர்ந்த) உன்னை
ஒன்று உரப்ப மாட்டேன்-சிறிதும் அதட்டவல்லமையற்றிராநின்றேன்;
(இவையெல்லாங்கிடக்க;)
நந்தகோபன்-நந்தகோபருடைய
அணி சிறுவா-அழகிய சிறுபிள்ளாய்!
நான் சுரந்த முலை-எனது பால்சுரந்திருக்கிற முலையை
உணாய்-உண்பாயாக.

குறிப்பு:—கண்ணபிரான் தன்னோராயிரம் பிள்ளைகளோடு விளையாடப் போனால் எல்லாப்பிள்ளைகளையும்போல விராமல் அப்பிள்ளைகளை அடித்துக் குத்திவிளையாடுவனாதலால் அழுதுகொண்டே வீட்டுக்குச்செல்லும் அப்பிள்ளைகளைக்கண்ட தாய்மார்கள் மனம்பொறாமல் நொந்து அப்பிள்ளைகளைக் கண்ணுங்கண்ணீருமாய் அழைத்துக்கொண்டுவந்து காட்டி இவன்மேலே பழிசொல்லிப் பிணங்கினால் இவன் அதனால் சற்றும் இளைப்புக்கொள்ளாமல் அதையே ஹாஸ மாகக்கொண்டு ஸந்தோஷிப்ப னென்பதைக் காட்டுகிறார்—முதலிரண்டடியால். [வாசுதேவா] பசுவின் வயிற்றிலே புலிபிறந்ததே! யென்கிறார். [அணி சிறுவா!] அழகானபிள்ளையைப் பெற்றேனே. உன்+தந்தையார்=உந்தையார்; மரூஉ மொழி. ... ... (௩)

கஞ்சன் றன்னாற் புணர்க்கப் பட்ட கள்ளச் சகடு கலக்க ழியப்
பஞ்சி யன்ன மெல்ல டியாற் பாய்ந்த போது நொந்தி டும்மென்
றஞ்சி னேன்கா ணமரர் கோவே யாயர் கூட்டத் தளவன் றாலோ
கஞ்ச னையுன் வஞ்ச னையால் வலைப்ப டுத்தாய் முலையு ணாயே. (௪)

அமரர் கோவே – தேவர்களுக்குத் தலைவனே! (நீ)
கஞ்சன் தன்னால்–கம்ஸனாலே
புணர்க்கப்பட்ட – (உன்னைக் கொல்வதற்காக) ஏற்படுத்தப்பட்ட
கள்ளம் சகடு–க்ருத்ரிமசகடமானது
கலக்கு அழிய–கட்டு(க்குலைந்து உருமாறி) அழிந்து போம்படி
பஞ்சி அன்ன மெல் அடியால் – பஞ்சைப்போன்ற ஸுகுமாரமான உன் திருவடிகளினால்
பாய்ந்த போது–உதைத்தபோது
நொந்திடும் என்று – (உன் திருவடிகளுக்கு) நோவுண்டாகுமே யென்று
அஞ்சினேன் காண்–பயப்பட்டேன்காண்;
'டைய அச்சம்,)
ர் கூட்டத்து அளவு அன்று ஆல் – இடையருடைய (அச்சத்தின்) அளவல்லகாண்;
கஞ்சனை–(உன்னைக்கொல்வதற்காக மிக்க வஞ்சனைகளைச் செய்த) கம்ஸனை
உன் வஞ்சனையால் – உன்னுடைய வஞ்சனையினாலே
வலைப்படுத்தாய்–(உன்கையிற்) சிக்கும்படி செய்து கொன்றவனே!
முலை உணாய்—.

குறிப்பு:—[அஞ்சினேன் இத்யாதி.] "பெற்றவளுக்கன்றோ தெரியும் பிள்ளையினருமை" என்றபடி உன்னைப்பெற்றதாயான எனக்குத்தான் உன் அருமை தெரியுமாதலால், மற்றை இடையர் திரளின் அச்சமெல்லாம் ஒன்றுசேர்ந்தாலும் நான் உனக்கு ஏதேனும் தீங்குநேரிடுமோ! என்றுகொண்டுள்ள அச்சத்திற்கு ஒப்பாகாது என்றபடி. காண்—முன்னிலை யசை; தேற்றப்பொருள் தரும். ஆல்—தேற்றம்; ஓ—இரக்கம். பஞ்சி—பஞ்சு; கடைப்போலி. "பஞ்சியன்ற" என்று பாட மாகில், பஞ்சு இயன்ற எனப்பிரித்து அப்பொருளையே கொள்ளலாம். வஞ்சனை—வஞ்சநா. ... ... (௪)

தீய புந்திக் கஞ்ச னுன்மேற் சினமு டையன் சோர்வு பார்த்து
மாயந் தன்னால் வலைப்ப டுக்கில் வாழ கில்லேன் வாசு தேவா
தாயர் வாய்ச்சொல் கருமங் கண்டாய் சாற்றிச் சொன்னேன் போக வேண்டா
ஆயர் பாடிக் கணிவி ளக்கே யமர்ந்து வந்தென் முலையு ணாயே, (௫)

வாசுதேவா—கண்ணபிரானே!
தீய புந்தி—துஷ்டபுத்தியையுடைய
கஞ்சன்—கம்ஸனானவன்
உன் மேல்—உன்பக்கலிலே
சினம் உடையன்—கோபங் கொண்டவனா [யிராநின்றான்;
சோர்வு பார்த்து — (நீ) தனியாயிருக்கும் [ஸமயம் பார்த்து
மாயம் தன்னால்—வஞ்சனையால்
வலைப்படுக்கில் — (உன்னை) அகப்படுத்திக் [கொண்டால்
வாழகில்லேன்—(நான்) பிழைத்திருக்க சக் [தையல்லேன்;
தாயர்—தாய்மார்களுடைய
வாய் சொல்—வாயினாற் சொல்லுவது
கருமம் கண்டாய்—அவச்யகர்த்தவ்ய கார்ய [மாகும்;
சாற்றி சொன்னேன்—வற்புறுத்திச்சொல் [லுகிறேன்;
போக வேண்டா—(நீ ஓரிடத்திற்கும்) போ [கவேண்டா;
ஆயர் பாடிக்கு—திருவாய்ப்பாடிக்கு
அணி விளக்கே—மங்களதீபமானவனே!
அமர்ந்து வந்து—பொருந்தி வந்து
என் முலை உணாய்—.

குறிப்பு:—தேவகியின் மக்களறுவரைக் கல்லிடைமோதி ஸம்ஹாரத் திசெய்த கொடிய கம்ஸன் 'தேவகியின் அஷ்டமகர்ப்பம் உனக்குப் பகை' என்ற ஆகாயவாணியினாலும், பின்பு துர்க்கை சொல்லிப்போனதனாலும் 'நம்பகைவன் கைதப்பிப்போய் நமக்கு அணுகவொண்ணாத இடத்திலே வளராநின்றான்; அவனை எப்படியாவது கண்டுபிடித்துக் கொன்றுவிடவேணும்' என்று உன்மேல் மிகவும் கறுக்கொண்டு அஸுர ப்ரக்ருதிகளை ஸ்தாவரஜங்கமங்களான வடிவுகளைக்கொண்டு நீதிரியுமிடங்களில் நிற்கும்படி ஏவியிருக்கிறான்! அவன் அவர்களைக்கொண்டு நீ துணையற்றுத் திரியும் போதுபார்த்து உனக்குத் தெரியாமலே தப்பமுடியாதபடி வஞ்சனையால் உன்னைப்பிடித்துக்கொண்டால் பின்னை என்னால் உயிர்தரித்திருக்கமுடியாது; என்பேச்சைப்பேணி இங்கேயே இருக்கக்கடவாய் என்று வற்புறுத்துகின்றாள் [அணிவிளக்கே] உனக்கு ஏதேனும்தீங்குவந்தால் இத்திருவாய்ப்பாடியடங்கலும் இருள்மூடிவிடுங்காணென்கிறாள். சோர்வு – தளர்ச்சி: இலக்கணையால் தனிப்பட்டிருத்தலைக் காட்டும். கருமம்–கூ௨-௬. ... (௫)

மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு
இன்னிசைக்கும் வில்லிபுத்தூ ரினிதமர்ந்தா யுன்னைக் கண்டார்
என்ன நோன்பு நோற்றாள் கோலோ விவனைப் பெற்ற வயிறுடையாள்
என்னும் வார்த்தை யெய்துவித்த விருடீகேசா முலையுணாயே. (௬)

மின் அனைய—மின்னலையொத்த
நுண்—ஸூக்ஷ்மமான
இடையார்—இடையையுடையபெண்களின்
விரி குழல் மேல்—விரித்த [பரந்த] கூந்த [லின்மேல்
நுழைந்த—(தேனை உண்ணப்) புகுந்த
வண்டு—வண்டுகள்
(தேனையுண்டு களித்து)
இன் இசைக்கும்—இனிதாக ஆளத்திவைத் [துப்பாடாநின்ற
வில்லிபுத்தூர்—ஸ்ரீவில்லிபுத்தூரிலே
இனிது—போக்யமாக
உன்னை கண்டார்—உன்னைப்பார்த்தவர்
இவனை பெற்ற வயிறு உடையாள் } இவனை(ப்பிள்ளையாகப்பெற்ற) வயி [ற்றையுடையவள்
என்ன நோன்பு நோற்றாள்கொலோ } என்ன தபஸ்ஸு பண்ணினாளோ!'
என்னும்—என்று கொண்டாடிச்சொல்லு [கிற
வார்த்தை—வார்த்தையை
எய்துவித்த—(எனக்கு) உண்டாக்கின
இருடீகேசா—ஹ்ருஷீகேசனே!
முலை உணாய்—.

குறிப்பு:—[என்ன நோன்பித்யாதி.] ரூபகுணசேஷ்டிதாதிகளாலே இப்படி லோகவிலக்ஷணனாயுள்ள இப்பிள்ளையைப் பெற்றாளும் ஒருத்தியே!, அவள்தான் பூர்வஜந்மத்தில் நோற்ற நோன்பு என்தான்! என்று என்னைப் பலரும் கொண்டாடும்படி பிறந்தவனே! என்று-யசோதை, கண்ணன் தன் வசப்படுகைக்காகப் புகழ்ந்து கூறுகிறபடி. ஹ்ருஷீகேசன்—(ரூபகுணாதிகளாலே) ஸர்வேந்த்ரியங்களையும் கவருமவன். ... ... (சு)

பெண்டிர் வாழ்வார் நின்னொப் பாரைப் பெறுது மென்னு மாசை யாலே
கண்ட வர்கள் போக்கொ ழிந்தார் கண்ணி ணையாற் கலக்க நோக்கி
வண்டு லாம்பூங் குழலி னாருன் வாய முத முண்ண வேண்டிக்
கொண்டு போவான் வந்து நின்றார் கோவிந் தாநீ முலையு ணாயே. (எ)

கண்டவர்கள்—(உன்னைப்) பார்த்தவர்களான
பெண்டிர் வாழ்வார்—(தமது கணவர்க்கு) மனைவியராயிருக்கின்ற ஸ்த்ரீகள்
நின் ஒப்பாரை—'உன்னைப்போன்ற குழந்
பெறுதும்—பெறுவோம் [பெறவேணும்]
என்னும்—என்கிற
ஆசையாலே—ஆசையினாலே
போக்கு ஒழிந்தார்—(உன்னைவிட்டுப்) போதலைத்தவிர்ந்தார்கள்;
வண்டு உலாம்—வண்டுகள் ஸஞ்சரிக்கிற
பூ—புஷ்பங்களையணிந்த
குழலினார்—கூந்தலையுடையவர்கள்
கண் இணையால்—(தமது) இரண்டுகண்களினாலும்
கலக்க நோக்கி—(உனது) திருமேனிமுழுவதும்பார்த்து
உன்—உன்னுடைய
வாய் அமுதம்—அதராம்ருதத்தை
உண்ண வேண்டி—பானம்பண்ண ஆசை கொண்டவர்களாய்
கொண்டு போவான்—(உன்னை) எடுத்துக்கொண்டுபோவதற்கு
வந்து நின்றார்—வந்துநிற்கிறார்கள்;
கோவிந்தா—கோவிந்தனே!
நீ முலை உணாய்—.

குறிப்பு:—முதலிரண்டடியால்-பதிவிரதைகளான பெண்களின் மநோவ்ருத்தியும், பின் ஒன்றரையடியால்-யுவதிகளாய் ஸௌந்தர்யபோகலோலுபைக்களான பெண்களுடைய மநோவ்ருத்தியும் சொல்லுகிறதென்க. அவற்றில் வேண்டினபடி ஆகிறது; இப்போது நீ முலையுண்ணவரவேணுமென்கிறாள். பெண்டிர் = இர்—பலர்பால் விகுதி. பெறுதும்—தன்மைப்பன்மை வினைமுற்று. ஆசா—வடசொல். கலக்கநோக்குதல்—ப்ரத்யங்க ஸௌந்தர்யபராமர்சம். ... ... ... ... ... (எ)

இரும லைபோ லெதிர்ந்த மல்ல ரிருவ ரங்க மெரிசெய் தாயுன்
திரும லிந்து திகழு மார்வு தேக்க வந்தென் னல்கு லேறி
ஒருமு லையை வாய்ம டுத்து ஒருமு லையை நெருடிக் கொண்டு
இருமு லையும் முறைமு றையா யேங்கி யேங்கி யிருந்து ணாயே. (அ)

இரு மலை போல்—இரண்டுமலைபோலே [(வந்து)
எதிர்ந்த—எதிர்த்துநின்ற
மல்லர் இருவர்—(சாணூரமுஷ்டிகரென் [னும்) இரண்டு மல்லர்களுடைய
அங்கம்—உடம்பை
எரிசெய்தாய்—(பயத்தாலே) எரியும்படி [செய்தவனே!
வந்து—(நீ) வந்து
என் அல்குல் ஏறி } என்மடிமீதுஏறிக்கொண்டு,
உன்—உன்னுடைய
திரு மலிந்து திகழும்மார்வு } அழகுநிரம்பி விளங்குகின்ற மார்பானது
தேக்க—(முலைப்பாலால்)நிறையும்படி
ஒரு முலையை—ஒருமுலையை
வாய் மடுத்து—வாயிலேவைத்துக்கொண்டு
ஒரு முலையை—மற்றொருமுலையை
நெருடிக்கொண்டு—(கையினாலே) நெருடிக் [கொண்டிருந்து
(மிகுதியாயிருப்பதுபற்றிப் [பால் வாயிலடங்காமையினால்,)
ஏங்கி ஏங்கி—இளைத்திளைத்து (இப்படி)
இரு முலையும்—இரண்டுமுலையையும்
முறை முறை ஆய்—மாறிமாறி
இருந்து—பொருந்தியிருந்து
உணாய்—உண்பாயாக

குறிப்பு:—திருமலிந்து திகழுமார்வு = திரு—பிராட்டி என்றுமாம். **தேக்க**—'தேங்க' என்பதன் விகாரம். ஒருமுலையை வாயில் வைத்துக்கொண்டு மற்றொருமுலையின் காம்பைக் கையால் நெருடிக்கொண்டு பால் மிகுதியினால் மூச்சுத்தணக்க மாறிமாறி முலையுண்ணுதல்—குழந்தைகளினியல்பு; "ஒருகையாலொருமுலைமுகம் நெருடா— வாயிலே முலையிருக்க" என்ற பெருமாள் திருமொழிகாண்க. இது-தன்மை நவிற்சி[ஸ்வபாவோக்தி].(௯)

அங்க மலப் போத கத்தி லணிகோள் முத்தஞ் சிந்தி ஞற்போற்
செங்க மலமு கம்வி யர்ப்பத் தீமை செய்திம் முற்றத் தூடே
அங்க மெல்லாம் புழுதி யாக அளைய வேண்டா வம்ம விம்ம
அங்க மரர்க் கமுத ளித்த வமரர் கோவே முலையு ணாயே. (௰)

அம்ம—தலைவனே!
(அஸுரர்கள்கையிலகப்பட்டு இறவாமலிருக்கும்படி தேவர்கள் அம்ருதத்தைப்பெறுதற்கு உன்னையடைந்த)
அங்கு—அக்காலத்திலே
விம்ம—(அவர்கள்வயிறு)நிரம்பும்படி
அமரர்க்கு—(அந்த, தேவர்களுக்கு
அமுது அளித்த—(க்ஷீராப்தியைக் கடைந்து) அம்ருதத்தை (எடுத்துக்) கொடுத்த
அமரர் கோவே—தேவாதிராஜனே!
அம் கமலம் போது அகத்தில் } அழகிய தாமரைப்பூவினுள்ளே
அணி கொள் முத்தம் சிந்தினால் போல் } அழகிய முத்துகள் சிந்தியதை [ஒத்திருக்கும்படி
செம் கமலம் முகம் } செந்தாமரைமலர்போன்ற (உனது) முகமானது
வியர்ப்ப—வியர்த்துப்போக
இ முற்றத்தூடே—இந்தமுற்றத்திலேயே
தீமை செய்து—தீம்பைச் செய்துகொண்டு
அங்கம் எல்லாம் புழுதி ஆக } உடம்பெல்லாம் புழுதிபடியும்படி
அளைய வேண்டா—புழுதியளையாதே;
முலை உணாய்—முலையுண்ணவாராய்.

குறிப்பு:—அம்ம—வியப்பைக்குறிப்பதோர் இடைச்சொல்லுமாம்: கேள் எனக்கொள்ளினுமாம். ... ... ... ... (௰)

ஓட வோடக் கிண்கி ணிக ளொலிக்கு மோசைப் பாணி யாலே
பாடிப் பாடி வருகின் றாயைப் பற்ப நாப னென்றி ருந்தேன்
ஆடி யாடி யசைந்த சைந்திட் டதனுக் கேற்ற கூத்தை யாடி
ஓடி யோடிப் போய்வி டாதே யுத்த மாநீ முலையு ணாயே. (௧௦)

ஓட ஓட—(குழந்தைப்பருவத்துக்குத்தக்க படி) பதறி ஓடுவதனால்
ஒலிக்கும்—சப்திக்கின்ற
கிண்கிணிகள்-பாதச்சதங்கைகளினுடைய
ஓசைப்பாணியாலே—ஓசையாகிறசப்தத் [தால
பாடி பாடி—இடைவிடாது பாடிக்கொண்டு
அதனுக்கு ஏற்ற கூத்தை — அப்பாட்டிற்குத் தகுந்த ஆட்டத்தை
அசைந்து — வலப்புறமாகவும் இடப்புறமாகவும் அசைந்து
ஆடி ஆடி—ஆடிக்கொண்டு
வருகின்றாயை—வருகின்றவுன்னை
பற்பநாபன் என்று இருந்தேன் — (வேறோராபரணம் வேண்டாதபடி) பத் [மத்தை நாபியிலுடையவனென்று எண்
உத்தமா—உத்தமனே!
ஆடி—ஆடிக்கொண்டே
ஓடி ஓடிபோய் விடாதே — என்கைக்குஎட்டாதபடி) ஓடிப்போய்விடாதே
முலை உணாய்—.

குறிப்பு:—கண்ணபிரான் நடந்துவரும்போது திருவடிச்சதங்கைகளின் ஓசைதானே பாட்டாயிருக்கு மென்க. [பற்பநாபனென்றிருந்தேன்] "கொப்பூழிலெழு கமலப்பூவழகர்" என்றபடி வேறொரு ஆபரணமும் வேண்டாமல் திருநாபீகமலமே ஆபரணமாம்படியிருப்பானொருவனன்றோ இவன்! இவனுக்கு வேறொருபாட்டும் கூத்தும் மா ம நடையழகுமே பாட்டும் ஆட்டமுமாய் அமைந்த ஆச்சர்யம் என்னே! என்றுவியப்புக்கொண்டிருந்தேன்; இனி,—இவன் அழிந்து கிடந்தவுலகத்தை நாபீகமலத்திலுண்டாக்கினவனன்றோ, ஆகையால் நம்முடைய ஸத்தையையுந் தருகைக்காக வருகிறானென்றிருந்தேன் என்றும் விசேஷார்த்தம் கூறுவர். ... ... ... ... ... (கo)

வார கொங்கை யாய்ச்சி மாத வாவுண் ணென்ற மாற்றம்
நீர குவளை வாசம் நிகழ நாறும் வில்லி புத்தூர்
பார தொல்பு கழான் பட்டர் பிரான் பாடல் வல்லார்
சீர செங்கண் மால்மேற் சென்ற சிந்தை பெறுவர் தாமே. (கக)

வார்அணிந்த—கச்சை அணிந்துகொண்டி [ருக்கிற
கொங்கை—ஸ்தநங்களையுடைய
ஆய்ச்சி—யசோதை
மாதவா—'மாதவனே!
உண—(முலையை உண்பாயாக'
என்ற—என்று(வேண்டிச்) சொன்ன
மாற்றம்—வார்த்தையைக்குறித்தனவான'—
நீர் அணிந்த குவளை — நீர்நிலையை அழகுடையதாகச்செய்கிற செங்கழுநீரின்
வாசம்—நல்லவாஸனை
நிகழ நாறும்—ஒரேமாதிரியாக எப்போதும் [வீசுகின்ற
வில்லிபுத்தூர்-ஸ்ரீவில்லிபுத்தூரிலவதரித்த [வரும்
பார் அணிந்த—பூமிமுழுவதும் அழகாகப் [பரவிய
தொல் புகழான் — பழமையான கீர்த்தியையுடையவருமான
பட்டர்பிரான்—பெரியாழ்வார் அருளிச் [செய்த
பாடல்—பாசுரங்களை
வல்லார்—ஓதவல்லவர்;—
சீர் அணிந்த—குணங்களாலழகிய
செம்கண் மால் மேல் — சிவந்ததிருக்கண்களையுடைய திருமாலினிடத்தில்
சென்ற—பதிந்த
சிந்தை—மநஸ்ஸை
பெறுவர்—அடைவார்கள்.

**குறிப்பு:**—[வாரணிந்த கொங்கையாய்ச்சி] ராஜாக்களுக்கு போக்ய மான பொருளை வேலைக்காரர் மூடிக்கொண்டுபோவதுபோல, கண்ணனுக்கு விருப்பமான ஸ்தநங்களை யசோதை பிறர் கண்படாதபடி கச்சினால்மறைத்து வைப்பாளாயிற்று. மாற்றம் (ஆகிய) பாடல் எனத்தொடரும். குவளை— 'குவலம்' என்ற வடசொல் விகாரம்: 'குவலயம்' என்பதுமதுவே; "குவா லயம் குவலயம் குவாலம் குவலம் குவம்" என்பது—வடமொழி நிகண்டு. வாசம்—'வாஸநா' என்ற வடசொற்சிதைவு. 'நிகழ்நாறும்' என்ற அத்யாபக பாடம் பொருட்குப் பொருந்தாது; இத்திருமொழி முழுதும் மாச்சீர்கள் எட்டினாலாகிய அடிகள் நாலைக் கொண்ட எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தமாதலாலும். சிந்தை—விஞா. தாம், ஏ—அசைச்சொற்கள். (கக)

*அடி:—அரவணை வைத்த தந்தம் கஞ்சன் தீய மின் பெண்டிர் இருமலை அங்கமலம் ஓடவாரணி போய்.*

இரண்டாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

---

## மூன்றாந்திருமொழி

## போய்ப்பாடு.

(இது அந்தாதித்தொடையாலமைந்தது)



**அவதாரிகை:**—*யசோதைப் பிராட்டி கண்ணபிரானுக்குக் காதுகுத்திக் காதுபெருக்கிக் காதணிகளையிட்டு அநுபவிக்க ஆசைப்பட்டுக் காதுகுத்துகையாகிற அவ்வுத்ஸவத்துக்கு ஊரில் பெண்களையெல்லாமழைத்துவிட்டு, வந்தவர்களை ஸம்பாவிக்கைக்கீடான அடைக்காய் முதலியவைகளையும் ஸம்பாதித்து வைத்து அவனைக் 'காதுகுத்த' என்றழைக்க, அவன், காது நோகுமென்றஞ்சி 'வரமாட்டேன்' என்னச்செய்தேயும் அவனஞ்சாமைக்குறுப்பான வார்த்தைகளைச்சொல்லியும் அவனுக்கு அபிமதமான வஸ்துக்களைக்காட்டியும் உடன்படுத்திக்கொண்டு காது பெருக்கினபடியை, ஆழ்வார்தாமும் அவளைப்போல அநுபவிக்க ஆசைப்பட்டுத் தம்மை அவளாகப் பாவித்துத்தத்காலம் போலே அவனைக்குறித்து அப்பாசுரங்களைப் பேசி அநுபவித்து இனியராகிறார்—இத்திருமொழியில்.* ... ... .. ... ... ... ...

*இத்திருமொழியில் முதற்பாசுரம்முதல் பன்னிரண்டாம் பாசுரம்வரை முறையே எம்பெருமானுடைய த்வாதசநாமங்களைக் கூறிவருவது—ரத்நாவலியலங்காரத்தின் பாற்படும்.*

போய்ப்பா டுடையநின் தந்தையுந் தாழ்த்தான் பொருதிறற் சஞ்சன் கடியன்
காப்பாரு மில்லை கடல்வண்ணா வுன்னைத் தனியேபோ யெங்குந் திரிதி
பேய்ப்பால் முலையுண்ட பித்தனே கேசவ நம்பியுன் னைக்காது குத்த [ன்,
ஆய்ப்பாலர் பெண்டுக ளெல்லாரும் வந்தா ரடைக்காய் திருத்திநான் வைத்தே

பாடு உடைய-பெருமையையுடைய
நின் தந்தையும்-உன் தகப்பனும்
போய்- வெளியே) போய்
தாழ்த்தான்-(திரும்பிவருதற்குத்)தாமதித் [தா ,
பொருதிறல்-போர்செய்யுந் திறமையுள்ள
கஞ்சன்-கம்ஸனே
கடியன்-(உன்விஷயத்தில்) மிகவும் க்ரூர [ஞயிராநின்றான்;
கடல்-கடல்போன்ற[ச்ரமஹரமான]
வண்ணா-வடிவையுடையவனே!
உன்னை-உன்னை
காப்பாரும்-பாதுகாப்பவரான வேறொரு [வரும்
இல்லை-(இங்கு இப்போது) இல்லை;
(நீயோவென்றால்,)
தனியே போய்-அஸஹாயனாய்ப்போய்
எங்கும்- கண்டவிடங்களிலும்
திரிதி-திரியாநின்றாய்;
பேய்-பூதனையினுடைய
முலை பால்-முலைப்பாலை
உண்ட-உட்கொண்ட
பித்தனே-மதிமயக்கமுள்ளவனே!
கேசவ-கேசவனே!
நம்பி-பூர்ணனானவனே!
உன்னை காது குத்த } உன் காதுகளைக் குத்துவதற்காக
ஆய் பாலர்-இடைச்சியர்களாகிய
பெண்டுகள் எல்லாரும் } எல்லாப்பெண்டுகளும்
வந்தார்-வந்திராநின்றார்கள்;
நான்-நானும்
அடைக்காய் - (அவர்களுக்கு ஸம்பாவிக்க [வேண்டிய, வெற்றிலைபாக்குகளை
திருத்தி வைத்தேன்-ஆய்ந்து வைத்திருக் [கிறேன்.

குறிப்பு:—'போய்' என்பதை மிருதிக்கு வாசகமாகக் கொண்டு, ரக்ஷ்ய வர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே மிகவும் நோக்கமுடையவனாய் "கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன்" என்கிறபடியே நீபிறந்தவன்று தொடங்கித் தமது வேலாயுதத்தைக் கூர்மையாகத் தீட்டிக்கொண்டு நீபடுக்குந் தொட்டிற்கீழே ஓரெறும்பு ஊர்ந்தாலும் சிங்கத்தின்மேற சீறுமாபோலே சீறி உன்னைக்காப்பாற்றுவதில் மிகவும் ப்ரயத்தையையுடையனான என்றும் பொருளாம். திரிதி - முன்னிலையொருமைவினைமுற்று. அடை-இலை = வெற்றிலை; காய் - பாக்கு. ... ... ... ... (க)

வண்ணப் பவள மருங்கினிற் சாத்தி மலர்ப்பாதக் கிண்கிணி யார்ப்ப
நண்ணித் தொழுமவர் சிந்தைபிரி யாத நாரா யணாவிங்கே வாராய்
எண்ணற் கரிய பிரானே திரியை யெரியாமே காதுக் கிடுவன்
கண்ணுக்கு நன்று மழகு முடைய கனகக் கடிப்பு மிவையா. (உ)

நண்ணி தொழுமவர் } கிட்டி வணங்குகின்றவர்களுடைய
சிந்தை-மநஸ்ஸில் நின்றும்
பிரியாத-விட்டு நீங்காத
நாராயணா-நாராயணனே!
(நீ,)
வண்ணம்-(மிக்க செந்) நிறத்தையுடைய
பவளம்-பவழவடத்தை
மருங்கினில்-திருவரையிலே
சாத்தி-சாத்திக்கொண்டு
மலர்-தாமரைமலர்போன்ற
பாதம்-பாதங்களிலணிந்த
கிண்கிணி-சதங்கை
ஆர்ப்ப -ஒலிக்கும்படி
இங்கே வாராய்—;
(உன்மேல் அன்பில்லாதவர்களுக்கு)
எண்ணற்கு அரிய பிரானே } நினைப்பதற்கும் அருமையான ஸ்வாமியே!
திரியை-நூல்திரியை
எரியாமே-எரிச்சலுண்டாகாதபடி
காதுக்கு-(உன்) காதுகளுக்கு
இடுவன்-இடுவேன்;
(அப்படித் திரியையிட்டுக் காது பெருக்கினால், பின்பு நீ அணிய வேண்டியவையான)

கண்ணுக்கு நன்றும் அழகு உடைய } கண்களுக்கு மிகவும் அழகையுடைய[தர்சநீயமான] கனகம் கடிப்பும்—பொற்கடிப்பும் இவை—இவையாகும்; ஆ—ஆச்சர்யம்.

குறிப்பு:—கீழ்ப்பாசுரத்தில் காதுகுத்த அழைத்தாள்; காதில் நூல் திரியை இட அழைக்கிறாள்—இப்பாட்டில். காதுகுத்தி நூல்திரியை இட்டுக் காதுபெருக்கியபின்பு காதணிகளையிடுதல், இயல்பு. அழகும் = உம்-இசைநிறை. "கனகக்கடிப்புமிவையாம்" என்றும் பாடம்கொள்ளலா மென்பர். கடிப்பு—கர்ணபூஷணம். வண்ணப்பவளம்- வர்ணப்ரவாளம். ... (உ)

வையமெல் லாம்பெறும் வார்கடல் வாழும் மகரக் குழைகொண்டு வைத்தேன்
வெய்யவே காதில் திரியை யிடுவன்நீ வேண்டிய தெல்லாந் தருவன்
உய்யவிவ் வாயர் குலத்தினில் தோன்றிய வொண்சுட ராயர் கொழுந்தே
மையன்மை செய்திள வாய்ச்சிய ருள்ளத்து மாதவ னேயிங்கே வாராய். (ஙு)

உய்ய—(நாங்களெல்லாம்) உஜ்ஜீவிக்கும்படி
இ ஆயர் குலத்தினில் தோன்றிய } இந்த இடையர் குலத்திலே வந்துபிறந்த
ஒள் சுடர்—மிக்க ஒளியையுடைய
ஆயர் கொழுந்தே } இடையர்களின் கொழுந்து போன்றவனே!
வையம் எல்லாம் பெறும் } இந்தவுலகங்களை யெல்லாம் (தனக்கு) விலையாகக் கொள்ளக்கூடிய
வார் கடல் வாழும் மகரம் குழை } பெரியகடலிலே வாழ்கின்ற சுறாமீனின் வடிவமையச் செய்யப்பட்ட மகரக்குழையை
கொண்டு வைத்தேன் } (உன்காது பெருக்கியிடும்படி) கொண்டு வைத்திருக்கிறேன்;
(உன்காதுக்குத் தினவு உண்டாகாமலிருக்கும் பொருட்டு)
வெய்யவே—வெம்மையுடனிருக்கும்படி
காதில் திரியை இடுவன் } (உன்) காதிலே திரியை இடுவேன்;
நீ வேண்டியது எல்லாம் } [விரு]ம்பிய பொருள்களை யெல்லாம்
தருவன்—கொடுப்பேன்;
மா தவனே—ச்ரிய:பதியே!
இள ஆய்ச்சியர் உள்ளத்து } இளமைப்பருவமுடைய இடைப்பெண்கள் மநஸ்ஸிலே
மையன்மை செய்து } வ்யாமோஹத்தைச் செய்துகொண்டு
இங்கே வாராய்.

குறிப்பு:—[வெய்யவே இடுவன்] வெப்பு, தினவுக்குப் பரிஹாரமென்க. ஒண் சுடர் - "ஸஉ ஶ்ரேயாந்பவதி ஜாயமாந:" என்றதை நோக்குக. (ஙு)

வணநன் றுடைய வயிரக் கடிப்பிட்டு வார்காது தாழப் பெருக்கிக்
குணநன் றுடையரிக் கோபால பிள்ளைகள் கோவிந்தா நீசொல்லுக் கொள்ளாய்
இணைநன் றழகிய விக்கடிப் பிட்டா லினிய பலாப்பழந் தந்து
சுணநன் றணிமுலை யுண்ணத் தருவன்நான் சோத்தம் பிரானிங்கே வாராய்.

இ கோபாலர் பிள்ளைகள் } இந்த இடைப்பிள்ளைகள்
வார் காது—(தமது) நீண்டகாதை
தாழ பெருக்கி } (தோளளவும்) தொங்கும்படி பெருக்கி
வணம் நன்று உடைய } நல்லநிறத்தை மிகுதியாகவுடைய
வயிரம் கடிப்பு — வயிரக்கற்கள் அழுத்திச்செய்த கடிப்பை
இட்டு—அணிந்துகொண்டு

(இப்படி தமது தாய்மார் சொல்லிய படி செய்து)
நன்று குணம் உடையர் } ஸத்குணசாலிகளாயிரா நின்றார்கள்;
கோவிந்தா—கோவிந்தனே!
நீ—நீயோவென்றால்
சொல்லு—(தாயாகிய என்னுடைய) சொ [ல்லை
கொள்ளாய்—கேட்கிறாயில்லை;
(இப்படியிராமல் எனது சொல்லைக் கேட்டு)
இணை—ஒன்றோடொன்றொத்து
நன்று அழகிய—மிகவுமழகியனவாயிருக்கிற
இ கடிப்பு—இக்கடிப்பை
இட்டால்—அணிந்துகொண்டால்,
நான்—நான்
இனிய பலாப் பழம் தந்து } தித்திப்பான பலாப்பழங்கள் கொடுத்து
சுணம் நன்று அணி மூலை } சுணங்கையுடைய மிகவு மழகிய முலையையும்
உண்ண - (நீ) பருகும்படி
தருவன் - கொடுப்பேன்;
பிரான் - ஸ்வாமியே!
சோத்தம் - (உனக்கு) ஸ்தோத்ரம்;
இங்கே வாராய்—.

குறிப்பு:—வணம் - 'வண்ணம்' என்பதின் தொகுத்தல். வயிரக்கடிப்பு- வஜ்ரகுண்டலம். கோபாலர் + பிள்ளைகள் = கோபாலபிள்ளைகள்; "சிலவிகாரமா முயர்திணை." சுணம் - "சுணங்கு" என்பதன் விகாரமென்பர்: முலைமேல் தோன்றும் நிறவேறுபாடு; பசலைநிறம். இனி, "வ-ண-ம்" என்பது 'சுண்ணம்' எனத்திரிந்து, அதில் ணகரமெய் தொக்கி 'சுணம்' என்றாய், வாஸநாசூர்ணங்களணிந்த முலையென்றும் பொருளாமென்பாருமுளர். **சோத்தம்** - 'ஸ்தோத்ரம்' என்ற வடசொற் சிதைவு என்னலாம்; இதற்கு- "அஞ்ஜலி பண்ணுமவர்கள் அதுக்கு அநுகூலமாகத் தாழ்ச்சிதோற்றச் சொல்லுவதொரு ஶப்தவிஶேஷம்" என்பது, பெரியஜீயருரை. ... (௪)

**சோத்தம் பிரானென் றிரந்தாலுங் கொள்ளாய் சுரிகுழ லாரோடு நீபோய்க்**
**கோத்துக் குரவை பிணைந்திங்கு வந்தாற் குணங்கொண் டிடுவேனோ நம்பீ**
**பேர்த்தும் பெரியன வப்பந் தருவன் பிரானே திரியிட வொட்டில்**
**வேய்த்தடந் தோளார் விரும்பு கருங்குழல் விட்டுவே நீயிங்கே வாராய்.**

பிரான் - 'தலைவனே!
சோத்தம் - உனக்கு ஓரஞ்ஜலி'
என்று - என்றுசொல்லி
இரந்தாலும் - (வரவேணுமென்று) கெஞ் [சிக் கேட்டுக்கொண்டாலும்
கொள்ளாய் - (நீ என்சொல்லைக்) கேட்டு [வருகிறதில்லை;
நம்பீ - பூர்ணனே!
சுரிகுழலாரோடு—சுருண்ட கூந்தலையுடை [ய பெண்களோடு
போய் - (ஏகாந்த ஸ்தலத்திலே) போய்
கோத்து - கைகோத்து
குரவை பிணைந்து - குரவைக்கூத்தாடி
இங்கு வந்தால் - (பின்) இங்கேவந்தால்
(நீ அப்படிச்செய்ததை)
குணம் கொண்டிடுவேனோ } (உனக்குத்)'தகுதியானதாக (நான்) கொள் [வேனோ?;
பிரானே - உபகாரகனே!
திரி இட ஒட்டில் } திரியை (உன்காதிலே) இடலாம்படி நீயிசைந்தால்
பேர்த்தும் - மறுபடியும் மறுபடியும்
பெரியன அப்பம் - பெரிய அப்பங்களை
தருவன் - கொடுப்பேன்;
வேய் தட தோளார் } மூங்கில் போன்ற பெரிய தோள்களையுடைய மகளிர்
விரும்பு - விரும்புகைக்கு உரிய
கரு குழல் விட்டுவே } கருநிறமான கூந்தலையுடைய விஷ்ணுவே!
நீ இங்கே வாராய்—,

குறிப்பு:—[சுரிகுழலீத்யாதி.] கண்ணபிரான், 'நேற்று நீ என்னை அழைக்கையில் நான் வர, அப்போதுவந்ததைக் குணமாகக்கொள்ளாமல் என்னை அடித்தவளன்றோநீ' என்ன; யசோதை, 'நீபெண்களுடன் தனியிடத்திலே குரவையாடிவந்தால் அதை நான் எப்படி குணமாகக்கொள்ளக்கூடு மென்கிறாளென்க. போர்த்தும் - புநஃ புநஃ; 'இது சிறிது, இது சிறிது' என்றுசொல்லி, யசோதை கொடுக்கும் அப்பங்களைக் கண்ணன் தள்ளிவிடவும், பின்னும் அவன் விரும்பும்படி பெரிய பெரிய அப்பங்களைக் கொடுப்பேனென்று கருத்து. சுரிகுழலார்—"அராளகுந்தளா" என்ற வடநூலார் வழக்கமுங் காண்க. குரவைக்கூத்தாவது - "அங்கநாமங்கநாமந்தரே மாதவ:" இத்யாதிப் படியே - ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொருகண்ணனாகத் தோன்றி நின்று கைகோத்தாடல்; இதைத்தான் ராஸக்ரீடை என்பது என்பர் - ஸாம்ப்ரதாயிக ஆர்யவ்ருத்தர்;

"சிலப்பதிகாரம்" என்னும் தமிழ்க்காப்பியத்தில் "ஆய்ச்சியர் குரவையும்" என்றவிடத்து அடியார்க்கு நல்லாருரையில், '"குரவை யென்பது கூறுங்காலைச், செய்தோர் செய்த காமமும் விறலும், மெய்தவுரைக்கு மியல்பிற் றென்ப" எனவும், "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோத், தந்நிலை கொட்பநின் றாடலாகும்" எனவுஞ் சொன்னா ராகலின், இதுவும் ஆய்ச்சியரிடத்து நிகழ்தலான் ஆய்ச்சியர் குரவை யெனக் கூத்தாற் பெற்ற பெயர்' என்று உரைத்தவாறு காண்க. "குரவை யென்பது கை கோத்தாடல்" என்று ஸாமாந்யமாகச் சொன்னான் ஒரு தமிழன். ... ... ... ... (ரு)

விண்ணெல்லாங் கேட்க வழுதிட்டா யுன்வாயில் விரும்பி யதனைநான் நோக்கி
மண்ணெல்லாங் கண்டேன் மனத்துள்ளே யஞ்சி மதுசூத னேயென் றறிந்தேன்
புண்ணேது மில்லையுன் காது மறியும் பொறுத்திறைப் போதிரு நம்பி
கண்ணாவென் கார்முகி லேகடல் வண்ணா காவல னேமுலை யுணாயே. (சு)

(மண்ணைத் தின்றதற்காக நான் உன்னை அடிக்கையில், நீ)

விண் எல்லாம் கேட்க — மேலுலகங்கள் முழுவதும் கேட்கும்படி

அழுதிட்டாய் - அழுதாய்;

(நீ அப்படி அழுகையில்)

நான் - (தாயாகிய) நான்

விரும்பி - ஆதரங்கொண்டு

உன் வாயில் - உன் வாயிலே

அதனை - (நீ மண் உண்ட) அதை

நோக்கி - பார்க்கும்போது

(அவ்வாயில்)

மண் எல்லாம் கண்டு — லோகங்களை யெல்லாம் பார்த்து

என் மனத்துள்ளே அஞ்சி — என் மநஸ் பயப்பட்டு

மது சூதனே என்று — 'இவன் மதுஸூதனேயாவ' னென்று

அறிந்தேன் - தெரிந்துகொண்டேன்;

(உன்னுடைய காதிலே)

புண் ஏதும் இல்லை — புண் ஒன்றுமில்லை;

உன் காது மறியும் — (கடிப்பிடும்போது) உன்காது சிறிது மடங்கும்;

(அதைமாத்திரம்)

இறை போது - க்ஷணகாலம் பொறுத்து இரு - பொறுத்துக் கொண்டிரு;

நம்பி—பூர்ணனே!

கார் முகிலே - காளமேகம்போன்றவனே!

கடல் வண்ணா - கடல்போன்ற திருநிறத்தவனே!

காவலனே - ரக்ஷண வ்யாபாரத்தில் வல்லவனே!

என் முலை உணாய்—.

குறிப்பு:—நோக்கி - நோக்க: எச்சத்திரிபு. அஞ்சி - 'இவனை நம்மக னென்றெண்ணி யடித்தோமே, இவன்றானிப்போது நாராயணனாயிராநின் றானே' என்று அஞ்சினளென்க. 'என் காது ருத்தியதனாற் புண்ணாயிருக் கிறது; நோம், ஆதலால் கடிப்புவேண்டா' என்று கண்ணன் சொல்லவே, யசோதை 'புண்ணேதுமில்லை' என்கிறாள். மது-ஸூதநன் - 'மது' என்ற அஸுரனைக் கொன்றவன். "என்றிருந்தேன்" என்பதுமொருபாடம். ஆகா ரம் சப்தகுணகமாதலால் "விண்ணெல்லாம் கேட்க" என்றது 'அன்' என் பதை 'கண்ணா' இத்யாதி விளிப்பெயர்களோடு கூட்டியு முரைக்கலாம். காவலனே — கா - முதனிலைத் தொழிற்பெயர். ... ... (௬)

முலையேதும் வேண்டேனென் றோடிநின் காதிற் கடிப்பைப் பறித்தெறிந் திட்டு
மலையை யெடுத்து மகிழ்ந்து கன்மாரி காத்துப் பசுநிரை மேய்த்தாய்
சிலையொன் றிறுத்தாய் திரிவிக் கிரமா திருவாயர் பாடிப் பிரானே [னே'
தலைநிலாப் போதேயுன் காதைப் பெருக்காதே விட்டிட்டேன் குற்றமே யென்

முலை - 'முலையையும்
ஏதும் - (மற்றுமுள்ள பக்ஷணாதிகள்) [எதையும்
வேண்டேன்-(நான்) விரும்பமாட்டேன்'
என்று ஓடி—என்றுசொல்லி ஓடிப்போய்,
நின் காதில் கடிப்பை — (நான்) உன்காதிலிட்ட சாதணியை
பறித்து எறிந்திட்டு - பிடுங்கி யெறிந்துவி [ட்டு
மலையை - கோவர்த்தநமலையை
எடுத்து - (குடையாக) எடுத்துத் தூக்கி
மகிழ்ந்து - திருவுள்ள முகந்து
கல் மாரி - கல்வர்ஷத்தில் நின்றும்
காத்து—(இடையர்முதலானாரை)ரக்ஷித்து
பசு நிரை - பசுக்களின் திரளை
மேய்த்தாய் - மேய்த்தவனே! [னை
ஒன்று சிலை—ஒப்பற்றதொரு ருத்ரதநுஸ்
இறுத்தாய் — (பிராட்டியை மணம்புரிய) [முறித்தவனே!
திரிவிக்கிரமா - த்ரிவிக்ரமனே!
திரு ஆயர் பாடி - திருவாய்ப்பாடிக்கு
பிரானே - உபகாரகனே!
தலை நிலா போதே — தலைநிற்காமலிருக்கிற இளங் குழந்தைப்பருவத்திலேயே
உன் காதை பெருக்காது — உன்காதை (த்திரியிட்டுப்) பெருக்காமல்.
விட்டிட்டேன் - விட்டுவைத்தேன்;
(அப்படி விட்டுவைத்தது)
என் - என்னுடைய
குற்றமே - அபராதமன்றோ?

குறிப்பு:—"குற்றமேயன்றே" என்று அச்சுப்பிரதிகளிற் காணும்பாடம் அந்தாதித் தொடைக்குப் பொருந்தாது; "குற்றமே யென்னே" என்பது, தாளகோசங்களிற் பாடம். 'அன்றே' என்றபாடத்தில், 'பறித்தெறிந்திட்டு' என்பதைப் "பறித்தெறிந்திட்டது" என்பதன் விகாரமாகக்கொண்டு 'விட் டிட்டேன்' என்பதை வினையாலணையும் பெயராகக்கொண்டு 'விட்டிட்ட என்னுடைய' என்றுரைப்பது சாலுமென்ப. ... ... (எ)

அவ:—எட்டாம்பாட்டில், முதலிரண்டடி கண்ணன் பாசுரமாகவும் பின்னிரண் டடி யசோதை பாசுரமாகவும் செல்லுகிறது.

என்குற்ற மேயென்று சொல்லவும் வேண்டாகா ணேன்னைநான் மண்ணுண்டே
அன்புற்று நோக்கி யடித்தும் பிடித்து மனைவர்க்குங் காட்டிற் றிலையே [ணுகை

**வன்புற் றரவின் பகைக்கோடி வாமன நம்பியுன் காதுகள் தூரும்**
**துன்புற் றனவெல்லாந் தீர்ப்பாய் பிரானே திரியிட்டுச் சொல்லுகேன் மெய்யே.**

(நான் இப்போது உன்சொல்லைக் கேளாமலிருப்பது)
என் குற்றமே என்று — 'என்னுடைய குற்றமே யாகும்' என்று
சொல்லவும் வேண்டா காண் — நீ சொல்லுதலும் வேண்டியதில்லைகாண்:
(ஏனெனில்;)
நான் மண் உண்டேன் ஆக — நான் மண்ணுண்டதாகச்சொல்லி
என்னை - (மண்தின்றதை) என்னை
பிடித்தும் - பிடித்துக்கொண்டும்
அன்பு உற்று—அன்பை ஏறிட்டுக்கொண்டு [அன்புடையவள்போல]
நோக்கி - (என்வாயைப்) பார்த்து
அடித்தும் - (என்னை) அடித்தும்
அனைவர்க்கும் - எல்லார்க்கும்
காட்டிற்றிலையே — (நீ, காட்டினதில்லையோ?
(என்று கண்ணன்சொல்ல அதற்கு யசோதை)
வல் புற்று அரவின் — 'வலியபுற்றில் வஸிக்கின்ற பாம்புக்கு
பகை - விரோதியான கருடனை
கொடி - கொடியாகவுடைய
வாமந நம்பி - வாமநமூர்த்தியே!
(இப்படி நீ ஒன்றுசொல்ல நானொன்று சொல்வதாகப் போதுபோக்கிக்கொண்டிருந்தால்)
உன் காதுகள் தூரும் — உன்னுடைய (குத்தின) காதுகள் தூர்ந்துவிடும்;
(உன்னையடுத்தவர்கள்)
உற்றன - அடைந்தனவான
துன்பு எல்லாம் - துன்பங்களை யெல்லாம்
தீர்ப்பாய் - போக்குமவனே!
பிரானே - உபகாரகனே!
திரி இட்டு - (உன்காதில்) திரியையிட்டு
மெய்யே சொல்லுகேன் — (உன்னை யடிக்கமாட்டேனென்று நீநம்பும்படியான) சபதத்தைச் சொல்லுவேன்
(என்கிறாள்).

குறிப்பு:—கண்ணன், யசோதையைநோக்கி, "தலைநிலாப்போதே உன் காதைப் பெருக்காதே விட்டிட்டேன் குற்றமேயென்னே" என்று நீஉன்னை வெறுத்துச் சொல்லுவது - நீ சொன்னதை நான் கேட்கவில்லையென்று என்மேலுள்ள குற்றத்தை நினைத்தன்றோ?' என்ன, அதற்கு யசோதை 'பின்னை யார்குற்றம்?' என்ன, கண்ணன் 'உன்மீதுங் குற்றமில்லையோ?' என்ன, யசோதை 'நானுன்னை என்ன செய்தேன்?' என்ன; கண்ணன் 'நான் மண்தின்னுதிருக்கையில் மண்தின்றதாகப் பழியையேறிட்டு என்மேல் அன்புடையாள்போல என்னைப் பிடித்துக்கொண்டு என்வாயில் மண்தின்ற சுவடு இருக்கிறதாவென்று பார்த்து, அது இல்லாதிருக்கையிலேயே அதைக்கண்டதாகச் சொல்லியடித்து அவ்வளவோடு நில்லாமல் 'பாருங்கோள் பெண்காள்! இவன் மண்தின்னும்படியை' என்று எல்லார்க்கும் நீகாட்டவில்லையோ' என்ன, யசோதை 'இப்படி நாம் வழக்காடிக்கொண்டிருந்தால் போது போகின்றது, ஆஸ்ரிதருடைய ஆர்த்தியைத் தீர்க்குமவனே! உன்காதுகள் தூர்ந்துவிடும்' என்ன, கண்ணன் 'நீ என்னை ஸ்தோத்ரம்பண்ணவேண்டா, என்னைப்பிடித்தல் அடித்தல் செய்வதில்லையென்று உறுதியாக ஒருவார்த்தைசொல்' என்ன, யசோதை 'நான் திரியிடும்படி நீ இசைந்துவா, பின்பு அங்ஙனமே ஸத்யம் பண்ணித்தருகிறேன்' என்கிறாள். 'செல்லுகேன் மெய்யே' என்றும் பாடமுண்டாம்; கண்ணன், 'என்கேள்விக்குத்தக்க ஸமாதாநம் சொல்

லாமல் என்னை நீ ஸ்தோத்ரம் பண்ணவேண்டா, கடக்க நிற்கப்போ' என்ன, யசோதை 'இந்தக்கையிலுள்ள திரியை உன்காதிலிட்டுவிட்டு, ஸத்யமாய்க் கடக்கப்போய் விடுகிறேன்' என்கிறாளென்று பொருள்கொள்ளலாம். [சொல்லவும் வேண்டா] நெஞ்சினால் நினைத்ததே சாலவழகிது, இதனை வாய் கொண்டு வெளிப்படச் சொல்லவும் வேணுமோ?. ... ... (அ)

[யை யென்று
மெய்யென்று சொல்லுவார் சொல்லைக் கருதித் தொடுப்புண்டாய் வெண்ணெ
கையைப் பிடித்துக் கரையுர லோடென்னைக் காணவே கட்டிற் றிலையே
செய்தன சொல்லிச் சிரித்தங் கிருக்கில் சிரீதரா வுன்காது தூரும்
கையில் திரியை யிடுகிடா யிந்நின்ற காரிகை யார்சிரி யாமே. (௯)

சொல்லுவார் சொல்லை — சொன்னோர் சொன்னபேச்சுக்களையெல்லாம்
மெய் என்று கருதி - (நீ) மெய்யென்றெண்ணி
வெண்ணெயை - 'வெண்ணெயை
தொடுப்பு உண்டாய் - களவுகண்டு உண்டாய்'
என்று - என்று (என்மீது பழிசுமத்
கையை பிடித்து—(என்) கையைப்பிடித்து
காண - (பலரும்) கண்டுபரிஹஸிக்கும்படி
கரை உரலோடு - விளிம்பிலே வேலைசெய்திருக்கிற உரலில்
என்னை - (ஒன்றும் திருடாத) என்னை
கட்டிற்றிலையே - நீகட்டவில்லையா?
(என்று கண்ணன் யசோதைமேல் குற்றஞ்சாட்டிச் சிரித்துநிற்க)

(அதற்கு யசோதை சொல்லுகிறாள்,):—
சிரீதரா - ஸ்ரீதரனே!
செய்தன - (நான் முன்பு) செய்தவற்றை
சொல்லி - சொல்லிக்கொண்டு
சிரித்து - புன்சிரிப்புச்செய்து
அங்கு - அங்கே [தூரத்தில்]
இருக்கில் - (பொழுதுபோக்கிக்கொண்டு இருந்தால்
உன் காது - உன்காதுகள்
தூரும் - தூர்ந்துவிடும்;
இ நின்ற காரிகையார் சிரியாமே — (உன் முன்னே) நிற்கிற இந்தப் பெண்கள் சிரியாதபடி
கையில் திரியை—(என்) கையிலுள்ள திரியை
இடு கிடாய்—இட்டுக்கொள்வாயாக.

குறிப்பு:—[சிரியாமே] 'சொணைக்காது, சூழைக்காது' என்று பெண்கள் சிரியாதபடி யென்றுகருத்து. சொல்லுவார் என்றது - கொள்ளத்தகாதபேச்சையுடையவர் என்ற கருத்தைக்காட்டும். தொடுப்பு - (ஒருவரையும் கேளாமல்) தொடுதல்; எனவே, களவாம்: 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர். கிடாய் - முன்னிலை யசைச்சொல். ... ... ... (௯)

காரிகை யார்க்கு முனக்கு மிழுக்குற்றென் காதுகள் வீங்கி யெரியில்
தாரியா தாகில் தலைநோந் திடுமென்று விட்டிட்டேன் குற்றமே யன்றே
சேரியிற் பிள்ளைக ளெல்லாருங் காது பெருக்கித் திரியவுங் காண்டி
ஏர்விடை செற்றிளங் கன்றெறிந் திட்ட விருடீகே சாவென்றன் கண்ணே.

காதுகள் - '(என்னுடைய) காதுகள்
வீங்கி - வீங்கிப்போய்
எரியில் - எரிச்சலெடுத்தால்,
காரிகையார்க்கும் - (பரிஹஸிக்கிற) பெண்களுக்கும்
உனக்கும் - (என்காதில்திரியிட நிற்கிற) உனக்கும்
உற்ற(து) - நேரிட்டதான
இழுக்கு - சேதம்
என் - ஏதேனுமுண்டோ?'
(என்று கண்ணன் சொல்ல,

யசோதை சொல்லுகிருள்);—
(நீ இன்னும் இளம்பருவத்திலிருந்த போது)
தாரியாது ஆகில்—'(திரியை இடுவது)பொ [ருமற்போனுல்
தலை நொந்திடும் என்று (குழந்தைக்குத்)தலை நோய்உண்டாய்விடுமே' [யென்று நினைத்து
விட்டிட்டேன் - (முன்னமே காதுகுத்தா [மல்) இருந்துவிட்டேன்;
(அன்பினுல் அப்படி விட்டிருந்தது)
குற்றமே அன்றே - (என்னுடைய) குற்ற [மேயாமல்லவா?
ஏர் விடை - அழகிய ரிஷபத்தின் வடிவு [கொண்டுவந்த அரிஷ்டாஸுரனை
செற்று - அழித்து
இளகன்று - சிறியகன்றின்வடிவாய்வந்த [வத்ஸாஸுரனை
எறிந்திட்ட - (குணிலாகக்கொண்டு விளா [மரத்தின்மேல்) வீசிய
இருடீகேசா - ஹ்ருஷீகேசனே!
என்றன் கண்ணே - எனக்குக் கண்போன் [றவனே!
சேரியில் - இவ்விடைச்சேரியிலுள்ளம் [ளும்
பிள்ளைகள் எல்லாரும் - எல்லாப்பிள்ளைக
காதுபெருக்கி-காதைப்பெருக்கிக்கொண்டு
திரியவும் - திரியாநிற்பதையும்
காண்டி - நீ காணுநின்ருயன்றே!

குறிப்பு:—நீயும் இடைச்சேரியிலுள்ள பிள்ளைகளைப்போலக் காதுபெருக்கிக் கொண்டிருக்க வேண்டுமென்பது, குறிப்பெச்சம். தாரியாதாகில்-நீட்டல் விகாரம்; யரியாதாகில்: நீகுழந்தையா யிருக்கும்போதே உன்காதைக்குத்தித் திரியிட்டிருக்கவேணும்; அப்போது, ஐயோ! சிறியகுழந்தையாயிற்றே! காதுகுத்திஞல் ஒருகால் குழந்தைக்குத் தலைவலியுண்டாகுமோ என்றஞ்சிக் குத்தாமல் விட்டது என்னுடைய குற்றமன்றோவென்று வெறுத்துச் சொல்லுகிருளென்க காண்டி - 'டி' விகுதிபெற்ற முன்னிலை யொருமை வினைமுற்று. ... ... ... ... ... (௰)

கண்ணைக் குளிரக் கலந்தெங்கும் நோக்கிக் கடிகமழ் பூங்குழ லார்கள்
எண்ணத்து ளென்று மிருந்துதித் திக்கும் பெருமானே யெங்க ளமுதே
உண்ணக் கனிகள் தருவன் கடிப்பொன்றும் நோவாமே காதுக் கிடுவன்
பண்ணைக் கிழியச் சகட முதைத்திட்ட பற்பநா பாவிங்கே வாராய். (௧௧)

குளிர - மனங்குளிரும்படி
கண்ணை - (உன்) கண்ணை
(இடைப்பெண்களுடைய கண்களோடு
கலந்து - சேர்த்து, [வதும்
எங்கும் - (அவர்களுடைய) வடிவம் முழு
நோக்கி - பார்த்து,
கடி கமழ் - வாஸனை வீசுகின்ற
பூ - புஷ்பங்களணிந்த
குழலார்கள் - கூந்தலையுடைய அப்பெண் [களினுடை
எண்ணத்துள் - மனஸ்ஸினுள்ளே
என்றும் இருந்து - எப்போதுமிருந்துகொ
தித்திக்கும் - ரஸிக்கின்ற [ண்டு
பெருமானே—பெருமையை யுடையவனே!
எங்கள் அமுதே—எங்களுடைய அம்ருதம் [போன்றவனே!
உண்ண - (நீ) தின்பதற்கு
கனிகள் - (நாவல் முதலிய) பழங்களை
தருவன் - கொடுப்பேன்;
கடிப்பு - காதணியை [டி
ஒன்றும் நோவாமே - சிறிதும் நோவாதப
காதுக்கு - (உன்னுடைய) காதிலே
இடுவன் - இடுவேன்; [தை
சகடம் — (அஸுராவிஷ்டமான) சகடத்
பண்ணை கிழிய உதைத்திட்ட — கட்டுக்குலையும்படி உதைத்தருளின
பற்பநாபா - பத்மநாபனே!
இங்கே வாராய்—.

குறிப்பு:—'கண்ணைக்குளிரக்கலந்து' என்கிறவித்தால் - சக்ஷுப்ரீதி [தாராமைத்ரீ] எனப்படுங் கண்கலவியைச் சொல்லுகிறதென்க. கண்ணை என்பதில், ஐகாரத்தை அசையாகக்கொண்டு, கடிகமழ் பூங்குழலார்கள் கண்குளிர்ச்சியடைய உன்னுடம்புமுழுதும் பொருந்தப்பார்த்து (உன்னோடு கலக்கும்படிகளை யெண்ண, அவர்களுடைய அந்த) எண்ணத்தின்படியே எப்போதும் அவர்களுக்கு போக்யனாயிருக்கும் பெருமானே! என்று உரைத்தலும் ஏற்கும். பண்ணைக்கிழிய = பண் - செவ்வை; அது குலையும்படி: ஸந்திபந்தங்கள் சிதறும்படி. ... ... ... ... (கக)

வாவென்று சொல்லியென் கையைப் பிடித்து வலியவே காதிற் கடிப்பை
நோவத் தரிக்கி லுனக்கிங் கிழுக்குற்றென் காதுகள் நொந்திடுங் கில்லேன்
நாவற் பழங்கொண்டு வைத்தே னிவைகாணாய் நம்பீமுன் வஞ்ச மகளைச்
சாவப்பா லுண்டு சகடிறப் பாய்ந்திட்ட தாமோ தராவிங்கே வாராய்.(கஉ)

(கண்ணன் யசோதையைப்பார்த்து)
வா என்று சொல்லி—'(நான் காதில் திரியிட இங்கே) வருவாயாக' என்று சொல்லி
என் கையை பிடித்து } என்கையைப் பிடித்துக்கொண்டு
காதில் - காதிலே
நோவ - நோம்படி
கடிப்பை - காதணியை
இங்கு - இப்போது
வலியவே - பலாத்காரமாக
தரிக்கில் - இட்டால்
உனக்கு - உனக்கு
இழுக்கு உற்ற(து) என் } சேதமுண்டானதென்ன?
காதுகள் - (என்) காதுகள்
நொந்திடும் - நோவெடுக்கும்;
கில்லேன் - (அதைப்பொறுக்கவல்ல) வல்லமையுடையே னல்லேன்;
என்று மறுத்துச்சொல்ல;—
யசோதை சொல்லுகிறாள் :—

நம்பீ - பூர்ணனே!
நாவல் பழம் - (உனக்கு இஷ்டமான) நாவற்பழங்களை
கொண்டு வைத்தேன் – கொண்டுவைத்திருக்கிறேன்;
இவை - இவற்றை
காணாய் - பார்ப்பாயாக;
முன் - முன்பு
வஞ்சம் மகள் } வஞ்சனையுள்ள பூதனையானவள்
சாவ - மாளும்படி
பால் - (அவளது) முலைப்பாலை
உண்டு - பானம்பண்ணி,
சகடு - சகடாஸுரன்
இற - முறியும்படி
பாய்ந்திட்ட - (கால்களைத்) தூக்கியுதைத்த
தாமோதரா! இங்கே வாராய்—.

குறிப்பு:—பூதநாசகடநிரஸந வ்ருத்தாந்தத்தைக் குறித்ததற்குக்கருத்து-காதுநோவைப் பொறுத்தல் உனக்குப்பெரிதன்றென்கை. [தாமோதரா] வயிற்றில் கயிற்றுத்தழும்பை மறந்தாயோ என்றபடி. தரிக்கில் - தரிப்பிக்கில்; பிறவினையில் வந்த தன்வினை. "இவை காணாய" என்பது - அத்யாபக பாடம். மகளை - அசை. ... ... ... ... (கஉ)

வார்காது தாழப் பெருக்கி யமைத்து மகரக் குழையிட வேண்டிச்
சீரா லசோதை திருமாலைச் சொன்னசொற் சிந்தையுள் நின்று திகழப்

பாரார் தொல்புக ழான்புது வைமன்னன் பன்னிரு நாமத்தாற் சொன்ன
ஆராத வந்தாதி பன்னிரண் டும்வல்லா ரச்சுத னுக்கடி யாரே. (கக)

அசோதை—யசோதையானவள்
வார்—(ஸ்வபாவமாகவே) நீண்டிருக்கிற
தாழ—தொங்கும்படி
பெருக்கி—வளர்த்து
அமைத்து—ஓரளவிலே நிற்கும்படி செய்து
மகரம் குழை இடவேண்டி — மகரகுண்டலங்களை இட விரும்பி
திருமாலை—ச்ரிய:பதியானகண்ணனை
சீரால் சொன்ன—சிறப்புக்குறையாதபடி
சொல்—சொற்கள் [அழைத்த
சிந்தையுள்—(தம்முடைய) மநஸ்ஸிலே
நின்று—நிலையாகப்பொருந்தி
திகழ—விளங்க, (அச்சொற்களை),

பார் ஆர் தொல் புகழான் — பூமியில் நிரம்பிய பழமையான யசஸ்ஸை [யுடையவரும்
புதுவை—ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
மன்னன்—நிர்வாஹகருமான பெரியாழ்வார்
பன்னிருநாமத்தால் சொன்ன — த்வாதசநாமங்களோடுஞ் சேர்த்துச்சொல்லி [யழைத்த
ஆராத—(ஓத ஓத) த்ருப்திபிறவாத
அந்தாதி—அந்தாதித்தொடையினாலாகிய
பன்னிரண்டும்—பன்னிரண்டு பாட்டுக்களை [யும்
வல்லார்—ஓதவல்லவர்கள்
அச்சுதனுக்கு—எம்பெருமானுக்கு
அடியார்—அடிமைசெய்யப்பெறுவர்.

குறிப்பு—வார்-உரிச்சொல். அந்தாதி—அந்தத்தை ஆதியாகவுடையது; அன்மொழித்தொகை; வடமொழித்தொடர், தீர்க்கஸந்தி; அந்தாதியாவது-முன்னின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது. சொற்றொடர்நிலைச்செய்யுள் பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்றவகையில், இது சொற்றொடர்நிலை: "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும். அச்யுதன் - (ஆச்ரிதரை) நழுவவிடாதவன்; (தன்னுடைய நிலையில் நின்றும் தான் ஒருபோதும்) நழுவாதவனென்றுமாம்: [ந ச்யாவயதி, ந ச்யவதி வா இதி அச்யுத:]. திருநாமங்கள் பன்னிரண்டாதலால், பாசுரங்களும் பன்னிரண்டாயின: திருநாமப்பாட்டு ஒன்று.

அடி:—போய் வண்ணம் வையம் வணம் சோத்தம் விண் முலை என் மெய் நாரிகை கண்ணை வா வார் வெண்ணெயளைந்த.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## நான்காந்திருமொழி

## வெண்ணெயளைந்த.



**அவதாரிகை:**—யசோதைப்பிராட்டி கண்ணபிரானுக்குக் காதுகுத்தித் காதைப்பெருக்கிக் கடிப்பிட்டபின்பு, அனுக்கம் நீங்க அவனைநீராட்ட வேணுமென்றாசைப்பட்டு அதற்குவேண்டிய உபகரணங்களை யெல்லாம் ஸித்தப்படுத்தி அப்பிரானைப் பலபடியாக நல்வார்த்தை சொல்லிப் புகழ்ந்தழைத்து மஞ்சனமாட்டியதை ஆழ்வார் தாமும் அநுபவிக்க விரும்பித் தம்மை அவளாகப் பாவித்து அவள் அக்காலத்திற் பேசியதை யெல்லாம்பேசி இனியராகிறார் - இத்திருமொழியில். ... ... ...

வெண்ணெ யளைந்த குணுங்கும் விளையாடு புழுதியுங் கொண்டு
திண்ணென விவ்விரா வுன்னைத் தேய்த்துக் கிடக்கநா னொட்டேன்
எண்ணெய் புளிப்பழங் கொண்டிங் கெத்தனை போது மிருந்தேன்
நண்ண லரிய பிரானே நாரணா நீராட வாராய் (க)

வெண்ணெய் அளைந்த — வெண்ணெயளைந்ததனாலான
குணுங்கும்—மொச்சநாற்றத்தையும்
விளையாடு புழுதியும் — விளையாடுவதனாற்படிந்த புழுதியையும்
கொண்டு(உடம்பிற்,கொண்டிருந்து, (அதனால்,)
இவ்விரா—இன்றை இரவில்
தேய்த்து கிடக்க — (உடம்பைப் படுக்கையிலே) தேய்த்துக்கொண்டு படுத்திருக்கும்படி (விட)
உன்னை—உன்னை
திண்ணென—நிச்சயமாக
நான் ஒட்டேன்—நான்ஸம்மதிக்கமாட்டேன்;
எண்ணெய்—(தேய்த்துக்கொள்வதற்குவேண்டிய) எண்ணெயையும்
புளி பழம்—புளிப்பழத்தையும்
கொண்டு—ஸித்தமாகவைத்துக்கொண்டு
இங்கு—இங்கே
எத்தனைபோதும்—எவ்வளவுகாலமாக[வெகுகாலமாக]
இருந்தேன்—(உன்வரவை யெதிர்பார்த்து) இராநின்றேன்;
நண்ணல் அரிய பிரானே — (ஒருவராலும் ஸ்வயத்நத்தால்) கிட்டக்கூடாத ஸ்வாமியே!
நாரணா—நாராயணனே!
நீராட—நீராடுவதற்கு
வாராய்—வரவேணும்.

குறிப்பு:—கண்ணபிரான் * தாரார்தடந்தோள்களுள்ளளவுங் கைநீட்டி வெண்ணெயளைந்ததனால் உடம்பெல்லாம் அவ்வெண்ணெய்பட்டு மொச்சைநாற்றம் வீசும்; அதனோடு விளையாடப்போனால் அதன்மேல் புழுதியும் படியும்; இவ்விரண்டும் உடம்பிலிருந்தால் தினவுதின்னும்; அதற்காகக் கண்ணன் உடம்பைப் படுக்கையிலே தேய்ப்பனாம்; இப்படியெல்லாம் வருந்துவதைப் பொறுக்கமாட்டாமல் நீராடவழைக்கின்றனளென்க. விளையாடு புழுதி - வினைத்தொகை; விளையாடின புழுதியெனவிரிக்க. 'உண்ட இளைப்பு' என்றவிடத்துப்போல, விளையாடி யதனால்தோன்றிய புழுதியென்க. புளிப்பழம் - எண்ணெயைப் போக்குவதாயப் புளிப்புச்சுவையுடையதா யிருக்கின்ற ஒருவகைப்பழத்தைக் குறிக்குமென்பர்; சீக்காயைக்காட்டுமென்பாருமுளர். எள் + நெய் = எண்ணெய். ... ... ... (க)

கன்றுக ளோடச் செவியிற் கட்டெறும் புபிடித் திட்டால்
தென்றிக் கெடுமாகில் வெண்ணெய் திரட்டி விழுங்குமா காண்பன்
நின்ற மராமரஞ் சாய்த்தாய் நீபிறந் ததிரு வோணம்
இன்றுநீ நீராட வேண்டு மெம்பிரா னோடாதே வாராய். (௨)

நின்ற—நிலையாய்நின்ற
மராமரம்—ஸப்தஸாலவ்ருக்ஷங்களை
சாய்த்தாய்—(ஒரு அம்பெய்து) சாய்த்தவனே!
கன்றுகள்—பசுவின் கன்றுகள்
ஓட—வெருண்டோடும்படி
செவியில்—(அக்கன்றுகளின்) காதில்
கட்டெறும்பு பிடித்து இட்டால் } கட்டெறும்பைப் பிடித்துப்போகட்டால்
(அதனால் அக்கன்றுகள் வெருண்டு)
தென்றி—சிதறிப்போய்
கெடும் ஆகில்—(கண்டுபிடிக்கமுடியாதபடி) ஓடிப்போய்விட்டால்,
(பின்பு நீ,)
வெண்ணெய்—வெண்ணெயை
திரட்டி—திரட்டி
விழுங்கும் ஆ—விழுங்கும்படியை
காண்பன்—பார்ப்பேன்,
[வெண்ணெயே உனக்கு உண்ணக்கிடைக்காதென்றபடி];
இன்று—இந்நாள்
நீ பிறந்த—நீ அவதரித்த
திரு ஓணம்—ச்ரவணநக்ஷத்ரமாகும்;
(ஆகையால்)
நீ— நீ
நீர் ஆடவேண்டும்—;
எம்பிரான்! ஓடாதேவாராய்—.

குறிப்பு — கன்று உண்டானால் பசுகறக்கலாம், பசுவைக்கறந்தால் பாலுண்டாகும், பாலுண்டானால் வெண்ணெயுண்டாகும்: ஆகவே, வெண்ணெய் வேணுமென்றால், கன்றுகள் அவஶ்யம் வேணும்; அக்கன்றுகள் வெருண்டோடுவதைக் காண்கைக்காக நீ அவற்றின் காதுகளில் கட்டெறும்பைப் பிடித்துப் புகவிட்டால் அவை காணமுடியாதபடி ஓடிப்போய்விடும்; பின்பு உனக்கு இஷ்டமான வெண்ணெய் கிடைக்கும்படி யெங்ஙனே? என்பது முதலிரண்டடிகளின் கருத்து. 'வெண்ணெய் திரட்டி விழுங்குமா காண்பன்' என்றதொடர் - வெண்ணெய் விழுங்கக் கிடைக்காது என்ற கருத்தைக்காட்டும்: இது ஒருவகை யெதிர்மறை யிலக்கணை; நிறகுறிப்பு. ஆ - 'ஆறு' என் பதன் விகாரம். [மராமரம் சாய்த்தாய்] ராமாவதாரத்தில் ரிச்யமூகபர்வதத்தில் ஸுக்ரீவனுக்குத் தன்வலியின் மிகுதியைக்காட்ட ஏழுமராமரங்களை ஒருங்கே எய்தனனென்ற வரலாறு காண்க. ... ... (௨)

பேய்ச்சி முலையுண்ணக் கண்டு பின்னையும் நில்லாதென் னெஞ்சம்
ஆய்ச்சிய ரெல்லாருங் கூடி யழைக்கவும் நான்முலை தந்தேன்
காய்ச்சின நீரொடு நெல்லி கடாரத்திற் பூரித்து வைத்தேன்
வாய்த்த புகழ்மணி வண்ணா மஞ்சன மாடநீ வாராய். (௩)

பேய்ச்சி—பூதனையினுடைய
முலை—முலையை
(அவளுடைய உயிரோடும்)
உண்ண—(நீ) உண்டுவிட
கண்டு—(அதைப்) பார்த்தும்
(நான் அஞ்சி ஓடவேண்டியிருக்க, அங்ஙனம் செய்யாமல்)
பின்னையும் என்னெஞ்சம் நில்லாது } பின்புமென் மனங் கேளாமல்,
ஆய்ச்சியர் எல்லாரும் } இடைச்சிகளெல்லாரும்
கூடி—ஒன்றுகூடி
அழைக்கவும்—கூப்பாடுபோட்டுக்கதறவும்
நான்—(உன்மேல் அன்புகொண்ட)நான்

முலை தந்தேன்—முலை (உண்ணக்) கொடுத்[தேன்;
நெல்லியொடு—நெல்லியையிட்டு
காய்ச்சின—காய்ச்சின
நீர்—வெந்நீரை
கடாரத்தில்—சருவத்தில்
பூரித்து வைத்தேன்—நிறைத்துவைத்திரு[க்கிறேன்

வாய்த்த—பொருந்திய
புகழ்—யசஸ்ஸையும்
மணி—நீலமணிபோன்ற
வண்ணா—நிறத்தையுமுடையகண்ணனே!
மஞ்சனம் ஆட—நீராட
நீ வாராய்—.

குறிப்பு:- 'உனக்கு முலைகொடுத்த பேய்ச்சி பட்டபாட்டை நானறிந்து வைத்தும், நாமும் அப்பாடுபடவேண்டி வரப்போகிறதே யென்று அஞ்சி ஓடவேண்டியிருக்க அதுசெய்யாமல், மற்றும் அச்சமுறுத்துகிற இடைச்சிகளின் பேச்சையும் கேளாமல் உனக்கு நான் முலைதந்தது அன்பினாலன்றோ? அதற்கிணங்க நீ நான்சொல்லிற்றைக் கேட்கவேண்டாவோ' என்கிறாள். நெல்லி- நெல்லியிலை. நாய்ச்சின நீரோடுநெல்லி- நெல்லியொடு காய்ச்சினநீர் என உருபுபிரித்துக் கூட்டப்பட்டது. கடாரம் - கடாஹம். பூரித்து - வடசொல் அணைந்த வினையெச்சம். மஞ்சனம் - மஜ்ஜநம்: மூழ்குதல்.

கஞ்சன் புணர்ப்பினில் வந்த கடிய சகட முதைத்து
வஞ்சகப் பேய்மகள் துஞ்ச வாய்முலை வைத்த பிரானே
மஞ்சளுஞ் செங்கழு நீரின் வாசிகை யும்நாறு சாந்தும்
அஞ்சன முங்கொண்டு வைத்தே னழகனே நீராட வாராய். (ச)

கஞ்சன்—கம்ஸனுடைய
புணர்ப்பினில்—கபடமான ஆலோசனையி[னாலே
வந்த—(தனிவதாக) வந்த
கடிய—(அஸுராவேசத்தாலே) க்ரூரமான
சகடம்—சகடத்தை
உதைத்து—(திருவடிகளால்) உதைத்து [முறித்துவிட்டு,)
வஞ்சகம்—வஞ்சனையுள்ள
பேய் மகள்—பூதனையானவள்
துஞ்ச—முடியும்படி
முலை—(அவளுடைய) முலையிலே
வாய் வைத்த—வாயைவைத்த

பிரானே—உபகாரகனே!
(உன்மேனி நிறம்பெறும்படி சாத்துவதற்கு உரிய)
மஞ்சளும்—மஞ்சளையும்
செங்கழுநீரின் வாசிகையும் } (நீராடியபிறகு சாத்திக் கொள்ளவேண்டிய) செ[ங்கழுநீர்மாலையையும்.
நாறு சாந்தும்—பரிமளிதமான சந்தநத்தை[யும்
அஞ்சனமும்—(கண்களிலிடும்) மையையும்
கொண்டு வைத்தேன்—;
அழகனே! நீராட வாராய்—.

குறிப்பு:—"புணர்ப்பு - இணைப்பு, உடல், கூடல், தந்திரம், மாயம்" என்றது காண்க. கம்ஸனுடைய ஏவலினால் வந்த என்பது கருத்து. (ச)

அப்பங் கலந்தசிற் றுண்டி யக்காரம் பாலிற் கலந்து
சொப்பட நான்சுட்டு வைத்தேன் தின்ன லுறுதியேல் நம்பி
செப்பிள மென்முலை யார்கள் சிறுபுறம் பேசிச் சிரிப்பர்
சொப்பட நீராட வேண்டுஞ் சோத்தம் பிரானிங்கே வாராய். (ரு)

நம்பி - (பால சாபலத்தால்) பூர்ணனே!
செப்பு - பொற்கலசம் போன்ற
இளமெல் முலையார்கள் } இளமையான மெல்லிய முலையையுடைய மாதர்கள்
சிறு புறம் பேசி } (உன்மேலே) அற்பமான குற்றங்களை மறைவிற்சொல்லி
சிரிப்பர்—பரிஹஸிப்பார்கள்;
(அன்றியும்,)
பாலில்—பாலிலே
அக்காரம்—வெல்லக்கட்டியை
கலந்து—சேர்த்து (ப்பிசைந்து)
அப்பம்—அப்பத்தையும்
கலந்த—(அப்படியே) சேர்ந்த
சிற்றுண்டி—சிற்றுண்டியையும்
சொப்பட—நன்றாக
நான் சுட்டு வைத்தேன்—;
(நீ அவற்றை)
தின்னல் உறுதியேல்—தின்ன விரும்பினாயாகில்:
சொப்பட—நன்றாக
நீர் ஆட வேண்டும்—;
பிரான்—ஸ்வாமியே!
சோத்தம்—உனக்கு ஓரஞ்ஜலி;
இங்கே வாராய்—.

குறிப்பு:—'இப்பையல் அழுக்குடம்பனாயிரா நின்றான்' என்று இடைச்சிகள் ஏசுவதற்கு இடமறும்படி நீராடவருவாயாகில் வேண்டிய பக்ஷணங்கள் தருவேனென்கிறாள். அப்பம் - 'அபூபம்' என்றவடசொற்சிதைவு. சிறுமை + உண்டி = சிற்றுண்டி; "ஈறுபோதல்...தன்னொற்றிரட்டல்." "சிற்றுண்டை" என்றும் பாடமாம். ("சிறுபுறம்" என்றவிடத்தில்) சிறு - 'சிறுமை' என்ற பண்பினடி. புறம் பேசுதல்-மறைவில் குற்றத்தைச் சொல்லுதல்: இனி, புறம்பு ஏசி என்று பிரித்து உரைத்தலும் ஒக்குமென்ப. (ரு)

எண்ணெய்க் குடத்தை யுருட்டி யிளம்பிள்ளை கிள்ளி யெழுப்பிக்
கண்ணைப் புரட்டி விழித்துக் கழைகண்டு செய்யும் பிரானே
உண்ணக் கனிகள் தருவ னொலிகட லோதநீர் போலே
வண்ண மழகிய நம்பீ மஞ்சன மாடநீ வாராய். (சு)

எண்ணெய்க் குடத்தை } எண்ணெய் நிறைந்தகுடத்தை.
உருட்டி—உருட்டிவிட்டு,
இள பிள்ளை—(உறங்குகிற) சிறுகுழந்தைகளை.
கிள்ளி—(கையால் வெடுக்கெனக்) கிள்ளி
எழுப்பி—(தூக்கம்விட்டு) எழுந்திருக்கச்செய்து,
கண்ணை—கண் இமையை
புரட்டி விழித்து } தலைகீழாகமாற்றி (அப்பூச்சிகாட்டி) விழித்து
கழைகண்டு—பொறுக்கமுடியாததீம்புகளை
செய்யும்—செய்துவருகிற
பிரானே—ஸ்வதந்த்ரனே!
கனிகள்—(நல்ல) பழங்களை
உண்ண—(நீ) உண்ணும்படி
தருவன்—(உனக்குக்) கொடுப்பேன்;
ஒலி—கோஷியாநின்ற
கடல்—கடலினுடைய
ஓதம்—அலைகளையுடைய
நீர் போலே—ஜலம்போலே
வண்ணம் அழகிய } திருமேனியின்நிறம் அழகாயிருக்கப்பெற்ற
நம்பீ—உத்தமபுருஷனே!
மஞ்சனம் ஆட நீ வாராய்—.

குறிப்பு —[எண்ணெயித்யாதி.] அகத்திலுள்ளாரெல்லாரும் அந்யபராம்படியாக முதலிலே எண்ணெய்க்குடத்தை யுருட்டி, அவர்கள் சிந்திப்போன எண்ணெயை வழிப்பதுந் துடைப்பதுமா யிருக்கையில் அக்காரியத்தைவிட்டு ஓடிவரும்படி—தொட்டிலிற் படுத்துத்தூங்கும் குழந்தையைத்

தேள்கொட்டினாற்போல வீரிட்டுக்கதறி யழும்படி வெடுக்கெனக்கிள்ளி, ஸமீபத்திலேவந்த சிறுவர்களுக்கு அப்பூச்சிகாட்டிப் பயப்படுத்தி இப்படியெல்லாம் தீம்புசெய்பவனே! என்றபடி. கண் - இமைக்கு ஆகுபெயர். கண்ணைப்புரட்டி விழித்து - வெளியிற்காணப்படுங் கருவிழி உட்புறமாகும்படி கண்ணைமாறி விழித்து என்று உரைப்பாருமுளர். 'கழகண்டு' என்றும் பிரதிபேதம். ... ... ... ... ... (சு)

கறந்தநற் பாலுந் தயிருங் கடைந்துறி மேல்வைத்த வெண்ணெய்
பிறந்தது வேமுத லாகப் பெற்றறி யேனெம்பி ரானே
சிறந்தநற் றாயலர் தூற்று மென்பத னாற்பிறர் முன்னே
மறந்து முரையாட மாட்டேன் மஞ்சன மாடநீ வாராய். (எ)

எம்பிரானே—!;
கறந்த—(தத்தத்காலங்களில்) கறந்த
நல் பாலும்—நல்ல பாலையும்
தயிரும்—தயிரையும்
கடைந்து உறி மேல் வைத்த வெண்ணெய் } (தயிரைக்) கடைந்து உறியில்வைத்திருக்கிற வெண்ணெயையும்,
பிறந்ததுவே முதல் ஆக } (நீ) பிறந்தவன்று தொடங்கி
பெற்று அறியேன்—கண்டறியேன்;
சிறந்த நல்தாய் } '(எல்லாரினுங் குழந்தைக்குச்) சிறக்கின்ற பெற்றதாயும்
அலர் தூற்றும்—பழிசொல்லுகின்றாளே!'
என்பதனால்—என்று சொல்லுவார்களே என்ற அச்சத்தினால்
பிறர் முன்னே—அயலாரெதிரில்
மறந்தும்—ப்ராமாதிகமாகவும்
உரை ஆட மாட்டேன் } (உனக்குக் குறைவைத்தருஞ்) சொல்லைச் சொல்ல மாட்டேன்;
மஞ்சனம் ஆட நீ வாராய்—.

குறிப்பு:—[சிறந்த வித்யாதி.] 'மகன் குற்றம் செய்தாலும் மறைக்கும்படி மிகுந்த அன்புடையளான தாயும் இப்படி இவன்மேல் பழிதூற்றினால், இவன் எவ்வளவு துஷ்ட சேஷ்டிதனாயிருப்பனோ' என்று உன்மேல் பிறர் குறைவாகச் சொல்லப் போகிறார்களே யென்ற எண்ணத்தினாலென்றபடி.

கன்றினை வாலோலை கட்டிக் கனிக ளுதிர வெறிந்து
பின்றொடர்ந் தோடியோர் பாம்பைப் பிடித்துக்கொண் டாட்டினாய் போலும்
நின்றிறத் தேனல்லேன் நம்பி நீபிறந் ததிரு நன்னாள்
நன்றுநீ நீராட வேண்டும் நாரணா வோடாதே வாராய். (அ)

கன்றினை—கன்றினுடைய
வால்—வாலிலே
ஓலை கட்டி—ஓலையைக்கட்டி
(கன்றை)—(அஸுரத் தன்மையினால் உன்னைக் கொல்லவந்த ஒரு) கன்றை
(எறிகுணிலாகக் கொண்டு, அஸுராவேசமுள்ள விளாமரத்தின்)
கனிகள்—பழங்கள்
உதிர—(கீழே) உதிர்ந்து விழும்படி
எறிந்து—வீசி
பின்—பின்பு
ஓடி தொடர்ந்து—ஓடிப் போய்
ஓர் பாம்பை—(காளியனென்ற) ஒரு ஸர்ப்பத்தை
பிடித்துக்கொண்டு—பிடித்துக்கொண்டு
ஆட்டினாய் போலும் } ஆட்டினவனோதான் (நீ);
நம்பி—ஒன்றிலும் குறைவில்லாதவனே!
(நான்)

நின் இறத்தேன் } உன்விஷய மொன்றை
அல்லேன் } யு மறியாதவளா யிரா [நின்றேன்;
(அதிகிடக்கட்டும்;)
நீ பிறந்த–நீ அவதரித்த
நல் திரு நாள்–நல்ல திரு நக்ஷத்ரமாகும் [(இந்நாள்);
(ஆகையால்)
நீ நன்று நீர் ஆட வேண்டும்–;
நாரணா ஓடாதே வாராய்—.

குறிப்பு:—கண்ணபிரான் கன்று துள்ளியோடுவதைக் காண்கைக்காக அதன் வாலிலே ஓலைகளை முடைந்து விடுவதனால், 'கன்றினை வாலோலை கட்டி' என்றார். கன்றினை—உருபுமயக்கம். [நின் இத்யாதி] 'அத்தைச் செய்தான் இத்தைச் செய்தான்' என்றிப்படி யெல்லாம் சொல்லுவார் சொல்லக் கேட்டதல்லது, உன்னுடைய தன்மையை நினைத்தறிதற்கும் எனக்கு முடியா தென்றபடி. தொடர்ந்து–சென்று. தான் நேரே காணாமையால் 'ஆட்டினாய் போலும்' என்கிறாள். ... ... ... ... (அ)

பூணித் தொழுவினிற் புக்குப் புழுதி யளைந்தபொன் மேனி
காணப் பெரிது முகப்ப னாகிலுங் கண்டார் பழிப்பர்
நாணெத் தனையு மிலாதாய நப்பின்னை காணிற் சிரிக்கும்
மாணிக்க மேயென் மணியே மஞ்சன மாடநீ வாராய். (கூ)

பூணி–பசுக்கள் கட்டிய
தொழுவினில்–கொட்டகையிலே
புக்கு–நுழைந்து
புழுதி } புழுதி மண்ணிலளைந்(து அத
அளைந்த } னால் மாசுபடிந்)த
பொன் மேனி–(உனது) அழகியஉடம்பை
காண–பார்ப்பதற்கு
பெரிதும்–மிகவும்
உகப்பன்–(நான்) விரும்புவேன்;
ஆகிலும்–ஆனாலும்
கண்டார்–(உன்னைப்) பார்ப்பவர்கள்
பழிப்பர்–'(இவள் பிள்ளை வளர்ப்பது அழகாயிருக்கின்றது' என்று என்னை)ஏசு [வார்கள்;
(அன்றியும்,)
எத்தனையும் } சிறிதும் லஜ்ஜையென்
நாண் இலாதாய் } பதில்லாதவனே!
நப்பின்னை–நப்பின்னையானவள்
காணில்–நீ இப்படியிருப்பதைக் கண்டால்
சிரிக்கும்–சிரிப்பாள்;
என் மாணிக்கமே! (என்) மணியே!
மஞ்சனம் ஆட நீ வாராய்—.

குறிப்பு:—[காணப்பெரிது முகப்பன்.] "[illegible]" என்றபடியே யோகத்தை நினைக்க. நப்பின்னை மைத்துனமைமுறையால் சிரிப்பாளென்க. பூணி—பசு; "பூணி பேணுமாயனாகி" என்றதுங்காண்க. ... ... (கூ)

கார்மலி மேனி நிறத்துக் கண்ண பிரானை யுகந்து
வார்மலி கொங்கை யசோதை மஞ்சன மாட்டிய வாற்றைப்
பார்மலி தொல்புது வைக்கோன் பட்டர் பிரான்சொன்ன பாடல்
சீர்மலி செந்தமிழ் வல்லார் தீவினை யாது மிலரே. (கO)

கார்–காளமேகத்திற் காட்டிலும்
மலி–சிறந்த
மேனி நிறத்து–திருமேனி நிறத்தை [யுடைய
கண்ணபிரானை–கண்ணபிரானை
உகந்து–விரும்பி
வார் } கச்சுக்கு அடங்காமல்
மலி } விம்முகின்ற
கொங்கை–ஸ்தனங்களை யுடைய
அசோதை–யசோதைப் பிராட்டி
மஞ்சனம் ஆட்டிய–நீராட்டின
–ப்ரகாரத்தை,—

பார்—பூமியிலே
மலி—சிறந்த
தொல்—பழமையான
புதுவை—ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு
கோன்—நிர்வாஹகரான
பட்டர் பிரான்—பெரியாழ்வார்
சொன்ன—அருளிச் செய்த
சீர் மலி—அழகு நிறைந்த
செந்தமிழ்—செந்தமிழாலாகிய
பாடல்—(இப்) பாசுரங்களை
வல்லார்—ஓத வல்லவர்கள்
யாதும்—ஒரு
தீ வினை இலர்—பாவமில்லாதவ ராவர்.

குறிப்பு:—'உகந்து ஆட்டிய ஆற்றைச் சொன்ன பாடல் வல்லார் தீவினையிலர்' என்று முடிபுகாண்க. ... ... ... (கo)

அடி:—வெண்ணெய் கன்று பேய்ச்சி கஞ்சன் அப்பம் எண்ணெய் கறந்த கன்றினை பூணி கார் பின்னை.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

## ஐந்தாந் திருமொழி.

## பின்னை மணாளனை.

**அவதாரிகை:**—யசோதைப் பிராட்டி கண்ணபிரானை மஞ்சனமாட்டின பின்பு குழல்வாரக்கருதி, அவன் அழுது ஓடுதல் ஆடுதல் செய்யாமல் செவ்வனே யிருந்து குழல்வாரக்காட்டுதற்காக, லோகத்தார் குழந்தைகளைக்குழல்வாரும்போது வசப்படுத்துவதற்குச் சொல்லுவதுபோலே 'அக்காக்காய் குழல்வாரவா' என்றுசொல்லிக் கண்ணனைச் சீராட்டிக்கொண்டு ஸ்வாதீனப்படுத்தினபடியை ஆழ்வார்தாமு மநுபவிக்க விரும்பித் தம்மை அவளாகப் பாவித்து அக்காலத்தில் அவள் அக்காக்காய் அழைத்தாப் போலே தாமுமழைத்துச் சீராட்டிக் குழல் வாருகையாகிற ரஸத்தை அநுபவித்து மகிழ்கிறார்—இத்திரு மொழியில். ... ... ... ... ...

பின்னை மணாளனைப் பேரிற் கிடந்தானை
முன்னை யமரர் முதல்தனி வித்தினை
என்னையு மெங்கள் குடிமுழு தாட்கொண்ட
மன்னனை வந்து குழல்வாரா யக்காக்காய் மாதவன் றன்குழல் வாராயக் [காக்காய்.

அக்காக்காய்—காக்கையே!
பின்னை—நப்பின்னைப் பிராட்டிக்கு
மணாளனை—நாயகனும்
பேரில்—திருப்பேர் நகரிலே
கிடந்தானை—பள்ளிகொண் டிருப்பவனும்
முன்னை—(பகவதநுபவத்தில்) முதல்வரான
அமரர்—நித்யஸூரிகளுக்கு
முதல்—தலைவனும்
(அந்த நித்யஸூரிகளின் ஸத்தைக்கும் தாரகாதிகளுக்கும்) [பவனும்
தனி வித்தினை—ஒப்பற்ற காரணமா யிருப்
என்னையும்—என்னையும்
எங்கள் குடி முழுது—எங்களுடைய குடியிலுள்ளா ரெல்லாரையும்
ஆட்கொண்ட—அடிமைகொண்ட
மன்னனை—தலைவனுமாகிய கண்ணனுக்கு
வந்து—(நீ) வந்து
குழல் வாராய்—கூந்தல் வாருவாயாக;
அக்காக்காய்—காக்கையே !
மாதவன் தன்—ச்ரிய: பதியான இவனுக்கு குழல் வாராய்—.

றிப்பு:—காக்கை வந்து கத்தும்போது குழந்தைகள் பராக்காயிருக்குமாதலால், அப்போது தலைவாருதல் ஸுகமாய் முடியுமென்பது பற்றி, அக்காரியத்தைக் காக்கையின் மேலேற்றிக் 'குழல்வாராய் அக்காக்காய்' என்றுளென்க: 'அக்காக்காய்!' என்று காக்கையை விளித்துக் குழந்தைகளுக்குக் குழல்வாரி முடித்தல், உலகவழக்கத்தி லிருப்பது காண்க. 'மூதல்' என்றதனோடும் இரண்டனுருபு கூட்டுக. வித்து—வீஜம்: எனவே, ஆதிகாரணம். பேர்—திருப்பேர்நகர்; சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் ஒன்று.

பேயின் முலையுண்ட பிள்ளை யிவன்முன்னம்
மாயச் சகடும் மருது மிறுத்தவன்
காயா மலர்வண்ணன் கண்ணன் கருங்குழல் [யக்காக்காய்.
தூய்தாக வந்து குழல்வாரா யக்காக்காய் தூமணி வண்ணன் குழல்வாரா

அக்காக்காய்!—;
இவன்—இப்பிள்ளை
முன்னம்—முன்பு
பேயின் முலை—பூதனையின்முலையை
உண்ட—(அவளுயிரோடுங்) குடித்த
பிள்ளை—பிள்ளைகாண்;
(அன்றியும்,)
மாயம்—வஞ்சனையுள்ள
சகடும்—சகடத்தையும்
மருதும்—யமளார்ஜுநங்களையும்
இறுத்தவன்—முறித்தவன்;
காயா மலர் வண்ணன்—காயாம் பூப்போன்ற திருநிறத்தை யுடையவன்;
கண்ணன்—'க்ருஷ்ணன்' என்னும் பேரை [யுடையவன்:
(இவனுடைய)
கரு குழல்—கருநிறமான கூந்தலை
வந்து—(நீ) வந்து
தூய்து ஆக குழல்வாராய்—நன்றாக வாருவாயாக;
தூ மணி—பழிப்பற்ற நீலமணி போன்ற
வண்ணன்—நிறத்தையுடைய இவனுக்கு
குழல் வாராய்—.

குறிப்பு—காயாமலர் வண்ணன்—அதஸீபுஷ்பஸங்காசன் என்கை. தூய்தாக—தலையிற் சிக்குப்படாமல் மழமழவென்றிருக்கும்படி. "குழல்வாராய்" என்ற தொடர்—ஒருசொல் நீர்மைத்தாய் வாருதல் என்றதொழிலை மாத்திரம் உணர்த்தும்; ஆதலால், 'கருங்குழல் குழல்வாராய்' என்றது. [புநருக்தி தோஷ மில்லையென்க.] ... ... ... ... (௨)

திண்ணக் கலத்துத் திரையுறி மேல்வைத்த
வெண்ணெய் விழுங்கி விரைய வுறங்கிடும்
அண்ண லமரர் பெருமானை யாயர்தங் [வாரா யக்காக்காய்.
கண்ணனை வந்து குழல்வாரா யக்காக்காய் கார்முகில் வண்ணன் குழல்

அக்காக்காய்!—;
திரை—பின்னுதலையுடைய
உறி மேல் வைத்த—(பெரிய) உறிமேல் வைத்த
திண்ணம் கலத்து—த்ருடமான [வுள்ள
வெண்ணெய்—வெண்ணெயை
விழுங்கி—உட்கொண்டு
விரைய—விரைவாக (ஓடிவந்து)
உறங்கிடும்—பொய்யுறக்கமுறங்குகின்ற
அண்ணல்—ஸ்வாமியும்
அமரர்—நித்யஸூரிகளுக்கு
பெருமானை—நிர்வாஹகனும்
ஆயர்தம் கண்—இடையர்களுக்குக் கண் போன்றவனுமான [இவனை
வந்து குழல் வாராய்—;
அக்காக்காய்!—;
கார் முகில்—காளமேகம் போன்ற
வண்ணன்—நிறத்தையுடையனான இவனு [டைய
குழல் வாராய்—.

குறிப்பு:—திண்ணம்—'அம்' விகுதிபெற்ற பண்புப்பெயர். கலம்—'கலஶம்' என்றவடசொற்சிதைவு என்னலாம். "விரையனுறங்கிடும்" என்பது அத்யாபகபாடம். ... ... ... ... (௬)

பள்ளத்தில் மேயும் பறவை யுருக்கொண்டு
கள்ள வசுரன் வருவானைத் தான்கண்டு
புள்ளிது வென்று பொதுக்கோவாய் கீண்டிட்ட [வாரா யக்காக்காய்.
பிள்ளையை வந்து குழல்வாரா யக்காக்காய் பேய்முலை யுண்டான் குழல்

அக்காக்காய்!—:
பள்ளத்தில்—நீர்த்தாழ்வுகளிலே
மேயும்—இரையெடுத்துத்திரிகின்ற
பறவை—(கொக்கு என்னும்) பக்ஷியின்
உரு—ரூபத்தை
கொண்டு—ஏறிட்டுக்கொண்டு
வருவான்—வருபவனாகிய
கள்ளம் அசுரனை—வஞ்சனை பொருந்திய [அசுரனை [பகாஸுரனை]
தான் கண்டு—தான்பார்த்து (அவனை)
இது புள் என்று—இது பக்ஷியேயென்று [(ஸாமாந்யமாக நினைத்து)
பொதுக்கோ—விரைவாக
வாய்—(அவ்வஸுரனது) வாயை
கீண்டிட்ட—கிழித்துப்போகட்ட
பிள்ளையை வந்து குழல்வாராய்—;
அக்காக்காய்! பேய்முலைஉண்டான் குழல் [வாராய்—.

குறிப்பு:—பறப்பது—பறவை; ஐ—வினைமுதற்பொருள் விகுதி. யமுனைக்கரையிலே கண்ணபிரானைப் பகாஸுரன் விழுங்கிவிட, அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போலே எரிக்கவே அவன் பொறுக்கமாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் குத்தநினைக்கையில், கண்ணன் அவன்வாயலகுகளைத் தனது இருகைகளினாலும் பற்றிவிரிவாகக் கிழித்திட்டனனென்பது—பகாஸுரவதவ்ருத்தாந்தம். பொதுக்கோ=பொதுக்கென; ("பொதுக்கென்று புறப்பட்டான்" என்று திரிந்து வழங்கிவருதல் காண்க.)

கற்றினம் மேய்த்துக் கனிக்கொரு கன்றினைப்
பற்றி யெறிந்த பரமன் றிருமுடி
உற்றன பேசிநீ யோடித் திரியாதே [ராயக் காக்காய்.
அற்றைக்கும் வந்து குழல்வாரா யக்காக்காய் ஆழியான் றன்குழல் வா

நீ—நீ
உற்றன—(உன்ஜாதிக்குத்) தகுந்தவற்றை
பேசி—சொல்லிக்கொண்டு
ஓடி—அங்குமிங்குட் பறந்து
திரியாதே—திரியாமல்,—
கன்று இனம் மேய்த்து } கன்றுகளின் கூட்டத்தை மேய்த்தவந்து
ஒரு கன்றினை—(அஸுராவிஷ்டமான) கன் [றொன்றை
பற்றி—பிடித்து
கனிக்கு—(அஸுராவிஷ்டமான) விளாம் [பழத்தை உதிர்த்தற்காக
எறிந்த—(குணிலாக) வீசின
பரமன்—பரமபுருஷனுடைய
திருமுடி—அழகிய தலைமுடியை
அற்றைக்கும் வந்து } அவ்வந்நாளும் வந்து
குழல் வாராய்—வாருவாயாக; [னுடைய
ஆழியான்தன்—சக்ராயுதபாணியான இவ
குழல் வாராய்—.

குறிப்பு:—முள்ளை முள்ளாற்களைவதுபோல அஸுரனை அஸுரனைக் கொண்டே களைந்தனனென்க. "கன்று குணிலாகக் கனியுதிர்த்தமாயவன்" என்றார் பிறரும். கன்று + இனம் = கற்றினம். அற்றைக்கும் = 'அன்று' என்னும் மென்றொடர்க்குற்றியலுகரம் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்று 'அற்றை' என்றாகும்: அதன்மேல், கு-சாரியை. ஆழியான்— "ஆழிகொண்டுன்னையெறியும்" என்றவிடத்துக் கருத்தை நினைக்க. (ரு)

கிழக்கிற் குடிமன்னர் கேடிலா தாரை
அழிப்பான் நினைந்திட்டவ் வாழி யதனால்
விழிக்கு மளவிலே வேரறுத் தானைக் [யக் காக்காய்.
குழற்கணி யாகக் குழல்வாரா யக்காக்காய் கோவிந்தன் றண்குழல் வாரா

அக்காக்காய்!—;
கேடு இலாதார் } (வரபலமும் புஜபலமு மிருப்பதால் நமக்கு) அழிவில்லையென்று நினைத்திருந்தவ [ரான
கிழக்கில் குடி மன்னரை } கிழக்குத்திக்கிலுள்ள பட்டணத்திற் குடியிருந்த ரா [ஜாக்களை
அழிப்பான்-அழிக்கும்படி
நினைந்திட்டு-எண்ணி
அ ஆழி அதனால்-அந்தச்சக்ராயுதத்தால்
விழிக்கும் அளவில் } கண்மூடித்திறக்கின்ற காலத்திற்கு
வேர் அறுத்தானை-ஸமூலமாக அழித்தவ [னுடைய
குழற்கு-கூந்தலுக்கு
அணி ஆக-அழகு உண்டாம்படி
குழல் வாராய்—;
கோவிந்தன்-(இந்த) கோவிந்தனுடைய
தண் குழல்-குளிர்ந்த [சிறந்த] குழலை
வாராய்-வாருவாயாக.

குறிப்பு:—கிழக்கிற் குடிமன்னர்—ப்ராக்ஜ்யோதிஷபுரவாஸிகளான நரகாஸுரன் முதலானோர். அவ்வாழி — அ— உலகறிசுட்டு: ப்ரஸித்தியைக் காட்டும் இனி, கேடு இலாதாரை—(விஷ்ணுபக்தராதலால்) அழிவில்லாதவரான இந்த்ராதிகளை, அழிப்பான் நினைந்திட்ட கிழக்கிற் குடிமன்னர்விழிக்குமளவிலே (அவரை) வேரறுத்தான் என்றும் உரைப்பர். அழிப்பான்—எதிர்காலவினையெச்சம். ... ... ... ... (சா)

பிண்டத் திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறும்
உண்டற்கு வேண்டிநீ யோடித் திரியாதே
அண்டத் தமரர் பெருமா னழகமர் [வாராயக் காக்காய்.
வண்டொத் திருண்ட குழல்வாரா யக்காக்காய் மாயவன் றன்குழல்

அக்காக்காய்!—;
பிண்டம் திரளையும் } (பித்ருக்களை உத்தேசித்து இடும்) பிண்டத்தின் உரு [ண்டையையும்
பேய்க்கு இட்ட } பிசாசங்களுக்குப் போகட்ட
நீர் சோறும்-நீரையுடைய சோற்றையும்
உண்டற்கு-உண்ணுதற்கு
வேண்டி-விரும்பி
நீ ஓடி திரியாதே } நீ பறந்தோடித் திரியவேவேண்டா;
அண்டத்து-மேலுலகத்திலுள்ள
அமரர்-தேவர்களுக்கு [னுடைய
பெருமான்-தலைவனாகிய இக்கண்ணபிரா

அழகு அமர்—அழகு பொருந்திய
வண்டு ஒத்து இருண்ட—வண்டைப்போல் கருநிறமான
குழல் வாராய்—;
மாயவன்—ஆச்சர்யச் செயல்களையுடைய
தன்—இவனுடைய
குழல் வாராய்—.

குறிப்பு:—தந்தைதாய் முதலானோர் இறந்த திதியில் செய்யும் ஶ்ராத்தத்தில் பித்ராதி தேவதைகளை உத்தேஶித்துப் பிண்டவுருண்டையைக் காகத்தையழைத்து இடுவதும், பிரவாசம் முதலியவற்றைக்குறித்து ஜலத்தோடு கூடிய சோற்றைப் பலிகொடுத்தலும் வழக்கமென்க. (எ)

உந்தி யெழுந்த வுருவ மலர்தன்னில்
சந்தச் சதுமுகன் றன்னைப் படைத்தவன்
கொந்தக் குழலைக் குறந்து புளியட்டித்
தந்தத்தின் சீப்பால் குழல்வாரா யக்காக்காய் தாமோ தரன்றன் குழல் [வாரா யக்காக்காய்.

அக்காக்காய்!—;
உந்தி—(தனது) திருநாபியிலே
எழுந்த—உண்டான
உருவம்—ஸ்வரூபத்தையுடைய
மலர் தன்னில்—தாமரைப்பூவிலே
சந்தம்—சந்தஸ்ஸை நிரூபகமாகவுடைய
சதுமுகன் தன்னை—நான்முகனை
படைத்தவன் - ஸ்ருஷ்டித்த இவனுடைய
புளி அட்டி கொந்தம்குழலை—புளிப்பழத்தை யிட்டுத் தேய்த்ததனால் நெறிப்பையுடைய கூந்தலை
தந்தத்தின் சீப்பால்—தந்தத்தினால் செய்த சீப்பாலே
குறந்து—சிக்கு விடுத்து
குழல் வாராய்—வாருவாயாக
அக்காக்காய்! தாமோதரன் தன் குழல் வாராய்!—.

குறிப்பு:—கீழ்" வெண்ணெயளைந்த குணுங்கும்" என்ற திருமொழியில் கூறியபடி யஶோதைப்பிராட்டி ஸ்ரீக்ருஷ்ணனை எண்ணெய் தேய்த்துப்புளிப் பழமிட்டு நீராட்டியதனால், அப்படி நீராடின ஸ்ரீக்ருஷ்ணனுடைய கூந்தல் நெறித்திருக்கும்; ஆதலால், யசோதையானவள் 'காக்கைகாள்! நெறிப்புப் போம்படி எண்ணெய்தடவித் தந்தச்சீப்பினால் தலைவாரவரவேணும்' என்கிறாள். 'புழுகட்டி' என்றும் பாடம்; புழுகு—புனுகு எண்ணெய்: அதைத்தடவிக் குழல்வாராய் எனமுடிபுகாண்க. ஊஹஸ், ஊ-ஸ்ஸ், ஊஸ் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. இப்பாட்டின் பெரிய ஜீயருரை அச்சுப்பிரதியில் சில விபர்யாஸங்கள் உள்ளனபோன்றுள. ... ... (அ)

மன்னன்றன் றேவிமார் கண்டு மகிழ்வெய்த
முன்னிவ் வுலகினை முற்று மளந்தவன்
பொன்னின் முடியினைப் பூவணை மேல்வைத்துப்
பின்னே யிருந்து குழல்வாரா யக்காக்காய் பேரா யிரத்தான் குழல்வாரா [யக்காக்காய்.

அக்காக்காய்!—;
முன்—வாமநாவதாரகாலத்தில்
மன்னன் தன் - அஸுரராஜனான மஹாபலியினுடைய
தேவிமார்—மனைவியர்கள்
கண்டு - (தன்னுடைய) வடிவைக்கண்டு
மகிழ்வு எய்த—மகிழ்ச்சி யடையும்படி
('மஹா பலியினிடத்திற்போய் 'கொள்வன் நான்மாவலி!' என்று மூவடிமண் இரந்துபெற்றுப்பின்புத்ரிவிக்ரமனாய்)

இ உலகினை முற்றும் — இந்த வுலகங்களை முழுவதையும்
அளந்தவன் - அளந்துகொண்ட இவனுடைய
பொன் முடியினை — அழகிய தலையை
பூ அணை மேல் வைத்து — புஷ்பத்தினாலாகிய படுக்கையில் வைத்து
பின்னே இருந்து - (இவனது) பின்புறத்திலே இருந்துகொண்டு
குழல் வாராய்!—; அக்காக்காய்!—;
பேர் ஆயிரத்தான் - ஸஹஸ்ரநாமங்களையுடைய இவனுக்கு
குழல் வாராய்—,

குறிப்பு:—பொன்னின்=இன்—சாரியை. பூ அணை—புஷ்பம்போல் மிருதுவான படுக்கை யென்றுமாம். ... ... ... (கூ)

கண்டார் பழியாமே யக்காக்காய் கார்வண்ணன்
வண்டார் குழல்வார வாவென்ற வாய்ச்சிசொல்
விண்டோய் மதிள்வில்லி புத்தூர்க்கோன் பட்டன்சொல்
கொண்டாடிப் பாடக் குறுகா வினைதாமே. (க0)

அக்காக்காய்-'காக்கையே!
கண்டார் - பார்த்தவர்கள்
பழியாமே-பழியாதபடி
கார் வண்ணன் - காளமேகம்போன்ற நிறமுடைய கண்ணனுடைய
வண்டு ஆர் குழல் — வண்டை ஒத்தகரியகூந்தலை
வார-வாரும்படி
வா - வருவாயாக
என்ற - என்று சொன்ன
ஆய்ச்சி-யசோதைப் பிராட்டியின்
சொல்-சொலலை (க்குறித்த),—
விண் தோய் - ஆகாசத்தை அளாவுகின்ற
மதிள்--மதிளையுடைய
வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு
கோன் - நிர்வாஹகரான
பட்டன்-பெரியாழ்வாருடைய
சொல் - அருளிச்செயல்களை
கொண்டாடி - ச்லாகித்து
பாட - பாடப்பெற்றால்
வினை தாம் - ஸுக்ருத துஷ்க்ருதங்களிரண்டும்
குறுகா - சேராவாம்.

குறிப்பு:—[கண்டார்பழியாமே] நீராடியபின்பு தலையைவிரித்துக்கொண்டிருந்தால், கண்டவர்களெல்லாம் பழிப்பர்களிறே. நல்வினையும் தீவினைபோலவே ஸம்ஸாரத்தில் பந்தத்தைத் தந்து பொன்விலங்குபோலுதலால், முமுக்ஷுக்கள் இரும்புவிலங்கையொத்த பாபத்தை நீக்குவதுபோலவே புண்யத்தையும் நீக்கவேண்டுமென்பது கருதி 'குறுகாவினை. தாமே' எனப் பன்மையாக அருளிச்செய்தன ரென்க. ... ... ... (க0)

அடி:—பின்னை பேய் திண்ணம் பள்ளத்தில் கற்று கிழக்கில் பிண்டம் உந்தி மன்னன் கண்டார் வேலி.

ஐந்தாந்திருமொழிஉரை முற்றிற்று.

---

962
(703)

## ஆறுந்திருமொழி
## வேலிக்கோல்வெட்டி.

---

**அவதாரிகை:**—யசோதைப்பிராட்டி கண்ணனைக் குழல்வாரினபின்பு பூச்சூட உத்யோகித்திருக்கையில், கண்ணபிரான் ஸ்வஜாத்யாசாரத்துக் கேற்பக் கன்றுமேய்க்கிற பிள்ளைகளோடே தானும்போக நினைத்துக் 'கன்று மேய்க்கிற கோலைக்கொடு' என்று தாயை நிர்ப்பந்தித்துக் கேட்க, அவளும் இவனைப் பூச்சூடிக்காணவேணுமென்ற அவாவினாலே அதற்கிசைந்து கோல் கொடாமல் அவனை வஞ்சித்துச் சொல்லியதை ஆழ்வார் தம்மை அவளாகப் பாவித்துச் சொல்லி இனியராகிறார்—இத்திருமொழியில். ... ... ... ... ... ... ...

இத்திருமொழியும் **காக்கை**யைக் குறித்துச் சொல்வதாவதைப் "பொற்றிகழ்" என்ற மேல் ஏழாம்பாட்டாலும், திருநாமப்பாட்டாலும் நன்கு உணரலாம். ... ...

**வேலிக்கோல் வெட்டி விளையாடு வில்லேற்றித்**
**தாலிக் கொழுந்தைத் தடங்கழுத் திற்பூண்டு**
**பீலித் தழையைப் பிணைத்துப் பிறகிட்டுக்**
**காலிப்பின் போவாற்கோர் கோல்கொண்டுவா கடல்நிற வண்ணற்கோர் [கோல்கொண்டுவா.**

(அக்காக்காய்) - காக்கையே!
வேலி கோல் - வேலிக் கால்களிலுள்ள [கோலை
வெட்டி - (வாளால்) வெட்டி (அதை)
விளையாடு வில் - லீலோபகரணமான வில் [லாகச் செய்து
ஏற்றி - (அதிலே) நாணேற்றியும்,
கொழுந்து தாலியை-சிறந்த ஆமைத்தாலி [யை
தட கழுத்தில்-(தனது) பெரியகழுத்திலே
பூண்டு-அணிந்து கொண்டும்
பீலி தழையை - மயில் தோகைகளை
பிணைத்து - ஒன்று சேர்த்து
பிறகு இட்டு } பின்புறத்திலே கட்டிக்கொண்டும்
காலி பின் - பசுக்கூட்டங்களின் பின்னே
போவாற்கு - போகின்ற இவனுக்கு
ஓர் கோல்-ஒரு கோலை
கொண்டு வா—;
கடல் நிறம் வண்ணற்கு ஓர்
கோல் கொண்டு வா—.

குறிப்பு:—வேலிக்கோல்—வேலிக் கால்களிலே வளர்ந்த சிறுகோல்களென்னுதல்; வளைவையுடைய கோலென்னுதல். தாலிக்கொழுந்தை—உருபு பிரித்துக் கூட்டுக: தாலி கொழுந்து—பனையின் (வெண்ணிறமான) குருத்தென்றுமுரைக்கலாம்; இதை ஓர் அணியாகச் சமைத்துக் கழுத்திலணிதல் முற்காலத்தியல்பென்க: இப்பொருளில், தாளி—தாலியென ளகரத்திற்கு லகரம் போலியாகவந்ததாம். "விளையாடு வில்லேற்றி" என்ற அத்யாபகபாடத்தில், 'வேலிக்கால்களிலே கோலைவெட்டி, (அதை) விளையாடுவில்லாக (க்கையில்) ஏந்திக்கொண்டு' என்று பொருள் கொள்ளலாம். ... ... (௧)

**கொங்குங் குடந்தையுங் கோட்டியூ ரும்பேரும்**
**எங்குந் திரிந்து விளையாடு மென்மகன்**
**சங்கம் பிடிக்குந் தடக்கைக்குத் தக்கநல்**
**அங்க முடையதோர் கோல்கொண்டுவா வரக்கு வழித்ததோர் கோல் [கொண்டுவா.**

கொங்கு - வாஸனை பொருந்திய
குடந்தையும் - திருக்குடந்தையிலும்
கோட்டி யூரும் - திருக்கோட்டியூரிலும்
பேரும் - திருப்பேர் நகரிலும்
எங்கும்-மற்றுமுள்ள திருப்பதிகளிலுமெ[ல்லாம்
திரிந்து - ஸஞ்சரித்து
விளையாடும் - விளையாடுகின்ற
என் மகன் - என்பிள்ளையினுடைய
சங்கம் பிடிக்கும் தடக்கைக்கு - பாஞ்சஜந்யம் தரிக்கிற பெரிய திருக்கைக்கு
தக்க - தகுந்ததான
நல் அங்கம் உடையது - நல்லவடிவை யுடையதாகிய
ஓர் கோல் கொண்டு வா—;
அரக்கு வழித்தது - (நல்லநிறமுண்டாம்படி) அரக்குப் பூசியதாகிய
ஓர் கோல் கொண்டு வா—.

குறிப்பு:—கொங்கு + குடந்தை = கொங்குக் குடந்தை எனவரவேண்டுவது செய்யுளின்பம் நோக்கிக் "கொங்குங் குடந்தையும்" எனவந்ததென்க. அரக்கு—செந்நிறமெனினுமாம் ... ... ... (உ)

கறுத்திட் டெதிர்நின்ற கஞ்சனைக் கொன்றான்
பொறுத்திட் டெதிர்வந்த புள்ளின்வாய் கீண்டான்
நெறித்த குழல்களை நீங்கமுன் னோடிச் [கோல்கொண்டுவா.
சிறுக்கன்று மேய்ப்பாற்கோர் கோல்கொண்டுவா தேவ பிரானுக்கோர்

கறுத்திட்டு—கோபித்து
எதிர் நின்ற - (தன்னை) எதிரிட்டு நின்ற
கஞ்சனை - கம்ஸனை
கொன்றான் - கொன்றவனும்,
எதிர் வந்த - (தன்னைக்கொல்வதாக) எதிர்[த்துவந்த
புள்ளின்—பகாஸுரனுடைய
வாய்—வாயை
பொறுத்திட்டு-(முதலிற்) பொறுத்துக[கொண்டிருந்து
கீண்டான்-(பின்பு) கிழித்தவனும்,
நெறித்த-நெறித்திராநின்றுள்ள
குழல்கள்-கூந்தல்கள்
நீங்க-(ஓடுகிற வேகத்தாலே இரண்டு பக்க[மும்) அலையும்படியாக
முன் ஓடி - கன்றுகளுக்கு முன்னேபோய்
சிறு கன்று-இளங்கன்றுகளை [னுக்கு
மேய்ப்பாற்கு - மேய்ப்பவனுமாகிய இவ
ஓர் கோல் கொண்டுவா—;
தேவபிரானுக்கு ஓர் கோல்
கொண்டுவா—.

குறிப்பு:—பொறுத்திட்டுக்கீண்டான் = பகாஸுரன் கண்ணனை விழுங்கி உமிழுமளவும் கண்ணன் அவனை ஒன்றுஞ்செய்யாதிருந்து பின்பே அவன் வாயைக் கிழித்ததனால் பொறுமை விளங்குமென்க. குழல்களை = ஐ— சாரியை; இதில்லாதபோது தளைதட்டுமென்க. ... ... ... (௩)

ஒன்றே யுரைப்பா னொருசொல்லே சொல்லுவான்
துன்று முடியான் துரியோ தனன்பக்கல்
சென்றங்குப் பாரதங் கையேறிந் தானுக்குக் [கோல்கொண்டுவா.
கன்றுகள் மேய்ப்பதோர் கோல்கொண்டுவா கடல்நிற வண்ணற்கோர்

ஒன்றே—('பாண்டவர்களுடன் சேர்ந்து [வாழோம்' என்ற) ஒரே விஷயத்தை
உரைப்பான்-சொல்லுபவனும்
(மத்யஸ்தர் எவ்வளவு சொன்னாலும் 'ஊசிகுத்து நிலமும் பாண்டவர்களுக் குக் கொடேன்' என்ற)
ஒரு சொல்லே-ஒருசொல்லையே
சொல்லுவான்-சொல்லுபவனும்
துன்று முடியான் - (நவரத்நங்களும்) நெருங்கப் பதித்த கிரீடத்தைஅணி[ந்தவனுமான

துரியோதனன் பக்கல் } துர்யோதநனிடத்தில்
சென்று - தூதுபோய்
அங்கு - அவ்விடத்தில்
பாரதம் - பாரதயுத்தத்தை

கையெறிந்தானுக்கு } உறுதிப்படுத்திக்கொண்டு வந்த இவனுக்கு
கன்றுகள் மேய்ப்பது ஓர் கோல் கொண்டு வா—.
கடல்நிறவண்ணற்கு ஓர் கோல்கொண்டுவா—.

குறிப்பு:—முதலடியிற் குறித்த அடைமொழிக ளிரண்டையும் எம்பெருமானுக்காக்கி "[illegible]" என்ற ஒரு அர்த்தத்தையே சொல்லுபவனும், "[illegible]" என்ற ஒருசொல்லே சொல்லுபவனுமாகிய என்று உரைத்து, 'கையெறிந் தானுக்கு' என்பதனோடு கூட்டி உரைத்தலு மொக்கும். கையெறிதல்—கையடித்தல்: இது, பிரமாணம்செய்யும்வகையிலொன்று; இங்கு, உறுதிப்படுத்துதல் என்ற பொருளைத் தந்தது. இனி, துரியோதநன்பக்கல் சென்று—துர்யோதநனிடம் தூதுபோய், (அவன் ஒன்றுங்கொடுக்க இசையாததனால்), அங்கு—பாரதயுத்தத்தில், கை யெறிந்தானுக்கு—ஸேனையை வகுத்துக் கொண்டு யுத்தம் செய்தவனுக்கு என்றும் பொருள் கொள்ளலாம். (௪)

சீரொன்று தூதாய்த் துரியோ தனன்பக்கல்
ஊரொன்று வேண்டிப் பெறாத வுரோடத்தால்
பாரொன்றிப் பாரதங் கைசெய்து பார்த்தற்குத்
தேரொன்றை யூர்ந்தாற்கோர் கோல்கொண்டுவா தேவ பிரானுக்கோர் [கோல்கொண்டுவா.

துரியோதனன் பக்கல் } துர்யோதநனிடத்தில்
(பாண்டவர்களுக்காக)
சீர் ஒன்று தூது ஆய் } சிறப்புப் பொருந்திய தூதனாகப் போய்
ஊர் ஒன்று வேண்டி } (பாண்டவர்களுக்கு) ஒரு ஊராவது கொடு, என்று யாசித்துக் கேட்டும்
பெறாத - அந்த ஒரு ஊரையும் பெறாமையினாலுண்டான
உரோடத்தால்—சீற்றத்தாலே

பார் ஒன்றி - பூமியில் பொருந்தியிருந்து
பாரதம் கைசெய்து } பாரத யுத்தத்தில் அணிவகுத்து
பார்த்தற்கு - அர்ஜுநனுக்கு
தேர் ஒன்றை ஊர்ந்தாற்கு } ஒப்பற்றதேரை (ப்பாகனாயிருந்து) நடத்தினவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா—;
தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா—.

குறிப்பு:—ஒன்றுதல்—பொருந்துதல். உரோடம்—ரோஷம். தேவர் + பிரான் = தேவபிரான்; "சிலவிகாரமா முயர்திணை." ... ... (ரு)

ஆலத் திலையா னரவி னணைமேலான்
நீலக் கடலுள் நெடுங்காலங் கண்வளர்ந்தான்
பாலப் பிராயத்தே பார்த்தற் கருள்செய்த
கோலப் பிரானுக்கோர் கோல்கொண்டுவா குடந்தைக் கிடந்தாற்கோர் [கோல்கொண்டுவா.

(ப்ரளயகாலத்தில் உலகமெல்லாமுண்டு)
ஆலத்து இலையான் - ஆலிலையில் பள்ளிகொண்டிருப்பவனும்
அரவின் அணைமேலான் - (எப்போதும்) திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொள்பவனும்
நீலம் கடலுள்-கருநிறமான ஸமுத்ரத்தில்
நெடுங் காலம்—வெகுகாலமாக
கண் வளர்ந்தான்-யோக நித்ரை செய்பவனும்
பாலம் பிராயத்தே - குழந்தைப்பருவமே தொடங்கி
பார்த்தற்கு-அர்ஜுநனுக்கு
அருள் செய்த-க்ருபைசெய்த
கோலம்-அழகியவடிவத்தையுடைய
பிரானுக்கு-தலைவனுமான இவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா—;
குடந்தை கிடந்தாற்கு ஓர் * *வா—.

குறிப்பு:—ஆல் + இலையான் = (அத்துச்சாரியை பெற்று) ஆலத்திலையான். ஸ்ரீராப்தி, எம்பெருமான் திருமேனியின் நிழலீட்டாலே கறுத்துத் தோன்றுமாதலால் 'நீலக்கடல்' எனப்பட்டது: "நீலாம்ஹோயஜலோஸ்ஹி தோ ஸஹஸ்ராஸ்யோரோகேஷ: — காயோ நீலக்ஷ வயஸஸாகேஷு மாவாஸ்யந்தி" என்று போஜராஜன் சொல்லியுள்ளது காண்க. அன்றி, "உவர்க்குங்கருங்கடல் நீருள்ளான்" என்றபடி லவணஸமுத்ரத்தில் பள்ளிகொண்டிருப்பதாகக் கூறுவதுமுண்டு. ... ... (சு)

பொற்றிகழ் சித்திர கூடப் பொருப்பினில்
உற்ற வடிவி லொருகண்ணுங் கொண்ட வக்
கற்றைக் குழலன் கடியன் விரைந்துன்னை
மற்றைக்கண் கொள்ளாமே கோல்கொண்டுவா மணிவண்ண நம்பிக்கோர் கோல்கொண்டுவா.

'அக்காக்காய்!—)
பொன்-அழகிதாய்
திகழ்.விளங்குகின்ற
சித்திரகூடம்பொருப்பினில் - சித்ரகூட மலைச்சாரலில்
(பிராட்டி மடியிலே தலைவைத்துக்கொண்டு ஸ்ரீராமனாகிய தான் கண்வளர்ந்தருளும்போது)
வடிவில்-(பிராட்டியின்) திருமேனியில்
உற்ற-பதிந்த
(உனது இரண்டு கண்களில்)
ஒரு கண்ணும்-ஒருகண்ணைமாத்திரம்
கொண்ட-பறித்துக்கொண்ட
அக்கற்றை குழலன் - அந்தத் தொகுதியான கூந்தலையுடையவன்
கடியன்-க்ரூரன்;
(ஆதலால், அவன் தனக்கு இஷ்டமானதை உடனே செய்யாமலிருத்தற்காக)
உன்னை-உன்னை (ச்சீறி,
மற்றை கண்-(உனது) மற்றொரு கண்ணையும்
கொள்ளாமே-பறித்துக்கொள்ளாதபடி
விரைந்து—ஓடிப்போய்
கோல் கொண்டுவா—;
மணிவண்ணன் நம்பிக்கு ஓர் * *வா—.

குறிப்பு:—பொன் + திகழ் = பொன்றிகழ்; இங்கு, மென்றொடர் வன்றொடராயிற்று—செய்யுளின்பம் நோக்கி. காகாஸுரன் பிராட்டியின் வடிவைநோக்கியதனால் இராமபிரான் நோக்கியகண்ணையே கொண்டனனென்பது 'உற்றவடிவில் கண்கொண்ட' என்பதில் விளங்கும். காகாஸுரனது ஒற்றைக்கண்ணைப் பறித்தபோது காக்கைகளெல்லாவற்றிற்கும் ஒற்றைக் கண்ணும்படி அப்பெருமான் ஸங்கல்பித்ததனால் காகாஸுரனுக்கும் ஸாதாரணகாக்கைக்கும் அபேதமாக இப்படிச் சொல்லுகிறாள். கோடியன்—பிழைக்கேற்ற தண்டனை செய்பவன். ... ... ... (எ)

மின்னிடைச் சீதை பொருட்டா விலங்கையர்
மன்னன் மணிமுடி பத்து முடன்வீழத்
தன்னிகரொன் றில்லாச் சிலைகால் வளைத்திட்ட [கொண்டுவா.
மின்னு முடியற்கோர் கோல்கொண்டுவா வேலை யடைத்தாற்கோர் கோல்

மின்—மின்னல்போன்ற [ஸூக்ஷ்மமான]
இடை—இடையையுடைய
சீதை பொருட்டா—ஸீதையைமீட்டுக்கொ [ணர்வதற்காக
இலங்கையர் மன்னன் } லங்கையிலுள்ளார்க்குத் [தலைவனான ராவணனுடை
மணி முடி பத்தும் } ரத்நகிரீடமணிந்த தலைகள் பத்தும்
உடன் வீழ—ஒருசேர அற்றுவிழும்படி
தன் நிகர் ஒன்று இல்லா } தனக்கு ஸமாநமானதொன்றுமில்லாத [உயர்ந்த]
சிலை—வில்லை
கால் வளைத்து இட்ட } கால்வளையும்படிபண்ணி ப்ரயோகித்த
மின்னும் முடியற்கு } விளங்கா நின்ற கிரீடத்தை அணிந்தவனுக்கு
ஓர் கோல் கொண்டு வா—;
வேலை அடைத்தாற்கு } ஸமுத்ரத்தில் ஸேதுகட்டினவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா—.

குறிப்பு:—ஸீதா—உழுபடைச்சால்; அதில் நின்று தோன்றியதனால் இவளுக்குச் சீதையென்று திருநாமம். வேலா என்றவடசொல் வேலை எனத்திரிந்தது; வேலை—கடற்கரை, இலக்கணையாய் கடலையுணர்த்திற்று. ()

தென்னிலங்கை மன்னன் சிரந்தோள் துணிசெய்து
மின்னி லங்குபூண் விபீடண நம்பிக்
கென்னிலங்கு நாமத் தளவு மரசென்ற [கொண்டுவா.
மின்னிலங் காரற்கோர் கோல்கொண்டுவா வேங்கட வாணற்கோர் கோல்

தென் இலங்கை—அழகியலங்கைக்கு
மன்னன்—அரசனாகியராவணனுடைய
சிரம்—தலைகளையும்
தோள்—தோள்களையும்
துணி செய்து—(அம்பினால்) துணித்துப் [போகட்டு,
மின் இலங்கு—ஒளிவீசுகின்ற
பூண்—ஆபரணங்களை அணிந்த
விபீடணன் நம்பிக்கு } விபீஷணாழ்வானுக்கு
என் இலங்கு நாமத்து அளவும் } 'என் பெயர் ப்ரகாசிக்குமளவும்
அரசு—ராஜ்யம் (நடக்கக்கடவது)'
என்ற—என்று அருள்செய்த
மின் இலங்கு ஆரற்கு } மின்னல்போல் விளங்குகின்ற ஹாரத்தையுடையவ [னுக்கு
ஓர் கோல் கொண்டுவா—;
வேங்கடம்—திருமலையில்
வாணற்கு—வாழ்ந்தருளுமவனுக்கு
ஓர் கோல் கொண்டுவா—.

குறிப்பு:—தென்—அழகுக்கும்பேர். துணி—முதனிலைத்தொழிற்பெயர். "மின் னலங்காரற்கு" என்பது மொருபாடம்; மின்—விளங்காநின்ற, அலங்காரத்தையுடையவனுக்கென்று பொருள்: 'மின்னிலங்காரற்கு' என்றபாடமே செய்யுளின்பத்திற்குச் சிறக்குமென்க. வாணன்—வாழ்நன்; மரூஉ. இப்பாட்டின் இரண்டாமடியிற் பெரும்பாலும் தளைபிறழும். (௬)

அக்காக்காய் நம்பிக்குக் கோல்கொண்டு வாவென்று
மிக்கா ளுரைத்தசொல் வில்லிபுத் தூர்ப்பட்டன்

ஒக்க வுரைத்த தமிழ்ப்பத்தும் வல்லவர்
மக்களைப் பெற்று மகிழ்வரிவ் வையத்தே. (௧0)

அக்காக்காய்—'காக்கையே!
நம்பிக்கு—உத்தமனான இவனுக்கு
கோல் கொண்டு வா என்று—கோலைக்கொண்டுவந்து தா' என்று
மிக்காள்—சிறந்தவளானயசோதை
உரைத்த சொல்—சொன்னசொற்களை,
வில்லிபுத்தூர்—ஸ்ரீவில்லிபுத்தூரிலவதரித்த
பட்டன்—பெரியாழ்வார்
ஒக்க—அவ்யசோதையைப்போலவே
உரைத்த—சொன்ன
தமிழ்—தமிழினாலாகிய
பத்தும்—இப்பத்துப்பாசுரங்களையும்
வல்லவர்—ஓதவல்லவர்கள்
மக்களை—ஜ்ஞாநபுத்ரர்களை [சிஷ்யர்களை]
பெற்று—அடைந்து
இ வையத்தே—இப்பூமியிலேயே
மகிழ்வர்—மகிழ்ந்திருக்கப்பெறுவர்.

குறிப்பு:—[மிக்காள்.] தேவகியும் யசோதையுமாகிய இருவரும் பூர்வ ஜந்மத்தில் தவஞ்செய்தவர்களாயிருந்தாலும், தேவகி கண்ணனைப் பெற்றுவிட்ட மாத்திரமேயாய், பூர்ணாநுபவம் யசோதையதாகையாலே இவள் மிக்காளானாள். வையம்—(பொருள்கள்) வைக்கப்படுமிடமென்று காரணக்குறி. (௧0)

அடி:—வேலி கொங்கு கறுத்து ஒன்றே சீர் ஆல் பொற்றிகழ் :பின் தென்னிலங்கை அக்காக்காய் ஆநிரை.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

---

ஏழாந்திருமொழி

## ஆநிரை மேய்க்க.



அவதாரிகை:—கன்று மேய்க்கப் போகவேணுமென்று அழுத கண்ணனை யசோதை, 'அக்காக்காய்! நம்பிக்குக் கோல்கொண்டுவா' என்றுசொல்லி தேற்றி அவனழுகையை நிறுத்தியபின்பு, தான் நினைத்தபடி 'நான் பல புஷ்பங்களையும் வைத்திருக்கிறேன்; அவை செவ்வியழிவதற்கு முன்னே நீ அவற்றைச் சூடவரவேணும்' என்று அக்கண்ணபிரானை அழைத்தபடியை, ஆழ்வார்தாமும் அநுபவிக்க ஆசைப்பட்டுத் தம்மை அவளாகப் பாவித்து அவள் சொல்லியபடியே சொல்லியழைத்து இனியராகிறார் இத்திருமொழியில். ... ... ... ... ... ...

ஆநிரை மேய்க்கநீ போதி யருமருந் தாவ தறியாய்
கானக மெல்லாந் திரிந்துன் கரிய திருமேனி வாடப்
பானையிற் பாலைப் பருகிப் பற்றாதா ரெல்லாஞ் சிரிப்பத்
தேனி லினிய பிரானே செண்பகப் பூச்சூட்ட வாராய். (௧)

தேனில்—தேனைக்காட்டிலும்
இனிய—போக்யனாயிருக்கிற
பிரானே—ப்ரபுவே!
பற்றாதார் எல்லாம்—பகைவரெல்லாரும்
சிரிப்ப—பரிஹஸிக்கும்படி
பானையில் பாலை பருகி—(கறந்த) பானையிலேயுள்ளபச்சைப்பாலைக்குடித்து (பின்பு)
உன்—உன்னுடைய
கரிய—ச்யாமமான
திரு மேனி—அழகியதிருமேனி
வாட—வாடும்படி
கானகம் எல்லாம் திரிந்து—காட்டிடம் முழுதும் திரிந்துகொண்டு
ஆ நிரை—பசுக்களின் திரளை
மேய்க்க—மேய்ப்பதற்கு
நீ போதி—நீபோகிறாய்;
அரு மருந்து ஆவது—(நீ உன்னை) பெறுதற்கரிய தேவாம்ருதம்போன்றவனாதலை
அறியாய்—அறிகிறாயில்லை; (இனி நீ கன்றுமேய்ப்பதை விட்டிட்டு)
செண்பகம் பூ—செண்பகப்பூவை
சூட்ட—(நான்) சூட்டும்படி
வாராய்—வருவாயாக.

குறிப்பு—அருமருந்தாவதறியாய் - இவ்வுலகத்திலுள்ளார்க்குப் பிறவி நோயறுக்கும் மருந்துமாய், பரமபதத்திலுள்ளார்க்குப் போகமகிழ்ச்சிக்கு மருந்துமாய் நீயிருப்பதை அறிகிறிலைகாண். பற்றாதார் சிரிப்ப—பற்றுமவர்கள் இவன் செயலுக்கு உகப்பர்போலும். தேனில்—ஐந்தாம் வேற்றுமை. செண்பகம்—வடமொழியில் 'சம்பகம்'எனவழங்கும். ... ... (க)

கருவுடை மேகங்கள் கண்டா லுன்னைக்கண் டாலொக்குங் கண்கள்
உருவுடை யாயுல கேழு முண்டாக வந்து பிறந்தாய்
திருவுடை யாள்மண வாளா திருவரங் கத்தே கிடந்தாய்
மருவி மணங்கமழ் கின்ற மல்லிகைப் பூச்சூட்ட வாராய். (உ)

கண்கள்—கண்களானவை
உன்னை கண்டால்—உன்னைப்பார்த்தால்
கரு உடை மேகங்கள்—கர்ப்பத்தையுடைய [நீர்கொண்ட] மேகங்களை
கண்டால்—பார்த்தால் (அதை)
ஒக்கும்—ஒத்துக் குளிர்கின்ற
உரு உடையாய்—வடிவையுடையவனே!
உலகு ஏழும்—ஏழுலகங்களும்
உண்டாக—ஸத்தைபெறும்படி
வந்து பிறந்தாய்—திருவவதரித்தவனே!
திரு உடையாள்—(உன்னை) ஸம்பத்தாகவுடைய பிராட்டிக்கு
மணவாளா—நாயகனே!
திரு அரங்கத்தே—கோயிலிலே
கிடந்தாய்—பள்ளிகொண்டிருப்பவனே!
மணம்—வாஸனை
மருவி கமழ்கின்ற—நீங்காமலிருந்துபரிமளிக்கிற
மல்லிகைப்பூ—மல்லிகைப்பூவை
சூட்ட வாராய்—.

குறிப்பு:—'ஒக்கும்' என்பதை முற்றாகக்கொண்டு 'கருவுடை மேகங்களைக் கண்டால் உன்னைக் காண்பதை ஒத்திருக்கும்: (அதுக்குமேலே) கண்கள் உருவுடையாய்—கண்ணழகையுமுடையவனே!' என்றும் உரைக்கலாம். உலகேழுமுண்டாக= ''பரித்ராணாய ஸாதூநாம்''.—'உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே' என்றது காண்க. ... ... ... (உ)

மச்சொடு மாளிகை யேறி மாதர்கள் தம்மிடம் புக்குக்
கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி
நிச்சலுந் தீமைகள் செய்வாய் நீள்திரு வேங்கடத் தெந்தாய்
பச்சைத் தமனகத் தோடு பாதிரிப் பூச்சூட்ட வாராய். (ங)

மச்சொடு மாளிகை ஏறி — நடுநிலையிலும் மேல் நிலையிலும் ஏறிப்போய்
மாதர்கள்தம் இடம்புக்கு — பெண்களிருக்கிற இடத்திலே புகுந்து
கச்சொடு—(அவர்களுடைய முலைகளின் [மேலிருந்த) கச்சுக்களையும்
பட்டை—பட்டாடைகளையும்
கிழித்து—கிழித்துவிட்டு
காம்பு துகில் அவை — (மற்றும் அப்பெண்கள் உடுத்துள்ள) கரைகட்டின [சேலையையும்
கீறி—கிழித்துப்போகட்டு (இப்படியே)
நிச்சலும்—ப்ரதிதினம்
தீமைகள்—துஷ்டசேஷ்டைகளை
செய்வாய்—செய்பவனே!
நீள் திருவேங்கடத்து — உயர்ந்த திருமலையிலெழுந்தருளியிருக்கிற
எந்தாய்—ஸ்வாமியே!
பச்சை—பசுநிறமுள்ள
தமனகத்தோடு—மருக்கொழுந்தையும்
பாதிரிப்பூ—பாதிரிப்பூவையும்
சூட்ட வாராய்—.

குறிப்பு:—கச்சு—'கஞ்சுகம்' என்ற வடசொற்சிதைவு. துகிலவை = அவை—முதல் வேற்றுமைச் சொல்லுருபு. நிச்சல்—'நித்யம்' என்ற வடசொல் விகாரம். தமநகம் வடசொல். ... ... ... (௩)

தெருவின்கண் ணின்றிள வாய்ச்சி மார்களைத் தீமைசெய் யாதே
மருவுந் தமனக முஞ்சீர் மாலை மணங்கமழ் கின்ற
புருவங் கருங்குழல் நெற்றி பொலிந்த முகிற்கன்று போலே
உருவ மழகிய நம்பி உகந்திவை சூட்டநீ வாராய். (௪)

புருவம்—புருவங்களையும்
கரு குழல்—கருநிறமான கூந்தலையும்
நெற்றி—(இவ்விரண்டிற்கும் இடையிலுள்[ள) நெற்றியையுங் கொண்டு
பொலிந்த—விளங்குகின்ற
முகில் கன்று போலே — மேகக்கன்றுபோலே
உருவம் அழகிய—வடிவமழகிய
நம்பி—சிறந்தோனே! (நீ)
தெருவின்கண் நின்று — தெருவிலே நின்றுகொண்டு
இள ஆய்ச்சி மார்களை — இடைச்சிறுமிகளை
தீமை செய்யாதே—தீம்புசெய்யாமலிரு;
மருவும்—மருவையும்
தமனகமும்—தமநகத்தையும் (சேர்த்துக்கட்டின)
சீர் மாலை—அழகியமாலைகள்
மணம் கமழ்கின்ற — வாஸனை வீசுகின்றன;
இவை—இவற்றை
உகந்து—மகிழ்ச்சிகொண்டு
சூட்ட நீ வாராய்—.

குறிப்பு—எம்பெருமானுக்கு ஏற்ற உவமைப்பொருள் கிடையாமையால் 'புருவங் கருங்குழல் நெற்றி பொலிந்தமுகில்கன்று' என இல்பொருளுவமை கூறப்பட்டது. கமழ்கின்ற—'அன்' சாரியை பெறாத முற்று. (௪)

புள்ளினை வாய்பிளந் திட்டாய் பொருகரி யின்கொம் பொசித்தாய்
கள்ள வரக்கியை மூக்கொடு காவல னைத்தலை கொண்டாய்
அள்ளிநீ வெண்ணெய் விழுங்க வஞ்சா தடியே னடித்தேன்
தெள்ளிய நீரி லெழுந்த செங்கழு நீர்சூட்ட வாராய். (௫)

புள்ளினை—பகாஸுரனை
வாய் பிளந்திட்டாய்—வாய்கிழித்துப்பொ[கட்டவனே!
பொரு—யுத்தோந்முகமான
கரியின்—குவலயாபீடத்தின்
கொம்பு—கொம்பை
ஒசித்தாய்—பறித்தவனே!
கள்ளம் அரக்கி } வஞ்சனையையுடைய ரா
யை மூக்கொடு } க்ஷஸியாகிய சூர்ப்பண[கையின் மூக்கையும்
காவலனை—(அவளுக்குப்) பாதுகாவலாயிரு[ந்த ராவணனுடைய
தலை—தலையையும்
கொண்டாய்—அறுத்தவனே!

நீ—(இப்படிப்பட்ட) நீ
வெண்ணெய்—வெண்ணெயை
அள்ளி விழுங்க—வாரிவிழுங்க
அஞ்சாது—சிறிதும் பயப்படாமல்
அடியேன்—('எப்போது குழந்தை பிறந்து வெண்ணெய் விழுங்கப் போகிறது?' என்றிருந்த) நான்
அடித்தேன் - அடித்தேன்;
(அப்பிழையைப் பொறுத்து)
தெள்ளிய - தெளிவான
நீரில் - நீரிலே
எழுந்த - உண்டான
செங்கழுநீர் — செங்கழுநீரை
சூட்ட வாராய்—.

குறிப்பு:—அடியேன் = ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸௌர்யத்தி லீடுபட்டுச் சொல்லுகிறசொல்: மரபுவழுவமைதி; அடித்தபின்பு அநுதாபங்கொண்டு 'அடியேன்' என்றுரைனினுமாம். (ரு)

எருதுக ளோடு பொருதி யேது முலோபாய்காண் நம்பி
கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக் கால்கொடு பாய்ந்தாய்
தெருவின்கண் டீமைகள் செய்து சிக்கென மல்லர்க ளோடு
பொருது வருகின்ற பொன்னே புன்னைப் பூச்சூட்ட வாராய். (சு)

நம்பி - சிறந்தோனே!
(நப்பின்னையை மணம்புணர்வதற்காக)
எருதுகளோடு - ஏழுரிஷபங்களுடன்
பொருதி - போர்செய்யாநின்றாய்;
ஏதும் - எதிலும் [ஒன்றிலும்]
உலோபாய் காண் } விருப்பமில்லாதவனாயிராநின்றாய்;
கருதிய - (கம்ஸன் உன்மேல் செய்ய)[நினைத்த
தீமைகள் - தீம்புகளை
செய்து - (நீ அவன்மேற்) செய்து
கஞ்சனை - (அந்தக்) கம்ஸனை
கால் கொடு-காலினால் [காலைக்கொண்டு]

பாய்ந்தாய் - பாய்ந்தவனே!
(அக்ரூரர்மூலமாயழைக்கப்பட்டுக் கம்[ஸனரண்மனைக்குப் போம்போது)
தெருவின் கண் - தெருவிலே
தீமைகள் செய்து - தீம்புகளைச்செய்து[கொண்டுபோய்
சிக்கென - வலிமையாக
மல்லர்களோடு - (சாணூரமுஷ்டிகரென்[னும்) மல்லர்களுடனே
பொருது வருகின்ற } போர்செய்துவந்த
பொன்னே - பொன்போலருமையானவ[னே!
புன்னைப்பூ சூட்ட வாராய்—.

குறிப்பு:—பொருதி=முன்னிலையொருமை நிகழ்கால வினை முற்று: "(எருதுகளோடே பொருதது) காலாந்தரமாயிருக்கச்செய்தேயும் தத்காலம் போலே ப்ரகாசிக்கையாலே 'பொருதி' என்று வர்த்தமாநமாகச் சொல்லுகிறது" என்ற பெரியஜீயர் உரை நோக்கத்தக்கது. உலோபாய்='லோபம்' என்றவடமொழியின் திரிபாகிய 'உலோபம்' என்பதனடியாகவந்த எதிர் மறைமுற்று; உடம்பைப்பேணுதல் உயிரைப் பேணுதல் ஒன்றும் செய்யா

திராநின்றாய் என்று கருத்து. போம்வழியில் வண்ணானைக்கொன்று வஸ்த்ரங்களைப் பறித்துக்கொண்டமை, கம்ஸனுடையவில்லை முறித்தமை, குவலயாபீடத்தைக்கொன்றமை முதலியன-இங்கு, தெருவின்கண்செய்த தீமைகளாகும். கண்-ஏழனுருபு. ... ... ... ... (சு)

குடங்க ளெடுத்தேற விட்டேக் கூத்தாட வல்லவெங் கோவே
மடங்கொள் மதிமுகத் தாரை மால்செய்ய வல்லவென் மைந்தா
இடந்திட் டிரணிய னெஞ்சை யிருபிள வாகமுன் கீண்டாய்
குடந்தைக் கிடந்தவென் கோவே குருக்கத்திப் பூச்சூட்ட வாராய். (எ)

குடங்கள் - பலகுடங்களை
எடுத்து - தூக்கி
ஏறவிட்டு - உயரவெறிந்து
(இப்படி)
கூத்து ஆட - குடக்கூத்தை யாடுவதற்கு
வல்ல - ஸாமர்த்தியமுடைய
எம் கோவே - எம்முடைய தலைவனே!
மடம் கொள் - மடப்பமென்ற குணத்தை [யுடைய
மதி முகத் தாரை - சந்த்ரன்போன்ற முகத்தை யுடைய பெண்களை
மால் செய்ய வல்ல - மயக்கவல்ல
என் மைந்தா - எனதுபுத்திரனே!
முன் - நரஸிம்ஹாவதாரத்திலே
இரணியன் நெஞ்சை - ஹிரண்யாஸுரனுடையமார் [பை
இடந்திட்டு - (திருவுகிர்களை) ஊன்றி [வைத்து
இரு பிளவு ஆக - இரண்டு பிளவாகப் போம் [படி
கீண்டாய் - பிளந்தவனே!
குடந்தை - திருக்குடந்தையில்
கிடந்த - பள்ளிகொள்ளுகிற
எம் கோவே - எமது தலைவனே!
குருக்கத்திப்பூ சூட்ட வாராய்—.

குறிப்பு:—குடக்கூத்து— ப்ராஹ்மணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ்செய்வதுபோல, இடையர்க்குச் செல்வம் விஞ்சினால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப்போக்குவீடாக அவர்களாடுவதொரு கூத்து; இதனைத் தலையிலே அடுக்குக் குடமிருக்க, இருதோள்களிலும் இருகுடங்களிருக்க இருகையிலுங் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து, என்பர்; இதனைப்பதினோராடலிலொன்றென்றும், அறுவகைக் கூத்திலொன்றென்றுங்கூறி, "குடத்தாடல் குன்றெடுத்தோனாடலதனுக், கடைக் குபவைந்துறுப்பாய்ந்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார். ... ... ... ... (எ)

சீமா லிகனவ னோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய்
சாமா றவனைநீ யெண்ணிச் சக்கரத் தால்தலை கொண்டாய்
ஆமா றறியும் பிரானே யணியரங் கத்தே கிடந்தாய்
ஏமாற்ற மென்னைத் தவிர்த்தா யிருவாட்சிப் பூச்சூட்ட வாராய். (அ)

சீ மாலிகன் அவனோடு - மாலிகன் என்ற பெயரை யுடையவனோடு
தோழமை கொள்ளவும் - ஸ்நேஹம்செய் [துகொள்ளுதற்கும்
வல்லாய் - வல்லவனாய்,
அவனை - அந்தமாலிகனை
நீ நீ
சாம் ஆறு எண்ணி - செத்துப்போம்வழியையும் [ஆலோசித்து
சக்கரத்தால் - சக்ராயுதத்தினால்

*தலை கொண்டாய் - தலையையுமறுத்தாய்;*
*ஆம் ஆறு - நடத்தவேண்டியவகைகளை*
*அறியும் - அறியவல்ல*
*பிரானே - ப்ரபுவே!*
*அணி - அழகிய*
*அரங்கத்தே - கோயிலிலே*

*கிடந்தாய் - பள்ளிகொண்டிருப்பவனே!*
*என்னை - எனக்கு*
*ஏமாற்றம் தவிர்த்தாய் - துன்பத்தைப் போக்கினவனே!*
*இருவாட்சிப்பூ சூட்ட வாராய்—.*

குறிப்பு:—மாலிகன் என்பாரொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த்தோழனாய் அப்பிரானிடத்திற் பலவகையாயுதங்களையும் பயின்று ஒருவர்க்கு மஞ்சாமல் அஹங்காரியாய் ஸாதுஜநங்களை ஹிம்ஸித்துக்கொண்டிருக்க, கண்ணபிரான் 'நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாதே! என்னசெய்யலாம்? என்றுவ்யாகுலப்பட்டு, ஒருநாள் அவனைநோக்கி 'நீ இப்படிசெய்வது தகாது' என்ன; ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன்வாயில்வந்தபடி பிதற்றி 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப்பயிற்சி மாத்திரம் செய்விக்கவில்லையே' என்று கண்ணன்மேற் குறைகூற, 'இதில் பழகுவது உனக்கு முடியாது, எனக்கே அஸாதாரணமானது' என்ன; 'என்னால் முடியாததுமொன்றுண்டோ? நீ அவஸ்யம் அதைக் கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் 'இதுதான் தக்கஸமயம்' என்று திருவுள்ளத்திற்கொண்டு சக்ராயுதத்தையெடுத்துத் தன் ஒற்றைவிரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்க,'இது எனக்கு அரிதோ?' என்றுமாலிகன்சொல்ல, 'இது அரிதே' என்று கண்ணன் சொலலவும் அதை அவன் கேளாமல் அச்சக்ராயுதத்தை வாங்கிச் சுழற்றி யெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன் கைவிரலைக் கழுத்துக்கு அடுத்துவைத்துநிற்க, அச்சக்கரம் சுழன்றுவருவதற்கு இடம் போதாமையாலே அதன் வீச்சு இவன்கையிற் பிடிபடாமல் இவன் தலையை அரிந்துவிட்டதென்பது, இப்பாட்டில் குறித்த கதை. இவ்வரலாறு எந்தப் புராணத்திலுள்ளதென்று ஆராய்ந்துபார்த்தும் பலபெரியோர்களைக் கேட்டும் ஆகரம் அறியப் பெற்றிலேன்; வந்தவிடத்திற்கண்டுகொள்க. "தத்வம் யஸ்ய வேதேஹ்யா யதாவத்ஸம்ப்ரபச்யதி" என்று-சதுர்முகன்வரத்தினால் வால்மீகிமுனிவர் ஸமஸ்தவதாரவ்ருத்தாந்தங்களைத் தாமாகஸாக்ஷாத்கரித்தவோபாதி ஆழ்வாரும் மயர்வறமதி நலமருளப்பெற்றுத் தாமாக ஸாக்ஷாத்கரித்தவற்றில் இவ்வரலாறு ஒன்று என்பர் ஸாம்ப்ரதாயிக ஆர்யவ்ருத்தர்.

மாலிகன் என்பதே அவன் பெயர்; மேன்மைப் பொருளைத்தரும் 'ஸ்ரீ' என்ற சொல் 'சி' எனத்திரிந்துவந்து சிமாலிகன் எனக் கிடக்கிறது; க்ருஷ்ணஸ்நேஹத்தால்வந்த மேன்மையுண்டிறே அவனுக்கு. அவனைக்கொல்வது ஆவஸ்யகமானபோது 'தோழனைக் கொன்றான்' என்னும் பழி தனக்கு வாராமல் 'தன்னாலே தான் முடிந்தான்' என்று உலகத்தார் சொல்லும்படி கண்ணபிரான் மாலிகனை உபாயமாகக் கொன்றனனென்பார் 'சாமாறவனை நீயெண்ணிச்சக்கரத்தால் தலைகொண்டாய்' என்றார். தோழமைக்கொள்ளவும் என்ற உம்மை எதிரது தழுவியதாய், தலைகொள்ளவும் என்பதைக் காட்டும். (அ)

அண்டத் தமரர்கள் சூழ வத்தாணி யுள்ளங் கிருந்தாய்
தொண்டர்கள் நெஞ்சி லுறைவாய் தூமல ராள்மண வாளா
உண்டிட் டுலகினை யேழு மோராலிலை யிற்றுயில் கொண்டாய்
கண்டுநா னுன்னை யுகக்கக் கருமுகைப் பூச்சூட்ட வாராய். (௯)

அத்தாணியுள் - அருகான இடத்திலே (ஸேவிக்கும்படி)
அமரர்கள் - தேவர்கள்
சூழ - சூழ்ந்திருக்க
அங்கு - அவர்கள்நடுவில்
அண்டத்து - பரமபதத்தில்
இருந்தாய் - வீற்றிருப்பவனே!
தொண்டர்கள் - அடியார்களுடைய
நெஞ்சில் - ஹ்ருதயத்தில்
உறைவாய் - வஸிப்பவனே!
தூ மலராள் - பரிசுத்தமானதாமரைமலரைப் பிறப்பிடமாகவுடையபிராட்டிக்கு
மணவாளா - கொழுநனே!

(பிரளயகாலத்தில்)
உலகினை ஏழும் - ஏழுஉலகங்களையும்
உண்டிட்டு - உண்டுவிட்டு
ஓர் ஆல் இலையில் - ஓராலிலையில்
துயில் கொண்டாய் - யோகநித்திரையைக்கொண்டவனே!
நான் - நான்
உன்னை கண்டு - (நீபூச்சூடியதைப்) பார்த்து
உகக்க - மகிழும்படி
கருமுகைப்பூ - இருவாட்சிப்பூவை
சூட்ட வாராய்.

குறிப்பு:—அண்டம் பரமபதம்; "இறந்தால்தங்கு மூர் அண்டமேகண்டு கொள்மின்" என்றது காண்க. கருமுகை-சிறுசெண்பகமுமாம். (௯)

சேண்பக மல்லிகை யோடு செங்கழு நீரிரு வாட்சி
எண்பகர் பூவுங் கொணர்ந்தே னின்றிவை சூட்டவா வென்று
மண்பகர் கொண்டானை யாய்ச்சி மகிழ்ந்துரை செய்தவிம் மாலை
பண்பகர் வில்லிபுத் தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்ன பத்தே (௧௦)

செண்பகம் - செண்பகப்பூவும்
மல்லிகையோடு - மல்லிகைப்பூவும்
செங்கழுநீர் - செங்கழுநீர்ப்பூவும்
இருவாட்சி - இருவாட்சிப்பூவும் (ஆகிய)
எண் பகர் - (இன்னதின்னதென்று) எண்ணிச்சொல்லப்படுகிற
பூவும் - மலர்களையெல்லாம்
கொணர்ந்தேன் - கொண்டுவந்தேன்;
இன்று - இப்போது
இவை சூட்ட - இப்பூக்களைச் சூட்டும்படி
வா - வருவாயாக'
என்று - என்று—

பகர் மண் கொண்டானை - பகர்ந்த மண்ணைக்கொண்டவனை
ஆய்ச்சி - யசோதை
மகிழ்ந்து - மகிழ்ச்சிகொண்டு
உரை செய்த - சொல்லியவற்றை,
பண் பகர் வில்லி புத்தூர் - ராகமாகவேசொல்லுகின்ற ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
கோன் - நிர்வாஹகரான
பட்டர் பிரான் - பெரியாழ்வார்
சொன்ன - அருளிச்செய்த
இ மாலை - இந்தச்சொல்மாலையும்
பத்தே - ஒருபத்தே!.

குறிப்பு:—இந்தத் திருமொழிக்குப் பலஞ் சொல்லாதொழிந்தது, இப்பத்துப் பாசுரங்களும் ஸ்வயமே ரஸ்யமாய் போக்யமாயிருக்கு மென்பதற்கு. [பத்தே!] ஏகாரம்-இப்படியும் பாடலிருக்கப் பெறுவதே! என்று இத்திருமொழியின் போக்யதையைக் கொண்டாடியதைக் காட்டும். எண்பகர்-

சூட்டிக்கொள்ளலாமென்று ஶாஸ்த்ரங்களி லெண்ணப்பட்ட என்றுமாம். கொணர்ந்தேன்='கொணு' என்றபகுதி குறுக்கலும் விரித்தலுமாகிற விகாரங்களைப் பெற்று 'கொணர்' என நின்றது. பகர்மண்-வாமநனாய்ச்சென்ற திருமால் 'எனக்கு மூவடி மண்தா' என்று சொல்லப்பெற்ற பூமியை என்றுவது, 'மூவடிமண் அளந்துகொள்' என்று மஹாபலி உடன்பட்டுச் சொன்ன பூமியை என்றுவதுகொள்க. ஆரேனும் ஒன்றைச் சொல்லினும் ராகத்திலே சேரும்படி சொல்லுகின்ற ஸ்ரீவில்லிபுத்தூரென்பது 'பண்பகர் வில்லிபுத்தூர் என்பதன்கருத்து. உரைசெய்த-பலவின்பால் இறந்தகாலவினையாலணையும் பெயர்; இரண்டாம் வேற்றுமைத் தொகை. உரைசெய்த (வற்றைப்) பட்டர்பிரான் சொன்ன இம்மாலையென்க. ... ... (கo)

*அடி:—ஆநிரை கரு மச்சு தெரு புள் எருது குடம் சீமாலிகன் அண்டம் செண்பகம் இந்திரன்.*

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.

## எட்டாந்திருமொழி
## இந்திரனோடு பிரமன்.

(*)

**அவதாரிகை:**—யசோதைப்பிராட்டி கண்ணபிரானை நீராட்டிக் குழல்வாரிப்பூச் சூட்டினபின்பு, அவனுக்கு த்ருஷ்டிதோஷம் வாராதபடி காப்பிடவேணுமென்று கருதி 'நீ போதுபோனவேளையில் நாற்சந்தி முதலிய விடங்களில் நில்லாதே' என்று அப்பிரானை அழைத்துக் காப்பிட்டபடியை ஆழ்வார்தாமு மநுபவிக்க விரும்பித் தம்மை அவளாகப் பாவித்து, திருவெள்ளறையில் கண்ணன் அர்ச்சையாய் நிற்கிற நிலையிலே அவ்யசோதைப்பிராட்டியின் பேச்சாலே அவனைக்காப்பிட வழைத்து இனியராகிறார் இத்திருமொழியில். ... ... ... ... ... ...

இந்திர னோடு பிரம னீச னிமையவ ரெல்லாம்
மந்திர மாமலர் கோண்டு மறைந்துவ ராய்வந்து நின்றார்
சந்திரன் மாளிகை சேருஞ் சதுரர்கள் வெள்ளறை நின்றாய்
அந்தியம் போதிது வாகு மழகனே காப்பிட வாராய். (க)

சந்திரன் - சந்த்ரனளவன்
மாளிகை சேரும் - வீடுகளின் மேல்நிலையிலேசேரப்பெற்ற
சதுரர்கள் வெள்ளறை - ஸமர்த்தர்கள் வஸிக்கின்ற திருவெள்ளறையிலே
நின்றாய் - நின்றவனே!
அழகனே - அழகுஉடையவனே!
இந்திரனோடு - இந்திரனும்
பிரமன் - ப்ரஹ்மாவும்
ஈசன் - ருத்ரனும்
இமையவர் - மற்றுமுள்ளதேவர்களும்
எல்லாம் - (ஆகிய)யாவரும்
மா மந்திரம் மலர் கொண்டு - சிறந்த மந்த்ரபுஷ்பங்களைக்கொண்டு
உவர் ஆய் வந்து - (மிக்கஸமீபமாகவும் மிக்கதூரமாகவுமல்லாமல்) நடுவிடத்திலிருப்பவராகவந்து
மறைந்து நின்றார்-மறைந்து நிற்கிறார்கள்;
இது - இக்காலம்
அம் - அழகிய
அந்திபோது ஆகும் - ஸாயம்ஸந்த்யாகாலமாகும்
(ஆகையால்)
காப்பு இட - (நான் உனக்கு ரக்ஷையாக அந்திக்காப்பிடும்படி
வாராய் - வருவாயாக.

கன்றுக ளில்லம் புகுந்து கதறு கின்றபசு வெல்லாம்
நின்றொழிந் தேனுன்னைக் கூவி நேசமே லொன்று மிலாதாய்
மன்றினில் லேலந்திப் போது மதிட்டிரு வெள்ளறை நின்றாய்
நன்றுகண் டாயென்றன் சொல்லு நானுன்னைக் காப்பிட வாராய் (௨)

மதில் - மதிளரணையுடைய
திரு வெள்ளறை - திருவெள்ளறையிலே
நின்றாய் - நின்றருளினவனே!
மேல் - (என்)மேலே
ஒன்றும் - அல்பமும்
நேசம் இலாதாய் - அன்பில்லாதவனே!
உன்னை கூவி - உன்னைக்கூவிக்கொண்டு
நின்றொழிந்தேன் - நின்றுவிட்டேன்;
(அதனால்)
பசு எல்லாம் - பசுக்களெல்லாம்
கன்றுகள் இல்லம் புகுந்து - கன்றுகளிருக்குமிடத்திலே சேர்ந்து
கதறுகின்ற - கத்துகின்றன;
(நீ)
அந்தி போது - அந்திவேளையில்
மன்றில் - நாற்சந்தியில்
நில்லேல் - நில்லாதே;
என்தன் சொல்லு-என்னுடையவார்த்தை
நன்று கண்டாய் - (உனக்கு) நல்லதாகுங்கிடாய்:
நான் உன்னை காப்பு இட வாராய்.—

குறிப்பு:—பசுக்களைக் கறக்கவேண்டியநான் உன்னைக் காப்பிட அழைத்துக்கொண்டிருப்பதனால், மேய வெளியே போயிருந்த பசுக்களெல்லாம் கன்றுகளுள்ளவிடத்தில்வந்து சேர்ந்தபின்பும் கறப்பாரில்லாமல் முலைக்கடுப்பெடுத்துக் கத்துகின்றன என்பது முதலடியின் கருத்து. 'கதறுகின்ற' என்பதை இடை நிலைத்தீபகமாக்கி, கன்றுகள் முலையுண்ணப்பெறாமையால் கத்துகின்றன; பசுக்கள் புறம்பே நின்றுகொண்டு கன்றுகள் முலையூட்டுதல் கறத்தல் செய்யாமையாலே முலைக்கடுப்பாற் கதறுகின்றன என்றுமாம். 'நேசமேல்' என்றவிடத்தில், நேசம் ஏல் என்று பிரித்து ஏல் என்பதை அசைச்சொல்லாகவுங் கொள்வர். நேசம் - 'ஸ்நேஹம்' என்றவடசொல் விகாரம். ... ... ... ... ... (௨)

செப்போது மென்முலை யார்கள் சிறுசோறு மில்லுஞ் சிதைத்திட்
டப்போது நானுரப் பப்போ யடிசிலு முண்டிலை யாள்வாய்
முப்போதும் வானவ ரேத்தும் முனிவர்கள் வெள்ளறை நின்றாய்
இப்போது நானொன்றுஞ் செய்யே னெம்பிரான் காப்பிட வாராய் (௩)

ஆள்வாய்—என்னை ஆளப்பிறந்தவனே!
முப்போதும்—மூன்றுகாலத்திலும்
வானவர்—தேவர்கள்
ஏத்தும்—ஸ்தோத்திரஞ்செய்கின்ற
முனிவர்கள் வெள்ளறை—(உன் மங்களத்தையே) எண்ணுகிறவர்களுடைய திருவெள்ளறையிலே
நின்றாய்—நிற்பவனே! (நீ),
செப்பு ஓது—பொற்கலசங்களை (உவமையாக)ச் சொல்லத்தகுந்த
மெல் முலையார்கள்—மெல்லிய முலையையுடைய ஸ்திரீகள்
(விளையாட்டாகச் செய்த)
சிறு சோறும்—மணற் சோற்றையும்
(சிறு) இல்லும்—மணல் வீட்டையும்
சிதைத்திட்டு—அழித்துவிட்டு (நிற்க)
அப்போது—அக்காலத்தில்
நான்—நான்
உரப்ப—கோபித்துச் சொல்ல
(பிடித்தடிப்பனோ? என்றஞ்சி என் முன் நில்லாமல்)

போய்—அப்பாற் போய்
அடிசிலும்—சோற்றையும்
உண்டிலே—உண்ணாமலிருந்திட்டாய்;
இப்போது—இந்த ஸமயத்திலே
நான் ஒன்றும் செய்யேன் } நான் உன்னை (மருட்டுதல்முதலியன) ஒன்றும் செய்யமாட்டேன்;
எம்பிரான்! காப்பிட வாராய்—.

குறிப்பு:—முப்போது - இரண்டு ஸந்த்யையும் ஒரு உச்சிப்போதும். "முனிவர்கொள்" என்றும் பாடமுண்டென்பர். "வானவரேத்த" என்பது அத்யாபகபாடம். ... ... ... ... (௩)

கண்ணில் மணற்கொடு தூவிக் காலினாற் பாய்ந்தனை யென்றென்
றெண்ணரும் பிள்ளைகள் வந்திட் டிவரால் முறைப்படு கின்றார்
கண்ணனே வெள்ளறை நின்றாய் கண்டாரோ டேதீமை செய்வாய்
வண்ணமே வேலைய தொப்பாய் வள்ளலே காப்பிட வாராய். (௪)

கண்ணனே— நீக்ருஷ்ணனே!
வெள்ளறை நின்றாய்!—;
கண்டாரோடே—கண்டவரோ டெல்லாம்
தீமை செய்வாய்—தீம்பு செய்பவனே!
வண்ணம்—திருமேனி நிறம்
வேலை அது—கடலின் நிறத்தை
ஒப்பாய்—ஒத்திருக்கப் பெற்றவனே!
வள்ளலே—உதாரனே!
எண் அரு—எண்ணுவதற்கு அருமையான [மிகப்பல]
பிள்ளைகள் இவர்—இப்பிள்ளைகள்
வந்திட்டு—வந்திருந்து
மணல் கொடு—மணலைக்கொண்டுவந்து
கண்ணில் தூவி—கண்ணில் தூவிவிட்டு
(அதனோடு நில்லாமல்)
காலினால் பாய்ந்தனை } காலினாலும் உதைத்தாய்'
என்று என்று—என்று பலதரஞ் சொல்லி
(நீ செய்யுந் தீம்பைக் குறித்து)
முறைப்படுகின்றார் — முறையிடாநின்றார் [கள்;
(ஆதலால் அங்கே போவதை விட்டு)
காப்பு இட வாராய்—.

குறிப்பு:—ஆல், ஏ—அசைகள். [கண்டாரோடே] நீசெய்த தீம்புகளைப் பொறுக்கவல்ல உறவுமுறையாரோடே யன்றென்கை. "தீமைகள் செய்வாய்" என்ற பாடத்தை விலக்குக. ... ... ... (௪)

பல்லா யிரவரிவ் வூரிற் பிள்ளைகள் தீமைகள் செய்வார்
எல்லாமுன் மேலன்றிப் போகா தெம்பிரான் நீயிங்கே வாராய்
நல்லார்கள் வெள்ளறை நின்றாய் ஞானச் சுடரேயுன் மேனி
சொல்லார வாழ்த்திநின் றேத்திச் சொப்படக் காப்பிட வாராய். (௫)

இ ஊரில்—(பஞ்சலக்ஷம்குடியுள்ள) இவ்வூ [ரிலே
தீமைகள் செய்வார்—தீம்புகளைச் செய்பவ [ர்களாகிய
பிள்ளைகள்—சிறுவர்கள்
பல் ஆயிரவர்—அநேக ஆயிரக்கணக்கான [வராவர்;
எல்லாம்—அவர்கள் செய்யும் தீம்புகளெல் [லாம்
உன் மேல் அன்றி—உன்மேலல்லாமல்
(வேறொருவர் மேலும்)
போகாது—ஏறாது;
(இப்படியிருப்பதால் அங்கே போகாமல்)
எம்பிரான்! நீ இங்கே வாராய்—;
நல்லார்கள்—நல்லவர்கள் வாழ்கிற
வெள்ளறை(யில்) நின்றாய்!—;
ஞானம் சுடரே—ஞான வொளியையுடைய [வனே!
உன் மேனி—உன் திருமேனியை
சொல் ஆர நின்று ஏத்தி } சொல்நிறையும்படிநின்று ஸ்தோத்ரஞ்செய்து
வாழ்த்தி—மங்களா சாஸநஞ்செய்து
சொப்பட—நன்றாக
காப்பு இட வாராய்—.

குறிப்பு:—எம்பெருமானுடைய திவ்யாத்ம ஸ்வரூபம் ஸ்வயம்ப்ரகாசமாய் ஜ்ஞாநமயமாயிருப்பதால் 'ஞானச்சுடரே' என்கிறார். எல்லாம் போகாது-ஒருமைப்பன்மை மயக்கம். ... ... ... (௫)

கஞ்சன் கறுக்கொண்டு நின்மேற் கருநிறச் செம்மயிர்ப் பேயை
வஞ்சிப் பதற்கு விடுத்தா னென்பதோர் வார்த்தையு முண்டு
மஞ்சு தவழ்மணி மாட மதிள்திரு வெள்ளறை நின்றாய்
அஞ்சுவன் நீயங்கு நிற்க வழகனே காப்பிட வாராய். (௬)

மஞ்சு தவழ்-மேகங்கள் ஊர்ந்து செல்கின்ற
மணி மாடம்-ரத்நமயமான வீடுகளையும்
மதிள்-மதிளையுமுடைய
திரு வெள்ளறை(யில்) நின்றாய்!—;
கஞ்சன்-'கம்ஸனானவன்
நின்மேல்-உன்மேலே,
கறுக்கொண்டு-கோபங்கொண்டு
கரு நிறம்-கரு நிறத்தையும்
செம் மயிர்-செம்பட்ட மயிரையுமுடைய
பேயை-பூதனையை, [கொல்வதற்கு
வஞ்சிப்பதற்கு - (உன்னை) வஞ்சனையாகக்
விடுத்தான்-அனுப்பினான்
என்பது-என்பதான
ஓர் வார்த்தையும்-ஒரு சொல்லும்
உண்டு-கேட்டிருப்பதுண்டு,
(ஆதலால்)
நீ அங்கு நிற்க } நீ அவ்விடத்திலே நிற்பதற்கு
அஞ்சுவன்-நான் அஞ்சாநின்றேன்;
அழகனே! காப்பு இட வாராய்—.

குறிப்பு:—கறுக்கொண்டு—கறுப்புக்கொண்டு: "கறுப்புஞ் சிவப்பும்வெகுளிப்பொருள்." ... ... ... ... ... ... (௬)

கள்ளச் சகடு மருதுங் கலக்க ழியவுதை செய்த
பிள்ளை யரசேநீ பேயைப் பிடித்து முலையுண்ட பின்னை
உள்ளவா றொன்று மறியே னொளியுடை வெள்ளறை நின்றாய்
பள்ளிகொள் போதிது வாகும் பரமனே காப்பிட வாராய் (௭)

கள்ளம்-வஞ்சனையையுடைய
சகடம்-சகடாஸுரனையும்
மருதும்-யமளார்ஜுநங்களையும்
கலக்கு அழிய-(வடிவம்) கட்டுக்குலைந்து [அழியும்படி
உதை செய்த-(திருவடிகளால்) உதைத்துத் [தள்ளிய
பிள்ளை அரசே-பிள்ளைத்தன்மையைக்கொ[ண்ட பெருமையனே!
நீ—
பேயை-பூதனையினுடைய
முலை பிடித்து உண்ட பின்னை } முலையைப்பிடித்து (வாய் வைத்து) உண்டபின்பு
உள்ள ஆறு-உள்ளபடி
ஒன்றும் அறியேன்-ஒன்றுமறிகிறேனில்லை;
ஒளி உடை வெள்ளறை நின்றாய்!—;
இது-இப் போது
பள்ளிகொள்போது ஆகும் } படுத்து உறங்குகிற வேளையாகும்;
பரமனே! காப்பு இட வாராய்—.

குறிப்பு:— "பேய்ச்சிமுலையுண்ட பின்னையிப்பிள்ளையைப் பேசுவதஞ்சுவனே" என்பதனோடு இப்பாட்டின் இரண்டு மூன்றாமடிகளை ஒரு புடை ஒப்பிடுக. பார்த்தால் சிறுவன் போலிருக்கின்றாய், நீ செய்யும் செய்கையோ அதிமாநுஷம்; ஆகையால் உனது உண்மையான ஸ்வரூபம் என்னாலறியப் போகிறதில்லை யென்கிறாள். ... ... ... ... ... (௭)

இன்ப மதனை யுயர்த்தா யிமையவர்க் கென்று மரியாய்
கும்பக் களிறட்ட கோவே கொடுங்கஞ்சன் நெஞ்சினிற் கூற்றே
செம்பொன் மதிள்வெள் ளறையாய் செல்வத்தி னால்வளர் பிள்ளாய்
கம்பக் கபாலிகா ணங்குக் கடிதோடிக் காப்பிட வாராய் (அ)

(உன் குண சேஷ்டிதங்களால்)
இன்பம் அதனை—பரமாநந்தத்தை
உயர்த்தாய்—(எனக்கு) மேன்மேலுண்டாக்[கினவனே!
இமையவர்க்கு—தேவர்களுக்கு
என்றும்—எந்நாளும்
அரியாய்—அருமையானவனே!
கும்பம்—மஸ்தகத்தையுடைய
களிறு—குவலயா பீடத்தை
அட்ட—கொன்ற
கோவே—ஸ்வாமியே!
கொடு—கொடுமை தங்கிய
கஞ்சன்—கம்ஸனுடைய
நெஞ்சினில்—மநஸ்ஸிலே
கூற்றே—யமன்போல் பயங்கரனாய்த் தோ[ன்றுமவனே!
செம்பொன் மதிள் வெள்ளறையாய்!—;
செல்வத்தினால் வளர் — செல்வச் செருக்கோடு வளர்கின்ற
பிள்ளாய்—குழந்தாய்!
அங்கு—நீ இருக்கிறவிடத்தில்
கம்பம்—(கண்டார்க்கு) நடுக்கத்தை விளைக[கவல்ல
கபாலி காண்—துர்க்கையாகும்;
(ஆகையால் அங்குநில்லாமல்)
கடிது ஓடி—மிகவும் விரைந்தோடி
காப்பு இட வாராய்—.

குறிப்பு:—கபாலி-ருத்ரனென்றுமாம். இனி, உடம்பு நிறையச் சாம்பல் பூசி எலும்புகளை மாலையாகக்கட்டி யணிந்து கையிற் கபாலங்கொண்டு பிச்சையெடுப்பவர் இரவிற் பிச்சையெடுத்துத்திரிவது முற்காலத்தியற்கையாதலால் அப்படிவந்தவர்களை 'கபாலி' என்றதாகவுமாம் அப்படி யிருப்பவர்களைக்கண்டு குழந்தைகள் அஞ்சுமிறே. கம்பம்—கூம்; நடுக்கம். (அ)

இருக்கொடு நீர்சங்கிற் கொண்டிட் டெழில்மறை யோர்வந்து நின்றார்
தருக்கேல் நம்பிசந் தி நின்று தாய்சொல்லுக் கொள்ளாய் சிலநாள்
திருக்காப்பு நானுன்னைச் சாத்தத் தேசுடை வெள்ளறை நின்றாய்
உருக்காட்டு மந்தி விளக்கின் றொளிகொள்ள வேற்றுகேன் வாராய். (கூ)

இருக்கொடு- (புருஷஸூக்தம்முதலிய) ருக்[குக்களைச் சொல்லிக்கொண்டு
நீர் - தீர்த்தத்தை
சங்கில் - சங்கத்திலே
கொண்டிட்டு - கொணர்ந்து
எழில் - விலக்ஷணரான
மறையோர் - ப்ராஹ்மணர்
(உனக்கு ரக்ஷையிடுவதற்கு)
வந்து நின்றார் - வந்துநிற்கிறார்கள்;
நம்பி - தீம்புநிறைந்தவனே!
சந்தி நின்று - நாற்சந்தியிலேநின்று
தருக்கேல் - செருக்கித்திரியாதே;
சில நாள் - சிலகாலம்
தாய் சொல்லு - தாய்வார்த்தையை
கொள்ளாய் - கேட்பாயாக;
தேசு உடை - தேஜஸ்ஸையுடைய
வெள்ளறை நின்றாய்!—;
இன்று - இப்போது
நான் - நான்
திரு காப்பு - அழகிய ரக்ஷையை
உன்னை சாத்த - உனக்கு இடுதற்காக
உரு காட்டும் அந்திவிளக்கு — உன் திருமேனிவடிவத்தைக்காட்டுகின்ற அந்திவிளக்[கை
ஒளி கொள்ள - ஒளியையுடையதாக
ஏற்றுகேன் - ஏற்றுவேன்;
(இதைக்காண)
வாராய்-கடுக வருவாயாக,

குறிப்பு:—இக்காலத்திலும் விளக்கேற்றிக் குழந்தைகளுக்குச் சுழற்றுதல் வழக்கமாயிருப்பது காண்க. ... ... ... (கூ)

போதமர் செல்வக் கொழுந்து புணர்திரு வெள்ளறை யானை
மாதர்க் குயர்ந்த வசோதை மகன்றன்னைக் காப்பிட்ட மாற்றம்
வேதப் பயன்கொள்ள வல்ல விட்டுசித் தன்சொன்ன மாலை
பாதப் பயன்கொள்ள வல்ல பத்தருள் ளார்வினை போமே (க0)

மாதர்க்கு உயர்ந்த - ஸ்திரீகளுள் சிறந்த
அசோதை - யசோதைப்பிராட்டி
மகன் தன்னை - தன் புத்ரனை கண்ணனை
காப்பு இட்ட - ரக்ஷையிட அழைத்த
மாற்றம் - வார்த்தையை
போது அமர் - தாமரைப்பூவைப் (பிறப்பிடமாகப்) பொருந்திய
செல்வம் கொழுந்து - செல்வத்திற்கு உரியவளாய் மற்றைத்தேவியரிற்சிறந்தவளான பிராட்டி
புணர் - ஸம்ச்லேஷிக்கப்பெற்ற
திருவெள்ளறையானை - திருவெள்ளறையில் நின்றருளியவனைப்பற்றி,—
(எம்பெருமானுக்கு மங்களா சாஸநம் செய்கையையே)
வேதம் பயன் - வேததாத்பர்யமாக
கொள்ள வல்ல - அறிபவல்ல
விட்டுசித்தன் - பெரியாழ்வார்
சொன்ன - அருளிச்செய்த
மாலை - பாமாலையினுடைய
பாதம் பயன் - ஓரடிகற்றதனாலாகியபயனை
கொள்ள வல்ல - அடையவல்ல
பத்தர் உள்ளார் - பக்தராகஉள்ளவரது
வினை - வினைகளெல்லாம்
போம் - கழிந்துவிடும்

குறிப்பு:—ஒருபாசுரத்தின் ஓரடிக்கு இத்துணைமஹிமை கூறியமுகத்தால் இத்திருமொழியின்பயன் அளவிட்டுச்சொல்லமுடியாதென்பதைக்கைமுதிகந்யாயத்தால் பெறவைத்தார். [பாதப்பயனித்யாதி.] ஒவ்வொருபாட்டின் கடைசிப்பாதத்தில் கூறியுள்ள காப்பிடலாகிய புருஷார்த்தத்தைக் கைக்கொள்ளக்கடவ பக்தர்களுடைய பாபங்கள் தீருமென்று முரைக்கலாம். ... ... ... ... ... (க0)

அடி:— இந்திரன் கன்று செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளம் இன்பம் இருக்கு போதமர் வெண்ணெய்விழுங்கி.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று



## ஒன்பதாந்திருமொழி

## வெண்ணெய்விழுங்கி.

---

**அவதாரிகை:**—யசோதைப்பிராட்டி கண்ணபிரானை நீராட்டிக்குழல்வாரிப் பூச்சூட்டிக் காப்பிட்டுத் தன்பக்கத்தில் படுக்கவைத்துத் தானுமுறங்கிப் பின்புவிடிய எழுந்திருந்து வீட்டுவேலைகளைப்பார்க்கப்போக, கண்ணபிரான் தானுமெழுந்திருந்து ஊரார் வீட்டிலேபுகுந்து வெண்ணெயை விழுங்குவதும் பாத்ரத்தையுடைப்பதும் பக்ஷ்யங்களைப் பக்ஷிப்பதும் காய்ச்சின பாலைச் சாய்த்துப் பருகுவதும் சிறுபெண்களின் கைவளைகளைக் கழற்றி நாவற்பழம்வாங்குவதுமாகத் தீம்புகளைச்செய்ய, அவ்வந்தவீட்டிலுள்ளார்வந்து யசோதையிடத்தில் கண்ணனுடைய அச்செய்கைகளைப்பற்றி முறையிடுவதையும் அவ்வப்போது யசோதைப்பிராட்டி கண்ணனைப் பலவாறாகச்சொல்லியழைப்பதையும் ஆழ்வார் அவ்வவர்களின் தன்மையைத் தம்மேலேறிட்டுக்கொண்டு பேசி இனியராகிறார் இத்திருமொழியில். ... ... ... ... ...

**வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடை யிட்டத னோசைகேட்குங்**
**கண்ண பிரான்கற்ற கல்விதன்னைக் காக்ககில் லோமுன் மகனைக்காவாய்**
**புண்ணிற் புளிப்பெய்தா லொக்குந்தீமை புரைபுரை யாலிவை செய்யவல்ல**
**அண்ணற்கண் ணானோர் மகனைப்பெற்ற அசோதைநங் காயுன் மகனைக்கூவாய்.**

வெண்ணெய்—வெண்ணெயை
விழுங்கி—(நிச்சேஷமாக) விழுங்கிவிட்டு
வெறுங் கலத்தை—(பின்பு) ஒன்றுமில்லாத பாத்ரத்தை
வெற்பிடை இட்டு—கல்லிலே போகட்டு
அதன் ஓசை—அப்படி எறிந்ததனாலுண்டான ஓசையை
கேட்கும்—கேட்டுக் களிக்கின்ற
கண்ண பிரான்— ஸ்ரீக்ருஷ்ணப்ரபு
கற்ற—படித்துள்ள
கல்வி தன்னை—(தஸ்கர) வித்தையை
காக்க கில்லோம்—(எங்களால்) காக்கமுடியாது;
(ஆகையால்)
உன் மகனை—உன் பிள்ளையை
காவாய்—(தீம்பு செய்யாமல்) தடுப்பாயாக;
புண்ணில்—புண்ணின் மேலே
புளி பெய்தால் ஒக்கும்—புளியைச்சொரிந்ததைப் போன்ற [தீவ்ரமான]
தீமை இவை - இப்படிப்பட்ட தீம்புகளை
புரை புரை - வீடுதோறும்
செய்ய வல்ல - செய்வதில்ஸமர்த்தனாகி
அண்ணல் கண்ணான் - ஸ்வாமித்வஸூசகமான கண்களையுடையனான
ஓர் மகனை - ஒருபுத்திரனை
பெற்ற - பெற்ற
அசோதை நங்காய் - யசோதைப்பிராட்டீ!
உன் மகனை - உன்பிள்ளையை
கூவாய் - அழைத்துக்கொள்வாயாக.

**குறிப்பு:**—இவ்வாறு ஒரு இடைச்சி யசோதையிடம்வந்து முறையிடுகின்றாள். புண்ணில் புளியையிட்டால் பொறுக்க முடியாதே. புரை-வீடு; ஆல்-அசை. அண்ணற்கு அண்ணான் என்று பிரித்து, அண்ணனாகிய பலராமனுக்கு, அண்ணியனாகாதவன்—குணத்தினாலொவ்வாதவனென்று முரைக்கலாம்; "தன்னம்பிநம்பியு மிங்குவளர்ந்தது அவனிவை செய்தறியான்" என்றதுகாண்க; அண்ணான்—எதிர்மறைவினையாலணையும்பெயர். அண்ணல்-ஆண்பாற் சிறப்புப் பெயர். ... ... ... (க)

வருக வருக வருகவிங்கே வாமன நம்பீ வருகவிங்கே
கரிய குழற்செய்ய வாய்முகத்துக் காகுத்த நம்பீ வருகவிங்கே
அரிய னிவனெனக் கின்றுநங்கா யஞ்சன வண்ணு வசலகத்தார்
பரிபவம் பேசத் தரிக்ககில்லேன் பாவியே னுக்கிங்கே போதராயே. (உ)

இங்கே - இவ்விடத்திலே
வருகவருக வருக - சடக்கென வருவாயாக;
வாமன நம்பீ! இங்கே வருக—;
கரிய குழல் - கருநிறமான கூந்தலையும்
செய்ய வாய்—செந்நிறமான வாயையும்
முகத்து - (ஒப்பற்ற) முகத்தையுமுடைய
காகுத்த நம்பீ - இராமமூர்த்தி!
இங்கே வருக—;
(என்று கண்ணனையழைத்து, தன்பிள்ளை மேல்குற்றம் சொன்னவளை நோக்கியசோதை)
நங்காய் - குணபூர்ணையானவளே!
இவன் இந்தப்பிள்ளை
எனக்கு - எனக்கு
இன்று—இப்போது
அரியன் - அருமையானவனாயிற்றே;
(என்றுசொல்லி, மீண்டும் கண்ணனை நோக்கி)
அஞ்சனம் - மைபோன்ற
வண்ணு - வடிவுபடைத்தவனே!
அசல் அகத்தார் - அசல்வீட்டுக்காரர்கள்
பரிபவம் பேச-(உன்மேல்) அவமானகரமான சொற்களைச்சொன்னால்
தரிக்க கில்லேன் - பொறுக்கவல்லேனல்லேன்;
பாவியேனுக்கு—(இப்படி பரிபவங்களைக்கேட்கும்படியான) பாபத்தைப்பண்ணின எனக்கு
(இவ்வருத்தந்தீர)
இங்கே போதராய் - இங்கேவாராய்.
[என்று யசோதை கண்ணனையழைக்கிருள்.]

குறிப்பு:—வருக வருக வருக-விரைவுப் பொருளில் மும்முறைவந்த அடுக்கு. கரிய குழற் செய்ய வாய்—முரண்தொடை; "சொலினும் பொருளினும் மாறுதல் முரணே." காகுத்தன்—காகுத்ஸ்தஃ; ககுத்ஸ்தஸ்யாபத்யம் புமாந் காகுத்ஸ்தஃ. ஒருதுவடிவங்கொண்ட இந்திரனுடைய முசுப்பின்மேலேறி யுத்தத்துக்குச் சென்றதனால், அவ்வரசனுக்குக் ககுத்ஸ்தனெனப் பெயர் வழங்கிற்று; ககுத்-முசுப்பு; ஸ்தன்—(அதில்) இருப்பவன். பாவியேனுக்கென்றது-வெறுப்பினால். அரியன்—நியமநத்துக்கு உட்படிந்து நடக்கமாட்டாதவன் என்றவாறு. பரிபவம்-வடசொல. ... ... (உ)

திருவுடைப் பிள்ளைதான் றீயவாறு தேக்கமொன் றுமிலன் றேசுடையன்
உருகவைத் தகுடத் தொடுவெண்ணெ யுறிஞ்சி யுடைத்திட்டுப் போந்துநின்று
னருகிருந் தார்தம்மை யநியாயஞ் செட்வது தான்வழக் கோவசோதாய்
வருகவென் றுன்மகன் றன்னைக்கூவாய் வாழவொட்டான்மது சூதனனே (௩)

திரு உடை பிள்ளை தான் - உன்செல்வப்பிள்ளையாகிய கண்ணன்
தீய ஆறு - தீம்பு செய்யும் வழியில்
ஒன்றும் தேக்கம் இலன் - சிறிதும் தாமஸிப்பதில்லை,
தேசு உடையன் - (அதைத்தனக்குப்)புகழாகக்கொண்டிராநின்றான்;
(இவன் செய்ததென்ன வென்றால்;—)
உருக வைத்த - உருகுவதற்காக (அடுப்பில் நான்) வைத்திருந்த
வெண்ணெய் - வெண்ணெயை
குடத்தொடு-தாழியோடே [நிச்சேஷமாக]
உறிஞ்சி - உறிஞ்சிவிட்டு
உடைத்திட்டு - தாழியையுமுடைத்துப் போகட்டு
(பிறகு, தான் உடையாதவன்போல்)

போந்து நின்றான்- அவ்வருகேவந்து நில்லாநின்றான்;
அசோதாய் - யசோதையே!
அருகு இருந்தார் தம்மை } உன்வீட்டருகே இருந்தவர்களை
அநியாயம் செய்வது - இஷ்டப்படி அக்ரமஞ்செய்வது
வழக்கோதான் - ந்யாயமாகுமோ?
(நீ)
உன் மகன் தன்னை - உன்பிள்ளையை
வருக என்று - 'வா' என்று சொல்லி
கூவாய் - அழைக்கவேணும்;
(நீ அழைத்துக்கொள்ளாவிட்டாலோ)
மதுசூதனன் - இக்கண்ணபிரான்
வாழ ஒட்டான் - (எங்களைக்) குடிவாழ்ந்திருக்கவொட்டான்.

குறிப்பு:—தேசு—தேஜஸ்; இங்கு புகழ்என்றபொருளைத்தந்தது. "உறிச்சி" என்றும் பாடமென்பர். ... ... ... ... (கூ)

கொண்டல்வண் ணாவிங்கே போதராயே கோயிற்பிள் ளாயிங்கே போதராயே
தெண்டிரை சூழ்திருப் பேர்க்கிடந்த திருநா ரணாவிங்கே போதராயே
உண்டுவந் தேனம்ம மென்றுசொல்லி யோடி யகம்புக வாய்ச்சிதானுங்
கண்டெதி ரேசென் றெடுத்துக்கொள்ளக் கண்ண பிரான்கற்ற கல்விதானே.

கொண்டல் - காளமேகம்போன்ற
வண்ணா - வடிவையுடையவனே!
இங்கே போதராய் - இங்கேவாராய்;
கோயில்.திருவரங்கத்தில்வஸிக்குறவனான
பிள்ளாய் - பிள்ளையே!
இங்கே போதராய்—;
தெள் திரை சூழ் - தெளிவான அலையையுடைய ஜலத்தால் சூழப்பட்ட
திருப்பேர்—திருப்பேர் நகரிலே
கிடந்த—பள்ளிகொண்டிராநின்ற
திரு நாரணா—ஸ்ரீமந்நாராயணனே!
இங்கே போதராய்—இங்கே வாராய்;
(இப்படி அம்மமுண்கைக்காகப் புகழ்ந்தழைத்த யசோதையினருகிற் கண்ணபிரான் வந்து)
அம்மம்—'உணவை
உண்டு வந்தேன் – (நான்) உண்டுவந்தேன்
என்று சொல்லி—என்றுசொல்லி
ஓடி—ஓடி வந்து
அகம் புக—அகத்தினுள்ளே புகுர,
ஆய்ச்சி தானும்—தாயான யசோதையும்
கண்டு—கண்ணன்வந்த வழகையும் அவன்முகமலர்த்தியையும்) கண்டு (மகிழ்ந்து)
எதிரே சென்று—எதிர்கொண்டு போய்
எடுத்துக்கொள்ள—(அவனைத் தன் இடுப்பில்) எடுத்துக் கொள்ளும்படி
கண்ணபிரான்—(அந்த) ஸ்ரீகிருஷ்ணன்
கற்ற—(தானாகவே) கற்றுக் கொண்ட
கல்வி தானே—கல்வியின் பெருமை யிருந்தவாறு என்னே!
[என்று ஆழ்வார் இனியராகிறார்].

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் "வருகவென்றுன் மகன்றன்னைக் கூவாய்" என்று சில ஆய்ச்சிகள் முறையிட்டவாறே யசோதைப் பிராட்டி கண்ணபிரானைப் பலபடியாகப் புகழ்ந்தழைக்க, அவன் தன் மகிழ்ச்சி தோற்ற "அம்மமுண்டுவந்தேன்காண்!" என்று சொல்லி ஓடிவந்து அகத்தினுள்ளேபுகுர, அய்யசோதை அவன்வந்த அழகையும் முகமலர்த்தியையுங் கண்டுமகிழ்ந்து அக்கண்ணபிரானை எதிர்கொண்டு சென்று அவனைத்தன் இடுப்பிலேற்றி அணைத்துக்கொண்டவாற்றை ஆழ்வார் அநுஸந்தித்து 'இவ்வகையான பரிமாற்றத்தைப் பெறும்படி கண்ணன் கற்றகல்வியு மொன்றே!' என்று வியக்கின்றனர். அன்றிக்கே, முன்னிரண்டடியும் பின்னிரண்டடியும் நன்கு பொருந்துமாறு தாயான யசோதைதானே வியக்கின்றாளென்று உரைத்தலும் உரித்தென்க; அப்போது "ஆய்ச்சிதானுங்கண்டெதிரேசென்

வருக வருக வருகவிங்கே வாமன நம்பீ வருகவிங்கே
கரிய குழற்செய்ய வாய்முகத்துக் காகுத்த நம்பீ வருகவிங்கே
அரிய னிவனெனக் கின்றுநங்கா யஞ்சன வண்ணா வசலகத்தார்
பரிபவம் பேசத் தரிக்ககில்லேன் பாவியே னுக்கிங்கே போதராயே. (உ)

இங்கே - இவ்விடத்திலே
வருகவருக வருக } சடக்கென வருவாயாக;
வாமன நம்பீ! இங்கே வருக—;
கரிய குழல் - கருநிறமானகூந்தலையும்
செய்ய வாய்—செந்நிறமானவாயையும்
முகத்து - (ஒப்பற்ற) முகத்தையுமுடைய
காகுத்த நம்பீ. இராமமூர்த்தி!
இங்கேவருக—;
(என்றுகண்ணனையழைத்து,
தன்பிள்ளை மேல்குற்றம் சொன்னவளை
நோக்கியசோதை)
நங்காய் - குணபூர்ணையானவளே!
இவன் இந்தப்பிள்ளை
எனக்கு - எனக்கு
இன்று—இப்போது
அரியன் - அருமையானவனாயிற்றே;
(என்றுசொல்லி, மீண்டும் கண்ணனை
நோக்கி)
அஞ்சனம் - மைபோன்ற
வண்ணா - வடிவுபடைத்தவனே!
அசல் அகத்தார் - அசல்வீட்டுக்காரர்கள்
பரிபவம் பேச-(உன்மேல்) அவமானகரமான சொற்களைச்சொன்னால்
தரிக்க கில்லேன் - பொறுக்கவல்லேனல்லேன்;
பாவியேனுக்கு—(இப்படி பரிபவங்களைக்கேட்கும்படியான) பாபத்தைப்பண்ணினவெனக்கு
(இவ்வருத்தந்தீர)
இங்கே போதராய் - இங்கேவாராய்.
[என்று யசோதை கண்ணனையழைக்கிறாள்.]

குறிப்பு:—வருக வருக வருக-விரைவுப் பொருளில் மும்முறைவந்த அடுக்கு. கரிய குழற் செய்ய வாய்—முரண்தொடை; "சொலினும் பொருளினும் மாறுதல் முரணே." காகுத்தன்—காகுத்ஸ்த; ககுத்ஸ்தஸ்யாபத்யம் புமாந் காகுத்ஸ்த:. எருதுவடிவங்கொண்ட இந்திரனுடைய முசுப்பின்மேலேறி யுத்தத்துக்குச் சென்றதனால், அவ்வரசனுக்குக் ககுத்ஸ்தனெனப் பெயர் வழங்கிற்று; ககுத்-முசுப்பு; ஸ்தன்—(அதில்) இருப்பவன். பாவியேனுக்கென்றது-வெறுப்பினால். அரியன்—நியமத்துக்கு உட்படிந்து நடக்க மாட்டாதவன் என்றவாறு. பரிபவம்-வடசொல. ... ... (உ)

திருவுடைப் பிள்ளைதான் றீயவாறு தேக்கமொன் றுமிலன் றேசுடையன்
உருகவைத் தகுடத் தோடுவெண்ணெ யுறிஞ்சி யுடைத்திட்டுப் போந்துநின்று
னருகிருந் தார்தம்மை யநியாயஞ் செட்வது தான்வழக் கோவசோதாய்
வருகவென் றுன்மகன் றன்னைக்கூவாய் வாழவொட்டான்மது சூதனனே (ங)

திரு உடை பிள்ளை தான் } உன்செல்வப்பிள்ளையாகிய கண்ணன்
தீய ஆறு - தீம்பு செய்யும் வழியில்
ஒன்றும் தேக்கம் இலன் } சிறிதும் தாமஸிப்பதில்லை,
தேசு உடையன் - (அதைத்தனக்குப்)புகழாகக்கொண்டிராநின்றான்;
(இவன் செய்ததென்னவென்றால்;—)
உருக வைத்த- உருகுவதற்காக (அடுப்பில் நான்) வைத்திருந்த
வெண்ணெய் - வெண்ணெயை
குடத்தொடு-தாழியோடே [நிச்சேஷமாக]
உறிஞ்சி - உறிஞ்சிவிட்டு
உடைத்திட்டு - தாழியையுமுடைத்துப் போகட்டு
(பிறகு, தான் உடையாதவன்போல்)

போந்து நின்றான் - அவ்வருகேவந்து நில்லாநின்றான்;
அசோதாய் - யசோதையே!
அருகு இருந்தார் தம்மை - உன்வீட்டருகே இருந்தவர்களை
அநியாயம் செய்வது - இஷ்டப்படி அக்ரமஞ்செய்வது
வழக்கோதான் - ந்யாயமாகுமோ?
(நீ)
உன் மகன் தன்னை - உன்பிள்ளையை
வருக என்று - 'வா' என்று சொல்லி
கூவாய் - அழைக்கவேணும்;
(நீ அழைத்துக்கொள்ளாவிட்டாலோ)
மதுசூதனன் - இக்கண்ணபிரான்
வாழ ஒட்டான் - (எங்களைக்) குடிவாழ்ந்திருக்கவொட்டான்.

குறிப்பு:—தேசு—தேஜஸ்; இங்கு புகழ்என்றபொருளைத்தந்தது. "உறிச்சி" என்றும் பாடமென்பர். ... ... ... ... (கூ)

கொண்டல்வண் ணாவிங்கே போதராயே கோயிற்பிள் ளாயிங்கே போதராயே
தெண்டிரை சூழ்திருப் பேர்க்கிடந்த திருநா ரணாவிங்கே போதராயே
உண்டுவந் தேனம்ம மென்றுசொல்லி யோடி யகம்புக வாய்ச்சிதானுங்
கண்டெதி ரேசென் றெடுத்துக்கொள்ளக் கண்ண பிரான்கற்ற கல்விதானே.

கொண்டல் - காளமேகம்போன்ற
வண்ணா - வடிவையுடையவனே!
இங்கே போதராய் - இங்கேவாராய்;
கோயில் - திருவரங்கத்தில்வாழ்கிறவனான
பிள்ளாய் - பிள்ளையே!
இங்கே போதராய்—;
தெள் திரை சூழ் - தெளிவான அலையையுடைய ஜலத்தால் சூழப்பட்ட
திருப்பேர் - திருப்பேர் நகரிலே
கிடந்த - பள்ளிகொண்டிராநின்ற
திரு நாரணா - ஸ்ரீமந்நாராயணனே!
இங்கே போதராய் - இங்கே வாராய்;
(இப்படி அம்ம முண்கைக்காகப் புகழ்ந்தழைத்த யசோதையினருகிற் கண்ணபிரான் வந்து)
அம்மம் - 'உணவை
உண்டு வந்தேன் - (நான்) உண்டுவந்தேன்
என்று சொல்லி - என்றுசொல்லி
ஓடி - ஓடி வந்து
அகம் புக - அகத்தினுள்ளே புகுர,
ஆய்ச்சி தானும் - தாயான யசோதையும்
கண்டு - கண்ணன்வந்த வகையையும் அவன் முகமலர்த்தியையும்) கண்டு (மகிழ்ந்து)
எதிரே சென்று - எதிர்கொண்டு போய்
எடுத்துக்கொள்ள - (அவனைத் தன் இடுப்பில்) எடுத்துக் கொள்ளும்படி
கண்ணபிரான் - (அந்த) ஸ்ரீகிருஷ்ணன்
கற்ற - (தானாகவே) கற்றுக் கொண்ட
கல்வி தானே - கல்வியின் பெருமை யிருந்தவாறு என்னே!
[என்று ஆழ்வார் இனியராகிறார்].

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் "வருகவென்றுன் மகன்றன்னைக் கூவாய்" என்று சில ஆய்ச்சிகள் முறையிட்டவாறே யசோதைப் பிராட்டி கண்ணபிரானைப் பலபடியாகப் புகழ்ந்தழைக்க, அவன் தன் மகிழ்ச்சி தோற்ற "அம்மமுண்டுவந்தேன்காண்!" என்று சொல்லி ஓடிவந்து அகத்தினுள்ளேபுகுர, அவ்யசோதை அவன்வந்த அழகையும் முகமலர்த்தியையுங் கண்டுமகிழ்ந்து அக்கண்ணபிரானை எதிர்கொண்டு சென்று அவனைத்தன் இடுப்பிலேற்றி அணைத்துக்கொண்டவாற்றை ஆழ்வார் அநுஸந்தித்து 'இவ்வகையான பரிமாற்றத்தைப் பெறும்படி கண்ணன் கற்றகல்வியு மொன்றே!' என்று வியக்கின்றனர். அன்றிக்கே, முன்னிரண்டடியும் பின்னிரண்டடியும் நன்கு பொருந்துமாறு தாயான யசோதைதானே வியக்கின்றாளென்று உரைத்தலும் உரித்தென்க; அப்போது "ஆய்ச்சிதானுங்கண்டெதிரேசென்

றெடுத்துக்கொள்ள'' என்றது—தன்செயலைப் பிறர் சொல்லுமாபோலே தானேசொன்னபடி யெனக்கொள்க. கண்ணன் முன்புசெய்த தீமைகளைத் தாயாகிய தான்மறந்துவிட்டு அவனை யெதிர்சென் றெடுத்துக்கொள்ளும்படி அவன்பண்ணின விசித்திரத்தில் ஈடுபட்டு 'இப்பருவத்திலே இவன் இவ்வளவு விரகனுவதே!' என்று தன்னில்தான் புகழ்ந்து மகிழ்ந்து பொலிகின்றுளென்க. கோயில்-இத்திருநாமம் திருவரங்கத்தின்மேல் வழங்குவது ஸம்ப்ரதாயம். திருப்பேர்-இது சோழநாட்டுத்திருப்பதிகள் நாற்பதிலொன்று. நன்னூலில் "ஒருபொருள்மேற்பல பெயர்வரினிறுதி, ஒருவினைகொடுப்ப தனியுமோரோவழி" என்றபடி இப்பாட்டில் 'கொண்டல்வண்ணன்' 'கோயிற்பிள்ளை' 'திருநாரணன்' என்பன கண்ணனென்னும் ஒருபொருளேயென்பது தெளியநின்றதனால், பெயர்தோறும் 'போதராய்' என ஒருவினைகொடுக்கப்பட்டது. ... ... ... ... ... (ச)

பாலைக் கறந்தடுப் பேறவைத்துப் பல்வளை யாளேன் மகளிருப்ப
மேலை யகத்தே நெருப்புவேண்டிச் சென்றிறைப் பொழுதங்கே பேசிநின்றேன்
சாளக் கிராம முடையநம்பி சாய்த்துப் பருகிட்டுப் போந்துநின்றான்
ஆலைக் கரும்பின் மொழியனைய வசோதைநங் காயுன் மகனைக்கூவாய். (ரு)

ஆலை கரும்பு அனைய } ஆலையிலிட்டு ஆடும்படிமுதிர்ந்த கரும்பைப் போன்ற
இன் மொழி-மதுரமான மொழியையுடைய
அசோதை நங்காய்—யசோதைப்பிராட்டீ
பல் வளையாள்-பலவகைவளைகளை அணிந்துள்ள
என் மகள்—என் மகளானவள்
பாலை கறந்து – பாலை (ப்பாத்திரங்களில்) கறந்தெடுத்து
(அப்பாத்திரங்களை)
அடுப்பு ஏற வைத்து } அடுப்பின் மேலேற்றி வைத்து
இருப்ப—(அவற்றுக்குக் காவலாக) இருக்க,
(நான்)
நெருப்பு வேண்டி—(அவற்றைக் காய்ச்சுவதற்காக) நெருப்பெடுத்துவர விரும்பி
மேலை அகத்தே சென்று } மேலண்டை வீட்டிற்குப்போய்
அங்கே—அவ்விடத்தில்
இறைப் பொழுது—க்ஷணகாலம்
பேசி நின்றேன் - (அவர்களோடு) பேசிக்கொண்டிருந்து விட்டேன்;
(அவ்வளவிலே)
சாளக்கிராமம் உடைய } ஸ்ரீஸாளக்ராமத்தை (இருப்பிடமாக) உடையனாய்
நம்பி—ஒன்றுங் குறைவற்றவனான (உன் மகன்)
(என்மகளிருந்த விடத்திற் சென்று)
சாய்த்து—(அந்த க்ஷீரபாத்திரத்தைச்) சாய்த்து
பருகிட்டு—(அதிலிருந்த பாலை முழுதும்) குடித்து விட்டு
போந்து—(இப்புறத்தே) வந்து
நின்றான்—(ஒன்று மறியாதவன் போல) நில்லா நின்றான்;
(இனி இவன் எங்களகங்களில் இவ்வாறான தீமைகளைச் செய்யத் துணியாதபடி நீ சிக்ஷிப்பதற்காக)
உன் மகனை—உன் பிள்ளையான இவனை
கூவாய்—அழைத்துக் கொள்ள வேணும்.

குறிப்பு:—கண்ணபிரான் தன்தாய் வியக்கும்படி சிலசெய்கைகளைச் செய்து அவற்றால் அவளை மகிழ்வித்து, மீண்டும்பண்டுபோலப்பிறரகங்களிற் புகுந்துதீம்புகளைச்செய்ய, ஓராய்ச்சி யசோதை பக்கலிலேவந்து தன் அகத்தில்அவன் செய்ததீம்புகளைச்சொல்லி முறைப்படுகின்றனள். மேலையகம்-யசோதையின் அகத்துக்கு மேலண்டை வீடு என்க. மேற்கு + அகம், மேலை

யகம்; "திசையொடு திசையும் பிறவுஞ்சேரின்" என்ற நன்னூற் சூத்திரத்தினிறுதியில் 'பிற' என்ற மிகையை நோக்குக. பருகிட்டு-பருகி என்றபடி: இடுதுணைவினை. ... ... ... ... ... ... ... ... (ரு)

போதர்கண் டாயிங்கே போதர்கண்டாய் போதரே னென்னாதே போதர்கண்
ஏதேனுஞ் சொல்லி யசலகத்தா ரேதேனும் பேசநான் கேட்கமாட்டேன் [டாய்
கோது குலமுடைக் குட்டனேயோ குன்றெடுத் தாய்குட மாடுகூத்தா
வேதப் பொருளேயென் வேங்கடவா வித்தக னேயிங்கே போதராயே. (கூ)

கோதுகுலம் உடை-(எல்லாருடைய) கொண்டாட்டத்தையும் (தன்மேல்) உடைய
ஓ குட்டனே-வாராய் பிள்ளாய்!
குன்று-(கோவர்த்தநமென்னும்) மலையை
எடுத்தாய்-(குடையாக) எடுத்தவனே!
குடம் ஆடு கூத்தா } குடக் கூத்தாடினவனே!
வேதம்-வேதங்களுக்கு
பொருளே-பொருளாயிருப்பவனே!
என் வேங்கடவா-'என்னுடையவன்' என்று அபிமானிக்கும்படி திருமலையில் நிற்பவனே!
வித்தகனே-வியக்கத் தக்கவனே! (நீ)
(அசலகங்களிற் போக நினையாமல்)
இங்கே-என்னருகில்
போதர் கண்டாய் போதர் கண்டாய் } விரைந்து ஓடிவா;
(என்று யசோதை அழைக்க, அவன் 'வரமாட்டேன்' என்ன;)
போதரேன் என்னாதே } 'வரமாட்டேன்' என்று சொல்லாமல்
போதர் கண்டாய்-(இசைந்து)வருவாயாக
(என்று யசோதை வேண்டியழைக்க, கண்ணன் 'நீ இங்ஙனே வருந்தியழைப்பது ஏதுக்காக?' என்ன;)
அசல் அகத்தார்-அசல்வீட்டுக்காரர்கள்
ஏதேனும்-இன்னது என்று எடுத்துக்கூறவொண்ணாதபடியுள்ள சில கடுஞ்சொற்களை
சொல்லி-(உன்னை நோக்கித் தம்மிலேதாம்) சொல்லிக் கொண்டு
(அவ்வளவோடும் நில்லாமல்)
ஏதேனும்-(என்காதால் கேட்கவும்வாயாற் சொல்லவுமொண்ணாத சிலபழிப்புக்களை
பேச-(என்பக்கலிலே வந்து) சொல்ல
(அவற்றை)
நான்-(உன்மீது பரிவுள்ள) நான்
கேட்க மாட்டேன் - கேட்டுப் பொறுக்க மாட்டேன்;
(ஆதலால்,)
இங்கே போதராய்-(அவர்களின் வாய்க்கு இரையாகாமல்) இங்கே வருவாயாக
(என்றழைக்கிறாள்.)

குறிப்பு:—"அசோதை நங்காய் உன்மகனைக்கூவாய்" என்று கீழ்ப்பாட்டில் வேண்டினபடிக்கிணங்க அவள் தன்மகனை யழைக்கின்றாள். 'போதரு' என்கிறவிது போதர் என்று குறைந்து கிடக்கிறது; 'போ' என்னும் வினைப்பகுதி 'தா' என்னுந் துணைவினையைக் கொள்ளும்போது வருதல் என்ற பொருளைக்காட்டுமென்பர்: 'போதந்து' என்கிறவிது 'போந்து' எனமருவி, 'வந்து' என்னும் பொருளைத்தருதல் அறிக. கோதுகுலம்—'கௌதூஹலம்' என்றவடசொல்விகாரம்; 'கோதுகலம்' என்றும் சிறக்குமெனக: இங்கு, 'கோதுகுலமுடை'என்பதற்கு '(எல்லாருடைய) கௌதூஹலத்தை (த்தன் மேல) உடைய' என்று பொருளாய், எல்லாராலும் விரும்பத்தக்க [குணங்களையுடைய]வனே! என்றுகருத்தாம். இப்படி அனைவராலுங் கொண்டாடத்தக்கவனாயிருந்துவைத்து இன்று எல்லாராலும் பழிக்கப்படுவதே! என்றிரங்கி ஓ! என்கிறாள். குடமாடு கூத்தா—குடமெடுத்தாடின கூத்தையு

டையவனே! என்றபடி: குடக்கூத்தின்வகையைக் "குடங்களெடுத் தேற விட்டு" என்றபாட்டின் குறிப்புரையில் விரியக்காண்க. வேதப்பொருள்— வேதங்களாற் புகழ்ந்து கூறப்படுபவனென்று கருத்து. ... (கூ)

செந்நெ லரிசி சிறுபருப்புச் செய்தவக் காரம் நறுநெய்பாலால்
பன்னி ரண்டுதிரு வோணமட்டேன் பண்டுமிப் பிள்ளை பரிசறிவன்
இன்ன முகப்ப னென்றுசொல்லி யெல்லாம் விழுங்கிட்டுப் போந்துநின்றான்
உன்மகன் றன்னை யசோதைநங்காய் கூவிக்கோள் ளாயிவை யுஞ்சிலவே. (எ)

அசோதை நங்காய்!—;
செந் நெல் அரிசி—செந்நெல்லரிசியும்
சிறு பருப்பு—சிறு பயற்றம் பருப்பும்
செய்த—(சமையற் குறையொன்றும்நேராதபடி காய்ச்சித்திரட்டி நன்றாகச்) செய்த
அக்காரம்—கருப்புக் கட்டியும்
நறு நெய்—மணம் மிக்க நெய்யும்
பாலால்—பாலும் ஆகிற இவற்றாலே
பன்னிரண்டு திரு ஓணம்—பன்னிரண்டு திருவோணத் திருநாளளவும்
(நோன்புக்கு உறுப்பாகப் பாயஸபக்ஷணாதிகளை)
அட்டேன்—சமைத்தேன்;
பண்டும்—முன்பும்
இ பிள்ளை—இப்பிள்ளையினுடைய
பரிசு—ஸ்வபாவத்தை
அறிவன்—(நான்) அறிவேன்;
(இப்போதும் அப்படியே)
எல்லாம்—(திருவோண விரதத்திற்காகச் சமைத்தவற்றை) யெல்லாம்
விழுங்கிட்டு—(ஒன்றும் மிகாதபடி) விழுங்கிவிட்டு
(அவ்வளவிலும் திருப்தி பெறாமல்)
நான் இன்னம் உகப்பன் என்று சொல்லி—'நான் இன்னமும் உண்ணவேண்டியிராநின்றேன்' என்று சொல்லிக்கொண்டு
போந்து—(அவ்விடத்தைவிட்டுக் கடக்கவந்து
நின்றான்—(அந்யபரைப் போல) நில்லாநின்றான்;
(இனி இவ்வாறு தீமை செய்யாதபடி)
உன் மகன் தன்னை—உன்பிள்ளையான இக்கண்ணனை
கூவிக் கொள்ளாய்—(உன்னருகில்) அழைத்துக் கொள்வாயாக;
(பிள்ளைகளைத் தீம்புசெய்ய வொட்டாதபடி பேணி வளர்க்க வேண்டியிருக்க, அப்படி வளர்க்காமல்)
இவையும்—இப்படி வளர்ப்பதும்
சிலவே—சில பிள்ளைவளர்க்கையோ?.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் கண்ணபிரான் தாயால் வருந்தி யழைக்கப்பட்டும் அவள்பாற் செல்லாமல் வேறொருத்தியின்வீட்டிலேபுகுந்து, அவள் நோன்புக்கு உடலாகச் சமைத்துவைத்துள்ளவற்றை யடங்கலும் வாரி விழுங்கிவிட்டு வேற்றுப்பொருளில் நேடுதலுற்றவன்போல அபிநயித்துவெளியேவந்து நிற்க, இத்தீம்பைக்கண்ட அவள் ஆற்றமாட்டாமல் யசோதையருகில் வந்து முறைப்படுகின்றனள். அக்காரம்-திரட்டுப்பால் என்னலாம். [பன்னிரண்டு இத்யாதி.] ஒவ்வொரு திருவோணத்திருநாளிலும் வ்ரதாங்கமாகச் சமைக்கவேண்டியவற்றை அவ்வப்போதுகளில் சமைத்திடாமல்சக்திக்கேற்ப ஸாம்வத்ஸரிகவ்ரதங்கொண்டு அவ்வ்ரதநாளில் பன்னிரண்டு திருவோணங்களிலுஞ் சமைக்கவேண்டியவற்றைச் சேர்த்துச் சமைத்தேன் என்றுகருத்து. அட்டேன் = அடுதல் சமைத்தல் [பண்டு மித்யாதி.] வ்ரதாங்கமாக நாம் சமைக்கும் பக்ஷணாதிகளைத் தேவபூஜைக்கு முன்னமே இவன்

வாரிவிழுங்கிவிடுவன் என்பதை நான்பண்டே அறிவேன் என்றவாறு. 'இதுவும் ஒன்றே' என்று ஒருமையாகக் கூறாமல 'இவையுஞ்சிலவே' என்று பன்மையாகக் கூறினது-பிள்ளைவளர்க்கும் பரிசும் அவன் தீமைசெய்யுந் திறமும் நான்வந்து முறைப்படும் முறைமையுமெல்லாம் சால அழகியவாயிருக்கின்றன வென்ற கருத்தைக் காட்டும். ... ... (எ)

**கேசவ னேயிங்கே போதராயே கில்லேனென் ணுதிங்கே போதராயே**
**நேச மிலாதா ரகத்திருந்து நீவிளை யாடாதே போதராயே**
**தூசனஞ் சொல்லுந் தொழுத்தைமாருந் தொண்டரும் நின்ற விடத்தினின்றுந்**
**தாய்சொல்லுக் கொள்வது தன்மங்கண்டாய் தாமோ தராவிங்கே போதராயே**

கேசவனே—அழகிய குழலையுடையவனே!
இங்கே போதராய்—இங்கே வருவாயாக;
கில்லேன் என்னாது—'மாட்டேன்' என்று [மறுத்துச் சொல்லாமல்
இங்கே போதராய்—;
(என்று யசோதை யழைக்க, இங்கே சிறிது விளையாடி வருகிறேன் என்று கண்ணன் சொல்ல,)
நீ— நீ
நேசம் இலாதார்—(உன்மீது) அன்பில்லா [தவர்களுடைய
அகத்து இருந்து—அகங்களிலே இருந்து
விளையாடாதே—விளையாட் டொழிவது ம [ன்றி,
தூசனம் சொல்லும்—(உன்மேல்) பழிப்பு [க்களைச் சொல்லுகிற
தொழுத்தைமாரும் — (இடைச்சிகளுக்கு) [அடிச்சிகளானவர்களும்
தொண்டரும் (இடையர்க்கு) அடியரான [வர்களும்
நின்ற—நிற்கின்ற
இடத்தில் நின்றும்—இடங்களையுமொழித் [துவிட்டு
போதராய்—(இங்கே) வாராய்;
(என்று யசோதை சொல்லியும் அவன் வரக் காணாமையாலே,)
தாய் சொல்லு—தாய்வாய்ச் சொல்லை
கொள்வது—மேற்கொண்டு நடப்பது
தன்மம் கண்டாய்—(பிள்ளைகளுக்கு)தர்மங் [காண்;
(ஆதலால்)
தாமோதரா! இங்கே போதராய்.
[என்றழைக்கின்றாள்.]

குறிப்பு:—ஸ்நேஹம் என்ற வடசொல் 'நேசம்' என விகாரப்பட்டது. தூசனம்—தூஷணம். தொழுத்தைமார்— அடிமைப்பெண்கள்; இடைச்சிகளாகிலும் இடையர்களாகிலும் தாங்கள் நேராகப்பழிக்கில் வருந்திப் பொறுக்கலாயிருக்கும், ஒரு நாழிநெல்லுக்குத் தம் உடலையு முயிரையு மெழுதிக் கொடுத்துவிட்டு உழைக்கின்ற குக்கர் பேசும் பழிகளைப் பொறுக்கவொண்ணுதென்ற கருத்தைக் காண்க. தன்மம்—யாமம். [தாமோதரா] என்கயிறுண்டு, உன்வயிறுண்டு; அங்குநின்று பெறும்பேறு என்? என்பது உள்ளுறை. ... ... ... ... (அ)

**கன்ன லிலட்டுவத் தோடுசீடை காரெள்ளி லுண்டை கலத்திலிட் [டோந்தான்**
**டென்னகை மென்றுநான் வைத்துப்போந்தே னிவன்புக் கவற்றைப் பெறுத்திப்**
**பின்னு மகம்புக் குறியைநோக்கிப் பிறங்கொளி வெண்ணெயுஞ் சோதிக்கின்றுன்**
**னுன்மகன் றன்னை யசோதைநங்காய் கூவிக்கோள் ளாயிவை யுஞ்சிலவே.(கூ)**

அசோதை நங்காய்!—;
கன்னல்-கருப்புக் கட்டிப்பாகுடன்சேர்ந்த
இலட்டுவத்தோடு-'லட்டு' என்னும் பக்ஷ்ய[த்தோடு
சீடை-சீடையையும்
காரெள்ளில் உண்டை-காரெள் இட்டுவாரின எள்ளுண்டையையும்
கலத்தில்-(அவ்வவற்றுக்கு உரிய) பாத்தி[ரங்களிலே
இட்டு - நிறைத்து
என் அகம் என்று-'என் அகம் (ஆகையால் இங்குப்புகுவாரில்லை') என்று[நினைத்து
(விசேஷமாகக்காவலிடாமல்,)
வைத்து-(உறிகளிலே) வைத்துவிட்டு
நான் போந்தேன்-நான் (வெளியே) வந்[தேன்;
(அவ்வளவில்,)
இவன்-இப்பிள்ளையானவன்
புக்கு-(அவ்விடத்திலே வந்து) புகுந்து
அவற்றை-அப்பணியாரங்களை
பெறுத்தி-(நான்)பெறும்படிபண்ணி
போந்தான் — (ஒன்றுமறியாதவன்போல்[இவ்வருகே) வந்துவிட்டான்;
(அவ்வளவிலும் பர்யாப்திபிறவாமையால்)
பின்னும்- மறுபடியும்
அகம் புக்கு-(என்)வீட்டினுள்புகுந்து
உறியை நோக்கி—உறியைப் பார்த்து
(அதில்)
பிறங்கு ஒளிவெண்ணெயும் சோதிக்கின்றான்-மிகவும் செய்வினை உடைத்தான வெண்ணெய் உண்[டோ என்று ஆராயாநின்றான்;
(இச்சேஷ்டைகள் எனக்குப் பொறுக்கப்போகாமையால்,)
உன் மகன் தன்னை - உன் பிள்ளையாகிய[கண்ணனை
கூவிக்கொள்ளாய்-(உன்னருகில்வரும்படி)[அழைத்துக்கொள்;
இவையும்-(இப்படி இவனைத்தீம்பிலேகை[வளரவிட்டிருக்கிற) இவையும்
சிலவே-ஒருபிள்ளைவளர்க்கையோ?.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் கண்ணபிரான் யசோதையா லழைக்கப்பட்டும் வாராமல் மற்றொருத்திவீட்டிற் சென்று அங்குள்ள பக்ஷணங்களையெல்லாம் நிச்சேஷமாகத்தானே புஜித்து இவ்வகையானதீம்புகளைச்செய்ய, அவ்விடைச்சி யசோதைபக்கலிலேவந்து முறைப்படுகின்றனள். 'கன்னல்' என்கிறவிது மேற்சொல்லுகிறவை யெல்லாவற்றோடும் அந்வயிக்கக்கடவது. இலட்டுவம்—'லட்டுகம்' என்கிற பணியாரம்; 'இலட்டுகத்தோடு' என்றும், 'காரெள்ளினுண்டை' என்றும் பாடமுண்டாம். 'பெறுத்திப்போந்தான்' என்பது வ்யதிரேகோக்தி; பிறகுறிப்பு: அவற்றில் நானுஞ்சிலபெறும்படி சேஷப்படுத்தாமல் முழுவதையும் தானேவாரியுண்டானென்றுகருத்து. இப்பாட்டில் ஈற்றடிக்கு வேறுவகையாகவுங் கருத்துரைக்கலாம்; 'உன் மகன் றன்னைக் கூவிக்கொள்ளாய்' என்று அவ்விடைச்சி சொன்னவாறே, 'முச்சந்தியும் அவன்மேற் குற்றங்கூறிக்கதறுகையேயோ உங்களுக்குவேலை? சிறுபிள்ளைகள் இவ்வாறு செய்கை இயல்பன்றோ? உங்கள் பிள்ளைகள் உங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கின்றனவோ' என்று யசோதை அவளை வெறுத்துநிற்க, அதற்கு அவள் 'அவன் செய்தவற்றுக்குமேலே இவையும் சிலவே' என்று உள்வெதும்பி உரைக்கின்றனளென்க. ... ... (கூ)

சொல்லி லரசிப் படுதிநங்காய் சூழ லுடையனுன் பிள்ளைதானே
இல்லம் புகுந்தேன் மகளைக்கூவிக் கையில் வளையைக் கழற்றிக்கொண்டு
கோல்லையி னின்றுங் கொணர்ந்துவிற்ற வங்கொருத் திக்கவ் வளைகொடுத்து
நல்லன நாவற் பழங்கள்கொண்டு நானல்லே னென்று சிரிக்கின்றானே. (கo)

நங்காய்—யசோதைப்பிராட்டீ!
சொல்லில் - 'உன்மகன் செய்த தீமைகளை நாங்கள்) சொன்னால்
அரசிப்படுதி—(அதற்காகநீ) சீற்றங்கொள்ளாநின்றாய்;
உன் பிள்ளை தான்—உன்பிள்ளையோவென்றால்,
சூழல் உடையனே—(பற்பல) வஞ்சனச்செய்கைகளை உடையனாயிருக்கின்றானே;
(என்று ஓரிடைச்சி சொல்ல,
'அவன் என்ன தீமை செய்தான்?'
என்று யசோதை கேட்க;)
இல்லம் புகுந்து—(என் வீட்டினுள் புகுந்து
என் மகளை—என் பெண்ணை
கூவி—(பேர் சொல்லி) அழைத்து
கையில் வளையை—(அவளுடைய) கையிலிருந்த வளையை
கழற்றிக்கொண்டு—(பலாத்காரமாக) நீக்கிக்கொண்டு போய்,
கொல்லையில் நின்றும்—காடுகளில்நின்றும்
(நாவற்பழங்கள்)—நாவற்பழங்களை
கொணர்ந்து— (இடைச் சேரித்தெருக்களில்)கொண்டுவந்து
அங்கு—அவ்விடத்தில்
விற்ற—(அவற்றை)விற்பனை செய்யவுற்ற
ஒருத்திக்கு—ஒருபெண்பிள்ளைக்கு
அவ் வளை - அந்த (என்மகளுடைய) கைவளையை
கொடுத்து—கொடுத்து
(அதற்குப்பதிலாக)
நல்லன—(தனக்கு) நல்லவையாகத் தோற்றின
நாவல் பழங்கள்—நாவற்பழங்களை
கொண்டு - (அவளிடத்தில்) வாங்கிக்கொண்டு
(போரும் போராதென்று விவாதப்படுகிறவளவிலே, என்னைத்தன் அருகில் வரக் கண்டு, நான் ஒன்றுங் கேளாதிருக்கச் செய்தேயே)
நான் அல்லேன் என்று ('உன் மகளின திகைவளையைக் களவுகண்டவன்) நானல்லேன்' என்று சொல்லி,
(அவ்வளவில் தன்திருட்டுத்தனம் வெளியானதைத் தானே அறிந்துகொண்டு)
சிரிக்கின்றான்—'ஓ! மோசம்போனோமே!
(என்று) சிரியாநின்றான்,
[இதிலும் மிக்க தீமை உண்டோ என்கிறாள்.]

குறிப்பு:—'உன் மகன்றன்னைக் கூவிக்கொள்ளாய்' என்று ஒருத்தி சொல்லி வாய்மூடுவதற்குள் மற்றொருத்திவந்து கண்ணபிரான் தன்வீட்டிற் செய்த தீமைகளைச் சொல்லி முறைப்படுகின்றனள். [நானல்லேன் இத்யாதி.] நாவற்பழக்காரியின்கையில் வளையிருக்கக்கண்டு ' இவ்வளை உனக்கு வந்தது எப்படி? 'என்று இவள்கேட்க, அவள் ' இதை எனக்கு இவன் தந்தான்' என்று கண்ணனைக்காட்ட, இவள் 'நீயோ இவளுக்கு வளைகழற்றிக் கொண்டு கொடுத்தாய்? 'என்று கண்ணனைக்கேட்க, அதற்கு அவன் " நான் அல்லேன்காண், என்கையில் வளைகண்டாயோ? நான் உன்வீட்டிற் புகுந்ததைக் கண்டாயோ? உன் மகளைப் பேர்சொல்லியழைக்கக் கண்டாயோ? வந்து கையில் வளைகழற்றினது கண்டாயோ? கண்டாயாகில் உன்மகள் வளையை அப்போதே பிடுங்கிக்கொள்ளாவிட்டதென்?" என்றாற்போலச் சிலவார்த்தைகளைச்சொல்லி அவளை மறுநாக்கெடுக்கமுடியாதபடி பண்ணிச் சிரியாநின்றான் என்பது ஆன்றோர்கருத்து. ... ... ... (௧௦)

வண்டு களித்திரைக் கும்பொழில்சூழ் வருபுனற் காவிரித் தென்னரங்கன்
பண்டவன் செய்த கிரீடையெல்லாம் பட்டர் பிரான்விட்டு சித்தன்பாடல்
கொண்டிவை பாடிக் குனிக்கவல்லார் கோவிந்தன் றன்னடி யார்களாகி
எண்டிசைக் கும்விளக் காகிநிற்பா ரிணையடி யென்றலை மேலனவே. (௧௧)

வண்டு–வண்டுகளானவை
களித்து–(தேனைப்பருகிக்) களித்து
இரைக்கும்–ஆரவாரங்கள் செய்யப்பெற்ற
பொழில்–சோலைகளாலும்
வரு–(அச்சோலைகளுக்காகப்பெருகி)வாரா
புனல்–நீரையுடைத்தான [நின்றுள்ள
காவிரி–காவேரீநதியாலும்
சூழ்–சூழப்பெற்று
தென்–அழகிய
அரங்கன் அவன் } திருவரங்கத்தில் நித்யவாஸம் பண்ணுகிற வைபவத்தையு [டையனான அப்பெருமான்
பண்டு–(விபவமாகிய) முற்காலத்தில்
செய்த–செய்த
இரீடை எல்லாம்–லீலாசேஷ்டிதங்களெல் [லாவற்றையும் (விஷயமாகக்கொண்டு)
விட்டுசித்தன் பட்டர்பிரான் பாடல் } விஷ்ணுவைநெஞ்சிற்கொண்டவராய் பிராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் [பாடின) பாடலாகிய

இவை கொண்டு – இப்பாட்டுக்களை (அநுஸந்தேயமாகக்) கொண்டு
பாடி–(இப்பாசுரங்களைப்) பாடி
(அதனால் பக்தி மீதூர்ந்து உடம்பு
இருந்தவிடத்தில் இராமல்
விகாரமடைந்து)
குனிக்க வல்லார்–கூத்தாடவல்லவர்களாய்
கோவிந்தன் தன் அடியார்கள் ஆகி } கண்ணபிரானுக்கு அடியவர்களாய்
எண் திசைக்கும்–எட்டுத் திக்குக்களிலும் [(உள்ள இருள் நீங்கும்படி)
விளக்கு ஆகி நிற்பார் } (அத்திக்குக்களுக்கு) விளக்காக நிற்குமவர்களுடைய
இணை அடி–திருவடியிணைகளானவை
என் தலை மேலன–என்னுடைய முடியின் [மேல் வீற்றிருக்கத் தக்கவை.

குறிப்பு:—விட்டுசித்தன் = விஷ்ணௌ சித்தம் யஸ்ய ஸ: விஷ்ணுசித்த: என்க; இப்பிரபந்தத்தின் முடிவில் ஆழ்வார்தாமே "பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்தென், மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ—உனக்கிடமாயிருக்க வென்னை யுனக்குரித்தாக்கினையே" என்றும், "விட்டு சித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலனை" என்றும் அருளிச்செய்தாரிறே. இங்ஙனன்றி, 'விஷ்ணோ: சித்தம் யஸ்மிந் ஸ:' என்ற வ்யுத்பத்தியிற் சிறப்பின்மைகாண்க. [குனிக்கவல்லார்] திருவாய்மொழியில் "மொய்ம்மாம்பூம் பொழிற்பொய்கை" என்ற திருமொழியில் அருளிச்செய்தபடி. [இணையடி இத்யாதி.] இப்படிப்பட்ட பாகவதர்களின் திருவடிகளை என்சென்னியிற் சூடுவேன் என்று கருத்து. "என்தலைமேலவே" என்கிறபாடம் அத்துணைச் சிறவாமைகாண்க. ... ... ... ... (கக)

அடி:— வெண்ணெய் வருக திரு தொண்டல் பாலை போதர் செந்நெல் கேசவன் கன்னல் சொல்லில் வண்டு ஆற்றில்.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

## பத்தாந் திருமொழி

# ஆ ற் றி லி ரு ந் து.

**அவதாரிகை:**— கண்ணபிரானாலே நலிவுபட்ட பலபெண்பிள்ளைகள் யசோதைப் பிராட்டிபக்கலிலேவந்து 'ஸர்வரக்ஷகனாய் அவாப்தஸமஸ்தகாமனான இவன் எம்மை இன்று நலிந்தபடிகளை நினைத்தால் எங்களுக்குப் பிழைத்திருக்க விரகில்லை; இவனால் நாங்கள் முடியாநின்றோம்' என்று முறைப்பட்டபடியை ஆழ்வார்தாமும் தம்மை அவர்களாகப்பாவித்துத் தாமும் அப்படியேபேசி அக்கண்ணபிரானுடைய லீலாரஸத்தை அநுபவிக்கிறார் - இத்திருமொழியில். ... ... ... ... ...

ஆற்றி லிருந்து விளையாடு வோங்களைச்
சேற்றா லெறிந்து வளைதுகிற் கைக்கொண்டு
காற்றிற் கடியனா யோடி யகம்புக்கு
மாற்றமுந் தாரானா லின்றுமுற்றும் வளைத்திறம் பேசானா லின்றுமுற்றும்.

ஆற்றில் இருந்து—யமுனை யாற்றங்கரைமணலிலிருந்து கொண்டு
விளையாடுவோங்களை—விளையாடா நின்ற எங்கள் மேல்
சேற்றால் எறிந்து—சேற்றை யிட்டெறிந்து
வளை—(எங்களுடைய) கைவளைகளையும்
துகில்—புடவைகளையும்
கைக்கொண்டு—(தன்) கையால் வாரி யெடுத்துக் கொண்டு
காற்றில்—காற்றிலுங் காட்டில்
கடியன் ஆய்—மிக்க வேகமுடையவனாக
ஓடி—(அங்கு நின்றும்) ஓடிவந்து
அகம் புக்கு—(தன்) வீட்டினுள்ளே புகுந்து கொண்டு
(வாசலில் நின்று அவன்பேரைச் சொல்லிக் கூப்பிட்டுக் கதறுகின்ற எங்களைக் குறித்து)
மாற்றமும்—ஒரு வாய்ச்சொல்லும்
தாரானால்—அருளாமல் உபேக்ஷியா நின்ற பெருமானால்
இன்று முற்றும்—இப்போது முடியாநின்றோம்;
வளைத் திறம்—(தான் முன்புவாரிக்கொண்டு போன) வளையின் விஷயமாக
பேசானால் – (தருகிறேன், தருகிறிலேன் என்பவற்றில் ஒன்றையும்) வாய்விட்டுச்சொல்லாத அப் பெருமானால்
இன்று முற்றும்—.

குறிப்பு:—இவன் நினைத்தபடி தீம்பு செய்ய வொண்ணாதபடி பலருடைய போக்குவரத்துள்ள இடத்திலே நாங்களிருந்து விளையாடினால் அங்குந்தான் வந்து தீமைசெய்துவிட்டு ஓடிவந்து ஒளிந்துகொண்டதுமன்றியில் ஒருவார்த்தையும் சொல்லாதொழிகின்ற உன் பிள்ளையின் தீம்பு நிமித்தமாக நாங்கள் உயிரையிழக்கப் புகாநின்றோமென்று சில ஆய்ப்பெண்கள் யசோதை பக்கலிலே வந்து முறைப்படுகின்றனரென்க. கண்ணபிரான், பிறரறியாதபடி கையால் தொட்டுச் சில கிலிகிஞ்சிதங்கள் பண்ணினானாகில் ஒரு குறையுமில்லை; பிறரறிந்து 'இதுவென்?' என்று கேட்கும்படிச் சேற்றையிட் டெறிந்தானே யென்று வருந்துகின்றனர் போலும். வளையையும் துகிலையும் தாரா தொழிந்தாலும் வாயில் நின்றும் ஒரு முத்து உதிர்த்தானாகில் உயிர் தரித்திருப்பர்கள் போலும். முற்றும் = 'முற்றுதும்' என்பதன் குறை; முற்றுதும்—தன்மைப்பன்மை வினைமுற்று: உயிரை இழந்துகொண்டேயிருக்கின்றோம் என்று கருத்து. ... ... ... (க)

குண்டலந் தாழக் குழல்தாழ நாண்டாழ
எண்டிசை யோரு மிறைஞ்சித் தொழுதேத்த
வண்டமர் பூங்குழ லார்துகில் கைக்கொண்டு
விண்டோய் மரத்தானா லின்றுமுற்றும் வேண்டவுந் தாரானா லின்றுமுற் [றும்.

குண்டலம்—கர்ணபூஷணங்களானவை
தாழ—(தோளளவும்) தாழ்ந்தொங்கவும்
குழல்—திருக்குழல்களானவை
தாழ — (அத்தோடொக்கத்) தாழ்ந்தசைய [வும்
நாண்—(திருக்கழுத்திற் சாத்தின) விடுநா [ணனது
தாழ—(திருவுந்தியளவும்) தாழ்ந்தசையவும்
எண் திசையோரும்—எட்டு திக்கிலுமுள்ள [(தேவர் முனிவர் முதலியோர்) எல்லாரும்
இறைஞ்சி தொழுது — நன்றாக [ஸாஷ்டாங்கமாக] வணங்கி
ஏத்த—ஸ்தோத்ரம் பண்ணவும்
(இப்படிப்பட்ட நிலைமையையுடையனாய்)
வண்டு அமர் பூ குழலார் — வண்டுகள் படிந்துகிடக்கப் பெற்ற பூக்களை அணிந்த கூந்தலையுடைய இடைச்சி [க(ளான எங்க)ளுடைய
(ஆற்றங் கரையில் களைந்து வைக்கப் பட்டிருந்த)
துகில்—புடவைகளை
கைக் கொண்டு—(தனது) கைகளால்வாரிக் [கொண்டு
விண் தோய் மரத்தானல் — ஆகாசத்தை அளாவிய (குருந்த) மரத்தின்மேல் ஏறியிரா நின்றுள்ள கண்ணபி [ரானல்
இன்று முற்றும்—;
வேண்டவும் — (எங்கள் துகிலைத் தந்தருள் [என்று நாங்கள்) வேண்டிக்கொண்ட [போதிலும்
தாரானல்—(அவற்றைத்) தந்தருளாத கண் [ணபிரானல்
இன்று முற்றும்—.

குறிப்பு:—கண்ணபிரான், இடைச்சிகள் கரையிற் களைந்துவைத்திருந்த புடவைகளைத் தான் கைக்கொள்ளும்போது குனிந்தெடுக்க வேண்டியிருந்தலால், குண்டலமுங் குழலும் நாணும் தாழப் பெற்றன. நாண்—கழுத்துக்கு அலங்காரமாக அணிந்துகொண்டுள்ளதொரு கநககண்டிகை. "* வைய்யவுலகு படைத்துண்ட மணிவயிற்றனாய்ப் பரம்பரனாயிருந்துள்ளவன் கர்மவச்யரைப்போல் இங்ஙனே வந்து பிறந்ததுமல்லாமல் இவ்வாறு இடைப் பெண்களோடு இட்டீடுகொண்டு விளையாடவும் பெறுவதே! இதென்ன ஸௌசீல்யம்!" என்று பலரும்புகழாநிற்பர் என்ற கருத்தைக் காட்டும் இரண்டாமடி. 'இறைஞ்சி' என்றாலும் 'தொழுது' என்றாலும் 'வணங்கி' என்றே பொருளாம்: இங்கு, இறைஞ்சி என்பதனால் மாநஸமான வணக்கத்தையும், 'தொழுது' என்பதனால் காயிகமான வணக்கத்தையும் சொல்லுகிறதென்று கொள்ளலாம். விண் தோய் மரம்-ஆகாசத்தளவும் ஓங்கி யுயர்ந்துள்ள மரமென்றபடி. எங்களுடைய குழலழகைக்கண்டு மகிழ்ந்து கூடவிருந்து அநுபவிக்கப்பெறாமல் குரக்கினம்போல் மரத்தின்மேலேறிக் கிடப்பதே! என்ற வயிற்றெரிச்சல் தோற்ற 'வண்டமர் பூங்குழலார்' என்கிறார்கள்.

தடம்படு தாமரைப் பொய்கை கலக்கி
விடம்படு நாகத்தை வால்பற்றி யீர்த்துப்
படம்படு பைந்தலை மேலெழப் பாய்ந்திட்
டுடம்பை யசைத்தானா லின்றுமுற்று முச்சியி னின்றானா லின்றுமுற்றும்.

தடம் படு—இடமுடைத்தான [விசாலமான]
தாமரைப் பொய்கை—தாமரைப் பொய்கை [யை
கலக்கி—(உள்ளே குதித்துக்) கலங்கச்செய் [து,(அக்கலக்கத்தினால் சீற்ற முற்று)
விடம் படு—விஷத்தை உமிழ்ந்து கொண்டு [(அப்பொய்கையில்) மேற்கிளம்பின
நாகத்தை—காளிய ஸர்ப்பத்தை
வால் பற்றி ஈர்த்து } வாலைப் பிடித்திழுத்து,(அதனால் பின்பு)
படம் படு—படமெடுக்கப்பெற்று
பை—மெத்தென்றிருந்த

தலை மேல்—(அந்நாகத்தின்)தலையின்மீது
எழப் பாய்ந்திட்டு—கிளரக் குதித்து (அத்த [லையின் மீது நின்று)
உடம்பை—(தன்) திருமேனியை
அசைத்தானால் – அசைத்துக் கூத்தாடின கண்ணபிரானால்
இன்று முற்றும்—;
(அந்தக்காளியன் இளைத்து விழுந்து தன்னைச் சரணம் புகுமளவும்)
உச்சியில்—(அவனுடைய) படத்தின் மீதே
நின்றானால்—நின்றருளின கண்ணபிரானால்
இன்று முற்றும்—.

குறிப்பு:—இடையர்களும் பசுக்களும் விடாய்தீர நீரைப்பருக வொண்ணாதபடி தாமரைப் பொய்கையிலே நெடுநாளாய்க் கிடந்த காளிய நாகத்தின்கொழுப்படக்கின படியை அநுஸந்தித்த ஆய்ச்சிகள் மகிழவேண்டியிருக்க, அது செய்யாமல் 'இன்று முற்றும்' என்பானென் னென்னில்; இப்படியெல்லாம் ஆச்ரிதவிரோதி நிரஸநசீலனென்று பேர்பெற்றுள்ளவன் இன்று எங்கள் பக்கல் மாத்திரம் தீம்புசெய்யத் தலைப்பட்டானே! இது எங்கள் பாவமோ? இக்கஷ்டங்களை யாம் பொறுத்து உயிர்தரித்திருப்பது மிகவும் அரிது என்று வயிறெரிந்து கூறுகின்றனரெனக் கொள்க. விடம்-விஷம். வால்—'வால:' என்ற வடசொற் சிதைவு. 'பைம்பொன்' என்ற சொல், பசுமை+பொன் எனப் பிரிகிறாப் போல, பைந்தலை என்கிற இச்சொல்லும், பசுமை+தலை எனப் பிரிகின்றதென்று நினைக்க வேண்டா; பை என்பது மெத்தெனவு, அழகு, பாம்பின்படம் முதலிய பல பொருள்களைக் குறிப்பதொரு தனிச்சொல் என்க. 'இவன் இப்பாம்பின் வாயில் அகப்பட்டுக்கொள்ளப் போகிறானித்தனை' என்று நடுநடுங்கி அஞ்சிக்கிடந்த அநுகூலர் மனமகிழ உடம்பை யசைத்துக் கூத்தாடினபடி. ... ... (௩)

தேனுக னாவி செகுத்துப் பனங்கனி
தானெறிந் திட்ட தடம்பெருந் தோளினால்
வானவர் கோன்விட வந்த மழைதடுத்
தானிரை காத்தானா லின்றுமுற்று மவையுய்யக் கொண்டானா லின்றுமுற் [றும்.

தேனுகன்—தேநுகாஸுரனுடைய
ஆவி—உயிரை [யை)
செகுத்து - முடிக்க நினைத்து (அத்தேநுக
பனங்கனி—(அஸுராவிஷ்டமான) பனைம [ரத்தின் பழங்கள் (உதிரும்படியாக)
எறிந்திட்ட—(அந்த மரத்தின் மேல்) வீசி [யெறிந்த
தட பெரு தோளினால் } மிகவும் பெரிய தோளாலே, (கோவர்த்தந பர்வதத்தை [யெடுத்து)

வானவர் கோன் விட வந்த மழை தடுத்து } தேவேந்திரனது ஏவுதலாலே வந்த வர்ஷத்தைத் தவிர்த்து
ஆன் நிரை—பசுக்களின் திரளை
காத்தானால் - ரக்ஷித்தருளின கண்ணபிரா [னால்
இன்று முற்றும்—;
அவை - அப்பசுக் கூட்டத்தை
உய்யக் கொண்டானால் - உஜ்ஜீவிப்பித்தரு [ளின கண்ணபிரானால்
இன்று முற்றும்—.

இரண்டாம் அடி தன்னிலே — இரண்டாவதுஅடியைக் கொண்டுஅளக்கத்தொ[டங்கினவளவிலே

தாவி அடி இட்டானால் — (மேலுலகங்களடங்கலும் தனக்குள்ளேயாம்படி)தாவி [அடியிட்ட கண்ணபிரானால்

இன்று முற்றும்—;

(தேவேந்திரனாகிய ஒரு ஆச்ரிதனுக் காக இப்படி)

தரணி அளந்தானால் — லோகத்தை அளந்தவ னாலே

இன்று முற்றும்—.

குறிப்பு:—கண்ணபிரான் தன்னை அழியமாறியும் அடியார்களின்வேண்டுகோளைத் தலைக்கட்டித் தருமவனாயிருந்துவைத்து எங்கள் பக்கலிலே தீமை செய்ய ஒருப்பட்டது என்னோ! என்று முறைப்படுகின்றனர். தன்திருவடிகளின் மென்மையை நோக்காமல் காடுமோடுகளை அளந்தருளினவன் அத்திருவடிகளின் ஆபாஸந்தீர நாங்கள் அவற்றைப் பிடிக்கிறோமென்றால் அதற்கிசைந்து திருவடிகளைத் தந்தருளலாகாதோ! என்ற மனக்குறையை நுண்ணிதினுணர்க. தாவடி இட்டானல்-தாவி அடியிட்டானால்; தொகுத்தல் விகாரம் தாவு அடி—தாவுகின்ற அடி என்று உரைப்பாருமுளர். தரணி-யாரணீ. பூமியைச்சொல்லக்கடவ இச்சொல்-இங்குப் பொதுப்படையாக உலகங்களைக்குறிக்கும்-இலக்கணையால். ... ... (எ)

தாழைதண் ணாம்பல் தடம்பெரும் பொய்கைவாய்
வாழு முதலை வலைப்பட்டு வாதிப்புண்
வேழந் துயர்கெட விண்ணோர் பெருமானாய் [றும்.
ஆழிபணி கொண்டானா லின்றுமுற்று மதற்கருள் செய்தானா லின்றுமுற்

தாழை - (கரையிலே) தாழைகளையும்

தண் ஆம்பல் - (உள்ளே) குளிர்ந்தஆம்பல் [மலர்களையுமுடைய

தட பெரு - மிகவும் பெரிய

பொய்கை வாய் - தடாகத்தினுள்ளே

வாழும் - வாழ்ந்து கொண்டிருந்த

முதலை - முதலையின் வாயாகிற

வலைப்பட்டு - வலையிலே அகப்பட்டுக்கொ[ண்டு

வாதிப்பு உண் - துன்பமடைந்த

வேழம் - ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய

துயர் - வருத்தம்

கெட - தீரும்படியாக

விண்ணோர் பெருமான் ஆய் — நித்ய ஸூரிகளுக்குத்தலைவ(ன் என்பதைத்தோற்றுவிக்கப் பெரியதிரு[வடியை வாகனமாக உடைய)னாய்

(அப்பொய்கைக் கரையிலே சென்று)

ஆழி - சக்ராயுதத்தாலே

(முதலையைத் துணித்து)

பணி கொண்டானால் — (கஜேந்திராழ்வானுடைய) கைங்கரியத்தை ஸ்வீகரித் தருளின கண்ணபிரானால்

இன்று முற்றும்—;

அதற்கு - அந்த யானையின் திறத்தில்

அருள் செய்தானால் — (இப்படிப்பட்ட) கிருபையைச்செய்தருளின கண்ண[பிரானால்

இன்று முற்றும்—.

குறிப்பு:—கண்ணபிரான் கஜேந்திராழ்வானாகிற ஒரு மிருகத்துக்காக அந்த:புரத்தையும் அகன்று அரைகுலையத் தலைகுலைய நெடுந்தூரமோடிக் காரியஞ்செய்தவனாயிருந்துவைத்து, அருகிலுள்ள எங்களை இவ்வாறு அகற்றுவதே! இதென்ன கொடுமை! என்று முறைப்படுகின்றனர். பொய்கை வாய்-பொய்கையிலே; வாய் - ஏழனுருபு. 'நம்சாபமோக்ஷத்துக்கு ஓரானை வருவது எப்போதோ' என்று இதே நினைவாக அம்முதலை அப்பொய்கையி

னுள்ளே உறைந்திருந்ததனால் 'வாழும்' என்று சிறப்பித்துச்சொல்லப்பட்டது; நற்கதியை எதிர்பார்த்துக்கொண்டிருக்குமிருப்பை வாழ்ச்சியாகச் சொல்லக்கடவதிறே. முதலை என்னுஞ்சொல் இலக்கணையால் அதன்வாயை உணர்த்திற்று. வாதிப்பு-வாயிப்பு; வாயா என்றபடி. ... ... (அ)

வானத் தெழுந்த மழைமுகில் போலெங்கும்
கானத்து மேய்ந்து களித்து விளையாடி
ஏனத் துருவா யிடந்தவிம் மண்ணினைத்
தானத்தே வைத்தானு லின்றுமுற்றுந் தரணி யிடந்தானு லின்றுமுற்றும்.

(கடலில் நீரை முகந்து கொண்டு)
வானத்து - ஆகாசத்திலே
எழுந்த - கிளம்பின
மழை முகில் போல் - வர்ஷிக்கப்புக்க மேகம் போல
(கறுத்த நிறத்தையுடைய)
ஏனத்து உரு ஆய் - ஒரு வராஹத்தின் ரூபமாய் (அவதரித்து)
கானத்து - காடு நிலங்களில்
எங்கும் - எல்லாவிடத்திலும் (திரிந்து)
மேய்ந்து - (கோரைக்கிழங்கு முதலியவற்றை) அமுது செய்து
களித்து - செருக்கடைந்து
விளையாடி - விளையாடி,
(பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு போன ஹிரண்யாக்ஷனைக் கொன்று)
இடந்த - (அண்ட பித்தியில் நின்றும்) ஒட்டு விடுவித்தெடுத்த
இ மண்ணினை - இந்தப் பூமியை
தானத்தே - யதாஸ்தானத்தில்
வைத்தானல்-(கொணர்ந்து) வைத்துநிலை நிறுத்தின கண்ணபிரானல்
இன்று முற்றும்—;
தரணி - (இப்படி கடலில் மூழ்கிப்போன) பூமியை
இடந்தானல்-கோட்டாற்குத்தி எடுத்துக் கொணர்ந்த கண்ணபிரானல்
இன்று முற்றும்—.

குறிப்பு:—'வானத்தெழுந்த மழைமுகில்போல் ஏனத்துருவாய் தரணி இடந்தானல் இன்றுமுற்றும்; இடந்தவிம்மண்ணினைத்தானத்தேவைத்துக் கானத்து எங்கும்மேய்ந்துகளித்து விளையாடினுல் இன்றுமுற்றும்' என்று அந்வயித்துப்பொருள்கொள்ளுதல் அழகு;வைத்தானல் என்றவிடத்துள்ள மூன்றும் வேற்றுமையுருபைப்பிரித்து விளையாடி என்றவினையெச்சத்தோடு கூட்டி உரைத்தவாறு. முன் ஒருகாலத்தில் பூமியைப்பாயாகச்சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன ஹிரண்யாக்ஷனைத்திருமால் தேவர் முனிவர் முதலியோரதுவேண்டுகோளால் மஹாவராஹமாகத் திருவவதரித்துக்கொன்று பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினன் என்ற வரலாற்றை அநுஸந்தித்து இப்படி பிரளயாபந்நையான பூமியை எடுத்தவன் எங்களை விரஹப்ப்ரளயத்தே தள்ளி வருத்தாநின்றானே! என்று வயிறெரிகின்றனர்.

[இப்பொழுது நடக்கிற சுவேதவராஹ கல்பத்துக்கு முந்தின பாத்ம கல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் திருமால் பிரளயப்பெருங்கடலில் மூழ்கியிருந்த பூமியைமேலேயெடுக்க நினைத்து ஸ்ரீவராஹரூபங்கொண்

டருளிக் கோட்டுநுனியாலே பூமியை எடுத்துவந்தனனென்றும் அதுபற்றி இக்கல்பத்துக்கு வராஹகல்பமென்று பெயராயிற்று என்றும் புராணவரலாறு உண்டு.] கானம்-காநநம். தானம்-ஸ்தாநம். (௯)

அங்கம லக்கண்ணன் றன்னை யசோதைக்கு
மங்கைநல் லார்கள்தாம் வந்து முறைப்பட்ட
அங்கவர் சொல்லைப் புதுவைக்கோன் பட்டன்சொல்
இங்கிவை வல்லவர்க் கேதமொன் றில்லையே. (௧0)

| | |
|---|---|
| நல் மங்கை மார்கள் தாம் } (பகவத்ப்ரேமமாகிற) நன்மை பொருந்திய (இடைப்) [பெண்கள் | அவர் சொல்லை - அவ்விடைச்சிகளின்சொ [ல்லை, |
| அம் கமலம் - அழகிய செந்தாமரைப் பூப் [போன்ற | புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு |
| கண்ணன் தன்னை - கண்களையுடைய கண் [ணபிரான் (செய்த தீம்பு) விஷயமாக | கோன் - நிர்வாஹகரான |
| அங்கு வந்து - அந்தக்கண்ணபிரானுடைய [வீட்டுக்கு வந்து | பட்டன் - பெரியாழ்வார் |
| அசோதைக்கு - (அவன்தாயான)யசோதை [ப்பிராட்டியிடத்திலே | சொல் - அருளிச்செய்த |
| முறைப்பட்ட - (தங்கள் ஆர்த்திதோற்றக்) [கதறிச் சொன்ன | இவை - இப்பாசுரங்களை |
| | இங்கு - இந்த ஸம்ஸாரத்தில் (இருந்து [கொண்டே) |
| | வல்லவர்க்கு - ஓதவல்லவர்களுக்கு |
| | ஒன்று ஏதம் - ஒருவகைக் குற்றமும் |
| | இல்லை - இல்லையாம். |

குறிப்பு:—இப்பாட்டால்-இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார். மங்கைநல்லார்கள்-நல்மங்கைமார்கள்என மாற்றியுரைக்கப்பட்டது. ... ... ... ... ... ... (௧0)

அடி:— ஆற்றில் குண்டலம் தடம் தேறுகன் ஆய்ச்சி தள்ளி மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னோர்.

இரண்டாம் பத்து உரை முற்றிற்று.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து.

## முதல்திருமொழி - தன்னேராயிரம்

அவதாரிகை:-கண்ணபிரான்பக்கலுள்ள அன்பின்மிகுதியால் அவனை அம்மமுண்ண அழைத்தும் அம்ம மூட்டியும்போரும் யசோதைப்பிராட்டி அவனுடைய பருவத்தின் இளமையையும் சேஷ்டைகளின் பெருமையையுங்கண்டு 'இவன் நம் பிள்ளை' என்ற எண்ணத்தைத்தவிர்ந்து 'ஒருவராலும் நியமிக்கவொண்ணாத ஸாக்ஷாத் ஸர்வேஶ்வரனிவன்' என்று அநுஸந்தித்து அவனைக்குறித்து அவைதன்னைச்சொல்லி 'உனக்கு நான் அம்மம் [முலை] கொடுக்க அஞ்சாநின்றேன்' என்று பலகாலும் பேசினபடியை ஆழ்வார்தாமும் தம்மை அவளாகப்பாவித்துத் தாமுமப்படியேபேசி மகிழ்கிறார்-இத்திருமொழியில்.

தன்னே ராயிரம் பிள்ளைக ளோடு தளர்நடை யிட்டு வருவான்
பொன்னேய் நெய்யொடு பாலமு துண்டொரு புள்ளுவன் பொய்யே தவழும்
மின்னேர் நுண்ணிடை வஞ்ச மகள்கொங்கை துஞ்சவாய் வைத்த பிரானே
அன்னே யுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (௧)

தன் நேர்-வயஸ்ஸாலும்வளர்த்தியாலும்) ஒத்த
ஆயிரம் பிள்ளைகளோடு } ஆயிரம் பிள்ளைகளோடு
தளர் நடை இட்டு } தளர்நடை நடந்து
வருவான் - வருகின்ற கண்ணபிரானே!
பொன் ஏய்-(நிறத்தால்) பொன்னை ஒத்திராநின்ற
நெய்யொடு-நெய்யோடுகூட
பால் அமுது-போக்யமானபாலையும் (இடைச்சேரியில் களவுகண்டு)
உண்டு-அமுதுசெய்து (ஒன்றுமறியாதபிள்ளைபோல)
பொய்யே-கபடமாக
தவழும்-தவழ்ந்துவருகின்ற
ஒரு புள்ளுவன்-ஒப்பற்ற கள்ளனே!
மின்நேர்-மின்னலைப்போன்று
நுண்-அதி ஸூக்ஷ்மமான
இடை-இடையையும்
வஞ்சம்-வஞ்சனையையுமுடையவளான
மகள்-பூதனையென்னும் பேய்மகள்
துஞ்ச-மாண்டுபோம்படி
கொங்கை-(அவளுடைய) முலையிலே
வாய் வைத்த- தன்னுடைய வாயை வைத்(துச் சுவைத்)த
பிரானே-நாயனே!
உன்னை-(நம் பிள்ளையென்று இதுவரை [என்னால் பாவிக்கப்பட்ட) உன்னை
அறிந்து கொண்டேன் } (அருந்தெய்வமென்று இன்று) தெரிந்து [கொண்டேன்; (ஆதலால்,)
உனக்கு-உனக்கு
அம்மம் தர-முலைகொடுக்க
அஞ்சுவன்-பயப்படாநின்றேன்;
அன்னே-அஹஹ!.

குறிப்பு:-[தன்னேர் இத்யாதி.] கண்ணன் திருவாய்ப்பாடியிலேவந்து பிறந்தபோது அவனோடுகூட ஆயிரம்பிள்ளைகள் சேரப்பிறந்தார்கள் என்பது ப்ரஸித்தம். [பொன்னேயித்யாதி.] ஒவ்வொருவீட்டிலும்புக்கு அங்குள்ளதயிர் நெய்பால் முதலியவற்றையெல்லாம் திருடி வயிறாரவிழுங்கி

விட்டு 'இந்தப்பூனை இந்தப்பாலைக்குடிக்குமா' என்னும்படி தவழ்ந்து நடை கற்பனும் [மின்னேர் இத்யாதி.] உனக்கு ஒருத்தி முலைகொடுக்கவந்து தான் பட்டபாட்டை நானறிந்துளேனாதலால் 'நம்மையும் அப்பாடு படுத்துவ ளோ' என்றஞ்சுகின்றே னென்கிறாள். "ஆயர்புத்திரனல்லனருந்தெய்வம்" என்று கீழ் அருளிச்செய்ததை இங்கு நினைக்க. அன்னே-அச்சக் குறிப்பு. தூங்க என்னும்பொருளதான துஞ்ச என்ற சொல்லை, 'சாவ' என்ற பொருளில் பிரயோகிப்பது-மங்கலவழக்காம்; தீர்க்க நித்திரையடையும்படி என்பது கருத்து; "முன்னத்தினுணருங் கிளவியுமுளவே" என்றார் நன்னூலாரும். வருவான் எஃபதும், புள்ளுவன் என்பதும்-இயல்புவிளி. (க)

> பொன்போல் மஞ்சன மாட்டி யமுதூட்டிப் போனேன் வருமள விப்பால்
> வன்பா ரச்சக டம்மிறச் சாடி வடக்கி லகம்புக் கிருந்து [த்த
> மின்போல் நுண்ணிடை யாளொரு கன்னியை வேற்றுரு வஞ்செய்து வை
> அன்பா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே· (உ)

பொன்போல்-பொன்னைப்போல் (உன்வடிவழகு விளங்கும்படி)
மஞ்சனம் ஆட்டி } உன்னைத்) திருமஞ்சனம் செய்வித்து
அமுது ஊட்டி-(அதன்பிறகு) அமுதுசெய்யவும்பண்ணிவிட்டு
போனேன்-(யமுனைநீராடப்) போனநான்
வரும் அளவு இப்பால் } (மீண்டு) வருவதற்குள்ளே
வல்-வலிவுள்ளதும்
பாரம்-கனத்ததுமாயிருந்த
சகடம்-சகடமானது
இற-(கட்டுக்குலைந்து) முறியும்படி
சாடி-(அதைத்திருவடியால்) உதைத்துத்தள்ளி
(அவ்வளவோடும் நில்லாமல்)
வடக்கில் அகம் } (இவ்வீட்டுக்கு)வடவருகிலுள்ள வீட்டிலே
புக்கு இருந்து-போய் நுழைந்து
(அவ்வீட்டிலுள்ள)
மின் போல் நுண் இடையாள் } மின்னலைப்போன்று நுட்பமான இடையையுடையளான
ஒரு கன்னியை-ஒருகன்னிகையை
வேறு உருவம் செய்துவைத்த } (கலவிக்குறிகளால்) வேறுபட்டவடிவையுடையளாகச்செய்துவைத்த
அன்பா-அன்பனே!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்.—

குறிப்பு:—"ஈடும் வலியுமுடைய இந்நம்பிபிறந்தவெழுதிங்களில், ஏடலர் கண்ணியினானை வளர்த்தி எமுனை நீராடப்போனேன், சேடன் திருமறு மார்வன் கிடந்து திருவடியால் மலைபோல்,ஓடுஞ்சகடத்தைச் சாடியபின்னை உரப்புவதஞ்சுவனே" என்ற பாசுரத்தோடு இப்பாட்டை ஒருபுடை ஒப்பிடுக. போனேன்-வினையாலணையும் பெயர்; வினைமுற்று அன்று. பாரம்-ஹாரம். [அன்பா.] எதைக்கண்டாலும் அதன் மேல்விழும்படியான விருப்பமுடையவனே! என்கை. வேற்றுருவஞ்செய்துவைக்கையாவது- "கண்மலர் சோர்ந்து முலைவந்து விம்மிக் கமலச்செவ்வாய் வெளுப்ப, என்மகள் வண்ணமிருக்கின்றவா நங்காய்! என்செய்கேன் என்செய்கேனோ" என்ற பாசுரத்திற் பகர்ந்தபடி பண்ணுகை. சகடம்மிற-செய்யுளின்பம் நோக்கி மகரஒற்று இரட்டிற்றென்க. ... ... ... ... (உ)

கும்மா யத்தொடு வெண்ணெய் விழுங்கிக் குடத்தயிர் சாய்த்துப் பருகிப்
பொய்ம்மா யமரு தான வசுரரைப் பொன்றுவித் தின்றுநீ வந்தாய்
இம்மா யம்வல்ல பிள்ளைநம் பியுன்னை யென்மக னேயென்பர் நின்றார்
அம்மா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே (௩)

(கண்ணபிரானே!)
கும்மாயத்தொடு—குழையச்சமைத்த பருப் [போடுகூட
வெண்ணெய்—வெண்ணெயை
விழுங்கி—விழுங்கியும்
குடம் தயிர்—குடத்தில்நிறைத்த தயிரை
சாய்த்து—(அந்தக்குடத்தோடு) சாய்த்து
பருகி—குடித்தும்
பொய் மாயம் மருது ஆன அசுரரை—பொய்யையும் மாயச்செய்கையையுமுடைய அஸுரர்களால் ஆவேசிக்கப்பெ [ற்ற (இரட்டை) மருதமரங்களை
பொன்றுவித்து—மறியவிழுந்துமுறியும்படி [பண்ணியும்
நீ—(இவ்வளவுசேஷ்டைகளைச்செய்த) நீ
இன்று—இப்போது
வந்தாய்—(ஒன்றுஞ் செய்யாதவன்போல) [வந்து நின்றாய்;
இ மாயம்—இப்படிப்பட்ட மாயச்செய்கை [களை
வல்ல—செய்யவல்ல
நம்பி—(அந்தப் பிள்ளைத்தனத்தால்) பூர்ண [னானவனே!
உன்னை—(இப்படியிருக்கிற) உன்னை
நின்றார்—(உன்வாசிஅறியாத) நடுநின்றவர் [கள்
என் மகனே என்பர்—என் வயிற்றிற் பிற ந்த) பிள்ளையாகவே சொல்லாநின்றார்க ள்; (நானோவென்றால் அப்படிநினையாமல்)
உன்னை அறிந்து கொண்டேன்—(இவன்ஸர்வேச்வரன் என்று) உன்னைத்தெரி [ந்துகொண்டேன்;
(ஆதலால்,)
அம்மா—ஸர்வேச்வரனே!
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்.—

குறிப்பு:—இச்சேரியில் ஒருத்திவீட்டில் ஒன்றுவைக்க வொண்ணாதபடி எல்லாப் பண்டங்களையும் களவுகண்டும், மருதமரங்களை அவற்றின் நினைவறிந்து முறித்துந் திரிகிற உன் விசேஷங்களை யறியாதே உதாஸீநராயிருப்பவர்கள் உன்னை என்மகனாகச் சொல்லுவர்கள்; நான் உன்வாசியை யறிந்தவளாகையால் உன்னை ஸாக்ஷாத் ஸர்வேச்வரனாகவே அறுதியிட்டு உனக்கு முலைகொடுக்க அஞ்சாநின்றேனென்கிறாள். பொய் மாயம் மருது ஆன அசுரரை-"பொய்யே ஆச்சரியமான மருதுகளாய்நின்ற அஸுரர்களை" என்பது-பெரியஜீயருரை. மாயம்-மாயா (கீழ் "மத்தளவுந்தயிரும்' என்றபாட்டின் குறிப்புரையைக் காண்க.) பிள்ளை, நம்பி-அண்மைவிளி. [என்மகனே என்பர்.] 'இவன் என்பிள்ளையன்று' என்று நான் ஆணையிட்டுச்சொன்னாலும் அவர் கேளார் என்ற கருத்துந்தோன்றும்; ஏ-பிரிநிலை. (௩)

மையார் கண்மட வாய்ச்சியர் மக்களை மையன்மை செய்தவர் பின்போய்க்
கொய்யார் பூந்துகில் பற்றித் தனிநின்று குற்றம் பலபல செய்தாய்
பொய்யா வுன்னைப் புறம்பல பேசுவ புத்தகத் துக்குள கேட்டேன்
ஐயா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (௪)

மை ஆர் கண்-மையை அணிந்துள்ள கண்களையும்
மடம்-மடப்பம் என்றகுணத்தையுமுடையரான
ஆய்ச்சியர் மக்களை-இடைப்பெண்களை (உன்விஷயத்திலே)
மையன்மை செய்து } மோஹிக்கப்பண்ணி
(அப்பெண்களுடைய)
கொய் ஆர் பூ துகில் } கொய்தல் நிறைந்த அழகிய புடவைகளை
பற்றி-பிடித்துக்கொண்டு
அவர் பின் போய்-அப்பெண்களின் பின்னேபோய்
தனி நின்று - தனியிடத்திலேநின்று
பல பல குற்றம்—எண்ணிறந்த தீமைகளை
செய்தாய்—நீபண்ணினாய்;
(என்றுயசோதை சொல்ல, 'நீகண்டாயோ?' என்று கண்ணன் கேட்க,
(அதற்கு யசோதை சொல்கிறாள்;—)
பொய்யா-(தீமை செய்ததுமல்லாமல், செய்யவில்லையென்று) பொய் சொல்லுமவனே!
உன்னை-உன்னைக்குறித்து
புத்தகத்துக்கு உள } ஒருபுஸ்தக மெழுதுகைக்குத் தகுந்திள்ளனவாம்படி
பேசுவ-(பிறர்) பேசுகின்ற
பல புறம்-பற்பல புன்சொற்களை
கேட்டேன்-(என்காதால்) கேட்டிருக்கின்றேன்;
ஐயா-அப்பனே!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்.—

குறிப்பு:—முதலடியில் "மக்களை" என்பதை உருபுமயக்கமாகக்கொண்டு 'மக்கள் பக்கலிலே' என ஏழாம்வேற்றுமைப் பொருளுரைத்து, மையன்மை செய்து-மோஹத்தைப்பண்ணி என்றுரைத்து, கண்ணபிரான் தான் அம்மக்களிடத்தில் மயக்கமுற்று, அவர்கள் இவனை மறுத்தபோதிலும் இவன்விடாமல் அவர்களுடைய புடவைகளைப்பற்றிக்கொண்டு ஏகாந்த ஸ்தலத்திற் சென்று பற்பல சிருங்காரசேஷ்டைகளைச் செய்தபடியைக் கூறுவதாகக் கருத்துரைத்தலும் ஒக்குமென்க. [மடமக்கள்.] மடமாவது-அறிந்தும் அறியாதுபோலிருத்தல்; மாதர்க்கு, நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என நாற்குணங்கள் அமையவேண்டுமென்றறிக. மையல் எனினும், மையன்மை எனினும் மயக்கமே பொருளாம்; மை-பண்புப்பெயர்விகுதி; விகுதிமேல் விகுதி. கொய்யார் பூந்துகில் - கொய்ச்சகம்; 'கொசாம்' என்பது உலகவழக்கு. 'பேசுவ' என்கிறவிது - பலவின்பாற்படர்க்கை வினைமுற்று; அது இங்குப் பெயரெச்சப் பொருள்தந்து நிற்றல் காண்க: "வினைமுற்றே வினையெச்ச மாகலும், குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே" என்ற சூத்திரத்தில் 'ஆகலும்' என்ற (எண்ணிநின்ற எதிரது தழுவிய எச்ச) உம்மையை நோக்குக. ... ... ... ... ... ... (௪)

முப்போ துங்கடைந் தீண்டிய வெண்ணெயி னோடு தயிரும் விழுங்கிக்
கப்பா லாயர்கள் காவிற் கொணர்ந்த கலத்தொடு சாய்த்துப் பருகி
மெய்ப்பா லுண்டழு பிள்ளைகள் போலநீ விம்மி விம்மி யழுகின்ற
அப்பா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (௫)

முப் போதும்-மூன்று சந்திப்போதுகளிலும்
கடைந்து-(இடையரால்) கடையப்பட்டு
ஈண்டிய-திரண்ட
வெண்ணெயினோடு-வெண்ணெயோடே
தயிரும்-தயிரையும்
விழுங்கி-(களவுகண்டு) விழுங்கி,
(அவ்வளவோடும் நில்லாமல்)
ஆயர்கள்-இடையர்கள் (தம்முடைய)

கப்பால் – தோளாலே (வருந்திச் சுமக்கப் [பட்ட
காவில்–காவடியில் [வற்றை)
கொணர்ந்த–கொண்டுவந்த (பால்முதலிய
கலத்தொடு–(அந்தப்) பாத்திரத்தோடே
சாய்த்து–சாய்த்து
பருகி-குடித்து
(அதனால் பசியடங்கினபடியை மறைக்க நினைத்து,)

மெய் பால் உண்டு அழுபிள்ளைகள்போல விம்மி விம்மி அழுகின்ற } முலைப்பாலை உண்டு (அது பெறுதபோது) அழுகிறபிள்ளைகளைப்போலே விக்கி [அழுகின்ற
அப்பா–பெரியோனே!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்,—

குறிப்பு:—நீ என்பது-வார்த்தைப்பாடு; அதற்கு இங்குப்பொருளில்லை. முப்போது–காலை உச்சி அந்தியாகிற மூன்று காலம்.–மெய் என்று உடம்பாய், இலக்கணையால் முலையைக் குறித்தது. உலகத்தில் முலைப்பாலையே உண்டுவளர்கின்ற பிள்ளைகள் முலைப்பால் பெறுதபோது பசியின்மிகுதியால் அழுமா போலே-இக்கண்ணபிரானும் "நமக்குப் பசியுள்ளமையைக்காட்டா விடில் நம் தாய் 'இவன் எங்கேனும் களவுகண்டு உண்டிருக்கக்கூடும்' என்று ஐயப்பட்டு நம்மை நியமிக்க ஒருப்படுவள்" என்று நினைத்து (ப்பசியுள்ளவன் போல) அழுக்கடவனென்க. கோணர்ந்த—இரண்டாம்வேற்றுமைத்தொகை; பெயரெச்சமன்று. ... ... ... ... ... (ரு)

கரும்பார் நீள்வயற் காய்கதிர்ச் செந்நெலைக் கற்றா நிரைமண்டித் தின்ன
விரும்பாக் கன்றொன்று கொண்டு விளங்கனி வீழ வெறிந்த பிரானே
சுரும்பார் மென்குழற் கன்னி யொருத்திக்குச் சூழ்வலை வைத்துத் திரியும்
அரம்பா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (சு)

நீள் வயல்–பரந்த வயலிலே
கரும்பு ஆர்–கரும்புபோல (க்கிளர்ந்து)
காய்–பசுங்காயான
கதிர்–கதிரையுடைய
செம் நெலை–செந்நெல்தாந்யத்தை
கன்று ஆ நிரை–கன்றுகளோடுகூடின பசு [க்களின் திரள்
மண்டி தின்ன – விரும்பித்தின்னுநிற்கச் [செய்தே
(அத்திரளிலே சேர்ந்து மேய்கிறுப்போல் [பாவனைசெய்த அஸுராவிஷ்டமான)
விரும்பா கன்று ஒன்று } (நெல்லைத் தின்கையில்) விருப்ப மில்லாத ஒரு [கன்றை
(அதன் செய்கைகளினாலே 'இது ஆஸுரம்' என்று அறிந்து)
கொண்டு–(அதனைக் குணிலாகக்) கொண்டு,
(மற்றொரு அஸுரனால் ஆவேசிக்கப்பட் [டிருந்த)

விளங்கனி–விளாமரத்தின் பழங்கள்
வீழ–உதிரும்படி
எறிந்த–(அவ்விளாமரத்தின்மேல் அக்கன் [றை) வீசியெறிந்த
பிரானே–பெரியோனே!
சுரும்பு ஆர்–வண்டுகள் நிறைந்த
மென் குழல் – மெல்லிய குழலையுடைய [ளான
கன்னி ஒருத்திக்கு–ஒரு கன்னிகையை அக [ப்படுத்திக்கொள்வதற்காக
சூழ் வலை–(எல்லாரையும்) சூழ்த்துக்கொள் [ளக்கடவ (திருக்கண்களாகிற) வலையை
வைத்து–(அவள்திறத்திலே விரித்து)வை [த்து
திரியும் – (அந்யபரரைப்போலத்) திரியா [நின்ற
அரம்பா–தீம்பனே!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்,—

குறிப்பு:—எவ்வகையினாலாவது கண்ணனைக் கொல்லவேணுமென்ற கருத்துக்கொண்டுள்ள கம்ஸன் பற்பல அஸுரர்களைப் பற்பல வகையாக உருவெடுத்துத் தீங்குசெய்யும்படி ஏவியிருந்த தற்கேற்ப ஓரஸுரன் விளாமரமாய் வந்துநின்றான்; ஓரஸுரன் கன்றினுருவங்கொண்டு, வயல்களிற் கரும்புபோலக் கிளர்ந்துள்ள செந்நெற்களை மேய்ந்துகொண்டிருந்த பசுத்திரளிலே கூடிக்கலந்து அவற்றைப்போல் தானும் மேய்கிறாப்போல் பாவனை பண்ணி அச்செந்நெற்களை மெய்யே மேயாதொழிந்தவாசியைக் கண்ணபிரானுணர்ந்து 'அஸுரப்பயல் இங்ஙனே வந்துளன்' என்றறுதியிட்டு அக்கன்றை எறிகுணிலாகக்கொண்டு அவ்விளாமரத்தின்மேலெறிந்தவரலாறு முதலிரண்டடிகளிற் கூறப்பட்டது. கன்று + ஆநிரை, கற்றாநிரை. கூந்தலில் பூமாறாதேயிருத்தலால் அதில் மதுவைப்பருகுதற்காக வண்டுகள் படிந்திருக்கப்பெற்ற முடியையுடையாளொரு மங்கையைத் தன்வசப்படுத்திக் கொள்ளுதற்காகத் "தாமரைத்தடங்கண் விழிகளினகவலை" என்றும், "கார்த்தண் கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறு" என்றும் வலையாகச் சொல்லப்பட்ட தன்கண்களை அவள்மேல் விரித்துவைத்து இவ்வாறு தீம்புசெய்பவனே! என்பது மூன்றாமடியின் கருத்து; இவன் அவளைக்கண்ணால் குளிர நோக்க, அவள் அதுக்கு அற்றுத்தீர்ந்து இவனுக்குவசப்படுவளென்க.—சூழ்வலை-தப்பாமல் அகப்படுத்திக்கொள்ளும் வலை. இங்கு ('கண்' என்ற) உபமேயத்தை அதன்சொல்லாற் சொல்லாமல் (சூழ்வலைஎன்ற) உபமானச் சொல்லால் இலக்கணையாகச் சொல்லியிருத்தலால்-உருவகவுயர்வு நவிற்சியணி; வடநூலார், ரூபகாதிசயோக்தியலங்காரமென்பர். ஒருத்திக்கு-உருபுமயக்கம்; ஒருத்தியின்மேல் என்றபடி. ... ... ... (சா)

மருட்டார் மென்குழல் கொண்டு பொழில்புக்கு வாய்வைத்தவ் வாயர்தம் பாடிச்
சுருட்டார் மென்குழற் கன்னியர் வந்துன்னைச் சுற்றுந் தொழநின்ற சோதி
பொருட்டா யமிலே னெம்பெரு மானுன்னைப் பெற்றகுற் றமல்லால் மற்றிங்
கரட்டா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (எ)

மருட்டு ஆர் – (கேட்டவர்களை) மயங்கப்பண்ணுந் திறமையுள்ள
மெல்–மெல்லிய (த்வநியையுடைய)
குழல் கொண்டு–வேய்ங்குழலைக் (கையிற்கொண்டு)
பொழில்–(ஸம்போகத்துக்கு ஏகாந்தமான) சோலைகளிலே
புக்கு–போய்ச்சேர்ந்து
(அந்த வேய்ங்குழலை)
வாய் வைத்து–(தன்) வாயில்வைத்து (ஊத)
(அவ்வளவிலே)
ஆயர் தம் பாடி–இடைச்சேரியிலுள்ள
சுருள் தார் } சுருண்டு பூவணிந்த மெல்லிய
மென்குழல் } குழலையுடைய
அக் கன்னியர்–(இடையர்களால் காக்கப்பட்டிருந்த) அந்த இடைப்பெண்கள் (குழலோசை கேட்கையிலுள்ள விருப்பத்தாலே காவலுக்கடங்காமல்)
வந்து–(அச்சோலையிடத்தே) வந்து
உன்னை–உன்னை
சுற்றும் தொழ–நாற்புறமும் சூழ்ந்துகொண்டு ஸேவிக்க
நின்ற–(அதனால்) நிலைத்துநின்ற
சோதி–தேஜஸ்ஸையுடையவனே!
எம் பெருமான்–எமக்குப் பெரியோனே!
உன்னை–(இப்படி தீம்பனான, உன்னை
பெற்ற–பிள்ளையாகப்பெற்ற
குற்றம் அல்லால்–குற்றமொன்றை (நான் ஸம்பாதித்துக்கொண்டேனத்தனை)யல்லது
இங்கு–இவ்வூரில் (உள்ளாரோடொக்க)
மற்று பொருள் } மற்றொரு பொருட்பங்
தாயம் இலேன் } கையும் பெற்றிலேன்;
அரட்டா - (இப்படிப்பட்ட) தீம்பனே!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்,—

குறிப்பு:—கண்ணபிரான் ஸர்வஜந மோஹநமான ஸ்வரத்தையுடைய வேய்ங்குழலையெடுத்துக்கொண்டு ஸரஸவிஹாரத்துக்குப் பாங்கான சோலைப் புறங்களிலேபோய், தான்விரும்பின பெண்களின்பேரைச்சொல்லுதலும், தன்மேல் கோபங்கொண்டிருக்கும் பெண்களின் காலைக் கையைப்பிடித்துக் கொண்டு பொறுப்பித்தலும் முதலான ஒலியின் குறிப்புகள் தன்னோடு பழகும் பெண்களுணரும்படி அக்குழலை ஊதினவளவிலே, இடைச்சேரியில் தந்தம் மாமிமார் முதலியோரால் காவலிலே நியமிக்கப்பட்டுள்ள பெண்கள் இக்குழலோசையைக் கேட்டுப் பரவசைகளாய் "ம-ராவஃ கிம்கரிஷ்யதி" என்று - தந்தம் நியாமகர்களையும் லக்ஷியம்பண்ணாமல் கண்ணனிருப்பிடத்தேற ஓடிவந்து அவனைச் சுற்றிக்கொள்ள அதனால் அவன் விலக்ஷணமானதொரு ஒளியை முகத்திற் பெற்றானென்ற கருத்தைக்காட்டும் முதலிரண்டடி. மருட்டு - பிறவினைப்பகுதியே தொழிற்பொருள் தந்தது; மயங்கப்பண்ணுதல் என்று பொருள். வாய்வைத்து-வாய்வைக்க; எச்சத்திரிபு. "அவ்வாயர்தம்பாடி" என்றவிடத்திலுள்ள அகரச்சுட்டு கன்னியர் என்பதோடு கூட்டியுரைக்கப்பட்டது. சுருள் = சிறந்த கூந்தலுக்குச் சுருட்சி இலக்கணமென்க. தார்-பூமாலை. சுற்றுந்தொழும்படிநின்ற, சோதி-பரஞ்சோதியாகிய கண்ணபிரானே! என்று முரைக்கலாம். [பொருள்தாயமித்யாதி.] 'இப்படிப்பட்ட பெருந்தீம்பனை பிள்ளையைப் பெற்றாயே பாவீ!' என்று என்னை அனைவரும் காறுகாறென்னும்படியான நிலைமையை நான் உன்னால் பெற்றேனேயொழிய வேறொரு ஸாம்ராஜ்யமும் பெற்றேனில்லையென்கிறாள். தாயம்- 'தாயஃ' என்றவடசொல் விகாரம். "உன்னைப் பிள்ளையாகப்பெற்ற குற்றமொழிய, உன்பொருட்டாக பந்துவர்க்கங் கூடாதபடியானேன்" என்பர்-திருவாய்மொழிப்பிள்ளை. ... ... ... (எ)

வாளா வாகிலுங் காணகில் லார்பிறர் மக்களை மையன்மை செய்து
தோளா லிட்டவ ரோடு திளைத்துநீ சொல்லப் படாதன செய்தாய்
கேளா ராயர் குலத்தவ ரிப்பழி கெட்டேன் வாழ்வில்லை நந்தற்
காளா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (அ)

வாளா ஆகிலும் - (நீதீம்புசெய்யாமல்) வெறுமனே யிருந்தாலும்
(உன்மினுக்குப் பொறாதவர்கள்)
காண இல்லார் - (உன்னைக்) காணவேண்டார்கள்;
(இப்படியிருக்கச்செய்தேயும்)
நீ - நீயோவென்றால்
பிறர் மக்களை - அயற்பெண்களை
மையன்மை செய்து - (உன்னுடைய இங்கிதாதிகளாலே) மயக்கி
(அவ்வளவோடுநில்லாமல்)
தோளால் இட்டு - (அவர்களைத்) தோளாலும் அணைத்திட்டு
அவரோடு - அப்பெண்களோடு
திளைத்து - விளையாடி
சொல்லப்படாதன - வாயாற் சொல்லக்கூடாதகாரியங்களை
செய்தாய் - (அவர்கள்விஷயத்திலே) செய்தாய்;
ஆயர் குலத்தவர் - இடைக்குலத்துத் தலைவர்கள்
இப் பழி - இப்படிப்பட்ட பழிகளை
கேளார் - கேட்கப் பொறார்கள்;
(இப்பழிகளைக் கேட்கப் பெற்றநான்)
கெட்டேன்-பெரும்பாவியாயிராநின்றேன்
(இனி எனக்கு இவ்வூரில்)
வாழ்வு இல்லை—வாழ்ந்திருக்கமுடியாது,
நந்தற்கு - நந்தகோபருக்கு
ஆளா - (அழகிதாக) ஆள்பட்ட பிள்ளாய்!
உன்னை அறிந்து கொண்டேன்—;
உனக்கு அம்மம் தர அஞ்சுவன்,—

குறிப்பு:—"நந்தன் காளாய்" என்பது அத்யாபகபாடம்; "ஸ்ரீநந்தகோபர்பிள்ளையானநீ" என்று ஜீயருரையிற் காண்கிறபடியால் இப்பாடம்கொள்ளத்தக்கதே. மேல், "அன்றிக்கே" என்று தொடங்கி ஜீயருரையிற் காண்கிற நிர்வாஹத்துக் கேற்ப "நந்தற்கு ஆளா" என்று பாடமோதுதல் சிறக்குமென்க: 'ஸ்வாமி பரமயோக்யர்' என்றால் விபரீதலக்ஷணையால் 'அயோக்யர்' என்று பொருள்படுமாபோலே இங்கு 'நந்தகோபருக்கு ஆள்பட்டவனே!' என்றது விபரீதலக்ஷணையால், அவர்க்கு ஆள்படாதொழிந்தவனே!' என்ற பொருளைத்தரும்; இத்தீமைகளை நீசெய்யத் துணியாதபடி அவர் உன்னைத் தனக்கு ஆட்படுத்திக்கொள்ளாதொழியவேயன்றோ நானிப்படிப்பழிகேட்டுப் பரிபவப்படவேண்டிற்றென்று விரிக்க: "அவர் உன்னை நியமித்து வளர்க்காமையிறே நீ இப்படி தீம்பனுபத்தென்னுதல்" என்றஜீயருரைக்குக்கருத்து இதுவேயாகுமென்க. அன்றியும், 'நந்தன் காளாய்' என்றபாடத்துக்கு ஓர் அநுபபத்தியுண்டு: இத்திருமொழியில் இறுதிப்பாடலொன்றொழிய மற்ற எல்லாப்பாட்டுக்களிலும் ஈற்றடியின் முதற்சீர் முதலெழுத்து மோனையின் பத்துக்கிணங்க அகரமாகவே அமைந்திருத்தலால் இப்பாட்டொன்றில்மாத்திரம் அது மாறுபடுதல் குறையாமாறு காண்க. 'நந்தற்கு ஆளா' என்றே ஆன்றோர் பாடம். இப்பாடத்தில் பூர்வவியாக்கியானப் பொருத்தமும் இங்குக் காட்டப்பட்டுள்ளமையால் தான்றோன்றிப்பாடமென்னுங் கொள்கை தவிர்க.

இச்சேரியிலுள்ள ஸௌவவ்ருஷர்கள் உன் மினுக்கம் பொறாதவர்களாகையால், நீ தீம்புசெய்யாமல் வெறுமனிருந்தாலும் உன்மேல் அழுக்காறு கொண்டு உன்னைக் கண்ணிலுங்காண வேண்டுகிறிலர்; பின்னை நீ மெய்யே கடுமையான தீமைகளை இங்ஙனே செய்யா நின்றால் அவர்கள் அலர்தூற்றக் கேட்க வேணுமோ' என்பது முதலிரண்டடிகளின் கருத்து.

[கேளார் இத்யாதி.] 'மானமுடைத்து உங்களாயர் குலம்" [பெரியதிருமொழி—க0-எ-க.] என்றபடி மானத்தைக்காத்து வாழ்பவர்களான உன் தந்தை முதலாயினோர் ஊரலர் தூற்றுதலைக் கேட்டால் ஸஹியார்கள்; 'இப்பாவி இப்பிள்ளையைப் பெற்றாள்' என்று அனைவரும் என்னைப் பொடிதலால் நான் அவர்கள் கண்வட்டத்தில் வாழ்ந்திருத்தல் அரிது காண் என்கிறாள்.

அன்றிக்கே; [கேளார் இத்யாதி.] இடைக்குலத்துக்கு நிர்வாஹகரான நந்தகோபர்க்கு நான் இத்தீம்புகளை யறிவித்தால் அவர் 'என்பிள்ளை பக்கலிலும் பழிசொல்லலாமோ' என்று இவற்றைக் காதுகொடுத்துங் கேட்கிறதில்லை; இப்படித் தந்தையும் நியமியாமல் மற்றுமுள்ள சுற்றத்தாரும் நியமியாமல் இவனை மனம் போனபடிசெய்ய விட்டு வைத்தால் இப்பிள்ளையைக் கொண்டு இவ்வூர் நடுவே நான் வாழ்வது எப்படி? என்கிறாளென்று முறைக்கலாம். ... ... ... ... ... ... (அ)

**தாய்மார் மோர்விற்கப் போவர்த மப்பன்மார் கற்று நிரைப்பின்பு போவர்**
**நீயாய்ப் பாடி யிளங்கன்னி மார்களை நேர்பட வேகொண்டு போதி**
**காய்வார்க் கேன்று முகப்பன வேசெய்து கண்டார் கழறத் திரியும்**
**ஆயா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (கூ)**

(பெண்களை அகம்பார்க்கவைத்துவிட்டு)
தாய்மார் - தாய்மாரானவர்
மோர் விற்க - மோர்விற்பதற்கு
போவர் - (வெளியூருக்குப்) போவர்கள்;
தமப்பன்மார் - (அப்பெண்களின்) தமப்பன்மாரானவர்
கன்று ஆநிரைபின்பு போவர் - இளம் பசுக்கூட்டங்களை மேய்க்கைக்காக அவற்றின் பின்னே போய்விடுவர்கள்;
(அப்படிப்பட்ட ஸமயத்திலே)
நீ—;
ஆய்ப்பாடி - இடைச்சேரியில்
(தந்தம் வீடுகளில் தனியிருக்கின்ற)
இள கன்னிமார்களை - யுவதிகளான பெண்களை
நேர்பட - நீ நினைத்தபடி
கொண்டு போதி - (இஷ்டமான இடங்களில்) கொண்டுபோகா நின்றாய்;
காய்வார்க்கு - (உன்மேல்)த்வேஷம் பாராட்டுகின்ற கம்ஸாதிகளுக்கு
என்றும் உகப்பனவே - எந்நாளும்(வாயாரப்பழித்து)ஸந்தோஷம்தரக்கூடிய செய்கைகளையே
செய்து - செய்துகொண்டு
கண்டார் கழற திரியும் - (உனக்கு) அநுகூலராயுள்ளவர்களும் (உன்னை) வெறுத்துச்சொல்லும்படி திரியாநின்ற
ஆயா - ஆயனே!
உன்னை அறிந்து கொண்டேன் உனக்கு அம்மம் தர அஞ்சுவன்.—

**குறிப்பு:** —இடைச்சேரியிலுள்ள இளம்பெண்களைப் புணருகைக்கு நீ தருணம் பார்த்திருக்கிற வளவிலே அப்பெண்களின் தாய்தந்தையர் தங்கள் வீட்டிற்குக் காவலாக அப்பெண்களை நிறுத்திவிட்டுத் தாம் மோர் விற்கவும் மாடு மேய்க்கவும் வெளியிற்சென்றவாறே நீ அப்பெண்களை உனக்கு வேண்டின விடங்களிலே கொண்டுபோகின்றாய்; ஏற்கனவே உன்னைப் பழிக்கின்ற கம்ஸாதிகள் நீ செய்த இத்தீம்புகளைக் கேட்டு—வெறுமனே மெல்லுகின்ற வாயனுக்கு ஒரு பிடி அவலும் அகப்பட்டாற் போலக் 'கண்ணனை நாம் ஏசுவதற்குப் பற்பலசங்கதிகள் கிடைத்தன' என்று மகிழும்படியாக இவ்வகைத் தீமைகள் செய்கின்ற உன்னை அநுகூலரும் வெறுக்கும்படியாய் இப்படிகளாலே நீ பிராகிருதனைத் தோற்றுவையாகிலும் உனது மெய்யான ஸ்வரூபத்தை நான் அறிந்துகொண்டு உனக்கு அம்மம்தர அஞ்சுவேன் என்கிறாள். பெண்கள் தங்களகங்களிலே தனியிருத்தலால் இவன் அவ்விடத்தேயிருந்து அவர்களோடு ரமிக்கக் கூடுமாயினும், தாய்தந்தையரைத் தேடிக்கொண்டு ஆரேனும் அங்குவந்தாற் செய்வதென்? என்ற சங்கையினால் வெளியிடத்தே அவர்களைக் கொண்டு போயினனென்க. [கற்றாநிரை.] கற்று ஆநிரை என்று பிரித்து, (பசியால்) கற்றுகின்ற [கதறுகின்ற] பசுக்களின் திரள் என்று உரைத்தலு மொக்கும். கண்டார்—உன்னைப் பார்த்த பார்த்த மநுஷ்யர்களெல்லாரும் என்றும் பொருளாம். ... ... ... (௯)

தொத்தார் பூங்குழற் கன்னி யொருத்தியைச் சோலைத் தடங்கொண்டு புக்கு
முத்தார் கொங்கை புணர்ந்திரா நாழிகை மூவேழு சென்றபின் வந்தாய்
ஒத்தார்க் கொத்தன பேசுவ ருன்னை யுரப்பவே நானொன்றும் மாட்டேன்
அத்தா வுன்னை யறிந்துகொண் டேனுனக் கஞ்சுவ னம்மந் தரவே. (௧௦)

தொத்து ஆர் - கொத்தாய்ச் சேர்ந்திருந்துள்ள
பூ - புஷ்பங்கள் அணியப்பெற்ற
குழல் - கூந்தலையுடைய
கன்னி ஒருத்தியை - ஒரு கன்னிகையை
தடஞ்சோலை—விசாலமானதொரு சோலையிலே
இரா—(நேற்று) இரவில்
கொண்டு புக்கு-அழைத்துக்கொண்டுபோய்
(அவளுடைய)

முத்து ஆர் - முத்துவடமணிந்த
கொங்கை - ஸ்தநங்களோடு
புணர்ந்து - ஸம்ச்லேஷித்துவிட்டு
மூ ஏழு நாழிகை சென்ற பின் } மூன்றுயாமங்கள் கடந்த பிறகு
வந்தாய் - (வீட்டுக்கு)வந்து சேர்ந்தாய்;
(நீ இவ்வாறு தீமை செய்கையாலே)
உன்னை - உன்னைக்குறித்து
ஒத்தார்க்கு ஒத்தன பேசுவர் } வேண்டுவார் வேண்டினபடிசொல்லுவர்கள்;

(இப்படி அவர்கள் சொல்லாதிருக்கும்படி)
உரப்ப - (உன்னை) சிக்ஷிக்க
நான் - (அபலையாகிய) நான்
ஒன்றும் - கொஞ்சமும்
மாட்டேன் - சக்தையல்லேன்;
அத்தா - நாயனே!
உன்னை அறிந்து கொண்டேன் உனக்கு
அம்மம் தர அஞ்சுவன்.—

குறிப்பு:—'சோலைத்தடம்' என்றவிடத்து 'தடம்' என்ற சொல் தடம் என்னும் வடசொல்லின் விகாரமாய் 'சோலைத்தடம்' என்பதற்குச் சோலைப் பிராந்தங்களிலே என்று பொருள் கொள்ளவுங் கூடும். [ஒத்தார்க்கு இத்யாதி.](ஒத்தார்க்கு என்றது ஒத்தார் என்றபடி; ஆறனுருபுக்குப் பொருளில்லை; வழக்குபற்றிவந்த வழுவமைதி.) உன் மேல் பழி சொல்ல நினைத்தவர்கள் நீ செய்யாதவற்றையுஞ் சில சேர்த்துக் கொண்டு தாங்கள் நினைத்தபடி சொல்லத் தடையில்லை யென்றவாறு. உரப்புதல்—வாயால் அதட்டுதல். "ஊனமுடையன செய்யப்பெறாயென் றிரப்பனுரப்பகில்லேன்" என்றார் திருமங்கையாழ்வாரும். ... ... ... ... ... (க0)

காரார் மேனி நிறத்தெம் பிரானைக் கடிகமழ் பூங்குழ லாய்ச்சி
ஆரா வின்னமு துண்ணத் தருவன்நா னம்மந்தா ரேனென்ற மாற்றம்
பாரார் தொல்புக ழான்புது வைமன்னன் பட்டர் பிரான்சொன்ன பாடல்
ஏரா ரின்னிசை மாலை வல்லா ரிருடீ கேசனடி யாரே. (கக)

கார் ஆர் - மேகத்தோடு ஒத்த
மேனி நிறத்து - திருமேனி நிறத்தையுடைய
எம் பிரானை - கண்ணபிரானைக்குறித்து,
கடி கமழ் பூ குழல் ஆய்ச்சி } வாஸனைவீசாநின்ற பூக்களை அணிந்த கூந்தலையுடைய யசோதை
ஆரா இன் அமுது உண்ண தருவன் நான் } "'எவ்வளவு குடித்தாலும்) திருப்திபிறவாத இனிய ஸ்தந்யத்தை
(இதுவரை உனக்கு உண்ணத் தந்துகொண்டிருந்த நான்
(இன்று உன்ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தேனாகையால்)
அம்மம் தாரேன்-அம்மந்தர அஞ்சுவேன்"
என்ற மாற்றம் - என்று சொன்ன பாசுரத்தை

சொன்ன - அருளிச்செய்த,
பார் ஆர் - பூமியெங்கும் நிறைந்துள்ள
தொல் - பழமையான
புகழான் - கீர்த்தியையுடையராய்
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு
மன்னன் - நிர்வாஹகரான
பட்டர் பிரான் - பெரியாழ்வாருடைய
பாடல் - பாடலாகிய
ஏர் ஆர் இன் இசை மாலை } இயலழகாலே நிறைந்து இனிய இசையோடே கூடியிருந்துள்ள சொல்மாலையை
வல்லார் - ஓதவல்லவர்கள்
இருடீகேசன் - ஹ்ருஷீகேசனான எம்பெருமானுக்கு
அடியார் - அடிமைசெய்யப் பெறுவர்கள்

குறிப்பு:—[ஆராவின்னமுது.] யசோதைப் பிராட்டியின் முலை, பூதனையின் முலைபோல் விஷந்தடவப் பெற்றிராமையால், அம்முலையிற்பால் அமுதாகச் சொல்லப்பட்டது. [தருவன் நான் அம்மம் தாரேன்.] 'தருவன்' என்ற எதிர்கால வினைமுற்று (வழுவமைதி யிலக்கணப்படி) 'தந்தேன்' என்ற இறந்தகாலப் பொருளைத்தந்தது மன்றி, 'தந்த நான் அம்மந்தாரேன்' என்று பெயரெச்சப் பொருளையுந் தந்தவாறு காண்க: ஆகவே இவ்வினைமுற்று—முற்றெச்சம் என்றற்பாற்று. ... ... ... ... (௧௧)

*அடி:—தன்னேர் பொன் கும்மாயம் மையார் முப்போது கரும்பு மருட்டார் வாளா தாய்மார் தொத்தார் காரார் அஞ்சனம்.*

## முதல் திருமொழி உரை முற்றிற்று

## இரண்டாந்திருமொழி

## அஞ்சனவண்ணனை.

**அவதாரிகை:**—*கீழ்த்திருமொழியில் கண்ணபிரான்பக்கல் புத்ரத்வபுத்தியைத் தான்தவிர்த்துக் கொண்டமையை வெளியிட்ட யசோதைப்பிராட்டி அத்தை மறந்துவிட்டுக் கண்ணனைத் தன்மகனாகவே கொண்டு சாதிக்குத் தக்கவாறாக அவனைக் காலையிலே கன்றுமேய்க்கக் காட்டேற அனுப்பிவிட்டுப் பின்பு அவன்பிரிவைத்தான் பொறுக்கமாட்டாமல் நொந்து, அவன் ஊரில் தீமைசெய்து திரியும்படிகளைச்சொல்லி 'அவனை இங்ஙனே இங்குச் செய்துகொண்டிருக்க வொட்டாமல் கல்லும் முள்ளுமான கடுங்காட்டிற் போக்கினேனே பாவியேன்' என்று கதறினவாற்றை ஆழ்வார்தாமும் தம்மை அவளாகப்பாவித்துப் பேசுகிறார்—இத்திருமொழியில்.*

அஞ்சன வண்ணனை யாயர் கோலக் கொழுந்தினை
மஞ்சன மாட்டி மனைக டோறுந் திரியாமே
கஞ்சனைக் காய்ந்த கழலடி நோவக் கன்றின்பின்
என்செயப் பிள்ளையைப் போக்கினே னெல்லே பாவமே. (௧)

அஞ்சனம் வண்ணனை } மைபோன்ற நிறத்தையுடையனாய்
ஆயர் கோலம் - இடைக்கோலம் பூண்டுள்ளவனாய்
கொழுந்தினை - (அவ்விடையர்க்குத்) தலைவனாய்
பிள்ளையை – (எனக்குப்) பிள்ளையுமான கண்ணனை
மனைகள் தோறும் - (தன்வீட்டிற் போலவே) அயல்வீடுகள் தோறும்
திரியாமே - (இஷ்டப்படி) திரியவொட்டாமல்
மஞ்சனம் ஆட்டி - (காலையில் குள்ளக்குளிர) நீராட்டி,
கஞ்சனை - கம்ஸனை
காய்ந்த - சீறியுதைத்த
கழல் - வீரக்கழலை அணிந்துள்ள
அடி - திருவடிகள்
நோவ - நோம்படியாக
கன்றின் பின் - கன்றுகளின் பின்னே(மேய்க்கப் போவென்று)
என் செய போக்கினேன் } ஏதுக்காகப் போகவிட்டேன்!;
எல்லே பாவமே-மஹாபாபம்! மஹாபாபம்

குறிப்பு:—ஆயர்கோலக் கொழுந்தினை - இடையர்களுக்கு அழகியகொழுந்து போன்றுள்ளவ னென்னவுமாம்; வேரிலே வெக்கைதட்டினால் முற்

படவாடுங் கொழுந்துபோலே, ஊரிலுள்ளாரில் ஆர்க்கேனும் ஒரு நோவுவந்தால் முற்படக்கண்ணபிரான் தன்முகம் வாடும்படியிருத்தலால் கொழுந்தெனப்பட்டான். மஞ்சனமாட்டி என்றவினையெச்சம் - 'போக்கினேன்' என்பதோடு இயையும். கம்ஸனைச் சீறியுதைத்த திருவடிகள் ஏற்கனவே நொந்திருக்கும், பின்னையும் நோவு விஞ்சும்படியாகக் காட்டுக்கனுப்பிய பாவியேனுடைய பாவவினைவு என்னையிருந்ததென்று வயிறெரிகின்றனள் திரியாமே-தன்வினை யெதிர்மறைவினையெச்சம்; திரிவியாமே [திரியச்செய்யாமல்] என்று பிறவினைப்பொருள் கொள்க. கழல்-வீரத்தண்டை. என் செய - என் செய்ய; தொகுத்தல். எல்லே— இரக்கத்தைக்குறிக்கும் இடைச்சொல். ... (க)

பற்றுமஞ் சள்பூசிப் பாவை மாரோடு பாடியில்
சிற்றில் சிதைத்தெங்குந் தீமை செய்து திரியாமே
கற்றுத் தூளியுடை வேடர் கானிடைக் கன்றின்பின்
எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினே னெல்லே பாவமே. (உ)

பாடியில் - திருவாய்ப் பாடியில்
பற்று மஞ்சள் பூசி } பற்றப் பார்க்கும் மஞ்சளை (த் திருமேனியெங்கும்பெண் [கள்கையால்தனித்தனியே) பூசப்பெற்று,
சிற்றில் சிதைத்து } (அப்பெண்கள் இழைக்கும்) சிற்றில்களை உதைத்தழித்து (இப்படி)
எங்கும் - எல்லாவிடங்களிலும்
தீமை செய்து - தீம்புகளைச் செய்துகொ [ண்டு
பாவைமாரொடு - அவ்விடைப் பெண்க [ளோடே
திரியாமே - திரியவொட்டாமல்,
கன்று - கன்றுகளினுடைய
தூளி உடை - தூள்களையுடைத்தாய்
வேடர் - (அடித்துப்பிடுங்கும்) வேடர்களு [க்கிருப்பிடமான
கான் இடை - காட்டிலே
கன்றின் பின்—கன்றுகளின்பின்னே (திரு [யும்படியாக)
என் பிள்ளையை - என்மகனை
எற்றுக்கு போக்கினேன்-எதுக்காக அனு [ப்பினேன்!
எல்லே பாவமே.—

குறிப்பு:—திருவாய்ப் பாடியில் இடைப்பெண்கள் மஞ்சளரைத்தால் 'இது பற்றும், பற்றாது' என்பதைப் பரீக்ஷிப்பதற்காகக் கண்ணபிரானுடைய கரியதிருமேனியிலே பூசிப்பார்ப்பர்களாம்; ஆதலால் அம்மஞ்சள் பற்றுமஞ்சள் எனப்பேர் பெற்றது. [கற்றுத்தூளி யித்யாதி.] கன்றுகளின்திரள் தாகைத்துக் கிளப்பின தூள்கள் காடெங்கும் பரக்குமாதலால் கண்ணபிரானுடைய பொன் போல் மஞ்சனமாட்டின மேனி நிறம் மழுங்குமேயென்று வயிறெரிகின்றனள். தூளி-ய-ஙஹி:. ... ... ... ... (உ)

நன்மணி மேகலை நங்கை மாரோடு நாடோறும்
பொன்மணி மேனி புழுதி யாடித் திரியாமே
கன்மணி நின்றதிர் கான தரிடைக் கன்றின்பின்
என்மணி வண்ணனைப் போக்கினே னெல்லே பாவமே. (ங)

| | |
|---|---|
| என் - என் மகனான | கான் - காட்டிலே |
| மணி வண்ணனை - நீலமணிபோன்றவடி[வையுடைய கண்ணனை, | (இவன் கன்றுகளை அழைக்கிற த்வநியா லும், அவை கூவுகிற த்வநியாலும்) |
| நல் - லோகோத்தரமான | கல் - மலையிலே |
| மணி - நவமணிகள் (பதித்த, | மணி நின்று அதிர் } மணியிேனாசை போல பிரதித்வநியெழும்பப் [பெற்றுள்ள [பயங்கரமான] |
| மேகலை - மேகலையை (அணிந்துள்ள) | அதர் இடை - வழியிலே |
| நங்கைமாரொடு - யுவதிகளோடுகூட | (வருந்தும்படியாக) |
| நாள் தொறும் - தினந்தோறும் | கன்றின் பின் - கன்றுகளின் பின்னே |
| பொன் மணி மேனி } அழகிய நீலமணிபோன்ற திருமேனியானது | போக்கினேன் - போகவிட்டேனே! |
| புழுதி ஆடி-புழுதிபடைக்கப்பெற்று(விளை[யாடி | எல்லே பாவமே! |
| திரியாமே - திரியவொண்ணாதபடி, | |

குறிப்பு:—என் கண்ணபிரான் தானுகந்தபெண்களோடுகூடித் திருமேனி புழுதிபடியும்படி யதேச்சமாக விளையாடிக்கொண்டு இச்சேரியிலேயே திரிந்துகொண்டிருந்ததைத் தவிர்த்துக் கொடிய காட்டு வழியிலே போகவிட்டேனே பாவியேனென்று பரிதபிக்கின்றாள். மேகலை-ஒட்டியாணம்; அரைவடம். நாடொறும் திரியாமே என்று இயையும். 'கல்' என்ற சொல் இலக்கணையால் மலையை உணர்த்திற்று. கண்ணபிரான் காட்டுவழியிற் போம்போது இவன் கன்றுகளை அழைக்கிறத்வநியாலும் அதைக்கேட்டு அவை கூப்பாடு போடுகின்ற த்வநியாலும் அருகிலுள்ள மலைகளில் பயங்கரமான பிரதித்வநி கிளம்புமே! என்று வழியின் கொடுமையை நினைத்து நோகின்றாளென்க (௩)

வண்ணக் கருங்குழல் மாதர் வந்தலர் தூற்றிடப்
பண்ணிப் பலசெய்திப் பாடி யெங்குந் திரியாமே
கண்ணுக் கினியானைக் கான தரிடைக் கன்றின்பின்
எண்ணற் கரியானைப் போக்கினே னெல்லே பாவமே. (௪)

| | |
|---|---|
| கண்ணுக்கு இனியானை } கண்களுக்கு மிகவும் தர்சநீயனாய் | மாதர் - பெண்பிள்ளைகள் |
| எண்ணற்கு அரியானை } (இத்தன்மையன் என்று) நினைக்கமுடியாதவனுமுள்ள [கண்ணபிரானை, | வந்து (தாயாகிய என்னிடம் ஓடி) வந்து |
| இ பாடி எங்கும் - இத்திருவாய்ப்பாடி [முழுவதும் | அலர் தூற்றிட பண்ணி } பழி தூற்றும்படியாகப் பண்ணிக்கொண்டு |
| பல செய்து - பல(தீமைகளைச்) செய்து (அத்தீமைகளினால்,) | திரியாமே - திரியவொட்டாமல் |
| வண்ணம் கரு குழல் } அழகிய கறுத்த கூந்தலையுடையரான | கான் அதர் இடை - காட்டுவழியிலே |
| | கன்றின் பின் - கன்றுகளின்பின்னே(திரி[யும்படி) |
| | போக்கினேன் - அனுப்பினேனே! |
| | எல்லே பாவமே! — |

குறிப்பு:—பண்ணிப் பலசெய்தி பாடியெங்கும்' என்று பாடமோதி, மாதர்வந்து அலர்தூற்றிடும்படி (இப்)பாடியெங்கும் பலசெய்திகளைப்பண்ணி என்று உரைத்தலும் ஏற்கும். [கண்ணுக்கினியானை.] எத்தனையேனும் தீம்பு

செய்யினும் அவன்வடிவழகை நினைத்தால் 'ஆகிலுங்கொடிய வென்னெஞ்சம் அவனென்றே கிடக்கும்' என்றாற்போல இவனைவிடப் போகாதே! என்று கருத்து. ... ... ... ... ... (ச)

அவ்வவ் விடம்புக்கவ் வாயர் பெண்டிர்க் கணுக்கனாய்க்
கோவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்யாமே
எவ்வுஞ் சிலையுடை வேடர் கானிடைக் கன்றின்பின்
தெய்வத் தலைவனைப் போக்கினே னெல்லே பாவமே. (ரு)

தெய்வம் - தேவர்களுக்கு
தலைவனை - நிர்வாஹகனான கண்ணனை,
அ அ இடம் புக்கு - (மச்சுமாளிகை முதலான) அவ்வவ்விடங்களில் (ஏகாந்தமாகப்) புகுந்து
அ ஆயர் பெண்டிர்க்கு- (அவ்வவ்விடங்களிலுள்ள) அவ்விடைப்பெண்களுக்கு
அணுக்கன் ஆய் - அந்தரங்கனாய் (அவர்களுக்கு)
கொவ்வைக் கனி-கோவைப்பழம் போன்ற
வாய்—(தன்) அதரத்தை
கொடுத்து - (போக்யமாகக்) கொடுத்துக் [கொண்டு
கூழைமை செய்யாமே - கூழ்மைத்தனமடித்துத்திரியவொட்டாமல்
எவ்வும்—துன்பத்தைவிளைக்குமதான
சிலை உடை—வில்லை (க்கையிலே) உடைய
வேடர்—வேடர்களுக்கு (இருப்பிடமான)
கான் இடை—காட்டிலே
கன்றின் பின்போக்கினேன்—;
எல்லே பாவமே!

குறிப்பு:—கீழ்த்திருமொழியில், "கோளரரயர் குலத்தவரிப்பழி கெட்டேன் வாழ்வில்லை" என்று சொன்ன யசோதைதானே இப்போது இங்ஙன் சொல்லுகை சேருமாறு எங்ஙனேயெனின்? கண்ணபிரானது பிரிவைப்பொறுக்கமாட்டாமல் 'அவன் என்னை இவ்வாறு பிரிந்து வருத்துதலுங்காட்டில் இங்குத் தான் நினைத்தபடி தீமைசெய்து திரிவானாகில் இத்தனைவருத்தமெனக்கு விளையாதே! என்று கருதினாள்போலும். அணுக்கன்-அணுகியிருப்பவன்; அந்தரங்கமாயிருப்பவன் என்றவாறு. கூழைமை செய்கையாவது- 'உன்னையொழிய வேறொருத்தியையும் அறியமாட்டேன், உன்னைப் பிரிந்தால் க்ஷணமும் தரிக்கமாட்டேன்' என்றாற்போலச் சொல்லி அவ்வப்பெண்களுக்கே உரியனாய்த் தோற்ற நிற்கை. [எவ்வுஞ்சிலை.] எவ்வம் என்றால் துன்பம்; அதனைச்செய்யுஞ் சிலை—எவ்வுஞ்சிலையாம்.

அன்றிக்கே; 'ஏவுஞ்சிலை' என்கிறவிது-எதுகையின்பம்நோக்கி 'எவ்வுஞ்சிலை' என்று கிடக்கிறதாகக் கொண்டால, ஏ என்று அம்புக்குப் பேராய் அத்தையும் சிலையையுமுடைய என்று பொருளாம். மோனையின்பத்துக்கிணங்க 'வெவ்வுஞ்சிலையுடை' என்று பாடமோதி, வெவ்விய [தீக்ஷ்ணமான] சிலையையுடைய என்று உரைத்தல் ஒக்குமென்பாருமுளர். ... ... (ரு)

மிடறு மெழுமெழுத் தோட வெண்ணெய் விழுங்கிப்போய்ப்
படிறு பலசெய்திப் பாடி யெங்குந் திரியாமே
கடிறு பலதிரி கான தரிடைக் கன்றின்பின்
இடறவென் பிள்ளையைப் போக்கினே னெல்லே பாவமே. (சூ)

என் பிள்ளையை—என் மகனான கண்ணபிரானை,
வெண்ணெய்—வெண்ணெயை
மிடறு—கழுத்திலே
மெழு மெழுத்து ஓட—(உறுத்தாமல்) மெழுமெழுத்து ஓடும்படி
விழுங்கி—விழுங்கிவிட்டு
போய்—(பிறரகங்களுக்குப்) போய்
பல படிறு—பல கள்ளவேலைகளை
செய்து—செய்துகொண்டு
இ பாடி எங்கும்—இவ்விடைச்சேரிமுழுதும்
திரியாமே—திரியவொட்டாமல்
பல கடிறு திரி—பலகாட்டானைகள் திரியப்பெற்ற
கான் அதர் இடை—காட்டுவழியிலே
இடற—தட்டித்திரியும்படியாக
கன்றின் பின்போக்கினேன்;—
எல்லே பாவமே!—

குறிப்பு:—இலட்டுவம் சீடைமுதலான பணியாரங்களைப் புஜிக்கவேண்டுமானால் கல் உண்டோவென்று சோதித்து மெதுவாகக் கடித்துண்ணவேணும்; வெண்ணெயாகையால் வருத்தமின்றி மெழுமெழென்று உள்ளே இழியுமிறே; ஆகையால் அதனை விழுங்குமென்க. பலபடிறு செய்கையாவது—* கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்புதுகிலவை கீறுகை; * பந்துபறித்துத் துகில்பற்றிக் கீறுகை. களிறு என்றசொல் எதுகையின்பம் நோக்கிக் கடிறு எனவந்தது; டகாரளகரப்போலி; 'டலயோரபேத:' என்பர் வடநூலாரும். ... ... ... ... (௬)

வள்ளி நுடங்கிடை மாதர் வந்தலர் தூற்றிடத்
துள்ளி விளையாடித் தோழ ரோடு திரியாமே
கள்ளி யுணங்குவெங் கான தரிடைக் கன்றின்பின்
புள்ளின் றலைவனைப் போக்கினே னெல்லே பாவமே. (எ)

புள்ளின் தலைவனை—பெரியதிருவடிக்குத் தலைவனான கண்ணபிரானை
வள்ளி—கொடிபோன்று
நுடங்கு—துவளாநின்றுள்ள
இடை—இடையையுடைய
மாதர்—(இடைப்) பெண்கள்
வந்து—(தாயாகிய என்னிடத்தில்) வந்து (இவன்செய்ததீமைகளைச்சொல்லி)
அலர் தூற்றிட—பழி தூற்றிக்கொண்டிருக்கச்செய்தே
(அதை ஒருபொருளாகமதியாமல்)
துள்ளி—(நிலத்தில் நில்லாமல்) துள்ளி
தோழரோடு—(தன்) தோழர்களோடுகூட
விளையாடி—விளையாடிக்கொண்டு
திரியாமே—திரியவொட்டாமல்
கள்ளி—(மழையில்லாக்காலத்திலும் பசுமைமாறாத) கள்ளிச் செடியுங்கூட
உணங்கு—(பால்வற்றி) உலரும்படியாய்
வெம்—மிக்கவெப்பத்தையுடைய
கான் அதர் இடை—காட்டுவழியிலே
கன்றின் பின்போக்கினேன்;—
எல்லே பாவமே!—

குறிப்பு:—வள்ளி-வல்லி. கொடியை ஒத்து ஒடிந்து விழுகிறாப்போலிருக்கின்ற [அதிஸூக்ஷ்மமான] இடையையுடையாரென்றபடி. 'அப்பெண்கள் என்னிடம் வந்து இவன்செய்த தீம்புகளைச்சொல்லிப் பழிதூற்றாநின்றால், அதனையேயிவன் ஏற்றமாகக்கொண்டு மகிழ்ச்சியின் மிகுதியால் தோழருடன்கூடித் துள்ளிவிளையாடுவனே, இவ்வாறான விநோதச் செய்கைகளைச் செய்து திரியவொட்டாமல் முதுவேனிற்காலத்திலும் பசுகுபசுகென்று விளங்கக்கடவகள்ளிச்செடியுங்கூடப் பால்வற்றி உலரும்படி வெம்மைமிக்க காட்டுவழியில் வருந்தும்படி அனுப்பிவிட்டேனே! என்று கதறுகின்றனள். ... ... ... ... (எ)

பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டவப் பாங்கினால்
என்னிளங் கொங்கை யமுத மூட்டி யெடுத்தியான்
பொன்னடி நோவப் புலரியே கானிற் கன்றின்பின்
என்னிளஞ் சிங்கத்தைப் போக்கினே னெல்லே பாவமே. (௮)

என் இள சிங்கத்தை } எனது சிங்கக்குட்டிபோன்ற கண்ணபிரானை,
பன்னிரு திங்கள்-பன்னிரண்டுமாஸகாலம்
வயிற்றில் கொண்ட அ பாங்கினால் } (என்) வயிற்றிலே வைத்து நோக்கின [அப்படிப்பட்ட அன்புக்கேற்ப
யான்-(தாயாகிய) நான்
என்-என்னுடைய
இள-குழைந்திராநின்றுள்ள
கொங்கை-முலையிலுண்டான
அமுதம்-பாலை
ஊட்டி-(அவனுக்கு) உண்ணக்கொடுத்து
எடுத்து-வளர்த்து
(இப்படியாக அருமைப்பட நோக்கின பிள்ளையை)
புலரியே-(இன்று)விடியற்காலத்திலேயே (எழுப்பி)
பொன் அடி நோவ } அழகிய திருவடிகள் நோவெடுக்கும்படியாக
கானில்-காட்டிலே
கன்றின் பின் போக்கினேன்;—
எல்லே பாவமே!—

குறிப்பு:—சக்ரவர்த்திதிருமகனைப்போலவே கண்ணபிரானும் பன்னிரண்டுமாஸம் கர்ப்பவாஸம்பண்ணிப் பிறந்தானென்க. இவ்வாறு லோகவிலக்ஷணமாகப் பிறந்தபிள்ளையிடத்தில் இதுவேகாரணமாக மிகுந்த அன்பை வைத்து அதற்குத்தக்கபடி என்முலைப்பாலை யூட்டிவளர்த்துப் போந்தநான் இன்றுகாலையில் அவனையெழுப்பிக் கால்நோவக் கன்றுமேய்க்கக் காட்டில் போகவிட்டேனேயென்று இன்னாதாகிறாள். கண்ணபிரானை யசோதைப்பிராட்டி மெய்நொந்து பெற்றிலளேயாகிலும் 'உன்னையென்மகனே யென்பர் நின்றார்' என்றபடி ஊரார் இவனை இவள்பெற்ற பிள்ளையாகவே சொல்லிவருகையால் இவளுமதைக்கொண்டு தானே அவனைப் பன்னிருதிங்கள் வயிற்றிற் கொண்டாளாகக் கூறினளெனக்கொள்க. பாங்கு—உரிமை, முறைமை. பிள்ளை முலைநெருடுங்காலத்தில் வரக்கென்றிருக்கை யன்றிக்கே குழைந்திருக்கும்படியைப்பற்ற இளமுலை என்கிறது. எடுத்து + யான், எடுத்தியான்; "உக்குறள்......யவ்வரின் இய்யாம்" என்பது நன்னூல். ... ... (௮)

குடையுஞ் செருப்புங் கொடாதே தாமோ தரனைநான்
உடையுங் கடியன வூன்று வெம்பரற் களுடைக்
கடியவெங் கானிடைக் காலடி நோவக் கன்றின்பின்
கொடியேனென் பிள்ளையைப் போக்கினே னெல்லே பாவமே. (௯)

என் பிள்ளையை-என்மகனான
தாமோதரனை-கண்ணபிரானை,
குடையும்-குடையையும்
செருப்பும்-செருப்பையும்
கொடாதே-(அவனுக்குக்) கொடாமல்
கொடியேன் நான்-கொடியவளாகிய நான்
உடையும்-(ஸூர்யனுடைய வெப்பத்தாலே) உடைந்திகிடப்பனவாய்
கடியன-கூரியனவாய்க்கொண்டு
ஊன்று-(காலிலே) உறுத்துவனவாய்
வெம்-(இப்படி) அதிதீக்ஷ்ணமான
பரற்கள் உடை-பருக்காங்கல்லையுடைய
கடிய வெம்-அத்யுஷ்ணமான
கான் இடை-காட்டிலே
கால் அடி நோவ கன்றின் பின் போக்கினேன்—;
எல்லே பாவமே!—

குறிப்பு:—காட்டிலுள்ள பருக்காங்கற்கள் கதிரவனுடைய எரிச்சலினால் ஒன்று பலவாகப்பிளந்து கூர்மைமிக்கு உள்ளங்காலில் உறுத்திவருத்துமே, வெயிலுக்குத்தடையாகக் குடையையும், தரையின் வெம்மைக்குத் தடையாகச் செருப்பையும் அவனுக்குத் தாராமல் இப்படிப்பட்ட காட்டிற்போக விட்டேனே, என்கொடுமை யிருந்தவாறு என்னே! என்கிறாள். மேல்திருமொழியில் 'குடையுஞ் செருப்புங்குழலுந் தருவிக்கக்கொள்ளாதே போனாய் மாலே' எனக்காண்கையால் இங்குக் 'கொடாதே' என்பதற்கு - அவன் இவற்றை 'வேண்டா' வென்றுமறுக்கச் செய்தேயும் நான் கட்டாயப்படுத்தி [பலாத்காரமாக] அவற்றைக்கொடாமல் என்று பொருள்விரித்தல் வேண்டுமென்க. பரல்—பருக்கை. கால் அடி-காலின் உள்ளடி. ... ... (௯)

என்று மெனக்கினி யானை யென்மணி வண்ணனைக்
கன்றின்பின் போக்கினே னென்ற சோதை கழறிய
பொன்றிகழ் மாடப் புதுவையர் கோன்பட் டன்சொல்
இன்றமிழ் மாலைகள் வல்ல வர்க்கிட ரில்லையே. (௧௦

என்றும்—எப்போதும்
எனக்கு—(தாயாகிய) எனக்கு
இனியானை—இனிமையைத் தருமவனாய்
என்—என்னுடைய
மணி வண்ணனை—நீலமணிபோன்றவடிவையுடையனான கண்ணபிரானை
கன்றின் பின்போக்கினேன் என்று—கன்றுகளின்பின்னே (காட்டில்) போகவிட்டேனே!' என்று
அசோதை—யசோதைப்பிராட்டி
கழறிய—(மனம்நொந்து) சொன்னவற்றை
சொல்—அருளிச்செய்த,
பொன்—பொன்மயமாய்
திகழ்—விளங்காநின்றுள்ள
மாடம்—மாடங்களையுடைய
புதுவையர் - ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளவர்களுக்கு
கோன்—நிர்வாஹகரான
பட்டன்—பெரியாழ்வாருடைய
இன்—போக்யமான
தமிழ் மாலைகள்—தமிழ்ச்சொல்மாலைகளை
வல்லவர்க்கு—ஓதவல்லவர்களுக்கு
இடர் இல்லை—(ஒருகாலும்) துன்பமில்லையாம்.

குறிப்பு:—என்றும்—தீம்புசெய்த காலத்திலுமென்க: "ஆணுடைவிட்டிட்டிருக்கும்" என்றதை நினைக்க. 'கழறிய' என்பதைப் பலவின்பால் இறந்தகால வினையாலணையும் பெயராகக்கொண்டு அதில் இரண்டாம் வேற்றுமையுருபு தொக்கியிருக்கின்றதென்க. ... ... ... (௧௦)

அடி:—அஞ்சனம் பற்று நன்மணி வண்ணம் அவ்வவ்விடம் மிடறு வள்ளி பன்னிரு குடை என்றும் சீலை.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

## மூன்றாந் திருமொழி

## சீலைக்குதம்பை.



அவதாரிகை:—கண்ணபிரானைக் காட்டில்போகவிட்ட கொடுமையைக்கூறி வயி றெரிந்துகொண்டே பகற்போதையெல்லாம் ஒருவாறுபோக்கின யசோதைப்பிராட்டி மாலைப்பொழுதிலே கன்றுகளை மேய்த்துவிட்டு மீண்டுவருகின்ற கண்ணபிரானை எதிர் கொண்டுசென்று அவனுடைய திருமேனியினலங்காராதிகளைத் தான் கண்டுமகிழ்ந்து பிறரையும் காணச்செய்து தான்பெற்றுள்ள பெருமையையும் செய்தகாரியத்தின் புன் மையையுஞ்சொல்லி வருந்தி 'இனிநீ கன்றுகளின்பின்னே காடுநோக்கிச் செல்ல வேண்டா' என்ற பாசுரத்தை ஆழ்வாரும் தம்மை அவளாகப்பாவித்துப் பேசி மகிழ்கி றார்—இத்திருமொழியில்.

சீலைக் குதம்பை யொருகா தொருகாது செந்நிற மேற்றோன்றிப்பூ
கோலப் பணைக்கச்சுங் கூறை யுடையுங் குளிர்முத்தின் கோடாலமுங்
காலிப் பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்துகாணீர்
ஞாலத் துப்புத் திரனைப்பெற்றார் நங்கைமீர் நானேமற் றாருமில்லை. (க)

நங்கைமீர்—பெண்காள்!,
ஒரு காது—ஒருகாதிலே
சீலைக் குதம்பை—சீலைத்தக்கையையும்
ஒரு காது—மற்றொருகாதிலே
செம் நிறம் மேல் தோன்றிப் பூ } செங்காந்தள்பூவையும் (அணிந்துகொண்டு,
கூறை உடையும் — திருப்பரியட்டத்தின் [உடுப்பையும்
(அதுநழுவாமைக்குச் சாத்தின)
கோலம்—அழகிய
பணை—பெரிய
கச்சும் - கச்சுப்பட்டையையும்
குளிர் - குளிர்ந்திராநின்றுள்ள
முத்தின் - முத்தாலேதொடுக்கப்பெற்று
கோடு - (பிறைபோல்) வளைந்திருக்கின்ற
ஆலமும் - ஹாரத்தையும்
(உடையனாய்க்கொண்டு)
காலி பின்னே - கன்றுகளின்பின்னே
வருகின்ற - (மீண்டு) வாராநின்ற
கடல் வண்ணன் - கடல்போன்ற நிறத்தை [யுடைய கண்ணனுடைய
வேடத்தை - வேஷத்தை
வந்து காணீர் - வந்துபாருங்கள்;
ஞாலத்து - பூமண்டலத்திலே
புத்திரனை - பிள்ளையை
பெற்றார் - பெற்றவர்களுள்
('நல்லபிள்ளை பெற்றவள்' என்றுசொல்லத்தக்கவள்)
நானே - நான் ஒருத்தியேயாவேன்;
மற்று ஆரும் இல்லை } வேறொருத்தியுமில்லை.

குறிப்பு:—சீலைக்குதம்பை = 'போய்ப்பாடுடையநின்' என்ற திருமொழி யில் யசோதைப்பிராட்டி கண்ணபிரானை வேண்டியழைத்துக் காதிலிட்ட துணித்திரி. "திரியை யெரியாமே காதுக்கிடுவன்" இத்யாதி.—இரண்டுகாது களிலும் அத்திரியை இவள் இட்டனுப்ப, அவன் காட்டிலே ஒருகாதில் திரியைக்களைந்திட்டுச் செங்காந்தள்பூவை அணிந்துகொண்டுவந்தமை அறிக. உடை என்பது வஸ்திரத்திற்கும் அதனை உடுத்துதற்கும்பேர். இங்கு இரண் டாவதான தொழிற்பொருளைக்கொள்க. ஆலம் = 'ஹாரம்' என்றவடசொல் ஆரமெனத்திரிந்து ரகரத்திற்கு லகரம் போலியாகவந்தது: அன்றிக்கே, 'கோடாரமும்' என்றே பாடமாகவுமாம்; அன்றிக்கே, 'கோடாலம்' என்

ளுரு முழச்சொல்லாய் முத்துப்பணியைச் சொல்லிற்ருகவுமாமென்பர்- திருவாய்மொழிப்பிள்ளை. வேடம்-வேஷம். பெண்காள்! கச்சுங்கூறையு மாரமுமாக என்கண்ணபிரான் கன்றுமேய்த்து மீண்டுவருகின்ற கோலத்தை வந்துகாண்மின்; பிள்ளை என்ருல் இவனொருத்தனையொழிய மற்றவை அணிற்பிள்ளை கீரிப்பிள்ளை தென்னம்பிள்ளையே யாமத்தனை; அவற்றைப் பெற்ற தாய்களோடு மலடிகளோடு ஒருவாசியில்லை; 'புத்ரவதீ' என்று எனக்கொருத்திக்கேயன்ரே பட்டங்கட்டத்தகும் என்று புகழ்ந்து மகிழ்ந்து பொலிகின்ருள். ... ... ... ... ... (க)

**கன்னிநன்** மாமதிள் சூழ்தரு பூம்பொழிற் காவிரித் தென்னரங்கம்
மன்னிய சீர்மது சூதனு கேசவா பாவியேன் வாழ்வுகந்
துன்னை யிளங்கன்று மேய்க்கச் சிறுகாலே யூட்டி யொருப்படுத்தேன்
என்னில் மனம்வலி யாளொரு பெண்ணில்லை யென்குட்ட னேமுத்தந்தா.

கன்னி - அழிவற்ற
நல் - விலக்ஷணமான
மா மதிள் - பெரியமதில்களாலே
சூழ்தரு - சூழப்பட்டு
பூ பொழில் - பூஞ்சோலைகளையுடைய
காவிரி - காவேரிநதியோடுகூடிய
தென் அரங்கம் - தென்திருவரங்கத்தில்
மன்னிய - பொருந்தியெழுந்தருளியிருக்கின்ற
சீர் - கல்யாணகுணயுக்தனுன
மது சூதனு - மதுஸூதநனே! [கண்ணபிரானே!]
கேசவா - கேசவனே!
பாவியேன் - பாவியாகியநான்
வாழ்வு உகந்து - (நமது ஜாதிக்கேற்ற கன்று மேய்க்கையாகிற) ஜீவநத்தை விரும்பி

உன்னை - (இவ்வலைச்சலுக்கு ஆளல்லாத) உன்னை
சிறுகாலே - விடியற்காலத்திலேயே
ஊட்டி - உண்ணச்செய்து
இள கன்று மேய்க்க - இளங்கன்றுகளை மேய்க்கைக்காக (அவற்றின்பின்னே போக)
ஒருப்படுத்தேன் - ஸம்மதித்தேன்; (இப்படி உன்னை அனுப்பிவிட்டுப் பொறுத்திருந்த)
என்னில் - என்னிற்காட்டில்
மனம் வலியாள் - கல்நெஞ்சையுடையளான
ஒரு பெண் - ஒருஸ்த்ரீயும்
இல்லை - (இவ்வுலகில்) இல்லை;
என் குட்டனே - எனதுகுழந்தாய்!
முத்தம் தா - (எனக்கு) ஒருமுத்தம்கொடு.

**குறிப்பு:**—கன்னி-ஸ்திரமாயிருக்கை; நிகண்டு;-"கன்னி பெண் அழிவில்லாமை கட்டிளமைக்கும் பேரே" என்ருன் மண்டலபுருடன். பூம்பொழில்-அரங்கத்துக்கு அடைமொழி. * யாவருமவந்தடிவணங்க அரங்கநகர் துயின்ற ஸர்வேச்வரனை உன் அருமையை நோக்காது உன்னை இடைப்பிள்ளையாகவே நினைத்துச் சாதித்தொழிலென்று கன்றுமேய்க்கைக்காகக் காலையிலே ஊட்டிக்காடேறப்போகவிட்ட எனது நெஞ்சின்காடிந்யத்தை என்னென்று சொல்வேன்; இவ்வாறு கடினமான நெஞ்சையுடைய ஸ்த்ரீ மற்ருரேனுங் கிடைப்பாளோவென்று இவ்வுலகெங்குந் தேடினுலும் கிடையாள்; வேறு சிலராகில் நெஞ்சழிந்து விழுந்து விடார்களோ? இனி இதைப்பற்றிச் சிந்தித்துப்பயனென்? எனக்குண்டான இவ்வருத்த மெல்லாந்தீர ஒருமுத்தங் கொடுத்தருள் என்று அணைத்து உகந்து சொல்லுகின்ருள். வாழ்வு உகந்து

என்ற சொல்நயத்தால்-ஸ்வப்ரயோஜநத்தைக் கணிசித்தேனேயொழிய உன் ஸம்ருத்தியை நான் விரும்பிற்றிலேனே என்று உள்வெதும்புகின்றமை தோற்றும். ஒருப்படுத்தேன் = ஒருப்பாடு-ஒருமனப்படுதல், ஸம்மதித்தல் என்றபடி: நீ கன்றுமேய்க்கும்படியை நான் ஸம்மதித்தேன் என்கை. "ஒருப்படுத்தேன்" என்கிறவிது-உடன்பாட்டுக்கும் எதிர்மறைக்கும் பொதுவான வினை; இங்கு உடன்பாட்டில் வந்ததென்க. முத்தம்-அதரம். ... ... ... (உ)

காடுக ளூடுபோய்க் கன்றுகள் மேய்த்து மறியோடிக் கார்க்கோடற்பூச்
சூடி வருகின்ற தாமோதரா கற்றுத் தூளிகா ணுன்னுடம்பு
பேடை மயிற்சாயற் பின்னை மணாளா நீராட் டமைத்துவைத்தேன்
ஆடி யமுதுசெய் [illegible]ப்பனு முண்டில னுன்னோ டுடனேயுண்பான். (௩)

காடுகள் [illegible] போய் } (பற்பல) காடுகளினுள்ளே புகுந்து
(கன்றுகள்கைகழியப்போகாதபடி)
மறி ஓடி - (அவற்றை) மறிக்கைக்காக [திருப்புகைக்காக] (முன்னே) ஓடி
கன்றுகள் மேய்த்து - (அக்) கன்றுகளை [மேய்த்து
கார் கோடல் பூ சூடி } பெரிய கோடல் பூக்களை முடியிலணிந்துகொண்டு
வருகின்ற - (மீண்டு) வருகின்ற
தாமோதரா - கண்ணபிரானே!
உன் உடம்பு - உன்உடம்பானது
கன்று தூளி காண் } கன்றுகளால் கிளைத்துக்கிளப்பப்பட்ட தூளிகள்படியப்பெற்றுள்ளதுகாண்,

மயில் பேடை - பெண்மயில்போன்ற
சாயல் - சாயலையுடைய
பின்னை - நப்பின்னைப்பிராட்டிக்கு
மணாளா - வல்லபனானவனே!
(இந்த உன்உடம்பை அலம்புவதற்காக)
நீராட்டு அமைத்து வைத்தேன் } நீராட்டத்துக்கு வேண்டியவற்றை விதித்தப்படுத்திவைத்திருக்கின்றேன்; (ஆகையால்நீ)
ஆடி - நீராடி
அமுதுசெய் - அமுதுசெய்வாயாக;
உன்னோடு உடனே - உன்னோடுகூடவே
உண்பான் - உண்ணவேணுமென்று
அப்பனும் - (உன்) தகப்பனாரும்
உண்டிலன் - (இதுவரை) உண்ணவில்லை.

குறிப்பு:—கண்ணபிரானே! நீ கன்றுமேய்க்கக் காட்டிடைப்புகுந்து மேய்க்கும்போது அவை அங்குமிங்கும் சிதறி ஓட, அப்படி அவற்றை ஓடவிடாமல் அவற்றின் முன்னே ஓடித்திருப்பி இவ்வாறு கஷ்டங்கள்பட்டுக் கன்றுகளைமேய்த்துவிட்டு வரும்போது உன் உடம்பெல்லாம் புழுதிபடிந்து கிடக்கின்றது; இந்த மாசுதீரும்படி உன்னை நீராட்டுவதற்காக எண்ணெய் புளிப்பழம் முதலிய ஸாமக்ரிகளைச் சேமித்துவைத்திருக்கின்றேன்; நீவந்தபிறகு உன்னுடனே உண்ணவேணுமென்று உன்தகப்பனாரும் இதுவரை உண்ணாமல் காத்திருக்கின்றார்; ஆகையால் சடக்கெனநீராடி அமுதுசெய்யவா என்றழைக்கின்றாள். கோடல்பூ-காந்தள்பூ; கார்-பெருமைக்கும்பேர். சாயல்-ஒரயா. ... ... ... ... ... ... (௩)

கடியார் பொழிலணி வேங்கடவா கரும்போ ரேறே நீயுகக்குங்
குடையுஞ் செருப்புங் குழலுந் தருவிக்கக் கொள்ளாதே போனாய்மாலே
கடியவெங் கானிடைக் கன்றின்பின் போன சிறுக்குட்டச் செங்கமல
வடியும் வெதும்பியுன் கண்கள் சிவந்தா யசைந்திட்டாய் நீயெம்பிரான். (௪)

கடி ஆர் - (மலர்களின்) பரிமளம்நிறைந்த
பொழில் - சோலைகளையுடைய
அணி - அழகிய
வேங்கடவா - திருவேங்கடமலையி லெழுந்[தருளியிருப்பவனே!
போர் - யுத்தஞ்செய்ய முயன்ற
கரு ஏறே - காளரிஷபம்போல் செருக்கி[யிருக்குமவனே!
மாலே - (கன்றுகளிடத்தில்) மோஹமுள்[ளவனே!
எம் பிரான் - எமக்குஸ்வாமியானவனே!
நீ உகக்கும் - நீவிரும்புமவையான
குடையும் - குடையையும்
செருப்பும் - செருப்பையும்
குழலும் - வேய்ங்குழலையும்
தருவிக்க - (நான் உனக்குக்)கொடுக்கச்செ[ய்தேயும்
கொள்ளாதே - (அவற்றைநீ) வாங்கிக்கொ[ள்ளாமல்
போனாய் - (கன்றுகளின்பின்னே) சென்[றாய்;
(இப்படி)
கடிய வெம் கான் இடை - மிகவும் வெவ்வியகாட்டிலே
கன்றின் பின் - கன்றுகளின்பின்னே
போன - தொடர்ந்துசென்ற
சிறு குட்டன் - சிறுப்பிள்ளையாகிய உன்[னுடைய
செம் கமலம் அடியும் - செந்தாமரைப்பூப்போன்ற திருவடிகளும்
வெதும்பி - கொதிக்கப்பெற்று
உன் கண்கள் - உன்கண்களும்
சிவந்தாய் - சிவக்கப்பெற்றாய்;
நீ—;
அசைந்திட்டாய் - (உடம்பு) இளைக்கவும்[பெற்றாய்.

குறிப்பு:—கண்ணபிரானே! நீ கன்றுமேய்க்குமிடமான காடுகளின் கொடுமையை நான் முன்னமே நினைத்துக் 'குடையையுஞ் செருப்பையுங்கொள்' என்று வேண்டியும் அவற்றை நீ கொள்ளவில்லை; அங்குமிங்குஞ் சிதறியோடுங் கன்றுகளைநீ இருந்தவிடத்திலிருந்துகொண்டே வேய்ங்குழலூதியழைத்துக் கிட்டுவித்துக்கொள்வதற்காக அவ்வேய்ங்குழலையுங் கொடுக்கக் கொண்டிலை, நீசென்ற விடமோ, மிகவும் தீக்ஷ்ணமான காடுநிலம்; காலிற் செருப்பில்லாமையாலே செங்கமலவடிகள் வெதும்பிப்போயின; மேல் குடையில்லாமையாலே கண்கள் சிவந்தன; இங்குமங்குந்திரியாமல் இருந்தவிடத்தேயிருந்து கன்றுகளை மேய்க்கக்குழலில்லாமல தட்டித்திரிந்தபடியால் உடம்பு இளைத்தது; இப்படியுமொரு கஷ்டம் நேரக்கடவதோவென்று வயிறுபிடிக்கிறாள். தருவிக்க என்பதற்குக் 'கொடுக்க' என்றுதன்வினைப்பொருள்கொள்க. போனாய் என்பதை வினைமுற்றாகக் கொள்ளாமல், போனவனே! என விளியாகக் கொள்ளலுந் தகுமெனக்கொள்க. கண்கள் சிவந்தாய்—"சினைவினை சினையொடும் முதலொடுஞ் செறியும்" என்ற சூத்திரமுணர்க. ... (௪)

பற்றார் நடுங்கமுன் பாஞ்சசன் னியத்தை வாய்வைத்த போரேறேயென்
சிற்றாயர் சிங்கமே சீதை மணாளா சிறுக்குட்டச் செங்கண்மாலே
சிற்றாடை யுஞ்சிறுப் பத்திரமு மிவைகட் டிலின்மேல் வைத்துப்போய்க்
கற்றாய ரோடுநீ கன்றுகள் மேய்த்துக் கலந்துடன் வந்தாய்போலும் (௫)

முன் - (பாரதப்போர்செய்த) முற்காலத்[தில்
பற்றார் - (உனதுஉயிர்போன்றபாண்டவர்[களுக்குப்) பகைவரான துரியோதனாதியர்
நடுங்க - நடுங்கும்படி
பாஞ்சசன்னியத்தை - சங்கத்தை
வாய் வைத்த - திருப்பவளத்தில் வைத்து[ஊதின

போர் ஏறே - போர் செய்யவற்ற காளை [போன்ற கண்ணபிரானே!
என் - எனக்குவிதேயனாய்
சிறு ஆயர் சிங்கமே } சிறிய இடைப்பிள்ளைகளுள் சிங்கக்குட்டிபோன்றுள்ளவனே!
சீதை - சீதாபிராட்டிக்கு
மணாளா - வல்லபனானவனே!
சிறு குட்டன் - சிறுப்பிள்ளையாயிருப்பவனே!
(இப்படியிருக்கச்செய்தேயும்)
செம் கண் மாலே } செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய ஸர்வேச்வரனாக விளங்குமவனே!
நீ;—
சிறு ஆடையும் - உன்பருவத்திற்குத்தக்க [சிறியதிருப்பரிவட்டமும்
சிறு பத்திரமும் இவை } குற்றுடைவாளுமாகிற இவற்றை
(காட்டுக்குப்போகையிலுள்ளவிரைவாலே)
கட்டிலின் மேல் வைத்து போய் } (கண்வளர்ந்தருளின) கட்டிலின்மேலேவைத்து மறந்துபோய்
கன்று ஆயரோடு - கன்றுமேய்க்கிற இடை[ப்பிள்ளைகளுடனே
கன்றுகள் மேய்த்து - கன்றுகளை மேய்த்து [விட்டு
(மீண்டு மாலைப்பொழுதிலே)
கலந்து உடன் } (அந்த * தன்னோராயிரம்பிள்ளைகளோடே) கூடிக்கலந்து
வந்தாய் போலும் - வீட்டுக்கு வந்தாயன்[றோ?.

குறிப்பு:—“த்விஷந்அந்ந ந போக்தவ்யம்” “த்வேஷ்யாணாம் ஹி பாண்டவா:” என்று கண்ணபிரான்தானே அருளிச்செய்தமையால், துர்யோதநாதிகள் பாண்டவர்களுக்குப் பகைவராயினும் இவன்றனக்கே பகைவராகச் சொல்லப்பட்டனர்; உயிர்வேறல்லாமையாலே. நடுங்க—“ஸம்பேஷயாதசீநாஷ்டாணாம் ஹ்ருஷ்யாநி வ்யதாரயத்” என்ற கீதையை நினைக்க. சிறுக்குட்டன் + செங்கண்மால் = சிறுக்குட்டச் செங்கண்மால்; “விளிவிகாரமாமுயர்திணை” என்பது நன்னூல்: சிறுக்குட்டன்-சிறுக்குட்டனே! எனவிளித்தவாறு; “இம்முப் பெயர்க்கண் இயல்பும் ஏயும், இகரநீட்சியு முருபாம்மன்னே” என்பது நன்னூல். சிறுப்பத்திரம்-சிறிய கத்தி; “பத்திரமிலை வனப்புப் படை நன்மை சிறகேபாணம்” என்பது நிகண்டு. பின்னிரண்டடிகளின் கருத்து:- நீ கன்றுமேய்க்கக் காடு செல்லநினைத்தபோது நான் உனது உத்தரீயத்தையும் விளையாட்டுக்கு உபகரணமான சொட்டைக்கத்தியையும் தரச்செய்தேயும் நீபோகையிலுள்ள த்வரையாலே அவற்றைக் கட்டிலிலேயேவைத்து மறந்துவிட்டுக் காட்டுக்குப்போய் இடைப்பிள்ளைகளோடொக்கக் கன்றுகளை மேய்த்துவிட்டு மாலைப்பொழுதானவாறே அப்பிள்ளைகளோடுகூடவே ‘இவன் இவர்களிலே ஒருவன்’ என்றே நினைக்கும்படிவந்து சேர்ந்தாயன்றோ என்று உகக்கிறாள்; மேல் பீதாம்பரமும் உடைவாளும் கையிலிருந்தால் வைலக்ஷண்யந் தோற்றும் என்பது உட்கருத்து. ... ... (௫)

அஞ்சுட ராழியுன் கையகத் தேந்து மழகாநீ பொய்கைபுக்கு
நஞ்சுமிழ் நாகத்தி னோடு பிணங்கவும் நானுயிர் வாழ்ந்திருந்தேன்
என்செய்ய வென்னை வயிறு மறுக்கினா யேதுமோ ரச்சமில்லைக் [டாய்.
கஞ்சன் மனத்துக் குகப்பனவே செய்தாய் காயாம்பூ வண்ணங்கோண்

அம் சுடர் - அழகிய ஒளியையுடைய
ஆழி - திருவாழியாழ்வானை
கை அகத்து - திருக்கையிலே
ஏந்தும் - தரியாநின்றுள்ள
அழகா - அழகப்பிரானே!
நீ—;
பொய்கை - (காளியன்கிடந்த) பொய்கை[யிலே
புக்கு - போய்ப்புகுந்து
(அவ்விடத்தில்)
நஞ்சு உமிழ் - விஷத்தை உமிழாநின்ற
நாகத்தினோடு - காளியனோடு
பிணங்கவும் - சண்டைசெய்தபோதும்
நான் உயிர் வாழ்ந்து இருந்தேன் - நான் ஜீவித்திருந்தேன்;
என் செய்ய - ஏதுக்காக
என்னை - என்னை
(இப்படி)
வயிறு மறுக்கினாய் - வயிறுகுழம்பச்செய்[கின்றாய்;
ஏதும் ஓர் அச்சம் இல்லை - (உனக்குக்) கொஞ்சமும் பயமில்லையே;
காயாம் பூ வண்ணம் கொண்டாய் - காயாம்பூப்போன்ற வடிவுபடைத்தவ[னே!
கஞ்சன் - கம்ஸனுடைய
மனத்துக்கு - மநஸ்ஸுக்கு
உகப்பனவே - உகப்பாயுள்ளவற்றையே
செய்தாய் - செய்யாநின்றாய்.

குறிப்பு:—முதலடியில் 'உன்' என்றது-வார்த்தைப்பாடு; பொருளில்லை; அந்வயியாது. கண்ணபிரானே! நீ அன்றொருநாள் காளியன் பொய்கைகலங்கப்பாய்ந்திட, அவன் தன் உடலாலே உன்னைக்கட்ட அதனை உதறிப்பொகட்டு அவனுச்சியின்மீதேறி அவன்வாலைப் பிடித்துக்கொண்டு நின்று திளைத்து அவன்வாயாலே ரத்தம் கக்கும்படி ஆடி இப்படியாய்க்கொண்டு அந்யோந்யம் பிணங்கினபோது நான் உயிர்தரித்திருக்கப் பட்டபாடு பகவானறியும்; நீயோவென்றால் இறையு மஞ்சுகிறிலை; உன்னைக்கொல்ல ஸமயம் பார்த்திருக்கின்ற கம்ஸன் தன்மனோரதம் நிறைவேறப்பெற்று மகிழும்படியாகக் காட்டுக்குச்சென்று கண்டவிடமெங்குந் திரியாநின்றாய்; இப்படிகளை நினைத்தால் என்வயிறு குழம்புகின்றது; இப்படி என்குடலைக் குழப்புவதனால் நீ பெறும் பேறு என்னோ? அறிகிலேன் என்கிறாள். [காயாம்பூ இத்யாதி] இவ்வடிவின் பெருமையை நினைக்கிறாயில்லையே! என்றவாறு. "வேண்டினபடியாகிறது, இவ்வடிவுக்கு ஒரு வைகல்யம் வாராமல் பிழைக்கப் பெற்றேனேயென்கை" என்பது-ஜீயருரை. மறுக்கினாய் என்பதற்கு 'மறுக்குகின்றாய்' என்றும், செய்தாய் என்பதற்குச் 'செய்கின்றாய்' என்றும் பொருள் கொள்ளல் தகும்; இது வழுவமைதியின்பாற்படும்: "விரைவினு மிகவினுந் தெளிவினுமியல்பினும், பிறழவும் பெறூஉமுக் காலமுமேற்புழி" என்றார் நன்னூலார்.

பன்றியு மாமையு மீனமு மாகிய பாற்கடல் வண்ணாவுன்மேற்
கன்றி னுருவாகி மேய்புலத்தே வந்த கள்ள வசுரர்தம்மைச்
சென்று பிடித்துச் சிறுக்கைக ளாலே விளங்கா யெறிந்தாய்போலும்
என்றுமென் பிள்ளைக்குத் தீமை செய்வார்க ளங்ஙன மாவர்களே. (எ)

பன்றியும் - மஹாவராஹமாயும்
ஆமையும் - ஸ்ரீகூர்மமாயும்
மீனமும் - மத்ஸ்யமாயும்
ஆகிய - திருவவதரித்தருளின
பால் கடல் வண்ணா - பாற்கடல்போல் வெளுத்திருந்துள்ள திருமேனியையு[டையவனே!
உன் மேல்—உன்னைநலியவேணுமென்ற[எண்ணத்தினால்

கன்றின் உரு ஆகி - கன்றின் உருவத்தை யெடுத்துக்கொண்டு
மேய் புலத்தே வந்த - (கன்றுகள்) மேயும் நிலத்தில் வந்துகலந்த
கள்ளம் அசுரர் தம்மை - க்ருத்ரிமனான அஸுரனை (அவன் சேஷ்டையாலே அவனை அசுரனென்றறிந்து)
சென்று - (அக்கன்றின் அருகிற்) சென்று
சிறு கைகளாலே - (தனது) சிறியகைகளாலே
பிடித்து - (அக்கன்றைப்) பிடித்து
விளங்காய் - (அஸுராவிஷ்டமானதொரு) விளாமரத்தின்காய்களைநோக்கி
எறிந்தாய் போலும் - விட்டெறிந்தாயன்றோ;
என் பிள்ளைக்கு - என்பிள்ளையானகண்ண பிரானுக்கு
தீமை செய்வார்கள் - தீமைகளை உண்டுபண்ணுமவர்கள்
என்றும் - என்றைக்கும்
அங்ஙனம் ஆவர்கள் - அவ்விளவும் கன்றும்போலே நசித்துப்போகக்கடவர்கள்.

குறிப்பு:—'பாற்கடல்வண்ணா' என்றது-க்ருஷ்ணாவதாரத்தில்நிறத்தைச் சொன்னபடியன்று; 'பாலின் நீர்மை செம்பொனீர்மை' என்றபாட்டிற் சொல்லியபடி-ஸாத்விகர்களான க்ருதயுகபுருஷர்களுடைய ருசிக்குத் தக்கபடி திருமேனிநிறத்தை யுடையனாய்க்கொண்டு அவர்களைக் காத்தருளினவாற்றைச் சொல்லுகின்றதென்க; இனி, 'பார்க்கடல்வண்ணா' என்று பாடமாகில், பார் [பூமி] சூழ்ந்தகடல்போன்ற [கறுத்த] நிறத்தையுடையவனே! என்று பொருளாய் இவ்வவதாரத்தில் நிறத்தையே சொல்லிற்றாகலாம். கன்றினுருவாகிவந்த அசுரன் [வத்ஸாஸுரன்] ஒருவனாதலால் 'அசுரன் றன்னை' என்று ஒருமையாகச் சொல்லவேண்டியிருக்க, அங்ஙனஞ் சொல்லாது 'அசுரர்தம்மை' என்று பன்மையாகக்கூறினது-பால்வழுவமைதியின் பாற்படுமென்க; "உவப்பினுமுயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணை இழுக்கினுமியல்பே" என்றார் நன்னூலார்; கோபத்தினால் பன்மைப்பால் ஒருமைப்பாலாதலேயன்றி ஒருமைப்பால் பன்மைப்பாலாதலும் உண்டென்பது ஒருசாரார்கொள்கை; சிறியதிருமடலில், "அருகிருந்த, மோரார்குடமுருட்டி முன்கிடந்ததானத்தே, ஓராதவன்போற் கிடந்தானைக் கண்டவளும், வாராத்தான் வைத்ததுகாணாள் வயிறடித்திங், காரார்புகுதுவார் ஐயரிவரல்லால், நீராமிதுசெய்தீர் என்றோர் நெடுங்கயிற்றால், ஊரார்களெல்லாருங்காண உரலோடே, தீராவெகுளியளாய்ச் சிக்கன ஆர்த்தடிப்ப, ஆராவயிற்றினோடாற்றாதான்" என்றவிடத்து 'ஐயர்' 'நீராம்' என்று ஒருமைப்பால் பன்மைப்பாலாக அருளிச்செய்துள்ளமையும், 'தீராவெகுளியளாய்' என்றமையால் இதுக்கு அடி, கோபமென்பதும் இங்கு உணரத்தக்கது.

"உண்ணிலாவியவைவரால்" என்ற பதிகத்திலும் மற்றும்பலவிடங்களிலும் ஐம்பொறிகளை 'ஐவர்' என உயர்திணையாற் கூறியது, இழிபுபற்றிய திணைவழுவமைதி என்றாற்போலக்கொள்க. " 'கன்றினுருவாகி' என்றத்தை உபலக்ஷணமாக்கி 'புள்ளினை' என்றாப்போலே சில அஸுரர்களை விவக்ஷித்து 'விளங்கா யெறிந்தாய்' என்றவிடத்திலும் 'வாய்பிளந்திட்டாய்' என்றாப்போலே உபலக்ஷணமாக்கித் தாத்பர்யங்கண்டுகொள்வது; அன்றிக்கே, ஆழ்வாருக்கு கிருஷ்ணனிடத்தில் ப்ரேமாதிசயத்தாலே, வந்த ஒருவனை ஒன்ப

தாகத் தோற்றிவாயக ஆத்தின் உறைப்புத்தோற்ற பஹுவசநம் ப்ரயோகித்தார் என்றுகொள்ளவுமாம்" என்பர் ஒரு அரும்பதவுரைகாரர். இனி 'அசுரன்றன்னை' என்றே பாடமிருப்பின் நலமே.

கண்ணபிரானே! உன்னை நலியவந்த வத்ஸாஸுரனையும் கபித்தாஸுரனையும் அநாயாஸமாக முடித்தவனன்றோ நீ என்று யசோதைசொல்ல, அவன் 'ஆம்' என்ன, அதைக்கேட்ட யசோதை மனமகிழ்ச்சி ஒருபக்கத்திலும் வயிற்றெரிச்சல் ஒருபக்கத்திலுமாய் 'என்னுடைய பிள்ளைக்குத் தீமை செய்யக் கருதுமவர்கள் என்றும் அப்படியே மாளக்கடவர்கள்'என்று கை நெரித்துச் சாபமிடுகிறபடி. ... ... ... (எ)

கேட்டறி யாதன கேட்கின்றேன் கேசவா கோவல ரிந்திரற்குக்
காட்டிய சோறுங் கறியுந் தயிருங் கலந்துட னுண்டாய்போலும்
ஊட்ட முதலிலே னுன்றன்னைக் கொண்டொரு போது மெனக்கரிது
வாட்ட மிலாப்புகழ் வாசுதேவா வுன்னை யஞ்சுவ னின்றுதொட்டும். (அ)

கேசவா - கண்ணபிரானே!
கேட்டு அறியாதன - (உன்விஷயமாக இதுவரை நான்) கேட்டறியாதவற்றை
கேட்கின்றேன் - (இன்று) கேட்கப்பெற்றேன்;
(அவற்றில் ஒன்று சொல்லுகின்றேன் கேள்;)
கோவலர் - கோபாலர்கள்
இந்திரற்கு - இந்திரனைப்பூஜிப்பதற்காக
காட்டிய - அனுப்பிய
சோறும் - சோற்றையும்
கறியும் - (அதுக்குத்தக்க) கறியையும்
தயிரும் - தயிரையும்
உடன் கலந்து - ஒன்றுசேரக்கலந்து
உண்டாய் போலும்-உண்டவனன்றோநீ;
(இப்படி உண்ணவல்ல பெருவயிற்றாளனை உன்னை)
ஊட்ட - (நாடோறும்) ஊட்டிவளர்க்க(த்தக்க)
முதல் இலேன் - கைம்முதல் எனக்கில்லை;
உன்தன்னை கொண்டு - உன்னைவைத்துக்கொண்டு
ஒரு போதும் - ஒருவேளையும்
எனக்கு அரிது - என்னால் ஆற்றமுடியாது;
வாட்டம் இலா - (என்றும்) வாடாத
புகழ் - புகழையுடைய
வாசுதேவா - வஸுதேவர்திருமகனே!
இன்று தொட்டும் - இன்றுமுதலாக
உன்னை - உன்னைக்குறித்து
அஞ்சுவன் - அஞ்சாநின்றேன்.

குறிப்பு:—திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங்கூடி மழையின்பொருட்டாக இந்திரனை ஆராதித்தற்கென்று வழக்கப்படி சமைத்தசோற்றைக் கண்ணபிரான் ஒருகால் அவனுக்கு இடாதபடி விலக்கிக்கோவர்த்தனமலைக்கு இடச்சொல்லித் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அமுதுசெய்தனனென்ற வரலாற்றைப் பலர்சொல்லக் கேட்டுணர்ந்த யசோதைப்பிராட்டி அக் கண்ணனைநோக்கிப் 'பிரானே! நீ இங்ஙனே செய்தாயோதான்' என்ன; அவனும் மறுமாற்ற முரையாதொழிய, '*பாசன நல்லன பண்டிகளாற் புகப்பெய்த * அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமுந் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப் பொட்டத்துற்ற உனக்கு நான் நாடோறுமவ்வளவு சோற்றையூட்டி

வளர்க்கைக் கீடான சைச்சரக்கற்றவளாகையால் இனி உன்னை எவ்வாறு வளர்க்கக்கடவேனென்று மிகவுமஞ்சாநின்றேனென்கிறுளென்க. முதல்-கைம் முதல்; மூலத்ரவ்யம் என்றபடி. ... ... ... ... (அ)

திண்ணார் வெண்சங் குடையாய் திருநாள் திருவோணமின் றேழுநாள்முன்
பண்ணேர் மொழியா ரைக்கூவி முளையட்டிப் பல்லாண்டு கூறுவித்தேன்
கண்ணாலஞ் செய்யக் கறியுங் கலத்த தரிசியு மாக்கிவைத்தேன்
கண்ணாநீ நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல் கோலஞ்செய் திங்கேயிரு.

திண் ஆர் - திண்மைபொருந்திய
வெண் சங்கு - வெண்சங்கத்தை
உடையாய் - (திருக்கையில்) ஏந்தியுள்ள [வனே!
கண்ணா - கண்ணபிரானே!
திரு நாள் - (நீ பிறந்த) திருநக்ஷத்திரமா [கிய
திரு ஓணம் - திருவோணநக்ஷத்திரம்
இன்று - இற்றைக்கு
ஏழு நாள் - ஏழாவது நாளாகும்;
(ஆதலால்,)
முன் - முதல் முதலாக
பண் ஏர் மொழியாரை கூவி - பண்ணோடே கூடின அழகிய பேச்சையுடைய மாதர்களையழைத்து
முளை அட்டி - அங்குராரோபணம்பண்ணி
பல்லாண்டு கூறுவித்தேன் - மங்களாசாஸனமும் பண்ணுவித்தேன்;
கண்ணாலம் செய்ய - (திருவோணத்தினன்று) திருக் கல்யாணம் செய்வதற்காக
கறியும் - கறியமுதுகளையும்
அரிசியும் - அமுதுபடியையும்
கலத்தது ஆக்கி வைத்தேன் - பாத்திரங்களில் சேமித்துவைத்திருக்கின்றேன்;
நீ—;
நாளைத் தொட்டு - நாளைமுதற்கொண்டு
கன்றின் பின் - கன்றுகளின்பின்னே
போகேல் - (காட்டுக்குப்) போகவேண்டா;
கோலம் செய்து - (உன் வடிவுக்குத்தக்க) அலங்காரங்களைச் செய்துகொண்டு
இங்கே இரு - இந்த அகத்திலேயே இருக்கக்கடவாயாக.

குறிப்பு:—திண்ஆர்-சத்ருநிரஸநத்தில் நிலைபோராமல் நின்று முழங்கும் திண்மையைச் சொல்லுகிறது. யசோதைப்பிராட்டி கண்ணனைநோக்கி இப் பாசுரஞ் சொல்லியது-விசாகாநக்ஷத்திரத்தினன்று என்றுணர்க. பண்-இசைப்பாட்டு. இற்றைக்கு ஏழாவது நாளாகிய உன்ஜந்மநக்ஷத்திரத்தில் உனக்கு விசேஷமான மங்களகாரியங்களைச் செய்வதற்காக இன்று ஊரிற் பெண்களையழைத்து உத்ஸவத் தொடக்கஞ் செய்வித்து மங்கலப் பாட்டுக்களையும் பாடுவித்தேன்; அன்றைக்கு வேண்டிய வஸ்துக்களையும் இப்போதே ஸித்தப்படுத்தி வைத்திருக்கிறேன்; ஆகையால் இனி நீ சாதித்தொழிலைத் தவிர்ந்து உத்ஸவவிக்ரஹம் போல் உன்னை அலங்கரித்துக்கொண்டு இவ்விடத்திலேயே வீற்றிரு என்று யசோதைப் பிராட்டி வேண்டுகின்றாள். முளையட்டுதல்-கல்யாணாங்கமாக நவதானியங்களைக் கொண்டு பாலிகை வைக்கை. கண்ணாலம்-மரூஉமொழி. ... ... ... ... (கூ)

புற்றர வல்கு லசோதைநல் லாய்ச்சிதன் புத்திரன் கோவிந்தனைக்
கற்றினம் மேய்த்து வரக்கண் டுகந்தவள் கற்பித்த மாற்றமெல்லாஞ்
செற்ற மிலாதவர் வாழ்தரு தென்புது வைவிட்டு சித்தன்சொற்
கற்றிவை பாடவல் லார்கடல் வண்ணன் கழலிணை காண்பார்களே. (க௦)

புற்று - புற்றிலே (வளர்கின்ற)
அரவு - பாம்பின்படத்தை ஒத்த
அல்குல் - அல்குலையுடையளாய்
அசோதை - யசோதையென்னும்பெயரை [யுடையளாய்
நல்-(பிள்ளைதிறத்தில்) நன்மையையுடை [யளான
ஆய்ச்சி - ஆய்ச்சியானவள்
தன் புத்திரன் - தன்மகனான
கோவிந்தனை - கண்ணபிரானை
கன்று இனம் மேய்த்து வர கண்டு - கன்றுகளின் திரளை (க்காட்டிலே) மேய்த்துவிட்டு மீண்டுவரக் கண்டு
உகந்து - மனமகிழ்ந்து
அவள் - அவ்யசோதை
(அம்மகனைக்குறித்து இன்னபடிசெய் என்று)
கற்பித்த - நியமித்துக்கூறிய
மாற்றம் எல்லாம் - வார்த்தைகளையெல்லா [ம்;—
செற்றம் இலாதவர் - அஸூயையற்ற ஸ்ரீ [வைஷ்ணவர்கள்
வாழ்தரு - வாழுமிடமான
தென் - அழகிய
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹ [கரான
விட்டுசித்தன் - பெரியாழ்வார்
சொல் - அருளிச்செய்த
இவை - இப்பாசுரங்களை
கற்று (ஆசார்யமுகமாக) ஓதி
பாட வல்லார் - (வாயாரப்)பாடவல்லவர் [கள்
கடல் வண்ணன் - கடல்போன்ற நிறத்த [னை எம்பெருமானுடைய
கழல் இணை - திருவடியிணைகளை
காண்பர்கள் - கண்டு அநுபவிக்கப் பெறு [வர்கள்.

குறிப்பு.—இத்திருமொழி கற்றார்க்குப்பலஞ் சொல்லித் தலைக்கட்டுகின்றார். 'புற்றரவல்குல சோதை' என்று-சரீரகுணமும், 'நல்' என்று ஆத்மகுணமுஞ் சொல்லிற்றாகக் கொள்க. கற்பித்த மாற்றம்—இத்திருமொழியில், மூன்றாம்பாட்டிலும் ஒன்பதாம்பாட்டிலும் நியமித்தவாறு காண்க. வாழ்தரு= தரு-துணைவினை. ... ... ... ... ... (௰)

அடி:—சீலை கன்னி காடு கடி பற்றார் அஞ்சுடர் பன்றி கேட்டு தின்னார் புற்று தழை.

மூன்றாந் திருமொழி உரை முற்றிற்று.

---

## நான்காந்திருமொழி
## தழைகளுந் தொங்கலும்.

---

**அவதாரிகை:**—கீழ்த்திருமொழியில் ஒன்பதாம் பாட்டில் யசோதை நியமித்தபடியே கண்ணபிரானிருந்து அவ்வேழுநாளுங் கடந்தவாறே பண்டுபோலக் காட்டுக்குப்போய் அங்கு ஆநிரை மேய்ந்த மகிழ்ச்சியாலே தன்னை வகைவகையாக அலங்கரித்துக் குழலூதுவது இசைபாடுவதாய்க்கொண்டு தன்தோழன்மாருடன் பெரிய ஓலக்கமாகத் திருவாய்ப்பாடியேற மீண்டு வருங் கோலத்தைக் கண்ட இடைப்பெண்கள் அக்கண்ணபிரான் திறத்தில் காமமுற்றவாற்றை ஆழ்வார் தம்மை அப்பெண்களாகப் பாவித்துப்பேசி இனியராகிறார்—இத்திருமொழியில். இதில் முதற்பாட்டு-ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்த தென்க.

**தழைகளுந் தொங்கலுந் ததும்பியெங்குந் தண்ணுமை யெக்கமத் தளிதாழ்பீலி**
**குழல்களுங் கீதமு மாகியெங்குங் கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு**
**மழைகொலோ வருகின்ற தென்றுசொல்லி மங்கைமார் சாலக வாசல்பற்றி**
**நுழைவனர் நிற்பன ராகியெங்கு முள்ளம்விட் டூண்மறந் தொழிந்தனரே. (க)**

தழைகளும் தொங்கலும் - பலவகைப்பட்ட மயிற்பீலிக்குடைகள்
எங்கும் ததும்பி - நாற்புறங்களிலும் நிறைந்து
தண்ணுமை - ம்ருதங்கங்களும்
எக்கம் மத்தளி - ஒரு தந்த்ரியையுடைய மத்தளிவாத்யங்களும்
தாழ் பீலி - பெரிய விசிறிகளும்
குழல்களும் - இலைக்குழல், வேய்ங்குழல் என்றகுழல்களும்
கீதமும் - இவற்றின் பாட்டுக்களும்
எங்கும் ஆகி - எங்கும்நிறைய (இந்த ஸந்நிவேசத்துடனே)
கோவிந்தன் - கண்ணபிரான்
வருகின்ற - (கன்றுமேய்த்து மீண்டு) வருகின்ற
கூட்டம் - பெரிய திருவோலக்கத்தை
கண்டு - பார்த்து
மங்கைமார் - யுவதிகளான இடைப்பெண்கள்
மழை கொல் ஓ வருகின்றது என்று சொல்லி - 'மேகஸமூஹமோதான் (தரைமேலே நடந்து) வருகின்றது!' என்று உல்லேகித்து
சாலகம் வாசல் பற்றி - ஜாலகரந்த்ரங்களைச் சென்றுகிட்டி
நுழைவனர் நிற்பனர் ஆகி - (வியாமோஹத்தாலே சிலர் மேல்விழுவதாகச் சாலகவாசல் வழியே) நுழையப்புகுவாரும், (சிலர்குருஜநபயத்தாலே, திகைத்து நிற்பாருமாகி
எங்கும் - கண்ணபிரான் நடந்தவழி முழுவதும்
உள்ளம்விட்டு - தங்கள் நெஞ்சைப் பரக்கவிட்டு
ஊண் - ஆஹாரத்தை
மறந்தொழிந்தனர் - மறந்துவிட்டார்கள்.

குறிப்பு:—"கலாபந் தழையே தொங்கலென்றிவை, கலாபப்பீலியிற் கட்டிய கவிகை" என்ற திவாகர நிகண்டின்படி, தழையென்றாலும் தொங்கலென்றாலும் மயிற்றோகையாற் சமைத்த குடைக்கே பெயராயினும் இங்கு அவ்விரண்டு சொற்களையுஞ்சேரச் சொன்னது-அவாந்தர பேதத்தைக் கருதியென்க; 'தட்டுந் தாம்பாளமுமாக வந்தான்' என்றாற்போல. 'தண்ணுமை-உடுக்கை, உறுமி மேளம், ஓர்கட்பறை, பேரிகை, மத்தளம்' என்றது காண்க. எக்க மத்தளி-'எக்கம்' என்கிறவிது 'ஏகம்' என்ற வடசொல் விகாரமாய்-ஒரு தந்திக்கம்பியை யுடையதொரு வாத்ய விசேஷத்தைச் சொல்லுமென்க. அன்றிக்கே 'எக்கம்' என்று தனியே ஒருவாத்ய விசேஷமுமாம். தாழ்பீலி=தாழ்தல்-நீட்சி; பீலி—விசிறிக்கும் திருச்சின்னத்துக்கும் பெயர்; இங்குத் திருச்சின்னத்தையே சொல்லுகின்றதென்றலும் ஏற்கும். கீதம்—கீதம். கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு—கோவிந்தன் கூட்டமாய் வருகின்றமையைக் கண்டு என்றவாறு. சாலகம்-ஜாலகம். ஊண்—முதனிலை திரிந்த தொழிற்பெயர். இப்பாட்டின் கருத்து;—கண்ணபிரான் கன்று மேய்த்துவிட்டுத் தன்னோடொத்தநிறத்தனரான ஆயிரந்தோழன்மாருடன்கூடிப் பற்பல பீலிக்குடைகள் விசிறிகள் வாத்தியங்கள் முதலிய ஸம்ப்ரமத்துடன் வருகின்றவாற்றைக்கண்ட யுவதிகள் 'இவை மேகங்கள் திரண்டுருண்டு வருகின்றனவோ' என்று தம்மிலேதாம் சொல்லிக்கொண்டு இவனைஇடைவிடாது தந்தம் மாளிகைகளில் கவாக்ஷத்வாரத்தளவிலே நின்று

காணலுற்று, கண்ணனுடைய அழகின் மிகுதியைக் காணக்காணப் பரவசைகளாய் நின்றவிடத்தில் நிற்கமாட்டாமல் சிலர் அபிநிவேசாதிசயத்தால் கண்கலங்கிச் சன்னல் வழியாக வெளிப்புறப்பட முயல்வாரும், சிலர் மாமிமார் முதலியோருக்கு அஞ்சி அவ்விடத்திலேயே திகைத்து நிற்பாருமாய் இப்படி தந்தம் நெஞ்சுகளேயிழந்து ஆஹாரவிருப்பத்தையும் மறக்கப் பெற்றார்கள் என்பதாம். ... ... ... ... (௧)

வல்லிநுண் ணிதழன்ன வாடைகொண்டு வசையறத் திருவரை விரித்துடுத்துப்
பல்லிநுண் பற்றுக வுடைவாள்சாத்திப் பணைக்கச் சுந்திப்பல தழைநடுவே
முல்லைநன் னறுமலர் வேங்கைமல ரணிந்துபல் லாயர் குழாநடுவே
எல்லியம் போதாகப் பிள்ளைவரு மெதிர்நின்றங் கினவளை யிழவேல்மினே. (௨)

பிள்ளை - நந்தகோபர்மகனான கண்ணன்,
வல்லி - கற்பகக்கொடியினது
நுண் - நுட்பமான
இதழ் அன்ன - இதழ்போன்று ஸுகுமாரமான
ஆடை கொண்டு - வஸ்த்ரத்தைக் கொணர்ந்து
திரு அரை - (தனது) திருவரையிலே
வசை அற - ஒழுங்காக
விரித்து உடுத்து - விரித்துச்சாத்திக்கொண்டு,
(அதன் மேல்)
பணை கச்சு - பெரிய கச்சுப்பட்டையை
உந்தி - கட்டிக்கொண்டு
(அதன்மேல்)
உடை வாள் - கத்தியை
பல்லி நுண் பற்று ஆக சாத்தி - பல்லியானது சுவரிலே ஒட்டிக்கொண்டிருப்பதுபோலே நெருக்கச்சாத்திக்கொண்டு
நல் - அழகியதும்
நறு - பரிமளப்ரசுரமுமான
முல்லை மலர் - முல்லைப்பூவையும்
வேங்கை மலர் - வேங்கைப்பூவையும் (தொடுத்து)
அணிந்து - (மாலையாகச்) சாத்திக்கொண்டு
பல் ஆயர் - பல இடைப்பிள்ளைகளுடைய
குழாம் நடுவே - கூட்டத்தின் நடுவில்
பல தழை நடுவே - பல மயில்தோகைக் குடை நிழலிலே
எல்லி அம் போது ஆக - ஸாயம்ஸந்த்யாகாலத்திலே
வரும் - வருவன்;
அங்கு - அவன்வரும்வழியில்
எதிர் நின்று - எதிராகநின்று
வளை இனம் - கைவளைகளை
இழவேல்மின் - இழவாதே கொள்ளுங்கள்.

குறிப்பு:—"வல்லி யாய்ப் பாடி வள்ளி வறைவொடு நிகளமாமே" என்ற நிகண்டின்படி, வல்லி என்று இடைச்சேரிக்கும் பேராகையாலே இங்கு, வல்லி—திருவாய்ப்பாடியிலே என்றுரைத்து, மேல் 'வரும்' என்ற முற்றோடு கூட்டி முடிப்பினுமாம். தோழிமார் ஒருவர்க் கொருவர் சொல்லிக்கொள்ளும் பாசுரம் இது. தோழிகாள்! இவ்வூரில் ஒருபிள்ளை உளன் என்பது உங்களுக்குத் தெரியுமே, அவன் நல்ல நல்ல ஆடையைச் சாத்திக்கொண்டு கச்சுங் கத்தியுமாகத் தனது தோழன்மாருடன் மஹாஸம்ப்ரமமாக மாலைப்பொழுதாகிய இப்பொழுதிலே இச்சேரியேற வரப்புகாநின்றான்; அவன் வருமழகைக் காணவிரும்பி வழியில் அவனை யெதிர்கொண்டு நின்றவர்களில் ஒருத்தரும் வளையிழவாதாரில்லை; நீங்களாகிலும் ஜாகரூகதையுடனிருந்து உங்கள் கைவளைகளை நோக்கிக் கொள்ளுங்கள் என்று ஒருத்தி தன் தோழிகளுக்கு

எச்சரிக்கை கூறுகின்றனவென்க வளையிழக்கைக்கு அடியென்? என்னில்; * ஸாக்ஷாந் மந்மதமந்மதனான அவனைக் கண்டுற்கண்ட மாத்திரத்திலேயே பெண்களுக்கு விசேஷமான வியாமோஹம் பிறக்கும்; அதற்கு ஏற்றபடி அவனோடு ரமிக்கை அவர்களுக்கு அரிது; அதனால் க்ஷணேக்ஷணே உடல் இளைக்கும்; உடனே கைவளைகள் கழன்றுவிழும் என்றறிக. இனம்—கூட்டம்; முழங்கைவரைக்கும் வளைகளை அடுக்கிக் கொண்டிருப்பர்களிறே. வசை அற—குற்றம் இல்லாதபடி என்பது பொருள்; ஆடை யுடுக்கையில் குற்றமற்றிருக்கையாவது-ஒழுங்குபடச் சாத்துகையேயாம். [பல்லிநுண்பற்றாக] இவ்வுடைவாள் கச்சுப்பட்டையுடன் கூடவே பிறந்ததத்தனை யொழிய வைத்துக்கட்டினதல்ல என்று தோற்றும்படிக்கு உவமை யென்க. உடைவாளாவது-அதிகாரி புருஷர்கள் எப்போதும் இடுப்பிலேயே அணிந்து கொண்டிருக்குங் கத்தி. ... ... ... ... ... ... (௨)

சுரிகையுந் தெறிவில்லுஞ் செண்டுகோலு மேலாடை யுந்தோழன் மார்கொண்டோட, ஒருகையா லொருவன்றன் றோளையூன்றி யாநிரை யினமீளக் குறித்த சங்கம், வருகையில் வாடிய பிள்ளைகண்ணன் மஞ்சளு மேனியும் வடிவுங்கண்டாள், அருகேநின் றாளென்பெண் ணோக்கிக்கண்டா ளதுகண்டிவ் வூரொன்று புணர்க்கின்றதே. (௩)

தோழன்மார் - *தன்னோராயிரம் பிள்ளைகள்,
சுரிகையும் - உடைவாளையும்
தெறி வில்லும் - சுண்டுவில்லையும்
செண்டு கோலும் - பூஞ்செண்டுகோலை
மேல் ஆடையும் - உத்தரீயத்தையும்
(கண்ணபிரானுக்கு வேண்டினபோது கொடுக்கைக்காக)
கொண்டு - கையிற்கொண்டு
ஓட - பின்னே ஸேவித்துவர,
ஒருவன் தன் - ஒரு உயிர்த்தோழனுடைய
தோளை - தோளை
ஒரு கையால் - ஒருதிருக்கையினால்
ஊன்றி - அவலம்பித்துக்கொண்டு
(ஒரு கையால்)— மற்றொரு திருக்கையினால்
ஆ நிரை இனம் மீள குறித்த சங்கம் - (கைகழியப்போன) பசுக்களின் திரள் திரும்பிவருவதற்காக ஊதவேண்டிய சங்கை
(ஊன்றி) - ஏந்திக்கொண்டு
வருகையில் - மீண்டு வருமளவில்
வாடிய வாட்டத்தை அடைந்துள்ள
பிள்ளை கண்ணன் - ஸ்ரீக்ருஷ்ணகிசோரனுடைய
மஞ்சளுட் மேனியும் - * பற்றுமஞ்சள்மயமான திருமேனியையும்
வடிவும் - அவயவஸமுதாய சோபையையும்
அருகே நின்றாள் என் பெண் - (அவனுக்குச்) சமீபத்தில் நின்றுகொண்டிருந்த என்மகள்
கண்டாள் - (முதலில் எல்லாரும் பார்க்கிறாப்போல்) பார்த்தாள்;
(பிறகு, அபூர்வவஸ்துதர்சநமாயிருந்தபடியால்)
நோக்கி கண்டாள் - கொஞ்சம் குறிப்பாகப் பார்த்தாள்;
அது கண்டு - அவ்வளவையே நிமித்தமாகக்கொண்டு
இ ஊர் - இச்சேரியிலுள்ளவர்கள்
ஒன்று புணர்க்கின்றது—(அவனுக்கும் இவளுக்கும் அடியோடில்லாத) ஒருஸம்பந்தத்தை யேறிட்டுச்சொல்லுகின்றனர்;
ஏ - இதற்கு என்செய்வது!

குறிப்பு:— சுரிகை—'க்ஷுரிகா' என்றவடசொல் திரிபு. தெறிவில்—கல் முதலியவற்றைச் செலுத்தும் சிறு வில். செண்டுகோல்—நுனியில் பூஞ்செண்டு கோத்துள்ள விலாஸதண்டம். நிரை என்றாலும் இனம் என்றாலும் கூட்டமேபொருள்; இதனால் எண்ணிறந்த பசுக்களை மேய்த்தவாறு தோற்றும். தூரத்திற்சென்ற பசுக்கள் அணுகுவதற்கும் மேய்கைக்கும் பக்கங்களில் விலகாமைக்கும் மற்றுஞ் சில காரியங்களுக்கும் ஸூசகமாகக் கண்ணபிரான் வகைவகையாகச் சங்கு ஊதுவன் என்க. இப்பாட்டின்கருத்து;— ஒருபெண்பிள்ளையின் தாய்சொல்லும் பாசுரம் இது. கண்ணபிரான் காட்டில் கன்றுகளைமேய்த்துவிட்டு, லீலோபகரணங்களுங் கையுமான தனது தோழன்மாருடன் மீண்டுவரும்போது வழியில்நின்றுகொண்டிருந்த என் மகள் முதலில் அவனைப்பொதுவாகப் பார்த்தாள்; பிறகு 'இவர்களில் இவனொருத்தன் விலக்ஷணனாயிருக்கின்றானே!' என்று சிறிது உற்றுநோக்கினாள்; உலகத்தில் அபூர்வவஸ்துவைப் பார்ப்பவர்களுக்கெல்லாம் இது இயல்வே; நெஞ்சில் ஒருவகை ஆசையைக்கொண்டுபார்த்தாளில்லை; ஆயிருக்கச்செய்தேயும் 'இவள் அவனை உற்றுநோக்கினாளாகையால் இவளுக்கும் அவனுக்கும் ஏதோ இருக்கின்றது' என்று ஊரார் வம்புகூறுகின்றனர், இது தகுமோ? என்று முறைப்படுகின்றாள். [மஞ்சளும்.] கீழ்"பற்றுமஞ்சள்பூசி" என்றபாட்டின் குறிப்புரையைக்காண்க. நின்றாள்—முற்றெச்சம். "அது கொண்டிவ்வூர்" என்றபாடம் சிறக்கும்; "கண்டதுவேகொண்டெல்லாருங் கூடி" என்றதிருவாய்மொழியையுங்காண்க. ஊர்—இடவாகுபெயர். (௩)

குன்றெடுத் தாநிரை காத்தபிரான் கோவல னாய்க்குழ லூதியூதிக்
கன்றுகள் மேய்த்துத்தன் றோழரோடு கலந்துடன் வருவானைத் தெருவிற்கண்
டென்று மிவனையொப் பாரைநங்காய் கண்டறி யேனேடி வந்துகாணாய்
ஒன்று நில்லாவளை கழன்றுதுகி லேந்திள முலையுமென் வசமல்லவே. (௪)

நங்காய் - பூர்த்தியையுடையவளே!
ஏடி - தோழீ!
இவனை ஒப்பாரை—இவனைப்போன்றுள்ள
என்றும் - எந்தநாளிலும் [வ்யக்தியை
கண்டு அறியேன் - (நான்)பார்த்ததில்லை;
வந்து காணாய் - (இங்கே) ஓடிவந்துபார்;
(என்று ஒருத்தி தன்தோழியை அழைக்க, அவள் சிறிது தாமஸிக்க, மேல்தனக்குப் பிறந்த விகாரத்தைச் சொல்லுகிறாள்;—)
கோவலன் ஆய்—இடைப்பிள்ளையாகப்பிற [ந்து
(பசிக்கோபத்தினால் இந்திரன் விடா மழைபெய்வித்தபோது)
குன்று - கோவர்த்தனமலையை
எடுத்து - (குடையாக) எடுத்து
ஆ நிரை—பசுக்களின்திரளை
காத்த - ரக்ஷித்தருளின
பிரான் - உபகாரகனும்,
குழல்—குழலை
ஊதி ஊதி-பலகால் ஊதிக்கொண்டு
கன்றுகள் - கன்றுகளை
மேய்த்து - (காட்டில்)மேய்த்துவிட்டு
தன் தோழரோடு உடன் கலந்து } தனது தோழர்களுடன்கூடிக்கொண்டு;
தெருவில் - இவ்வீதிவழியே
வருவானை - வருபவனுமான கண்ணபி [ரானை
கண்டு - நான் கண்டளவிலே
துகில் - (எனது அரையிலுள்ள) புடவை
கழன்று - (அரையில்தங்காதபடி) அவிழ்ந்தொழிய
வளை - கைவளைகளும்
ஒன்றும் நில்லா - சற்றும் நிற்கின்றன [வில்லை;
ஏந்து - (என்னால்) சுமக்கப்படுகின்ற
இள முலையும் - மெல்லிய முலைகளும்
என் வசம் அல்ல - என்வசத்தில் நிற்கின் [றனவில்லை.

குறிப்பு:—"பிரான்" என்றவிடத்தும் இரண்டனுருபுகூட்டுக. கண்ணபிரானெழுந்தருளுந்தெருவில் நின்றுகொண்டிருந்த ஒருபெண்பிள்ளை ஸம்ப்ரம விசேஷத்துடனேவருகின்ற கண்ணனைக்கண்டு இவ்விலக்ஷண வ்யக்தியை நம் தோழியுங்கண்டு களிக்கவேண்டுமெனக் கருதி, வீட்டினுள்ளே கிடப்பாளொரு தோழியைநோக்கித் "தோழீ! இதுவரை நம்மாற்காணப்பட்டுள்ளவர்களில் ஒருவரையும் ஒப்பாகச்சொல்லப்பெறாத ஒருவிலக்ஷணபுருஷன் இங்ஙனேவருகின்றான், சடக்கெனவந்துகாணாய்" என்றழைக்க, அவள் 'அவன்யார்? எக்குடியிற்பிறந்தவன்?' என்றாற்போன்ற சிலகேள்விகளால் வரத்தாழ்க்க, அதற்கு அவள் 'ஒருவன் இவ்விடைச்சேரியில்வந்து பிறந்து பற்பல அதிமாநுஷசேஷ்டிதங்களைச் செய்துளனென்று கேட்டுள்ளோமே, அக்கண்ணபிரான்காண்' என்ன; அதை அவள்கேட்டு 'அவன் அத்தனை விலக்ஷணனோ?' என்ன, அதற்கு அவள் 'பேதாய்! இவன் விலக்ஷணனல்லனாகில் யான் இவ்வாறு விகாரமடைவேனோ? பாராய்தோழீ! அரையில் துகில் தங்கவில்லை, கையில் வளைநிற்கவில்லை, முலைகள் என்நியமனத்திற்கு உட்பட்டு நடக்கவில்லை["என்கொங்கைகிளர்ந்து குமைத்துக் குதுகலித்து ஆவியை ஆகுலஞ்செய்யும்" என்றபடி];இன்னும் என்னாகவேணுமென்கிறாள். (இரண்டாமடியிறுதியில்) கண்டு—எச்சத்திரிபு; காண என்றபடி. ஏடி-தோழீ. இவ்விலக்ஷணபுருஷனைக் காணப்பெறாதகுறை ஒன்றுண்டுனக்கென்பாள் 'நங்காய்' என்று விளிக்கின்றாளென்க. இவனைக்கண்டவுடனே தன்மனோரதம் பலிக்கப்பெறாமையால் உடல இளைக்கத் தொடங்கவே துகிலும்வளையுங் கழலப்புக்கன. ... ... ... ... ... (௪)

சுற்றிநின் றாயர் தழைகளிடச் சுருள்பங்கி நேத்திரத் தாலணிந்து
பற்றிநின் றாயர் கடைத்தலையே பாடவு மாடக்கண் டேனன்றிப்பின் [லால்
மற்றொரு வற்கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ் சோலையெம் மாயற்கல்
கோற்றவ னுக்கிவ ளாமென்றெண்ணிக் கொடுமின்கள் கொடீராகிற் கோழம்பமே.

ஆயர் - இடைப்பிள்ளைகள்
சுற்றி நின்று-(தன்னைச்)சூழ்ந்துகொண்டு
தழைகள் - மயில்தோகைக்குடைகளை
இட - (தன் திருமேனிக்குப் பாங்காகப்) [பிடித்துக்கொண்டுவர,
சுருள் பங்கி - (தனது) சுருண்ட திருக்குழல் (எடுத்துக்கட்டி) [களை
நேத்திரத்தால் - பீலிக்கண்களாலே
அணிந்து - அலங்கரித்துக்கொண்டு
ஆயர் கடைத்தலை பற்றி நின்று - இடைப்பிள்ளைகளின் கோஷ்டியில் முன் [புறத்தில் நின்றுகொண்டு
பாடவும் ஆடவும் கண்டேன் - பாட்டுங்கூத்துமாக வரக்கண்டேன்;
பின் - இனிமேல்
அன்றி - அவனுக்கொழிய
மற்று ஒருவற்கு - வேறொருவனுக்கு
என்னை பேசல் ஒட்டேன் - என்னை (உரியளாகத்தாய் தந்தையர்) பேசுவதை [நான் பொறுக்கமாட்டேன்; (ஆர்க்கொழியவென்று கேட்கிறீகோளாகில்?)
மாலிருஞ் சோலை - திருமாலிருஞ்சோலை [யில் நித்யவாஸம்பண்ணுகிற
எம் மாயற்கு அல்லால் - எனது தலைவனுக்கொழிய [மற்றொருவற்கு என்னைப் பேசலொட்டேன்;]
(ஆகையினால், தாய்மார்களே!)
இவள் - (நம்மகளான) இவள்

கொற்றவனுக்கு - அத்தலைவனுக்கே
ஆம் - உரியள்'
என்று எண்ணி - என்று நிச்சயித்துவிட்டு
கொடுமின்கள் - (அவனுக்கே தாரைவார்த்து)தத்தம்பண்ணிவிடுங்கள்;
கொடீர் ஆகில்-(அப்படி) கொடாவிட்டீர்களேயானால்
கோழம்பமே - (உங்களுக்கு என்றைக்கும்) மனக்குழப்பமேயாம்.

குறிப்பு:—"மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்ற உறுதியுடன்நின்ற ஆண்டாளைப்போன்ற ஆய்ச்சி இவள். இடைப்பிள்ளைகளெல்லாம் தனக்குக்குடைபிடிக்கும்படி வீறுபாடுடைய இக்கண்ணபிரானைத் தவிர்த்து மற்றொரு சப்பாணிப்பயலுக்கு என்னை உரிமைப்படுத்த நினைத்தீர்களாகில் அத்யாஹிதமாம்; பிறனொருவனைக்கொண்டு என்கழுத்தில் தாலிகட்டுவித்தாலும் நான் "கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச்செய்யுந் தவந்தானென்?" என்றிருக்குமவளாகையால் அக்கண்ணனிடத்தே பேரவாக்கொண்டு அதற்கேற்பப் பரிமாறப்பெற்றிலேனாகில் சிந்தயந்தியைப்போலே தன்னடையே முடிந்துபோவேன்; பிறகு உங்களுக்கு எந்நாளும் மனக்கவலையேயாம் என்று வெட்டொன்று துண்டிரண்டாகச் சொல்லுகின்றாளென்க. [சிந்தயந்தி-ஓர் ஆய்மகளின் பெயர்; இவள் குருஜநத்தின் காவலுக்கு அகப்பட்டுக் கண்ணனைப் பெறமாட்டாமல் இருந்தவிடத்திலேயே உள்ளேயுருகி நைந்து முடிந்துபோயினள்.] பங்கி—ஆண்மயிர்; "பங்கியே பிறமயிர்க்கும் பகரு மாண்மயிர்க்கும் பேராம்" என்றான் மண்டலபுருடன். நேத்திரம்—நேத்ரம்; கண், இங்கு மயிற்கண். கடைத்தலை—தலைக்கடை; சொல்நிலைமாறுதல். [மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால்.] "'கண்ணனுக்கு' என்னாதே இப்படி சொல்லவிற்று இவனுக்கு ஓரடியுடைமை சொல்லுகைக்காக; அடியுடைமைசொல்லும்போது ஒரு கோத்ர ஸம்பந்தஞ் சொல்லவேணுமிறே" என்ற ஜீயருரை அறியத்தக்கது [கோத்ர ஸம்பந்தம் - பர்வத ஸம்பந்தம் என்று சிலேடை.] கொற்றவனுக்கு = கொற்றம்—ஜயம்; அதையுடையவனுக்கென்றபடி : தன் பொருளைத் தானே கைக்கொள்ளவல்லவனுக்கென்க: *அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்தவனிறே. கோழம்பம்-குழப்பம்; கலக்கம் என்றவாறு. பெண் மாண்டால் தாய்மார்க்குக்கலக்கமேயிறே யாவஜ்ஜீவம் நடமாடுவது. (௫)

சிந்துர மிலங்கத்தன் றிருநெற்றிமேல் திருத்திய கோறம்புந் திருக்குழலும்
அந்தர முழவத்தண் தழைக்காவின்கீழ் வருமாய ரோடுடன் வளைகோல்வீசா
அந்தமொன் றில்லாத வாயப்பிள்ளை யறிந்தறிந் திவ்வீதி போதுமாகில் [தோழீ.
பந்துகொண் டானென்று வளைத்துவைத்துப் பவளவாய் முறுவலுங் காண்போந்

தோழீ-வாராய் தோழீ!
தன்-தன்னுடைய
திருநெற்றி மேல்-திருநெற்றியில்
சிந்துரம் - சிந்தூரமும் [தின
திருத்திய-(அதன்மேல்) ப்ரகாசமாகச்சாத்
கோறம்பும்-திலகப்பொட்டும்
திருகுழலும் - (அதுக்குப் பரபாகமான) [திருக்குழற்கற்றையும்
இலங்க-விளங்கவும்,
அந்தரம்-ஆகாச மடங்கலும்

முழவம் - மத்தளங்களின் ஓசையினால் நி
தழை-பீலிக்குடைகளாகிற [றையவும்
தண் - குளிர்ந்த
காவின் கீழ்-சோலையின் கீழே,
வரும்-(தன்னோடு) வருகின்ற [கூட
ஆயரோடு உடன்-இடைப்பிள்ளைகளோடு
வளை கோல் - வளைந்த தடிகளை
வீசா - வீசிக்கொண்டு
ஒன்று அந்தம் இல்லாத (அலங்கார விசேஷங்களில்) ஒவ்வொன்றே
[எல்லை காண ஒண்ணாதை
ஆயர் பிள்ளை-இடைப்பிள்ளையான கண்ண
[பிரான்
அறிந்து அறிந்து தன்தன்மையையும் என்தன்மையையும் அறிந்துவைத்தும்
இ வீதி-இத் தெரு வழியே
போதும் ஆகில்-வருவானாகில்
(அவனை)
பந்து கொண்டான் என்று வளைத்து வைத்து '(எங்கள்) பந்தை வலியப் பிடுங்கிக்கொண்டு போனவனன்
[றோ இவன்' என்று (முறையிட்டு)
(அவனுடைய) [வழிமடக்கி
பவளம் வாய்-பவளம்போன்ற அதரத்தை
முறுவலும் - புன் சிரிப்பையும் [யும்
காண்போம்-நாம் கண்டு அநுபவிப்போம்.

குறிப்பு:—கண்ணபிரான்பக்கல் தான் விசேஷவ்யாமோஹங்கொண்டு அவனைப்பிரிந்து தரிக்கமாட்டாதிருக்க, அவனால் மிகவும் உபேக்ஷிக்கப் பெற்ற ஒரு ஆய்ச்சியின்பாசுரம் இது. அலங்காரவகைகளை அழகுபெற அமைத்துக்கொண்டு பீலிக்குடைகளின் நிழலிலே தோழன்மாருடன் தடி வீசுகை என்ற விளையாட்டைச்செய்துகொண்டுவருகின்ற இக்கண்ணபிரான் தன்னையொழியச்செல்லாத என்தன்மையையும் என்னையொழியச் செல்லும் படியான தன்தன்மையையும் தானறிந்துளனாகில் இத்தெருவழியே வருவதற்குத் தனக்கு யோக்யதையில்லை; ஆயிருக்கச்செய்தேயும் அவன் மானங் கெட்டு இவ்வீதியில்வரபபோகிறான்; அப்போது எவ்வகையினாலாவது நாம் அவனுடைய உபேக்ஷையை விலக்கிக்கொள்வோம்; அதாவது—(நேற்று) நாங்கள் தோழிமாருடன் பந்தாடிக்கொண்டிருக்கையில் இவன் சடக்கெனப் புகுந்து அப்பந்தை அபஹரித்துக்கொண்டு கள்ளன்போல ஓடிப்போய்விட்டான், அதை இப்போது தந்தாலொழிய இவனைக் கால்போவொட்டோம்' என்றாற்போலச் சில ஸாஹஸோக்திகளைச் சொல்வோமாகில், அவன்திடுக்கிட்டு நிற்பன், 'இதென்ன ஸாஹஸம்!' என்று வியந்து சிரிக்கவும் சிரிப்பன், இவ்வழியால் அவ்வழகையெல்லாம் நாம் காணப்பெறலாம் என்றுசொல்லி மகிழ்கின்றாள். சிந்துரம்—ஸிந்தூரம். முழவம்=மத்தளம்."அதினுடையமுழக்கம் ஸப்ரஹ்மசாரியுமாய்க்கிடக்கிறது" என்ற ஸ்ரீஸூக்திகாணத்தக்கது. இரண்டாமடியிறுதியில், வீசா='செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்த காலவினையெச்சம்: வீசி என்றபடி. 'வீச' என்று அச்சுப்பிரதிகளிற்காண்பது வியாக்கியானப் போக்குக்கு அத்துணைச் சிறவாதென்க. அந்தம்—அலங்காரம். ஆயர் + பிள்ளை=ஆயப்பிள்ளை. வீதி--வீதி. போதும்—'போதரும்' என்ற வினைமுற்றின் விகாரமென்பர். ... ... ... ... (௬)

சாலப்பன் னிரைப்பின்னே தழைக்காவின்கீழ்த் தன்திரு மேனிநின் றொளிதிகழ
நீலநன் னறுங்குஞ்சி நேத்திரத்தா லணிந்துபல் லாயர் குழாநடுவே
கோலச்சேந் தாமரைக் கண்மிளிரக் குழலூதி யிசைபாடிக் குனித்தாயரோ
டாலித்து வருகின்ற வாயப்பிள்ளை யழகுகண் டென்மக ளயர்க்கின்றதே. (எ)

சால பல் நிரை பின்னே — பற்பல பசுத்திரளின் பின்னே
தழை—பீலிக்குடைகளாகிற
காவின் கீழ்—சோலையின் கீழே
தன்—தன்னுடைய
திரு மேனி—திருமேனியானது
ஒளி திகழ நின்று — பளபளவென்று விளங்கும் படி நின்று
நீலம் - நீல நிறத்தை யுடைத்தாய்
நல்—சுருட்சி, நீட்சி முதலிய அமைப்பையு [டைத்தாய்
நறு—பரிமளம் வீசாநின்றுள்ள
குஞ்சி—திருக்குழற் கற்றையை
நேத்திரத்தால்—பீலிக்கண்களினால்
அணிந்து—அலங்கரித்துக்கொண்டு
பல் ஆயர் குழாம் நடுவே — பல இடையர்களின் கூட்டத்தின் நடுவில்
கோலம் செந்தாமரை கண் மிளிர — அழகிய செந்தாமரை மலர்போன்ற (தனது) திருக்கண்கள் ஸ்புரிக்கப்பெற்று
குழல்—வேய்ங்குழலை
ஊதி—ஊதிக் கொண்டும்
இசை—(அதுக்குத்தக்க) பாட்டுக்களை
பாடி—பாடிக்கொண்டும்
குனித்து - கூத்தாடிக்கொண்டும்
ஆயரோடு—இடைப் பிள்ளைகளுடனே
ஆலித்து வருகின்ற—மகிழ்ந்துவருகின்ற
ஆயர் பிள்ளை — இடைப்பிள்ளையான கண் [ணபிரானுடைய
அழகு - வடிவழகை
என் மகள் கண்டு—என் மகள் பார்த்து
அயர்க்கின்றது — அறிவு அழியாநின்றாள்.

குறிப்பு:—கண்ணபிரானுடைய வடிவழகில் ஈடுபட்டுச் சைதந்யத்தை யிழந்து தம்பகம்போலத் திகைத்துநிற்பாளொரு ஆய்ப்பெண்ணின் தாய் சொல்லும் பாசுரம் இது. "சால உறு தவ நனி கூர் கழி மிகல்" என்ற நன்னூலின்படி மிகுதியைச் சொல்லக்கடவதான 'சால' என்ற உரிச்சொல்லோடு இணைந்த 'பல்' என்றசொல், பசுக்கூட்டங்களின் எண்ணிறவைக்காட்டுமென்க. [கோலச்செந்தாமரை யித்யாதி.] "இத்தால், திருத்தோழன்மாருடைய திரளை இடம்வலங்கொண்டுபார்த்து மகிழ்ந்துகொண்டுவரும்படி சொல்லுகிறது" என்ற ஸ்ரீஉரையைக் காண்க. "என்மகள் அயர்க்கின்றாள்" என்ன வேண்டியிருக்க, "அயர்க்கின்றது" என்று அஃறிணையாகக்கூறியது வழுவமைதியின் பாற்படுமென்க; அன்றி, அயர்க்கின்றதே—திகைத்து நிற்கிறபடி என்னே! என்று முறைக்கலாம். ... ... ... ... (எ)

சிந்துரப் பொடிக்கொண்டு சென்னியப்பித் திருநாம மிட்டங்கோ ரிலையந்தன்னால்
அந்தர மின்றித்தன் னெறிபங்கியை யழகிய நேத்திரத் தாலணிந்
திந்திரன் போல்வரு மாயப்பிள்ளை யெதிர்நின்றங் கினவளை யிழவேலென்னச்
சந்தியில் நின்றுகண் டீர்நங்கைதன் றுகிலோடு சரிவளை கழல்கின்றதே. (அ)

சிந்துரம் பொடி கொண்டு — "ஸிந்தூர சூர்ணத்தைக் கொணர்ந்து
தன் - தன்னுடைய
சென்னி - திருமுடியிலே
அப்பி - அப்பிக் கொண்டும்,
அங்கு - திருநெற்றியில்
ஓர் இலை தன்னால் - ஒரு இலையினாலே
திருநாமம் இட்டு — ஊர்த்துவபுண்ட்ரம் சாத்திக்கொண்டும்,
நெறி - நெறித்திரா நின்றுள்ள
பங்கியை - திருக்குழலை
அழகிய - அழகிய
நேத்திரத்தால் - பீலிக்கண்களினால்
அந்தரம் இன்றி அணிந்து — இடை வெளியில்லாதபடி [நெருங்க] அலங் [கரித்துக் கொண்டும்,
இந்திரன் போல் — ஸாக்ஷாத் தேவேந்திர [ன்போல

வரும் - (ஊர் வலம்) வருகின்ற
ஆயர் பிள்ளை – இடைப்பிள்ளையான கண்ணபிரானுக்கு
எதிர் அங்கு - எதிர்முகமான இடத்தில்
நின்று - நின்றுகொண்டு
வளை இனம் - கைவளைகளை
இழவேல் - நீ இழக்க வேண்டா"

என்ன - என்று (என்மகளை நோக்கி நான் உறுத்திச்) சொல்லச் செய்தேயும்
நங்கை - (எனது) மகளானவள்
சந்தியில் நின்று - அவன்வரும் வழியில்நின்று
தன் துகிலொடு - தனது துகிலும்
சரிவளை - கைவளைகளும்
கழல்கின்றது - கழன்றொழியப்பெற்றாள்.
ஏ - இதென்ன அநியாயம்!.

குறிப்பு:—"இலையந்தன்னால்" என்றவிடத்து, அம்—சாரியை. அன்றிக்கே, "இலயந்தன்னால்" என்றுபாடமாகில், இல் அயம் எனப்பிரித்து, இல் என்று உள்ளாய், "அயமென்ப நீர் தடாகம்" என்ற நிகண்டின்படி, அயம் என்று ஜலமாய், ஓர் இலயமென்றது திருப்பவளத்துக்குட்பட்டதொரு ரஸமென்றபடியாய், சிந்தூரப் பொடியை அதராம்ருதத்தினால் நனைத்துக் குழைத்து அதைத் திருநாமமாகச்சாத்தி என்றுபொருள்கொள்க. அன்றிக்கே, "இலயந்தன்னால்வருமாயப்பிள்ளை" என இயைத்து, "இலயமே கூத்துங் கூத்தின்விகற்பமு மிருபேரென்ப" என்ற நிகண்டின்படி 'கூத்தாடிக்கொண்டு வருகின்ற' எனஉரைத்துக் கொண்டுகூட்டுப்பொருள்கொளாகக் கொள்வாருமுளர்; இப்பொருளில் 'இலயம்' எனினும் 'இலையம்' எனினும் ஒக்குமென்க. முதற்குறித்தபொருளில், நேரியதாய் நீண்டு ஒட்டினவிடத்திலே பற்றும்படி இளையதாய் நிறத்திருப்பதொரு இலையைத்திருநெற்றியிலே திருநாமமாக இட்டனனென்க. இரண்டாவது யோஜனையில், "சிந்தூரப்பொடிக்கொண்டு", என்பதை மீண்டுங்கூட்டிக்கொள்க. கீழ்ஆறும்பாட்டில் சிந்தூரப்பொடியைத் திருநெற்றியில் திலகமாகச்சாத்தினபடி சொல்லிற்று; இப்பாட்டில் அதனைத் திருக்குழல்மேல் அலங்காரமாகத்தூவினபடி சொல்லுகிறதென்று வாசிகாண்க. 'கண்ணபிரான்வரும்வழியில் எதிர்நோக்கி நின்று அவனைக்காமுற்றுத் தம்மனோரதத்தின்படி அவனோடு பரிமாறப்பெறாமல் உடனே உடலிளைத்து வளைகழலப்பெற்றார் பலருண்டு; அவர்களைப்போல் நீயும்வளையிழவாதேகொள்' என்று என்மகளைநோக்கி நான்முறையிடச்செய்தேயும், அவள் அப்பேச்சைப்பேணாமல் அவ்வழியில்நின்று துகிலையும் வளையையுந் தோற்றுத் தவிக்கின்றாளென்று ஒருத்தியின்தாய் இரங்குகின்றாள். சந்தி-ஸம்ஸ்க்ருதம்; பலர்கூடுமிடம். கண்டீர்—முன்னிலையசை. "நங்கை சரிவளைகழல்கின்றாள்" என்னவேண்டியிருக்க, "கழல்கின்றது" என அஃறிணையாகக் கூறியது—வழுவமைதி; சரிவளைகழலப்பெற்றவாறு என்னே! என்று முரைக்கலாம்.

**வலங்காதின் மேல்தோன்றிப் பூவணிந்து மல்லிகை வனமாலை மௌவல்மாலை**
**சிலிங்காரத் தால்குழல் தாழவிட்டுத் தீங்குழல் வாய்மடுத் தூதியூதி**
**அலங்காரத் தால்வரு மாயப்பிள்ளை யழகுகண் டென்மக ளாசைப்பட்டு**
**விலங்கியில் லாதெதிர் நின்றுகண்டீர் வெள்வளை கழன்றுமெய்ம் மெலிகின்றதே.**

வலங் காதில் - வலது காதில்
மேல்தோன்றிப் பூ-செங்காந்தள் பூவையும் (திருமார்பில்)
வனம் மல்லிகை மாலை } காட்டுமல்லிகை மாலையையும்
மௌவல் மாலை - மாலதீபுஷ்பமாலையையும்
அணிந்து—அணிந்து கொண்டு,
சிலிங்காரத்தால் - அலங்காரமாக
குழல் - திருக்குழல்களை [கொண்டு
தாழவிட்டு—(திருமுதுகில்) தொங்கவிட்டுக்
தீம் குழல்—இனிமையான வேய்ங்குழலை
வாய் மடுத்து—திருப்பவளத்தில் வைத்து
ஊதி ஊதி - வகைவகையாக ஊதிக்கொ [ண்டு,
அலங்காரத்தால்—(கீழ்ச்சொன்ன) அலங் [காரங்களோடே
வரும் - வாராநின்ற

ஆயர் பிள்ளை — இடைப்பிள்ளையான கண் [ணபிரானுடைய
அழகு - வடிவழகை
என் மகள் கண்டு - என்மகள் பார்த்து
ஆசைப்பட்டு—(அவனிடத்தில்) காமங்கொ ண்டு,
(இவ்வடிவழகு—கண்டவர்களை வருத் தும் என்று கண்ணைமாறவைத்துக் கடக்க நிற்க வேண்டியிருக்க,)
விலங்கி நில்லாது—(அப்படி) வழிவிலங்கி [நில்லாமல்
எதிர் நின்று — (அவனுக்கு) எதிர்முகமாக [நின்று
வெள் வளை கழன்று } (தனது) சங்குவளைகள் கழலப் பெற்று
மெய் மெலிகின்றது - உடலும் இளைக்கப் [பெற்றாள்.

குறிப்பு:—வனம் என்று அழகுக்கும் பேர். மௌவல் என்று—மல்லிகைக்கும் முல்லைக்கும் மாலதிக்கும் பேர்; "மல்லிகை மௌவல்," "மௌவலுந் தளவமுங் கற்பு முல்லை," "மாலதி மௌவலாகுமென்ப" என்பவை - சேந்தன்திவாகரம். சிலிங்காரம்—ஶ்ருங்காரம்; அலங்காரமென்றபடி. தீம்-இனிமை; "தீமு மதுரமுந் தேமுந் தேக்கும், ஆயநான்குந் தித்திப்பாகும்" என்பது நிகண்டு. மெய் மேலிகின்றது—இதுவும் கீழ்ப்பாட்டுக்களிற்போல, வழுவமைதி. (௬)

விண்ணின்மீ தமரர்கள் விரும்பித்தொழ மிறைத்தாயர் பாடியில் வீதியூடே
கண்ணன்கா லிப்பின்னே யெழுந்தருளக்கண் டிளவாய்க் கன்னிமார் காமுற்ற
வண்ணவண் டமர்பொழிற் புதுவையர்கோன் விட்டுசித் தன்சொன்ன மாலைபத்து
பண்ணின்பம் வரப்பாடும் பத்தருள்ளார் பரமான வைகுந்த நண்ணுவரே. [ம்

விண்ணின் மீது—பரமாகாசமாகிய ஸ்ரீவை [குண்டத்திலே
அமரர்கள் - நித்யஸூரிகள்
விரும்பி - ஆதரித்து
தொழ - ஸேவியாநிற்கச் செய்தேயும்
கண்ணன் - ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா
மிறைத்து—(அவர்களை மதியாமல்) மேனு [ணித்து
ஆயர் பாடியில் - திருவாய்ப்பாடியில் (வந்து அவதரித்து)
வீதி ஊடே - தெருவேற
காலி பின்னே - பசுக்களின் பின்னே
எழுந்தருள - எழுந்தருளாநிற்க,

(அவ்வழகை)
இள ஆய் கன்னிமார்—யுவதிகளான இடை [ப்பெண்கள்
கண்டு - பார்த்து
காமுற்ற வண்ணம் — காமவிகாரமடைந்த [படியை,—
வண்டு அமர் பொழில் } வண்டுகள் படிந்த சோலைகளையுடைய
புதுவையர் கோன்—ஸ்ரீவில்லிபுத்தூரிலுள் [ளார்க்குத் தலைவரான
விட்டு சித்தன்—பெரியாழ்வார்
சொன்ன - அருளிச்செய்த

மாலை பத்தும்—சொல்மாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையும்
இன்பம் வர - இனிமையாக
பண் - பண்ணிலே
பாடும் - பாடவல்ல
பத்தர் உள்ளார்—பக்தர்களா யிருக்குமவர்கள்
பரமான - லோகோத்தரமான
வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை
நண்ணுவர் - அடையப் பெறுவர்கள்.

குறிப்பு:—ஸ்ரீவைகுண்டத்தில் நித்யஸூரிகளனைவரும் தன்னைத்தொழா நிற்கவும் எம்பெருமான் அவ்விடத்தே வீற்றிருந்து தனது பரத்வத்தைப் பாராட்டலாமாயிருக்க, அங்ஙன் செய்யாது இடைச்சேரியிலவந்து பிறந்தது தனது ஸௌசீல்யத்தை வெளிப்படுத்துகைக்காகவென்க. காமுற்ற— 'காமம் உற்ற' என்பதன் தொகுத்தல். பத்தர்—ஸக்தர். இப்பாட்டால் இத்திருமொழிகற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு. ... (க௦)

அடி:—தழை வல்லி சரிகை குன்று சுற்றி சித்திரம் சால நந்துபப்பொடி வலம் விண் அட்டு.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஐந்தாந் திருமொழி

அட்டுங்குவி.



**அவதாரிகை:**—திருவாய்ப்பாடியில் ஆயர்கள் வழக்கப்படி இந்திரபூஜைக்கென்று சமைத்த சோறு முதலியவற்றை யடங்கலும் கண்ணபிரான் அவ்விந்திரனுக்கு இட வொட்டாமல் கோவர்த்தனமலைக்கு ஊட்டுவித்துப் பின்பு தானே ஒருதேவதாரூபங் கொண்டு அவற்றை அடைய அமுதுசெய்துவிட, பிறகு இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவி ஏழுநாள் விடாமழைபெய்விக்க, கண்ணபிரான் அக்கோவர்த்தநகிரியைக் குடையாகத் தூக்கிக் கோக்களையுங் கோவலரையும் காத்தருளின பேருதவியை ஆழ்வார் பெருக்கமதித்து அவ்வரலாற்றை விரிவாக அருளிச்செய்து இனியராகிறார் இத்திருமொழியில்.

அட்டுக் குவிசோற் றுப்பருப் பதமுந்
  தயிர்வா வியுநெய் யளறு மடங்கப்
போட்டத் துற்றுமா ரிப்பகை புணர்த்த
  பொருமா கடல்வண் ணன்பொறுத் தமலை
வட்டத் தடங்கண் மடமான் கன்றினை
  வலைவாய்ப் பற்றிக்கொண் டுகுற மகளிர்
கோட்டைத் தலைப்பால் கொடுத்து வளர்க்குங்
  கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (க)

குற மகளிர்—குறப்பெண்கள்,
வட்டம் தட கண் - வட்டவடிவான பெரிய கண்களை யுடையதும்
மடம் - (தனது தாய்க்கு) வசப்பட்டிருப்பதுமான
மான் கன்றினை - மான்குட்டியை
வலை வாய் - வலையிலே
பற்றிக் கொண்டு - அகப்படுத்தி (பின்பு அதனைத் தங்களுடைய தாக அபிமானித்து, அதற்கு)
கொட்டை - பஞ்சுச்சுருளின்
தலை - நுனியாலே
பால் - பாலை
கொடுத்து - எடுத்து ஊட்டி

வளர்க்கும் - வளர்க்கைக்குஇடமான
கோவர்த்தனம் என்னும் } 'கோவர்த்தநம்' என்ற பெயரை யுடையதும்
கொற்றம்-வெற்றியை யுடையதுமான
குடை-குடையானது (யாதெனில்?)
அட்டு - சமைத்து
குவி - குவிக்கப்பட்ட
சோறு - சோறாகிற
பருப்பதமும் - பர்வதமும்
தயிர் - தயிர்த்திரளாகிற
வாவியும் - ஓடையும்
நெய் அளறும் - நெய்யாகிற சேறும்
அடங்க - ஆகிய இவற்றை முழுதும்

பொட்ட - விரைவாக [ஒரேகபளமாக]
துற்று - அமுதுசெய்து விட்டு,
(இப்படி செய்கையினாலே இந்திரனுக்குக் கோபமூட்டி அவன் மூலமாக)
மாரி - மழையாகிற
பகை - பகையை
புணர்த்த-உண்டாக்கின
பொருமா கடல் வண்ணன் } அலைபெறிகிற பெரிய கடலினது நிறம்போன்ற நிறத்தனான கண்ணபிரான்
பொறுத்த - (தனது திருக்கைவிரலால்) [தூக்கின
மலை - மலையாம்.

குறிப்பு:—''துன்னுசகடத்தாற்புக்க பெருஞ்சோற்றை'' என்றபடி வண்டிவண்டியாகவந்து திரண்டுகிடந்த சோற்றின்மிகுதியைப்பற்றச் 'சோற்றுப் பருப்பதம்' எனப்பட்டது. மலையில் ஓடைகளுஞ் சேறுகளும் இன்றியமையாதனவாதலால், இங்குத் தயிர்த்திரளை ஓடையாகவும் நெய்ப்பெருக்கைச் சேறாகவும் உருவகப்படுத்தினரென்க. சோற்றுத்திரளில் தொட்டியாகக் கட்டி அதில் தயிரையும்நெய்யையும் நிறைத்தமை தோற்றும். 'நெடுநாளாக இந்திரனுக்குச்செய்துவந்த இப்பூஜையை நீஉனக்காக்கிக்கொள்ளவொட்டோம்' என்று சிலஇடையர் மறுப்பர்களோ என்று சங்கித்துப் பொட்டத் துற்றனாயிற்று; ஓர் இமைப்பொழுதளவில் அவற்றையெல்லா மமுதுசெய்திட்டனன். இவன் இவ்வாறுசெய்யவே, பூஜையை இழந்த இந்திரன் பசிக்கோபத்தினால் புஷ்கலாவர்த்தகம்முதலிய மேகங்களை ஏவி விடாமழைபெய்வித்ததனால் அம்மழையாகிறபகைக்குக் கண்ணபிரான்காரணமானமைபற்றி 'மாரிப்பகைபுணர்த்த' என்றார்.

பின்னிரண்டடிகளின் கருத்து;—குறப்பெண்கள் அழகிய மான்களை வளர்க்கவிரும்பி அவற்றை வலைவைத்துப்பிடிப்பித்துத் தங்கள் குடங்காலில் அவற்றை இருத்திப் பஞ்சுச்சுருள்களின் நுனியால் அவற்றுக்குப்பாலூட்டிவளர்க்கப்பெற்ற மலை என்றவாறு. அவை அப்பஞ்சுச்சுருளின் நுனியைத் தன்தாய் முலையாகப் பாவித்து உறிஞ்சுமென்க.

அட்டு என்றவினையெச்சத்தில் அடு என்ற குறிலிணைப்பகுதி ஒற்றிரட்டி இறந்தகாலங்காட்டிற்று. ஊர்வசியை உருப்பசி என்னுமாபோலே, பர்வதத்தைப்பருப்பதமென்கிறது. வாவி-வாவீ. வட்டம்-வ்ருத்தம் என்றவடசொல் விகாரம்; ந்ருத்தம் என்றவடசொல் 'நட்டம்' எனவருதல்போல. வலைவாய்=வாய்-ஏழனுருபு. குறமகளிர்—குறிஞ்சிநிலமக்கள். கொட்டைத்தலை - மூன்றும்வேற்றுமைத்தொகை. பசுக்களுக்குப் புல்லுந்தண்ணீரும் நிரம்பக்கொடுத்து வளர்த்ததனால் கோவர்த்தநம் என்பதுகாரணப்பெயர். பெருந்தமழையை வென்று ஒருவர்மேல் ஒருநீர்த்துளி விழாதபடி கவிந்து நின்றமைபற்றிக் 'கொற்றக்குடை' எனப்பட்டது; கொற்றம்-ஜயம். கடல்வண்ணன்பொறுத்

தமலை—கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையாம் என்று முறையேஇயைப் பினுமிழுக்காது.

இத்திருமொழியில் சிலபாட்டுக்களின் பின்னிரண்டடிகளுக்கு உள்ளுறைபொருள் [ஸ்வாபதேசம்] கூறக்கடவோம். இதற்கு உள்ளுறைபொருள் யாதெனில்;— (வட்டம்—வூர்த்தம்.) தனது வர்ணாச்ரமவ்ருத்தத்தில் விசாலமான ஞானத்தையும், அதனை உபதேசித்தருளின ஆசிரியர்கள்பக்கல் ஸௌஹார்த்தையையும், ஸ்வரூபஜ்ஞானத்தில் ஆசக்தியையுமுடையானொருவனை ஆசாரியனானவன் "வாசுதேவன் வலையுளே" என்றபடி—எம்பெருமானாகிற வலையிலகப்படுத்தி, அவனுக்கு ஸகலவேத சாஸ்திரதாத்பரியமாய் * பாலோடமுதன்னவாயிரமாகிய திருவாய்மொழியை உரைத்து வளர்க்குந்தன்மையைச் சொல்லிற்றாகிறது; எனவே, இப்படிப்பட்ட மஹாநுபாவர்கள் உறையுமிடமென்று அம்மலையின் சிறப்பைக்கூறியவாறும். இனி, அவரவர்களின் புத்திசமத்காரத்துக்கேற்ப வகைவகையாக உள்ளுறை உரைக்கலாம். இப்படிப்பட்ட ஸந்நிவேசங்களில் ஸ்வாபதேசப்பொருளை முக்கியமாகக்கடவதென்க. ... ... ... ... (க)

வழுவொன் றுமில்லாச் செய்கைவா னவர்கோன்
வலிப்பட் டுமுனிந் துவிடுக் கப்பட்ட
மழைவந் தெழுநாள் பெய்துமாத் தடைப்ப
மதுசூ தனெடுத் துமறித் தமலை
இழவு தரியா ததோர்ற் றுப்பிடி
யிளஞ்சீ யந்தொடர்ந் துமுடு குதலுங்
குழவி யிடைக்கா லிட்டெதிர்ந் துபொருங்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (உ)

(இந்திரபட்டம் பெறுதற்காகச் செய்த ஸாதநாம்சத்தில்)
ஒன்றும் வழு இல்லா செய்கை — ஒரு குறையுமற்ற செய்கைகளையுடைய
வானவர் கோன் - தேவேந்திரனுடைய
வலி பட்டு - பலாத்காரத்துக்கு உள்பட்டும்
முனிந்து விடுக்கப்பட்ட — அவ்விந்திரனால் கோபத்துடன் ஏவப்பட்டு [முள்ள
மழை - மேகங்களானவை [வந்து
வந்து—(அகாலத்திலே குமுறிக்கொண்டு)
எழு நாள் பெய்து — ஏழுநாளளவும் (இடைவிடாமல், வர்ஷித்து
மாத்தடைப்ப — (திருவாய்ப்பாடியிலுள்ள [ஸர்வ ஜநங்களினுடையவும் ஸஞ்சா [ரத்தை) நன்றாகத்தடுத்த வளவில்,
மது சூதன் - கண்ணபிரான்
எடுத்து—(ஸர்வஜநங்களையும் காப்பதற்காக [அடிமண்ணோடு கிளப்பி) எடுத்து

மறித்த—தலைகீழாகப் பிடித்தருளின
மலை—மலையானது (எது என்னில்;)
இள சீயம் - சிங்கக்குட்டியானது
தொடர்ந்து - (யானைக்குட்டியை நலிவதா [கப்) பின்தொடர்ந்து வந்து
முடுகுதலும்—எதிர்த்தவளவிலே,
இழவு தரியாதது ஓர் ஈற்றுப்பிடி — (தன்குட்டியின்) வருத்தத்தைப் பொறுக்கமாட்டாத (அக்குட்டி [யைப்) பெற்ற பெண்ணானையானது
குழவி - (அந்தக்) குட்டியை
கால் இடை இட்டு — (தனது) நான்கு கால்களின் நடுவில் அடக்கிக் கொண்டு)
எதிர்த்து - (அந்தச் சிங்கக்குட்டியோடு) [எதிர்த்து
பொரும் - போராடப் பெற்ற
கோவர்த்தனம்***குடையே—,

குறிப்பு:—தேவேந்திரனை வழுவொன்றுமில்லாச் செய்கையனாகக் கூறியது அவனதுநினைவாலுமாம்; விபரீதலக்ஷணையுமாம். வானவர்கோன் என்பதை மூன்றாம்வேற்றுமைத்தொகையாகக்கொண்டு, தேவேந்திரனால் எனப் பொருளுரைத்து, வலிப்பட்டு முனிந்துவிடுக்கப்பட்ட-வலிமையாக[அதிக நிஷ்டூரமாக]க்கோபித்து அனுப்பப்பட்ட என்றுரைக்கவுங்கூடும்.

மாத்தடைப்ப—(புறம்பு ஸஞ்சரித்தலை)நன்றாகத்தடைசெய்ய என்றபடி; மா என்பது-பெருமையை உணர்த்துவதோர் உரிச்சொல்; தடைப்ப என்கிறவிது-தடை என்ற பெயர்ச்சொல்லடியாப்பிறந்த வினையெச்சம்; தடு என்ற வினைப்பகுதியடியாப் பிறந்தால் தடுப்ப என்றாகும். அரும்பத உரைகாரர் "மாற்றடைப்ப" என்றுகொண்டு, "மாற்றை-எதிரியை, அடைப்ப" என்றெழுதியது பொருந்துமாற்றைப் புலவர்தாமே பரிசீலிக்க. மதுசூதன்—மது என்ற அஸுரனைக்கொன்றவன்; மது—வேதத்தை அபஹரித்துக்கொண்டு சென்ற அஸுரர்களிருவரில் ஒருவன். பின்னிரண்டடிகளின் கருத்து;—ஒரு பெண்யானையானது தன்குட்டியை ஒரு சிங்கக்குட்டி நலிவதாகவந்து சீறினவளவிலே அத்துன்பத்தைப்பொறுக்கமாட்டாமல் அந்தத் தன் குட்டியைத் தனது நான்கு கால்களினுள்ளே அடக்கி மறைத்துக்கொண்டு அச் சிங்கக்குட்டியை எதிர்த்துப்போர்செய்தற்கிடமான கோவர்த்தனமலை என்க. இனி, இழவு என்பதற்கு, விட்டுப்பிரிதல் என்று பொருள்கொண்டு வேறுவகையாகவும் கருத்துக்கூறலாம்; குட்டியுந்தானுமாயிருந்த ஒருபெண் யானை, தன்னை நலியவந்த ஒரு சிங்கக்குட்டியோடு தான் பொரநினைந்து அப்போது தன்குட்டியை இறைப்பொழுதும் தனித்துவிட்டிருக்கமாட்டாத தான் அக்குழவியைத் தன்காலிடையிலடக்கிக்கொண்டு போர்செய்ததாகக் கொள்க.

இதற்கு உள்ளுறைபொருள்;— தன்னைப்பற்றிக்கிடக்கும் சிஷ்யனுடைய விரஹத்தைப்பொறுக்கமாட்டாத ஆசார்யனானவன், அச்சிஷ்யனைத் தொடர்ந்து முடிப்பதாகவருகின்ற வாஸநாரூபகருமங்களுக்கஞ்சி, அவனைத் தன்திருவடிகளுக்கு அந்தரங்கனாக்கிக்கொண்டு அக்கருமவாஸனையை நீக்கி முடிக்குந்தன்மையைச்சொல்லிற்றாகிறது. ... ... ... (௨)

அம்மைத் தடங்கண் மடவாய்ச் சியரு
மானு யருமா நிரையு மலறி
எம்மைச் சரணேன் றுகொள்ளென் றிரப்ப
விலங்கா ழிக்கையெந் தையெடுத் தமலை
தம்மைச் சரணென் றதம்பா வையரைப்
புனமேய் கின்றமா னினங்காண் மினென்று
கோம்மைப் புயக்குன் றர்சிலை குனிக்குங்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (௩)

அம் - அழகிய
மை-மை அணிந்த
தட - விசாலமான
கண் - கண்களையும் [டைய
மடம் - 'மடப்பம்' என்ற குணத்தையுமு
ஆய்ச்சியரும் - இடைச்சிகளும்
ஆன் ஆயரும் - கோபாலர்களும்
ஆநிரையும் - பசுக் கூட்டமும் [பிட்டு
அலறி-(மழையின் கனத்தால்) கதறிக்கூப்
எம்மை சரண் என்று கொள் என்று — '(எம்பிரானே! நீ) எமக்கு ரக்ஷகனாயிருக்குந்த [ன்மையை ஏற்றுக் கொள்ள வேணும்
இரப்ப - பிரார்த்திக்க, [என்று
(அவ்வேண்டுகோளின்படியே)
இலங்கு - விளங்காநின்ற
ஆழி - திருவாழி ஆழ்வானை
கை - கையிலே உடையனாய் [ன்
எந்தை-எமக்கு ஸ்வாமியான கண்ணபிரா
எடுத்த-(அவர்களை ரக்ஷிப்பதற்காக)எடுத்த
மலை-மலையாவது (எது என்னில்?);—
கொம்மை புயம்-பருத்த புஜங்களையுடைய
குன்றர் - குறவர்கள்,
தம்மை - தங்களை [கிற
சரண் என்ற - சரணமென்று பற்றியிருக்
தம் பாவையரை - தங்கள் பெண்களை,
(கொல்லையிலே வியாபரிக்கிற அப்பெண்களின் கண்களைக்கண்டு 'இவை மான்பேடைகள்' என்று ப்ரமித்து)
புனம் மேய்கின்ற மான் இனம் காண்மின் என்று — '(நம்முடைய) கொல்லையை மேய்ந்து அழிக்கின்ற மான் கூட் [டங்களைப்பாருங்கோள்' என்று(ஒரு [வர்க்கொருவர் காட்டி)
(அவற்றின்மேல் அம்புகளை விடுவதாக)
சிலை - (தமது) வில்லை
குனிக்கும் - வளையாநின்றுள்ள
கோவர்***குடையே.

குறிப்பு:— எம்மைச் சரணென்றுகொள் என்றிரப்ப—எங்களை ரக்ஷித்தருள் என்றுவேண்ட என்பது கருத்து. "சரணென்றுகொள்" என்றபாடத்தை மறுக்க கண்ணபிரான் மலையெடுத்தபோது, கையில் திருவாழி உள்ளதாகச் சொல்லுகிறவிதுக்குக் கருத்து என்னென்னில்; கண்ணபிரான் இந்திரனைத் தலையறுக்கவேண்டில் அது அரியவேலையன்று, கையில் திருவாழியை ஏவிக் காரியம்செய்து முடிக்கவல்ல வல்லமையுண்டு, ஆகிலும் அங்ஙன் செய்யாதொழிந்தது—'இந்திரனுடைய மானைவைத்தான்கொண்டோமே, உயிரையுங் கொள்ளவேணுமா' என்ற கருணையைத் தெரிவிந்தவாறும். பின்னிரண்டடிகளின்கருத்து;—மலைக்குறவர் தமக்கு அன்பர்களான குறப்பெண்களின் கண்கள் கொல்லையிலே பரந்திருக்கக்கண்டு அவற்றை மான்களாகக்கருதி, 'இவை நமது கொல்லையைமேய்ந்து அழிக்கவந்தன, இவற்றை நாம் அம்பெய்துகொல்லும்படியைப் பாருங்கள்' என்று வில்வளைக்கப்பெற்ற மலை என்க; பெண்களின் நோக்குக்கு மான்நோக்கை உவமைகூறுதல் கவிமரபாகையால், இம்மலையிலுள்ள குறத்திகள்* மானேய்மடநோக்கிகள் என்பதைப்பெறுவிக்கும் இவ்வர்ணனை. கோம்மை—வலிவு. புயம்— புஜம் என்ற வடசொல்விகாரம்.

இதற்கு உள்ளுறைபொருள்;—பெருங்கொடையாளனாயிருப்பானொரு ஆசிரியன், தன்னைச்சரணமாகப்பற்றியிருக்கும் சிஷ்யர்கள் விஷயாந்தரங்களிற் செல்லாதிருக்கச்செய்தேயும் "ஊகி வெஷஹஃ வாவஶஂகீ" என்ற நியாயப்படி அவர்களை விஷயாந்தரபரர்களாக அதிசங்கித்து அத்தன்மையை விலக்குவதற்காக அவர்களுக்குப்பிரணவத்தின்பொருளைப் பரக்க உபதேசித்தருளுகிறபடியைச் சொல்லிற்றாகிறது. "ப்ரணவொ யநுஃ" என்று-பிரண

வத்தைச் சிலேயாக உருவகப்படுத்தியுள்ளமை காண்க. ஆத்துமா எம்பெருமானுக்கொழிய மற்றொருவர்க்கும் சேஷமன்று என்றதெளிவைப் பிறப்பிக்கின்ற ப்ரணவத்தை உபதேசிக்கவே, அவ்விஷயாந்தரப்ராவண்யம் விலகுமென்க. ... ... ... ... (௩)

கடுவாய்ச் சினவெங் கட்களிற் றினுக்குக்
கவள மெடுத்துக் கொடுப்பா னவன்போல்
அடிவா யுறக்கை யிட்டெழப் பறித்திட்
டமரர் பெருமான் கொண்டுநின் றமலே
கடல்வாய்ச் சென்றுமே கங்கவிழ்ந் திறங்கிக்
கதுவாய்ப் படநீர் முகந்தே றியெங்கும்
குடவாய்ப் படநின் றுமழை பொழியுங்
கோவர்த் தனமேன்னுங் கொற்றக் குடையே (௪)

கடு வாய் - பயங்கரமான வாயையும்
சினம் - மிக்க சீற்றத்தையும் [ய
வெம் கண் - தீக்ஷ்ணமான கண்களையுமுடை
களிற்றினுக்கு - ஒரு யானைக்கு
கவளம் - சோற்றுக் கபளத்தை
எடுத்து - திரட்டியெடுத்து
கொடுப்பான் அவன் போல் } கொடுக்கின்ற யானைப்பாகனைப் போல,
அமரர் பெருமான் - தேவர்களுக்குத் தலைவனான கண்ணபிரான்
கை - (தனது) திருக்கைகளை
அடி வாய் உற இட்டு } (மலையின்) கீழ் வேர்ப்பற்றிலே உறும்படியாகச் செலுத்தி (மற்றொரு திருக்கையினாலே மேலே பிடித்து)
எழப் பறித்திட்டு - கிளரப் பிடுங்கி
கொண்டு நின்ற - (தானே) தாங்கிக்கொண்டு நின்ற

மலே - மலையாவது (எது? என்னில்;—)
மேகம் - (புஷ்கலாவர்த்தகம் முதலிய) மேகங்கள் (இந்திரனால் ஏவப்பட்டு)
கடல் வாய் சென்று } கடலிடத்துச் சென்று
இறங்கி கவிழ்ந்து - (அங்கு) இறங்கிக் கவிழ்ந்து கிடந்து
கதுவாய்ப்பட - (கடல்) வெறுந்தரையாம்படி
நீர் - (அங்குள்ள) நீர் முழுவதையும்
முகந்து - மொண்டு கொண்டு
ஏறி - (மீண்டும் ஆகாசத்திலே) ஏறி
எங்கும் - திருவாய்ப்பாடி யடங்கலும்
குடம் வாய்ப் பட நின்று } குடங்களில் நின்றும் நீரைச் சொரியுமா போலே
மழை பொழியும் - மழைபொழியாநிற்கப்பெற்ற
கோவர்***குடையே—.

குறிப்பு:—கண்ணபிரான் மேகமழையைத்தடுப்பதற்காக மலையை உயரத்தூக்கிக்கொண்டு நின்றபடிக்கு ஓர் உவமை கூறுகின்றார்—முதலடியினால்; மேகத்தை யானையாகவும் மலையைக் கவளமாகவும், அம்மலையையெடுத்துப் பிடிக்கின்ற கண்ணனைக் கவளமெடுத்துக்கொடுக்கும் பாகனாகவும் உருவகப்படுத்தியவாறு: "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" எனப் பிறவிடத்து மேகத்துக்கு யானையை உவமையாகக்கூறியுள்ளமைகாண்க. கடுவாய், சினம், வெங்கண் என்ற இம்மூன்றடைமொழிகளும்மேகத்துக்கும் இயையும்; கேட்டார் அஞ்சும்படியான முழக்கமும், அடர்த்துக்கொண்டு வர்ஷிக்கநிற்கிற ஆக்ரஹமும், கொள்ளிவட்டம்போன்ற மின்னற்சுழிப்பும் அமையப்பெற்றிருக்குமிறே மேகங்கள். கடு—கடூ என்றவடசொல்விகாரம். கவளம்—கபளம். [அடி வாய் இத்யாதி.] ஒருதிருக்கையை மலையின்கீழ்ச்செலுத்தி மற்

ளொரு திருக்கையை மலையின்மேற்செலுத்திப் பறித்தெடுத்தானென்க. அடிவாய்—அடியிலே; வாய்—ஏழனுருபு. உற—ஊன்றும்படி. மேகங்களானவை திருவாய்ப்பாடியெங்கும் மழையைப்பொழிந்துவருத்த, அதனைத் தலைப்பதற்காகத் தூக்கினகுடையாமென்பது—பின்னடிகளின் கருத்து. கதுவாய்ப்படுதலாவது—குறைவுபடுதல்; எனவே, கடல் வெறுந்தரையாம்படி என உரைக்கப்பட்டது: வேறுவகையாகவு முரைக்கலாம். இப்பாட்டுக்கு வேறான உள்ளுறைபொருள் இல்லை. ... ... ... (௪)

வானத் திலுள்ளீர் வலியீ ருள்ளீரே
லறையோ வந்துவாங் குமினென் பவன்போல்
ஏனத் துருவா கியவீ சனெந்தை
யிடவ னெழவாங் கியெடுத் தமலை
கானக் களியானை தன்கொம் பிழந்து
கதுவாய் மதஞ்சோரத் தன்கை யெடுத்துக்
கூனற் பிறைவேண்டி யண்ணாந்து நிற்குங்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (௫)

ஏனத்து உரு ஆகிய—(முன்பு ஒரு காலத்திலே) வராஹரூபம் கொண்டருளின
ஈசன்—ஸ்வாமியாயும்
எந்தை - எனக்குத் தந்தையாயுமுள்ளகண்ணபிரான்,
வானத்தில் உள்ளீர்—"மேலுலகத்திலிருப்பவர்களே! (நீங்கள்)
வலியீர் உள்ளீரேல்—(என்னோடொக்க) வல்லமையுள்ளவர்களாயிருப்பீர்களாகில்
அறையோ - அறையோ அறை!!
வந்து - (இங்கே) வந்து
வாங்குமின்—(இம்மலையைக் கையால்) தாங்கிக்கொண்டு நில்லுங்கள்"
என்பவன்போல்—என்று சொல்லுகிறவன்போல
இடவன்—ஒரு மண்கட்டிபோலே
எழ வாங்கி—(அநாயாஸமாகக்) கிளரப்பிடுங்கி
எடுத்த மலை—எடுத்துக்கொண்டு நிற்கப்பெற்ற மலையாவது;—

கானம் - காட்டு நிலங்களில்
களி - செருக்கித் திரியக்கடவதான
யானை - ஒரு யானையானது (கரைபொருது திரியும்போது ஓரிடத்தில் குத்துண்டு முறிந்த)
தன் கொம்பு - தன் தந்தத்தை
இழந்து - இழந்ததனால்
கதுவாய்—அக்கொம்பு முறிந்து புண்பட்ட வாயிலே
மதம் - மதநீரானது
சோர - ஒழுகாநிற்க
தன் கை—தனது துதிக்கையை
எடுத்து - உயரத்தூக்கி (ஆகாசத்தில் தோற்றுகின்ற)
கூனல் பிறை - வளைந்த பிறையை (தானிழந்த கொம்பாக ப்ரமித்து)
வேண்டி—(அத்தைப் பறித்துக் கொள்ள) விரும்பி
அண்ணாந்து நிற்கும்—மேல் நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கப் பெற்ற
கோவர்***குடையே—.

குறிப்பு:—கண்ணபிரான் மலையை விடாதுவருந்தாறு தாங்கிக்கொண்டு நிற்றலை ஒருவகையாக உத்ப்ரேக்ஷிக்கின்றார்—முதலடியினால்: நாம் ஆகாசத்திலே முளைத்தோமென்று இறுமாந்திருப்பவர்களே! நீங்கள் மெய்யே வலிவுள்ளவர்களாகில் இம்மலையைச் சிறிது தாங்குங்கள் பார்ப்போம் என்று தேவர்களை அழைப்பவன் போன்றானென்க. அறையோ என்றது—பௌருஷம்தோன்ற மீசைமுறுக்கிச்சொல்லும் வெற்றிப்பாசுரம். பாதாளலோ

கஞ்சென்றுசேர்ந்த பூமியை விட்டுவிடுவித்தெடுத்துத் திருஎயிற்றிலே தாங்கிநின்ற பெருமானுக்கு இம்மலையெடுக்கை அரிதன்றென்பார் “ஏனத்துருவாகியவீசன்” என்றார். இடவன் என்று—மண்கட்டிக்குப்பெயர். பின்னடிகளின்கருத்து;—ஒருயானையானது களைபொருது திரியும்போது ஓரிடத்திற் கொம்பைக்குத்தினவளவிலே அக்கொம்பு முறியப்பெற்று அவ்விடத்தில் மதுநீரொழுகப்பெற்ற ஆற்றாமையாலே துதிக்கையைத் தூக்கிக்கொண்டு, வானத்தில் வளர்ந்துதோற்றும் இளந்திங்களைத் தானிழந்தகொம்பாக ப்ரமித்து அதனைப்பறித்துக்கொள்ளவேண்டுமென்ற ஆவலுடன் உயர்முகமாகவேயிருக்கும்படியைச் சொல்லியவாறு. கதுவாய்—குறையுற்ற இடம். கூனல்—வளைவு. அண்ணாத்தல்—மேல்நோக்குதல். இதற்கு உள்ளுறைபொருள்;—ஸம்ஸாரமாகிற மருகாந்தாரத்திலே களித்துத்திரிகிற ஆத்துமாதனது மமகாரமழியப்பெற்று மதமாத்ஸர்யங்களும் மழுங்கப்பெற்று ஸத்துவம் தலையெடுத்து அஞ்சலிபண்ணிக்கொண்டு ப்ரக்ருத்யாத்மவிவேகம் முதலிய ஞானங்களைப்பெறவிரும்பி ஊர்த்வமுகநிஷ்டனாயிருக்கும்படியைக் குறித்தவாறாம்: இது மகாரார்த்தமென்க. (ரு)

சேப்பா டுடைய திருமா லவன்றன்
செந்தா மரைக்கை விரலைந் திணையுங்
கப்பா கமடுத் துமணி நெடுந்தோள்
காம்பா கக்கொடுத் துக்கவித் தமலை
எப்பா டும்பரந் திழிதெள் ளருவி
யிலங்கு மணிமுத் துவடம் பிறழக்
குப்பா யமென நின்றுகாட் சிதருங்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (சு)

செப்பாடு உடைய - ஆர்ஜவகுணத்தை யுடையனாய்
திருமால் அவன்-ச்ரிய:பதியான அககண்ணபிரான்
தன் - தன்னுடைய
செம் தாமரை கை } செந்தாமரை மலர்போன்ற திருக்கையிலுள்ள
விரல் ஐந்தினையும் - ஐந்து விரல்களையும்
கப்பு ஆக மடுத்து } (மலையாகிற குடைக்குக் காம்படியிலுண்டான) கிளைக்கொம்புகளாக அமைத்து
மணி நெடுந் தோள் } அழகிய நீண்ட திருத்தோள்களை
காம்பு ஆக கொடுத்து } (அந்த மலைக்குடைக்குத்) தாங்கு காம்பாகக் கொடுத்து
கவித்த மலை-தலைகீழாகக் கவித்த மலையாவது;—
எப்பாடும்-எல்லாப் பக்கங்களிலும்
பரந்து இழி-பரவிப் பெருகாநின்ற
தெள் அருவி - தெளிந்த சுனைநீரருவிகளானவை
இலங்கு மணி முத்து வடம் பிறழ } விளங்கா நின்ற அழகிய முக்தாஹாரம் போல த்தனித்தனியே) ப்ரகாசிக்க,
குப்பாயம் என நின்று } (கண்ணபிரானுக்கு இது ஒரு) முத்துச்சட்டையென்று சொல்லும் படியாக.
காட்சி தரும்-காணப்படப் பெற்ற
கோவர்*✻*குடையே—.

குறிப்பு:— செப்பாடாவது— இந்திரனுக்கிட்ட சோற்றையடங்கத் தானமுதுசெய்து மழைபெய்வித்து ‘இவை பட்டதுபடுக’ என்று ஈரமற்ற நெஞ்சனாயிருக்கையன்றிக்கே தான் முன்னின்று ரக்ஷித்தருளின செவ்வைப்

பாடு. இக்குணம் பிராட்டியோட்டைச்சேர்த்தியால்வந்ததென்பார் திருமால் என்றார். அவன்—முதல்வேற்றுமைச்சொல்லுருபு. கப்பு— குடைக்காம் பினடியிற் கிளைவிட்டாற்போன்றுள்ள வேத்ரதண்டங்கள். கோவர்த்தன மலையை ஒருகுடையாக உருவகப்படுத்தியதற்கேற்பத்தடங்கை விரலைந்தும் மலரவைத்த கண்ணபிரான்கைவிரல்களைக்கப்பாகவும் பாறைதண்டத்தைக் காம்பாகவும் உருவகப்படுத்தியவாறுகாண்க. பின்னடிகளின்கருத்து;—(மலைகளில் சுனைநீருருவிகள் இன்றியமையாதனவாகையால்) இம்மலையில் கண்டவிடமெங்கும் பரவிப்பெருகுகின்ற தெள்ளருவிகளானவை அமைந்துள்ள படியைப்பார்த்தால் கண்ணபிரானுக்காக முத்துச்சட்டை வித்நப்படுத்தப் பட்டுள்ளதுபோலும் என உத்ப்ரேக்ஷித்தவாறென்க. குப்பாயம்—சட்டை; "மெய்ப்பை சஞ்சுளி கஞ்சுகம் வாரணம், குப்பாயமங்கி சட்டையாகும்" என்பது—திவாகரம்: இங்குச் சந்தர்ப்பம்நோக்கி முத்துச்சட்டை எனப் பட்டது. காட்சி—சி விகுதிபெற்ற தொழிற்பெயர். இப்பாட்டிற்கு வேறு உள்ளுறைபொருள் கூறவேண்டாமை உணர்க. ... ... (சு)

படங்கள் பலவு முடைப்பாம் பரையன்
 படர்பூ மியைத்தாங் கிக்கிடப் பவன்போல்
தடங்கை விரலைந் தும்மல ரவைத்துத்
 தாமோ தரன்தாங் குதட வரைதான்
அடங்கச் சென்றிலங் கையையீ டழித்த
 வனுமன் புகழ்பா டித்தங்குட் டன்களைக்
குடங்கைக் கோண்டுமந் திகள்கண் வளர்த்துங்
 கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (எ)

படங்கள் பலவும் உடை } பல படங்களையுடைய
பாம்பு அரையன் - ஆதிசேஷன்
படர் பூமியை - பரம்பின பூமியை
தாங்கி கிடப்பவன் போல் } (தன் தலைகளினால்) தாங்கிக்கொண்டிருப்பது போல,
தாமோதரன் - கண்ணபிரான்
தட கை - (தனது) பெரிய திருக்கைகளி [லுள்ள
விரல் ஐந்தும் - ஐந்து விரல்களையும்
மலர வைத்து - மலர்த்தி [விரித்து]
(அவற்றாலே)
தாங்கு - தாங்கப் பெற்ற
தட வரை - பெரிய மலையாவது;—

மந்திகள் - பெண்குரங்குகளானவை,
இலங்கையை சென்று } லங்காநகரத் தேறப்போய்
அடங்க - அவ்வூர் முழுவதையும்
ஈடு அழித்த—சீர்கெடும்படி பங்கப்படுத்தின
அனுமன்—சிறிய திருவடியினுடைய
புகழ் - கீர்த்தியை
பாடி - பாடிக்கொண்டு
தம் குட்டன்களை—தமது (குரங்குக்) குட்டி [களை
குடங்கைக் கொண்டு—கைத்தலத்தில் படு [க்கவைத்துக்கொண்டு
கண் வளர்த்தும்—(சீராட்டி) உறக்குப்பெ [ற்ற
கோவர்***குடையே—.

குறிப்பு:—கண்ணபிரான் ஐந்துவிரல்களாலும் மலையைத்தாங்கிக்கொண்டு நின்றது— ஆதிசேஷன் தனது ஆயிரந்தலைகளினால் பூமியைத்தாங்கிக் கொண்டுகிடப்பதையொக்குமென்றார்—முன்னடிகளால். பலவும் என்றவிடத்து உம்மை—குறைவில்லாமைப்பொருளைத் தருதலால், முற்றும்மை; இசைநிறையென்னவுமாம். அரையன்—அரசன்; 'ராஜா' என்றவடசொல்விகாரம்.

பின்னடிகளின்கருத்து ;— அம்மலையிலுள்ள பெட்டைக்குரங்குகள் பண்டு தம்குலத்திற்பிறந்து பற்பலவீரச்செயல்களைச்செய்த ஹநுமான் இராமபிரானிடத்துப் பெற்றபரிசுகளைப் பாடிக்கொண்டு தம்குட்டிகளை அகங்கையிற்கொண்டு சீராட்டி உறங்கச்செய்யும்படியைக் கூறினபடி. உலகத்திலுங் குழந்தைகளை உறக்கவேண்டுவார் சிலகதைகளைச்சொல்லிச் சீராட்டுதல் வழக்கமாயிருப்பதை அறிக. குட்டன்—உவப்பினால்வந்த திணைவழுவமைதி.

இதற்கு உள்ளுறைபொருள்;—கபடச்செயல்களுக்கு ஆகரமான இந்திரியங்களின் திறலைவென்ற பாகவதர்களின் ஞானநுஷ்டானங்களைத் தமது கைக்கடங்கின சிஷ்யர்களுக்கு உபதேசித்து இம்முகமாக அவர்களுக்கு அறிவைவளரச்செய்கின்ற மஹாநுபாவர்களின்படியைக் கூறியவாறும். ... (எ)

சலமா முகிற்பல் கணப்போர்க் களத்துச்
சரமா ரிபொழிந் தெங்கும்பூ சலிட்டு
நலிவா னுறக்கே டகங்கோப் பவன்போல்
நாரா யணன்முன் முகங்காத் தமலை
இலைவேய் குரம்பைத் தவமா முனிவ
ரிருந்தார் நடுவே சென்றணர் சோரியக்
கொலைவாய்ச் சினவேங் கைகணின் றுறங்கும்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (அ)

சலம் மா முகில்—நீர் கொண்டெழுந்தகாள [மேகங்களினுடைய
பல் கணம் - பல திரளானது,
எங்கும் - இடைச்சேரியடங்கலும்
பூசல் இட்டு - கர்ஜனை பண்ணிக்கொண்டு
போர்களத்து சரம் மாரி பொழிந்து } யுத்தரங்கத்தில் சரமழை பொழியுமா போலே நீர்மழையைப் பொழிந்து
நலிவான் உற—(ஸர்வஜந்துக்களையும்) வருத்தப் புகுந்த வளவிலே
நாராயணன் - கண்ணபிரான்
கேடகம் கோப்பவன் போல் } கடகு கோத்துப்பிடிக்குமவன் போல
(குடையாக எடுத்துப் பிடித்து)
முன் - முந்துற வருகிற
முகம் - வர்ஷமுகத்தை
காத்த - தகைந்த

மலை - மலையாவது;—
கொலை வாய்—சொல்லுகின்ற வாயையும்
சினம் - கோபத்தையுமுடைய
வேங்கைகள் - புலிகளானவை
இலை வேய் குரம்பை } இலைகளாலே சமைக்கப்பட்ட குடில்களில்
தவம் மா முனிவர் இருந்தார் நடுவே சென்று } இருக்கின்ற தபஸ்விகளான மஹர்ஷிகளின் திரளிலே புகுர,
(அங்குள்ள ரிஷிகள்)
அணர் சொறிய—(தமது) கழுத்தைச்சொறிய
(அந்த ஸுகபாரவச்யத்தினால், அப்புலிகள்)
நின்று உறங்கும் } நின்றபடியே உறங்கப் பெற்ற
கோவர்***குடையே—.

குறிப்பு:—சலம்—ஜலம். கணம்—கணம். களம்—கலம். சரம்—ஶரம். தவம்—தவ:. சரமாரி என்றவிடத்து உவமவுருபு தொக்கிக்கிடக்கிறது. பூசலிடுதல்—இடியிடித்தல். நலிவான்—நலிவதற்காக.— வீரர்கள் போர்க்களத்தில் நெறுநெறென அம்புகளைப்பொழிவதுபோல மேகங்கள் திரள்திரளாக நீர்கொண்டெழுந்து முழங்கிக்கொண்டு இடைச்சேரியடங்கலும் நீரை

ப்பொழிந்து வருத்தப்புக, கண்ணபிரான் மலையைக்குடையாக எடுத்துக் கையிற்கொண்டு நின்றது—கேடயம் என்னுமாயுதத்தைக் கையிற்கோத்துக் கொண்டு நிற்றலை ஒக்கும். கேடயம் பகைவரை அணுகவொண்ணுதபடி தடுப்பதிற் சிறந்த கருவியாவதுபோல இம்மலையும்* மாரிப்பகையைத் தடுத்தலில் வல்லதாதலால் இவ்வுவமை ஏற்குமென்க. கேடகம் எனினும், கேடயம் எனினும் ஒக்கும். முன்முகம் காத்தமலை—முகமென்று வாயைச்சொல்லிற்றாய் அது இலக்கணையால் வாய்மொழியைச்சொல்லக்கடவதாய், முன்பு இடையர்கள் இந்திரபூஜைசெய்யப்புகுந்தபோது அதனைவிலக்குங்கால் "இம்மலையே உங்களுக்கு ரக்ஷகம்" என்று தான்சொன்னவாய்மொழியைத் தவறாமல் காப்பாற்றிக்கொள்வதற்குக் காரணமானமலை என்றுமுரைக்க இடமுண்டு. நாராயணன்—கருத்துடையடைகொளி; பரிகராங்குராலங்காரம். புலிகளானவை பர்ணசாலைகளில் தவம்புரியாநின்ற ரிஷிகள் கோஷ்டியிற் செல்ல, அவற்றின் கழுத்தை அந்தரிஷிகள்சொறிந்ததாகக் கூறுவது அவர்களின் தவஉறுதிக்குக் குறைகூறியவாறாகாதோ? எனின்; எல்லாப்பதார்த்தங்களும் எம்பெருமான்தன்மையனவேயாம் என்று கைகண்டிருக்கும்ரிஷிகளாதலால் ஒருகுறையுமில்லையென்க; "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்ற சாஸ்த்ரார்த்த அநுஷ்டாநத்தைக் கூறியவாறுமாம். புலிகளின்கழுத்தை ரிஷிகள்சொறியும்போது அவை பரமாநந்தத்துக்குப் பரவசப்பட்டன என்பார், நின்றுறங்கும் என்றார். இருந்தார் தவமாமுனிவர்—இருந்ததவமாமுனிவர் என்றபடி; தெரிநிலைமுற்றுப் பெயரெச்சமாய்வருதலும் நன்னூலார்க்கு உடன்பாடாம். சென்று—செல்ல என்றபடி; எச்சத்திரிபு.

இதற்கு உள்ளுறைபொருள்;—காமம், குரோதம், மதம், மாச்சரியம் முதலிய தீயகுணங்களுக்கு வசப்பட்டொழுகுகின்ற ஸம்ஸாரிகள் அருந்தவமுனிவரான நாதமுனிகள்போல்வாருடைய திருவோலக்கத்திலே புகுந்து வருத்தந்தோற்றநிற்க, அவர்கள் கருணைகூர்ந்து உய்யும்வழிக்கு உடலான பொருள்களை நெஞ்சில் எளிதிற்பதியுமாறு உபதேசிக்க, அதனால் அவர்கள் திருந்தி உலகவுணர்ச்சியினுறக்கமுற்றுப் பேரின்பம்நுகருமாற்றைப்பெறுவித்தவாறும். ... ... ... ... ... (அ)

வன்பேய் முலையுண் டதோர்வா யுடையன்
வன்றா ணைனநின் றதோர்வன் பரத்தைத்
தன்பே ரிட்டுக்கொண்டு தரணி தன்னில்
தாமோ தரன்றாங் குதட வரைதான்
முன்பே வழிகாட் டமுசுக் கணங்கள்
முதுகிற் பெய்துதம் முடைக்குட் டன்களைக்
கோம்பேற் றியிருந் துகுதி பயிற்றுங்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (கூ

வல் பேய் - கல் நெஞ்சளான பூதனையினு [டைய
முலை-(விஷந்தடவின) முலையை
உண்டது ஓர் வாய் உடையன் } (உறிஞ்சி) உண்ட வாயையுடையனான
தாமோதரன் - கண்ணபிரான்
தன் பேர்-(கோவர்த்தநன் என்ற) தனது [திருநாமத்தை
இட்டுக்கொண்டு - (மலைக்கு) இட்டு,
வல் பரத்தை-பலிஷ்டட்ட மானதொரு பா [ரத்தை(த்தாங்கிக்கொண்டு)
நின்றது ஓர் வன் தூண் என } நின்ற ஒரு வலிய தூணைப் போன்று
தரணி தன்னில்-இந் நிலவுலகத்தில் (உள்ளவர்கள் காணும்படி)
தான் தாங்கு - தான் தாங்கிக்கொண்டு நி [ன்ற
தட வரை - பெரிய மலையாவது;—

முசு கணங்கள்-முசு என்ற சாதிக்குரங்கு [களின் திரள்கள்
(தம் குட்டிகளுக்கு)
முன்பே - ஏற்கனவே
வழி காட்ட - ஒருகிளையில் நின்றும் மற் [றொரு கிளையில்பாயும்வழியைக் காட்டு கைக்காக
தம்முடை குட்டன்களை-தம் தம் குட்டி [களை
முதுகில் பெய்து-(தம் தம்)முதுகிலே கட் [டிக்கொண்டுபோய்
கொம்பு-மரக்கொம்பிலே
ஏற்றியிருந்து-ஏற்றிவைத்து
குதி பயிற்றும்-அக்கொம்பில்நின்றும் மற் றொரு கொம்பில் குதித்தலைப் பழக்கு [வியாநிற்கப்பெற்ற
கோவர்***குடையே—.

குறிப்பு:—கண்ணபிரான் பசுக்களுக்குப் புல்லுந்தண்ணீருங்கொடுத்து வளர்ப்பதனால் தான்பெற்றுள்ள கோவர்த்தநன் என்னுந்திருநாமத்தை அந்த மலைதனக்கு இட்டு அதனைக்குடையாக எடுத்துத் தாங்கிக்கொண்டுநின்றது— வலியதொரு ஸ்தம்பம் பெருஞ்சுமையைத்தாங்கிநிற்பதை ஒக்குமென்று முன்னடிகளால் உவமித்துக் கூறினரென்க. பரத்தை என்றதன்பின் "தாங்கி" என்றொரு வினையெச்சம் வருவித்து உரைக்கபபட்டது. கண்ணனைத் தூணாக வும், மலையைத் தூண்தாங்கு சுமையாகவும் உருவகப்படுத்தியவாறுகாண்க. தூண்—ஸ்தூணா· பரம்—ஹரம். கண்ணபிரான் இவ்வற்புதச்செய்கையைப் பிரமன் இந்திரன் முதலியோர்க்குக்காட்டாது பரமகிருபையினால் அற்ப மனிசர்க்குக்காட்டியருளினனென்பார், தரணிதன்னில் என்றார். இனி, "நின்ற தோர்—தன்மேலுள்ளதொரு, வன்பரத்தை—, வன்தூணென—வலியதூ ணைப்போலே[தூண்தாங்குவதுபோல என்றபடி],தாமோதரன்தாங்குதடவ ரைதான்" என வினையெச்சவருவித்தலின்றியே இயைத்துரைப்பாருமுளர்; இதனை, "ஹாஹாரம் ஹஜ ஹாமிர்ம் ஊபார" என்றாற்போலக்கொள்க.

முசு என்பது குரங்குகளின் ஓர்வகைச்சாதி; சேந்தன்திவாகரத்தில், "காருகம் பூகம் கருங்குரங்காகும்" என்றதற்குப்பின், "ஓரியுங் கலையுங் கடு வனும் முசுவே"எனக்கூறியுள்ளதுகாண்க. குரங்குகளானவை தம்குட்டிக ளுக்குக் கிளைதாவும்வழியைக் காட்டுவதற்காக அவற்றைத் தம்முதுகில்கட் டிக்கொண்டுபோய் ஒருகொம்பிலிருந்து மற்றொருகொம்பிலே குதிக்கும்வித த்தைத் தாம்முந்துறக் குதித்துக்காட்டிப் பயிற்றுவியாநிற்குமென்பது— பின்னடிகளின்கருத்து. குதி—குதித்தல்; முதனிலைத்தொழிற்பெயர். முன்பே- பருவம் நிரம்புவதற்குமுன்னமே என்றலுமொன்று.

இதற்கு உள்ளுறைபொருள்;— ஸதாசார்யர்கள் தாங்களபிமானித்த சிஷ்யர்களைத் தாங்களன்புடனணைத்துக்கொண்டு அவர்களுக்கு நல்வழிகா

ட்டுகைக்காக வேதசாகைகளை ஓதுவித்து அவற்றிலேயே அவர்கள் புத்தி ஸஞ்சாரம்பண்ணிக்கொண்டிருக்கும்படி ஞானோபதேசம்பண்ணும்படியைக் குறிப்பித்தவாறும். ... ... ... ... ... (௯)

கோடியே றுசெந்தா மரைக்கை விரல்கள்
கோல முமழிந் திலவா டிற்றில
வடிவே றுதிரு வுகிர்நொந் துமில
மணிவண் ணன்மலை யுமோர்சம் பிரதம்
முடியே றியமா முகிற்பற் கணங்கள்
முன்னெற் றிநரைத் தனபோல வெங்கும்
குடியே றியிருந் துமழை பொழியுங்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடையே. (௧௦)

கொடி ஏறு—(ரேகாரூபமான) த்வஜத்தையுடைய
செந் தாமரைக் கை—செந்தாமரைமலர்போன்ற (கண்ணனது) திருக்கையும்
விரல்கள் - (அதிலுள்ள) திருவிரல்களும்
(ஏழுநாள் ஒருபடிப்பட மலையைத்தாங்கிக்கொண்டு நின்றதனால்)
கோலமும் அழிந்தில — (இயற்கையான) அழகும் அழியப்பெறவில்லை;
வாடிற்றில—வாட்டமும்பெறவில்லை;
வடிவு ஏறு—அழகுஅமைந்த
திரு உகிரும்-திருநகங்களும்
நொந்தில—நோவெடுக்கவில்லை;
(ஆகையால்)
மணிவண்ணன்—நீலமணிபோன்றநிறத்தனான கண்ணபிரான்
(எடுத்தருளின)
மலையும்—மலையும்
(அம்மலையை இவன் எடுத்துநின்ற நிலைமையும்)
ஓர் சம்பிரதம்—ஒரு இந்திரஜாலவித்தையாயிருக்கின்றது:
(அந்த மலை எது? என்னில்;—)
முடி ஏறிய—கொடுமுடியின்மேலேறிய
மா முகில்—காளமேகங்களினுடைய
பல் கணங்கள்—பலஸமூஹங்களானவை
எங்கும் மழை பொழிந்து — மலைச்சாரல்களிலெல்லாம் மழைபெய்து (வெளுத்ததனால்)
முன் நெற்றி நரைத்தன போல — (அம்மலையினுடைய) முன்புறம்நரைத்தாற்போல் தோற்றும்படி
குடி ஏறி இருக்கும்—(கொடுமுடியின்மேல்) குடிபுகுந்திருக்கப்பெற்ற
கோவர்**குடையே—.

குறிப்பு:—கண்ணபிரான் ஏழு நாளளவும் ஏகாகாரமாக மலையைத்தாங்கிக்கொண்டு நிற்கச்செய்தேயும் கை, விரல், நகம் முதலியவையொன்றும் சிறிதும்விகாரமடையாமையால், இவன்மலையெடுத்து நின்றவிது தொம்பரவர்கூத்துப்போலேஒரு கண்கட்டுவித்தையாகத்தோற்றுகின்றதேயன்றி ஒன்றும் மெய்க்கொள்ளப்போகவில்லை; மெய்யே மலையைச்சுமந்தானாகில் மேனிவாட்டமுண்டாகாதொழியுமோ? என்று சமத்காரந்தோற்றக் கூறுகின்றார்—முன்னடிகளில். சம்பிரதம்—ஒருவகை அஞ்சனத்தின் உதவியினால் ஒரு முஹூர்த்தகாலத்தளவு நிற்கும்படி மாஞ்செடிமுளைக்கச்செய்தல் முதலிய இந்திரஜாலவித்தை. இப்படி இந்திரஜாலமெனக்கூறியதனால் இச்செய்கை அபாரமார்த்திகம்என்று சிலர்மயங்கக்கூடுமே எனச்சங்கித்து, அதனைத் தெளிவிக்குமாறு அருளிச்செய்கின்றார்—பின்னடிகளால். அம்மலையிலுள்ள கார்மேகங்கள் அதன்சிகரத்திலே நிலச்செழிப்புண்டாம்படி எங்கும்வர

ஷித்து நீர்கழிந்தமையால் வெளுக்கப்பெற்று அச்சிகரத்தின்மேற் குடியிருக்கும்படியைப்பார்த்தால் அம்மலையின் முன்னெற்றி நரைத்துக்கிடக்கின்றதோவென்று தோற்றுகின்றதென்று உத்ப்ரேக்ஷித்தவாறு. கண்ணபிரான் மழைதடுக்க மலையெடுத்தபோது அதன்மேல் இவ்வாறு மழையுண்டானதாகப் பொருளன்று; உபலக்ஷணமெனப்படும். குடியேறியிருந்து மழைபொழியும்—மழைபொழிந்து குடியேறியிருக்குமென விகுதிபிரித்துக்கூட்டியுரைக்கப்பட்டது. வர்ஷியாமல் வெளுத்திருக்குங்காலத்திலும் மேகங்களிருக்குமிடம் மலைத்தலையோரமாதல் அறிக.

இதற்கு உள்ளுறைபொருள்;—வேதாந்த நிஷ்டர்களான ஆசாரியர்கள் தம்மடிபணிந்த சிஷ்யர்களுக்கு ரஸமான அர்த்தங்களை உபதேசித்துத் தாங்கள் சுத்தஸ்வரூபர்களாக இருக்கும்படியைக் குறித்தவாறும். ... (௧0)

அரவிற் பள்ளிகொண் டரவந் துரந்திட்
டரவப் பகையூர் தியவ னுடைய
குரவிற் கொடிமுல் லைகணின் றுறங்குங்
கோவர்த் தனமென்னுங் கொற்றக் குடைமேல்.
திருவிற் பொலிமறை வாணர் புத்தூர்த்
திகழ்பட் டர்பிரான் சொன்னமா லைபத்தும்
பரவு மனநன் குடைப்பத் தருள்ளார்
பரமா னவைகுந் தந்நண் ணுவரே. (௧௧)

அரவில்-திருவனந்தாழ்வான்மீது
பள்ளி கொண்டு - (பாற்கடலில்) பள்ளி[கொள்பவனும்
(அத்தைவிட்டு ஆய்ப்பாடியில் வந்து பிறந்து)
அரவம்-காளியநாகத்தை
துரந்திட்டு-ஒழித்தருளினவனும்
அரவம் பகை ஊர்தியவனுடைய — ஸர்ப்பசத்ருவான கருடனை வாஹநமாக வுடையவனுமான கண்ணனு[டைய,
குரவில் கொடி முல்லைகள் நின்று உறங்கும் — குரவமரத்தில் முல்லைக் கொடிகள் படர்ந்து அமைந்திருக்கப்பெற்ற
கோவர்த்தனம் என்னும்கொற்றம் குடைமேல் — கோவர்த்தனமென்ற கொற்றக்குடை விஷயமாக,—

திருவில்- ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயாலே
பொலி-விளங்காநின்ற
மறை வாணர்-வைதிகர்கள் (இருக்குமிடமான)
புத்தூர்-ஸ்ரீவில்லிபுத்தூரில்
திகழ்-விளங்காநின்றுள்ள
பட்டர் பிரான்-பெரியாழ்வார்
சொன்ன-அருளிச்செய்த
மாலை பத்தும்-இப்பத்துப்பாசுரங்களையும்
பரவும் மனம்-அப்யஸிக்கைக்கீடானமனஸ்[ஸை
நன்கு உடை-நன்றாக உடையரான
பத்தர் உள்ளார்-பக்தர்களாயிருப்பவர்
பரமான வைகுந்தம்-பரமபதத்தை
நண்ணுவர்-அடையப்பெறுவர்.

குறிப்பு:—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்-இப்பாட்டால். திருவாய்ப் பாடியிற் பிறந்து காளியன் கொழுப்பையடக்கின கண்ணபிரான் க்ஷீராப்திசாயியும் கருடவாஹநனுமான ஸாக்ஷாத் பரமாத்துமா என்பதைத் தெளிவிக்கும்-முதலடி. அரவப் பகையூர்தியவனுடைய—அவன் எடுத்துத்தரித்த என்றவாறு. குரவமரமும் அதன்

மேற் பரந்த கொடி முல்லையும் நின்றுறங்கு மென்றது—தன்மை நவிற்சி. நன்கு பரவும் மனமுடை என்று மியைக்கலாம்: நன்கு—கு என்ற விகுதி பெற்ற பண்புப்பெயர். "வைகுந்த நண்ணுவரே" எனச் சந்தியாக வேண்டு மிடத்து, "வைகுந்தக் நண்ணுவரே" என நகரவொற்று மிக்கது, செய்யு ளோசை நோக்கி; விரித்தல் விகாரம். ... ... ... (௧௧)

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## ஆறாந்திருமொழி

## நாவலம் பெரிய.

அவதாரிகை:—ஸ்ரீநந்தகோபர்மகனாகப்பிறந்த கண்ணபிரான் தன்சாதிக்கு உரிய வாறு ஒருநாள் விருந்தாவனத்திலே நின்று குழலூத, அக்குழலோசையைக்கேட்ட இடைப்பெண்கள் பட்டபாடுகளையும், மேலுலகத்திலுள்ள தேவமாதர் விகாரமடைந்த வாற்றையும், திர்யக்ஜந்துக்களுங்கூடத் திகைத்து நின்றபடியையும், மரம்முதலிய அசேதநங்களும் மகிழ்வுற்றபடியையும் ஆழ்வார் தனித்தனியேபேசி அத்திருக்குழலோ சையின் வைசித்திரியத்தை அநுபவிக்கிறார்—இத்திருமொழியில்.

[இது—ஆழ்வார் தாமானதன்மையிலே அருளிச்செய்தது.]

நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர் களிதோ ரற்புதங் கேளீர்
தூவலம் புரியு டைய திருமால் தூய வாயிற்குழ லோசை வழியே
கோவலர் சிறுமி யரிளங் கோங்கை குதுகு லிப்ப வுடலு ளவிழ்ந்தெங்குங்
காவலுங் கடந்து கயிறு மாலை யாகி வந்து கவிழ்ந்துநின் றனரே. (௧)

பெரிய—விசாலமான
நாவல் தீவினில்—ஜம்பூத்வீபத்தில்
வாழும்—வாழாநின்றுள்ள
நங்கைமீர்கள்—பெண்காள்!
ஓர் அற்புதம் இது } ஒரு ஆச்சரியமான இச்சங்கதியை
கேளீர்—செவிகொடுத்துக்கேளுங்கள்;
(யாது அற்புத மென்னில்;)
தூ—சுத்தமான
வலம்புரி உடைய – ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடைய
திரு மால்—ச்ரிய:பதியான கண்ணபிரானுடைய
தூய வாயில்—அழகிய திருப்பவளத்தில்
(வைத்து ஊதப்பெற்ற)
குழல்—புல்லாங்குழலினுடைய
ஓசை வழியே—இசையின்வழியாக,

கோவலர் சிறுமியர் – இடைப்பெண்களினுடைய
இள கொங்கை—இளமுலைகளானவை
குதுகுலிப்ப—(நாங்கள்முன்னே போகிறோமென்று நெறித்து) ஆசைப்பட
உடல்—சரீரமும்
உள்—மநஸ்ஸும்
அவிழ்ந்து—சிதிலமாகப்பெற்று
எங்கும்—எங்குமுள்ள
காவலும்—காவல்களையும்
கடந்து—அதிக்ரமித்துவிட்டு
கயிறு மாலை ஆகி வந்து } கயிற்றில்தொடுத்த பூமாலைகள்போல (த்திரள்திரளாக) வந்து
கவிழ்ந்து நின்றனர் – (கண்ணனைக்கண்டு வெள்கிக்) கவிழ்தலையிட்டு நின்றார்கள்;
[இதிலும்மிக்க அற்புதமுண்டோ.]

குறிப்பு :—உப்புக்கடல், கருப்புக்கடல், கள்ளுக்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், நீர்க்கடல் என்ற ஏழுகடல்களாலுஞ் சூழப்பட்ட ஏழு தீவுகளுக்கு,முறையே ஜம்பூத்வீப மென்றும், ப்லக்ஷத்வீப மென்றும், சால்மலத்வீப மென்றும், குசத்வீப மென்றும், க்ரௌஞ்சத்வீப மென்றும் சாகத்வீப மென்றும், புஷ்கரத்வீப மென்றும் பெயர்; இவற்றுள் ஜம்பூத்வீபம் மற்ற எல்லாத்தீவுகளுக்கும் நடுவிலுள்ளது; அதன் நடுவில், மேரு என்னும் பொன்மலையுள்ளது; அதனைச் சுற்றியுள்ள இளாவ்ருத வருஷத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ள நான்கு மலைகளைச் சுற்றி நாற்றிசையிலும் நான்கு மரங்களுள்ளன; அவற்றி லொன்றாகிய நாவல் மரம்—ஜம்பூத்வீப மென்று இத்தீவின் பெயர் வழங்குதற்குக் காரணமாயிற்றென்று புராணங்கூறும். [ஜம்பூ—நாவல்.] மற்றைத்தீவுகள் பலாநுபவத்திற்கே உரியவையாகையாலும், இத்தீவு பலன்களுக்குச் சாதனமான கருமங்களை அனுஷ்டித்தற்கு உரிய இடமாகையாலும் இத்தீவு ஒன்றே சிறப்புறும்; இத்தீவில் நவமகண்டமான பாரதவருஷத்துக்கன்றோ இவ்வுரிமை உண்டென்னில்; ஆம், இத்தீவுக்கு இக்கண்டம் முக்கியமானமைபற்றி அச்சிறப்பை இத்தீவுக்கு உள்ளதாகச் சொல்லக் குறையில்லை; இத்தீவினில் மானிடப்பிறவி படைப்பது அரிய பெரிய தவங்களின் பயனாகுமென்பர். அப்படிப்பட்ட தவங்களைச் செய்து இத்தீவில் பிறந்த பெண்காள்! நீங்கள் செய்ததவமெல்லாம் என்ன பயன்படைத்தன? உங்களைப்போல் பலபெண்கள் திருவாய்ப்பாடியிற் பிறந்து பகவத்விஷயத்தில் அவகாஹித்தபடியைப் பார்த்தால் உங்களுக்கு என்ன பூர்த்தி உள்ளதாகச் சொல்லக்கூடும்? என்ற கருத்துப்பட "நாவலம் பெரிய தீவினில்வாழும் நங்கைமீர்கள்!" என விளித்தது.

கண்ணபிரான் வேய்ங்குழலை வாயில்வைத்து ஊத, அதனோசையைக் கேட்ட இடைப்பெண்கள் உடலிளைத்து மனமுருகி, தங்களுக்குக் காவலாக வீட்டிலிருக்கின்ற மாமியார், மாமனார் முதலியோரையும் "ஶ்வஶுரா: கிம் கரிஷ்யந்தி?" என்று அலக்ஷியம் பண்ணிவிட்டுக் கண்ணன் குழலூதுமிடத்தே றப்புகுந்து, ஒருகயிற்றிலே அடரப் பூக்களை ஒழுங்குபடத் தொடுத்தாற்போல வரிசையாக நின்று கண்ணன் முகத்தைக் கண்டவாறே 'நாம் நமது காமத்தை இங்ஙனே வெளிப்படை யாக்கினோமே' என்று வெள்கி, அவன் முகத்தை முகங்கொண்டு காணமாட்டாமல் தலைகவிழ்ந்து தரையைக்கீறி நின்றனரென்க. வழியாவது-ஓரிடத்தினின்றும் மற்றோரிடத்தை அடைவிப்பது; இப்பெண்களை அவ்வாறு செய்தது குழலோசையாகையால், குழலோசை வழியே என்றாரென்க. குதுகலிப்ப என்றால் சிறக்கும்; கௌதூஹலிப்ப என்றபடி. முதலடியில், "நங்கைமீர்கள்" என்றவிடத்து, கள்—விகுதிமேல் விகுதி. அற்புதம்—அத்புதம். ... ... ... (௧)

இடவ ணரையிடத் தோளொடு சாய்த்திரு கைகூ டப்புரு வம்நெரிந் தேறக்
குடவ யிறுபட வாய்கடை கூடக் கோவிந்தன் குழல்கொ டூதின போது
மடமயில் களொடு மான்பிணை போலே மங்கை மார்கள்மலர்க் கூந்த லவிழ
உடைநெ கிழவோர் கையால் துகில்பற்றி யொல்கியோ டரிக்க ணோடநின் றனரே.

கோவிந்தன்—கண்ணபிரான்
இட அணைய — (தனது) இடப்பக்கத்து [மோவாய்க்கட்டையை
இட தோளொடு சாய்த்து — இடத்தோள் பக்கமாகச் சாய்த்து
இரு கை—இரண்டுதிருக்கைகளும்
கூட—(குழலோடு) கூடவும்,
புருவம்—புருவங்களானவை
நெரிந்து ஏற—நெரிந்து மேலேகிளரவும்
வயிறு—வயிறானது
குடம் பட—குடம்போலக்குமிழ்த்துத் தோ [ற்றவும்,
வாய்—வாயானது
கடை கூட—இரண்டருகுங்குவியவும்
(இவ்வாறான நிலைமையாக)
குழல் கொடு—வேய்ங்குழலைக்கொண்டு
ஊதின போது—ஊதினகாலத்திலே,
மடம் மயில்களொடு — அழகியமான்களை [யும்
மான் பிணை போலே — மான்பேடைகளை [யும்போன்றுள்ள
மங்கைமார்கள்—யுவதிகள்,
மலர் கூந்தல்—(தங்களுடைய) மலரணிந்த [கூந்தல் முடியானது
அவிழ—அவிழ்ந்து அலையவும்
உடை—அரைப்புடவையானது
நெகிழ—நெகிழவும்
துகில்—(நெகிழ்ந்த) அத்துகிலை
ஓர் கையால்—ஒருகையாலே
பற்றி—பிடித்துக்கொண்டு
ஒல்கி—துவண்டு,
அரி ஓடு கண் ஓட நின்றனர் — செவ்வரி, கருவரிகளோடு ஓடாநின்றகண்கள் (கண் [ணபிரான்பக்கலிலே) ஓடப்பெற்றனர்.

குறிப்பு:—குழலூதும்போது மோவாய்க் கட்டையின் இடப்பக்கம் இடத்தோள் பக்கமாகத் திரும்புதலும், இரண்டு கையும் குழலோடு கூடுதலும், புருவம் நெரித்தலும், வயிற்றிலே காற்றை நிறைத்து நிறுத்தி, அதனைத் திருப்பவளத்தாலே கிரமமாக விட்டு ஊதவேண்டுகையாலே வயிறு குடம்போல எடுப்பாகத் தோற்றுதலும், குழலின் துளைகளின் அளவுக்கு ஏற்ப வாய் குவிந்து குமிழ்த்துப் போதலும் இயல்பாமென்க. அணர்—தாடி; அதுக்கு உரிய இடத்திற்கு ஆகு பெயர். கடை கூட—(வாயின்) இரண்டு ஓரங்களும் ஒன்றுய்க்கூட; எனவே, குவிந்து என்றதாயிற்று: [கடைவாய் கூட—இரண்டு கடைவாய்களு மொன்றோடொன்றுகூட.]கோடு—கொண்டு என்பதன் சிதைவு.

இவ்வாறு கண்ணபிரான் குழலூதுவதைக் கேட்ட இடைப்பெண்கள் இருந்த விடத்தில் நின்றே உடல் விகார மடைந்து மயிர் முடியவிழவும் அரையுடை நெகிழவும் பெற்று "இந்த ஸந்நிவேசத்துடனே நாம் எவ்வாறு வெளிப்புறப்படக்கடவோம்" என்னும் ஸங்கோசமுமற்று நெகிழ்ந்ததுகிலை ஒருகையாலும், அவிழ்ந்த முடியை ஒரு கையாலும் பற்றிக்கொண்டு மிகுந்த சிரமத்துடனே ஓடிவந்து அக்கண்ணனைக் கண்ணுற் காணப்பெற்றனராம். மடமயில்போல மலர்க்கூந்தல் அவிழவும், மான்பிணை போல ஓடரிக்கணோடவும் என்று இயைப்பர். ஒல்குதல்—ஒடுங்குதல். கண் ஓடநிற்றல்—அவனைக் காட்டு, காட்டு என்று கண்கள் விரைந்தோடி நிற்றல். "ஸ்த்ரீத்வம் பின்னாட்டினாலும் ஓடுகிற கண்ணை நிஷேதிக்கப்போமோ" என்ற ஜீயருரை அறியத்தக்கது. ... ... ... ... ... (உ)

வானிள வரசு வைகுந்தக் குட்டன் வாசுதே வன்மது ரைமன்னன் நந்தர்
கோனிள வரசு கோவலர் குட்டன் கோவிந்தன் குழல்கோ டூதின போது
வானிளம் படியர் வந்துவந் தீண்டி மனமுரு கிமலர்க் கண்கள் பனிப்பத்
தேனள வுசெறி கூந்த லவிழச் சென்னிவேர்ப் பச்செவி சேர்த்துநின் றனரே.

வான்-பரமபதத்துக்கு
இள அரசு-யுவராஜனும்
வைகுந்தர் — அப்பரமபதத்திலுள்ள நித்ய ஸூரிகளுக்கு
குட்டன்-பரிந்து நோக்கவேண்டும்படியா [னபருவத்தையுடையனும்
வாசுதேவன்-வஸுதேவர்க்குமகனுகப்பிற [ந்தவனும்
மதுரை மன்னன் — வடமதுரைக்கு அரச [னும்
நந்தர்கோன்-நந்தகோபர்க்குப்பிள்ளையாய் (வளர்ந்து)
இள அரசு-இளவரசனும்
கோவலர் குட்டன் — இடையர்களுக்குப் பரிந்துநோக்கவேண்டும்படியான பிள்ளையாயுமுள்ள
கோவிந்தன்-கண்ணபிரான்
குழல் கொடு ஊதினபோது—;
வான்-ஸ்வர்க்கலோகத்திலுள்ள
இள படியர்-போகத்துக்குஉரிய சரீரத் [தையுடையரான மாதர்
(ஸ்ரீப்ருந்தாவனத்திலே)
வந்து வந்து ஈண்டி } திரள்திரளாகவந்து குவிந்து
மனம் உருகி-(தங்கள்) நெஞ்சு உருகப்பெ [ற்று
மலர் கண்கள்-குவளைமலர்போலழகியகண் [களினின்றும்
பனிப்ப-ஆநந்தநீர் துளித்துவிழ
தேன் அளவு-தேனோடுகூடின
செறி கூந்தல்-செறிந்தமயிர்முடியானது
அவிழ-அவிழ,
சென்னி-நெற்றியானது
வேர்ப்ப-வேர்வையடைய
(இவ்வகை விகாரங்களையடைந்து)
செவி-(தமது) காதுகளை
சேர்த்து-(அக்குழலோசையிலே) மடுத்து
நின்றனர்-திகைத்துநின்றார்கள்.

குறிப்பு :—கண்ணபிரானது குழலினிசையைக் கேட்ட மேலுலகத்து மாதர் தங்களிருப்பிடத்தில் நிற்கமாட்டாமல் கண்ணனிருக்கு மிடத்தில் கூட்டங் கூட்டமாக ஓடிவந்து அக்குழலோசையை நன்றாகக்கேட்ட பிறகு அவர்களது மனம் நீர்ப்பண்டமாய் உருகிற்று; கண்களினின்றும் ஆநந்த பாஷ்பங்கள் துளித்தன; கூந்தல் அவிழ்ந்தன; நெற்றி வேர்த்தது; இப்படிப் பட்ட விகாரங்களை அடைந்துகொண்டே அவ்விசையைக் கேட்டுக்கொண்டு மயங்கிக்கிடந்தனரென்க. பரமபதத்தில் எம்பெருமான் நித்திய ஸூரிகளைத் தலைவராக்கி அவர்களின் கீழே தன்னையமைத்துக்கொண்டு அவர்களுக்கு நிர்வாஹகனுயிருக்குந் தன்மைபற்றி வானிளவரசு என்றார்; "திருவனந் தாழ்வான் மடியிலும் ஸேநாபதியாழ்வான் பிரம்பின் கீழிலும் பெரிய திரு வடி சிறகின் கீழிலுமாயிற்று இத்தத்துவம் வளருவது" என்பது பட்டரு ளிச்செயலாம். அந்த ஸூரிகள் இவன் மேலுள்ள பரிவினால் குழந்தைகளு க்குக் குசலம் கோருவதுபோல அநவரதம் இவனுக்கு மங்களாசாஸநம் பண் ணுந்தன்மை பற்றி வைகுந்தக்குட்டன் என்றார்; வைகுந்தர் + குட்டன்;—"சில விகாரமாமுயர்திணை" என்பது விதி. பரமபதத்தில் ஸ்வதந்திரர் ஒருவரு மில்லாமையால் அங்கு இளவரசாயிருப்பது, தன்னுடைய ஆச்ரிதபாரதந் திரியத்துக்கு ஒக்கும்; இவ்விபூதியிலுள்ளாரடங்கலும் ஸ்வதந்திரராகை யாலே ஈராசு அறுத்துக்கொண்டு மன்னனுயிருக்கவேண்டுதலால் மதுரை மன்னன் என்றார். இடைச்சேரியிலுள்ள பஞ்சலக்ஷம் குடிக்கும் அரசர் நந்தகோபராகையாலே இவனை நந்தர் கோனிளவரசு என்றார் என்க.

சென்னி என்ற சொல் தலையைக் குறிப்பதாயினும், இங்கு நெற்றியைக் குறித்தது; "மத்தக மிலாடம் முண்டகம் நுதல் குளம், நெற்றி பாலம்

என நிகழ்த்தினரே" என்ற திவாகர நிகண்டில், தலையைக்குறிப்பதான மத்தகமென்ற சொல்லை நெற்றிக்கும் பரியாயநாமமாகக் கூறியுள்ளது காண்க. (௩)

தேனுகன் பிலம்பன் காளிய னென்னுந் தீப்பப் பூடுக ளடங்க வுழக்கிக்
கான கம்படி யுலாவி யுலாவிக் கருஞ்சிறுக் கன்குழ லூதின போது
மேன கையொடு திலோத்தமை யரம்பை யுருப்பசி யரவர் வெள்கி மயங்கி
வானகம் படியில் வாய்திறப் பின்றி யாடல் பாடலிவை மாறினர் தாமே. (௪)

தேனுகன்—தேநுகாஸுரன்,
பிலம்பன்—ப்ரலம்பாஸுரன்,
காளியன்—காளியநாகம்
என்னும்—என்று சொல்லப்படுகிற
தீப்பப்பூடுகள் அடங்க } கொடிய பூண்டுகளெல்லாம்
உழக்கி—தலையழித்துப்போகட்டு
கான் அகம்—காட்டுக்குள்ளே
படி—இயற்கையாக
உலாவி உலாவி — எப்போதும் உலாவிக்
கரு—கரிய திருமேனியையுடைய
சிறுக்கன்—சிறுபிள்ளையான கண்ணன்
குழல் ஊதின போது—;
மேனகையொடு—மேனகையும்
திலோத்தமை—திலோத்தமையும்
அரம்பை—ரம்பையும்
உருப்பசி—ஊர்வசியும் (ஆகிற)
அரவர்—அப்ஸரஸ்ஸ்
(அக்குழலோசையைக்கேட்டு)
மயங்கி—மோஹமடைந்து
வெள்கி—வெட்கப்பட்டு
வான் அகம்—தேவலோகத்திலும்
படியில்—பூலோகத்திலும்
வாய் திறப்பு இன்றி—வாயைத்திறவாமல்
ஆடல் பாடல் இவை } ஆடுகை, பாடுகை என்கிற இக்காரியங்களை
தாமே—தாமாகவே
மாறினர்—விட்டொழிந்தனர்.

குறிப்பு:—கானக மென்றது—விருந்தா வனத்தை யென்றுணர்க. அவ்விடத்தில் கண்ணபிரான் ஊதுகின்ற குழலினிசையைக் கேட்ட மேனகை முதலிய மேம்பட்ட மாதரும் "இனி நாம் ஆடுகையாவதென், பாடுகையாவதென்!" என்று லஜ்ஜை கொண்டு பிறருடைய ஏவுதலின்றித் தாமாகவே அந்த நித்தியகர்மாநுஷ்டாநத்தைத் தவிர்ந்தனர், எனவே கண்ணபிரானுடையவிலாஸங்களின் திறம் வீறு பெற்றுள்ளமை போதரும். தேவமாதர் ஆடும்போதை நடையழகையும், பாடும் போதைப் பாட்டின்பத்தையும் கண்ணபிரானது நடையழகும் குழலோசையும் வென்றன வென்றவாறு. வாய்திறப்பின்றி—"இனி நாம் வானிலும் நிலத்திலும் ஆட, பாட என்று வாயாலுஞ் சொல்லக்கடவோமல்லோம்" என்று ஆணையிட்டுக்கொண்டபடி.

தேனுகன்—கழுதை வடிவங்கொண்டு நலியவந்த அஸுரன். ப்ரலம்பாஸுரனைக் கொன்றவன் பலராமனாயிருக்க, கண்ணன் கொன்றதாகக்கூறியது, ஒற்றுமை நயம் நோக்கியென்க. பூண்டுகளென்றது—புன்மைபற்றி. கானகம் படி—காடுநிலத்திலே என்றுமாம்; "திருவயிற்றினகம் படியில் வைத்தும்மையுய்யக் கொண்ட" என்றது காண்க. ... ... (௪)

முன்னர சிங்கம தாகி யவுணன் முக்கியத் தைமுடிப் பான்மூ வுலகில்
மன்ன ரஞ்சுமது சூதனன் வாயிற் குழலி னோசைசெவி யைப்பற்றி வாங்க
நன்னரம் புடைய தும்புரு வோடு நாரத னுந்தந்தம் வீணை மறந்து
கின்ன ரம்மித னங்களுந் தந்தங் கின்ன ரந்தொடு கிலோமென் றனரே. (௫)

முன்—முற்காலத்திலே
நரசிங்கம் அது ஆகி } நரஸிம்ஹரூபங்கொண்டு
அவுணன்—ஹிரண்யாஸுரனுடைய
முக்கியத்தை—மேன்மையை
முடிப்பான்—முடித்தவனும்
மூ உலகில் மன்னர்—மூன்றுலோகத்திலு [முள்ள அரசர்கள்
அஞ்சும்—(தனக்கு) அஞ்சும்படியாயிருப்ப [வனுமான
மதுசூதனன்—கண்ணபிரானுடைய
வாயில்—வாயில் (வைத்து ஊதப்பெற்ற)
குழலின்—வேய்ங்குழலினுடைய
ஓசை—ஸ்வரமானது
செவியை—காதுகளை
பற்றி வாங்க—பிடித்திழுக்க,
நல் நரம்பு உடைய — நல்லவீணையைக்கை [யிலுடைய
தும்புருவோடு - தும்புருமுனிவனும்
நாரதனும் - நாரதமஹர்ஷியும்
தம் தம் - தங்கள்தங்களுடைய
வீணை - வீணையை
மறந்து - மறந்துவிட,
கின்னரமிதுனங்களும் } கிந்நரமிதுநம் என்றுபேர் பெற்றுள்ளவர்களும்
தம் தம் கின்னரம் - தங்கள்தங்கள் கின் [னரவாத்யங்களை
தொடுகிலோம் என்றனர் } "(இனித்) தொடக்கட வோமல்லோம்' என்று [விட்டனர்.

குறிப்பு:—வீணை வித்தையில் முதல் வகுப்பில் தேர்ச்சிபெற்ற தும்புரு நாரதர்கள் கண்ணனது குழலோசையைக் கேட்ட பிறகு, அது தன்னிலே ஈடுபட்டுத்தமது வீணைகளை மறந்தொழிந்தனர்; கிந்நரமிதுநங்கள் என்று புகழ் பெற்றிருக்கும் பேர்களும் இக்குழலோசையைக் கேட்டுத் தோற்றதாகக்கொண்டு "இனி நாங்கள் எங்கள் கின்னரந் தொடுவதில்லை, எங்களப்பனாணை" என்று உறுதியாக உரைத்தொழிந்தனர் என்க.

முன் பொருகால் பிரஹ்லாதாழ்வானுக்காக நரசிங்கவுருவாய்த் தூணில் தோன்றி ஹிரண்யனுரத்தைக் கிழித்தவரலாறு கீழ்விரிக்கப்பட்டது. **முன் முடித்தான்** என இறந்த காலமாகக் கூறவேண்டியிருக்க, எதிர்காலமாகக் கூறியுள்ளது—இயல்பினாலாகிய காலவழுவமைதி; "விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி" என்பது நன்னூல். வீணையின் தந்திகளைச் சொல்லக்கடவதான நரம்பு என்ற சொல் இங்கு வீணையைக்குறித்தது இலக்கணையால். 'கின்னரம் மிதுனங்களும்' என மகரவிரித்தல், செய்யுளோசை நோக்கியது. "தொடகிலோம்" என்று மோதலாம். ... ... ... ... ... (௫)

செம்பெருந்தடங் கண்ணன் றிரடோளன் றேவகி சிறுவன் றேவர்கள் சிங்கம்
நம்பரமனிந் நாள்குழ லூதக் கேட்ட வர்களிட ருற்றன கேளீர்
அம்பரந் திரியுங் காந்தப்ப ரெல்லா மமுத கீதவலை யாற்சுருக் குண்டு
நம்பர மன்றென்று நாணி மயங்கி நைந்து சோர்ந்துகைம் மறித்துநின் றனரே(௬)

செம் பெரு தட கண்ணன் } சிவந்து மிகவும் பெரிய திருக் கண்களையுடைய [னும்
திரள் தோளன் - பருத்த தோள்களையு [டையனும்
தேவகி சிறுவன் - தேவகியின்பிள்ளையாய்
தேவர்கள் சிங்கம் - தேவஸிம்ஹமாய்
நம் பரமன் - நமக்குஸ்வாமியான பரமபுரு [ஷனுமிராநின்றகண்ணபிரான்
இ நாள் - இன்றையதினம்
குழல் ஊத - வேய்ங்குழலை ஊத,
கேட்டவர்கள் - (அதன் இசையைக்)கேட் [டவர்கள்
இடர் உற்றன - அவஸ்த்தைப்பட்ட [வகைகளை

கேளீர் - (சொல்லுகிறேன்) கேளுங்கள்;
(அந்த இடர் யாதெனில்,)
அம்பரம்—ஆகாசத்திலே
திரியும் - திரியாநின்ற
காந்தப்பர் எல்லாம் } கந்தருவர் அனைவரும்
அமுதம் கீதம் வலையால் } அமுதம்போல் இனிதான குழலிசையாகிறவலையிலே
சுருக்குண்டு - அகப்பட்டு,
நம் பரம் அன்று என்று } (பாடுகையாகிற) சுமை (இனி) நம்முடையதன்றென்று (அறுதியிட்டு
(முன்பெல்லாம் பாடித்திரிந்ததற்கும்)
நாணி - வெட்கப்பட்டு
மயங்கி - அறிவழிந்து
நைந்து - மனம் சிதிலமாகப்பெற்று
சோர்ந்து-சரீரமுங் கட்டுக்குலையப்பெற்று
கை மறித்து நின்றனர் } (இனி நாம் ஒருவகைக் கைத்தொழிலுக்கும் கடவோமல்லோம் என்று) கையைமடக்கிக்கொண்டு நின்றார்கள்.

குறிப்பு:—கண்ணபிரானூதின குழலினோசை செவியில் விழப்பெற்ற கந்தருவர்கள் பட்டபாட்டைப் பகருகின்றேன் கேளுங்கள்;—பரமபோக்யமான இக்குழலோசையாகிற வலையிலே அவர்கள் கட்டுப்பட்டு, "இனிப் பாட்டுத் தொழிலாகிற பெருஞ்சுமையில் நமக்குயாதொரு அந்வயமுமில்லை" என்று நிச்சயித்தொழிந்ததுமன்றி, கீழுள்ளகாலமெல்லாம் தாம் பாடித்திரிந்தபடியை நினைத்து அதற்காகவும் வெட்கப்பட்டு, மேல் ஒன்றும் நினைக்கவொண்ணாதபடி அறிவையுமிழந்து உடலும் மனமுங்கட்டழிந்து இவ்வாறான தங்கள் தளர்த்தியை வாயினாற்சொல்லவும் வல்லமையற்று "இனி நாங்கள் ஒன்றுஞ் செய்யமாட்டுகிறிலோம்" என்பதைத் தெரிவிக்கிற பாவனையாக ஊமையர் ஸம்ஜ்ஞைகாட்டுவதுபோலக் கையைமறித்துக் காட்டிநின்றனராம். கைமறித்தல்—குடங்கையைத் திருப்பிக்காட்டுதல்; என்னிடமொன்றுமில்லையே என்பதைத் தெரிவிக்கவேண்டுவார் இவ்வாறுகாட்டுதல் உலகில்வழங்குவது காண்க.

உற்றன இடர்—உற்ற இடர்களை என்றபடி. அம்பரம்—வடசொல். கந்தர்வ என்றவடசொல் காந்தப்பர் என மருவிற்று. அமுதகீதம்—அம்ருதகீதம்; உவமைத்தொகை. பராங்முகமாகத் திரியுமவர்களையும் வலிய இழுக்குந்தன்மை பற்றி அமுதகீதவலை எனப்பட்டது. பரம்—பாரம். போர்க்களத்தில் தோற்றவர்கள் 'போர்செய்யும்பாரம் இனிநமக்குவேண்டா' என்று கையெழுத்திட்டுப் போவதுபோல, கானவித்தையில்தோற்ற கந்தருவரும் நம்பரமன்றென்றொழிந்தன ரென்க. ... ... ... ... ... ... (சு)

புலியுள்நான் கண்டதோ ரற்புதங் கேளீர் பூணிமேய்க் குமிளங் கோவலர் கூட்
தலையுள கத்தணை யான்குழ லூத வமரலோ கத்தள வுஞ்சென் றிசைப்ப [டத்
அவியுண மறந்து வானவ ரெல்லா மாயர் பாடிநிறை யப்புகுந் தீண்டிச்[விடாரே,
செவியுணு வின்சுவை கொண்டு மகிழ்ந்து கோவிந்த னைத்தொடர்ந் தென்றும்

புவியுள் - பூமியிலே
நான் கண்டது ஓர் அற்புதம் } நான் கண்ட ஒரு ஆச்சரியத்தை (சொல்லுகின்றேன்,)
கேளீர் - கேளுங்கள் ;
(அது யாதெனில்;)
பூணி - பசுக்களை
மேய்க்கும் - மேய்க்காநின்ற
இள கோவலர் - இடைப்பிள்ளைகள்
கூட்டத்து அவையுள் } திரண்டிருக்கிற ஸபையிலே
நாகத்து அணையான் - சேஷ சாயியான கண்ணபிரான்
குழல் ஊத - குழலூதினவளவிலே,
(அதன் ஓசையானது)
அமரர் லோகத்து அளவும் சென்று } தேவ லோகம் வரைக்கும் பரவி
இசைப்ப - (அங்கே) த்வனிக்க,
(அதைக்கேட்ட)
வானவர் எல்லாம் - தேவர்களனைவரும்
அவி உணு - ஹவிஸ்ஸு உண்பதை
மறந்து - மறந்தொழிந்து
ஆயர் பாடி நிறைய புகுந்து } இடைச்சேரி நிறையும்படி (அங்கே) வந்துசேர்ந்து
ஈண்டி - நெருங்கி
செவி உள் நா - செவியின் உள் நாக்காலே
இன் சுவை - (குழலோசையின்) இனிய ரஸத்தை
கொண்டு - உட்கொண்டு
மகிழ்ந்து - மனங்களித்து
கோவிந்தனை - கண்ணபிரானை
தொடர்ந்து - பின் தொடர்ந்தோடி
என்றும் - ஒருக்ஷணகாலமும்
விடார் - (அவனை) விடமாட்டா திருந்தனர்.

குறிப்பு:—இப்பூலோகத்திலுள் நான்கண்ட அற்புதமொன்றுண்டு, கேளுங்கள் ; கண்ணபிரான் இவ்வுலகில் ஊதின குழலினோசை மேலுலகத்தளவும் பரந்துசெல்ல, அங்கு அதனைக்கேட்ட தேவர்களில் ஒருவர் தப்பாமல் தமது மேன்மைக்கேற்ப அந்தணர் யாகங்களில்தரும் ஹவிஸ்ஸுக்களையும் உண்ண மறந்து 'கண்ணன்பிறந்துவளருகின்ற ஊர்' என்றுகொண்டு திருவாய்ப்பாடியேறத் திரண்டுவந்துபுகுந்து கூட்டத்தின் மிகுதியினால் ஒருவரை ஒருவர் நெருக்கிநின்று அக்குழலினோசையைக் காதுகளால் நன்குபருகி அக்கண்ணபிரான் சென்றவிடங்களுக்கெல்லாந் தாங்களும்பின்னேசென்று அவனை ஒரு நொடிப்பொழுதும் விட்டகலமாட்டாதொழிந்தனர் ; இதிலும்மிக்க அற்புதமுண்டோ? என்றவாறு. தேவர்கள் உண்பது அமுதமாயிருக்க "அமுதுணு மறந்து" என்னாது "அவியுணுமறந்து" என்றது—தங்கள்மேன்மைக்கு உறுப்பு அவியுணவேயாகையால் அமுதத்திற்காட்டிலும் தாங்கள் விரும்பி உண்பது அவியானமைபற்றியென்க; "அந்தணர் யாகத்திலே ஸமர்ப்பிப்பது" என்ற விசேஷமுண்டிறே ஹவிஸ்ஸுக்கு. கண்ணன் குழலூதுவது விருந்தாவனத்தில் என்னுநிற்க, தேவர்கள் ஆய்ப்பாடியிற்புகுந்ததென்? எனில்; கீழ்க்கச்சிக் கோயிலில் நடக்கும் பேரருளாளனது பெரியதிருவடித் திருநாளுக்கென்று வந்த திரள் கூட்டத்தின் மிகுதியால் அங்கேறப்புகுரமாட்டாது மேற்கச்சிப் புறத்தளவிலே நிற்குமாபோலக்கொள்க ; எனவே, இக்குழலோசைகேட்க வந்து திரண்டுள்ள ஜனங்கள் கண்ணபிரானைச்சுற்றிப் பற்பலகாததூரத்தளவாக நின்றனரென்று திரளின்மிகுதி கூறியவாறும். திருவாய்ப்பாடியிலுள்ள பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களும் கண்ணனிருப்பிடத்தைச் சூழ்ந்துகொண்டால், இனித்தேவர் நிற்குமிடம் எதுவாகக்கூடுமென்று ஆய்ந்துணர்க. (செவி உள்) நாவின்—என்று ஒரு சொல்லாக்கொண்டு நாவினால் என்று உரைத்தலுமொன்று; திருவிருத்தத்தில் "தடாவியவம்பும்" என்றபாட்டில், "பறவை இன்பாகன்,—பறவையின் பாகன்" என்றுரைத்ததுபோல. "செவிக்கு நாவு

ண்டோவென்னில்,'செவியுணு நீட்ட'என்னக்கடவதிறே; சேதநஸமாதியாலே சொல்லுகிறது; அன்றிக்கே, செவிக்கு உணவாயிருந்துள்ள இனிதான மாதுரஸத்தைப் புஜித்து என்னவுமாம்; 'செவிக்குணவில்லாதபோழ்து'(குறள்) என்றுனிறே''என்றஜீயருரை இங்கு அறியத்தக்கது. ரஸத்தைக் கிரஹிப்பது எதுவோ, அது நாக்கு என்றுகொண்டு, இசையின் சுவையைக் கிரஹிக்குங் கருவியைச் செவியுள்நா என்றதாகக்கொள்க; ஔபசாரிகப் பிரயோகமாமத்தனை. அவை—ஸபா. அவி—ஹவிஃ. உணு—உணவு என்பதன்விகாரம். அமரலோகம்—வட சொற்றொடர். ... ... ... ... (எ)

சிறுவிரல் கள்தட விப்பரி மாறச் செங்கண்கோ டச்செய்ய வாய்கோப் பளிப்பக்
குறுவெயர்ப் புருவங் கூட லிப்பக் கோவிந்தன் குழல்கோ டூதின போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து சூழ்ந்துபடு காடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக் கவிழ்ந்திறங் கிச்செவி யாட்டகில் லாவே.

சிறு விரல்கள் - (தனது) சிறிய கைவிரல்கள்
தடவி - (குழலின் துளைகளைத்) தடவிக்கொண்டு
பரிமாற - (அக்குழலின் மேல்) வியாபரிக்கவும்
செம் கண் - செந்தாமரை போன்ற கண்கள்
கோட - வக்ரமாகவும்
செய்ய வாய் - சிவந்த திருப்பவளம்
கொப்பளிப்ப - (வாயுவின் பூரிப்பாலே) குமிழ்க்கவும்
குறு வெயர் புருவம் - குறு வெயர்ப்பரும்பின புருவமானது
கூடலிப்ப - மேற் கிளர்ந்து வளையவும்,
கோவிந்தன் குழல் கொடு ஊதினபோது-; (அக்குழலோசையைக் கேட்ட)
பறவையின் கணங்கள் - பக்ஷிகளின் கூட்டங்கள்
கூடு துறந்து - (தம்தம்) கூடுகளைவிட்டொழிந்து
வந்து-(கண்ணனருகில்) வந்து
சூழ்ந்து - சூழ்ந்துகொண்டு
படு காடு கிடப்ப - வெட்டி விழுந்த காடு போலே மெய் மறந்து கிடக்க,
கறவையின் கணங்கள் - பசுக்களின் திரள்
கால் பரப்பிட்டு - கால்களைப் பரப்பி
கவிழ்ந்து இறங்கி - தலைகளை நன்றாகத் தொங்கவிட்டுக் கொண்டு
செவி ஆட்ட கில்லா - காதுகளை அசைக்கவும் மாட்டாதே நின்றன.

குறிப்பு:—குழலூதும்போது குழலின்துளைகளில் புதைக்கவேண்டுவது புதைத்துத் திறக்கவேண்டுவது திறக்கைக்காக அவற்றைக் கைவிரல்களால் தடவுதலும், கண்கள் ஓர்வகையாக மேல்நோக்கி வக்கரித்தலும், இரண்டு கடைவாயையும் குவித்துக்கொண்டு ஊதுகிறபோது வாயினுள் உள்ள வாயுவின் பூரிப்பாலே வாய்குமிழ்த்துத்தோற்றுதலும், புருவங்கள் மேற்கிளர்ந்துவளைதலும் குழலூதுவார்க்கு இன்றியமையாத இயல்பாதல் அறிக. இவ்வாறானநிலைமையோடு கண்ணபிரான் குழலூத, அதன்ஓசையைக்கேட்ட பறவைகள் தாமிருக்குங்கூடுகளைவிட்டிட்டோடிவந்து, காட்டில் வெட்டி வீழ்த்தமரங்கள்போல் ஆடாது அசையாது நிலத்தினில் விழுந்துகிடந்தன; அங்ஙனமே பலபசுக்கூட்டங்களும் மெய்மறந்து கால்களைப்பரப்பிக்கொண்டும் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டும் சைதந்யமற்ற வஸ்துபோலத்திகைத்து நின்றன; எனவே, உயர்திணைப்பொருள்களோடு அஃறிணைப்பொருள்களோடுவாசிபற எல்லாப்பொருள்களும் ஈடுபட்டுமயங்குமாறு கண்ணபிரான்

குழலூதினனென்கை. கோட—"கோட்டம் வணரேவளாவல் வளைதல்" என்றநிக ண்டுகாண்க. கோப்பளிப்ப—"குமிழ்ப்புறவடிவே கொப்பளித்தல்பேர்."—குறு வெயர்=குறுமை—சிறுமை; சிறியமுத்தின் அளவாக ஸ்வேதமுண்டாதல்; உலாவியுலாவிக்குழலூதுகிறஆயாஸம்பொறாமல் மென்மையாலேபுருவம்குறு வெயர்ப் பரும்பினபடி. பறப்பது—பறவை. கறப்பது—கறவை. படு காடு= படுதல்—அழிதல்; காடு என்றசொல் இலக்கணையால் மரங்களை உணர்த்தும் இங்கு: அழிந்த மரம்—வெட்டப்பட்டு வீழ்ந்தமரமென்க. காடு கிடப்ப— காடுபோலக்கிடப்ப என்றபடி; உவமவுருபு தொக்கிக்கிடக்கிறது. கறவைகள் இயற்கையாகப் புல்மேய்ந்துகொண்டுசெல்லும்போது இக்குழலோசை செவி யிற்பட்டு மயங்கினமையால் நின்றபடியே திகைத்தமைபற்றிக் கால்பரப்பிட்டு என்றார்; பசுக்கள் மெதுவாக நடக்கும்போது கால்பரப்பிட்டு நடத்தல் இயல் பாதல் காண்க. கால்பரப்பியிட்டு என்றபடி; தொகுத்தல் விகாரம். கவிழ்ந்து இறங்கி—ஒரு பொருட்பன்மொழி. காதுகளை அசைக்கில் இசைகேட்கைக் குத் தடையாமென்று செவியாட்டாதொழிந்தன வென்க. ... ... (அ)

திரண்டெ ழுதழை மழைமுகில் வண்ணன் செங்கமல மலர்சூழ் வண்டினம் போ
சுருண்டிருண் டகுழல் தாழ்ந்த முகத்தா னூது கின்றகுழ லோசை வழியே [லே
மருண்டுமான் கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்தபுல் லுங்கடை வாய்வழி சோர
இரண்டுபா டுந்துலுங் காப்புடை பெயரா வெழுதுசித் திரங்கள் போலநின் றன
[வே

திரண்டு எழு - திரண்டு மேலெழுந்த
தழை - தழைத்திராநின்ற
மழை முகில் - காளமேகம் போன்ற
வண்ணன் - வடிவையுடைய கண்ணபிரா [ன்,
செம் கமலம் மலர் சூழ் - செந்தாமரைப் பூவைச் சூழ்ந்து படிந்துள்ள
வண்டு இனம் போலே - வண்டுத்திரளைப் [போன்று
சுருண்டு இருண்ட - சுருட்சியையும் கருநி [றத்தையுமுடைய
குழல் - திருக்குழல்களானவை
தாழ்ந்த - தாழ்ந்து அலையப்பெற்ற
முகத்தான் - முகத்தையுடையவனாய்க் [கொண்டு
ஊதுகின்ற - ஊதுகிற
குழல் ஓசை வழியே - குழலின் ஓசையா [கிற வழியிலே (அகப்பட்டு)
மான் கணங்கள் - மான் கூட்டங்கள்
மருண்டு - அறிவழிந்து
மேய்கை மறந்து-மேய்ச்சலையும் மறந்து
மேய்ந்த - வாயில் கவ்வின
புல்லும் - புல்லும்
கடை வாய் வழி - கடைவாய் வழியாக
சோர - நழுவிவிழ, [ண்டருகிலும்
இரண்டு பாடும் - முன் பின்னாகிற இர
துலுங்கா - (காலை) அசைக்காமலும்
புடை - பக்கங்களில் [டாமலும்
பெயரா—அடியைப் பெயர்த்து இடமாட்
எழுது சித்திரங்கள் போல நின்றன - (சுவரில்) எழுதப்பட்ட சித்திரப் பதுமைபோலத்திகைத்து நின்றன.

குறிப்பு:—கண்ணபிரான் குழலூதும்போது அவனது திருமுகமண்டலத் தின்மேல் திருக்குழல்கள் தாழ்ந்தசைந்தன என்றும், அந்த நிலைமை செந் தாமரைப்பூவில் வண்டுகள்படிந்திருப்பதை ஒக்கும் என்றுங் கூறுதல் முன்ன டிகளின்கருத்து; "செங்கமலப்பூவில் தேனுண்ணும்வண்டேபோற், பங்கிகள் வந்துன் பவளவாய் மொய்ப்ப" என்றார் கீழும். முகத்தான் ஊதுகின்ற—முகத் தையுடையனாய் ஊதுகின்ற எனப் பொருள் படுதலால், குறிப்புமுற்று வினை

யெச்சமாயிற்று; முற்றெச்சம். மனிசர் காட்டுவழியிலகப்பட்டுக் கள்ளர்கையில் அடியுண்டு அறிவழியப்பெறுதல்போல, மான்கணங்கள் இக்குழலோசையாகிற வலைவைத்தவழியிலே அகப்பட்டு ரஸாநுபவபாரவச்யத்தினால் மெய்மறந்து அறிவழிந்து போகவே, புல்மேயமாட்டாதொழிந்ததுமன்றி, மென்று தின்பதற்காக வாயில் கவ்வியிருந்த புற்களும் உறங்குவான் வாய்ப்பண்டம் போல் தன்னுடைய கடைவாய்வழியாக வெளியில் நழுவிவந்து விழுந்தன; அதுவுமன்றி, நின்ற விடத்தில் நின்றும் ஒரு மயிரிழையளவும் அசையமாட்டாமலுந்திகைத்து நின்றன என்றவாறு. துலுங்கா, புடைபெயரா—ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். ... ... ... ... (௯)

கருங்கண் டோகை மயிற்பீலி யணிந்து கட்டிநன் குடுத்த பீதக வாடை
அருங்கல வுருவி னாயர் பெருமா னவனொரு வன்குழ லூதினபோது
மரங்கள் நின்றுமது தாரைகள் பாயும் மலர்கள் வீழும்வளர் கோம்புகள் தாழும்
இரங்குங்கூம் புந்திரு மால்நின்ற நின்ற பக்கம் நோக்கி யவைசெய்யுங் குணமே.

கருங்கண் - கறுத்த கண்களையுடைய
தோகை - தோகைகளையுடைய
மயில் பீலி - மயில்களின் இறகுகளை
அணிந்து - (திருமுடி மேல்) அணிந்துகொண்டு
நன்கு கட்டி உடுத்த } நன்றாக அழுந்தச்சாத்தின
பீதக ஆடை - பீதாம்பரத்தையும்
அரு கலம் - அருமையான ஆபரணங்களையும் (அணிந்துள்ள)
உருவின் - திருமேனியை யுடையனான
ஆயர் பெருமானவன் ஒருவன் குழல் ஊதினபோது—;
மரங்கள் - (அசேதநமான) மரங்களுங்கூட
நின்று - ஒருபடிப்பட நின்று (உள்ளுருகினமை தோற்ற)
மதுதாரைகள் - மகரந்த தாரைகளை
பாயும் - பெருக்காநின்றன;
மலர்கள் - புஷ்பங்களும்
வீழும் - (நிலைகுலைந்து) விழாநின்றன;
வளர் - மேல்நோக்கிவளர்கின்ற
கொம்புகள் - கொம்புகளும்
தாழும் - தாழாநின்றன;
இரங்கும் - (அம்மரங்கள் தாம்) உருகாநின்றன;
கூம்பும் - (கைகூப்புவாரைப்போலே, தாழ்ந்த கொம்புகளைக்) குவியாநின்றன; (இவ்வாறாக)
அவை - அந்த மரங்கள்
திருமால் நின்ற நின்ற பக்கம் நோக்கி } கண்ணன் எந்தெந்தப் பக்கங்களில் நிற்பனோ, அவ்வப்பக்கங்களை நோக்கி,
செய்யும் குணமே - செய்கின்ற வழிபாடுகள் இருந்தபடி யென்! என்று வியக்கிறபடி.

குறிப்பு:—'மரங்கள் நின்றும் மதுதாரைகள்பாயும்' என்று உரைப்பது வியாக்கியானப்போக்குக்கும் கருத்தின்பத்துக்கும் ஒவ்வாதென்றுணர்க. கண்ணபிரான் குழலூதும்போது அறிவுக்கு யோக்கியதையேயில்லாத மரங்கள் செய்தவைகளை விரித்துரைக்கின்றார்—பின்னடிகளால். கண்ணபிரான் குழலூதிக்கொண்டு நிற்கும் பக்கங்கள் பல உண்டு; அவற்றுள் ஒருபக்கத்தில் மகரந்தவர்ஷத்தைப்பண்ணும், மற்றொரு பக்கத்தில் புஷ்பவர்ஷத்தைப்பண்ணும், வேறொரு பக்கத்தில் கிளைகளைத்தாழ்த்தி நிழலைவிளைக்கும், தம்மிலே தாம் உருகியும் நிற்கும்; எமக்கருள்செய்யவேணுமென்று அஞ்சலி பண்ணுவதுபோலக் கொம்புகளைக்கூப்பாநிற்கும்; இவ்வாறாக மரங்கள் கண்ணபிரான் திறத்து வழிபட்டபடியை யான் என்னென்று கூறுவேன் என்கிறார்.

பாயும், வீழும், தாழும் என்ற முற்றுக்களுக்கு, பாய்ச்சும், வீழ்த்தும், தாழ்த்தும் என்று பிறவினைப் பொருள்கொள்வதிற் குறையொன்றுமில்லை யென்க. இவ்வினைகளையெல்லாம் மரங்களுடையனவாக உரைத்தலிலுள்ள சுவையை நுண்ணறிதினுணர்க. ... ... ... (௧௦)

**குழலிருண் டேருண் டேறிய குஞ்சிக் கோவிந்த னுடைய கோமள வாயில்**
**குழல்முழஞ் சுகளி னூடு குமிழ்த்துக் கொழித்தெழுந் தவமு தப்புனல் தன்னைக்**
**குழல்முழ வம்விளம் பும்புது வைக்கோன் விட்டுசித் தன்விரித் ததமிழ் வல்லார்**
**குழலைவென் றகுளிர் வாயின ராகிச் சாதுகோட் டியுள்கொள் ளப்படு வாரே.**

இருண்டு சுருண்டு ஏறிய } கறுத்துச் சுருண்டுநெடுக வளர்ந்த
குழல் குஞ்சி - அலகலகான மயிர்களையு [டையனை
-ய - கண்ணபிரானுடைய
கோமள வாயில் - அழகிய வாயில்
(வைத்து ஊதப் பெற்ற)
குழல் - வேய்ங்குழலினுடைய
முழஞ்சுகளினூடு - துளைகளிலே
குமிழ்த்து - நீர்க்குமிழிவடிவாகக் கிளர்ந்து
(பிறகு அது உடையப் பெற்று)
கொழித்து எழுந்த-கொழித்துக்கொண்டு [மேற்கிளம்பின
அமுதம் புனல் தன்னை - அம்ருத ஜலத் [6
குழல் முழவம் விளம்பும் } குழலோசையோடொக்க [ப்பரமபோக்யமாக] அரு [ளிச் செய்தவரும்
புதுவை கோன் - ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் [தலைவருமான
விட்டுசித்தன்-பெரியாழ்வார்
விரித்த- விஸ்தாரமாகக்கூறிய
தமிழ் - இத்தமிழ்ப்பாசுரங்களை
வல்லார் - ஓதவல்லவர்கள்
குழலை வென்ற குளிர் வாயினர் ஆகி } திருக்குழலோசையின் குளிர்த்தியையும் கீழ்ப்படுத்தித் தான் மேலாம்படி குளிர்ந்த வாய்மொழியையுடையராய்
சாது கோட்டியுள் - ஸ்ரீ வைஷ்ணவர்கள் [கோஷ்ட்டியில்
கொள்ளப்படுவார் - பரிக்ரஹிக்கப்படுவார் [கள்.

குறிப்பு:—குழல் எனினும் குஞ்சி எனினும் கேசத்துக்கே பெயராயினும் இங்கு இரண்டையுஞ் சேரச்சொன்னது ஒருவகைக் கவிமரபு; "மைவண்ண நறுங் குஞ்சிகுழல் பின்றாழ" என்றார் திருமங்கையாழ்வாரும்; "குழலளக முகந்தாழ" என்றார் பிறரும். குழன்றிராநின்ற மயிர்எனப் பொருள்கொள்க. கண்ணபிரானுடைய வாயமுதமானது, குழலூதும்போது அதன் துளைகளிலே நீர்க்குமிழிபோலக் குமிழ்த்து உடனே அது திவலையாகத்திரிந்து பரந்தபடியை முன்னடிகளாற் கூறியவாறு. அவ்வாயமுதத்தைப் பெரியாழ்வார்தாம் ஸாக்ஷாத் அக்குழலினுடைய ஓசையின் போக்யதைபோன்ற போக்யதையை யுடைய சொற்களால் அருளிச்செய்தனராம். கண்ணபிரான் குழலூதினபடியைப் பரமபோக்யமாகச்சொன்ன என்பதுகருத்து.

இப்பாசுரங்களைப் பயில்பவர் பரமபோக்யமாக உபந்யஸிக்கவல்ல வல்லமைபெற்று வாழாட்பட்டுநின்றார்குழுவினிற்புகப்பெறுவர் என்றுபலஞ்சொல்லித் தலைக்கட்டினார். தமிழ்—தமிழினாலாகிய பாசுரங்கள்; கருவியாகுபெயர். ஸாது-கோஷ்டீ—வடசொற்றொடர். ... ... ... ... (௧௧)

நாவல் . வான் தேனுகன் முன் செம்பெரும் புவி சிறு திரண்டு கருங் குழல் ஐய.

ஆறாந்திருமொழி உரை முற்றிற்று.

## ஏழாந்திருமொழி
## ஐயபுழுதி.

**அவதாரிகை**:—கண்ண பிரானுடைய திருவவதாரந் தொடங்கி எல்லாக்குண சேஷ்டிதங்களையும் பிரர்பாவனைகொண்டு அடைவே அநுபவித்துக்கொண்டு போந்த இவ்வாழ்வார் மற்றை ஆழ்வார்களைப் போலவும் அவ்வெம்பெருமானை அநுபவிக்கவிரும்பி அப்பொழுதே அவ்வநுபவம் தமக்குக்கைகூடப்பெறுமையாலே ஆற்றாமைமீதூர்ந்து தளர்ந்து தாமான தன்மையழிந்து ஆண் பெண்ணாம்படியான நிலைமை தோன்றி, ஒரு ஆய்மகளின் தன்மையையடைந்து, அப்போது தான் படும்பாட்டைத் தன் வாயாற்சொல்ல வலிவற்றுத் தன் தாயார் சொல்லும் பாசுரமாய்ச்செல்லுகிறது-இத்திருமொழி.

ஆண் பெண்ணாதல் கூடுமோ? எனில்;—

"கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந்தோளிணாய்" (கம்பராமாயணப்பாட்டு.) "வாராகவாமனனே அரங்கா வட்டநேமிவலவா ராகவா உன் வடிவு கண்டால் மன்மதனும் மடவாராக வாதரஞ்செய்வன்" (திருவரங்கத்தந்தாதி-சு௦.) என்பவாதலால் இது கூடும். "பெண்டிருமாண்மை வெஃகிப் பேதுறு முலையினாள்" (சீவகசிந்தாமணி) எனப் பெண் ஆணாகுமிடமும் உண்டு.

புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன் உலகமடங்கப்பெண் தன்மையதாதலும், ஜீவாத்துமாவினது ஸ்வாதந்திரியமின்மையும், பாரதந்திரியமும் முதலியன, ஆழ்வார்க்குத் தலைமகளாகுந் தன்மை நேர்தற்கு ஏதுவாம். தண்டகாரணிய வாஸிகளான முனிவர் இராமபிரானது ஸௌந்தர்யத்திலீடுபட்டுப் பெண்மை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக் கூடினர் என்ற ஐதிஹ்யமுமுணர்க. "கண்ணனுக்கே, யாமது காமமறம் பொருள் வீடிதற்கென்றுரைத்தான், வாமனன் சீலனிராமாநுசனிந்த மண்மிசையே" என்பதன் பொருளும் அறியற்பாலது.

தலைமகனைக் களவொழுக்கத்திற் புணர்ந்த தலைமகள் அவன் பிரிந்த நிலையில் ஆற்றாது வருந்தி வாய்பிதற்றிக் கண்ணீர்சொரிந்து மேனி மெலிந்து வடிவம் வேறுபட, அவ்வேறுபாடு மாத்திரத்தைக்கண்ட தாயார் 'இதற்குக் காரணம் என்னோ?' என்று கவன்று அவளது உயிர்ப்பாங்கியை வினவ, அவள் உண்மையான காரணத்தைக் கூறியிட, அதுகேட்ட தாயார் இவளது இளமையையும் செயலின் பெருமையையுங்கூறி முறையிடுவது - இத்திருமொழி.

இத்திவ்வியப்பிரபந்தங்களில் பலதிருமொழிகள் தோழிபாசுரமாகவும் மகள் பாசுரமாகவும் வருவதுண்டு; அதற்கு உள்ளுறை வருமாறு:—பகவத் விஷயத்தில் அபிநிவேசம் மீதூர்ந்த காலத்தில் தன் நிலைமாறிப் பெண்நிலை பெற்றுப் பேசுமிடத்தில் தோழியாகப் பேசுவதற்குக்கருத்து—தலைமகனையுந் தலைமகளையும் இணக்கிச்சேர்க்குமவள் தோழியாகையாலே, திருமந்திரத்தில் பிரணவத்தினால் எம்பெருமானோடு இவ்வாத்துமாவுக்குச்சொல்லப்பட்ட அநந்யார்ஹ சேஷத்துவம்முதலிய ஸம்பந்தங்களை உணருகையே அவ்வெம்பெருமானோடு இவ்வாத்துமா சேருகைக்கு ஹேதுவாகையாலே அந்த ஸம்பந்த ஞானமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத்தோழி யென்பது; பெற்றுவளர்த்துப் பெண்பிள்ளை யௌவநபருவத்தில் தலைமகனிடத்திலுள்ள அன்புமிகுதியால் அவனிருப்பிடத்துக்குச்செல்லவேணுமென்று பதறுமளவில் படிகடந்து புறப்படுகை குலமர்யாதைக்குப் பொருந்தாதென்று தடுப்பவள் தாயாகையாலே, ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பலத்தை விளம்பித்துப் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனைக்

கடுகப் பெறவேணுமென்ற விரைவைப்பிறப்பித்து, அவ்விரைவினால் படிகடந்து நடக்க வேண்டிவந்தவளவில் இது ப்ரபந்நர்குடிக் கட்டுப்பாட்டுக்குச் சேராததென்று விலக்கி, "சேஷிதானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்கவேணும்" என்று சொல்லித் துடிப்பை அடக்கப்பார்க்கிற நம:பதத்திற் கூறப்பட்ட உபாய அத்யவஸாய மாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தாய் என்பது; பந்துக்கள் கூட்டக் கூடுகையன்றியே தானாகவே புணர்ந்து தலைமகனுடைய மேம்பாட்டிலே யீடுபட்டுக் குடியின் கட்டுப் பாட்டையும் பாராமல் "அவனைக் கிட்டியல்லது நான் உயிர்வாழ்ந்திருக்க மாட்டேன்" என்னும் பதற்றத்தையுடையவள் மகளாகையாலே, பிரணவத்தினாலும் நமஸ்ஸாலும் சேஷியென்றும் சரண்யன் என்றும் உணரப்பட்ட எம்பெருமானுக்கு, நாராயணபதத்தினாற் கூறப்பட்டஸ்வரூபம் ரூபம் குணம் விபூதிமுதலியவற்றின் சேர்க்கையாலுள்ள வீறுபாட்டை அநுஸந்தித்து அதனாலே அவனை விளம்பித்து அநுபவிக்க நிற்கமாட்டாமல் 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டை அதிக்கிரமித்து, கிட்டி அநுபவித்தாலொழியத் தரிப்புற்றிருக்க வொண்ணாதபடி நடக்கிற ப்ரஜ்ஞாவஸ்தையை மகள் என்பது. இம்மூன்று அவஸ்தைகளுள் முதல் அவஸ்தை நடக்கும்படியைத் தோழிபாசுரத்தாலும், இரண்டாவது அவஸ்தை நடக்கும் படியைத் தாய்பாசுரத்தாலும் மூன்றாவது அவஸ்தை நடக்கும்படியை மகள் பாசுரத்தாலும் வெளியிடுவர் எனக்கொள்க.

எனவே, இத்திருமொழியில் உபாய அத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தை இவ்வாழ்வாருக்கு நடந்தமை வெளியாகு மெனக.

"ஸம்பந்தோபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி தாயார் மகள் என்று பேர்" என்பது—ஆசார்யஹ்ருதயம்.

ஐய புழுதி யுடம்ப ளாந்திவள் பேச்சு மலந்தலையாய்ச்
செய்ய நூலின் சிற்றாடை செப்ப னுடுக்கவும் வல்லளல்லள்
கையி னிற்சிறு தூதை யோடிவள் முற்றில் பிரிந்துமிலள்
பைய ரவணைப் பள்ளி யானோடு கைவைத் திவள்வருமே. (௧)

இவள் - இச்சிறு பெண்ணானவள்
ஐய புழுதி - அழகிய புழுதியை
உடம்பு அளைந்து - உடம்பிலே (படியும்படி) அளையுமவளாய்,
பேச்சும் அலந்தலை ஆய் } ஒன்றோடொன்று அந்வயியாதபேச்சையுமுடையளாய்
செய்ய நூலின் சிறு ஆடை } சிவந்த நூலாலே செய்விக்கப்பட்ட சிற்றாடையை
செப்பன் - செம்மையாக [அரையில் தங்கும்படி]
உடுக்கவும் வல்லள் அல்லள் } உடுக்கவும் மாட்டாதவளாயிரா நின்றாள்;

இவள் - இப்படிக்கொத்த பருவத்தையுடையளான இவள்
சிறு தூதையோடு - (மணற்சோறாக்கும்) சிறிய தூதையையும்
முற்றிலும் - சிறு சுளகையும்
கையினில் - கையில் நின்றும்
பிரிந்து இலள் - விட்டொழிகின்றிலள்;
இவள் - இப்படிக்கொத்த விளையாட்டையுடைய இவள்
பை அரவு அணை பள்ளியானொடு } சேஷசாயியான எம்பெருமானுடனே
கைவைத்து வரும் - கைகலந்து வாரா நின்றாள்.

குறிப்பு:—இவள் யௌவநபருவத்தையடைந்திருந்தும் இவள்தாய்மார்க்கு அன்பு மிகுதியால் இவளது மிக்க இளமையே தோற்றுவதென்க. தலைமகனைவசப்படுத்துவது உடலழகாலேயாதல் உரையழகாலேயாதல் உடையழகாலேயாதல் கூடுவதாயிருக்க, உடலும் புழுதிபடிந்து, சொல்லும் திருத்த

மற்றகுதலைச்சொல்லாய், ஆடையும் செவ்வனுடுக்க அறியாத இப்பேதைக்குத் தலைவனொடு கைகலவி உண்டானவாறு என்கொல்? என்று அதிசயப்படுகிறபடி.

இதற்கு உள்ளுறைபொருள் யாதெனில்; இவ்வாழ்வாருடைய ஆற்றாமையைக்கண்ட ஞானிகள் "எம்பெருமானைச் சேரப்பெறுதற்கு வேண்டிய உபாயங்கள்பூர்ணமன்றியிருக்க, இவருக்கு அவ்விஷயத்திலுண்டாகிய அவகாஹம் என்னோ?" என்று சொல்லும் வார்த்தை—ஸ்வாபதேசம். எம்பெருமானைச் சேர்ந்து அநுபவித்தற்கு உபகரணமான சரீரம் பிரகிருதிஸம்பந்தத்தினால் சுத்தஸாத்விகமாகப் பெறவில்லை; அவனுடைய ஸ்வரூபரூபகுணாதிகளை அடைவுபடச்சொல்ல வல்லமையில்லை; "மடிதற்றுத்தான் முந்துறும்" (திருக்குறள்) என்றபடி அரையில் ஆடையை இறுக உடுத்துக்கொண்டு முந்துற்றுக்கிளம்பும் முயற்சியில்லை; [முயற்சியை அதன்காரணத்தாற் கூறினார்.] இந்திரியங்கள்போன்ற போகோபகரணங்களைப் பெறவில்லை; இப்படியிருக்க இவர்க்குப் பகவத்விஷயிகாரம் நேர்ந்தது நிர்ஹேதுககிருபையினாலத்தனையென்று அறுதியிட்டவாறு. ஆழ்வார் திருவவதரித்த பொழுதே தொடங்கி எம்பெருமானையல்லது செல்லாமை இப்பாட்டில் வெளியாம். ஐய என்பதைப் பெயரெச்சமாகக்கொள்ளாமல், அஹஹ! என்னும் பொருளதாகக் கொள்ளவுங்கூடும். அலந்தலை—மயக்கம். செப்பன்-செப்பம் என்றதன்போலி. தூதை-மகளிர் மணலில்விளையாடும்போது மணலால் சோறுசமைப்பதாகப் பாவனை பண்ணுமிடத்து அந்தமணற்சோறாக்குதற்குக் கருவியாவது; சிறுமுட்டியென்பர். முற்றில்—சிறுமுறம். இப்பாட்டில் "இவள்" என்று சுட்டுப்பெயர் மூன்று தடவை பிரயோகித்தது என்னெனில்; பருவத்துக்கும் செயலுக்கும் உள்ள வைஷம்யத்தை, இவள் இவள் இவள் என்று பலதடவைகளால் காட்டுகிறபடி. ... .... ... ... .... (க)

வாயிற் பல்லு மெழுந்தில மயிரும் முடிகூ டிற்றில
சாய்வி லாத குறுந்த லைச்சில பிள்ளைக ளோடிணங்கித்
தீயி ணக்கிணங் காடிவந் திவள்தன் னன்ன செம்மைசொல்லி
மாயன் மாமணி வண்ணன் மேலிவள் மாலுறு கின்றாளே. (௨)

வாயில் - (இம்மகளுடைய) வாயிலே
பல்லும் எழுந்தில - பற்களும் முளைக்கவில்லை;
மயிரும் முடி கூடிற்றில - மயிரும் சேர்த்து முடிக்கும்படி கூடவில்லை,
இவள் - இப்படிப்பட்ட இவள்
சாய்வு இலாத - தலைவணக்கமில்லாத
குறுந்தலை - தண்மையில் தலைநின்ற
சில பிள்ளைகளோடு - சில பெண்பிள்ளைகளோடு
இணங்கி - ஸஹவாஸம் பண்ணி
(அதற்குப் பலனாக)
தீ இணக்கு இணங்காடிவந்து - பொல்லாத இணக்கத்தோடே இணங்கி வந்து,
(இத்தனை போது எங்குப்போனாய்? யாரோடு இணங்கி வந்தாய்? என்று (நான் கேட்டால்)
தன் அன்ன - தன்னுடைய கபடம் போன்ற கபடத்தையுடைய வார்த்தைகளை
செம்மை சொல்லி - கபட மற்ற வார்த்தை போல் தோற்றும்படி சொல்லி
இவள்—;
மாயன் மாமணி வண்ணன் மேல் - அற்புதச் செய்கைகளையும் நீலமணிநிறத்தையுமுடையனான கண்ணபிரான் விஷயத்தில்
மாலுறுகின்றாள் - மோஹப்படுகிறாள்.

**குறிப்பு:**—"முன்னெயிறேய்ந்தில கூழைமுடிகொடா" என்பதனோடு முதலடியை ஒப்பிடுக. இளம்பருவத்தளானவிவள் தாய்க்கடங்காத சில தண்ணிய பெண்களோடு சேர்ந்து அதுஅடியாகப் பகவத்விஷயத்திலே ஊன்றி, அவ்வூற்றத்தை மறைப்பதற்காகச் சில பொய்களைப்பேசி, 'கண்ணா! மணிவண்ணா!' என்று இடைவிடாது வாய்வெருவுகின்றாளென்று கூறியவாறு.

**குறுந்தலை**—குறுமையில் தலைநின்ற = நீசர்வகுப்பில் முதல் நின்ற என்றபடி. [தீயிணக்கிணங்காடிவந்து] தன்னோடு கலந்தவர்களைத் தாய்க்கடங்காதபடி கலக்கறுக்கவல்ல பகவத்விஷயத்திலே அவகாஹித்து என்றபடி. **தன் அன்ன**— குறிப்புப்பெயரெச்சமன்று; இரண்டாம் வேற்றுமைத்தொகை. அன்றி, தான் எவ்வளவு ருஜுவாக இருக்கின்றாளோ, அவ்வளவு ருஜுவாயுள்ளவார்த்தைகளைச்சொல்லி என்று எதிர்மறையிலக்கணையாகக்கூறியவாறுமாம். இப்பாட்டிலும் இவள் என்பது இரட்டித்துவந்தமைக்குக்கீழ்ப்பாட்டிற்போலக் கருத்துணர்க.

எம்பெருமானை வசப்படுத்துகைக்காகச் செய்யவேண்டிய வாசிகங்களான ஸ்தோத்ரங்களும் காயிகங்களான ப்ரணாமாதிகளும் பூர்ணமாகப்பெறாதிருக்கவும், * கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்று உறக்கமற்ற சிறுமாமனிசர்களின் அபிமாநத்தைப்பெற்றுப், புறம்புண்டான பற்றுக்களை அறுத்துத் தரவல்ல எம்பெருமானை ஸம்ச்லேஷிக்கப்பெற்றுக் "கோரமாதவஞ்செய்தனன்கொலறியேன்" என்றாற்போன்ற ஸ்ரீஸூக்திகளால் பகவத்விஷயத்தில் தமக்குள்ள அபிநிவேசத்தை வெளிப்படுத்திய ஆழ்வார்படியை அன்பர் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். ... ... ... ... (௨)

பொங்கு வெண்மணற் கொண்டு சிற்றிலும் முற்றத் திழைக்கலுறில்
சங்கு சக்கரந் தண்டுவாள் வில்லு மல்ல திழைக்கலுறாள்
கொங்கை யின்னங் குவிந்தெ ழுந்தில கோவிந்த னோடிவளைச்
சங்கை யாகி யென்னுள்ளம் நாடோறுந் தட்டுளுப் பாகின்றதே. (௩)

(இவள்,)
பொங்கு - நுண்ணியதாய்
வெள் - வெளுத்திராநின்ற
மணல் கொண்டு - மணலாலே
முற்றத்து - முற்றத்திலே
சிற்றில் - கொட்டகத்தை
இழைக்கலுறிலும் - நிர்மாணஞ் செய்யத் [தொடங்கினாலும்
சங்கு சக்கரம் தண்டு வாள் வில்லும் அல்லது - சங்கு முதலிய எம்பெருமான் சின்னங்களை யொழிய (மற்றொன்றையும்)
இழைக்கலுறாள் - இழைக்க நினைப்பதில்லை;

(இவளுக்கோவென்றால்)
இன்னம் - இன்றளவும்
கொங்கை - முலைகளானவை
குவிந்து எழுந்தில - முகம்திரண்டு கிளர்ந் [தன வில்லை;
இவளை - இப்படி இளம்பருவத்தளான இவளை
கோவிந்தனோடு சங்கை ஆகி - கண்ணபிரானோடு ஸம்பந்த முடையவளாகச் [சங்கித்து
என் உள்ளம் - என் நெஞ்சமானது
நாள் தொறும் - ஸர்வகாலமும்
தட்டுளுப்பாகின்றது - தடுமாறிச்சொல்லா [நின்றது.

குறிப்பு:—இம்மகளை வெளியிற் புறப்படவொட்டிலன்றோ இவள் தீயிணக்கிணங்காடிவருகின்றாள், இனி உள்முற்றத்திலிருந்துகொண்டே விளையாடச்சொல்லுவோமென்று, தாயாகிய நான் அங்ஙனமே நியமித்துவைத்தால், இவள் முற்றத்தில் சிற்றிலிழைக்க ஒருப்பட்டாலும் எம்பெருமானது பஞ்சாயுதங்களை இழைக்கின்றாளேயொழிய வேறுசிற்றிலிழைப்பதில்லை; தலைமகனை வசப்படுத்துதற்கு முக்கியஸாதநமான முலைகளோ, ஆண் முலைக்கும் பெண் முலைக்குமுள்ள வாசிதோற்ற முகந்திரண்டு இவளுக்குக் கிளரவில்லை; இப்படிக்கொத்த இவளது இளமையைப்பார்த்தால் "தலைமகனோடு இவள் இணங்கினாள்"என்ன முடியவில்லை; இவள்செய்யும்படிகளைப்பார்த்தால் அவ்விணக்கம் சங்கிக்கும்படியாயிருக்கின்றது; ஆகையால் ஒன்றையும் நிர்ணயித்தறியமாட்டாமையாலே என்நெஞ்சு தடுமாறு நின்றதீ! என்கிறாள். சிற்றிலும் என்றவிடத்துள்ள உம்மை—இழைக்கலுறில் என்பதோடுகூட்டியுரைக்கப்பட்டது. [கோங்கையித்யாதி.] "முலையோமுழுமுற்றும்போந்தில"என்பதோடு இதனை ஒப்பிடுக. தட்டுளுப்பு—தடுமாற்றம்.

ஸ்வாபதேசத்தில் சிற்றில் என்று ஹேயமஹாநமான தேஹத்தையும், வாஸஸ்தாநமான வீடுமுதலியவற்றையுஞ்சொல்லுகிறது. இவ்வாழ்வார் ப்ராக்ருதமான சரீரத்தைப்பூண்டு இல்லறவாழ்க்கையாயிருக்கச்செய்தேயும் விஷயாந்தரங்களில் நெஞ்சைச் செலுத்தாது, எம்பெருமானது திவ்யாயுதங்களின் அம்சமாக அவதரித்துள்ள மஹாபாகவதர்களையே தியானித்துக்கொண்டிருக்கும்படியைக் கூறுதல், முன்னடிகளுக்கு உள்ளுறை பொருள்; இனி, முலை என்று—ஸ்வாபதேசத்தில் பக்தியைச் சொல்லுகிறது; எம்பெருமானைச் சேர்ந்து அநுபவித்தற்கு உபகரணமான பக்திமுதிர்ந்து பேற்றுக்குச் சாதனமான பரமபக்தியாகப் பரிணமித்ததில்லை; இப்படியிருக்கச்செய்தே இவளுக்கு பகவத்விஷயத்தில் இவ்வளவு அவகாஹம் வாய்த்தவாறு எங்ஙனே? என்று சிலர் சங்கித்தல், பின்னடிகளுக்கு உள்ளுறைபொருள். ... ... (ரு)

ஏழை பேதையோர் பாலகன் வந்தேன் பெண்மக ளையெள்கித்
தோழி மார்பலர் கொண்டுபோய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்
ஆழி யானென்னு மாழ மோழையிற் பாய்ச்சி யகப்படுத்தி
மூழை யுப்பறி யாத தென்னும் மூதுரை யுமிலளே. (ச)

ஏழை - சாபல்யமுடையவளும்
பேதை - அறியாமையுடையவளும்
ஓர் பாலகன் - ஒப்பற்ற இளம்பருவத்தை [யுடையளுமான
என் பெண் மகளை—எனது பெண்பிள்ளை [யை
தோழிமார் பலர் வந்து - பல தோழிகள் அணுகி வந்து
எள்கி - ஈடுபடுத்தி
கொண்டுபோய் - (விளையாடுகைக்கென்று) [அழைத்துக்கொண்டுபோய்
ஆழியான் என்னும்.ஸர்வேச்வரன் என்று [ப்ரஸித்தமான
ஆழம் மோழையில் - ஒருவராலும் நிலை [கொள்ள வொண்ணாத கீழாற்றில்
பாய்ச்சி - உள்ளுறத்தள்ளி
அகப்படுத்தி - (அதிலே) அகப்படுத்தி

| | |
|---|---|
| செய்த சூழ்ச்சியை - (இவ்வாறு) செய்த [கபடத்தொழில்களை<br>ஆர்க்கு உரைக்கேன்—யாரிடம் முறையிடு [வேன்?;<br>(இம்மகளோ வென்றால்) | மூழை உப்பு அறியாதது என்னும் மூதுரையும் இலள் } "அகப்பையானது (பதார்த்தத்தின்) ரஸத்தை அறியாது" என்கிற பழமொழியின் அறிவையும் தன்னிடத்து உடையவளல்லள். |

**குறிப்பு:**—கண்டதொன்றை ஆசைப்படும்படியான அறியாமைக்குக் காரணமாகிய இளம்பருவத்தையுடையளான என்மகளை அவளுடைய பலதோழிகள் விளையாடுக்கென்று கூட்டிக்கொண்டுபோய்ச்செய்த ஒரு அநர்த்தத்தை நான்யாரிடம் முறையிட்டுக் கவலைதீர்வேன்? அவர்கள் செய்தது என்னெனில்; ஸர்வேச்வரன் என்று மேல்வேஷம்பூண்டுள்ள ஒரு ஆழமான ஆற்றினுள்ளே இவளைத்தள்ளிக் கரையேறமாட்டாது அலமரும்படியன்றோ செய்தது; இவ்வலமாப்புக்கு என்மகள் உரியளோ? இவளது பருவம் எதுவாயிருந்தது? சமையற்பாத்திரத்தில் அகப்பையையிட்டுத் துழாவினால் அந்த அகப்பைக்குச் சோற்றின் சுவையை அறிய வல்லமையில்லை என்கிற இவ்வளவு அறிவும் இவளுக்கு இல்லையே; ஆனாபின்பு பருவம் இப்படிக்கொத்ததாயிருக்க, இவளைத் தோழிகள் படுத்தும்பாடு என்னே! என்று தன்னிலே தான் முறையிட்டு வருந்தியவாறு.

ஏழை பேதையோர் **பாலிகை** எனப் பெண்பாலாகக் கூறவேண்டுமிடத்துப் **பாலகன்** என ஆண்பாலாகக்கூறியது—உவப்பினாலாகிய பால்வழுவமைதியாம்: தன்புத்திரனை "என் அம்மை வந்தாள்" என உவப்பினால் பெண்பாலாகக்கூறுமிடமுமுண்டு; "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணையிழுக்கினு மியல்பே" என்பது நன்னூல். **உரைக்கேன்**—உரை—பகுதி; க்—சந்தி; க்—எதிர்கால இடைநிலை; ஏன்—விகுதி: ககரவொற்று எதிர்காலங்காட்டுதலை "உண்டுகளித்துழல்வீர்க்கொன்று உரைக்கியம்" என்றவிடத்திலுங்காண்க. **ஆழியான்**—திருவாழி[ஸுதர்சநம்] யையுடையவன் என்றும், ஆழ்ந்த [கம்பீரமான] ஹ்ருதயத்தையுடையவன் என்றும் பொருள்பட்டு விஷ்ணுவைக்குறிக்கும். **மோழை**—கீழ்த்திசையினிற் பெருகும் ஆறு; அது, தன்னுள் இறங்கினவர்களை மீண்டு வெளிப்புறப்படவொண்ணாதபடி அகப்படுத்திக்கொள்வதுபோல, எம்பெருமானும் தன்னைச்சேர்ந்தவர்களைப் புறம்புபோகவொண்ணாதபடி பற்றறுத்தலால் இவ்வுருவகம் ஒக்குமென்க. உப்பு என்ற சிறப்புப்பெயர் இங்கு ரஸம் என்றபொதுப்பொருளைத்தந்தது; சிறப்புப்பொருளும் விடப்படவில்லை. முதுமை + உரை, **மூதுரை**; "ஈறுபோதல்...ஆதி நீடல்," இனி, "மூதறிவு மிலளே" என்றுபாடம் வியாக்கியானப் பொருத்தமற்றது.

பகவத்விஷயத்திலே பேரவாக்கொண்டுள்ள இவ்வாழ்வாரைப் பாகவதர் கொண்டுபோய் பகவத் ஸந்நிதியிற் சேர்த்தமையை அன்பர்கூறுதல், இதற்கு **உள்ளுறைபொருள்**; இவர்க்கு லௌகிகவ்யவஹாரங்களில் உணர்த்தி செல்லாமையைக்கூறுவது—ஈற்றடி. ... ... ... ... (௪)

நாடு மூரு மறிய வேபோய் நல்ல துழாயலங்கல்
சூடி நாரணன் போமிட மெல்லாஞ் சோதித் துழிதர்கின்றாள்
கேடு வேண்டு கின்றார் பலருளர் கேசவ னோடிவளைப்
பாடு காவ லிடுமினென் றென்று பார்தடு மாறினதே. (ரு)

நாடும் - விசேஷஜ்ஞர்களும்
ஊரும் - ஸாமாந்யஜ்ஞர்களும்
அறிய - அறியும்படியாக [பஹிரங்கமாக]
போய் - வீட்டைவிட்டுப் புறம்பேபோய்
நல்ல - பசுமை மாறாத
துழாய் அலங்கல் - திருத்துழாய்மாலையை (பகவத்ப்ரஸாதமென்று சொல்லிக்கொண்டு)
சூடி - தரித்துக்கொண்டு
நாரணன் போம் இடம் எல்லாம் - எம்பெருமான் போகிற இடம் முழுவதும்
சோதித்து உழிதர்கின்றாள் - தேடித்திரியாநின்றாள்;
கேடு வேண்டுகின்றார்- "(இக்குடிக்குக்) கேடு விளைய வேணுமென்று கோருமவர்கள்
பலர் உளர் - பலபேருண்டு; (ஆகையால்) [இவளை
இவளை - எம்பெருமானைத் தேடித்திரிகிற
கேசவனோடு - (அந்த) எம்பெருமானோடு (சேர்ப்பதற்காக அந்த:புரத்திற் கொண்டுபோய்)
பாடுகாவல் இடுமின்- அருகு காவலிடுங்கள்"
என்று என்று - என்று இத்தையே பலகா[லும் சொல்லிக்கொண்டு
பார் - பூமியிலுள்ள அநுகூல ஜநமானது
தடுமாறினது -மனங்குழம்பிச் செல்லாநின்[றது.

குறிப்பு:—இம்மகள் ஏகாந்தமாகக் காரியங்களை நடத்திக்கொண்டால் பாதகமில்லை; உலகத்தாரனைவரு மறியுமாறு எம்பெருமானுடைய துழாய் மாலையைச் சூடிக்கொண்டது மல்லாமல், அவன் எங்கிருக்கின்றான்? என்று—அவன் போகக்கூடிய இடங்களிற்போய்த் தேடித்திரிதலும் செய்யாநின்றாள்; இனி இவள் நமக்கு அடங்காள் என்று நான் கையொழிந்தபோது, இவ்விடத்துள்ள அநுகூலர்கள் எனக்குச் சொல்லியது யாதெனில்; இவ்வாறு பஹிரங்கமாக ப்ரவர்த்திக்கின்ற இவளை நாம் நோக்காதொழியில் இக்குடிக்குப் பெருங்கேடு விளையும்; எந்த வேளையில் என்னகேடு விளையும்போகின்றதென்று எதிர்பார்க்கும் பாவிகள் இங்கு ஒருவரிருவரல்லர்; ஆகையால் நாம் இவளை இப்படி ஸ்வதந்த்ரையாக விடலாகாது; பின்னை என் செய்வதெனில்; இவள்தானே அவனிடம்போய்ச் சேர்ந்தாளாகாமல், இவளை நீங்கள் கொண்டுபோய் அவனுக்கு ஆஸந்நமான அந்த:புரத்தில் விட்டு, அங்கிருந்தும் இவள் பதறி ஓடவொண்ணாதபடி பாடுகாவலிடுங்கள் என்று இதனையே திருப்பித் திருப்பிச் சொல்லாநின்றார்களே யொழிய, இவளை வீட்டினுள் நிறுத்தி அடக்குங்கள் என்று சொல்லவல்லார் யாருமில்லையே! யென்கிறாள்.

நாடு, ஊர்—ஆகுபெயர்கள். நாரணன் - சிதைவு. சோதித்து—ஶுத்தி என்ற வட சொல்லடியாப் பிறந்த வினையெச்சம். "உழிதருகின்றாள்" என்பது சீரின்பம் நோக்கி, 'உழிதர்கின்றாள்' என நின்றது; "காவலிட்டுழிதர்கின்றோம்" என்ற விடமுங்காண்க. கேடு-முதனிலை திரிந்த தொழிற்பெயர். பாடு-பக்கம். பார்-ஆகுபெயர். [தடுமாறினதே.] வானுடைய வேண்டுகோளின்மேல் வதுவைக் கொடுத்தல் உலகவியற்கையாயிருக்க, இவளை நாமாக வருந்திக் கொடுக்க வேண்டிவந்ததே! என்று அநுகூலர் மனங்குழம்புவ ரென்க.

"வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்றபடி-பாகவதர்களின் புருஷகாரத்தை முன்னிட்டு எம்பெருமானைப் பற்றுதல் முறைமையாயிருக்க, தனது அவாவின் மிகுதியாலே பதறி அம்முறையைமீறி எம்பெருமானைப் பற்ற நினைத்த ஆழ்வாருடைய ப்ரவ்ருத்திவிசேஷங்களைக் கண்ட அன்பர் 'ப்ரபந்ந ஸந்தாநத்திற்கு இது ஸ்வரூப விருத்தம்' என்றறுதியிட்டு, பாகவத புருஷகார புரஸ்ஸரமாக இவரை அங்குச் சேர்க்கலுற்றபடியைக் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள். (௫)

பட்டங் கட்டிப் பொற்றோடு பெய்திவள் பாடக முஞ்சிலம்பும்
இட்ட மாக வளர்த்தெடுத் தேனுக் கென்னோ டிருக்கலுறாள்
பொட்டப் போய்ப்புறப் பட்டு நின்றிவள் பூவைப்பூ வண்ணாவென்னும்
வட்ட வார்குழல் மங்கை மீரிவள் மாலுறு கின்றாளே. (௬)

வட்டம் வார் - சுருட்சியையும் நீட்சியையுமுடைய
குழல் - கூந்தலையுடைய
மங்கைமீர் - மாதர்காள்!,
(இம்மகளுக்கு)
பட்டம் கட்டி - (நெற்றிக்கு அணியான) பட்டத்தைக்கட்டியும்
பொன் தோடு-(காதுக்குஅணியான)பொன் தோட்டையும்
பாடகமும் சிலம்பும் - (கழலணியான)பாடகத்தையும் சிலம்பையும்
பெய்து - இட்டும்
இவள் இட்டம் ஆக - இவளுடைய இஷ்டாநுஸாரமாக
வளர்த்து எடுத்தேனுக்கு என்னோடு - (இவளை) வளர்த்தெடுத்த என்னோடு
இவள் இருக்கலுறாள் - இவள் இருக்கமாட்டேனென்கிறாள்;
(பின்னை என் செய்கின்றாளெனில்;)
பொட்ட - திடீரென்று
போய் - என்னைக்கைவிட்டுப் போய்
புறப்பட்டு நின்று - (எல்லாருங்காணத் தெருவிலே) புறப்பட்டு நின்று
பூவைப் பூ வண்ணா என்னும் - "காயாம்பூப்போன்ற மேனி நிறமுடைய கண்ணபிரானே!" என்று வாய்விட்டுக் கூப்பிடாநின்றாள்;
(அவ்வளவில் அவன் அருகு வாராதொழியில்)
இவள் மாலுறுகின்றாள் - இவள் மோஹத்தை யடைகின்றாள்.

குறிப்பு :—உலகத்திற் பெண்கள் விசேஷமாக ஆபரணங்களைப் பண்ணிப் பூட்டுகின்ற தாய்மாரை விரும்பிக் கலந்து பிரியாதிருத்தல் வழக்கமாயிருக்க, என் பெண் ஒருத்தி மாத்திரம் இறைப்பொழுதும் என்னோடிருக்க ஸம்மதியாமல் தெருத் தெருவாகத் திரிந்து எம்பெருமானது அடையாளங்களைச் சொல்லி யழைத்து மயங்குகின்றாளே யென்று சில பெண்களை நோக்கிக் கூறுகின்றாள். [மங்கைமீர்!] இப்படி தாய்ச்சிறகின் கீழடங்காப் பெண்ணைப் பெறாத பூர்த்தி உண்டிறே உங்களுக்கு! என்ற கருத்துத் தோன்றும்; உங்களது பெண்களின்படியும் இவ்வாறு தானோ? என்று வினவியவுறுமாம்; "பொருவற்றாளென்மகள் உம்பொன்னுமஃதே?" என்றது காண்க.

பாடகம்—பாதகடகம் என்றவடசொற் சிதைவு. சிலம்பு—நூபுரம். இட்டம்—இஷ்டம். வளர்தெடுத்தேனுக்கு என்னோடு—வளர்த்தெடுத்த என்னோடு என்றபடி; "உழைக்கின்றேற்கென்னை நோக்காதொழிவதே" என்று

தொண்டரடிப் பொடியாழ்வாரும், "தண்சேறை யெம்பெருமான் திருவடியைச் சிந்தித் தேற்கேன் னையறிவும்" என்று திருமங்கையாழ்வாரும் மற்றும் பலரும் பிரயோகித்தருளியவாறு காண்க. [பூவைப்பூவண்ணுவென்னும்] பந்துக்கள் செய்வித்த விவாஹமாகில் "வஸுதேவஸுத க்ருஷ்ணாய" என்று புரோஹிதர் சொல்லும்போது பர்த்தாவின் பெயரையறியலாம்; இயற்கைப் புணர்ச்சியாகையாலே பேரறியுமித்தனை.

ஸ்வாபதேசத்தில், பட்டம் பாடகம் முதலிய ஆபரணங்களாவன—"க்ருஷ்ணாஸ்மி தஸ்ய ஸீலேநி வடம் க்ருஷ்ணாவிஷ்ணு நூபுரே க்ருஷ்ணமேவ க்ருஷ்ணஸுரம கங்கணோர்ஜ்யம்" என்றபடி—முதன்முதலாக இவ்வாத்துமாவை அங்கீகரித்த ஆசிரியன் உண்டாக்குகின்ற நாமரூபங்களும், பகவத் ப்ரணுமாதிகளும், பின்பு ஆசார்யவைபவத்தை உணர்த்தி அவனுக்குண்டாக்கும் ஶேஷத்வஜ்ஞாநாதிகளுமாகிற ஆத்மாலங்காரங்கள். ஆழ்வார், தமக்கு இவ்வகை ஆத்மாலங்காரங்களை உண்டாக்கின ஆசார்யர்களிடத்துள்ள நிஷ்டை மாத்திரத்தால் பர்யாப்தி பெறுமல், எம்பெருமானெழுந்தருளியிருக்குமிடமான பலதிருப்பதிகளிற்சென்று ஆழ்ந்திடுதலைக் கூறுதல், இதற்கு உள்ளுறை பொருள். ... ... ... ... (௬)

பேச வுந்தரி யாத பெண்மையிற் பேதையேன் பேதையிவள்
கூச மின்றிநின் ருர்கள் தம்மெதிர் கோல்கழிந் தான்மூழையாய்க்
கேச வாவென்றுங் கேடி லியென்றுங் கிஞ்சுக வாய்மொழியாள்
வாச வார்குழல் மங்கை மீரிவள் மாலுறு கின்ருளே. (௭)

வாசம் வார் - வாஸனையையும் நீட்சியையு
குழல் - கூந்தலையுடைய [முடைய
மங்கைமீர்—பெண்காள்!
பேதையேன்—பேதைமையையுடையளான
பேதை—பெண்பிள்ளையும் [என்னுடைய
பேசவும் தரியாத பெண்மையின் — (தன்னுடைய ஆசாரத்துக்கு ஒரு கெடுதி விளைந்ததாகப் பிறர்) ஒருவார்த்தை சொன்னாலும் (அதைப்) பொறுக்கமாட்டாத ஸ்த்ரீத்வத்தை யுடையவளும்,
கிஞ்சுகம் வாய் மொழியாள் — கிளியினுடைய வாய்மொழிபோன்ற [இனிய] வாய்மொழியையுடையளுமான
இவள் - இவள்,
நின்ருர்கள் தம் எதிர் — மர்யாதை தவறுமல் இருக்குமவர்கள் முன்னே,
கூசம் இன்றி—கூச்சமில்லாமல் [னே,
கோல் கழிந்தான் மூழை ஆய் — கோலைவிட்டு நீங்கின அகப்பைபோல,
(என்னோடு உறவற்றவளாய்க் கொண்டு)
கேசவா என்றும்-கேசவனே! என்றும்
கேடு இலீ என்றும் - அழிவற்றவனே! [அச்யுதனே!] என்றும் வாய்விட்டுச்சொல்லி,
இவள் மாலுறுகின்ருள்—இவள் மோஹமடையா நின்ருள்; [ஏ—இரக்கம்.]

குறிப்பு:—"பேசவுந் தெரியாத" என்பது—பழைய அச்சுப்பிரதிகளிற் பாடம்; அது-வியாக்கியாநப் போக்குக்குப் பொருந்தாதென மறுக்கப்பட்டது: "ஒரு வார்த்தைசொல்லப் பொறுத ஸ்த்ரீத்வத்தையுடைய; அதாவது—தன்னுடைய ஆசாரத்தால் ஸ்த்ரீத்வத்துக்கு ஒரு நழுவுதல்வாராதபடி வர்த்திக்கு மளவன்றிக்கே, நழுவுதலுண்டாக ஒருவர் ஒரு வார்த்தை சொல்

யிலும் அதுபொருமல் மாந்தும்படியான ஸ்த்ரீத்வத்தையுடையவளென்கை; ஸ்த்ரீத்வமாவது—நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்கிற ஆத்மகுணயோகம்" என்றிறே மணவாளமாமுனிகள் உரைத்தருளிற்று. தெரியாத என்ற பாடத்திலும் அக்கருத்தை ஏறிட்டுரைக்கக் கூடுமென்பர் சிலர்; அது அஸ்வரஸமெனத் தெளிக; தரியாத என்பதே ஆன்றோர் பாடம்; யரியாத என்றபடி. மற்றையடிகளின் கருத்தும் இப்பாடத்துக்கே போரப்பொருந்துமென்க.

கருத்து;—ஸ்த்ரீத்வத்துக்கு ஏற்றகுணங்களில் ஒன்றுக்கும் ஒருகேடு விளையாதபடி மரியாதைமுறைமையில் தான் ஒழுங்குபட நிற்பதுந் தவிர, அக்குணங்களுக்குக் கெடுதிவிளைந்ததாக ஒருவர் ஒருபேச்சுப்பேசினால் அத்தைக்கேட்டு ஸஹித்திருக்கவும் மாட்டாத ஸந்நிவேசத்தில் அமைந்திருந்த எனது பெண்பிள்ளை இன்றுசெய்தபடியைப் பார்த்தால்,முன்பு தான் நின்ற நிலைமைக்கு எதிர்த்தட்டாயிருக்கின்றது; அது என்? எனில்; இன்றளவும் அடக்கத்துடன் ஒடுங்கியிருந்த இவள் இன்று காம்பைவிட்டு நீங்கின அகப்பைபோல் தாயாகிய என்னை அகன்று கூச்சமின்றித் தெருவில் புறப்பட்டுக் கண்ணன் பெயர்களைக் கூவியழைத்து அவன்வரவைக்காணுமல் மயக்கமுறுகின்றாள்; இது, தான் முன்புநின்ற நிலைமைக்குப் பொருந்தியவாறுமோ? என்றவாறு. பேண்மையின்—பெண்மையையுடைய என்று அன்மொழிப் பொருள்படும்; [ஸஹுவ்ரீஹி ஸமாஸம்.] "மணிக்குழவி உருவின் தக்கமா மணிவண்ணன் வாசுதேவன்" என்றவிடத்திற்போல. கூசம்—அம்விகுதி பெற்ற தொழிற்பெயர். கோல்கழிந்தான் மூழையாய்—கோல் கழிந்த மூழையாய் என்றபடி; கோல் கழிந்தால் மூழைஆய் எனப் பிரித்து,மூழை கோல் கழிந்தால் அதை ஒத்து என்றலுமொன்று. கிஞ்சுகம்—கிளி; ஶுக: என்ற வடசொல் கிம் என்ற ஒரு எழுத்தை முற்கொண்டு திரிந்ததென்க; அன்றி, கிஞ்சுகம் என்று தனியே ஒருதமிழ்ச்சொல்லாகவுமாம். வாசம்—வாஸநா என்ற வடசொற்சிதைவு.

ஸர்வசேஷியான எம்பெருமானது பொருளாகிய இவ்வாத்மவஸ்துவை அவன்றானே வந்து கைக்கொண்டுபோகிற் போமதொழிய, அவனிருப்பிடத்துக்கு நாமாகச் சென்று நிற்றல் ஸ்வரூபவிருத்தமாமெனத் துணிந்து அவ்வுறுதியுடன் ப்ரபந்நஸந்தாநமர்யாதையில் வழுவறநிற்பதுந்தவிர, "ஸ்வரூபவிருத்தமான செய்கையைச் செய்தார்" என்று பிறர்பேசிலும் மாந்தும்படியான நிலைமையில் நின்ற ஆழ்வார், க்ரமப்ராப்திபற்றுமல் பதறி பகவத்ஸந்நிதியிற்போய்ப் புகுந்து அவனது திருநாமங்களை அநுஸந்தித்துப் பிச்சேறினபடியை அன்பர் கூறுதல், இதற்கு உள்ளுறைபொருள்; இங்ஙனே ஆழ்வார் ஸ்வரூபவிருத்தமான செயலைச் செய்தாரென்கை கூடுமோ எனின்? "விஷயதோஷத்தால் வருமவையெல்லாம் ஔஜ்ஜ்வல்யமாயிறேயிருப்பது" என்ற ஸ்ரீவசநபூஷணஸூக்தியைக் கண்டு தெளிக. ... ... (௭)

**காறை பூணுங் கண்ணாடி காணுந்தன் கையில் வளைகுலுக்குங்**
**கூறை யுடுக்கு மயர்க்குந் தன்கோவ் வைச்சேவ் வாய்திருத்தும்**

தேறித் தேறிநின் றாயி ரம்பேர்த் தேவன் றிறம்பிதற்றும்
மாறில் மாமணி வண்ணன் மேலிவள் மாலுறு கின்றாளே. (அ)

இவள்—இப்பெண் பிள்ளையானவள்
காறை—பொற்காறையை
...ம்—(தன் கழுத்தில்) பூணா நின்றாள்;
(அக்காறையுங் கழுத்துமான அழகை
கண்ணாடி காணும்—கண்ணாடிப் புறத்தில் [காணாநின்றாள்;
தன் கையில்—தன் கையிலிருக்கிற
வளை குலுக்கும்—வளையல்களைக் குலுக்கா [நின்றாள்;
கூறை—புடைவையை
உடுக்கும்—(ஒழுங்குபட) உடுத்துக்கொள் [ளாநின்றாள்;
(அவன் வரவுக்கு உடலாக இவ்வளவு அலங்கரித்துக் கொண்ட வளவிலும் அவன் வரக்காணாமையாலே,)
அயர்க்கும்—தளர்ச்சியையடையாநின்றாள்;
(மறுபடியுந் தெளிந்து இதற்கு மேலாக அலங்கரித்துக் கொள்ளத் தொடங்கி)

தன் கொவ்வை செம் வாய் திருத்தும் — கோவைக்கனிபோலச் சிவந்துள்ள தன் அதரத்தை (த் தாம்பூலசர்வணாதிக ளால் ஒழுங்கு படுத்தா நின்றாள்;
தேறித் தேறி நின்று — மிகவுந் தெளிந்து நின்று
ஆயிரம் பேர் தேவன் திறம் பிதற்றும் — ஸஹஸ்ரநாமப் பொருளான எம்பெருமானுடைய குணங்களை வாய் [புலற்றா நின்றாள்;
(அதன் பிறகு)
மாறு இல்—ஒப்பற்றவனும்
மா மணி வண்ணன் மேல் — நீலமணி போன்ற நிறத்தையுடையனுமான (அக்) கண்ணபிரான் மேல்
மாலுறுகின்றாள்—மோஹியா நின்றாள்.

குறிப்பு:—எம்பெருமானது வரவை எதிர்பார்த்திருந்த என்மகள் தன் ஆற்றாமையாலே 'ஏதேனுமொன்றைச் செய்து நாம் அவனைப்பெறவேணும்' என்று நினைத்து, 'அவன் மனமிழுப்புண்ணுமாறு நாம் நம்மை அலங்கரித்துக்கொண்டால அவன் தானே வந்து மேல்விழுவன்' என்று, முதன்முதலாக அவன் கண்டு மகிழ்ந்து கட்டிக்கொள்ளு மிடமான கழுத்தைக் கண்டிகை முதலிய பூஷணங்களால் அலங்கரித்து, இவ்வலங்காரம் அவன் உகக்கும்படி வாய்த்ததா என்பதை உணருகைக்காக அவ்வழகைக் கண்ணாடிப் புறத்திலே காண்பதும், இம்மனோரதமடியாக உடம்பில் ஒருபூரிப்புத்தோற்றுகையால் அதன் அளவை அறிகைக்காகக் கைவளைகளை அசைத்துப்பார்ப்பதும், அவன் உகக்கத்தக்க பட்டுப்புடைவையை அவன்வருமளவுங் களைவது முடுப்பதும், இப்படி அவன் வரவுக்கு உடலாகத் தன்னை அலங்கரித்தவளவிலும் அவன் வரக்காணாமையாலே அறிவழியாநிற்பதும், மீண்டும் அறிவு குடிபுகுந்து 'இன்னமும் அவன் விரும்பிவருகைக்கு உடலாகச் சில அலங்காரங்களைச் செய்து கொள்வோம்' என்று தனது கொவ்வைக்கனிவாயைத் தாம்பூல சர்வணாதிகளால் மிகவுஞ் சிவக்குமாறு பரிஷ்கரிப்பதுமாயிருந்து கொண்டு, அவ்வளவிலே தனது அலங்காரவகைகள் நன்கு வாய்த்தமையையும், ஆசாலேசமுடையாரையும் விரும்பிக்கைக்கொள்ளுகையாகிற அவனுடைய சீர்மையையும் அநுஸந்தித்துத் தெளிந்து நின்று வரவை யெதிர்பார்க்க, அவ்வளவிலும் அவன் வரக்காணாமையாலே மோஹமடையாநின்றாளென்றவாறு.

ஸ்வாபதேசத்தில, [காறை பூணும்] ஆழ்வார், பகவத் ப்ராணமமாகிற ஆத்மாலங்காரத்தை யுடையராயிருக்கிறபடி. [கண்ணாடி காணும்] ப்ரக்ருத்யாத்ம விவேகம்பண்ணுகிறபடி. [வளைகுலுக்கும்] ["கலை வளை அஹம்மமக்ருதிகள்" என்பது ஆசார்யஹ்ருதயம்;] ஞானவொஹம் என்ற ஸாத்விகாஹங்காரமுடைமை சொல்லுகிறபடி. [கூறையுடுக்கும்] "மடிதற்றுத் தான் முந்துறும்" (திருக்குறள்) என்றபடி பகவத்விஷயத்தில் ப்ரவ்ருத்தியுடைமை சொல்லுகிறது. [அயர்க்கும்.] இவையெல்லாம் ஸாதநாநுஷ்டானமாகத் தலைக்கட்டுமோ என்று கலங்கியபடி. [கோவ்வைச் செவ்வாய் திருத்தும்.] வாசிக கைங்கரியங்கள் திருந்தினபடி. பின்னடிகளுக்கு ஸ்பஷ்டமிறே; "ஓவாதே நமோநாராயணவென்பவன்" என்று இவர் தாமே மேலருளிச் செய்துள்ளது காண்க. ... ... ... ... ... (அ)

கைத்தலத் துள்ள மாடழியக் கண்ணாலங்கள் செய்திவளை
வைத்துவைத் துக்கொண் டென்ன வாணிபம் நம்மை வடுப்படுத்தும்
செய்த்தலையெழு நாற்றுப் போலவன் செய்வன செய்துகொள்ள
மைத்த டமுகில் வண்ணன் பக்கல் வளர விடுமின்களே. (௯)

கைத்தலத்து உள்ள மாடு அழிய } கையிலுள்ள பணத்தைச் செலவழித்து

கண்ணாலங்கள் செய்து — (இவளுக்குச் செய்யவேண்டிய) கல்யாணங்களைப் பண்ணி,

இவளை — (நமக்கடங்காத) இவளை

வைத்து வைத்துக் கொண்டு } நியமித்தும் காவலிட்டும் வைத்துக்கொண்டிருப்பதனால்

என்ன வாணிபம் — என்ன பயனுண்டாம்; (பயனுண்டாகாதொழிவது மன்றி)

நம்மை வடுப்படுத்தும் - நமக்கு அவத்யத்தையும் உண்டாக்கும்;

(என்று தாயாராகிய நான் சொல்ல, இதைக்கேட்ட பந்துக்கள்)

செய்த்தலை எழு நாற்று போல் } "வயலிலே வளர்ந்த நாற்றை அவ்வயலுக்குடையவன் தன் இஷ்டப்படி விநியோகங் கொள்வது போல,

(இவளையும்)

அவன் செய்வன செய்து கொள்ள } (ஸ்வாமியாகிய) அவன் தான் செய்ய நினைத்தவற்றை (த்தடையற) ச்செய்து கொள்ளும்படி

மை தட முகில் வண்ணன் பக்கல் } கறுத்துப் பெருத்த மேகம் போன்ற வடிவையுடைய அக்கண்ண பிரானிடத்தில்

வளர — (இவள்) வாழும்படி

விடுமின்கள் - (இவளைக் கொண்டு போய்) விட்டு விடுங்கள்'

(என்கிறார்கள் என்று, தாய் தானே சொல்லுகிறபடி.)

குறிப்பு:—நம்குடிக்காக இவளொரு பெண்தானே உளள் என்று அன்பு மிகுதியால் கையிலுள்ள செல்வத்தையடையச் செலவழித்து இவளுக்குச் செய்யவேண்டிய மங்கள காரியங்களை யெல்லாஞ் செய்து இவளை நாம் காத்துவருவதனால் நமக்கு இறையும் பயனின்றி யொழிந்தமாத்திரமேயல்லாமல் இவளது நடத்தைகளினால் நமக்குப் பெருப்பெருத்த பழிகளும் விளையாநின்றன ! என்று கலங்கிப் பேசின தாயை நோக்கி, பந்துக்கள், ஒருவன் தன் க்ஷேத்திரத்தில் உள்ள நாற்றைத் தன் கருத்துக்கொத்தபடி தான் விநியோகப்படுத்திக் கொள்வதுபோல, ஸர்வேச்வரன் தனது உடைமை

யான இவளைத் தன் நினைவின்படி உபயோகப்படுத்திக்கொள்ளுமாறு இவளை அவனிடத்திற்கொண்டு சேர்த்து விடுங்கள் என்று கர்த்தவ்ய நிரூபணம் பண்ணிக் கூறினபடியைத் தாய் கூறினபடியாம்.—மாடு—செல்வம்; "மாடு பொன் பக்கம் செல்வம்" என்பது நிகண்டு. கண்ணாலம்-மரூஉமொழி. வடுப் படுத்துதல்—குறைவு படுத்துதல். செய்—வயல். தலை—ஏழனுருபு.

ஸ்வாபதேசத்தில், மாடு என்று வேதத்தைச் சொல்லுகிறது; "அந்தணர்மாடு," "ப்ராஹ்மணா நாம் தனம் வேதः" என்னக் கடவதிறே. இவ்வாழ்வார்க்கு நாம் வேதமோதுவித்து இவரை நம்பக்கலிலேயே இருத்துவோமென்றால், இவர் பர்யாப்தராகாமல் பகவத் விஷயத்தளவும்போய் அந்வயிக்க வேணுமென்று பதறுவதனால் இவரை அங்குச் சேர்த்து விடவேணுமென்றறுதியிட்ட அன்பர்களின் பாசுரம், இதற்கு உள்ளுறைபொருள். (கூ)

பெருப்பெ ருத்தகண் ணாலங்கள் செய்து பேணிநம் மில்லத்துள்ளே
இருத்து வானெண்ணி நாமி ருக்க விவளுமோன் றெண்ணுகின்றாள்
மருத்து வப்பதம் நீங்கி னாளென்னும் வார்த்தை படுவதன்முன்
ஒருப்ப டுத்தி டுமினி வளையு லகளந் தானிடைக்கே. (கூ0)

(இவளுக்கு)
பெருப்பெருத்த—மிகவும் விசேஷமான
கண்ணாலங்கள் செய்து—கல்யாணகாரியங்களைச்செய்து
பேணி—அன்பு பூண்டு
நம் இல்லத்துள்ளே—நம்வீட்டுக்குள்ளேயே
இருத்துவான் எண்ணி நாம் இருக்க — (இவளை) இருக்கச் செய்வதாக நாம் நினைத்திருக்க,
இவளும்—இவளோவென்றால்
ஒன்று எண்ணுகின்றாள்—(நம் எண்ணத்துக்கு விபரீதமாக) மற்றொன்றை எண்ணுகின்றாள்;
(என்று தாயாகிய நான் சொல்ல, இதைக்கேட்ட பந்துக்கள்)

மருத்துவப்பதம் நீங்கினாள் என்னும் வார்த்தை படுவதன் முன் — வயித்தியன் தான் செய்யும் மருந்தில் பதம் பார்த்துச்செய்யாவிடில் அது கைதவறுவது போல, இவள் பதம்பார்த்து நாம் செய்யாமையாலே இவள் கைகழிந்தாளென்கிற அபவாதம் பிறப்பதற்கு முன்
இவளை—இவளை
உலகு அளந்தானிடைக்கே - உலகளந்தருளின கண்ணபிரானிடத்திலேயே (கொண்டுபோய்)
ஒருப்படுத்திடுமின்—சேர்த்துவிடுங்கள்.
(என்று கூறியதைத் தாய் கூறுகின்றாள்.)

குறிப்பு:—இப்பெண்பிள்ளைக்கு அவ்வக்காலங்களில் செய்யவேண்டிய மங்கள காரியங்களை விசேஷ விபவமாகச்செய்து மிக்க அன்பு பாராட்டி நம் அகத்திலேயே இவளை வளர்ப்பதாக நினைத்திருக்கும் நமது நினைவுக்கு நேர் மாறுபாடாக இவள் வெளிப்புறப்பட்டு ஓடுவதாக நினைத்திருக்கின்றாளே! என்று கலங்கிக்கூறின தாயை நோக்கி; பந்துக்கள், அங்ஙனமாகில் இவளை இப்போதே கண்ணபிரானிடத்திற்கொண்டு போய்ச் சேர்த்து விடுதலே தகுதியாம்; அல்லாவிடில்,—வைத்யன் தான் செய்கிற ஔஷதத்தில் பாகம்பார்த்துச் செய்யாதபோது, அம்மருந்து கைதவறிப்போவதுபோல, இவள் பதம் பார்த்து நாம் செய்யாமையாலே இவள் கைகழியப் போனாள் என்று

பெருத்ததொரு லோகாபவாதம் பரவி விடுமென்று-கர்த்தவ்ய நிரூபணம் பண்ணிக்கூறியபடியைத் தாய் கூறினளென்க. ... ... (கo)

ஞால முற்று முண்டா லிலைத்துயில் நாரா யணனுக்கிவள்
மால தாகி மகிழ்ந்தன ளென்று தாயுரை செய்ததனைக்
கோல மார்பொழில் சூழ்புது வையர்கோன் விட்டுசித் தன்சொன்ன
மாலை பத்தும் வல்ல வர்கட் கில்லை வருதுயரே. (கக)

இவள்—"இப்பெண்பிள்ளையானவள்,
ஞாலம் முற்றும் உண்டு } எல்லாவுலகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கி,
ஆல் இலை துயில்-ஒரு ஆலந்தளிரிலேகண்வளர்ந்தருளின
நாராயணனுக்கு - எம்பெருமான் விஷயத்தில்
மால் அது ஆகி—மோஹத்தையுடையளாய் (அவனை அணைக்கவேண்டுமென்ற மநோரதத்தினால்)
மகிழ்ந்தனள் என்று—மனமுகந்தாள்" என்று
தாய் உரை செய்ததனை—தாய்சொல்லியதை,
கோலம் ஆர்—அழகு நிறைந்த
பொழில் சூழ்—சோலைகளாலே சூழப்பட்ட
புதுவையர் கோன்—ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளவர்க்குத் தலைவரான
விட்டு சித்தன்—பெரியாழ்வார்
சொன்ன—அருளிச்செய்த
மாலை—சொல்மாலையாகிய
பத்தும்—இப்பத்துப்பாட்டையும்
வல்லவர்கட்கு—ஓதவல்லவர்களுக்கு
வரு துயர் இல்லை } வரக்கூடிய துன்பம் ஒன்றுமில்லை.

குறிப்பு:—இப்பாட்டால் இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ் சொல்லித் தலைக்கட்டியவாறு. ஆழ்வார் தாமே தாயின் அவஸ்தையை அடைந்து அம்முகமாக, தனக்குப் பகவத் விஷயத்திலுள்ள அபிநிவேசத்தை வெளியிட்டருளினரென்க. ... ... ... ... ... (கக)

அடி:—ஐய வாயில் பொங்கு ஏழை நாடு பட்டம் பேச காறை கைத்தலம் பெரு ஞாலம் நல்ல.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## எட்டாந்திருமொழி:
## நல்லதோர் தாமரைப் பொய்கை.



**அவதாரிகை:**—[கீழ்த்திருமொழியின் முகப்பில் எழுதியுள்ள அவதாரிகை இங்கு மநுஸந்திக்கத்தக்கது.]

தன் மகளுக்கு எம்பெருமான் பக்கலுள்ள அன்புமிகுதியைக்கண்ட திருத்தாயார் இவளுக்கு அவனோடு கலவி உண்டாயிற்றென்று தானறிந்தும் "லோகாபவாதம் பிறப்பதற்கு முன் இவளை அவன் பக்கலில் கொண்டுபோய்ச் சேர்த்து விடுங்கள்" என்று பந்துக்கள் சொல்லியபின்பும் அவளைத்தாயார் எம்பெருமான் பக்கலிற் கொணர்ந்து சேர்க்காதொழிகையாலே, அவன்றானே ஏகாந்தமாக இரவில் வந்து, ஒரு படுக்கையில் தாயுடன் படுத்திருந்த இவளை எழுப்பித் திருவாய்ப்பாடியேறக் கொண்டுபோக, பிறகு கண்விழித்த திருத்தாயார் படுக்கையில் பெண்ணைக்காணமல் பலவகையாகக் கதறின படியைக் கூறுவது இத்திருமொழி.

இதனால், இவ்வாழ்வார்க்குப் பகவத் விஷயத்திலுள்ள அபிநிவேசாதிசயம் சொல்லியவாறு. பெரிய திருமொழியில், "கள்வன் கொல்யானறியேன்" என்ற திருமொழியை ஒரு புடை ஒத்திருக்கும்-இத்திருமொழி.

நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர் மேற்பனி சோர
அல்லியுந் தாது முதிர்ந்திட் டழகழிந் தாலொத்த தாலோ
இல்லம் வெறியோடிற் றாலோ வென்மகளை யெங்குங் காணேன்
மல்லரை யட்டவன் பின்போய் மதுரைப் புறம்புக் காள்கொலோ. (க)

நல்லது ஓர் தாமரை பொய்கை — அழகிய ஒரு தாமரைக்குளமானது, (தன்னிடத்திலுள்ள)
நாள் மலர் மேல் — அப்போதலர்ந்த பூவின் மேல்
பனி சோர — பனி பெய்ததனால்
அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு — (அம்மலரினது) உள்ளிதழும் புறவிதழும் உதிரப்பெற்று
அழகு அழிந்தால் ஒத்தது — அழகு அழியப் பெறுவது போல,
இல்லம் — (இவ்) வீடானது
வெறி ஓடிற்று — வெறிச்சென்றிருக்கிறது;
என் மகளை — என் பெண்பிள்ளையை
எங்கும் — ஓரிடத்திலும்
காணேன் — காண்கின்றிலேன்;
மல்லரை அட்டவன் பின்போய் — மல்லர்களை அழித்த கண்ணபிரான் பின்னே போய்
மதுரைப் புறம் — மதுரைக்கு அருகிலுள்ள திருவாய்ப்பாடியில்
புக்காள்கொல் ஓ — புகுந்தாளாவள் கொல்?.

குறிப்பு:—ஆல், ஓ—இரக்கக் குறிப்பிடைச் சொற்கள். என் பெண் பிள்ளையாலே விடப்பட்ட இவ்வீடு, பனிபெய்ததனால் தாமரைப் பூக்களிலுள்ள இதழ்கள் உதிரப்பெற்று அதனால் அத்தாமரைப் பொய்கை அழகழிந்து தோற்றுவது போலுள்ளது; இவள் போனவிடம் இன்னதென்று தெரியவில்லை: ஒருகால் கண்ணபிரானோடு கூடித் திருவாய்ப் பாடிக்குச் சென்றிருப்பாளோ? என்று திருத்தாயார் தன்னிலே தான் ஐயமுற்றுச் சொல்லுகிறபடி. இத்திருமாளிகையில் பெண் பிள்ளை யிருந்தது ஓரிடத்திலாகிலும் அகம் முழுதும் அவளே யிருந்ததாகத் தாய்க்குத் தோற்றிக் கிடந்தபடியால் இல்லம் வெறியோடிற்றாலோ என்கிறாள்.

மல்லரை அட்ட வரலாறு:—கம்ஸனால் வலிய அழைக்கப்பட்டுக் கண்ணனும் பலராமனும் அவனது ஸபையிற் செல்லுகையில் அவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர் செய்ய, அவர்களை யெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனர் என்பதாம். அன்றி, கண்ணன் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ் சென்றபொழுது துரியோதனன் ரஹஸ்யமாகத் தனது ஸபா மண்டபத்தில் மிகப்பெரிய நிலவறை யொன்றைத் தோண்டுவித்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே யிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறிய வொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலே மூடி அதன் மேற் சிறந்த ரத்நாஸநமொன்றை அமைத்து அவ்வாஸநத்தில் கண்ணனை வீற்றிருக்கச்சொல்ல, அங்ஙனமே கண்ணபிரான் அதன்மேலேறின மாத்திரத்திலே மூங்கிற் பிளப்புகள்

முறிபட்டு ஆஸநம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் அப்பிரான் மிகப் பெரிதாக விசுவரூபமெடுத்துப் பல கைகளையுங் கால்களையுங்கொண்டு எதிர்க்கவே, அப்பிலவறையிலிருந்த மல்லர்கள் அழிந்தன ரென்ற கதையையுங் கொள்ளலாம்.

மதுரைப்புறம்:—மதுரைப் புரம் அன்று; புறம்—ப்ராந்தம்; எனவே, திருவாய்ப்பாடியாயிற்று.

ஸம்சயங்களெல்லாம் ("குற்றியோ மகனோ ?" என்றாற்போல) இரண்டு கோடிகளைப்பற்றிப் பிறக்கு மாதலால் இங்கு, கம்ஸனிருப்பிடமான மதுரையிற் புகுந்தாளோ ? அன்றி, அதனருகிலுள்ள திருவாய்ப்பாடியிற் புகுந்தாளோ ? என்று ஐயமுற்றதாகக் கொள்க; ஒருவர்க்கொருவர் பண்ணுகிற சிருங்கார சேஷ்டைகளினால் இருவரும் மயங்கி மெய்மறந்து கம்ஸ நகரத்தில் புகுந்தார்களாகில் தீராத் துன்பம் விளையுமே ! என்ற அதிசங்கை தாய் நெஞ்சினுள் நடமாடுகின்ற தென்றுணர்க. ... ... (௧)

ஒன்று மறிவொன் றில்லாத வுருவறைக் கோபாலர் தங்கள்
கன்றுகால் மாறுமா போலே கன்னி யிருந்தாளைக் கொண்டு
நன்றுங் கிறிசெய்து போனான் நாரா யணன்செய்த தீமை
என்று மெமர்கள் குடிக்கோ ரேச்சுக் கொலாயி டுங்கொலோ. (௨)

| | |
|---|---|
| ஒன்றும் அறிவு ஒன்று இல்லாத — பொருந்திய ஞானம் சிறிது மில்லாதவர்களும் | நன்றும் கிறி செய்து — நல்லஉபாயங்களைப்பண்ணி |
| உரு அறை—ரூபஹீநர்களுமான | கொண்டு போனான்—(தெரியாமல்) அபஹரித்துக்கொண்டு போன |
| கோபாலர் தங்கள்—இடையரானவர்கள் | நாராயணன்—கண்ணபிரான் |
| கன்று கால் மாறும் ஆ போலே — கண்ணுக்கழகியகன்றுகளை உடையவர்களறியாமல் களவிலே கொண்டு போவது போல, | செய்த தீமை—செய்த தீம்பானது |
| | எமர்கள் குடிக்கு—எங்கள் குலத்துக்கு |
| | என்றும்—சாச்வதமான |
| கன்னி இருந்தாளை—கன்னிகைப் பருவத்தளாய் எனக்கடங்கியிருந்த பெண்ணை | ஓர் ஏச்சு ஆயிடும் கொல் ஓ — ஒரு பழிப்பாகத் தலைக்கட்டுமோ ?. |

குறிப்பு:—ஆந்தரகுணம் பாஹ்ய குணம் என்பவற்றில் ஒருவகைக் குணமுமற்ற இடையர், பிறர் தொழுத்தில் கட்டிவைத்துள்ள கன்றுகளைத் திருடிக்கொண்டு போவதுபோலக் கண்ணபிரான் என்மகளைத் திருடிக் கொண்டு போயினன்; இவ்வாறான அவனது தீமையானது எங்கள் குலத்துக்குச் சாச்வதமான அவத்யத்தை விளைக்குங்கொல் ? என்று சங்கித்துச் சொல்லுகிறபடி. ஒன்றுமறிவு=ஒன்றுதல்—பொருந்துதல். கோபாலர் தாங்கள் என்பது—தங்கள் எனக்குறைந்து கிடக்கிறது.

கன்றுகால் மாறுதலாவது:—தீயவையாயுள்ள தங்கள் கன்றுகளை "உங்களுடையவை" என்று பிறர்க்குக்காட்டி, நல்லவையாயுள்ள அவர்கள் கன்றுகளைத் தங்களுடையன வாக்கிக் கொள்ளுதலும், பிறருடைய அழகிய கன்றுகளை உடையவர்களறியாமல் களவு வழியால் நிலைபேர்த்துக்கொண்டு போத

னுமாம்; பிற்பட்ட பொருளே இவ்விடத்துக்குச் சேருமெனக் கொள்ளப் பட்டது. இங்கு, நன்றுங்கிறி செய்கையாவது—பகலிற் கொண்டுபோனால் பலரறிந்து நிஷேதிக்கக் கூடுமென்று, அனைவரு முறங்கும்போது பார்த்துக் கொண்டு போதல். இப்படி இவன் செய்த தீமையானது குற்றமற்ற எங்கள் குடிக்கு ஸ்தாவரமான பழிப்பாகுமோ? அன்றி, எம்பெருமான்றானே வந்து கைக்கொண்டு போயினனென்று இக்குடிக்கு ஏற்றமாமோ? என்பது நான்காமடியின் கருத்தாதலால் ஸம்சயலக்ஷணம் அமையுமெனக. ஈற்றடியினிறுதியிலுள்ள கோல் என்ற இடைச்சொல்லை ஏற்றமாயிடும் என வருவிக்க வேண்டும் வினையோடு கூட்டுக; ஏச்சாயிடுங்கொல்? ஏற்றமாயிடுங்கொல் என்றவாறு. "கொல்லை யென்பர் கொலோ குணம் மிக்கனளென்பர் கொலோ" என்ற திருவாய்மொழிகாண்க. போனான்—முற்றெச்சம். எமர்—எம்மவர்;—எங்களுடையவர்:[அஸ்மதீயர்] என்பது பொருள். ... (உ)

குமரி மணஞ்செய்து கொண்டு கோலஞ்செய் தில்லத் திருத்தித்
தமரும் பிறரு மறியத் தாமோ தரற்கென்று சாற்றி
அமரர் பதியுடைத் தேவி யரசா ணியைவழி பட்டுத்
துமில மெழப்பறை கொட்டித் தோரணம் நாட்டி டுங்கொலோ. (௩)

குமரி மணம் செய்து கொண்டு — கன்னிகையவஸ்தையிற் செய்ய வேண்டிய மங்கள விசேஷத்தைச் செய்து,
[அலங்கரித்து
கோலம்செய்து—(ஆடை ஆபரணங்களால்)
இல்லத்து—விவாஹமந்திரத்தில்
இருத்தி—உட்காரவைத்து,
தமரும்—பந்துவர்க்கங்களும்
பிறரும்—மற்றுமுள்ள உதாஸீநர்களும்
அறிய—அறியும்படி
தாமோதரற்கு என்று சாற்றி — "(இவள்) கண்ணபிரானுக்கு(க்கொடுக்கப்பட்டாள்)
[என்று சொல்லி,

(பிறகு)
அமரர் பதியுடை தேவி — தேவாதி தேவனான கண்ணபிரானுக்கு மனைவியாகப்
[பெற்ற என்மகள்
(ஜாதிக்குத்தக்க ஒழுக்கமாக)
அரசாணியை—அரசங்கிளையை
வழிபட்டு—ப்ரதக்ஷிணம் பண்ண,
துமிலம் எழ பறை கொட்டி — பேரொலி கிளம்பும்படி பறைகளை முழக்கி
தோரணம் நாட்டிடும் கொல் ஓ — மகர தோரணங்களை (ஊரெங்கும்) நாட்டி
அலங்கரித்துக்
கொண்டாடுவர்களோ?

குறிப்பு:—கண்ணபிரான், தன்மகளைக் கிறிசெய்து கொண்டுபோனமையைப்பற்றிச் சிந்தித்துப் பயனில்லையென்று அச்சிந்தையை விட்டிட்டு, புக்ககத்துத் தலைவர்கள், இவளுக்கு விவாஹாங்கமாகச் செய்யவேண்டிய தோழிப்புழுங்கல் முதலிய மங்கள காரியங்களை அடைவுபடச்செய்து சீர்மை குன்றாமல் அலங்காரங்களையும் அமைத்து, மணமாளிகையில் ஸகல ஜனங்களையும் அழைத்து விதிப்படி "இவளைக் கண்ணனுக்குத் தேவியாகத் தருகிறோம்" என்று வெளிப்படையாகச்சொல்லி, பிறகு விவாஹகாலத்தில்சாதிக்கேற்ற ஆசார முறைமையின்படி-அலங்கார பீடத்தின் மேல் நாட்டும் அரசங்கிளையை இவள் வலம் வரும்படி செய்வித்து, விவாஹஸூசகமாக ஊரெங்கும் அலங்கரித்து இவ்வகைகளால் கொண்டாட்டமும் கோலாஹலமுமாக இருப்பார்களோ? அன்றி, கொண்டாட்டம் ஏதுக்கு? என்று உபேக்ஷித்தி

ருப்பர்களோ ? என்று ஸந்தேஹிக்கிறாள். "அரசாணியை வழிபட்டு" என்றது—மற்றுமுண்டான சாதித் தொழில்களுக்கெல்லாம் உபலக்ஷண மென்க. தேவி—தெவீ. துமிலம்—பேராரவாரம். தோரணம்—வடசொல். (௩)

ஒருமகள் தன்னை யுடையே னுலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான்கொண்டு போனான்
பெருமக ளாய்க்குடி வாழ்ந்து பெரும்பிள்ளை பெற்ற வசோதை
மருமக ளைக்கண் டுகந்து மணாட்டுப் புறஞ்செய் யுங்கொலோ. (௪)

ஒரு மகள் தன்னை உடையேன் — ஒரே மகளை உடையளாகிய நான்
உலகம் நிறைந்த புகழால் — உலகமெங்கும் பரவின கீர்த்தியோடு
திருமகள் போல—பெரிய பிராட்டியாரைப்போல்
வளர்த்தேன்—சீராட்டிவளர்த்தேன்;
(இப்படி வளர்ந்த இவளை)
செம் கண் மால் — செந்தாமரைக்கண்ணனான ஸர்வேச்வரன்
தான் - தானே (ஸாக்ஷாத்தாக வந்து)
கொண்டு போனான்—(நானறியாமல்) கொண்டு போனான்;
(போனால் போகட்டும்;)
பெரு மகளாய் குடி வாழ்ந்து — (இடைச்சேரியில்) ப்ரதாந ஸ்த்ரீயாய்க் குடிவாழ்க்கை வாழ்ந்து
பெரும் பிள்ளை பெற்ற அசோதை — பெருமைதங்கிய பிள்ளையைப் பெற்றவளான யசோதைப் பிராட்டியானவள்
மருமகளை—(தன்) மருமகளான என் மகளை
கண்டு உகந்து—கண்டு மகிழ்ந்து
மணாட்டுப் புறம் செய்யும் கொல் ஓ — மணவாட்டிக்குச்செய்யக்கடவதான சீர்மைகளைச் செய்வளோ ?.

குறிப்பு:—அரிய நோன்புகளை நோற்று அத்விதீயையான பெண்பிள்ளையைப் பெற்ற நான் இவளை, "காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள்" என்றபடி எல்லார்க்கும் வைலக்ஷண்யத்துக்கு உபமாநபூமியாகச் சொல்லக்கடவளான பிராட்டியோடொக்க, உலகத்தாரெல்லாரும் புகழும்படி வளர்த்தேன்; இப்படி வளர்ந்த இவளை எம்பெருமான் தானே நேரில் வந்து கைக்கொண்டு போனான்; போகட்டும், அதைப்பற்றிச் சிந்தையில்லை; போனவிடத்தில் இவளுக்கு மாமியாரான யசோதைப் பிராட்டி இவளுடைய ஸௌந்தர்யம் வ்யாமோஹம் முதலிய குணங்களைக்கண்டு 'பெறாப்பேறு பெற்றோம்" என மகிழ்ந்து, கல்யாணப் பெண்ணுக்குச் செய்யவேண்டிய சீர்மைகளைக் குறையறச் செய்வளோ ? அன்றி, லௌகிகத்துக்குத் தக்க வளவு அஹ்ருதயமாகச்செய்து விடுவளோ ? என்று ஸம்சயிக்கின்றனள்.

கூரத்தாழ்வான் திருநாட்டுக் கெழுந்தருளினபோது எம்பெருமானார் இப்பாட்டைச் சொல்லிக் கதறி அழுதருளினார் என்ற ஐதிஹ்யமுணர்க. புகழால் வளர்த்தேன் என்றது—புகழுண்டாம்படி வளர்த்தேன் என்றவாறு. [செங்கண்மால் இத்யாதி.] என்மகளை இப்படி ரஹஸ்யமாகக், கைக்கொண்டு போவதற்கு ஸமயம் பார்த்துப் பல இரவுகளிற் கண் விழித்ததனால் செங்கண்மாலாயினன் என்று விசேஷார்த்தங் கூறலாம். திருவாய்ப்பாடியிலுள்ளார்க்கெல்லாம் தலைவரான நந்தகோபருடைய தேவியானமைபற்றி யசோதை பெருமகளெனப்பட்டாள். [பெரும் பிள்ளை.] "என்ன நோன்பு நோற்

ருள் கொலோ இவளைப்பெற்ற வயிறுடையாள்" என்றது காண்க. மணுட்டுப்புறம்—வைவாஹிககார்ய—பௌஷீ.

ஸகாமதே3வஸாந்தாமேஜீஜநதேஹம் தை3த்ரவோகூவதிண்டீவ்ருஷ்யாம்
வஷ்ணதிஷ்ஜ ஸாமிவாஸஹாஷிஸோஸ்தாதேநத்ருவ்யம் ।
மாம்ஹியமாவ்யகூட்டிலீ நீ ஜநிதலஸூந்த்ரா யஶோதாஹ்யா
ஸ்ருவஷ்டா ஹ்ருஷ்டநோஹ்லாஷாம், விதநயாவைவாஹிகம் வாக்ருமம்? ॥

தம்மாமன் நந்தகோ பாலன் தழீஇக்கோண் டேன்மகள் தன்னைச்
செம்மாந் திரேயேன்று சோல்லிச் செழுங்கயற் கண்ணுஞ்சேவ் வாயுங்
கோம்மை முலையு மிடையுங் கோழும்பணைத் தோள்களுங் கண்டிட்
டிம்மக ளைப்பெற்ற தாய ரினித்தரி யாரேன் னுங்கோலோ. (ரு)

தம் மாமன்—என்மகன்தனக்கு மாமனுரான
நந்தகோபாலன்—நந்தகோபரானவர்
என் மகள் தன்னை—என்பெண்ணை
தழீஇக் கொண்டு - (அன்புடன்) தழுவிக் [கொண்டு
செம்மாந்திரு என்று சொல்லி } (வெட்கத்தாலே தரையைக்கீறிமுகங்கவிழ்ந்து [நிற்காமல்) செவ்வனே நில் என்று [சொல்லி,
(பிறகு ஸர்வாங்க ஸௌந்தர்யத்தையுங் காணலாம்படி அவள் ருஜுவாக நிற்க)
செழு கயல் கண்ணும் } அழகிய மீன் போன்ற (அவளது) கண்களையும்
செம் வாயும் - சிவந்த அதரத்தையும்
கொம்மை முலையும்—(கச்சுக்கு அடங்காமல்) பெருத்திருக்கின்ற முலையையும்
இடையும்—இடுப்பினழகையும்
கொழு பணை தோள்களும் } பெருத்த மூங்கில் போன்ற தோள்களையும்
கண்டிட்டு - நன்றாகப்பார்த்து
இ மகளை பெற்ற தாயர் } "இப் பெண்பிள்ளையைப்பெற்ற தாயான
இனி - இவளைப் பிரிந்த பின்பு [வள்
தரியார் என்னும் கொல் ஓ } உயிர் தரித்திருக்க மாட்டாள்" என்று சொல்லுவரோ?.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில், மாமியார் சீராட்டுதலைப்பற்றிச் சங்கித்தாள்; இப்பாட்டில் மாமனர் சீராட்டுதலைப்பற்றிச் சங்கிக்கிறாள்;—என் மகளின் மாமனுரான நந்தகோபர் இவளை யழைத்து முத்தமிட்டு இவளது ஸர்வாவயவஸௌந்தர்யத்தையுங்கண்டு மகிழ்ந்து "இப்படி அழகிற் சிறந்த பெண்பிள்ளையைப் பெற்ற தாய் இவளைப்பிரிந்து உயிர்வாழ்ந்திருப்பது அரிது" என்று அன்புதோற்றச் சொல்வரோ? அன்றி, விருப்பமற்றுச் சிறிதும் விகாரமடையாமல் இருப்பரோ? எனச்சங்கித்தவாறு. தழீஇ—தழுவி; அளபெடைகொண்ட வினையெச்சம். செம்மாந்திரு—முழுச்சொல். தாயர் - பூஜையிற் பன்மை. ... ... ... ... ... (ரு)

வேடர் மறக்குலம் போலே வேண்டிற்றுச் செய்தேன் மகளைக்
கூடிய கூட்டமே யாகக் கோண்டு குடிவா முங்கோலோ
நாடு நகரு மறிய நல்லதோர் கண்ணாலஞ் செய்து
சாடிறப் பாய்ந்த பெருமான் தக்கவா கைப்பற் றுங்கோலோ. (சு)

சாடு இற பாய்ந்த பெருமான் } சகடாஸுரனை முறித் துத்தள்ளின திருவடி [களையுடைய கண்ணபிரான்,

வேட்டர்—வேடர்களையும்

மறக்குலம் போலே - மறவர் என்கிற நீச [ஜாதியரையும் போலே

என் மகளை—(ஸத்குலத்திற் பிறந்த) என் [பெண் பிள்ளையை

வேண்டிற்று செய்து } தன் இஷ்டப்படி செய்து

கூடிய கூட்டமே ஆக கொண்டு } தம்பதிகளாகிய இருவரும் நெஞ்சு பொருந்திக்கூடின கூடுதலையே விவாஹ [மாகக் கொண்டு

குடி வாழும் கொல் ஓ—குடிவாழ்க்கை வாழ் (அன்றி) வனோ?

நாடும் - ஸாமாந்ய ஜனங்களும்

நகரும் - விசேஷஜ்ஞ ஜனங்களும்

அறிய—அறியும்படி [பஹிரங்கமாக]

நல்லது ஓர் கண்ணாலம் செய்து } விலக்ஷணமான தொரு விவாஹோத்ஸவத்தை (விதிப்படி) செய்து

தக்க ஆ - (ஜாதிதர்மத்துக்குத்) தகுதியாக

கைப்பற்றும் கொல் ஓ } பாணிக்ரஹணம் பண்ணு வனோ?

குறிப்பு:—என்மகளோவென்றால் வேடரையும் மறக்குலத்தாரையும் போல் தண்ணியஜாதியிற் பிறந்தவளல்லள்; மஹாகுலப்ரஸூதையான இவளைக் கண்ணபிரான் களவுவழியாற் கொண்டுபோனாலும் போனவிடத்தில் விவாஹோத்ஸவத்தையாகிலும் முறைவழுவாமல் லோகாந்தமாகச் செய்தானாகில் ஒருவாறு குறைதீரப்பெறலாம்; இவளை இங்கிருந்து கொண்டு போகிறபோது வழியிடையில் இருவரும் நெஞ்சுபொருந்திக் கூடுகையாகிற காந்தருவ விவாஹந்தன்னையே சாஸ்த்ரோக்தமான விவாஹோத்ஸவமாக நினைத்து வேறுவகையான விவாஹ ஸம்ப்ரமங்களை வெளிப்படையாகச் செய்யாதொழிவனோ? அன்றி, திருவாய்ப்பாடியிலுள்ளாரையும் அதைச்சேர்ந்த மதுரைமுதலிய நகரங்களிலுள்ளாரையும் வரவழைத்துப் பலரறியப்பாணிக்ரஹணம்பண்ணிக்கொள்வனோ? என்று ஸம்சயிக்கிறபடி.

அகத்தமிழில், "அறநிலை ஒப்பே பொருள்கோள் தெய்வம், யாழோர் கூட்டம் அரும்பொருள்வினையே, இராக்கதம் பேய்நிலை என்றுகூறிய, மறையோர்மன்ற லெட்டிவை அவற்றுள், துறையமை நல்யாழ்ப்புலமையோர் புணர்ப்புப், பொருண்மையென்மனார் புலமையோரே" என்று விவாஹம் எட்டுவகையாகக் கூறப்பட்டுள்ளது ; ப்ராஹ்மோ தைவஸ் ததைவார்ஷ: ப்ராஜாபத்யஸ் ததாஸுர: | காந்தர்வோ ராக்ஷஸஸ் சைவ பைசாசஸ் சாஷ்டமோ(அ)தம: " என்பர் வடநூலாரும். தனியிடத்து இருவரும் காமமோஹத்தாலே கூடுகை, யாழோர் கூட்டம் [காந்தர்வவிவாஹம்] எனப்படும்; இது ச்ருங்காரரஸமுமாய், ஸ்த்ரீயினுடைய அநந்யார்ஹதாரூபமான கற்புக்கும் முதலாகையாலே அகத்தமிழ்மரியாதைக்குப் பிரதாநமாய்ப்போரும். "அன்பினைந்திணைக் களவெனப் படுவ, தந்தணரருமறை மன்றலெட்டினுள், கந்தருவவழக்கமென்மனார் புலவர்" என அகத்தமிழிலுங் கூறப்பட்டது. இப்படி சாஸ்த்ரீயமாய் கற்புக்கு முறைப்பான ஸம்பந்தத்தாலே, ஆழ்வார் தம்முடைய அநந்யார்ஹத்வத்தை வெளியிட்டவாறென்க.

[வேடர் இத்யாதி.] " கள்ளர், பள்ளிகள் என்னுமாபோலே, வேடர் மறவர் என்கிறதும் தண்ணியஜாதியில் அவாந்தரபேதம்" என்ற வியாக்கி

யானமதிக. இத்தண்ணியசாதியிற் பிறந்த பெண்களைக் கொள்வார், கூடிய கூட்டமேயாகக்கொண்டு குடிவாழ்வது சாதிவழக்கமென்க. வேண்டிற்றுச் செய்து—இரண்டுதலையிலுமுண்டான குடிப்பிறப்பைப்பாராதே, ஒரு சாஸ்த்ர மர்யாதையின்றியே, தனக்கு வேண்டினபடிசெய்து என்றபடி. சாடிறப் பாய்ந்தவரலாறு கீழ்க்குறிக்கப்பட்டுள்ளது. ... ... (௬)

அண்டத் தமரர் பெருமா னாழியா னின்றென் மகளைப்
பண்டப் பழிப்புக்கள் சொல்லிப் பரிசற வாண்டி டுங்கொலோ
கொண்டு குடிவாழ்க்கை வாழ்ந்து கோவலர் பட்டங் கவித்துப்
பண்டை மணாட்டிமார் முன்னே பாதுகா வல்வைக் குங்கொலோ. (எ)

அண்டத்து அமரர் - பரமபதத்திலுள்ள நித்ய ஸூரிகளுக்கு
பெருமான்—தலைவனும்
ஆழியான் - திருவாழியாழ்வானையுடையனுமான கண்ணபிரான்
என் மகளை - என் பெண்பிள்ளையை,
இன்று—இப்போது
பண்டம் பழிப்புக்கள் சொல்லி — பதார்த்தங்களுக்குக் குறைசொல்வது போல் (இவளது) ரூபகுணங்களிற் சில குறைகளைச்சொல்லி,
பரிசு அற—வரிசை கெடும்படி
ஆண்டிடும் கொல் ஓ - ஆளுவனோ ?
(அன்றி,)
பண்டை மணாட்டிமார் முன்னே — முன்பே பட்டங் கட்டித் தனக்குத் தேவியாயிருப்பவர்களின் முன்னே
கொண்டு—இவளைக்கொண்டு
குடி வாழ்க்கை வாழ்ந்து — (தனது) க்ருஹக்ருத்யமெல்லாம் நடத்தி
கோவலர் பட்டம் கவித்து — "இவள் இடைக்குலத்துக்குத்தலைவி" என்று (தன் மனைவியானமை தோற்றப்) பட்டங்கட்டி,
பாது காவல் வைக்கும் கொல் ஓ — அந்த:புரக் காவலிலே வைப்பனோ?

குறிப்பு:—உலகத்தில் புரோஹிதர்களாயிருப்பவர் எப்படிப்பட்டபதார்த்தங்களிலும் ஏதாவதொருகுறையைக் கூறுவது வழக்கம்; அதுபோல் கண்ணபிரானும் என்மகளிடத்து ரூபகுணங்களில் ஏதாகிலுமொரு குறையைக் கூறித் தாழ்வு நினைத்து "இவளை வாசல் விளக்குகிற தொழிலில்விடுங்கள்" என்று புறத்தொழில்களில் நியமித்துவிடுவனோ? அன்றி, முன்னமே பட்டங் கட்டிக்கொண்டு அந்த:புரமஹிஷிகளாயிருப்பவர்களோடு சேர்த்து இவள் கருத்தின்படி ஸகலகாரியங்களையும் நிர்வஹிப்பனோ? என்று ஸந்தேஹிக்கிறாள். "பண்டப்பழிப்புக்கள்சொல்லி" என்பதில், உபமேயார்த்தம் தொக்கி நிற்கின்றது; "மருத்துவப்பதம் நீங்கினாள்" என்பதிற்போல. (எ)

குடியிற் பிறந்தவர் செய்யுங் குணமொன்றுஞ் செய்தில னந்தோ
நடையொன்றுஞ் செய்திலன் நங்காய் நந்தகோ பன்மகன் கண்ணன்
இடையிரு பாலும் வணங்க விளைத்திளைத் தென்மக ளேங்கிக்
கடைகயி றேபற்றி வாங்கிக் கைதழும், பேறி டுங்கொலோ (அ)

நங்காய்—பூர்ணையாயிருப்பவளே!
நந்தகோபன் மகன் — நந்தகோபருடைய பிள்ளையாகிய
கண்ணன்—கண்ணபிரான்,
குடியில் பிறந்தவர் செய்யும் குணம் — உயர்ந்தகுலத்திற் பிறந்தவர்கள் (குலமர்யாதைக்குத்தக்கபடி) செய்யுங்குணங்களில்

ஒன்றும்—ஒருவகைக்குணத்தையும்
செய்திலன்—செய்தானில்லை;
நடை—உலகத்துக்குப் பொதுவான நடத்
[தைகளிலும்
ஒன்றும் செய்திலன்—;
அந்தோ—அஹஹ!
என் மகள்—என்மகளானவள்
(தயிர்கடையும்போது)
இடை—இடுப்பானது
இரு பாலும்—இருபக்கத்திலும்
வணங்க—துவண்டுபோவதனால்
ஏங்கி — (மூச்சுப்பிடித்துக்கடையமாட்டா
[மல் நடுநடுவே) ஏக்கமுற்று
இளைத்து இளைத்து—மிகவும்இளைத்து
கடை கயிறே—கடைகிறகயிற்றையே
பற்றி வாங்கி—பிடித்துவலித்திழுப்பதனால்
கை தழும்பு ஏறிடுங்கொல்லோ } (தனது ஸுகுமாரமான) கைகள் தழும்பேறப்பெறுமோ?

குறிப்பு:—திருத்தாயார், தன்மனவருத்தத்தை அண்டைவீட்டிலுள்ள ஒரு ஸ்த்ரீயிடத்துச் சொல்லுகிறதாய்ச் செல்லுகிறது இப்பாசுரம். நற்குடியிற் பிறந்தவர்கள், பெண்களை முறையிலே வரைந்துகொண்டு வெளியிற் கொண்டுபோவதில்லை என்றொரு ஸம்ப்ரதாயமுண்டு; அங்ஙனுஞ்செய்திலன் இக்கண்ணபிரான்; இதுசெய்யாதொழியினுமொழிக; உலகத்தில் ஸாமாந்ய ஜனங்கள் செய்துபோருகிற ரீதிகள் சிலஉண்டே, அவையுஞ் செய்திலன்; (அதாவது—இங்ஙனே பிறர்பெண்ணைக் களவுவழியிற்கொள்வதையோ ஸாமாந்யருந்தான் செய்கின்றனர்? அதுவுமன்றி, தன்வீட்டுக்குக் கொண்டுபோனதும் போகாததுமாயிருக்க, இவளைத்தயிர்கடையவோ நியமிப்பது? இவ்வாறு எந்நாட்டில் நடக்கும்? என்றபடி.) இளம்பருவத்தளான என் மகள் இடம்வலங்கொண்டு தயிர்கடையவேண்டுகையால் இடைதுவண்டு உடலிளைத்துப் பெருமூச்சுவிட்டு இவ்வகை வருத்தங்களோடு, தொடங்கின காரியம் தலைக்கட்டுமளவும் இடைவிடாமல் கடைகயிற்றையே பிடித்து வலித்திழுத்தால் அவளுடைய தளிர்போன்ற தடங்கைகள் தழும்பேறப்பெறுமே! என வருந்தியவாறு.

அஹஹ! என்னும் வடசொல், மகிழ்ச்சி, இரக்கம், துன்பம் முதலிய பொருள்களில் வருமென்று வடமொழி நிகண்டினால் தெரிகிறதனால், அதன் திரிபாகிய அந்தோ என்பது இங்கு இரக்கப்பொருளில் வந்ததென்க. கடைகயிறு—வினைத்தொகை. வாங்கி—வாங்குவதனால்; காரணப்பொருட்செயவெனெச்சமாகிய வாங்க என்றதன் திரிபு. தழும்பேறுதல் — காய்ப்புக்காய்த்தல்; இதனை வடநூலார், கிணம் என்பர். ... ... ... ... (அ)

வெண்ணிறத் தோய்தயிர் தன்னை வெள்வரைப் பின்முன் னெழுந்து
கண்ணுறங் காதே யிருந்து கடையவுந் தான்வல் லள்கொலோ
ஒண்ணிறத் தாமரைச் செங்க ணுலகளந் தானென் மகளைப்
பண்ணறை யாப்பணி கொண்டு பரிசற வாண்டி டுங்கொலோ. (௯)

(என்மகள்) தான்—என்மகளானவள்

| | |
|---|---|
| வெள்ளரைப்பின் முன் எழுந்து | கிழக்கு வெளுப்பதற்கு முன்பாகஎழுந்திருந்து |
| கண் உறங்காதே இருந்து | கண் விழித்துக்கொண்டிருந்து, |
| வெண் நிறம் தோய் தயிர் தன்னை | வெளுத்த நிறத்தையுடைத்தாய்த் தோய்ந்த தயிரை |
| கடையவும் வல்லள்கொல் ஓ | கடையும்படியான சக்தியைத்தான் உடையளோ? |
| ஒண் நிறம் செம் தாமரை கண் | அழகிய நிறத்தையுடைய செந்தாமரை மலர்போன்ற கண்களையுடையவனும் |

உலகு அளந்தான்—(த்ரிவிக்ரமாவதாரத்தில்) உலகளந்தருளினவனுமான கண்ணபிரான்

என் மகளை—என் பெண்ணை

| | |
|---|---|
| பண் அறையாப் பணி கொண்டு | தர்மஹாநியாக இழிதொழில்களைச் செய்வித்துக்கொண்டு |

பரிசு அற—(அவளுடைய) பெருமை குலையும்படி

| | |
|---|---|
| ஆண்டிடும் கொல் ஓ | ஆளுவனோ? |

குறிப்பு:—கண்ணபிரான் என்மகளைக் கொண்டுபோய்த் தயிர்கடைகையாகிற தொழிலில் நியமித்துவிட்டானாகில், என்மகள் கிழக்குவெளுப்பதற்கு முன் உறக்கத்தை ஒழித்து எழுந்து தயிர்கடைவதற்கு எங்ஙனே வல்லளாவள்? என்றுசொல்லிச்சற்றுப்போது மூர்ச்சித்துக்கிடந்து, பின்பு தெளிந்து, எல்லாரையும் குளிரநோக்கும்படியுள்ள கண்கள்படைத்தவனும், வஸிஷ்டனோடு சண்டாளரோடுவாசியற அனைவரையும் தன்திருவடிக் கீழாக்கிக் கொண்டவனுமான கண்ணபிரான் என்மகளை அதர்மமாக இழிதொழில்களில் ஏவி, அவளது பெருமைகளைக் குலைப்பனோ? அன்றி, பெருமைக்குத்தக்கவாறு திருவுள்ளம்பற்றுவனோ? என்று ஸந்தேஹிக்கிறாள்.—கண்ணபிரான் திருமாளிகையில் கறவைக்கணங்கள் பலவாகையால் அவை அளவற்றபாலைத் தரும், பின்பு அதைத்தோய்த்துத் தயிராக்கிக் கடைவதற்குப் பின்மாலைப் பொழுதிலேயே எழுந்திருக்கவேணுமென்க. பண்—அமைவு, சீர், செவ்வை, தகுதி. அறை - குறைவு. ஆ - ஆக என்பதன் விகாரம். ... ... (கூ)

மாயவன் பின்வழி சென்று வழியிடை மாற்றங் கள்கேட்
டாயர்கள் சேரி லும்புக் கங்குத்தை மாற்றமு மெல்லாந்
தாயவள் சொல்லிய சொல்லைத் தண்புது வைப்பட்டன் சொன்ன
தூய தமிழ்பத்தும் வல்லார் தூமணி வண்ணனுக் காளரே. (கூ0)

(மகளானவள்,)

வழி இடை—போகிறவழியிலே

(அபூர்வவஸ்துக்களைக்கண்டால் 'இவை என்?' என்று அவ்விஷயமாக)

| | |
|---|---|
| மாற்றங்கள் கேட்டு | வார்த்தைகளைக்கேட்டுக்கொண்டு |
| மாயவன் பின் வழி சென்று | கண்ணபிரான்பின்னேபோய் |
| ஆயர்கள் சேரியிலும் புக்கு | திருவாய்ப்பாடியிலும் சென்று புகுந்தபின்பு |
| அங்குத்தை மாற்றமும் எல்லாம் | அங்குண்டான செயல்கள்சொலவுகள் முதலிய எல்லாவற்றையும் குறித்து |

தாய் அவள்—தாயானவள்

சொல்லிய—சொன்ன

சொல்லை—பாசுரங்களை

| | |
|---|---|
| தண் புதுவை பட்டன் சொன்ன | குளிர்த்தியையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த பெரியாழ்வார் அருளிச்செய்தவையாகிய |

தூய—பழிப்பற்ற

தமிழ் பத்தும்—தமிழ்ப்பாட்டுக்கள்பத்தையும்

வல்லார்—ஓதவல்லவர்கள்

| | |
|---|---|
| தூ மணி வண்ணனுக்கு | அழகியமணிபோன்ற நிறத்தையுடைய கண்ணபிரானுக்கு |

ஆளர்—ஆட்செய்யப்பெறுவர்.

குறிப்பு:—தனது பெண்பிள்ளையானவள் கண்ணபிரான்பின்னே புறப்பட்டு, வழியிடையிலே விநோதமாகப்பேசிக்கொண்டுபோய்த் திருவாய்ப்பாடியேறப் புகுந்தபடியையும், அங்குப்புகுந்தபின்பு, யசோதைப்பிராட்டி, ஸ்ரீ நந்தகோபர், மருமகப்பிள்ளையான ஸ்ரீக்ருஷ்ணன், தன்பெண்பிள்ளை ஆகிய இவர்கள் தங்கள்தங்களுக்கு அநுகுணமாகச் செய்யுமவற்றையும் சொல்லுமவற்றையுமெல்லாம் திருத்தாயார் தன் திருமாளிகையிலேயே இருந்துகொண்டு மநோரதித்தும் வருந்தியும் கிட்டினரைக்குறித்துச் சொல்லியும் போந்தபடியைக் கூறுவதாகிய இத்திருமொழியை ஓதவல்லவர்கள் பகவத்கைங்கரியமாகிற செல்வத்தைப் பெறுவர் என்று - பலஞ்சொல்லித்தலைக்கட்டியவாறு.

மற்றொருபடியாகவுங் கருத்துக் கூறுவர்; அதாவது:—திருத்தாயார் படுக்கையில் பெண்ணைக்காணாமல் கண்ணபிரானுடனிவளைக் கொண்டுபோயிருக்கவேண்டுமென்றறுதியிட்டு, அவன்போனவழியைத்தொடர்ந்துசென்று, வழியெதிர்வந்தவர்களை "மதுரைப்புறம்புக்காள் கொலோ?" என்று கேட்டும், "எமர்கள் குடிக்கு ஓரேச்சாமோ? குணமாமோ?" என்றாற்போலேகேட்டும், திருவாய்ப்பாடியில் தோரணம்முதலான தெருக்கோலங்களைக்கண்டீர்களா? வாத்யகோஷங்கள் செவிப்பட்டனவா?" என்று கேட்டுங்கொண்டு போய்த் திருவாய்ப்பாடியிற் புகுந்து அங்குள்ளவர்களை, யசோதை ஸ்ரீநந்தகோபர் செய்யும் ஆதர அநாதரங்களையெல்லாம் விசாரிக்க, அவர்கள் சொன்னவிசேஷங்களைத் திருத்தாயார் கூறியவாறாக யோஜிக்கவுமாம். இதிற்காட்டில் முந்தினயோஜனையே உசிதமாமென்க.

அங்குத்தை-அங்கு உண்டான என்றபடி; அங்கு த் த் ஐ; த்-எழுத்துப்பேறு; த்-சந்தி; ஐ-சாரியை. தாய் அவள்=அவள்—முதல் வேற்றுமைச் சொல்லுருபு. "தேன் புதுவை" என்ற பாடம் மோனையின்பத்துக்கு மாறுபாடாமென்க. தூய தமிழ்—பகவத் விஷயமான தமிழாகையாலே வந்த தூய்மை, சுத்தி. இதரவிஷயமாம்போது மிலேச்சபாஷையா மென்பர். (௧௦)

அடி:—நல்லது ஒன்று குமரி ஒரு தம்மாமன் வேடர் அண்டக் குடி வெண்ணிறம் மாயவன் என்னுதன்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

## ஒன்பதாந் திருமொழி.
## என்னாதன் தேவிக்கு.

**அவதாரிகை:**—இவ்வாழ்வார் "வண்ணமாடங்கள் சூழ்' என்று தொடங்கி இவ்வளவும் வாக் கண்ணபிரானுடைய குணசேஷ்டிதங்களையே அநுபவித்துப் போந்தார்; இனி அவற்றோடுகூட இராமபிரானுடைய குணசேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே அனுபவிக்க வேணுமென விரும்பி, இரண்டு ஆயர்மங்கைகளின் அவஸ்தையைத் தாமடைந்து அவ்விருவருள் ஒருத்தி க்ருஷ்ணாவதார வ்ருத்தாந்தத்தைப் பாடுவதாகவும், ஒருத்தி ராமாவதார வ்ருத்தாந்தத்தைப் பாடுவதாகவுங்கொண்டு ஒருவர்க்கொருவர் எதிரியாய் நின்று சொல்லி உந்திபறந்தபாசுரத்தாலே உபயாவதார குணசேஷ்டிதங்களையும் பேசி இனியராகிறார் இத்திருமொழியில்.

ஒருவர் இரண்டு வ்யக்திகளின் அவஸ்தையை ஏககாலத்தில் அடையுமாறு பொருந்துமோ? எனின்? எம்பெருமானது அருளின் மிகுதியால் ஞானத்தில் தடையற்றால் எல்லாம் சொல்லலாமிறே. இங்ஙனே திருமங்கையாழ்வாரும் "மானமருமென்னோக்கி" என்ற திருமொழியில் இரண்டு பிராட்டிமார் அவஸ்தையை ஏககாலத்திற் பெற்று அருளிச்செய்துள்ளமைகாண்க. பரமபதத்தில் நித்யமுக்தர்கள் ஏககாலத்தில் பல சரீரங்களைப் பரிக்ரஹிப்பதாக உபநிஷத்துக்கள் கூறுகின்றன; ["ஸஏகதா பவதி த்ரிதா பவதி" இத்யாதி.] அது பொருந்துவது எம்பெருமானருளாலென்பது போலக்கொள்க. இவ்வர்த்தத்தை நஞ்சீயர்க்குப்பட்டர் அருளிச்செய்ததாகஜதிஹ்யமுண்டு.

இத்திருமொழியில் பாட்டுத்தோறும் "பாடிப்பற" என்றது பாடி, உந்திபற என்றபடி; இறுதிப்பாட்டில் "உந்திபறந்த" என்றதுகாண்க. இனி, உந்திபறத்தலாவது யாதெனில்? "உந்திபேதையர் விரும்பியாடல்," "உந்தியே மகளிர்கூடி விளையாடல்" என நிகண்டுகளிற் காணப்படுதலாலும், சாந்தலிங்கர் இயற்றிய "அவிரோதவுந்தியார்" என்ற நூலின் முதற்செய்யுள் உரையில், "உந்தி என்றது குழாங்கூடிய மகளிரது ஒரு விளையாட்டெனக்கொள்க" என்றெழுதப்பட்டிருத்தலாலும், இத்திருமொழியின் இறுதிப்பாட்டில் "உந்திபறந்த" என்றவிடத்து, "உந்திபறக்கையாகிற லீலாரஸங்கொண்டாடின" என்று பூருவாசாரியர்கள் அருளிச்செய்துள்ளமையாலும், "உந்திபற என்பது பல்வரிக் கூத்துள் ஒன்றென்று சிலப்பதிகாரத்துச் 'சிந்துப்பிழுக்கை' என்னும் வெண்பாவினால் தெரிகின்றது" என்று ஆதுநிகர் சிலர் குறிப்பிட்டிருப்பதனாலும், இது பெண்பிள்ளைகள் கூட்டமாகக்கூடி விளையாடுவதொரு விளையாட்டென்றிவ்வளவே புலப்படுகின்றது; அவ்விளையாட்டின் வகை எவ்வாறுமென்பதை யாம் அறுதியிட்டுரைக்கத் துணிகின்றிலோம். சைவசமய குரவர் நால்வருள் ஒருவரான மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகத்தில், ("திருவுந்தியார்-ஞானவெற்றி" என்ற தலைப்பின் கீழ்) "ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக் கூட்டியவாபாடி உந்தீபற! கொங்கை குலுங்க நின்றுந்தீபற!!" என்றொரு பாட்டுக் காணப்படுகின்றது: இதனால் இவ்விளையாட்டு, கொங்கை குலுங்கநின்று ஆடப்படுவதெனத் தெரிகின்றது; இப்படிகளை ஆராய்ந்து பார்த்தால் சோபனமடித்தல் கும்மியடித்தல் போன்ற ஒருலீலாவிசேஷமென்று கொள்ளத்தகுமெனத் தோற்றுகின்றது. பகவத்கதைகளைப் பாடிக்கொண்டு சோபநமடிப்பதும் கும்மியடிப்பதும் இப்போது முலகவழக்கிற் காணத்தக்கது. பற என்கிறவிது-முன்னிலையேவலொருமை வினைமுற்று; பறவைகளைப்போல் ஆகாயத்தில் பறத்தலைக் கூறுவதன்று; உயரக்கிளம்பிக் கிளம்பிச் சோபன மடிப்பதுபோல விதித்தவாறுமென்க. இனி, இதன்விவரத்தை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

என்னுதன் றேவிக்கன் றின்பப்பூ வீயாதாள்
தன்னுதன் காணவே தண்பூ மரத்தினை
வன்னுதப் புள்ளால் வலியப் பறித்திட்ட
என்னுதன் வன்மையைப் பாடிப்பற வெம்பிரான் வன்மையைப் பாடிப்பற.

961
(705)

என் நாதன்–எனக்குஸ்வாமியான கண்ணபிரானுடைய
தேவிக்கு–தேவியான ஸத்யபாமைப்பிராட்டிக்கு
இன்பம் பூ–மனோஹரமான கற்பகப்பூவை
அன்று–(அவள் விரும்பின) அக்காலத்தில்
ஈயாதாள் தன் – கொடாத இந்திராணியினுடைய
நாதன்–கணவனான தேவேந்திரன்
காணவே–கண்டுகொண்டுநிற்கும்போதே
தண் பூ மரத்தினை–குளிர்ந்தபூக்களையுடையகல்பவ்ருக்ஷத்தை,
வல் நாதம் புள்ளால்–வலிவையுடைய ஸாமவேதஸ்வரூபியான பெரிய திருவடியாலே
வலிய–பலாத்காரமாக
பறித்து–பிடுங்கிக்கொண்டுவந்து
இட்ட–(அதனை ஸத்யபாமையின் வீட்டு முற்றத்தில்) நட்டருளின
என் நாதன்–என்ஸ்வாமியான கண்ணபிரானுடைய
வன்மையை–வலிவை
பாடி–பாடிக்கொண்டு
பற–உந்திபற;
எம் பிரான் வன்மையை பாடிப்பற—.

குறிப்பு :—ஸ்ரீக்ருஷ்ணவதாரகுண சேஷ்டிதங்களைப் பாடலுற்ற ஆய்மகளின் பாசுரம், இது. இங்குக்கூறிய வரலாறு:—கண்ணபிரான், நரகாஸுரனை ஸம்ஹரித்து, அவனால் முன்னே கவர்ந்துகொண்டு போகப்பட்ட இந்திரன் தாயான அதிதியினுடைய குண்டலங்களை அவளுக்குக் கொடுப்பதற்காகப் பெரிய திருவடியின்மேற் சத்தியபாமையை உட்காருவித்துத் தாமும் உட்கார்ந்துகொண்டு தேவலோகத்திற்குச்செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்குப் பல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லையாதலின், அவள் அதனைக்கண்டு விருப்புற்றவளாய் ஸ்வாமியைப்பார்த்து, பிராணநாயகனே! இந்தப் பாரிஜாத தருவைத் துவாரகைக்குக் கொண்டுபோகவேண்டும், என்றதைக் கண்ணன் திருச்செவிசாத்தி அந்தவ்ருக்ஷத்தைப் பெரியதிருவடியின் திருத்தோளின்மேல் வைத்தருளினபோது, இந்திராணி தூண்டுதலினால் வந்து தன்னோடு யுத்தஞ்செய்து நின்ற இந்திரனைச் சகல தேவஸைன்யங்களுடனும் தனது சங்கநாதத்தினாலே பங்கப்படுத்தினனென்பதாம். "அருட்கொண்டலன்ன அரங்கர் சங்கோசையிலண்டமெல்லாம், வெருட்கொண்டிடர்ப்பட மோகித்து வீழ்ந்தனர் வேகமுடன், தருக்கொண்டுபோகப்பொறாதே தொடருஞ் சதுர்முகனும், செருக்கொண்ட முப்பத்து முக்கோடி தேவருஞ் சேனையுமே" என்ற பிள்ளைப்பெருமாளையங்கார் பாசுரமறிக. [வன்னுதப்புள்ளால்.] கருடன் வேதமயனென்று வேதங்கூறும்; "வேதாத்மா விஹகேஶ்வர:" என்றார் ஆளவந்தாரும்; "சிரஞ்சேதனன் விழிநேத்ரஞ் சிறைபின் சினைபதங்கந், தரந்தோள்களுரு வடிவம் பெயரெசுர் சாமமுமாம், பரந்தே தமதடியார்க்குள்ள பாவங்கள் பாற்றியருள், சுரந்தே யளிக்குமரங்கர்தமூர்திச் சுவணனுக்கே" (திருவரங்கத்துமாலை, அஅ.) என்றார் ஐயங்காரும். வல் என்னும் அடைமொழியை நாதம் என்பதற்கு ஆக்கும்போது, நாதத்துக்கு வன்மையாவது–பாஹ்யகுத்ருஷ்டிக

ளால் சலிப்பிக்க ஒண்ணாமையென்க; புள்ளுக்கு விசேஷணமாகில், வன்மை-நினைத்தபடிசெய்து முடிக்கவல்ல சக்தி. ஈற்றடியில் வன்மைக்கும் பொருள் இதுவே.

இவ்வாழ்வார், ராமகிருஷ்ண உபயாவதாரகுணசேஷ்டிதங்களை ஏககாலத்தில் அநுபவிக்கவிரும்பினபொழுதிலும் முதன்முதலாக க்ருஷ்ணாவதாரவ்ருத்தாந்தத்தைப் பேசினபடியால் இவர்க்கு மிக்க அபிநிவேசம் கிருஷ்ணாவதாரத்திலே யாமென்பது போதருமென்ப. ... ... (க)

என்வில் வலிகண்டு போவென் றெதிர்வந்தான்
தன்வில்லி னோடுந் தவத்தை யெதிர்வாங்கி
முன்வில் வலித்து முதுபெண் ணுயிருண்டான்
தன்வில்லின் வன்மையைப் பாடிப்பற தாசரதி தன்மையைப் பாடிப்பற.

என் வில் வலி கண்டு போ என்று—'என்னுடைய வில்லின் வலியைக்கண்டு போ' என்றுசொல்லிக்கொண்டு
எதிர் வந்தான் தன்—எதிர்ந்துவந்த பரசுராமனுடைய
வில்லினோடு—வில்லையும்
தவத்தையும்—தபஸ்ஸையும்
எதிர்—அவன்கண்ணெதிரில்
வாங்கி—அழித்தருளினவனும்,
முன்—இதற்குமுன்னே
வில் வலித்து—வில்லைவளைத்து
முது பெண்—(பாஹ்மிஸையில்) பழகிக்கிடந்த தாடகையினுடைய
உயிர்—உயிரை
உண்டான் தன்—முடித்தருளினவனுமான இராமபிரானுடைய
வில்லின்—வில்லினது
வன்மையை—வலிவை
பாடிப்பற—;
தாசரதி—சக்ரவர்த்தித்திருமகனுடைய
தன்மையை—ஸ்வபாவத்தை
பாடிப்பற—.

குறிப்பு:—ராமாவதாரப்ரவணையாய் நின்ற ஆய்மகளின் பாசுரம், இது. ஸீதாகல்யாணத்தின்பின் தசரதசக்கரவர்த்தி திருக்குமாரர்களுடனே மிதிலையினின்று அயோத்திக்கு மீண்டுவருகையில், பரசுராமன் வலியச்சென்று இராமபிரானை எதிர்த்து "முன்பு ஹரிஹரயுத்தத்தில் இற்றுப்போன சிவதநுஸ்ஸை முறித்த திறத்தை அறிந்தோம்; அதுபற்றிச் செருக்கடையவேண்டா; இந்த ஸ்ரீமஹாவிஷ்ணுதநுஸ்ஸை வளை, பார்ப்போம்" என்று அலக்ஷ்யமாகச்சொல்லித் தான்கையிற் கொணர்ந்த ஒருவில்லைத் தசரதராமன்கையிற் கொடுக்க,அப்பெருமான் உடனே அதனைவாங்கி எளிதில்வளைத்து நாணேற்றி அம்பு தொடுத்து "இந்தப் பாணத்திற்கு இலக்கு என்?"என்று கேட்க, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங் கொடுக்க, அவன் க்ஷத்ரியவம்சத்தைக் கருவறுத்தவனா யிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம்பூண்டவனுமாயிருத்தல்பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்தமாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளி, அயோத்திக்குச் சென்றனன் என்ற வரலாறு இங்கு உணரத்தக்கது.

விஷ்ணுவின் தசாவதாரங்களில் ஆறுமவதாரமான பரசுராமனும், ஏழாமவதாரமான தசரதராமனும் ஒருவரோடொருவர் பொருதலும், அவர்களில் ஒருவர் மற்றொருவரை வெல்லுதலும் பொருந்துமோ? எனின்; துஷ்டர்களாய்க் கொழுத்துத் திரிந்த அரசர்களைக் கொல்லுதற்பொருட்டுப் பரசுராம

னிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்தி அக்காரியம் முடிந்தபின்பு அவ்விஷ்ணுவின் அவதாரமான தசரதராமனாற் கவர்ந்துகொள்ளப்பட்ட தாதலாற் பொருந்துமென்க. இதனால், ஆவேசாவதாரத்தினும் அம்சாவதாரத்திற்கு உள்ள ஏற்றம்விளங்கும். எதிர்வந்தான்தன்வில்லினோடும்—எதிர்வந்தபரசுராமன்றன்னுடைய வில்; அன்றி, எதிர்வந்தவன் கையிலிருந்த, தன்னுடையவில் என்றுங்கொள்ளலாம்; (தன்னுடைய—விஷ்ணுவான தன்னுடைய என்றபடி; அவ்வில் வைஷ்ணவமாதல் அறிக.) "வில்லினோடும்" என்றவிடத்து உள்ள உம்மை, "தவத்தை" என்றவிடத்துக் கூட்டியுரைக்கப்பட்டது; உள்ளபடியே உரைத்தலு மொக்கும். "வாங்கி" என்பதை வினையெச்சமாகக் கொள்வதிலும், இ விகுதிபெற்ற பெயர்ச்சொல்லாகக் கொள்ளுதல் அழகிதாம்.

மூன்றுமடியிற் குறித்தவரலாறு:—ஸுகேது என்னும் யக்ஷனது மகளும் ஸுந்தனென்பவனது மனைவியும் ஆயிரம்யானை வலிமைகொண்டவளுமான தாடகை, தன் கணவன் அகஸ்த்யமஹாமுனியின் கோபத்தீக்கு இலக்காய்ச் சாம்பரானதை யறிந்து தன் புத்திரர்களாகிய ஸுபாஹு மாரீசர்களுடனே அம்முனிவனை எதிர்த்துச் சென்றபொழுது அவனிட்ட சாபத்தால் தன்மக்களோடு இராக்கதத் தன்மையடைந்தனள். பின்பு முனிவர்களுடைய யாகங்களைக் கெடுக்கின்ற இவர்களை அழித்துத் தன்வேள்வியைக் காக்கும்பொருட்டு விச்வாமித்ரமுனிவன் தசரதசக்ரவர்த்தியினிடம் அநுமதிபெற்று இளம்பிராயமுடைய இராமபிரானை லக்ஷ்மணனுடன் அழைத்துக்கொண்டுபோனபொழுது, அம்முனிவனாச்சிரமத்திற்குச் செல்லும்வழியிடையேவந்து எதிர்த்த தாடகையை ஸ்ரீராமன் முனிவனது கட்டளைப்படி பெண்ணென்று பாராமற் போர்செய்து கொன்றனனென்பதாம். இத்தாடகை தீமைசெய்வதில் மிகவும் பழகினவளானதுபற்றி, முதுபெண் எனப்பட்டாள்; முதுமை-பழமை. தாசரதி-தசரதன்மகன்; வடமொழித்தத்திதாந்தநாமம். இப்பாட்டிற் கூறியுள்ள கதைகள் க்ரமவிவக்ஷையின்றிக் கூறப்பட்டன வென்றுணர்க: "வரிந்திட்ட வில்லால் மரமேழு மெய்து மலைபோலுருவத்தொரிராக்கதிமூக்கு அரிந்திட்டவன்" என்ற பெரியதிருமொழியையுங் காண்க. (௨)

உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு
விருப்புற்றங் கேக விரைந்தெதிர் வந்து
செருக்குற்றான் வீரஞ் சிதையத் தலையைச்
சிரைத்திட்டான் வன்மையைப் பாடிப்பற தேவகி சிங்கத்தைப் பாடிப்பற.

உருப்பிணி நங்கையை-ருக்மிணிப்பிராட்டியை
தேர்-(தனது) தேரின்மேல்
ஏற்றிக்கொண்டு-ஏற்றிக்கொண்டு
விருப்புற்று-ஆசையுடனே
ஏக-(கண்ணன்) எழுந்தருளப்புக,
அங்கு-அவ்வளவில்,
விரைந்து-மிக்கவேகங்கொண்டு
எதிர் வந்து-(போர்செய்வதாக) எதிர்த்து
செருக்குற்றான்-கர்வப்பட்ட ருக்மனுடைய
வீரம் சிதைய-வீரத்தனம்கெடும்படியாக
தலையை-(அவனது) தலையை
சிரைத்திட்டான்-(அம்பாலே) சிரைத்து கண்ணனுடைய
வன்மையை-வலிவை
பாடிப்பற—;
தேவகி சிங்கத்தை-தேவகியின் வயிற்றிற் பிறந்த ஸிம்ஹக்குட்டிபோன்றவனை
பாடிப்பற—:

**குறிப்பு:**—விதர்ப்பதேசத்தில் குண்டினமென்கிற பட்டணத்தில் பீஷ்மகனென்கிற அரசனுக்கு*ருக்மன் முதலிய ஐந்து பிள்ளைகளும் ருக்மிணி என்கிற ஒருபெண்ணுமிருந்தனர். அந்த ருக்மிணியானவள் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அவதாரம்; அவளுக்கு யுக்தவயஸ்ஸு வந்தவுடனே கண்ணபிரான் அங்குச்சென்று இப்பெண்ணை எனக்குத் தாரைவார்த்துக் கொடுங்கள் என்று கேட்க, ருக்மன் என்பவன் அவளைச் சிசுபாலனுக்குக்கொடுக்க நினைத்துக் கண்ணனுக்குக் கொடுக்கலாகாதென்று தகைந்துவிட்டு, சிலநாள் கழிந்த பின் அந்த ருக்மிணியின் கல்யாணத்துக்காக ஸ்வயம்வரம் கோடித்து ஸகல தேசத்தரசர்களையும் வரவழைத்திட்டனன்; இதனிடையில் ருக்மிணி "அன்றிப்பின்மற்றொருவற்கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால்" என்ற துணிவையுடையளாகையால் தன்னை எவ்வகையினாலாகிலும் மணந்துசெல்லும்படி கண்ணபிரானிடத்துக்கு ஒரு ப்ராஹ்மணனைத் தூதுவிட்டிருந்தாள். கண்ணபிரானும் அங்ஙனமே பலராமன் முதலியோரைக் கூட்டிக்கொண்டு அப்பட்டணத்திற்கு எழுந்தருளி, கல்யாண முஹூர்த்த தினத்துக்கு முதனாள் அந்த ருக்மிணியைத் தான் ப்ரகாசமாக எடுத்துத் தேரின்மேலேற்றிக்கொண்டு ஊர்நோக்கிப்புறப்படப்புக, சிசுபாலன் முதலிய சில அரசர்கள் கண்ணனை எதிர்த்துப் போர்செய்ய முயல, பலராமனுந் தானுமாக அவர்களை வலியடக்கி வென்று ஓட்டிவிட, பின்பு (ருக்மிணியின் தமையனான) ருக்மன் மிகவும் வெகுண்டு ஆக்ரஹப்பட்டுக் கண்ணனை முடிப்பதாக ஓங்கிவர, அவனைக் கண்ணபிரான் ருக்மிணியின் ப்ரார்த்தனையின்படி உயிர்க்கொலைசெய்யாமல் அவனது மீசையையும் குடுமியையும் சிரைத்துப்பங்கப்படுத்தினனென்ற வரலாறு அறியத்தக்கது. ["வைரூப்யகரணம் தஸ்ய ... ... கேஶம் ... ... " என்பது, ஸ்ரீபாகவதம்.]

ருக்மிணீ என்றவட சொல் உருப்பிணி என விகாரப்படும். இவளது தமையனுக்கு ருக்மி என்றபெயர் வடசொற்புராணங்களில் எழுதப்பட்டுள்ளது; மேல் நான்காம்பத்து மூன்றாந்திருமொழியில் "உருப்பிணி நங்கைதன்னை மீட்பான் தொடர்ந்தோடிச் சென்ற, உருப்பனை" என்றருளிச் செய்திருக்கக்காண்கையால், ருக்மன் என்னும்பெயருமுண்டென்க. (௩)

மாற்றுத்தாய் சென்று வனம்போகே யென்றிட
ஈற்றுத்தாய் பின்றொடர்ந் தெம்பிரா னென்றழக்
கூற்றுத்தாய் சொல்லக் கொடிய வனம்போன
சீற்ற மிலாதானைப் பாடிப்பற சீதை மணாளனைப் பாடிப்பற. (௪)

மாறு தாய்—(பெற்றதாயோடு) ஒத்த (ஸுமித்திரை என்கிற) தாயானவள்
சென்று—சென்று
வனமே போகு என்றிட—'நீ காட்டுக்கேபோ' என்று நியமிக்க,
ஈற்றுத்தாய்—பெற்றதாயாகிய கௌஸல்யையானவள்
பின் தொடர்ந்து - (தன்னைப்) பின்தொடர்ந்துவந்து
எம்பிரான்—"என் நாயனே! (உன்னைப்பிரிந்து எப்படி தரித்திருப்பேன்")
என்று அழ - என்று கதறி அழ,

கூற்று தாய்சொல்ல - யமனைப்போல் கொடியளான கைகேயியின் சொல்லைக்கொண்டு
கொடிய வனம் போன } கொடியகாட்டுக்கு எழுந்தருளின
சீற்றம் இலாதானை - சீற்றமற்ற இராமபிரானை பாடிப்பற—;
சீதை மணாளனை - ஸீதைக்கு வல்லபனானவனை பாடிப்பற—.

குறிப்பு:—ஸீதாகல்யாணத்தின்பிறகு தசரதசக்ரவர்த்தி இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய முயலுகையில் மந்தரைசூழ்ச்சியால் மனங்கலக்கப்பட்டகைகேயி தன்கொழுநரான தசரதரைநோக்கி, முன்புஅவர் தனக்குக்கொடுத்திருந்த இரண்டுவரங்களுக்குப்பயனாகத் தன்மகனானபரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌஸல்யை மகனான இராமனைப் பதினான்குவருஷம் வநவாஸஞ்செலுத்தவும்வேண்டுமென்று நிர்ப்பந்திக்க, அதுகேட்டுவருந்திய தசரதர் ஸத்யவாதியாதலால், முன்புஅவட்கு வரங்கொடுத்திருந்த சொல்லைத் தவறமாட்டாமலும், இராமன்பக்கல்தமக்குஉள்ள மிக்கஅன்பினால் அவ்வரத்தை நிறைவேற்றுமாறு அவனைவனத்திற்குச் செல்லச்சொல்லவும்மாட்டாமலும் கலங்கி வாய்திறவாதிருக்கிறஸமயத்தில், கைகேயி இராமனைவரவழைத்து 'பிள்ளாய்! உங்கள்தந்தை பரதனுக்குநாடுகொடுத்துப் பதினான்குவருஷம் உன்னைக்காடேறப்போகச்சொல்லுகிறார்' என்ன, அச்சொல்லைச் சிரமேற்கொண்டு, அந்தத்தாயின் பேச்சையும் அவளுக்குத் தனதுதந்தை தந்திருந்த வரங்களையும் தவறாதுநிறைவேற்றி மாத்ருபித்ருவாக்யபரிபாலனஞ்செய்தவினிமித்தம் இராமபிரான் தன்னைவிட்டுப்பிரியமாட்டாதுதொடர்ந்த ஸீதையோடும் இலக்குமணனோடும் அயோத்தியைவிட்டுப் புறப்பட்டு வநவாஸஞ் சென்றனனென்றவரலாறு அறிக.

மாற்றுத்தாய் என்று ஸுமித்ரையையும், கூற்றுத்தாய்என்று கைகேயியையுஞ் சொல்லுகிறதாக உரைத்தருளினார், நாலூர்பிள்ளை. இப்பொருளில், "மாற்றுத்தாய்" என்றது—மற்றைத்தாய் என்றபடி; அன்றிக்கே, மாறு என்று ஒப்பாய், மாறான தாய்—பெற்றதாய்க்குப் போலியான தாய் என்னவுமாம், மாறு + தாய், மாற்றுத்தாய்; "டறவொற்றிரட்டும்" என்பது நன்னூல்.—கூற்றுத்தாய் = கூற்று—யமன்; உடலையுமுயிரையும் வேறுகூறுக்குபவனிறே. கொடுமையில் யமனையொப்பாள் கைகேயிஎன்பதுபற்றி, அவள் "கூற்றுத்தாய்" எனப்பட்டாள்.

இனி, மாற்றுத்தாய் என்று கைகேயியையும், கூற்றுத்தாய் என்று ஸுமித்ரையையும் சொல்லுகிறதாக உரைத்தருளினார், திருவாய்மொழிப்பிள்ளை; கைகேயி, கௌஸல்யைக்குத் தன் நினைவாலே மாற்றாந்தாயிறே; பரதன் நினைவுக்கு மேற்பொருந்தாமையாலும் மாற்றாந்தாய் எனப்படுவள்.—ஸுமித்திரை, கூறுபட்ட ஹவிஸ்ஸை உண்கையாலே கூற்றுத்தாய் எனப்படுவள்; கூறு + தாய், கூற்றுத்தாய்.

இவ்விரண்டு யோஜனையிலும் ஸுமித்ரை பெருமாள் முகம்பார்த்துச் சொன்னதாகச் சொல்லப்பட்ட வசனம் ஸ்ரீராமாயணத்தில் இல்லையாகிலும், * மயர்வறமதிநலமருளப் பெற்ற இவர் இப்படி அருளிச் செய்கையாலே,

இதிஹாஸாந்தர புராணாந்தரங்களிலேயாதல் கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேணுமென்பது, மணவாளமாமுனிகளின் திருவுள்ளம்.

“ஸூரக்ஷஸ்வ வநவாஸாய” என்று இளையபெருமாளை நோக்கி ஸுமித்திரை நியமித்திருப்பதைத்தான் இப்பாட்டிற் கூறியிருக்கின்றதென்னலாம்; “ராமஸ்ய தக்ஷிணோபாஹு:” என்று இளையபெருமாளை ஸ்ரீராமனுக்கு ஓரவயவமாகக் கூறியிருத்தலால், அவ்வொற்றுமைநயம் நோக்கி இங்ஙனருளிச் செய்தல் ஒக்குமென்னக்குறையில்லை. மேல் எட்டாம்பாட்டில், “சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு அவள், ஆர்க்கவரிந்தானைப் பாடிப்பற” என்று-இளையபெருமாள்செய்த சூர்ப்பணகாபங்கத்தைப் பெருமாள் செய்தருளினதாக அருளிச்செய்தலும், கீழ், “தேனுகன்பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடுகள் அடங்கவுழக்கி” என்று—பலராமனால் நிரஸிக்கப்பட்ட ப்ரலம்பாஸுரனைக் கண்ணபிரான் நிரஸித்தருளினதாக அருளிச் செய்ததும் பொருந்துமாறுபோல இதுவும் பொருந்தக்கூடுமிறே.

தந்தை ஏவவேண்டுமென்பதை எதிர்பாராமலே இராமபிரான் “மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ,.......இப்பணி தலைமேற்கொண்டேன், மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையுங் கொண்டேன்” (கம்பராமாயணம்) என்றுசொல்லிப் புறப்பட்டமைதோன்றக் “கூற்றுத்தாய் சொல்லக் கொடியவனம்போன” என்றார். “தண்டகநூற்றவள் சொற்கொண்டுபோகி” என்றும், “கைகேசி......குலக்குமரா! காடுறையப்போவென்று விடைகொடுப்ப” என்றும், “கொடியவள்வாய்க் கடிய சொற்கேட்டு” என்றும் இவர்தாமே மேலருளிச்செய்துள்ள பாசுரங்களையுங் காண்க. “தொத்தலர் பூஞ்சுரிகுழற் கைகேசி சொல்லால் தொன்னகரந்துறந்து” என்றார் குலசேகராழ்வாரும்.

முதலடியில் போகே என்றவிடத்துள்ள ஏகாரத்தை வனம் என்பதனோடுகூட்டுக; ஒரு பெண்பெண்டாட்டி ‘என்பிள்ளைக்கு வேணும்’ என்று பறித்துக்கொண்ட ராஜ்யம் உமக்கு வேண்டா; ஒருவரும் அபிமானியாத வனமே உமக்கு அமையும்; ஆனபின்பு வனத்துக்கே எழுந்தருளவேணும் என்று நியமித்தவாறும்.

புத்திரனைப் பிரிவதனால் வருத்தமுற்ற கௌஸல்யை “என்னையும் உன்னுடன் அழைத்துக்கொண்டுபோ” என்று கதறி அழுதுகொண்டு பின்தொடர்ந்தமை இரண்டாமடியில் விளங்கும். எம்பிரான்—விளி. “ஒருதாயிருந்து வருந்த வைதேகியுடன் சுரத்தில், ஒருதாய் சொலச் சென்றதென்னரங்கா!” என்ற திருவரங்கத்து மாலைப்பாட்டை ஒருபுடை ஒப்புக்கொள்க.

கொடியவனம்—“மாதிரங்கள், மின்னுருவின் விண்டேர்திரிந்து வெளிப்பட்டுக், கன்னிரைந்துதீந்து கழையுடைந்து கால்சுழன்று, பின்னுந்திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக், கொன்னவிலும் வெங்கானம்” எனக்காட்டின் கொடுமையைத் திருமங்கையாழ்வார் அருளிச் செய்தார்.—பட்டங்கட்டிக்

கொள்ள நிற்கிற நம்மைக் கட்டினகாப்போடு காட்டுக்குப் போகச்சொல்லு கிறார்களே என்று நெஞ்சில் இறையும் தளர்ச்சியடையாது "வநவாஸோ மஹோதயஃ" என்று மகிழ்ச்சியுடன் பெருமாள் காட்டுக்குச் சென்றமைபற்றிச் "சீற்றமிலாதானை" என்றாரென்க. ... ... ... (௪)

பஞ்சவர் தூதனாய்ப் பாரதங் கைசெய்து
நஞ்சுமிழ் நாகங் கிடந்தநற் பொய்கைபுக்
கஞ்சப் பணத்தின்மேற் பாய்ந்திட் டருள்செய்த
அஞ்சன வண்ணனைப் பாடிப்பற அசோதைதன் சிங்கத்தைப் பாடிப்பற.

பஞ்சவர் - பஞ்சபாண்டவர்களுக்காக
தூதன் ஆய் - (துரியோதநாதிகளிடம்) தூதனாய்ப்போய்
(அத்துரியோதநாதிகள் தன் சொற்படி இசைந்துவாராமையால்)
பாரதம் - பாரதயுத்தத்தை
கை செய்து - அணிவகுத்துச்செய்து,
நஞ்சு உமிழ் - விஷத்தைக் கக்குகின்ற
நாகம் கிடந்த - காளியன்கிடந்த
நல்பொய்கை புக்கு } கொடிய மடுவிலேபுகுந்து

அஞ்ச - (அக்காளியன்) அஞ்சும்படி
பணத்தின் மேல் - (அவனது) படத்திலே
பாய்ந்திட்டு - குதித்து
(நடமாடி அக்காளியனை இளைப்பித்துப் பின்பு அவன் ப்ரார்த்திக்க)
அருள் செய்த - அப்பாம்பின் ப்ராணனைக் கருணையால் விட்டிட்ட
அஞ்சனவண்ணனை பாடிப்பற—;
அசோதைதன் சிங்கத்தைப் பாடிப்பற—.

குறிப்பு:—கண்ணபிரான் பாண்டவர்களுக்காகத் தூது சென்றதும், பின்பு பாரதயுத்தம் நோடித்ததும், காளியன்வலியை அடக்கினதும் கீழ்ப் பலவிடங்களில் விரித்துரைக்கப்பட்டுள்ளன. காளியனை அடக்கியது முன்னும், பாரதம் கைசெய்தது அதற்குப் பின்னும் நடந்ததாயினும் அம்முறையைக் கருதாமல் இங்ஙனமருளிச் செய்தாரென்க. "கை செய்து" என்றவிடத்து, கை- தமிழ் உபஸர்க்கமென்பர் நல் பொய்கை—எதிர்மறையிலக்கணை. (௫)

முடியொன்றி மூவுல கங்களு மாண்டுன்
அடியேற் கருளென் றவன்பின் றொடர்ந்த
படியில் குணத்துப் பரதநம் பிக்கன்
றடிநிலை யீந்தானைப் பாடிப்பற அயோத்தியர் கோமானைப் பாடிப்பற. (௬)

முடி ஒன்றி - "திருமுடிசூடி
மூ உலகங்களும் - பூமி, சுவர்க்கம், பாதாளம் என்ற மூன்றுலோகங்களையும்
ஆண்டு - பரிபாலித்துக்கொண்டு
உன் அடியேற்கு அருள் என்று } தேவருடைய தாஸனான எனக்கு க்ருபை பண்ணவேணும்" என்று வேண்டிக்கொண்டு
அவன் பின் தொடர்ந்த } பெருமாள்பின்னே தொடர்ந்துவந்த

படி இல் குணத்து பரதன் நம்பிக்கு } ஒப்பற்றகுணங்களையுடையனான ஸ்ரீபரதாழ்வானுக்கு
அன்று - அக்காலத்திலே
அடி நிலை - ஸ்ரீபாதுகைகளை
ஈந்தானை - அளித்தருளின இராமபிரானை
பாடிப்பற—;
அயோத்தியர் - அயோத்யையிலுள்ளவர்களுக்கு
கோமானை - அரசனானவனை
பாடிப்பற—.

குறிப்பு:—பரதாழ்வான் கேகயநாட்டிலிருந்து அயோத்திக்கு வந்து அங்குநிகழ்ந்ததை அறிந்து இராமன் வனம்புக்கமைக்கு மிகவும் வருந்தி, தந்தைக்குரிய அந்திமக்ரியைகளைச் செய்துமுடித்து, இராமனை அழைத்து வந்து முடிசூடுவிக்கக்கருதி, தான் அரசியலைத்துறந்து மரவுரிபுனைந்து தாய்மார்முதலியோரோடு சேனைசூழவனம்புகுந்து, சித்திரகூடத்தில்இராம பிரானைக்கண்டு திருவடிதொழுது, அவரை அயோத்திக்குவந்து முடி சூடி அரசாளுமாறு வேண்ட, இராமபிரான் தந்தைசொற் பழுதுபடாதபடி பதினான்குவருடம் வநவாஸங்கழித்துப் பின்னர் வருவதாகக்கூறி அது வரை அரசாளுமாறு நியமித்து, தனக்குப் பிரதிநிதியாகத் தனது திருவடி நிலைகளைத் தந்தனுப்பியருளின னென்றவரலாறு அறியத்தக்கது. முடி ஒன்றுதல்—முடிபொருந்துதல். அருள்—முன்னிலை ஏவலொருமை வினைமுற்று. 'நமது தாய் நன்றுசெய்தாள், நாம் சுகமாகவாழலாம்படி நமக்குப்பெரிய ராஜ்யம் கிடைத்ததன்றோ'என்று மேனாணித்திராது ஸ்ரீராமவிச்லேஷத்தால் மிகவும் வருந்தினமையால், "படியில் குணத்துப் பரதநம்பி" என்றார்; இதிலும் விஞ்சின குணமில்லையிறே. அடிநிலை—மரவடி. ... (௬)

காளியன் பொய்கை கலங்கப்பாய்ந் திட்டவன்
நீண்முடி யைந்திலும் நின்று நடஞ்செய்து
மீள வவனுக் கருள்செய்த வித்தகன்
தோள்வலி வீரமே பாடிப்பற தூமணி வண்ணனைப் பாடிப்பற. (எ)

காளியன் பொய்கை—காளியன்கிடந்த [பொய்கையானது
கலக்க—கலக்கும்படி
பாய்ந்திட்டு - (அதில்) குதித்து
அவன் - அக்காளியனுடைய
நீள் முடி ஐந்திலும் நின்று நடம் செய்து } ஆகாசத்தளவும் நீண்ட ஐந்துபடங்களின்மேலும் நின்று [கூத்தாடி,
மீள - அவன் இளைத்துச் சரணம் புகுந்த [பிறகு
அவனுக்கு - அக்காளியனுக்கு
அருள் செய்த - (ப்ராணன் நிற்கும்படி) [க்ருபைசெய்தருளின
வித்தகன் - விஸ்மயநீயனான கண்ணபிரா [னுடைய
தோள் வலி - புஜபலத்தையும்
வீரம் - வீரப்பாட்டையும்
பாடிப்பற;—
தூ மணி - பழிப்பற்றநீலமணிபோன்ற
வண்ணனை - நிறத்தையுடையவனை
பாடிப்பற—.

குறிப்பு:—கீழ், "பஞ்சவர்தூதனாய்" என்ற ஐந்தாம்பாட்டில் அருளிச் செய்யப்பட்ட காளியவ்ருத்தாந்தந்தன்னையே மீண்டும் இப்பாட்டால் அருளிச்செய்வானென் என்னில்; மற்ற சத்ருக்களிற்காட்டில் காளியன் மிகக் கொடியனாதலால் அவன் கொழுப்பையடக்கின உபகாரஸ்ம்ருதி, அதனை ஒருகாற்சொல்லி நிற்கவொட்டிற்றில்லை யெனக்கொள்க. சகடம், பூதனை முதலிய தீப்பப்பூடுகள் கண்ணபிரானொருவனுக்கே தீங்குவிளைக்கக் கருத்துக்கொண்டன; காளியன் அங்ஙனன்றிக்கே, தான் கிடந்த பொய்கையை அணுகின ஸ்தாவர ஜங்கமாதிகளெல்லாம் தன்விஷத்தின் அழலாலேபட்டு விழும்படி ஓரூர்க்கடங்கத் தீங்குசெய்து போந்தமையால் இவனது கொடுமை பேச்சுக்கு நிலமன்றே. ... ... ... ... (எ)

**தார்க்கிளந் தம்பிக் கரசீந்து தண்டகம்**
**நூற்றவள் சொற்கொண்டு போகி நுடங்கிடைச்**
**சூர்ப்பண காவைச் செவியொடு மூக்கவள்**
**ஆர்க்க வரிந்தானைப் பாடிப்பற அயோத்திக் கரசனைப் பாடிப்பற. (௮)**

*தார்க்கு - மாலையிட்டு ராஜ்யம் நிர்வஹிக்கைக்கு*
*இள - (தகுந்திராத) இளம்பருவத்தையுடையனான*
*தம்பிக்கு - பரதாழ்வானுக்கு*
*அரசு ஈந்து - (அடிசூடுகையாகிற) அரசைக்கொடுத்து,*
*நூற்றவள் - (இராமனைக் காட்டுக்குச்செலுத்தக்கடவோம் என்று) எண்ணங்கொண்ட கைகேயியினுடைய*
*சொல் கொண்டு - சொல்லை ஏற்றுக்கொண்டு*
*தண்டகம் - தண்டகாரண்யத்துக்கு*
*போகி - எழுந்தருளி*
*(அவ்விடத்தில்)*
*நுடங்கு இடை - துவண்ட இடையை உடையளான*
*சூர்ப்பணகாவை - சூர்ப்பணகையினுடைய*
*செவியொடு மூக்கு - காதையும்மூக்கையும்*
*அவள் ஆர்க்க அரிந்தானை - அவள் கதறும்படி அறுத்த இராமபிரானை*
*பாடிப்பற—;*
*அயோத்திக்கு அரசனை பாடிப்பற—.*

**குறிப்பு:**—கீழ் "*முடியொன்றி*" என்ற ஆறும்பாட்டிற் கூறியதை இங்கு, "*தார்க்கிளந்தம்பிக்கரசீந்து*" என்று அநுபாஷித்தபடி. "அடிசூடுமரசையல்லால் அரசாகவெண்ணேன் மற்றரசுதானே."—இனி, ஈந்து என்பதை எச்சத்திரிபாக்கி, கொடுக்க என்னும் பொருளதாகக்கொண்டு, கைகேயின்சொற்படி பரதாழ்வான் ராஜ்யம் நிர்வஹிக்கக்கடவன் என்று திருவுள்ளம்பற்றி [ராஜ்யத்தை அவனுக்குக் கொடுப்பதற்காக]க் காட்டுக்கெழுந்தருளி என்றுரைப்பாருமுளர். தார்க்குத் தகாத தம்பிக்கு என்ன வேண்டியிடத்து, "*தார்க்கிளந்தம்பிக்கு*" என்றது—காரணங்கூறியவாற்றாற் காரியத்தைக் குறித்தவாறாம். [காரியம்—தகாமை; காரணம்—இளமை.] நூற்றவள்—கெட்ட எண்ணமுடையவள் என்பது, கருத்து.

[நுடங்கிடை இத்யாதி.] ஶூர்பணகா என்றவடசொல், சூர்ப்பம் நகம் என்று பிரிந்து, முறம்போன்ற (வடிவமுள்ள) நகங்களை யுடையவள் என்று பொருள்படும். அது, அவளுக்கு வடிவம்பற்றி வைக்கப்பட்ட காரணக்குறியாகிய இயற்பெயராம். அது பெயராதலால் வடமொழிவிதிப்படி, சூர்ப்பணகா என நிலைமொழியின் ரகாரத்தை நோக்கி வருமொழியின் நகாரம் ணகாரமாகத்திரியும்; 'ராமாயணம்' 'நாராயணன்' என்பவற்றிற்போல. அங்ஙனமாகாமல் சூர்ப்பநகா என்று நிற்கும்போது பெயராகாது தன்மை குறிக்கிற மாத்திரமாம்.

சூர்ப்பணகை—பிரமபுத்திரராகிய புலஸ்திய முனிவருடைய குமாரராகிய விச்ரவஸ்ஸினது இரண்டாம்மனைவியான கேகஸியின் வயிற்றில் ராவண கும்பகர்ணர்களுக்குப்பின் விபீஷணனுக்கு முன்பிறந்தவள். இவளை ராவணன் காலகையென்பவளுடைய மக்களாகிய காலகேயருள் ஒருவனான வித்யுஜ்ஜிஹ்வ னென்னும் அசுரனுக்கு மணஞ்செய்து வைத்திருந்தான்;

பின்பு ராவணன் திக்விஜயம் செய்கின்றபொழுது அசுமநகரத்திற் புகுந்து அங்கிருந்த காலகேயரைப் போர்செய்து அழிக்கையில் வித்யுஜ்ஜிஹ்வனும் ராவணனாற் கொல்லப்பட்டதனால், கணவனை இழந்த சூர்ப்பணகை ராவணன்காலில் விழுந்து மிகப்புலம்பிப் பலவாறு முறையிட, அவன் அவட்கு வெகுஸமாதாநங்கூறிக் கோபந்தணித்து, தண்டகாரணியத்தைச்சார்ந்த ஜநஸ்தாநமென்றவிடத்தில் ஒருராஜ்யமுண்டாக்கி அதில் அவளை மேன்மையோடிருக்கச் சொல்லி, தூஷணனென்ற ஸேநாபதிக்கு உட்பட்டதொரு பெருஞ்சேனையையும், தனது தாயினுடன் பிறந்தவள் மகனான கரனையும் அவளுக்கு உதவியாக இருந்து அவளிட்ட கட்டளைப்படி நடக்குமாறு நியமித்து, அங்கு அவள் யதேச்சையாகத் திரியுமாறு அனுப்பிவிட்டான். அங்ஙனமே அவ்விடத்திற்குடியேறி அங்குள்ளவநவாஸிகளை வருத்திக்கொண்டு உல்லாஸமாகத் திரியுந்தன்மையுள்ள இவள், ஸ்ரீராமலக்ஷ்மணர் ஸீதையோடு பஞ்சவடி ஆச்ரமத்தில் வஸிக்கின்றபொழுது ஒருநாள் இராமபிரானது திருமேனியழகைக்கண்டு பெருங்காதல் கொண்டு அழகியவடிவமெடுத்து அப்பெருமானருகில் வந்துசேர்ந்து 'என்னைநீர் மணம்புணரவேண்டும்' என்று வேண்ட, அவர் 'எனக்கு ஒருத்தி இங்கே உளள்; தனியாயிருக்கின்ற என்தம்பியை வேண்டிக்கொள்' என்ன; அவளும் லக்ஷ்மணனிடத்துச்சென்று வேண்ட, அதற்கு அவர் சிலகாரணங்களைக்கூறி மறுக்க, பின்பு "அவள் ஸீதையைக் கொன்றுவிட்டால் இராமன் என்னை மணம்புரிதல் கூடும்" என்றெண்ணிப் பிராட்டியைப் பிடித்துண்பதாகப் பதறினபடியைக் கண்ட ஸ்ரீராமன் இளையபெருமாளை நோக்கி 'நீர் இவளுடைய அங்கங்களைப் பங்கப்படுத்தும்' என்றுநியமிக்க, அங்ஙனமே அவர் ஓடிவந்து அவளை மறித்து அவளது மூக்கு காது முதலிய சில உறுப்புக்களை அறுத்திட்டான் என்ற வரலாறு அறிக. வேண்டினபடி வடிவங்கொள்ளும் ஆற்றல் அரக்கரிலும் அரக்கியரிலும் பலர்க்குத் தபோபலத்தாலும் மந்த்ரபலத்தாலும் உண்டென்பது இங்கு உணரத்தக்கது. இவள், லக்ஷ்மியைத்தியானித்து ஒரு மந்திரத்தை ஜபித்து நினைத்தபடி அழகியவடிவம்பெற்றனள் என்பர் கம்பர்.

" [illegible] " என்றபடி—இங்ஙனம் இவளை அங்கபங்கப்படுத்தியது இராமபிரானது திருத்தம்பியான இளையபெருமாளது செய்கையாயினும், இப்பாட்டில் அதனைப் பெருமாள்மேல் ஏற்றிச் சொன்னது, இராமபிரானது கருத்துக்கு ஏற்ப அவன்கட்டளையிட்டபடி இவன்செய்தனனாதலின், ஏவுதற்கருத்தாவின் வினையாதல்பற்றி யென்க. அன்றியும், இளையபெருமாளும் திருமாலினது திருவவதாரமே [illegible]லால், அங்ஙனஞ் சொல்லத்தட்டில்லை. மற்றும், " [illegible] " என்றபடி இராமனுக்கு லக்ஷ்மணன் வலத்திருக்கையெனப்படுதலா[illegible], அங்ஙனம் கையாகிற லக்ஷ்மணனது செயல் இராமன்மேல் ஒற்றுமை [illegible]நயம் பற்றி ஏற்றிச்சொல்லுதல் தகுதி[illegible]. "அரக்கி மூக்கைநீக்கிக் கரனோடு தூடணன்றனுயிரைவாங்கி" என்று குலசேகராழ்வாரும், "தன்சீதைக்கு, நேரா

வனென்றோர் நிசாசரிதான்வந்தாளைக், கூரார்ந்தவாளாற் கொடிமூக்குங் காதிரண்டும், ஈராவிடுத்து" என்று திருமங்கையாழ்வாரும், "அரக்கி மூக்கினொடு வார்காது மீர்ந்தார்வரை" என்று பிள்ளைப் பெருமாளையங்காரும் அருளிச்செய்துள்ளமை காண்க. "தம்முடைய கையாலேயிறே தண்டிப்பது;......தம்முடைய தோளாயிருக்கிற இளையபெருமாளை இடுவித்துத் தண்டிப்பித்தார்" என்பது—பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செயல்.

"ஆவீறையும்" என்ற நன்னூல் விதிப்படி 'சூர்ப்பணகை' எனத்திரிய வேண்டியிருக்க, அங்ஙனந்திரியாதது * புதியனபுகுத லென்னலாம்; "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல காலவகையினானே" என்றார் நன்னூலார். ... ... ... ... ... ... (அ)

மாயச் சகட முதைத்து மருதிறுத்
தாயர்க ளோடுபோ யாநிரை காத்தணி
வேயின் குழலூதி வித்தக ளாய்நின்ற
ஆயர்க ளேற்றினைப் பாடிப்பற ஆநிரை மேய்த்தானைப் பாடிப்பற. (௯)

மாயம்—க்ருத்ரிமமான [அஸுராவிஷ்டமான.
சகடம்—சகடத்தை
உதைத்து—(திருவடிகளால்) உதைத்துத் [தள்ளியும்
மருது—இரட்டைமருதமரங்களை
இறுத்து—இற்றுவிழும்படிபண்ணியும்,
(பின்பு)
ஆயர்களோடு—இடையர்களோடுகூட
போய்—(காடேறப்,போய்
ஆநிரை—பசுக்களின்திரளை
காத்து—ரக்ஷித்தும்
அணி—அழகிய
வேயின் குழல்—வேய்ங்குழலை
ஊதி—ஊதியும்
(இப்படிப்பட்ட செயல்களாலே)
வித்தகன் ஆய் நின்ற—விஸ்மயநீயனாய நின்ற
ஆயர்கள் ஏற்றினை—இடையர்க்குத்தலைவனான கண்ணபிரானை
பாடிப்பற—;
ஆநிரை மேய்த்தானை பாடிப்பற—;

குறிப்பு:—இப்பாட்டிற் கூறப்பட்டுள்ள வரலாறுகள் கீழ்ப்பலவிடங்களில் எழுதப்பட்டுள்ளமை அறிக. வேயின் குழல்—வேயினால் [மூங்கிலினால்] செய்யப்பட்டகுழல்; முரளி. ... ... ... ... (௯)

காரார் கடலை யடைத்திட் டிலங்கைபுக்
கோராதான் பொன்முடி யொன்பதோ டொன்றையும்
நேரா வவன்றம்பிக் கேநீ ளரசீந்த
ஆரா வமுதனைப் பாடிப்பற அயோத்தியர் வேந்தனைப் பாடிப்பற. (௧0)

கார் ஆர் கடலை—கருமைபொருந்தியகடலை
அடைத்திட்டு—(மலைகளினால்) அடைத்துவிட்டு [ஸேதுகட்டி]
(அந்த ஸேதுவழியாக)
இலங்கை புக்கு—லங்கையிற்புகுந்து
(அவ்விடத்தில்
ஓராதான்—(தன்வீரப்பாட்டை) மதியாத [ராவணனுடைய
பொன் முடி ஒன்பதோடு ஒன்றையும்—அழகிய தலைகள் பத்தையும்
நேரா—அறுத்துப்போகட்டு

| | |
|---|---|
| அவன் தம்பிக்கே—அவனது தம்பியான [ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கே | ஆரா அமுதனை—எவ்வளவு உண்டாலும் த்ருப்தியைத்தாராத அம்ருதம்போல் இனியனான இராமபிரானை பாடிப்பற—; |
| நீள் அரசு ஈந்த } நெடுங்காலம்நடக்கும்படியான ஆதிராஜ்யத்தை அளித்தரு [ளின | அயோத்தியர்—அயோத்தியிலுள்ளார்க்கு வேந்தனை—அரசனானவனை பாடிப்பற—. |

குறிப்பு:—லங்கைக்குச் சென்று ராவணனை முடிப்பதாகத் திருவுள்ளம் பற்றி வாநரஸேனையுடனே கடற்கரையை அடைந்த இராமபிரான், கடலைக் கடக்க உபாயஞ்சொல்ல வேண்டுமென்று கடலரசனாகிய வருணனை வேண்டி, தர்ப்பசயநத்திலேபடுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக் கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது மேன்மையைக்கருதாமல் உபேக்ஷயாயிருந்துவிடவே ஸ்ரீராமன் அதுகண்டு சீற்றங்கொண்டு, அனைவரும் நடந்தே செல்லும்படி கடலைவற்றச் செய்வேனென்று ஆக்நேயாஸ்திரத்தைத் தொடுக்கத் தொடங்க, அவ்வளவிலே வருணன் அஞ்சிநடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து, கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு ஒடுங்கிநிற்கப் பின்பு அதில் மலைகளினால் அணைகட்டி இலங்கையினுட்புக்கு அமர்க்களத்தில் ராவணனைத்தலை யழித்து, ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு முடிசூட்டியருளின வரலாறு அறிக.

நேரா—'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்த காலவினையெச்சம்; நேர்ந்து [அறுத்து] என்றவாறு. நீளரசு—"என்னிலங்கு நாமத்தளவு மரசென்ற" என்றதை நினைக்க. ... ... (கo)

நந்தன் மதலையைக் காகுத் தனைநவின்
றுந்தி பறந்த வொளியிழை யார்கள்சொல்
செந்தமிழ்த் தென்புது வைவிட்டு சித்தன்சொல்
ஐந்தினோ டைந்தும்வல் லார்க்கல்ல லில்லையே. (கக)

| | |
|---|---|
| நந்தன் மதலையை—நந்தகோபன்குமாரனை [கண்ணபிரானையும் | தென் புதுவை விட்டு சித்தன் சொல் } அழகிய ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வார் அருளிச்செய்த |
| காகுத்தனை—இராமபிரானையும் | ஐந்தினோடு ஐந்தும்—க்ருஷ்ணாவதாரவிஷயமானஐந்தும், ராமாவதார விஷயமானஐந்துமாகிய இப் பத்துப்பாசுரங்களை |
| நவின்று—(ஒருவர்க்கொருவர் எதிரியாய் [நின்று) சொல்லி | வல்லார்க்கு—ஓதவல்லவர்களுக்கு |
| உந்தி பறந்த—உந்திபறக்கையாகிற லீலாரஸங்கொண்டாடின | அல்லல் இல்லை — துன்பமொன்றுமில்லை [யாம். |
| ஒளி இழையார்கள்—அழகிய ஆபரணமணிந்த ஆய்ப்பெண்களிருவருடைய | |
| சொல் — சொல்லை, | |
| செம் தமிழ்—அழகிய தமிழ்ப்பாஷையாலே | |

குறிப்பு:—இதனால், இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு. ... ... ... ... ... (கக)

அடி:—என்னாதன் என்வில் உருப்பிணி மாற்று பஞ்சவர் மூடி காளியன் தார் மாயகாரர் நந்தன் நெறிந்த.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று

## பத்தாந்திருமொழி:

# நெறிந்தகருங்குழல்.



**அவதாரிகை:**—பஞ்சவடியில்தனித்திருந்த பிராட்டியை இராவணன் மாயவகையி ஞல் லங்கைக்குக் கொண்டுபோய் அசோகவநிகையிற் சிறைவைத்திட, பின்பு இராம பிரானால் தூதுவிடப்பட்ட சிறியதிருவடி அவ்விடத்தேவந்து பிராட்டியின் முன் நின்று, பல அடையாளங்களைச்சொல்லித் தான் ராமதூதனென்பதை அவள்நம்புமாறு தெரிவித்துப் பின்பு திருவாழிமோதிரத்தையுங் கொடுத்து அவள் திருவுள்ளத்தை மிகவும் மகிழ்வித்தபடியை ஆழ்வார்அநுஸந்தித்து, அதில்தமக்குண்டான ஆதராதிசயத் தாலே, அவன் அப்போது விண்ணப்பஞ்செய்த அடையாளங்களையும் திருவாழிமோதி ரங் கொடுத்தபடியையும், அது கண்டு அவள் மகிழ்ந்தபடியையு மெல்லாம் அடைவே பேசி இனியராகிறுர், இத்திருமொழியில்.

நெறிந்தகருங் குழல்மடவாய் நின்னடியேன் விண்ணப்பம்
செறிந்தமணி முடிச்சனகன் சிலையிறுத்து நினைக்கொணர்ந்த
தறிந்தரசு களைகட்ட வருந்தவத்தோ னிடைவிலங்கச்
செறிந்தசிலை கொடுதவத்தைச் சிதைத்ததுமோ ரடையாளம். (௧)

நெறிந்த கருங் குழல் — நெறிப்புக்கொண்ட கரிய கூந்தலையுடையவளும்
மடவாய்—மடப்பத்தையுடையவளுமான [பிராட்டீ!
நின் அடியேன்—உமது அடியவனுன என் [னுடைய
விண்ணப்பம்—விஜ்ஞாபநம் (ஒன்றைக் கேட்டருளவேணும்):—
செறிந்த—நெருங்கின
மணி—ரத்நங்களையுடைய
முடி—கிரீடத்தைஅணிந்த
சனகன்—ஜநகமஹாராஜன்
(கந்யாசுல்கமாக ஏற்படுத்தின)
சிலை—ருத்ரதநுஸ்ஸை
இறுத்து—முறித்து
நினை—உம்மை [பிராட்டியை]
கொணர்ந்தது—மணம்புரிந்துகொண்டதை
அறிந்து—தெரிந்துகொண்டு,
அரசு களை கட்ட - (துஷ்ட) ராஜாக்களை (ப்பயிருக்கு) க்களை களைவதுபோலழித்த
அரு தவத்தோன் - அரியதவத்தையுடைய [பரசுராமன்
இடை விலங்க - நடுவழியில்தடுக்க
செறிந்த சிலை கொடு — (தனக்குத்) தகுந்த (அப் பரசுராமன்கையிலிருந்த [விஷ்ணு) தநுஸ்ஸை வாங்கிக்கொண்டு
தவத்தை - (அப்பரசுராமனுடைய) தபஸ் [ஸை
சிதைத்ததும் - அழித்ததும்
ஓர் அடையாளம்—ஒரு அடையாளமாகும்.

**குறிப்பு.**—இராமபிரான் பிராட்டியை மணம்புரிந்து கொண்டபடியை யும், வழியிடையிற் பரசுராமனை வென்றவகையையும் இதனால் அடையாள மாகக் கூறுகின்றனன் அநுமான். செம்பட்ட மயிராயிராமல் கறுத்துச் சுருண்டிருக்கும் மயிரையுடைமையே கூந்தலுக்குச் சிறப்பாதலால் "நெறிந்த கருங்குழல்" என்றது; இது, முன்னிருந்தபடியையிட்டுச் சொல்லியவாறு. மடப்பமாவது—மனத்திற்கொண்டது விடாமை; சிறையிருக்கும் போதும் பிராட்டி பெருமாளையல்லது மற்றொருவனை நெஞ்சிற்கொண்டவளன்றிறே. பரசுராமனிடத்திலிருந்து வாங்கியதாயினும் வைஷ்ணவ தநுஸ்ஸாகையா லே "செறிந்தசிலை" என்கிறது. பிராட்டியின் திருவுள்ளத்தில் சங்கைநீங்கு

மளவும் பல அடையாளங்கள் சொல்லும்படி நினைத்திருப்பதனால் "ஓரடையாளம்" என்கிறான். விலங்க-விலக்க எனப் பிறவினைப்பொருளில்வந்த தன்வினை; ஈஜஹ-ாவிதணிவ் என்பர்வடநூலார்.

[அரசுகளைகட்ட இத்யாதி.] பண்டொரு காலத்தில் கார்த்தவீர்யார்ஜுநன் ஸேனையுடனே காட்டிற்சென்று வேட்டையாடிப் பரசுராமனது தந்தையான ஜமதக்நி முனிவரது ஆச்ரமத்தையடைந்து அவரநுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில், அவரிடமிருந்த ஹோமதேநு அவர்க்கு எளிதிற் பல வளங்களையுஞ் சுரந்ததுகண்டு அப்பசுவின் கன்றை அவரநுமதியின்றி வலியக்கவர்ந்து செல்ல, அதனையறிந்த பரசுராமன் சீறிச்சென்று அக்கார்த்தவீர்யனுடன் போர்செய்து அவனைப் பதினொரு அக்ஷௌஹிணி ஸேனையுடனே நிலைகுலைத்து அவனது ஆயிரந்தோள்களையும் தலையையும் தனது கோடாலிப்படையால் வெட்டி வீழ்த்தி வெற்றிகொண்டு, தன்தந்தையைக்கறுவிக்கொன்ற அவன் குமாரர்களையும் கொன்று, அதனாலேயே க்ஷத்ரியவம்சமுழுவதன் மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள்பலரையும் இருபத்தொருதலைமுறை பொருது ஒழித்திட்ட வரலாறு அறிக. ... ... ... ... ... ... (க)

அல்லியம்பூ மலர்க்கோதா யடிபணிந்தேன் விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே
எல்லியம்போ தினிதிருத்த லிருந்ததோ ரிடவகையில்
மல்லிகைமா மாலைகொண்டங் கார்த்ததுமோ ரடையாளம். (உ)

அல்லி - அகவிதழ்களையுடைய
அம் பூ-அழகியபூக்களால் தொடுக்கப்பட்ட
மலர்க் கோதாய் - பூமாலைபோன்றவளே!
அடி பணிந்தேன் - (உமது) திருவடிகளில் [வணங்கியநான்
விண்ணப்பம் - விஜ்ஞாபநமொன்றை
சொல்லுகேன் - (உம்மிடத்தில்) சொல்லு [வேன்;
துணை மலர் கண் - ஒன்றோடொன்று ஒத்துத் தாமரைமலர்போன்ற கண்க [ளையும்
மடம்-மடப்பத்தையுமுடைய
மானே-மான்போன்றவளே!
கேட்டருளாய் - (அதைத்) திருச்செவிசா [த்தவேணும்;
அம் எல்லி போது - அழகிய இராத்திரி [வேளையில்
இனிது இருத்தல் - இனிமையான இருப் [பாக
இருந்தது - இருந்ததான
ஓர் இடம் வகையில் - ஓரிடத்திலே
மல்லிகை - மல்லிகைப்பூவினால் தொடுக்கப் [பட்ட
மா மாலை கொண்டு - சிறந்த மாலையினால்
ஆர்த்ததும் - (நீர் இராமபிரானைக்) கட்டி [யதும்
ஓர் அடையாளம்—.

குறிப்பு:—இதனால், அயோத்தியிலிருந்தகாலத்தில் பிராட்டியும் பெருமாளும் ராத்ரி வேளையில் ஏகாந்தமான இடத்தில் உல்லாஸமாக இருக்கையில், ப்ரணய ரோஷத்தினால் பிராட்டி பெருமாளை மல்லிகைமாலையைக் கொண்டு கட்டியதை அநுமான் அடையாளமாகக் கூறுகின்றான்; இது மிகவும் அந்தரங்கமாக நடந்திருக்குமாதலால், இது மற்ற அடையாளங்களைப் போலன்றிச் சிறந்த அடையாளமாகுமென்க. வநவாஸஞ்சென்றமை இன்

னும் கூறப்படாமையால், இச்செயலை நாட்டிலிருந்தபோது நிகழ்ந்ததாகக் கொள்வது பொருந்துமேயன்றி, வநவாஸகாலத்து நிகழ்ந்ததாகக்கொள்ளுதல் பொருந்தாதென்க. முதலடியில் பிராட்டிக்கு மலர்மாலையுவமை—உடம்பின் இளைத்த தன்மையினும், மென்மையினும், துவட்சியினு மென்க. ஸம்போகாநுபவத்துக்கு ஏகாந்தமானகாலமாதலால் எல்லியம்போது எனப்பட்டது. ஈற்றடியில், அங்கு—அசை. ... ... ... (உ)

கலக்கியமா மனத்தனளாய்க் கைகேசி வரம்வேண்ட
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனும் மறாதொழியக்
குலக்குமரா காடுறையப் போவென்று விடைகொடுப்ப
இலக்குமணன் றன்னொடுமங் கேகியதோ ரடையாளம். (௩)

கைகேசி - கைகேயியானவள்
கலக்கிய மா மனத்தனள் ஆய் } (மந்தரையினால்) கலக்கப்பட்ட சிறந்த மனத்தையுடையவளாய்
வரம் வேண்ட—(தசரதர்முன்தனக்குக்கொடுத்திருந்த) வரங்களின்பயனைக்கேட்க
மலக்கிய - (அக்கைகேயியின் வார்த்தையால்) கலக்கமடைந்த
மா மனத்தனன் ஆய் } சிறந்த மனத்தையுடையவனாய்
மன்னவனும்—தசரதசக்ரவர்த்தியும்
மறாது - மறுத்துச்சொல்லமுடியாமல்
ஒழிய - வெறுமனே கிடக்க,
(அந்தஸந்தர்ப்பத்தில் கைகேயியானவள்,)
குலம் குமரா - "உயர்குலத்திற்பிறந்தகுமாரனே!
காடு உறைய - காட்டிலே (பதினான்குவருஷம்) வஸிக்கும்படி
போ என்று - போவாய்"என்றுசொல்லி
விடை கொடுப்ப - விடைகொடுத்தனுப்ப
அங்கு - அக்காட்டிலே
இலக்குமணன் தன்னொடும் } லக்ஷ்மணனோடுகூட
ஏகியது - (இராமபிரான்) சென்றடைந்ததும்
ஓர் அடையாளம்—.

குறிப்பு:—திருப்பாற்கடலை மந்தரமலை கலக்கினாற்போலப் பரிசுத்தமாயிருந்த கைகேயியின் மனத்தை மந்தரையென்னுங் கூனி கலக்க, கைகேயியானவள் தான் மனங்கலங்கியதுபோலவே தசரதனையும் ராமவிரஹத்தை நினைந்து கலங்கச்செய்து, அப்போது ஸுமந்த்ரனைக்கொண்டு தசரதர் முன்னிலையில் இராமபிரானை வரவழைத்துக் காட்டுக்கனுப்ப, அப்பிரான் லக்ஷ்மணனோடு காட்டுக்குப் புறப்பட்டதும் ஓரடையாளமென்பதாம். இவ்வரலாற்றின் விவரத்தை "மாற்றுத்தாய் சென்று" என்ற பாட்டின் குறிப்புரையிற் காண்க. இலக்குமணன்றன்னொடும் என்றது-ஸீதையாகிய உம்மோடு என்பதற்கும் உபலக்ஷணமாம். கைகேசி—கைகெயீ; யகரசகரப்போலி. [மறாதொழிய] ஸத்யவாதியாதலால் மறுக்கமாட்டிற்றிலன். ... (௩)

வாரணிந்த முலைமடவாய் வைதேவீ விண்ணப்பம்
தேரணிந்த வயோத்தியர்கோன் பெருந்தேவீ கேட்டருளாய்
கூரணிந்த வேல்வலவன் குகனோடுங் கங்கைதன்னில்
சீரணிந்த தோழமை கொண்டதுமோ ரடையாளம். (௪)

வார் அணிந்த—கச்சை அணிந்த
முலை - முலையையும்
மடவாய் - மடப்பத்தையுமுடைய பிராட்டி
வைதேவீ-விதேஹவம்சத்திற்பிறந்தவளே
விண்ணப்பம் - ஒருவிஜ்ஞாபகம்; [மான
தேர் அணிந்த - தேர்களாலே அலங்கார
அயோத்தியர் கோன் } அயோத்தியிலுள்ளார்க்கு அரசனுக்குரிய ஸ்ரீரா [மபிரானது
பெருந்தேவீ - பெருமைக்குத்தகுந்ததேவி [யே!
கேட்டருளாய் - (அவ்விண்ணப்பத்தைக்) [கேட்டருளவேணும்;
கூர் அணிந்த வேல்வலவன் } கூர்மைபொருந்தியவேலா யுதத்தில் வல்லவனாகிய
குகனோடும் - குஹப்பெருமாளோடுகூட
கங்கை தன்னில் - கங்கைக்கரையிலே
சீர் அணிந்த தோழமை } சிறப்புப்பொருந்திய ஸ்நே ஹத்தை
கொண்டதும் - பெற்றதும்
ஓர் அடையாளம்—.

குறிப்பு:—இராமபிரான் ஏகதாரவ்ரதமுடையவனாதலால் அப்பெருமானுக்குச் சிறுதேவியர்பலரும் பெருந்தேவி யொருத்தியுமில்லை யாதலால், "பெருந்தேவி" என்பதற்கு, பெருமைக்குத்தக்க தேவியென வுரைக்கப்பட்டது. வைதேவி-வைதேஹீ என்றவடசொல்திரிபு.

இராமபிரான் மனைவியுடனும் தம்பியுடனும் அயோத்தியைநீங்கிக் கங்கைத்துறை சேர்கையில், கங்கையில் ஓடம் விடுபவனும், ஆயிரம் ஓடத்திற்குத்தலைவனும், கங்கைக்கரையிலுள்ள சிருங்கிபேரபுரத்திற்கு அதிபதியும், வேடர்தலைவனுமான குஹப்பெருமாள் இராமனைக்காணும்பொருட்டுக் காணிக்கைகளுடன் அருகில்வந்து சேர்ந்து வணங்கிநிற்க, ஸ்ரீராமன் அவனது பக்திபாரவச்யத்தைக்கண்டு மகிழ்ந்து "என்மனைவியான இந்தச் சீதை உன் தோழி, என்தம்பியான இலக்குமணன் உன்தம்பியே, நீ எனது உயிர்த்தோழன்; இதுவரை நாங்கள் உடன்பிறந்தோர் நால்வராயிருந்தோம், இன்று உன்னுடன் ஐவராயினோம்" என்று ஒற்றுமை நயந்தோன்றக் கூறினமையை இதனால் அடையாளமாகக் கூறினன். "ஏழையேதலன் கீழ்மகனென்னாதிரங்கி மற்றவற்கின்னருள் சுரந்து, மாழைமான்மடநோக்கியுன்றோழி உம்பி எம்பியென்றொழிந்திலையுகந்து, தோழன்நீயெனக்கிங்கொழியென்ற சொற்கள்" என்ற பெரியதிருமொழிகாண்க. "சீரணிந்த தோழமையைக்கொண்டதும்" என்றுஞ்சிலர் பாடங்கூறுவர். ... ... (சு)

மானமரு மென்னோக்கி வைதேவீ விண்ணப்பம்
கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்த காலத்துத்
தேனமரும் பொழிற்சாரற் சித்திரகூ டத்திருப்பப்
பான்மொழியாய் பரதநம்பி பணிந்ததுமோ ரடையாளம். (ரு)

மான் அமரும் - மானையொத்த
மெல் நோக்கி - மென்மையான கண்களை [யுடையவளான
வைதேவீ - பிராட்டியே!
பால் மொழியாய் - பால்போல் இனியபே [ச்சையுடையவளே!
விண்ணப்பம்—;
கான் அமரும் - காட்டில்பொருந்திய
கல் அதர் போய்—கல்நிறைந்தவழியிலே [போய்
காடு உறைந்த காலத்து } காட்டில்வஸித்தபோது

தேன் அமரும் பொழில் } வண்டுகள்பொருந்திய சோலைகளையுடைய
சாரல் - தாழ்வரையோடுகூடிய
சித்திரகூடத்து - சித்திரகூடபர்வதத்தில்
இருப்ப - நீங்கள் இருக்கையில்
பரதன் நம்பி - பரதாழ்வான்
பணிந்ததும் - வந்துவணங்கியதும்
ஓர் அடையாளம்—.

குறிப்பு:—பெருமாள் காட்டுக்கெழுந்தருளினபடியை அறிந்த பரதாழ்வான் எப்படியாயினும் அவரைமீட்டு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வரவேணுமெனக்கருதிப் பரிவாரங்களுடன் புறப்பட்டுச் சித்திரகூடத்தில்வந்து பெருமாள்திருவடிகளில் ப்ரபத்திபண்ணினதை அடையாளமாகக் கூறியவாறு. தன் இனத்தைப்பிரிந்து செந்நாய்களின் திரளால் வளைக்கப்பட்டு அவற்றின்நடுவே நின்று மலங்க மலங்க விழிப்பதொரு மான்போடு-அநுகூல ஜனங்களைப்பிரிந்து கொடிய ராக்ஷஸிகணங்களாற் சூழப்பட்டு அவர்களுடைய மருட்டலால் மனங்கலங்கியிருக்கும் பிராட்டிக்கு ஏற்ற உவமையாம். ... ... ... ... ... (௫)

சித்திரகூ டத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய வனைத்துலகுந் திரிந்தோடி
வித்தகனே யிராமாவோ நின்னபய மென்றழைப்ப
அத்திரமே யதன்கண்ணை யறுத்ததுமோ ரடையாளம். (௬)

சித்திரகூடத்து-சித்திரகூட பர்வதத்தில்
இருப்ப – (நீங்களிருவரும்) ரஸாநுபவம் (பண்ணிக்கொண்டிருக்கையில்
சிறு காக்கை-சிறிய காக்கையின் வடிவு [கொண்டுவந்த ஜயந்தன்
முலை தீண்ட – (உமது) திருமுலைத்தடத் [தைத்தீண்ட
(அதனாற் சீற்றமுற்ற ஸ்ரீராமன்)
அத்திரமே கொண்டு } ப்ரஹ்மாஸ்திரத்தைத் தொடுத்து
எறிய–பிரயோகிக்க,
(அக்காகம் அதற்குத் தப்புவதற்காக)
அனைத்து உலகும்–உலகங்களிலெல்லாம்
திரிந்து ஓடி–திரிந்து ஓடிப்போய்
(தப்ப முடியாமையால் மீண்டு இராமபிரானையே அடைந்து)
வித்தகனே–"ஆச்சரியமான குணங்களை [யுடையவனே!
இராமா - இராமனே!
ஓ - ஓ!!
நின் அபயம்–(யான்) உன்னுடைய அடை [க்கலம்"
என்று அழைப்ப–என்று கூப்பிட,
அத்திரமே- (உயிரைக்கவரவேணுமென்று [விட்ட அந்த) அஸ்த்ரமே
அதன் கண்ணை - அந்தக் காகத்தின் ஒரு [கண்ணை மாத்திரம்
அறுத்ததும் - அறுத்துவிட்டதும்
ஓர் அடையாளம்—.

குறிப்பு:—வநவாஸ காலத்தில் சித்திரகூடமலைச்சாரலிலே பெருமாளும் பிராட்டியும் ஏகாந்தமாக இருக்கிற ஸமயத்தில், இந்திரன்மகனான ஜயந்தன் பிராட்டியினமுலைக்கண்டு மயங்கி அவளைத் தான் ஸ்பர்சிக்க வேண்டுமென்னுந் தீயகருத்தினனாய்த் தேவவேஷத்தை மறைத்துக் காகவேஷத்தைப் பூண்டுகொண்டு வந்து, பிராட்டியின் மடியிலே பெருமாள் பள்ளிகொண்டருளுகையில் தாயென்றறியாதே பிராட்டியின் திருமார்பினிற் குத்த, அவ்வளவிலே பெருமாள் உணர்ந்தருளி மிகக் கோபங்கொண்டு ஒரு தர்ப்பைப்புல்லையெடுத்து அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்து அதனை அந்தக் காகத்தின்மேல் மந்தகதியாகச் செலுத்த, அக்காகம் அந்த அஸ்த்ரத்துக்குத் தப்ப

வழிதேடிப் பலவிடங்களிலும் ஓடிச்சென்று சேர்ந்த விடத்தும் ஒருவரும் ஏற்றுக் கொள்ளாமையாலே மீண்டும் பெருமாளையே சரணமடைய, அப்பெருமான் அருள்கொண்டு, அக்காகத்துக்கு உயிரைக்கொடுத்து அந்த அஸ்திரம் வீண்படாமல் காகத்தின் ஒருகண்ணை அறுத்தவளவோடு விடும்படி செய்தருளினன் என்றவரலாறு இங்கு அடையாளமாகக் கூறப்பட்டது.

ஸ்ரீ ராமாயணத்தில் இந்த வ்ருத்தாந்தம் திருவடிக்குப் பிராட்டியருளிச் செய்வதாகக் காணப்படுகின்றது; இங்குப் பிராட்டிக்குத் திருவடி கூறுவதாகச் சொல்லுகிற விது, கல்பாந்தரத்திலாதல், புராணாந்தரத்திலாதல் உண்டென்று கொள்ளக்கடவது. இனி, மற்றும் பலவகைகளாலும் ஸமாதானங் கூறலாம். அத்திரம்—அஸ்த்ரம் என்ற வடசொல் திரிபு. "அத்திரமே"-முதல் ஏகாரம்-இசைநிறை; இரண்டாவது-சிறப்புப் பொருளது. நின் அபயம், யான் அநந்யகதி என்றபடி. .... ... ... ... (௬)

மின்னொத்த நுண்ணிடையாய் மெய்யடியேன் விண்ணப்பம்
பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட
நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம் பிரானேகப்
பின்னேயங் கிலக்குமணன் பிரிந்ததுமோ ரடையாளம். (௭)

மின் ஒத்த—மின்னலைப்போன்ற
நுண் இடையாய் - மெல்லிய இடையையுடையவளே!
மெய் அடியேன்—உண்மையான பக்தனாகிய எனது
விண்ணப்பம்—விண்ணப்பத்தை(க் கேட்டருள வேணும்;)
பொன் ஒத்த—பொன் நிறத்தை ஒத்த(நிறமுடைய)
மான் ஒன்று—(மாரீசனாகிய) ஒருமான்
புகுந்து—(பஞ்சவடியில் நீரிருக்கும் ஆச்ரமத்தருகில்) வந்து
இனிது விளையாட—அழகாக விளையாடாநிற்க,
(அதை மாயமான் என்று இளையபெருமாள் விலக்கவும்)
நின் அன்பின் வழி நின்று—உம்முடைய ஆசைக்குக் கட்டுப்பட்டு நின்று
சிலை பிடித்து—வில்லை யெடுத்துக்கொண்டு
எம்பிரான்—இராமபிரான்
ஏக—(அம்மானைப்பிடித்துக் கொணர்வதாக அதன் பின்னே தொடர்ந்து) எழுந்தருள,
பின்னே—பிறகு
அங்கு—அவ்விடத்தில்
இலக்குமணன்—இளையபெருமாளும்
பிரிந்ததும்—பிரிந்ததுவும்
ஓர் அடையாளம்—.

குறிப்பு:—சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டுச் சீதாபிராட்டியைக் கவர்ந்து செல்லக் கருதிய இராவணனது கட்டளையினால் அவனுக்கு மாமன் முறையான மாரீசன் என்ற ராக்ஷஸன் மாயையினாற் பொன்மானுருவங் கொண்டு தண்டகாரணியத்திற் பஞ்சவடியிலே பிராட்டியின்னெதிரிற் சென்று உலாவுகையில், இளையபெருமாள் இது மாயமானென்று சொல்லவுங் கேளாமல், அப்பிராட்டியின் வேண்டுகோளின்படி அதனைப்பிடிப்பதற்கு இராமபிரான் நெடுந்தூரம் தொடர்ந்து சென்றும் பின்னும் ஓட்டங்காட்டிய அதனை மாயமானென்றறிந்து அம்பெய்து வீழ்த்த, அம்மாரீசன் இறக்கும்போது 'ஹா! ஸீதே! ஹா! லக்ஷ்மண! ஹா!!' என்று இராமபிரான் கதறுவதுபோ

லக் கூப்பிட, அதனைக்கேட்ட ஸீதை, லக்ஷ்மணன் தேற்றவுந் தேறாமல் இராட
பிரானுக்கே ஆபத்து வந்திட்டதென்று பலவாறு இளையபெருமாள் மீத
கடுஞ் சொற்களைச் சொல்ல, உடனே இளையபெருமாள் இராமபிரானுள்ள
இடத்திற்குப் போவதாகச் சீதையை விட்டிட்டுச் சென்றனனென்ற இதுவு
ஓரடையாள மென்பதாம். ... ... ... (எ

மைத்தகுமா மலர்க்குழலாய் வைதேவீ விண்ணப்பம்
ஒத்தபுகழ் வானரக்கோ னுடனிருந்து நினைத்தேட
அத்தகுசீ ரயோத்தியர்கோ னடையாள மிவைமொழிந்தான்
இத்தகையா லடையாள மீதவன்கை மோதிரமே (அ

மை தகு-மைபோல விளங்குகிற [உரிய
மா மலர்-சிறந்தபுஷ்பங்களை அணிவதற்கு
குழலாய்-கூந்தலையுடையவளே !
வைதேவீ-வைதேஹியே!
விண்ணப்பம்:—
ஒத்த புகழ்-"(பெருமாளோடு இன்பத் துன்பங்கள்) ஒத்திருக்கப் பெற்ற வன்" என்ற கீர்த்தியை யுடைய
வானரர் கோன்-வானரங்களுக்கெல்லாந் தலைவரான ஸுக்ரீவ மஹாராஜர்
உடன் இருந்து-(இராமபிரானோடு) கூட [இருந்து
நினை தேட-உம்மைத் தேடும்படி (ஆள்வி டுகையில் என்னிடத்து விசேஷ மாக அபிமானிக்க)

அ தகு சீர்-(பிரிந்த) அந்த நிலைக்குத் த
[தியான குணமுள்
அயோத்தியர் கோன்-அயோத்தியி லுள்ளார்க்கு தலைவரான பெருமாள்
அடையாளம் இவை-இவ்வடையாளங்க
மொழிந்தான்-(என்னிடத்திற்) சொல்லி (ஆதலால்) [ருளினன்
அடையாளம்-(யான் சொன்ன) அடைய
[ளங்க
இ தகையால்-இவ்வழியால் (வந்தன);
(அன்றியும்)
ஈது-இதுவானது
அவன்-அவ்விராமபிரானுடைய
கை மோதிரம்-திருக்கையிலணிந்துகொ
[ளும் மோதிரமாகும்

குறிப்பு:—பெருமாள் உம்மைத் தேடிக்கொண்டு வரும்போது வழியி
ஸுக்ரீவ மஹாராஜனோடு அக்நிஸாக்ஷிகமாகத் தோழமை பூண்டுகொண்
அவ்விருவரும் ஒன்றாக விருந்து ஒவ்வொரு திக்குக்குப் பலகோடிக் கண
கான வானரர்களை உம்மைத் தேடும்படி அனுப்பும்போது ஸுக்ரீவ மஹார
ஜன் என்னிடத்தில் விசேஷ அபிமாநம் வைத்திருப்பதை உணர்ந்து, "இவ
னாலே நமதுகாரியம் கைகூடும்" என்று என்னிடத்தில் இராமபிரான் விசேஷ
கடாக்ஷம் செய்தருளி இவ்வடையாளங்களைச் சொல்லி யனுப்பியதனால், இப்
படி அடையாளங்களை யான் கூறினேன்; அன்றியும், தனது நாமாங்கிதமான
மோதிரத்தையுங் கொடுத்தருளினனென்று அநுமான் இராமபிரானுடைய
திருவாழியையுங் காட்டித் தான் ராமதூதனென்பதை வற்புறுத்திப் பிராட்டி
யின் ஸந்தேஹத்தைப் போக்குகின்றன னென்க.

முதலடியில் விளி-முன்பிருந்த நிலைமையைப் பற்றியது. 'வைதேவீ'
என்றதனால், தனது உடம்பை உபேக்ஷிப்பவளென்பது விளங்குமென்பர்
"நமக்கு இன்பமும் துன்பமும் ஒன்றே" என்று இளையபெருமாள் சொல்ல
அதன்பிறகு பெருமாளுடைய இன்பத்துன்பங்களைத் தன்னதாக நினைத்து

வந்தானாதலால், ஸுக்ரீவனை "ஒத்த புகழ்வானரக்கோன்" என்றது. அத்தகு சீர்—உம்மைப் பிரிந்த பின்பு ஊணும் உறக்கமுமற்றுக் கடித்ததும் வார்த்ததுமறியாதே ஏதேனும் போக்யபதார்த்தத்தைக் கண்டால் உம்மையே நினைத்து வருந்தாநின்றுள்ள அந்தநிலைக்குத்தக்க அன்பென்னுங் குணத்தையுடையவன் என்று கருத்து. ... ... ... ... (௮)

திக்குநிறை புகழாளன் தீவேள்விச் சென்றநாள்
மிக்கபெருஞ் சவைநடுவே வில்லிறுத்தான் மோதிரங்கண்
டொக்குமா லடையாள மனுமானென் றுச்சிமேல்
வைத்துக்கோண் டுகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே. (௯)

திக்கு—திக்குகளிலே
நிறை—நிறைந்த
புகழ் ஆளன்—கீர்த்தியை யுடையவனான [ஜநகராஜனுடைய
தீ வேள்வி—அக்நிகளைக்கொண்டு செய்யும் [யாகத்தில்
சென்ற—(விச்வாமித்ரருடன்) போன
நாள்—காலத்திலே
மிக்க பெரு சவை நடுவே—மிகவும் பெரிய ஸபையின் நடுவில்
வில் இறுத்தான்—ருத்ரதநுஸ்ஸை முறித்த [இராமபிரானுடைய
மோதிரம்—மோதிரத்தை
கண்டு—பார்த்து
மலர் குழலாள்—பூச்சூடிய கூந்தலையுடைய [ளான
சீதையும் - ஸீதாபிராட்டியும்,
அநுமான்—'வாராய் ஹநுமானே!
அடையாளம்—(நீசொன்ன) அடையாளங் [களெல்லாம்
ஒக்கும் - ஒத்திரா நின்றுள்ளவையே'
என்று – என்று (திருவடியை நோக்கிச் [சொல்லி)
(அந்தத் திருவாழியை)
உச்சி மேல் - தன் தலையின்மீது
வைத்துக்கொண்டு - வைத்துக்கொண்டு
உகந்தனள் - மகிழ்ந்தாள்.

குறிப்பு:—மிதிலாநகரத் தரசனான ஜநகமஹாராஜன் தன் குலத்துப் பூர்விக ராஜனான தேவராதனிடம் சிவபிரானால் வைக்கப்பட் டிருந்ததொரு பெரிய வலிய வில்லை எடுத்து வளைத்தவனுக்கே தன் மகளான ஸீதையைக் கல்யாணஞ் செய்து கொடுப்பதென்று கந்யாசுல்கம் வைத்திருக்க, வேள்வி முடித்த விச்வாமித்திரனுடன் மிதிலைக்குச் சென்ற இராமபிரான் அவ்வில்லை யெடுத்து வளைக்கத் தொடங்குகையில், முன்னமே ஹரிஹரயுத்தத்திற் சிறிது முறிபட்டிருந்த அவ்வில் இரண்டு துண்டாக நன்றாய் முறிந்து விழுந் திட்டதென்ற வரலாறு ஒன்றரையடிகளில் அடங்கி நிற்கும். தத்துவ ஞானத்தினாலும், பிராகிருத விஷய விரக்தியினாலும், பயனை விரும்பாது கருமங்களை அநுட்டிப்பதனாலும் நாற்றிசைகளிலும் பரவின புகழையுடையனான ஜநகராஜனது யஜ்ஞவாடத்திலே விச்வாமித்ர முனிவனோடு கூட எழுந்தருளி அங்கு மஹாஸபாமத்யத்தில் வில்லை முறித்தருளின பெருமானுடைய நாமாங்கிதமான திருவாழியைப் பிராட்டி சிரமேற்கொண்டு மகிழ்ந்து சிறிய திருவடியை மெய்யே ராமதூதனாக அறுதியிட்டன ளென்க. "சபைநடுவே" என்றும் பாடம். ஒக்குமால்=ஆல்—அசை. அநுமான்—விளி. ஈற்றடியில், ஆல்—மகிழ்ச்சிக் குறிப்பு. ... ... ... ... (௯)

வாராரும் முலைமடவாள் வைதேவி தனைக்கண்டு
சீராருந் திறலனுமன் தெரிந்துரைத்த வடையாளம்
பாராரும் புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான் பாடல்வல்லார்
ஏராரும் வைகுந்தத் திமையவரோ டிருப்பாரே. (௧

வார் ஆரும்—கச்சு அணிந்திருக்கைக்குஉரிய
முலை—முலையையும்
மடவாள்—மடப்பத்தையு முடையாளான
வைதேவிதனை - ஸீதாபிராட்டியை
கண்டு - பார்த்து
சீர் ஆரும் - சீர்மை பொருந்திய
திறல் - சக்தியை யுடையனுன
அநுமன் - சிறிய திருவடி
தெரிந்து - (பெருமாளிடத்தில் தான்) [அறிந்து கொண்டு
உரைத்த—(பின்பு பிராட்டியிடத்திற்) [சொன்ன

அடையாளம் - அடையாளங்களை (க் கூ [வதான
பார் ஆரும் புகழ் - பூமியெங்கும் பரவி [கீர்த்தியையுடையரா
புதுவை-ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத்தலைவரா
பட்டர்பிரான் பாடல் } பெரியாழ்வார் அருளி செய்த இப்பாடல்களை
வல்லார் - ஓதவல்லவர்கள்
ஏர் ஆரும் வைகுந்தத்து } எல்லா நன்மைகளும் சி ந்த ஸ்ரீ வைகுண்டத்தில்
இமையவரோடு- நித்யஸூரிகளோடு
இருப்பார் - ஒரு கோவையாயிருக்கப் [றுவார்க

குறிப்பு:—இதனால், இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் த கட்டியவாறு. சீராருந் திறலநுமன்—வாநரர்கள் பலரிருக்கச் செய்தே 'இவனே இக்காரியஞ் செய்யவல்லான்' என்று பெருமாள் திருவுள்ளம்பற் அடையாளங்களுஞ் சொல்லித் திருவாழியுங் கொடுத்து விடும்படி ஜ்ஞாநா குணங்களால் பரிபூர்ணனாய், நினைத்தது முடிக்கவல்ல சக்திமானாயிருக்கி திருவடி. அநுமன்—ஹநூமாந். ... ... ... (௧

அடி:—நெறி அல்லி கலக்கிய வாரணி மான் சித்திர மின் மைத்தகு திக்கு வா ரும் கதிர்.

மூன்றாம் பத்து உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம் பத்து.

## முதல் திருமொழி—கதிராயிரமிரவி.



**அவதாரிகை:**—ஒன்றாகிய முதற்கடவுள் ஒருவனே இராமபிரானாகவும் கண்ண பிரானாகவும் இப்படி பல அவதாரங்களைச் செய்கின்றமையால் இவ்வவதாரங்கள் யாவும் ஒற்றுமை நயத்தினால் ஏகாச்ரயமாகையாலே 'இப்படியிருக்கிற விஷயத்தைக் கண் ணாலே கண்டு அநுபவிக்க வேணும்' என்று தேடுகை தமக்கு ஒருபக்கத்திற் செல்லுகிற படியையும், மாநஸாநுபவத்தின் கரைபுரட்சியினால், அவ்விஷயத்தைத் தாம் தெளிவா கக் கண்டதாகவே ஒருபக்கத்தில் தோற்றியிருக்கிறபடியையும் அநுஸந்தித்த இவ்வாழ் வார், தம்மை இரண்டு வகையாக வகுத்துக்கொண்டு, "ஸர்வேச்வரனைக் கண்ணாலே காணவேணும்" என்று தேடுகை ஒருவகுப்பாகவும், "அப்படி தேடுகிறீர்களாகில் அவனை உள்ளபடி கண்டாருளர்" என்று விடைசொல்லுகை ஒரு வகுப்பாகவுமாய் இப்படி எம்பெருமானுடைய பலஅவதாரகுணங்களை அநுபவித்து இனியராகிறார்-இத் திருமொழியில்.

நாய்ச்சியார் திருமொழியில் "பட்டிமேய்ந்தோர் காரேறு" என்ற திருமொ ழியை இத்திருமொழியோடு ஒப்பிடுக; "இங்கே போதக்கண்டீரே" என்று கேட்பார் சிலரும், "விருந்தாவனத்தே கண்டோமே" என்று விடையளிப்பார் சிலருமாய்ச் சென்றதிறே அத்திருமொழிதன்னிலும். ... ... ... *

கதிரா யிரமி ரவிகலந்தெ றித்தா லொத்த நீண்முடியன்
எதிரிற் பெருமை யிராமனை யிருக்கு மிடம்நா டுதிரேல்
அதிருங் கழற்பொரு தோளி ரணிய னாகம் பிளந்தரியாய்
உதிர மளைந்தகை யோடிருந் தானை யுள்ளவா கண்டாருளர். (க)

கதிர் - (எண்ணிறந்த) கிரணங்களையுடைய
ஆயிரம் இரவி - ஆயிரம் ஆதித்யர்கள்
கலந்து - ஏககாலத்திற் கூடி
எறித்தால் ஒத்த - ஜ்வலித்தாற்போல் (மிக [வும்பளபளவா நின்றுள்ள,
நீள் முடியன் - நீண்ட திருவபிஷேகத்தை [யுடையவனும்
எதிர் இல் பெருமை-ஒப்பற்ற பெருமை [யையுடையவனுமான
இராமன் - இராமபிரான்
இருக்கும் இடம் - எழுந்தருளியிருக்குமிடத்தை
நாடுதிர் ஏல் - தேடுகிறீர்களாகில் (அவ்விடத்தைச் சொல்லுகிறேன்;)
அதிரும் - (கல் கல் என்று) ஒலி செய்யா [நின்றுள்ள
கழல் - வீரக்கழலையும்
பொரு தோள் - போர்செய்யப்பதைக்கிற [தோள்களையுமுடைய
இரணியன் - ஹிரண்யாஸுரனுடைய
ஆகம் - மார்பை
அரி ஆய் - நரஸிம்ஹ ரூபியாய்க்கொண்டு
பிளந்து - கீண்டு
உதிரம் அளைந்த - (அதனாலுண்டான) ரக [த்தை அளைந்த
கையோடு - கைகளோடு கூடி
இருந்தானை - (சீற்றந்தோற்ற) எழுந்தரு [ளியிருந்த நிலைமையில் (அவனை)
உள்ள ஆ கண்டார் உளர் - உள்ளபடி ஸேவித்தவர்கள் இருக்கின்றனர்.

குறிப்பு:—ஏககாலத்தில் ஆயிரநாயிறு உதித்தாற்போல் கண்கொண் காணவொண்ணுதபடி ஜ்வலியாநின்ற கிரீடத்தையுடையனும் மஹாநுபா னுன சக்ரவர்த்தித் திருமகன் எழுந்தருளியிருக்குமிடம் யாது? என்று தே கின்றமை முன்னடிகளால் பெறப்படும். வீரத்தண்டையை அணிந்துள் கால்களையும் தோள்மிடுக்கையு முடையனுய் ப்ரஹ்லாதாழ்வானை நலிந் வருத்தின ஹிரண்யகசிபுவின் உயிரை முடிப்பதற்காக நரஸிம்ஹ ரூபியாய் தூணில் தோன்றி, அவ்வஸுரனது மார்பை இருதுண்டமாகப் பிளந்து ரக் தாரையைப் பெருக்கி அதிலே தோய்ந்த கையுந்தானுமாய் நின்ற நிலைமையி எம்பெருமானைக் கண்டாருண்டு என்றுவிடையளிக்கின்றமை பின்னடிகளா பெறப்படும். இதனுல், இராமனுய் அவதரித்ததும் நரஸிம்ஹமாய் அவதரி தது மெல்லாம் ஒரு ஈச்வரய்யக்தியென்று தர்மியின் ஐக்கியத்தை கூறியவாறும்; மேலிற்பாட்டுக்களிலு மிங்ஙனமே கொள்க.

"கார்யாநுகுணமாகக் கொண்ட ரூபபேதமாத்ரமேயாய், ப்ரகாரி ஒ றேயாகையாலே, இந்த ஐக்யமறிந்து காண்கையாயிற்று, உள்ளபடி காண்கை யாவது" என்ற ஜீயருரை இங்கு அறியற்பாற்று.

ரவி—வடசொல். எறித்தல்—ஒளிவீசுதல், வெயில்காய்தல். "எறித்த லொத்த" என்றபாடஞ் சிறவாதென்க. இராமனை என்றவிடத்து, ஐ—அசை நாடுதல்—தேடுதல், விசாரித்தல், விரும்புதல். நாடுதிர்—முன்னிலைப் பன்மை வினைமுற்று. கழல் என்று—காலுக்கும், காலில் அணியும் வீரத்தண்டை கும் பெயர். அரி—ஹரி: ; நாஹரி என்க. உதிரம்—ரூதிரம். உள்ளவா— உள்ளவாறு. ... ... ... ... ... (க

நாந்தகஞ் சங்கு தண்டு நாணொலிச் சார்ங்கந் திருச்சக்கரம்
ஏந்து பெருமை யிராமனை யிருக்கு மிடம்நா டுதிரேல்
காந்தள் முகிழ்விரற் சீதைக் காகிக் கடுஞ்சிலை சென்றிறுக்க
வேந்தர் தலைவன் சனகரா சன்றன் வேள்வியிற் கண்டாருளர். (உ

நாந்தகம்—நந்தகம் என்னும் வாளையும்
சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் [யும்
தண்டு - கௌமோதகி என்னும் கதையை
நாண் ஒலி - நாண் கோஷத்தையுடைய
சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கதநுஸ்ஸையும்
திரு சக்கரம் - திருவாழியாழ்வானையும்
ஏந்து பெருமை இராமன் } (திருக்கைகளில்) ஏந் திம்படியான பெருமை [யையுடைய இராமபிரான்
இருக்கும் இடம் நாடுதிர் ஏல்—;

காந்தள் முகிழ் விரல் சீதைக்கு ஆகி } செங்காந்தளரும் போன்றவிரல்களை [யுடைய பிராட்டிக்கா
வேந்தர் தலைவன் - ராஜாதிராஜனுன
சனகராசன் தன் - ஜநகசக்ரவர்த்தியினு
வேள்வியில்—யஜ்ஞவாடத்திலே [டைய
சென்று—எழுந்தருளி
கடு சிலை - வலிய வில்லை
இறுக்க கண்டார் உளர் } முறிக்கக் கண்டவர்கள் இருக்கின்றனர்.

குறிப்பு:—பஞ்சாயுதங்களைத் திருக்கையிற் கொள்ளும் பெருமைபொரு திய பெருமானைத் தேடுகின்றமை முன்னடிகளில்விளங்கும். ஜநகமஹாராஜன் கந்யாசுல்கமாகவைத்த ருத்ரதநுஸ்ஸை அவனது யஜ்ஞவாடத் தேறவந்த முறிக்கும்போது அப்பெருமானைக் கண்டாருண்டென்பது பின்னடி. நாந்

கம்—நீட்டல்விகாரம். இராமனை = ஐ-அசை. செங்காந்தளரும்பு-விரல்களின் செம்மைக்கு உவமை யென்க. ஆகி—ஆக என்னும் எச்சத்திரிபு. ... (௨)

கோலையானைக் கோம்பு பறித்துக் கூடலர் சேனை பொருதழியச்
சிலையால் மராமர மெய்த தேவனைச் சிக்கென நாடுதிரேல்
தலையால் குரக்கினந் தாங்கிச் சென்று தடவரை கோண்டடைப்ப
அலையார் கடற்கரை வீற்றிருந் தானை யங்குத்தைக் கண்டாருளர். (௩)

கொலை யானை - கொலை செய்கையையே இயல்வாகவுடைய (குவலயா பீட மென்னும்) யானையினுடைய
கொம்பு - தந்தங்களை
பறித்து - பறித்துக் கொண்டவனும்,
கூடலர் - (ஜநஸ்தாநத்திலுள்ள ராக்ஷஸர் [களாகிய) சத்துருக்களுடைய
சேனை - ஸேனையானது
அழிய - அழியும்படி
பொருது - போர் செய்தவனும்,
சிலையால் - வில்லாலே
மராமரம் - ஸப்தஸாலவ்ருக்ஷங்களை
எய்த - எய்தவனுமான
தேவனை—எம்பிரானை
சிக்கென நாடுதிர் ஏல் } த்ருடாத்யவஸாயத்தோடு தேடுகிறீர்களாகில்,
(அவனிருக்குமிடஞ் சொல்லுகிறேன்—;)
குரக்கு இனம் - வாநர ஸேனையானது
தட வரை - பெரிய மலைகளை
தலையால்-(தமது) தலைகளினால்
தாங்கிக் கொண்டு சென்று } சுமந்துகொண்டுபோய்
அடைப்ப - (கடலின் நடுவே அணையாக) [அடைக்க
அலை ஆர் கடல் கரை } அலையெறிகிற கடற்கரையிலே
வீற்றிருந்தானை - எழுந்தருளியிருந்தஇரா [மபிரானை
அங்குத்தை - அந்த ஸந்நிவேசத்தில்
கண்டார் உளர்—.

குறிப்பு:—கண்ணபிரானை நலியக் கம்ஸனால் ஏவப்பட்ட குவலயாபீட மென்ற மதகரியை முடித்தவனும், ஜநஸ்தாந வாஸிகளான கரதூஷணாதி ராக்ஷஸர்களைக் கொன்றவனும், ஸுக்ரீவ மஹாராஜனுக்குத் தன்திறலைக் காட்டுவதற்காக, ரிச்யமூகபர்வதத்தில் நின்ற ஏழு ஆச்சாமரங்களை வில்லிட்டுச் சாய்த்தவனுமான எம்பெருமானைத் தேடுகின்றமை, முன்னடிகளில் தோன்றும். லங்கைக்குச் செல்வதற்காகக் கடலிடையில் ஸேதுகட்டுகைக்கு, வாநரவீரர்கள் மலைகளைச் சிரஸா வஹித்துக்கொண்டு சென்று, அவற்றாற் கடலை ஊடறுத்து அணைகட்டா நிற்க, இராமபிரான் அவ்வாறு அவை செய்கின்ற அடிமையைப்பார்த்து உகந்துகொண்டு அக்கடற் கரையிலே வீற்றிருக்கக் கண்டாருளர் என்பது, பின்னடி.

கூடலர்—கூடமாட்டாதவர்; எனவே, சத்ருக்களாயினர்: ஸந்தர்ப்பம் நோக்கி, ஜநஸ்தாந வாஸிகளெனக் கொள்ளப்பட்டது; "மராமரமெய்த தேவனை" என்றிறே உடன்கூறியது. அவ்வரலாறு வருமாறு:—ராமலக்ஷ்மணர்க்கும் ஸுக்ரீவனுக்கும் திருவடிமூலமாகத் தோழமை நேர்ந்தபின்பு, ஸுக்ரீவன் தன் வருத்தத்திற்குக் காரணங்களைக்கூற, அதுகேட்ட இராமபிரான் 'நான் உனது பகைவனை எனது அம்பினால் அழித்துவிடுகிறேன், அஞ்சாதே' என்று அபய ப்ரதாநஞ் செய்யவும் ஸுக்ரீவன் மனந்தெளியாமல் வாலியின் பேராற்றலைப் பற்றிப் பலவாறுசொல்லி, முடிவில், வாலி மராமரங்

களைத் துளைத்ததையும், துந்துபியின் உடலெலும்பை ஒரு யோஜனைதூரந் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக்கூறி, 'இவ்வாறு பேராற்றலமைந்தவனை வெல்வது கூடுமோ?' என்று சொல்ல, அதுகேட்ட இளையபெருமாள் 'உனக்கு நம்புதல் இல்லையாயின் இப்போது என்னசெய்ய வேண்டுவது?' என்ன; ஸுக்ரீவன், 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப்போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது சங்கையுண்டாகின்றது; ஏழு மராமரங்களையுந் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விரற்கிடை தூரம் தூக்கியெறிந்தால் எனக்குவிச்வாஸம் பிறக்கும்' என்றுசொல்ல, இராமபிரான் அதற்கு இயைந்து, துந்துபியின் உடலெலும்புக்குவியலைத் தனது காற்கட்டை விரலினால் இலேசாய்த்தூக்கிப் பத்து யோஜனை தூரத்திற்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத்தூக்கி யெறிந்தான்; இப்போது உலர்ந்துவிட்ட இதனைத் தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மராமரங்களின் மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச்சென்று மீண்டு அம்பறுத்தூணியை யடைந்த தென்பதாம். சிலையால்—வில்லினால் ஏவப்பட்ட அம்பினால் எனக் கொள்ளலாம். [சிக்கன நாடுதிரேல்] குவலயாபீடத்தின் கொம்பைப்பறித்த வ்யக்தி வேறு, மராமரங்களைத் துளைத்த வ்யக்தி வேறு என்று பிரித்து ப்ரதிபத்தி பண்ணாமல், தர்மி ஒன்று என்றே அத்யவஸித்து அவனிருந்த விடந்தேடுகிறீர்களாகில் என்றபடி. குரங்கு + இனம், குரக்கினம். அங்குத்தை—அங்கு என்றபடி. "கொலையானை கொம்புபறித்து" என்பதும் ஒக்கும். 'சிக்கன' எனினும், 'சிக்கென' எனினும் ஒக்கும். ... (௩)

தோயம் பரந்த நடுவு சூழலின் தொல்லை வடிவுகொண்ட
மாயக் குழவி யதனை நாடுறில் வம்மின் சுவடுரைக்கேன்
ஆயர் மடமகள் பின்னைக் காகி யடல்விடை யேழினையும்
வீயப் பொருது வியர்த்துநின் றானை மெய்ம்மையே கண்டாருளர். (௪)

பரந்த - எங்கும் பரவின
தோயம் நடுவு - ஜலத்தின் நடுவே
சூழலின் - உபாயத்தினால்
தொல்லை வடிவு கொண்ட } பழமையான (பெரிய) வடிவைச் சுருக்கிக்கொ[ண்ட
மாயம் குழவி அதனை } அந்த ஆச்சர்யக்குட்டியை
நாடுறில் - தேட முயன் றீர்களாகில்
வம்மின் - (இங்கே) வாருங்கள்;
சுவடு உரைக்கேன் - (உங்களுக்கு) ஓரடையாளம் சொல்லுகின்றேன்;
ஆயர் மகள் - (ஸ்ரீகும்பர் என்னும்) ஆயருடைய பெண்பிள்ளையும்
மடம் - மடப்பம் என்ற குணத்தையுடை[யளுமான
பின்னைக்கு ஆகி - நப்பின்னைப் பிராட்டிக்[காக
அடல் விடை ஏழினையும் } வலிய ரிஷபங்களேழும்
வீய - முடியும்படியாக
பொருது - (அவற்றோடு) போர்செய்து (அந்த ஆயாஸத்தாலே)
வியர்த்து நின்றானை - குறுவெயர்ப்பரும்பின வடிவுந்தானுமாய் நின்றவனை
மெய்ம்மையே - உண்மையாகவே
கண்டார் உளர்—.

குறிப்பு:—பரந்த என்றதன்பின் 'போது' எனவருவித்து, நடுவு சூழலில் தோயம்பரந்தபோது என இயைத்து, (சுற்றுங் கடலாய்,) அதனிடையிலே உருண்டை வடிவாயிருக்கிற பூமியெங்கும் ஜலம் பரவின காலத்திலே என்றுரைக்கவுங் கூடும். இவ்வுலகத்தையடங்கலும் பிரளயவெள்ளம் வந்துமூட, அதில் ரக்ஷ்யவர்க்கம் அழியாதபடி அவற்றைத் திருவயிற்றில் வைத்து நோக்கித் தனது பெரியவடிவைச் சிறிதாகச் சுருக்கிக்கொண்டு ஒரு ஆலந்தளிரிலே எம்பெருமான் சிறுகுழந்தைபோலத் துயின்ற வரலாறு முன்னடிகளிலடங்கியது. தோயம்—வடசொல். சூழல்—உபாயம்; அதாவது—பெரிய வடிவைச் சிறியவடிவாகச் சுருக்கிக்கொண்டமை. தோல்லை—ஐ விகுதிபெற்ற பண்புப்பெயர். கோண்ட என்பதற்குச் 'சுருக்கிக்கோண்ட' என்று பொருள் கூறியது எங்ஙனேயெனின்; மேல் "குழவி" என்கையாலே இங்ஙனன்றி வேறுவகையாகப் பொருள் கூடாதிறே. மீமாம்ஸகர் சப்தத்தை நெருக்கி அர்த்தத்தையே முக்கியமாகக் கொள்வதுபோல; "காவலிற்புலனைவைத்து" (திருமாலை) என்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான வாக்கியங்களுங் காணத்தக்கன. நாட உறில் × நாடுறில்; தொகுத்தல்.

பின்னடிகளிற் கூறியவரலாறு:—பின்னை—நப்பின்னைப் பிராட்டி. ("ந" என்பது—உயர்வுப் பொருளைத்தருவது; நப்பின்னை, நக்கீரன்' என்றநன்னூற் காண்டிகையுரையைக்காண்க.) இவள் கண்ணபிரானுடைய மனைவியரில் தலைமையுடையவள்; இவளை மணம்புரிவதற்காக, இவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி—யாவர்க்கு மடங்காத அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவினன் என்று நூல்கள் கூறும். இவள் நீளாதேவியின் அம்சமாதலால் இவள் வடமொழியில் நீளையென்ற பெயரால் வழங்கப்படுவள்; ["நீளாதுங்க ஸ்தநகிரிதடீ" உத்யாதி.] இப்பாட்டால், ஆலிலைமேல் துயின்ற வ்யக்திக்கும் கண்ணனைப் அவதரித்தவ்யக்திக்கும் ஒற்றுமைகூறப்பட்டதாயிற்று; "வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே" என்றும், "ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்" என்றும் இவ்வொற்றுமை கீழும் பலவிடங்களிலருளிச் செய்யப்பட்டமை அறிக. ... ... ... ... (௪)

நீரேறு செஞ்சடை நீல கண்டனும் நான்முக னும்முறையால்
சீரேறு வாசகஞ் செய்ய நின்ற திருமாலை நாடுதிரேல்
வாரேறு கோங்கை யுருப்பிணி யைவலி யப்பிடித் துக்கோண்டு
தேரேற்றிச் சேனை நடுவுபோர் செய்யச் சிக்கேனக் கண்டாருளர். (௫)

நீர் - (எம்பெருமானது ஸ்ரீபாத) தீர்த்தமானது
ஏறு - ஏறப்பெற்ற
செம் சடை - சிவந்த ஜடையை யுடைய
நீலகண்டனும் - (விஷமுண்டதனால்) கறுத்தமிடற்றை யுடையனான சிவபெருமானும்
நான் முகனும் - சதுர்முகப்ரஹ்மாவும்

முறையால் - (சேஷ சேஷிபாவமாகிற) முறையின்படி
சீர் ஏறு வாசகம் செய்ய நின்ற - சிறந்த சொற்களைக் கொண்டு துதிக்கும்படி அமைந்து நின்ற
திருமாலை - ச்ரிய:பதியாகிய எம்பெருமானை
நாடுதிர் ஏல் - தேடுகிறீர்களாகில்,

| | |
|---|---|
| (இதைக் கேளுங்கள்;) | (அவ்வளவிலே சிசுபாலாதிகளான) |
| வார் ஏறு - கச்சை அணிந்த | பல அரசர் எதிர்த்துவர,) |
| கொங்கை - முலைகளையுடைய | சேனை நடுவு - (அவ்வரசர்களுடைய) சேன [நாமத்யத்திலே |
| உருப்பிணியை - ருக்மிணிப் பிராட்டியை | போர் செய்ய - (அவ்வரசர்களோடு) யுத் [தம் பண்ணும்போது |
| வலிய - பலாத்காரமாக பிடித்துக்கொண்டு—; | சிக்கன - திண்மையாக [த்ருடமாக] |
| தேர் ஏற்றி - (தனது) திருத்தேரின் மேல் [ஏறவிட்டு | கண்டார் உளர்—. |

குறிப்பு:—திருமால் உலகமளந்த காலத்தில் மேலே ஸத்யலோகத்திற் சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தன்கைக் கமண்டல தீர்த்தத் தாற் கழுவிவிளக்க, அந்த ஸ்ரீபாததீர்த்தமாகப் பெருகித் தேவலோகத்திலி ருந்த ஆகாயகங்காநதியை, ஸூர்யகுலத்துப் பகீரதசக்கரவர்த்தி, கபிலமுனி வனது கண்ணின் கோபத்தீக்கு இலக்காய் உடலெரிந்து சாம்பலாய் நற்கதி யிழந்த தனது மூதாதையரான ஸகரபுத்திரர் அறுபதினாயிரவரை நற்கதி பெறுவிக்கும் பொருட்டு நெடுங்காலந் தவஞ்செய்து மேலுலகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில், அவனது வேண்டுகோளாற் சிவபிரான் அந்நதியை முடியின்மேல் ஏற்றுச் சிறிது சிறிதாகப் பூமியில்விட்டருளினன் என்றவரலாற்றை உட்கொண்டு, நீரேறு செஞ்சடை நீலகண்டன் என்றார். சீரேறு வாசகம்—எம்பெருமானுடைய கல்யாணகுணங்களைச் சொல்லிப் புக ழும் படியான வாக்கியங்கள் என்றுமாம். பின்னடிகளிற் குறித்த வரலாற் றின் விவரம், கீழ் "என்னாதன் தேவிக்கு" என்ற திருமொழியின் மூன்றாம் பாட்டின் குறிப்புரையிற் காணத்தக்கது. சிக்கன—ஐபந்திரிபற என்றபடி.

பொல்லா வடிவுடைப் பேய்ச்சி துஞ்சப் புணர்முலை வாய்மடுக்க
வல்லானை மா மணிவண் ணனைமரு வுமிடம் நாடுதிரேல்
பல்லா யிரம்பெருந் தேவி மாரொடு பௌவ மெறிதுவரை
எல்லாருஞ் சூழச் சிங்கா சனத்தே யிருந்தானைக் கண்டாருளர். (௬)

| | |
|---|---|
| பொல்லா வடிவு உடை பேய்ச்சி } மஹாகோரமான வடிவையுடைய பூதனையா [னவள் | நாடுதிர் ஏல் - தேடுகிறீர்களாகில், (இதைக்கேளுங்கள்;) |
| துஞ்ச - மாளும்படியாக | பௌவம் எறி துவரை } கடலலைகள் வீசப்பெற் றுள்ள ஸ்ரீத்வாரகையிலே |
| புணர் முலை - தன்னில் தான் சேர்ந்திருந் [திள்ள (அவளது) முலையிலே | எல்லாரும் சூழ - தேவிமார் எல்லாரும் [சுற்றுஞ் சூழ்ந்துகொண்டிருக்க, |
| வாய் மடுக்க வல்லான் } (தனது) வாயை வைத்து உண்ண வல்லவனும் | பல் ஆயிரம் பெருந் தேவிமாரொடு } (அந்தப்) பதினாறு யிரம்தேவிமாரோடு [கூட |
| மா மணிவண்ணன்-நீலமணிபோன்றநிறத் [தையுடையனுமான எம்பெருமான் | சிங்காசனத்து - ஸிம்ஹாஸநத்தில் |
| மருவும் இடம் - பொருந்தி எழுந்தருளி [யிருக்குமிடத்தை | இருந்தானை - எழுந்தருளியிருக்கும்போது கண்டார் உளர்—. |

குறிப்பு:—முதலடியிற் குறித்த வரலாறு கீழ்ப்பலவிடங்களிற் கூறப் பட்டுள்ளது. புணர்முலை—விஷத்தோடு புணர்ந்த முலை என்றுமாம்; கண்ண

பிரானை வஞ்சனையாற் கொல்ல நினைத்த கம்ஸனால் ஏவப்பட்டு, முலையில் விஷத்தைத் தடவிக்கொண்டு தாயுருவமெடுத்து முலை கொடுக்கவந்தவளிறே இவள். வல்லானை, வண்ணனை என்ற இரண்டிடத்தும், ஐ—அசை. [பல்லாயிர மித்யாதி.] கண்ணபிரான் நரகாஸுர வதஞ்செய்து, அவனாற் கொண்டு போகப்பட்ட மந்தரகிரியினுடைய சிகரமான ரத்நகிரியிற் பல திசைகளிலிருந்துங் கொணர்ந்து சிறைவைக்கப்பட்டிருந்த தேவஸித்த கந்தர்வாதி கன்னிகைகள் பதினாறுபிரம் பேரையும் தான் மணந்துகொண்டு, அவர்களுந்தானுமாக ஒரு ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருக்கும்போது ஸ்ரீத்வாரகையிற் கண்டாருண்டு. பதினாறுயிரத்தொரு நூற்றுவர் என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற் காணப்படுகின்றது. பௌவம்—கடல். துவரை—த்வாரகா என்ற வடசொற் சிதைவு. எல்லாரும்—மற்றுமுள்ள பரிஜநமெல்லாம் என்றுமாம். சிங்காசனம்—வட சொல்திரிபு. ... ... ... ... (சா)

வெள்ளைவிளி சங்கு வெஞ்சு டர்த்திருச் சக்கர மேந்துகையன்
உள்ள விடம்வின வில்லு மக்கிறை வம்மின் சுவடுரைக்கேன்
வெள்ளைப் புரவிக் குரக்கு வெல்கொடித் தேர்மிசை முன்புநின்று
கள்ளப் படைத்துணை யாகிப் பாரதங் கைசெய்யக் கண்டாருளர். (எ)

வெள்ளை - வெண்மைநிற முடையதும்
விளி - (அநுபவகைங்கரியங்களில் ருசியுடையீர்! வாருங்கள் என்று, தன் த்வநியால்) அழைப்பது போன்றுள்ளதுமான
சங்கு - ஸ்ரீபாஞ்ச ஜந்யத்தையும்
வெம் சுடர் - தீக்ஷ்ணமான ஜ்யோதிஸ்ஸையுடைய
திரு சக்கரம் - திருவாழியாழ்வானையும்
ஏந்து கையன் - தரியாநின்றுள்ள திருக்கைகளையுடைய எம்பெருமான்
உள்ள இடம் - எழுந்தருளியிருக்குமிடத்தை
வினவில் - கேட்கிறீர்களாகில்
உமக்கு - (கேட்கிற) உங்களுக்கு
இறை சுவடு உரைக்கேன் - சிறிது அடையாளம் சொல்லுகிறேன்,
வம்மின் - வாருங்கள்;—
வெள்ளை புரவி - வெள்ளைக் குதிரைகள் பூண்டிருப்பதும்
குரக்கு வெல் கொடி - குரங்காகிற வெற்றிக்கொடியை யுடையதுமான
தேர் மிசை - (அர்ஜுனனுடைய) தேரின் மேலே
முன்பு நின்று - (ஸாரதியாய்) முன்னே நின்று
படை - ஸைந்யத்துக்கு
கள்ளம் துணை ஆகி - க்ருத்ரிமத் துணையாயிருந்து
பாரதம் - பாரதயுத்தத்தை
கைசெய்ய - அணிவகுத்து நடத்தும்போது
கண்டார் உளர்.—

குறிப்பு:—திருவாழி திருச்சங்குங் கையுமான எம்பெருமானெழுந்தருளியிருக்கு மிடத்தைத்தேடுகின்றமை முன்னடிகளில் தோன்றும். [வெள்ளை இத்யாதி.] துஷ்டர்களை யெல்லாம் ஸம்ஹரித்துப் பூமியின் சுமையைப்போக்குதற்பொருட்டுத் திருவவதரித்த கண்ணபிரான் அதற்கு உபயோகமாகப் பாண்டவர்க்குத் துணைநின்று பலபடியாக உதவிப் பாரதயுத்தத்தை ஆதியோடந்தமாக நடத்தி முடித்தமை, மஹாபாரதத்தில் விரியும். சூதுபோரில் இழந்த ராஜ்யத்தை மீளவும் மோதி போர்செய்து பெறுவதில் தர்மபுத்திரனுக்கு உபேக்ஷையுண்டான பொழுதெல்லாம் அங்ஙனம் வெறுப்புக்

கொள்ளாத வண்ணம் பலவாறு போதித்துப் போர் தொடங்கும்படி தூண்டியும், பின்பு போர்த்தொடக்கத்தில் "உற்றாரை யெல்லாமுடன் கொன்றரசாளப், பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்" என்று சொல்லிப்போரொழிந்த அர்ஜுனனுக்குக் கீதையை உபதேசித்து அவனைப் போர்புரிய உடன் படுத்தியும் கண்ணபிரானே பாரதப்போரை மூட்டியவனாதல் காண்க. கள்ளப்படைத் துணையாகி—படைக்குக் கள்ளத்துணையாகி; அதாவது—தான் ஸேனைக்குத் துணையாகிறபோது இரண்டு தலைக்கும் பொதுத்துணையாயிருக்கையன்றியே, பகலை இரவாக்கியும், 'ஆயுதமெடுப்பதில்லை' என்று சொல்லிவைத்து ஆயுதமெடுத்தும், எதிரியுடைய உயிர்நிலையைக் காட்டிக்கொடுத்தும் போந்தமையாம். இவற்றுள் முதல்க்ருத்யம் மேலிற்பாட்டிற் கூறப்படும். [கூரக்கு வேல் கொடி.] பெருமாளுக்குப்பெரியதிருவடி த்வஜமானது போல, அர்ஜுனனுக்குச் சிறிய திருவடி த்வஜமாயினன் என்க. வெல்கொடி—ஜயிஷ்ணு த்வஜம்; (வேல்கொடி அன்று.) ... ... (எ)

நாழிகை கூறிட்டுக் காத்து நின்ற வரசர்கள் தம்முகப்பே
நாழிகை போகப் படைபோ ருதவன் தேவகி தன்சிறுவன்
ஆழி கொண்டன் றிரவி மறைப்பச் சயத்திர தன்றலையைப்
பாழி லுருளப் படைபோ ருதவன் பக்கமே கண்டாருளர். (அ)

நாழிகை - (பகல்முப்பது) நாழிகைகளை
கூறிட்டு - பங்கிட்டுக்கொண்டு
காத்து நின்ற - (ஜயத்ரதனைக்) காத்துக் [கொண்டிருந்த
அரசர்கள் தம் முகப்பே - ராஜாக்கள் முன்னிலையில்
நாழிகை போக - (பகல் முப்பது) நாழிகையும் போயிற்றென்று தோற்றும் படியாக
படை - (தன்) ஆயுதமாகிய திருவாழியா [ழ்வானைக் கொண்டு
பொருதவன் - (ஸூர்யனை) மறைத்தவ [னும்
தேவகிதன் சிறுவன் - தேவகிப் பிராட்டி [யின் பிள்ளையுமான கண்ணபிரான்
(உள்ள இடம்) - எழுந்தருளி யிருக்குமிட [த்தை
(வினவில்) - கேட்கிறீர்களாகில்
(உரைக்கேன்) - சொல்லுகின்றேன்;—
அன்று - (அப்படி அவ்வரசர்கள் காத்துக் [கொண்டு நின்ற) அன்றைக்கு
ஆழி கொண்டு - திருவாழியினால்
இரவி - ஸூர்யனை
மறைப்ப - (தான்) மறைக்க,
(அதனால் பகல் கழிந்ததாகத் தோற்றி வெளிப்பட்ட)
சயத்திரதன் - ஜயத்ரதனுடைய
தலை - தலையானது [படி
பாழில் உருள—பாழியிலே கிடந்துருளும்
படை பொருதவன் பக்கமே - அம்பைச் செலுத்தின அர்ஜுனனரு [கில்
கண்டார் உளர் - (அவ்வெம்பெருமானைக்) [கண்டாருண்டு.

குறிப்பு:—அர்ஜுனன் பதின்மூன்றுநாட் போரில் தன்மகனான அபிமந்யுவைக்கொன்ற ஜயத்ரதனை 'நாளை அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ண, அதற்கு இடமறும்படி புருஷப் பிரமாணமன்றியே தீர்க்கனான அவனை ஒரு புருஷப்பிரமாணமாகக் குழிக்குள்ளே நிறுத்தி 'நீங்கள் இத்தனை நாழிகை காத்துக்கொள்ளுங்கோள்; நாங்கள் இத்தனை நாழிகை காத்துக்கொள்ளுகிறோம்' என்று

விபாகம் பண்ணிக்கொண்டு, பகல் முப்பது நாழிகையும் அவனுக்கு ஒருநலிவு வாராதபடி காத்துக்கொண்டு நின்ற அதிரத மஹாரதரான துரியோதநன் முதலிய ராஜாக்கள் முன்னே கண்ணபிரான் அர்ஜுநனுடைய சபதம் பொய்த்துவிடுமே யென்று சிந்தித்து, ஸூர்யாஸ்தமயமாவதற்குச் சில நாழிகைக்கு முன்னமே பகல்நாழிகை முப்பதுஞ் சென்றதாகத் தோற்றும்படி, நினைவறிந்து காரியஞ் செய்யுந் தனது திருவாழியைக் கொண்டு ஸூர்யனை மறைக்க, அதனால் எங்கும் இருளடைந்தபொழுது அர்ஜுநன் அக்நிப்ரவேசஞ் செய்தலைக் களிப்புடனே காணுதற்குச் சயத்ரதனைக் குழியில் நின்றும் அவர்கள் கிளப்பி நிறுத்தினவளவிலே இருள்பரப்பின திருவாழியைக் கண்ணபிரான் பேர நிறுத்தியருள [வாங்கிவிட], பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனுடைய தலை பாழியிற் கிடந்துருளுமாறு அம்பாலே பொருதனன் [தலைதுணித்தனன்] என்பது இப்பாட்டிற் குறித்த வரலாறு. "மாயிரு ஞாயிறுபாரதப்போரில் மறைய அங்ஙன், பாயிருள் நீ தந்ததென்ன கண்மாயம்!" என்ற திருவரங்கத்துமாலையுங் காண்க.

நாழிகை—நாடிகா என்ற வடசொல்விகாரம். இரண்டாமடியில் "பொருதவன்" என்பதற்கு ஸந்தர்ப்பம் நோக்கிப் பொருள் கூறப்பட்டதென்க. "உள்ளவிடம் வினவில் உரைக்கேன்" என்பன—கீழ்ப்பாட்டிலிருந்து வருவிக்கப்பட்டன. ரவி—வடசொல். சயத்திரதன்—ஜயத்ரதஃ. தலையை = ஐ—அசை. பாழில் உருள—இற்று விழும்படி என்பது கருத்து. ... (அ)

மண்ணும் மலையும் மறிக டல்களும் மற்றும் யாவுமெல்லாந்
திண்ணம் விழுங்கி யுமிழ்ந்த தேவனைச் சிக்கென நாடுதிரேல்
எண்ணற் கரியதோ ரேன மாகி யிருநிலம் புக்கிடந்து
வண்ணக் கருங்குழல் மாத ரோடு மணந்தானைக் கண்டாருளர். (௯)

மண்ணும் - பூமியையும்
மலையும் - மலைகளையும்
மறி - அலையெறியா நின்றுள்ள
கடல்களும் - கடல்களையும்
மற்றும் யாவும் எல்லாம் } மற்றுமுண்டான எல்லாப் பொருள்களையும்
திண்ணம் - நிச்சயமாக
விழுங்கி - (ப்ரளயங் கொள்ளாதபடி) திருவயிற்றிலே வைத்துநோக்கி
(பின்பு ப்ரளயங்கழிந்தவாறே)
உமிழ்ந்த - (அவற்றை வெளிநாடு காண) [உமிழ்ந்த
தேவனை - எம்பெருமானை
சிக்கென - ஊற்றத்துடனே
நாடுதிர் எல் - தேடுகிறீர்களாகில்,
(இதனைக்கேளுங்கள்;)
எண்ணற்கு அரியது - நினைக்க முடியாத
ஓர் - ஒப்பற்ற [(பெருமையையுடைய)
ஏனம் ஆகி - வராஹமாய் அவதரித்து
புக்கு - (ப்ரளய வெள்ளத்திற்) புகுந்து
இரு நிலம் - பெரிய பூமியை
இடந்து - அண்டபித்தியில் நின்றும்ஒட்டு [விடுவித்தெடுத்து
(அவ்வளவிலே பூமிப்பிராட்டி தன்னைவந்து அணைக்க,)
வண்ணம் - அழகியதும்
கரு - கறுத்ததுமான
குழல் - கூந்தலையுடைய
மாதரோடு - (அந்த) பூமிப்பிராட்டியோடு
மணந்தானை - ஸம்ச்லேஷித்தருளும்போது
கண்டார் உளர்—.

குறிப்பு:—பண்டொருகால் மஹாப்ரளயம் நேர்ந்தபோது உலகங்கள் யாவும் அதற்கு இரையாகப்புக, அப்போது எம்பெருமான் பேரருள்கொண்டு உலகங்களனைத்தையும் தனது திருவயிற்றில் வைத்து நோக்கினமை, முன்னடிகளிற் கூறியவரலாறு. இதனைத் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் "மைந்நின்ற கருங்கடல்வாய்" என்ற திருமொழியிற் பரக்க அருளிச்செய்தருளினர். திண்ணம் விழுங்கி—இந்திரஜாலஞ் செய்வாரைப்போல் விழுங்கினதாகக் காட்டுகை யன்றியே, மெய்யே விழுங்கி என்றவாறு. சிக்கன நாடுதிரேல்—'காணப்படுவனாகில் காண்போம்; இல்லையாகில் மீள்வோம்' என்று மேலெழத் தேடுகையன்றியே, கண்டே விடவேணுமென்ற ஆதாரத்துடன் தேடுகிறீர்களாகில் என்றபடி. [எண்ணற்கரியது இத்யாதி.] ஹிரண்யாக்ஷனென்ற அஸுரன் தன்வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி எடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச்சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால், திருமால், நெஞ்சினால் நினைத்து அளவிடவொண்ணாத வீறுபாட்டையுடைய மஹாவராஹரூபமாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வஸுரனை நாடிக்கண்டு பொருது கோட்டினாற் குத்திக்கொன்று, பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியை அங்கு நின்று கோட்டினாற் குத்தி யெடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருள, அந்த மகிழ்ச்சியினால் ஸ்ரீ பூமிப்பிராட்டி வந்தணைக்க, திருமால் அவளது அழகைக் கண்டு மயங்கி அவளோடு ஸம்ச்லேஷித்தபோது கண்டாருளர் என்கிறது. (அந்த ஸம்ச்லேஷத்தில் தான் நரகாஸுரன் பிறந்தானென்றும், அஸமயத்திற் புணர்ந்து பிறந்தபடியினால் அஸுரத்தன்மை பூண்டவனாயினன் என்றும் புராணங்கூறும்.) இருநிலம்—பெரியபூமி; இரண்டுநிலமென்று பொருளன்று; இருமை—பெருமை; பண்புத்தொகை. 'மாதர்' என்கிறவிது பன்மைப்பாலன்று; "மாதர் காதல்" [தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-உரிச்சொல்லியல்-௩௦.] என்றபடி இது உரிச்சொல்லாதலால்; "மண்மாதர் விண்வாய்" என்றதும், "மாதர்மா மண்மடந்தை பொருட்டு" என்றதுங்காண்க. மாதர்—விரும்பப்படும் அழகுடையவள். ... ... (௯)

கரிய முகிற்புரை மேனி மாயனைக் கண்ட சுவடுரைத்துப்
புரவி முகஞ்செய்து செந்நெ லோங்கி விளைகழ னிப்புதுவைத்
திருவிற் பொலிமறை வாணன் பட்டர் பிரான்சொன்ன மாலைபத்தும்
பரவு மனமுடைப் பத்தருள் ளார்பர மனடி சேர்வர்களே. (௰)

கரிய முகில் புரை மேனி } நீலமேகம் போன்ற திருமேனியை யுடையவனும்
மாயனை - ஆச்சரியச் செய்கைகளையுடைய [னுமான கண்ணபிரானை
கண்ட சுவடு—ஸேவித்த அடையாளங்களை
உரைத்து - அருளிச்செய்து;
செந்நெல் - செந்நெற் பயிர்களானவை
ஓங்கி - (ஆகாசமளவும்) உயர்ந்து
புரவிமுகம் செய்து - குதிரை முகம்போலத் தலைவணங்கி

விளை - விளையா நிற்கப்பெற்ற
கழனி - வயல்களையுடைய
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவரும்
திருவின் - (விஷ்ணுபக்தியாகிற) செல்வத்தினால்
பொலி - விளங்கா நின்றுள்ளவரும்
மறை வாணன் - வேதத்துக்கு நிர்வாஹகருமான
பட்டர் பிரான் - பெரியாழ்வார்

சொன்ன - அருளிச் செய்த
மாலை பத்தும் - சொல்மாலையாகிய இப் [பத்துப் பாட்டையும்
பரவும் மனம் உடை - அநுஸந்திக்கைக் கீடான மாஸ்ஸை யுடையரும்
பத்தர் உள்ளார் - பக்தியையுடையவருமா [யிருப்பவர்கள்
பரமன் - பரமபுருஷனுடைய
அடி - திருவடிகளை
சேர்வர்கள் - கிட்டப் பெறுவார்கள்.

குறிப்பு:—எம்பெருமானைக் காணவேணுமென்று தேடுகிறவர்களுக்கு அடையாளங்களைச் சொல்லிப் பெரியாழ்வார் அருளிச்செய்த இப்பத்துப் பாட்டையு மோதுமவர்கள், எம்பெருமானைக் காண்கைக்குத் தேட வேண்டாதே அவனோடு நித்யாநுபவம் பண்ணலாம்படி அவனுடைய திருவடிகளைச் சேரப்பெறுவர்கள் என்று-பலஞ் சொல்லித் தலைக்கட்டியவாறு. தேடுகிறவர்களுடைய தன்மையையும், கண்டவர்களுடைய தன்மையையுந்தாமே அடைந்து பேசினமையால் "கண்ட சுவடுரைத்து" என்றாரென்க. புரை— உவமவுருபு. செந்நெல்தாள்கள் ஓங்கி நுனியிற் கதிர்வாங்கித் தழைந்திருக்கும் படிக்குக் குதிரை முகத்தை உவமைகூறியது ஏற்குமென்க: "வரம்புற்ற கதிர்ச செந்நெல் தாள்சாய்த்துத் தலைவணக்கும்" என்றது காண்க. திருவின் + பொலி, திருவிற்பொலி. ... ... ... ... (௧0)

அடி:—கதிர் நாந்தகம் கொலை தோயம் நீரேறு பொல்லா வெள்ளை நாழிகை மண் கரிய அலம்பா.

முதல் திருமொழி உரை முற்றிற்று.

## இரண்டாந்திருமொழி:
## அலம்பா வெருட்டா.

அவதாரிகை:—இவ்வாழ்வார்க்கு மற்றுமுள்ள பல அவதார விபவங்களைக் கண்ணாலேகண்டு அநுபவிக்க வேணுமென்ற விருப்பமிருப்பினும் அவை அவ்வக்காலங்களிற் பிறந்தவர்கட்கே அனுபவிக்கக் கூடியவையாயும், பின் பிறந்தார்கட்குக் கிடைக்கக் கூடாதவையாயு மிருந்தமையால், "பின்னானார் வணங்குஞ்சோதி" என்றபடி அவதாரத்திற் பிற்பட்டவர்களுக்கும் இழக்க வேண்டாதபடி எம்பெருமான் அர்ச்சாவதாரமாய்க்கொண்டு உகந்தருளின திருப்பதிகளிலே அவ்வவதார குணசேஷ்டிதங்களெல்லாம் நன்கு விளங்குமாறு நிற்கிறபடியை அநுஸந்தித்து அத்திருப்பதிகளில் அவனை அநுபவிக்க விரும்பி, அவை யெல்லாவற்றினும் "தென்னனுயர் பொருப்புந் தெய்வ வடமலையும், என்னுமிவையே முலையா வடிவமைந்த" என்றபடி ஸ்ரீபூமிப்பிராட்டிக்குத் திருமுலைத் தடங்களாய் அமைந்தமையால் அவ்வெம்பெருமானுக்கு மிகவும் அபிமத ஸ்தலமா யிராநின்ற திருமாலிருஞ் சோலைமலை, திருவேங்கடமலை என்ற தென்வடமலை யிரண்டினுள் தென் திருமலையில் நிற்கிற நிலையிலே மூன்று அநுபவிப்பதாக இழிந்து 'அங்கு எழுந்தருளியிருக்கிற அழகரின்காட்டில் அம்மலை தானே ப்ராப்யம்' என்று அநுஸந்தித்து, அத்திருமலையினுடைய வைபவத்தை வகைவகையாகப்பேசி மகிழ்கிறார் இத்திருமொழியில்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் "கிளரொளியிளமை" என்ற திருமொழியினாலும், திருமங்கையாழ்வார் "மூன்றுறவுரைக்கேன்" என்ற திருமொழியினாலும் இங்ஙனமே அனுபவித்தனர் என்க.

இதனால், தத்விஷயத்திற் காட்டில் ததீய விஷயமே ப்ராப்யத்துக்கு எல்லை நிலம் என்பது பெறப்படுமென்றுணர்க.

அலம்பா வெருட்டாக் கொன்று திரியு மரக்கரைக்
குலம்பாழ் படுத்துக் குலவிளக் காய்நின்ற கோன்மலை
சிலம்பார்க்க வந்து தெய்வ மகளிர்க ளாடுஞ்சீர்ச்
சிலம்பாறு பாயுந் தென்றிரு மாலிருஞ் சோலையே. (க)

அலம்பா—(ப்ராணிகளை) அலையச்செய்தும்
வெருட்டா—பயப்படுத்தியும்
கொன்று—உயிர்க்கொலைசெய்தும்
திரியும்—திரிந்துகொண்டிருந்த
அரக்கரை—ராக்ஷஸர்களை
குலம் பாழ் படுத்து—ஸகுடும்பமாகப்பாழாக்கி
குலம் விளக்கு ஆய் நின்ற கோன் — (இக்ஷ்வாகு) வம்சத்துக்கு விளக்காய் நின்றபெருமாள் (எழுந்தருளியிருக்குமிடமான)
மலை—திருமலையாம்.
தெய்வ மகளிர்கள்—தேவஸ்த்ரீகள்
சிலம்பு ஆர்க்க—(தமது) பாதச்சிலம்புகள் ஒலிக்கும்படி
வந்து—(பூலோகத்தில்) வந்து
ஆடும் சீர்—நீராடும்படியான பெருமையையுடைய
சிலம்பு ஆறு—நூபுரகங்கையானது
பாயும்—(இடைவிடாமல்) பெருகப்பெற்றுள்ள
தென் திருமாலிருஞ் சோலை — அழகிய திருமாலிருஞ்சோலையானது.—

குறிப்பு:—அலம்பா, வெருட்டா—'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகால வினையெச்சம்; அலம்பி, வெருட்டி என்றபடி: அலம்புதல்—'இவர்களின் கீழ் நமக்குக் குடியிருக்கமுடியாது' என்று நிலை தளும்பச்செய்தல்; பிறவினையில் வந்த தன்வினை. [சிலம்பு ஆர்க்க இத்யாதி.] தேவஸ்த்ரீகள் முன்பு நூபுரகங்கையில் நீராட வரும்போது ராவணாதி ராக்ஷஸர்களுக்கு அஞ்சித் தாங்கள் இருப்பிடத்தை விட்டுப் புறப்படுவது அவ்வரக்கர்கட்குத் தெரியாமைக்காகத் தம் காற்சிலம்புகளைக் கழற்றிவிட்டு வருவார் சிலரும், அவை ஒலிசெய்யாதபடி பஞ்சையிட்டடைத்துக்கொண்டு வருவார் சிலருமாயிருப்பர்கள்; எம்பெருமான் அவதரித்து, அரக்கரைக் குலம் பாழ்படுத்த பின்புச் சிலம்பு ஆர்க்க வருவர்களென்க.

சிலம்பாறு—நூபுரகங்கையென்று வடமொழிப் பெயர்பெறும். திருமால் உலகமளந்த காலத்தில் மேலே ஸத்யலோகத்திற் சென்ற அப்பெருமானது திருவடியைப் பிரமன் தன்கைக்கமண்டல தீர்த்தத்தாற் கழுவிவிளக்க, அக்காற்சிலம்பினின்று தோன்றியதனாற் சிலம்பாறு என்று பெயராயிற்று. நூபுரகங்கை என்ற வடமொழிப் பெயரும் இது பற்றியதே; நூபுரம்—சிலம்பு; ஒருவகைக்காலணி. இனி இதற்கு வேறுவகையாகவும் பொருள் கூறுவர்; ஆழ்வான், ஸுந்தரபாஹுஸ்தவத்தில், "வகுளதரஸரஸ்வதீவிஷக்தஸ்வரரஸபாவயுதாஸு கிந்நரீஷு । த்ரவதிஷதஷி யத்ர ஸைலாஸந்தௌ ஸ ஜயதி ஸுந்தரஸந்நிஹ வநஸௌந்தரீஷு ஸுந்தரஸ்து ॥" என்றருளிச் செய்தபடி * மரங்களுமிரங்கும் வகை மணிவண்ணவோவென்றுகூவின ஆழ்வார் பாசுரங்களைக்கேட்ட குன்றுகள் உருகிப்பெருகா நின்றமையால், அதற்குச் சிலம்பாறென்று பெயராயிற்று; சிலம்பு—குன்றுக்கும் பெயர்; "சிலம்பொலி ஞெகிழிகுன்றும்" என்பது சூளாமணி நிகண்டு. இப்பொருளை ரஸோக்தியின்பாற் படுத்துக.

**திருமாலிருஞ்சோலை**—நூற்றெட்டுத் திருப்பதிகளுள் பாண்டி நாட்டுத் திருப்பதி பதினெட்டில் ஒன்றும், 'வ்ருஷாத்ரி' என்று வடமொழியிற் கூறப்படுவதும், 'கோயில் திருமலை பெருமாள் கோயில் அழகர் திருமலை' என்று சிறப்பாக எடுத்துக் கூறப்படுகிற நான்கு திருப்பதிகளுள் ஒன்றும், "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ் சோலையென்னும், பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர்" என்றபடி ஆன்றோர் கொண்டாடப்பெற்ற மஹிமையுடையது மானதொரு திவ்யதேசம். "ஆயிரம்பூம் பொழிலு முடைமாலிருஞ்சோலையதே" என்றபடி மிகப்பெரிய பலசோலைகளையுடைய மலையாதலால், 'மாலிருஞ் சோலைமலை' என்று திருநாமமாயிற்று; மால்-பெருமை; இருமை-பெருமை: இவ்விரண்டும் தொடர்ந்து ஒருபொருட் பன்மொழியாய் நின்றன; இனி, மால்-உயர்ச்சி, இருமை—பரப்பு என்று கொண்டு, உயர்ந்து பரந்த சோலைகளையுடைய மலையென்றலுமுண்டு. **திரு**—மேன்மை குறிக்கும் அடைமொழி. **தேன்**—அழகு; பரதகண்டத்தில் தென்னாடாகிய பாண்டிய நாட்டிலுள்ள மலையாதல்பற்றித் 'தென் திருமாலிருஞ் சோலை' எனப்பட்டதாகவும் கொள்ளலாம். ... ... ... (௧)

வல்லாளன் றோளும் வாளரக் கன்முடி யுந்தங்கை
பொல்லாத மூக்கும் போக்குவித் தான்பொருந் துமலை
எல்லா விடத்திலு மெங்கும் பரந்துபல் லாண்டொலி
செல்லா நிற்குஞ்சீர்த் தென்றிரு மாலிருஞ் சோலையே. (௨)

பல்லாண்டு ஒலி—மங்களாசாஸநகோஷமானது
எல்லா இடத்திலும்—எல்லாவிடங்களிலும்
எங்கும்—திருமலையின் பரப்பெங்கும்
பரந்து செல்லா நிற்கும் சீர்—பரவிச் செல்லும்படியான பெருமையையுடைய
தென் திருமாலிருஞ்சோலை—;
வல் ஆளன்—வலிய ஆண்மையையுடையனும்
வாள்—(சிவனிடத்துப்பெற்ற) வாளையுடையனுமான
அரக்கன்—ராவணனுடைய
தோளும் முடியும்—தோள்களுந் தலைகளும்,
தங்கை—(அவனது) தங்கையாகிய சூர்ப்பணகையினது
பொல்லாத மூக்கும்—கொடியமூக்கும்
போக்குவித்தான்—அறுப்புண்டுபோம்படி பண்ணின எம்பெருமான்
பொருந்தும்—பொருந்தியெழுந்தருளியிருக்குமிடமான
மலை—திருமலையாம்.

குறிப்பு:—வல்லாளன் என்று—பாணாஸுரனைச் சொல்லிற்றாய், அவனது தோள்களையும், ராவணனது முடிகளையும் போக்குவித்தானென்று உரைத்தலுமொன்று. திருமலையில் ஓரிடந்தப்பாமல் எங்கும் 'பல்லாண்டு பல்லாண்டு' என்ற மங்களாசாஸந கோஷமேயா யிருக்குமென்பது, பின்னடிகளின் கருத்து. **எல்லாவிடத்திலும்**—அநந்யப்ரயோஜநரோடு ப்ரயோஜநாந்தர பரரோடு வாசியற எல்லாவிடங்களிலு மென்றபடி: * புனத்தினைக்கிள்ளிப்புதுஅவிக்காட்டுகிற குறவரும் "உன் பொன்னடிவாழ்க" என்று மங்களாசாஸநம் பண்ணுவர்கள் என்று மேல், "துக்கச்சுழலை" என்ற திருமொழியில் அருளிச்செய்வது காண்க. ... ... ... ... (௨)

**தக்கார் மிக்கார் களைச்சஞ் சலஞ்செய்யுஞ் சலவரைத்**
**தெக்கா நெறியே போக்குவிக் குஞ்செல்வன் பொன்மலை**
**எக்கா லமுஞ்சென்று சேவித் திருக்கு மடியரை**
**அக்கா னெறியை மாற்றுந்தண் மாலிருஞ் சோலையே.** (௯)

எ காலமும் - எப்போதும்
சென்று—போய்
சேவித்திருக்கும் — திருவடிதொழாநின்று
அடியரை—பாகவதர்களை [ள்ள
அ கான்நெறியை மாற்றும் } அப்படிப்பட்ட [கொடுமையான] (பாவக்) காட் [டுவழியில்நின்றும் விலக்கக்கடவதும்
தண்—தாபஹரமுமான
மாலிருஞ்சோலை;—
தக்கார் மிக்கார்களை—(க்ருபாவிஷயத்தில்) [எம்பெருமானை ஒத்தவர்களும் (அவனிலும்)மேற்பட்டவர்களுமாயுள்ள மஹாத்மாக்களை]
சஞ்சலம் செய்யும் - அலைத்துவருத்தாநின்றுள்ள
சலவரை - க்ருத்ரிமப்பயல்களை
தெக்கு ஆம் நெறியே—தென்திசையிலுள்ள நரகமார்க்கத்திலே
போக்குவிக்கும்—போகும்படிபண்ணுகின்ற
செல்வன்—ச்ரிய:பதியான எம்பெருமான் (எழுந்தருளியிருக்குமிடமான)
பொன் மலை—அழகியதிருமலையாம்.

குறிப்பு:—தக்கார்—எம்பெருமானுக்குத் தகுதியானவர்கள்; அதாவது நினைவு ஒற்றுமை யுற்றிருக்கை—'ஸர்வாத்மாக்களும் உய்வு பெறவேணும்' என்ற அருள் ஒத்திருக்கை. மிக்கார்—அவ்வருள்விஷயத்தில் எம்பெருமானுக்கும் மேற்பட்டவர்கள்; அதாவது—எம்பெருமான் இவ்வாத்துமாக்களுடைய குற்றங்களின் மிகுதியையும், தனது ஸ்வாதந்திரியத்தையுங்கொண்டு சிற்றமுற்று, 'பொறுக்கமாட்டேன், எந்நாளும் ஆஸுரயோநிகளில் தள்ளிவிடுவேன்' என்று ஒருகால் சொன்னாலுஞ் சொல்லக்கூடும்; பாகவதர்கள் அங்ஙனன்றியே "சலிப்பின்றி ஆண்டெம்மைச் சன்மசன்மாந்தரங் காப்பர்" என்றபடி என்றுமொக்க அநுக்ரஹசீலராயிருப்பர் என்க. இதுபற்றியே பாகவதர்களை ஆச்ரயிக்க வேண்டுமிடத்துப் புருஷகாரந்தேடவேண்டா என்றதும். இப்படிப்பட்ட மஹான்களை நிலைகுலைத்துக் கொடுமைபுரிகின்ற கபடராக்ஷஸாதிகளை எம்பெருமான் நரகத்திற் புகச்செய்கின்றமை முன்னடிகளிற் கூறியது. சஞ்சலம்—வடசொல். சலவர்—ஃஊ என்ற வட சொல்லடியாப் பிறந்த பெயர்; கபடத்தை யுடையவர்கள் என்பது பொருள். [தெக்கா நெறியே] யமன் பட்டணம் தக்ஷிணதிக்கிலே யாகையாலும், நரகத்துக்குப்போவது அவ்வழியாலே யாகையாலும் "தெக்கா நெறி" என்று யாம்யமார்க்கத்தைச் சொல்லுகிறது. தெக்கு—தக்ஷிண என்ற வடசொற் சிதைவு; "அவாசி தக்கணம் யாமியந் தெக்கு, சிவேதை மற்றிவை தெற்கெனலாகும்" என்ற திவாகர நிகண்டு காண்க. செல்வன்—பிராட்டியை யுடையவன்; *போதமர் செல்வக்கொழுந்திறே பிராட்டி. கான் நெறி—காட்டுவழி; பாவக்காட்டு வழி என்க; "இறவுசெய்யும் பாவக்காடு" என்பது காண்க. ... (௯)

**ஆனுயர் கூடி யமைத்த விழவை யமரர்தங்**
**கோனார்க் கொழியக் கோவர்த் தனத்துச்செய் தான்மலை**

வானாட் டில்நின்று மாமலர்க் கற்பகத் தொத்திழி
தேனாறு பாயுந் தென்திரு மாலிருஞ் சோலையே. (௪)

வான் நாட்டில்—ஸ்வர்க்கலோகத்திலுள்ள
மா மலர்—பெரியபூக்களையுடைய
கற்பகம்—கல்பவ்ருக்ஷத்தினுடைய
தொத்தில் நின்று—பூங்கொத்தில்நின்றும்
இழி—பெருகாநின்ற
தேன்—தேனானது
ஆறு பாயும்—ஆறாய்க்கொண்டு ஓடாநிற்கிற
தென் - அழகையுடைய
திரு மாலிருஞ்சோலை—;
ஆன் ஆயர்—பசுக்களுக்குத்தலைவரான
[இடையர்கள்

கூடி—ஒன்றுசேர்ந்து
அமைத்த—(இந்திரனுக்காக) ஏற்படுத்தின
விழவை—ஸமாராதனையை
அமரர் தம் கோனார்க்கு ஒழிய—(அந்த) தேவேந்திரனுக்குச் சேரவொட்டாமல்
[தடுத்து
கோவர்த்தனத்து—கோவர்த்தனமலைக்கு (ச்
[சேரும்படி)
செய்தான் மலை—செய்தருளின கண்ணபிரா
[னுடைய திருமலையாம்.

குறிப்பு:—முன்னடிகளிற் கூறப்பட்ட வரலாறு கீழ்ப்பல விடங்களில் விரித்துரைக்கப் பட்டமை காண்க. தன் அபிமானத்திலகப்பட்ட அவ்விடையர்களை அந்யசேஷத்வத்தில் நின்றும் மீட்டு மலைக்குச் சேஷமாக்கி யருளிய வாறு போல, இங்கும் ஸகல சேதநர்களையும் திருமலையாழ்வார்க்குச் சேஷமாக்குகைக்காக எம்பெருமானெழுந்தருளி யிருக்கின்றனன் என்றகருத்துத் தோன்றும் இவ்வரலாற்றை இங்குக்கூறியதனால். செய்தான்—ஆறாம் வேற்றுமைத் தொகை.

தேவலோகத்துள்ள கல்பவ்ருக்ஷத்திற் பூங்கொத்துக்களினின்று பெருகின மதுதாரைகளானவை, திருமாலிருஞ் சோலைமலையில் ஆறாக வோடா நின்றன வென்பது—பின்னடிகளின் கருத்து. இதனால், அம்மலையினதுமிக்க உயர்ச்சியைக் கூறியவாறும். ... ... ... (௪)

ஒருவா ரணம்பணி கொண்டவன் பொய்கையிற் கஞ்சன்றன்
ஒருவா ரணமுயி ருண்டவன் சென்றுறை யும்மலை
கருவா ரணந்தன் பிடிதுறந் தோடக் கடல்வண்ணன்
திருவாணை கூறத் திரியுந்தண் மாலிருஞ் சோலையே. (௫)

பொய்கையில் - பொய்கைக்கரையில்
ஒரு வாரணம்-(ஸ்ரீகஜேந்திராழ்வானாகிற)
[ஒருயானையினிடத்து
பணி—கைங்கரியத்தை
கொண்டவன் - ஸ்வீகரித்தருளினவனும்,
கஞ்சன் தன் - கம்ஸனுடைய
ஒரு வாரணம் - (குவலயாபீடமென்ற)
[ஒருயானையினுடைய
உயிர்—உயிரை
உண்டவன்—முடித்தவனுமான கண்ணபி
[ரான்
சென்று - எழுந்தருளி
உறையும் - நித்யவாஸம்பண்ணப்பெற்ற
மலை—மலையாவது ;—

கரு வாரணம்—கறுத்ததொருயானை,
தன் பிடி—தன்னுடையபேடையானது
துறந்து ஓட - (ப்ரணயரோஷத்தினால்)
[தன்னைவிட்டிட்டு ஓடப்புக,
(அதுகண்ட அவ்யானையானது)
கடல்வண்ணன் திரு ஆணை கூற—"கடல்போன்றநிறமுடைய அழகர்மேலாணை"
[என்றுசொல்ல,
திரியும் - (அப்பேடையானது அவ்வாணைக்குக் கட்டுப்பட்டு அப்புறம்போக மாட்டாமல்) மீளாநின்றுள்ள
தண் - குளிர்ந்த
மாலிருஞ்சோலை - திருமாலிருஞ் சோலைம
[லையாம்.

**குறிப்பு:**—முன்னடிகளிலடங்கிய இரண்டு வரலாறுகளுங் கீழ்விரித்துரைக்கப் பட்டுள்ளன. வாரணம்—வடசொல். "ஆனைகாத்தோரானைகொன்று" என்ற திருச்சந்த விருத்தத்தை ஒருபுடை ஒப்பு நோக்கத்தக்கவை, முன்னடிகளென்க. [ஒருவாரண மித்யாதி.] ஒரு யானையைக்காத்து, ஒருயானையைக் கொன்றான்; ஒரு அத்தானைக் காத்து ஒரு அத்தானைக் கொன்றான்;—(அர்ஜுநனும் சிசுபாலனும்.) ஒரு ராக்ஷஸனைக் காத்து, ஒரு ராக்ஷஸனைக் கொன்றான்; (விபீஷணனும் ராவணனும்.) ஒரு குரங்கைக் காத்து, ஒரு குரங்கைக்கொன்றான்; (ஸுக்ரீவனும் வாலியும்.) ஒரு பெண்ணைக் காத்து, ஒரு பெண்ணைக்கொன்றான்; (அஹல்யையும் தாடகையும்.) ஒரு அம்மானைக்காத்து, ஒரு அம்மானைக்கொன்றான்; (யசோதைக்கு உடன்பிறந்தவரும் நப்பின்னை தந்தையுமாகிய கும்பரும், கம்ஸனும்.) என்றிவை போன்ற அடுக்குக் காண்க.

பின்னடிகளின் கருத்து;—திருமாலிருஞ்சோலைமலையிலுள்ள ஒருயானைக்கும் அதன் பேடைக்கும் பிரணயகலஹம் நேர்ந்து, அதனால் அப்பேடையானது அவ்யானையைச் சினந்து அதனைத் துறந்தோடப்புக, யானையானது அப்பேடையை மற்ற உபாயமொன்றினாலும் நிறுத்தமாட்டாமல், "அழகர் ஸ்ரீபாதத்தின்மேலாணை; நீ என்னைத்துறந்து அகலலாகாது" என்று ஆணையிட, அப்பேடையானது அவ்வாணையை மறுக்கமாட்டாமல் மீளாநிற்குமென்ற விசேஷத்தைக் கூறியவாறு. "ஸுந்தரதோர்வ்ராஜாஞ்ஞை (ஞ்ஞா)ந காதரவசா நயாயிநிகரிணீ ப்ரணயஜகலஹ ஸாயிய-த வநாத்ரி ஸ்வஷஸுந்தரதோஷ்ண ॥" என்ற ஸுந்தர பாஹுஸ்தவச்லோகமு மிப்பொருளதே யென்றுணர்க. ... ... ... ... (ரு)

ஏவிற்றுச் செய்வா னேன்றெதிர்ந் துவந்த மல்லரைச்
சாவத் தகர்த்த சாந்தணி தோட்சது ரன்மலை
ஆவத் தனமென் றமரர் களும்நன் முனிவருஞ்
சேவித் திருக்குந் தென்றிரு மாலிருஞ் சோலையே. (சு)

ஏவிற்று—(கம்ஸன்) ஏவினகாரியங்களை
செய்வான் - செய்துமுடிப்பதற்காக
ஏன்று எதிர்ந்து வந்த } துணிந்து எதிரிட்டுவந்த
மல்லரை—(சாணூரன்முதலிய) மல்லர்களை
சாவ தகர்த்த—முடியும்படியாக நொறுக்கி[னவனும்
சாந்து—(கூனியிட்ட) சாந்தை
தோள்—தோள்களையுடையனும்
சதிரன்—ஸமர்த்தனுமானகண்ணபிரான்[(எழுந்தருளியிருக்கிற)

மலை—மலையாவது;—
அமரர்களும் - (பிரமன்முதலிய) தேவர்க
நல் முனிவரும் - (ஸநகர்முதலிய)மஹர்ஷி[களும்
ஆவத்து தனம் என்று } ஆபத்காலத்துக்குத் துணையாயிருக்குமிடமென்று (நினைத்து)
சேவித்து இருக்கும்—ஸேவித்துக்கொண்டு[இருக்குமிடமான
தென் திருமாலிருஞ் சோலை—.

**குறிப்பு:**—கண்ணபிரான், நம்பி மூத்தபிரானுடன் கம்ஸன்மாளிகைக்கு எழுந்தருளும்போது இடைவழியிற் கூனியிட்டசாந்தைஅணிந்துள்ள தனது

திருத்தோள்கள் இறையுங் குறியழியாதபடி சாணூரமுஷ்டிகாதி மல்லர்களைப் பொருதழித்தமை, முன்னடிகளிற் கூறியது. கூனி சாந்து சாத்தினவுடனே பெண்கள் கண்ணாலே இலச்சினையிட்டு விடுகையாலே அச்சாந்தின் குறியையழிக்க இவனுக்குத் தரமில்லையாம். "சாவத்தகர்த்தசாந்தணிதோள்" என்ற சொற்சேர்க்கைப் போக்கால் இக்கருத்துத் தோன்றுமென்ப.

தேவரும் முனிவரும் தமக்குப் புகலிடமாகக்கொண்டு நித்தியவாஸம் பண்ணுமிடம் திருமாலிருஞ் சோலையென்பது, பின்னடிகளின் கருத்து. ஆவத்தனம்—ஆபத்தனம்; ஆபத்காலங்களுக்கு உதவக்கூடிய பொருள்; இங்கு ஆவத்தன மென்றது-அழகரைக் கணிசித்தென்னலாம். ... (சு)

மன்னர் மறுக மைத்துனன் மார்க்கொரு தேரின்மேல்
முன்னங்கு நின்று மோழை யெழுவித் தவன்மலை
கொன்னவிற் கூர்வேற் கோன்நெடு மாறன்தென் கூடற்கோன்
தென்னன் கொண்டாடுந் தென்றிரு மாலிருஞ் சோலையே. (எ)

மன்னர் - (குருதேசத்து) அரசர்கள்
மறுக - குடல்குழம்பும்படி
மைத்துனன்மார்க்கு—மைத்துனன்மாரான [பாண்டவர்களுக்கு (த்துணையாகி)
ஒரு தேரின் மேல்—ஒருதேரிலே
முன் அங்கு நின்று—முற்புறத்திலேநின்று [கொண்டு
மோழை எழுவித் தவன் மலை (நீர்நரம்பில் விட்ட வாருணாஸ்த்ரத்தின் வழியே) கீழுண்டான நீரானது குமிழியெறிந்து கிளரும்படிபண்ணின கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) மலையாவது;—
கொல் நவில் - கொலையையே தொழிலாக [வுடைய
கூர் - கூர்மைபொருந்திய
வேல் - வேலையுடையவனும்
கோன் - ராஜநீதியை வழுவாநடத்துமவ [னும்
நெடு - பெருமைபொருந்தியவனும்
மாறன் - 'மாறன்' என்னும்பெயருடைய [வனும்
தென்—அழகிய
கூடல்—'நான்மாடக்கூடல்' என்ற பெய [ரையுடைய மதுரைக்கு
கோன்—தலைவனும்
தென்னன்—பாண்டிநாட்டுத்தலைவனுமான [மலயத்வஜராஜனாலே
கொண்டாடும் - கொண்டாடப்பெற்ற
தென் திருமாலிருஞ்சோலை—.

குறிப்பு:—அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகள் தண்ணீர்க்குவிடாய்த்து இளைத்தவளவில், அவன்பக்கல் பக்ஷபாதியான கண்ணபிரான், கடினமான ஸ்தலத்திலும் நீர் நரம்பு அறியவல்லவனாதலால், அங்கு வாருணாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கீழுள்ளநீரை வெளிக்கிளப்பிக் குதிரைகளை விட்டு நீரூட்டிப் புரட்டியெழுப்பிக்கொண்டு போந்து பூட்டிக்கொண்டுவந்து முன்னேநிறுத்த,இதைக்கண்ட மாற்றரசரெல்லாம் 'அர்ஜுநன்பக்கல் இக்கண்ணனுக்குப் பக்ஷபாதமிருந்தபடியென்!, இனி நாம் இவனை வெல்லுகையென்று ஒன்றுண்டோ?' என்று குடல்மறுகினமை, முன்னடிகளிற் கூறப்பட்டது. மறுக—மனங் குழம்புகைக்காக. முன் அங்கு நின்று—ஸாரத்யம் பண்ணுகைக்கு உரிய இடத்தில் நின்று என்றபடி. மோழை—கீழாறு; "ஆழியானென்னுமாழமோழையில்" என்றவிடமுங்காண்க. எழுவித்தலாவது-மேலெழும்படி செய்தல்.

அகஸ்தியமுனிவன் வீற்றிருக்கும் மலய பர்வதத்திற்சென்று 'தர்மமே நடத்தக்கடவேன்' என்று மலயபர்வதத்தையெழுதிக் கொடியெடுத்த 'மலயத்வஜன்' என்ற அரசன் தேரேறிக் கங்கைநீராடப் போகாநிற்கச் செய்தே, *மதிதவழ் குடுமியளவிலே சென்றவாறே தேர் வடக்கு ஓடாமல்நிற்க, அவ்வரசன் அவ்விடத்திலே தேரை நிறுத்தி, 'இங்கே தீர்த்தவிசேஷமும் எம்பெருமானும் ஸந்நிதிபண்ணி யிருக்கவேணும்' என்று நினைத்துஇறங்கிஆராய்ந்து பார்க்க, அவ்விடத்தில் நித்யஸந்நிஹிதரான அழகர் அவ்வரசனை நோக்கி, 'இவ்வாற்றிலே நீராடு' என்று நியமித்தருள, நாமங்கேட்டுணர்ந்து நீராட வேண்டுகையால் 'இவ்வாற்றுக்குப் பெயர் என்?' என்று அரசன்கேட்க, 'முன்பு நாம் உலகளந்தபோது பிரமன் திருவடி விளக்கினகாலத்தில் நம் பாதச்சிலம்பில் நீர் இதிலே தெறித்துச் 'சிலம்பாறு' என்று பெயர்பெற்றது என்று அழகர் அருளிச்செய்ய, அதுகேட்ட அரசன் அவ்வாற்றில் நீராடி, கங்காஸ்நாநவிருப்பத்தையுந் தவிர்ந்து அத்திருமாலிருஞ் சோலைமலையிற்றானே பேரன்பு பூண்டிருந்தானென்ற வரலாற்றைத் திருவுள்ளம்பற்றித் "தென்னன் கொண்டாடும்" என்றருளிச் செய்தார். **தென்னன்**—தெற்கிலுள்ளான்; திசையடியாப் பிறந்தபெயர்; இந்த ஜம்பூத்வீபத்தில் தென்திசைக்கண்ணதான பரதகண்டத்தினுள்ளும் தென்கோடியிலுள்ளதாதலால் தென்னுடெனப்படும் பாண்டிய நாட்டை ஆளுதல்பற்றி, அவ்வரசனுக்குத் **தென்னன்** என்று பெயராம். இதிற் பகுதியாகிய **தெற்கு** என்பது-ஈற்றுஉயிர்மெய் கெட்டு றகரம் னகரமாயிற்று. ... ... (எ)

குறுகாத மன்னரைக் கூடு கலக்கிவெங் கானிடைச்
சிறுகால் நெறியேபோக் குவிக்குஞ் செல்வன் பொன்மலை
அறுகால் வரிவண் டுகளா யிரநா மஞ்சொல்லிச்
சிறுகாலைப் பாடுந் தென்றிரு மாலிருஞ் சோலையே. (அ)

குறுகாத - (திருமலையை) அணுகாத
மன்னரை - அரசர்களுடைய
கூடு - இருப்பிடத்தை
கலக்கி - குலைத்து [அழித்து]
வெம் - தீக்ஷ்ணமான
கான் இடை - காட்டிலே
சிறு கால் நெறியே - சிற்றடிவழியாக
போக்குவிக்கும் - (அவ்வரசர்களை) ஓட்டுகின்ற
செல்வன்-திருமால்(எழுந்தருளியிருக்கிற)
பொன் மலை-சிறந்தமலையாவது;—
அறு கால்-ஆறுகால்களையுடைய
வரி வண்டுகள் - அழகியவண்டுகளானவை
சிறு காலை - விடியற்காலத்திலே
ஆயிரம் நாமம் சொல்லி - (எம்பெருமானுடைய) ஸஹஸ்ரநாமங்களை ஆளத்தி வைத்து
பாடும் - பாடுமிடமான
தென் திருமாலிருஞ்சோலை—.

குறிப்பு:—திருமலையைக் கிட்டி அநுகூலராய் வாழலாயிருக்க, அது செய்யாமல் விலகுகின்ற அஹங்காரிகளைக் குடியழித்துக் காட்டில் ஓட்டியருளும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் மலை என்பது, முன்னடிகளின் கருத்து. **சிறு கால் நெறி**-கொடிவழி யென்பது தேர்ந்த பொருள்; 'நேர்வழியே போனால் யாரேனும் பின்தொடர்ந்து நலியக்கூடும்' என்றஞ்சிக் கொடிவழியே ஓடுவர்களாம்.

பின்னடிகளுக்கு உள்ளுறை பொருள்; ஸ்வாபதேசத்தில், திருப்பாணாழ்வார், தம்பிரான்மார் போல்வாரை வண்டு என்கிறது. வண்டுகள்தேனை விட்டு மற்றொன்றைப் பருகமாட்டாமையாலே ஐகாந்திகமென்று பெயர் பெறும்; இவர்களும் "உளங்கனிந்திருக்கு மடியவர் தங்களுள்ளத்தூறிய தேனை" என்ற பகவத் விஷயமாகிற தேனை விட்டு மற்றொன்றை விரும்பார்கள். வண்டுகள் (ஆறுகால்களை யுடைமையால்) ஷட்பத நிஷ்ட்டமெனப்படும்; இவர்களும் ஷட்பத நிஷ்ட்டர்கள்; ஷட்பதம்—த்வயம்; அதாவது— "ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாயநம:" என்ற இரண்டு வாக்கியம். இப்படி த்வயாநுஸந்தாநபரர்களான மஹாநுபாவர்கள் எம்பெருமானுடைய திருநாமங்களை அநுஸந்தித்துக் கொண்டு சிற்றஞ் சிறுகாலையில் அடிபணியுமாற்றைக் கூறியவாறு. ... (அ)

சிந்தப் புடைத்துச் செங்குருதி கொண்டு பூதங்கள்
அந்திப் பலிகொடுத் தாவத் தனஞ்செய் யப்பன்மலை
இந்திர கோபங்க ளெம்பெரு மான்கனி வாயொப்பான்
சிந்தும் புறவில் தென்றிரு மாலிருஞ் சோலையே. (௯)

பூதங்கள் - ஸ்ரீவைஷ்ணவபூதங்களானவை (தேஹபோஷணமே பண்ணிக்கொண்டுதிரியும் நாஸ்திகர்களைக் கண்டால், அவர்களை)
சிந்த - (அவயவங்கள்)சிதறும்படி
புடைத்து—அடித்துக்கொன்று
செங் குருதி கொண்டு-(அதனால்அவர்களுடலினின்று புறப்படுகிற) சிவந்த ரத்தத்தைக்கொண்டு
அந்தி - அந்திப்பொழுதிலே
பலி கொடுத்து - (எம்பெருமானுக்கு) ஆராதநரூபமாக ஸமர்ப்பித்து
ஆபத்து தனம் செய் } ஆபத்காலத்துக்குத் துணையாமிடமென்று ஸேவிக்குமிடமும்
அப்பன் - ஸ்வாமி (எழுந்தருளியிருக்குமிடமுமான)
மலை—மலையாவது;—
இந்திரகோபங்கள் - பட்டுப்பூச்சிகளானவை
எம்பெருமான் - அனைவர்க்கும் ஸ்வாமியான அழகருடைய
கனி வாய்—(கொவ்வைக்)கனிபோன்ற திருவதரத்திற்கு
ஒப்பான்—போலியாக
சிந்தும் - (கண்டவிடமெங்கும்) சிதறிப்பறக்கப்பெற்ற
புறவில்—தாழ்வரையையுடைய
தென் திருமாலிருஞ்சோலை—.

குறிப்பு:—பூதயோநியாயிருக்கச் செய்தேயும், வைஷ்ணவநாமரூபங்களோடு கூடி, பகவத்பாகவத பக்தியையுடையனவாய்த் திரியும் பூதங்கள் திருமாலிருஞ்சோலைமலையிற் பல உண்டு; அவை, அத்திருமலையில் யாரேனும் ஆஸ்திகர்களாக எழுந்தருளக் கண்டால், அவர்களெதிரில் நிற்கமாட்டாமல் அஞ்ஜலி பண்ணிவிட்டு மறைந்திருக்கும்; தேஹபோஷணமே பண்ணித்திரியும் நாஸ்திகர்களைக் கண்டால், அவர்களை அவயவங்கள் சிதற அடித்துக்கொன்று, அவர்களுடைய தேஹத்தில் நின்றும் பெருகுகின்ற ரத்தத்தைத் தம்முடைய சாதிக்குத் தக்கபடி தாம் பருகும்போது, அதனை அழகருக்கு ஆராதநரூபேண ஸமர்ப்பித்துப் பருகிக்கொண்டு, இங்ஙனே ஆபத்துக்கு உதவுமிடமென்று இத்திருமலையிலே வாழுமென்க. அந்தி-ஸந்த்யா.

பலி—வலி. ஊ௫ கோவம்-பட்டுப்பூச்சி: "சிந்தூரச் செம்பொடிப் போல் திருமாலிருஞ் சோலையெங்கும், இந்திரகோபங்களே யெழுந்தும் பரந்திட்டனவால்" என்றாள் ஆண்டாளும். ... ... ... (கூ)

எட்டுத் திசையு மெண்ணிறந் தபெருந் தேவிமார்
விட்டு விளங்க வீற்றிருந் தவிம லன்மலை
பட்டிப் பிடிகள் பகடுறிஞ் சிச்சென்று மாலைவாய்த்
தெட்டித் திளைக்குந் தென்திரு மாலிருஞ் சோலையே. (க0)

எண் இறந்த—கணக்கிடமுடியாதவர்களும்
பெரு - பெருமைபொருந்தியவர்களுமான
தேவிமார் - தேவிமாரானவர்கள்
எட்டு திசையும் - எட்டுத்திக்குகளிலும்
விட்டு விளங்க - மிகவும் ப்ரகாசிக்க (அவர்கள்நடுவே)
வீற்றிருந்த - பெருமைதோற்றஎழுந்தருளி [யிருந்த
விமலன் மலை - நிர்மலனானகண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) மலையாவது;
பட்டி—வேண்டினபடி திரியுமவையான
பிடிகள் - யானைப்பேடைகளானவை
மாலை வாய் - இரவிலே
பகடு - ஆண்யானையோடு
உறிஞ்சி சென்று - ஸம்ச்லேஷித்துப்போய்
தெட்டித் திளைக்கும் - (அந்தஸம்ச்லேஷ [ரஸம்) முற்றிக்களியா நிற்குமிடமான
தென் திருமாலிருஞ்சோலை—.

குறிப்பு:—கீழ் * கதிராயிர மிரவியில் "பொல்லாவடிவுடைப் பேய்ச்சி துஞ்ச" என்றபாட்டின் பின்னடிகளிற் கூறப்பட்டுள்ள கதை, இப்பாட்டின் முன்னடிகளி லடங்கியுள்ள தென்க. தேவிமார் எட்டுத்திசையும் விட்டுவிளங்க என்றது—பார்த்த பார்த்தவிடமெங்கும் தேவிமார் திரளின் பிரகாசமேயாயிருக்கையைக் கூறியவாறு.

பட்டிமேய்ந்து திரியும் பெட்டையானைகள், இராக்காலங்களில் தம் தம் களிறுகளோடு புணர்ந்து, அதனாலுண்டாகும் ரஸம் முற்றிக்களிக்கு மிடமென்று மலையின் சிறப்பைக் கூறுவது, பின்னடி. (பிடி—பெண்யானை; பகடு, களிறு—ஆண் யானை.) ... ... ... (க0)

மருதப் பொழிலணி மாலிருஞ் சோலை மலைதன்னைக்
கருதி யுறைகின்ற கார்க்கடல் வண்ணனம் மான்றன்னை
விரதங்கொண் டேத்தும் வில்லிபுத் தூர்விட்டு சித்தன்சொல்
கருதி யுரைப்பவர் கண்ணன் கழலிணை காண்பர்களே. (கக)

மருதம் பொழில் - மருதஞ்சோலைகளை
அணி—அலங்காரமாகவுடைய
மாலிருஞ்சோலை மலைதன்னை - திருமாலிருஞ்சோலை மலையை
கருதி - விரும்பி [கின்ற
உறைகின்ற — (அதில்) எழுந்தருளியிருக்
கார் கடல் வண்ணன் - கருங்கடல்போன்ற நிறத்தையுடைய
அம்மான் தன்னை - அழகப்பிரானுரை
விரதம் கொண்டு - (மங்களாசாஸநத்தையே) வ்ரதமாகக்கொண்டு
ஏத்தும் - துதிக்குமவரும்
வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்தவருமான
விட்டுசித்தன் - பெரியாழ்வார்
சொல் - அருளிச்செய்த இவற்றை
கருதி - விரும்பி
உரைப்பவர் - ஓதுமவர்கள்
கண்ணன் - கண்ணபிரானுடைய
கழல் இணை—திருவடிகளை
காண்பர்கள் - ஸேவிக்கப்பெறுவர்கள்,

குறிப்பு:—இத்திருமொழிகற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார், இப்பாட்டால். மருதப்பொழில்—அர்ஜுநவ்ருக்ஷங்கள். விரதம் கொண்டு—திருப்பல்லாண்டு பாடுகை என்றிறே பெரியாழ்வாருடைய வ்ரதம். (கக)

அடி:—அலம் வல்லாளன் தக்கார் ஆனுயர் ஒரு ஏவிற்று மன்னர் குறுகாத சிந்த எட்டு மருதம் உருப்பிணி.

இரண்டாந் திருமொழி உரை முற்றிற்று.

---

## மூன்றாந்திருமொழி
## உருப்பிணி நங்கை.

அவதாரிகை:—கீழ்த் திருமொழியிற் போலவே இத்திருமொழியிலும் திருமாலிருஞ் சோலைமலையின் வைபவத்தைப் பலவகையாகப் பேசி மகிழ்கிறார். [இதனால், ஒரு முறை அநுபவித்துப் பர்யாப்தி பெற்றிலர் என்பது போதரும்.] கீழ்த்திருமொழியில், ராமாவதாரகுண சேஷ்டிதங்கள் முன்னாக, கிருஷ்ணாவதார குணசேஷ்டிதங்களை அழகர் பக்கலிலே கண்டு அநுபவித்தார்; இத்திருமொழியில், கிருஷ்ணாவதார குணசேஷ்டிதம் முன்னாக, ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும் மற்றையவதாரங்களிற் சேஷ்டிதங்களையும் அவ்வழகர் பக்கலிற் கண்டநுபவிக்கிறார் என்று வாசிகாண்க.

"முத்துக் கோக்கவல்லவன் முகம்மாறிக் கோத்தவாறே அது விலைபெறுமா போலே, அவதாரகுண சேஷ்டிதங்களுக்கும், விசேஷ ஜ்ஞானவிவர் சேர்த்தனுபவிக்கிற வாசியாலே நிறமும் ரஸமுமுண்டாயிருக்குமிறே; ததீயவிஷயத்திலும் விசேஷண பேதத்தாலே விசேஷ்யத்துக்கு ரஸவிசேஷ முண்டாகக் கடவதிறே. ஆக, இது-கீழ்த் திருமொழிக்கும் இத்திருமொழிக்கு முண்டான விசேஷம்" என்ற பெரிய ஜீயருரை வாக்கியம் இங்கு அறியத்தக்கது. ... ... ... ... ...

உருப்பிணி நங்கைதன்னை மீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற
உருப்பனை யோட்டிக்கொண் டிட்டுறைத் திட்டவு றைப்பன்மலை
பொருப்பிடைக் கொன்றைநின் றமுறி யாழியுங் காசுங்கொண்டு
விருப்போடு பொன்வழங் கும்வியன் மாலிருஞ் சோலையதே. (க)

உருப்பிணி நங்கை தன்னை - ருக்மிணிப்பிராட்டியை
மீட்பான் - (கண்ணனுடைய தேரில் நின்றும்) திருப்பிக்கொண்டுபோவதற்காக
தொடர்ந்து - (அத்தேரைப்) பின்தொடர்ந்துகொண்டு
ஓடி சென்ற - ஓடிவந்த
உருப்பனை - 'ருக்மன்' என்றவனை
ஓட்டிக்கொண்டு இட்டு - ஓட்டிப்பிடித்துக்கொண்டு (தேர்த்தட்டிலே) இருத்தி
உறைத்திட்ட - (அவனைப்) பரிபவப்படுத்தின
உறைப்பன் மலை - மிடுக்கையுடையகண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற) மலையாவது;
கொன்றை - கொன்றைமரங்களானவை
பொருப்பு இடை நின்று - மலையிலே நின்று
முறி - மூறிந்த
பொன் - பொன்மயமான
ஆழியும் - மோதிரங்கள்போன்ற பூரம்புகளையும்
காசும் - (பொற்)காசுபோன்ற பூவிதழ்களையும்
கொண்டு - வாரிக்கொண்டு
விருப்பொடு - ஆதரத்துடனே
வழங்கும் - (பிறர்க்குக்) கொடுப்பவைபோன்றிருக்கப்பெற்ற
வியன் - ஆச்சரியமான
மாலிருஞ்சோலை அதே - அந்தத்திருமாலிருஞ்சோலையேயாம்.

குறிப்பு:—இதில் முன்னடிகளிற் கூறியவரலாறு-கீழ் * என்னாதன்றேனி யில் மூன்றும்பாட்டின் குறிப்புரையில்விரிக்கப்பட்டது. ருக்மிணியின்தமை யனுக்கு, ருக்மன் என்றும், ருக்மி என்றும் பெயர்வழங்குவர். உறைத்திடுதல்- மானபங்கம்பண்ணுதல்; ஐங்குடுமிவைத்தானிறே. உறைப்பன் - ருக்மிணிப் பிராட்டியைச் சிக்கனக்கைக்கொண்டு, மீட்கவந்த ருக்மனையும் பங்கப்படுத் திவிட்ட மிடுக்கையுடையவனென்றபடி.

பின்னடிகளின்கருத்து;—திருமாலிருஞ்சோலைமலையிலுள்ள கொன்றை மரங்கள், நரம்பும் இதழுமாகப் பூக்களைச் சொரிகின்றமை, முறிந்தபொன் மோதிரங்களையும் பொற்காசுகளையும் வாரிப் பிறர்களுக்குக் கொடுப்பது போன்றுள்ளது என்ற உத்ப்ரேக்ஷையைத் திருவுள்ளத்திற்கொண்டு, உபமே யார்த்தத்தை வெளிப்படையாக அருளிச்செய்யாமல் "தாவி வையங்கொண் டதடந் தாமரைகட்கே" என்றதுபோலக் கூறுகின்றனரென்க. கொன்றைப் பூவிலுள்ள நரம்பும் இதழும்-முறிந்த பொன்மோதிரமும் பொற்காசும்போ லேயிருக்கும்படிகாண்க. ... ... ... ... (௧)

கஞ்சனுங் காளிய னுங்களி றும்மரு தும்மெருதும்
வஞ்சனை யின்மடி யவளர்ந் தமணி வண்ணன்மலை
நஞ்சுமிழ் நாக மெழுந்தணவி நளிர் மாமதியைச்
செஞ்சுடர் நாவளைக் குந்திரு மாலிருஞ் சோலையதே. (௨)

கஞ்சனும் - கம்ஸனும்
காளியனும் - காளியநாகமும்
களிறும் - (குவலயாபீடமென்ற) யானை[யும்
மருதும் - இரட்டைமருதமரங்களும்
எருதும் - (அரிஷ்டாஸுரனென்கிற) ரிஷப[மும்
வஞ்சனையின் - (தந்தம்முடைய) வஞ்சனை[களாலே
மடிய - (தாம்தாம்) முடியும்படி
வளர்ந்த - (திருவாய்ப்பாடியில்) வளர்ந்த[ருளினவனும்
மணி வண்ணன் மலை } நீலமணிபோன்ற நிறமுடையவனுமான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கும்) மலையாவது;—

நஞ்சு - விஷத்தை
உமிழ் - உமிழாநின்றுள்ள
நாகம் - (மலைப்) பாம்பானது
நளிர் - குளிர்ந்த
மா மதியை—(மலைச்சிகரத்தின்மேல் தவழு[கின்ற) பூர்ணசந்திரனை (தமக்கு உணவாகநினைத்து)
எழுந்து - (படமெடுத்துக்) கிளர்ந்து
அணவி - கிட்டி
செம் சுடர்-சிவந்ததேஜஸ்ஸையுடைய
நா - (தனது) நாக்கினால்
அளைக்கும் - (சந்திரனை) அளையாநிற்குமி[டமான
திருமாலிருஞ்சோலை அதே—.

குறிப்பு:—முன்னடிகளி லடங்கிய வரலாறுகள் கீழ்ப்பலவிடங்களில் விரிக்கப்பட்டன. பின்னடிகளின் கருத்து;—திருமலையிலுள்ள மலைப்பாம்பு கள் பூர்ணசந்திரனைப் பார்த்து, அவனைத் தமக்கு ஆமிஷமாகக் கருதி, மேற் கிளர்ந்து தமது நாவினால் அச்சந்திரமண்டலத்தை அளையா நிற்குமென்று- இத்திருமலையின் ஓக்கத்தைக்கூறியவாறும். முதலடியில், "களிறும் மருதும்

மெருதும்" என இரண்டிடத்து மகரவொற்று மிக்கது-செய்யுளின்பம் நோக்கி யென்க. ... ... ... ... ... (௨)

மன்னு நரகன்றன் னைச்சூழ் போகி வளைத்தெறிந்து
கன்னி மகளிர்தம்மைக் கவர்ந்த கடல்வண் ணன்மலை
புன்னை செருந்தியொடு புனவேங் கையுங்கோங் கும்நின்று
பொன்னரி மாலைகள் சூழ்பொழில் மாலிருஞ் சோலையதே. (௩)

மன்னு - (தன்னை அழிவற்றவனாகநினைத்துப்) பொருந்திக்கிடந்த
நரகன் தன்னை - நரகாஸுரனை
சூழ் போகி - (கொல்லும்வகைகளை) ஆராய்ந்து
வளைத்து - (அவனைத் தப்பிப்போக முடியாதபடி) வளைத்துக்கொண்டு
எறிந்து - (திருவாழியாலே) நிரஸித்து
(அவனால் சிறையிலடைத்து வைக்கப்பட்டிருந்த)
கன்னி மகளிர் தம்மை - (பதினாறாயிரத்தொருநூறு) கன்னிகைகளையும்
கவர்ந்த - தான் கொள்ளைகொண்ட
கடல் வண்ணன் - கடல்போன்ற நிறமுடையனான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற)
மலை - மலையாவது;—
புன்னை - புன்னைமரங்களும்
செருந்தியொடு - செருந்திமரங்களும்
புனம் வேங்கையும் - புனத்திலுண்டாகிற வேங்கைமரங்களும்
கோங்கும் - கோங்குமரங்களும்
நின்று - (புஷ்பங்களால் நிறைந்து ஒழுங்குபட) நின்று
பொன்னரிமாலைகள் சூழ் - (திருமலைக்குப்) பொன்னரிமாலைகள் சுற்றினாற்போலேயிருக்கப்பெற்ற
பொழில் - சோலைகளையுடைய
மாலிருஞ்சோலை அதே—.

குறிப்பு:—ஆள்வலியாலும் தோள்வலியாலும் நமக்கு ஓரழிவு மில்லையென்று உறுதியாக நினைத்து அஹங்காரியாயிருந்த நரகாஸுரன், தேவர்களை அடர்த்தும், தேவமாதரைப் பிடித்தும், அதிதியினுடைய குண்டலங்களைப்பறித்தும், இங்ஙனொத்த கொடுமைகளாலே தேவர்களைக்குடியிருக்கவொட்டாதபடி பலபீடைகளைச்செய்ய, தேவேந்திரன் த்வாரகையிற் கண்ணனிடத்துவந்து 'இவனை நிரஸிக்கவேணும்' என்று வேண்டிக்கொள்ள, பின்பு கண்ணபிரான் அவனைக் கொல்லும்வகைகளை ஆராய்ந்து, ஸத்யபாமைப்பிராட்டியோடேகூடப் பெரியதிருவடியைமேற்கொண்டு, அவ்வஸுரனது இருப்பிடமாகிய ப்ராக்ஜோதிஷபுரத்துக்கு எழுந்தருளி, தனக்குத் தப்பிப்போகவொண்ணாதபடி அவனை வளைத்துக்கொண்டு, திருவாழியாழ்வானைப்பிரயோகித்து உயிர்துலைத்திட்டு, நெடுங்காலமாய்த் தான்மணம்புணரவேண்டுமென்று மந்தரகிரியினுடைய சிகரமான இரத்தினகிரியிற் பல திசைகளிலிருந்துங் கொணர்ந்து சிறைவைக்கப்பட்ட கன்னிகைகள் பதினாறாயிரத்தொருநூற்றுவரையும் கண்ணபிரான் தான்கைக்கொண்ட வரலாறு, முன்னடிகளில் அடங்கியது. சூழ்போகுதல்-சூழ்ச்சி; அதாவது, ஆராய்ச்சி. வளைத்தல்-போக்கறுத்தல்.

புன்னை, செருந்தி, வேங்கை, கோங்கு என்ற இம்மரங்களின் பூக்கள் பொற்கென்ற நிறம் பெற்றிருக்கும்; அப்படிப்பட்ட பூக்கள்நிறைந்தமரங்கள்

இத்திருமலையில் ஒழுங்குபட நிற்பது-மலைக்குப்பொன்னரிமாலை என்னும் ஆபரணம் ஸமர்ப்பிப்பது போன்றுள்ளதென்ற உத்ப்ரேக்ஷை, பின்னடிகளுக்குக்கருத்து. பொன்னரிமாலை என்பது-பொன்னாற்செய்யப்பட்ட ஒரு ஆபரணவிசேஷம். ... ... ... ... ... (௩)

மாவலி தன்னுடைய மகன்வா ணன்மக ளிருந்த
காவலைக் கட்டழித்த தனிக்கா ளைகரு தும்மலை
கோவலர் கோவிந்தனைக் குறமா தர்கள்பண் குறிஞ்சிப்
பாவொலி பாடிநடம் பயில்மா லிருஞ்சோ லையதே. (௪)

மா வலி தன்னுடைய-மஹாபலியினுடைய
மகன் வாணன்-புத்திரனாகிய பாணாஸுரனுடைய
மகள் இருந்த - மகளான உஷை இருந்த
காவலை-சிறைக் கூடத்தை
கட்டு அழித்த - அரனோடே அழித்தருளினவனும்
தனி காளை - ஒப்பற்ற யுவாவுமான கண்ணபிரான்
கருதும் மலை - விரும்புகிற மலையாவது;—
கோவலர் - இடையர்களுக்குள்
கோவிந்தனை-கோவிந்தாபிஷேகம் பண்ணப்பெற்ற கண்ணபிரான் விஷயமாக
குற மாதர்கள் - குறத்திகளானவர்கள்
குறிஞ்சி பண் - குறிஞ்சிராகத்தோடுகூடின
பா - பாட்டுக்களை
ஒலி பாடி - இசைபெறப் பாடிக்கொண்டு (அப்பாட்டுக்குத் தகுதியாக)
நடம் பயில் - கூத்தாடுமிடமான
மாலிருஞ் சோலை அதே—.

குறிப்பு:—பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற்பிறந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒருநாள் ஒருபுருஷனோடு தான்கூடியிருந்ததாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிகுந்த ஆசைபற்றியவளாய், தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள்மூலமாய் அந்தப்புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் பிரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு 'அவனைப் பெறுதற்கு உபாயஞ்செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத்தூக்கிக்கொண்டுவந்து அந்தஃபுரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளரால றிந்த அந்தப்பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினாலே பொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரதமுனிவனால் நடந்தவரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரிய திருவடியை நினைத்தருளி, உடனேவந்து நின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக்கொண்டு பலராமன்முதலானாரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல்காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்றுகால்களும் மூன்றுதலைகளுமுள்ளதாய்வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும்ஒரு ஜ்வரத்

தை உண்டாக்கி, அதன்சக்தியினாலே அதனைத்துரத்திவிட்டபின்பு, சிவபிரானது அநுசரராகையாற் பாணாசுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர்செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப்போரிட, கண்ணன்தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ்செய்யாமற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படிசெய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர், அனேகமாயிரஞ் சூரியர்க்குச் சமமான தனது சக்ராயுதத்தையெடுத்துப் பிரயோகித்து, அப்பாணனது ஆயிரந் தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாகவிருக்கையில், பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன்தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச்சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின்மீண்டுவந்தனன் என்றவரலாறு அறியத்தக்கது. உஷை அநிருத்தனுக்குச்சேஷமானது வாணனைவென்றபின்னரேயாதலால் "வாணன்மகளிருந்த காவலைக்கட்டழித்த" எனப்பட்டது. தனிக்காளை-காமனைப்பெற்றபின்பும் யௌவநபருவம் நிகரற்று விளங்கும்படியிருக்குமவன் என்க; "காளையே எருதுபாலைக்கதிபன் நல்லிளையோன் பேராம்" என்ற நிகண்டு அறிக. ... ... ... ... (௪)

பலபல நாழஞ்சொல்லிப் பழித்த சிசுபா லன்றன்னை
அலவலை மைதவிர்த்த வழக னலங்கா ரன்மலை
குலமலை கோலமலை குளிர்மா மலைகோற் றமலை
நிலமலை நீண்டமலை திருமா லிருஞ்சோ லையதே. (௫)

பல பல நாழம் - பலபல குற்றங்களை
சொல்லி - சொல்லி
பழித்த - தூஷித்த
சிசுபாலன் தன்னை - சிசுபாலனுடைய
அலவலைமை - அற்பத்தனத்தை
தவிர்த்த-(சரமதசையில்) போக்கியருளின
அழகன் - அழகையுடையனும்
அலங்காரன்-அலங்காரத்தை யுடையனுமான கண்ணபிரான் (எழுந்தருளியிருக்கிற)
மலை - மலையாவது;—
குலம் மலை - தொண்டக்குலத்துக்குத் தலையான மலையும்
கோலம் மலை - அழகையுடைய மலையும்
குளிர் மா மலை - குளிர்ந்த பெரிய மலையும்
கொற்றம் மலை - ஜயத்தையுடையமலையும்
நிலம் மலை - (நல்லமரங்கள் முளைக்கைக்குப் பாங்கான) நிலத்தையுடைய மலையும்
நீண்ட மலை-நீட்சியையுடைய மலையுமான
திருமாலிருஞ் சோலை அதே—.

குறிப்பு:—"கேட்பார் செவிசுடுகீழ்மைவசவுகளேவையுஞ், சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன்" என்றபடி - காதுகொண்டு கேட்கமுடியாதபடி தூஷித்துக்கொண்டிருந்த சிசுபாலனுக்குச் சரமதசையில் கண்ணபிரான் தன் அழகைக்காட்டித் தன்னளவில் பகைமைமாற்றியருளினமை, முன்னடிகளிற்போதரும். நாழம் என்பதில், அம்-சாரியை. நாழ் என்றசொல், குற்ற

மென்னும்பொருளதாதலை "நாமமிகவுடையோம் நாம்" "நாமாலமர்மு யன்ற வல்லரக்கன்" என்னுமிடங்களிலுங்காண்க; "நாம் என்கிறசொல் - நானென்று அஹங்கரிக்கைக்கும், பொல்லாங்குக்கும், நறுவட்டாணித்தனத் துக்கும் பேர்" என அவ்விடத்து உரைப்பர் அப்பிள்ளை. "அஃதேகொண் டன்னை நாழிவளோ வென்னும்" என்றவிடமுங்காண்க. அலவலைமை-'கண்ணன்' என்றால் பொறாது நிந்திக்கும்படியான அற்பத்தனம். [கோற்றமலை.] தன் அபிமாநத்தில் அகப்பட்டவர்களை ஸம்ஸாரம் மேலிடாதபடி நோக்கும் வெற்றியையுடைத்தானமலை என்றபடி. கோற்றம் - அதிசயம். [நிலமலை.] மணிப்பாறையாயிருக்குமளவன்றியே, நல்ல பழங்கள் புஷ்பங்கள் தரவல்ல மரங்கள் முளைப்பதற்குப்பாங்கான செழிப்பையுடைய நிலங்களமைந்தமலை யென்கை. [நீண்ட மலை.] பரமபதத்திற்கும் ஸம்ஸாரத்திற்கும் இடைவெளி யற்று உயர்ந்தவாறு. ... ... ... ... (௫)

பாண்டவர் தம்முடைய பாஞ்சா லிமறுக் கமெல்லாம்
ஆண்டங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்தவப் பன்மலை
பாண்டகு வண்டினங்கள் பண்கள்பா டிமதுப் பருகத்
தோண்ட லுடையமலை தொல்லைமா லிருஞ்சோ லையதே. (௬)

பாண்டவர் தம்முடைய - பஞ்சபாண்டவர்களுடைய (மனைவியாகிய)
பாஞ்சாலி - த்ரௌபதியினுடைய
மறுக்கம் எல்லாம் - மனக் குழப்பத்தையெல்லாம்
ஆண்டு - (தன்) திருவுள்ளத்திற் கொண்டு,
அங்கு - (அவள் பரிபவப்பட்ட) அப்போது ([அத்துன்பங்களை யெல்லாம்)
நூற்றுவர் தம் - (துரியோதநாதிகள்)நூற்றுவருடைய
பெண்டிர் மேல் - மனைவியர்களின் மேல்
வைத்த - சுமத்தின
அப்பன் - ஸ்வாமியான கண்ணபிரான் [(எழுந்தருளி யிருக்கிற)
மலை - மலையாவது;—
பாண் தகு - பாட்டுக்குத் தகுதியான (ஜன்மத்தை யுடைய)
வண்டு இனங்கள் - வண்டுத்திரளானவை
பண்கள் - ராகங்களை
பாடி - பாடிக்கொண்டு
மது - தேனை
பருக - குடிப்பதற்குப் பாங்காக(ச் சோலைகள் வாடாமல் வளர)
தோண்டல் உடைய மலை - ஊற்றுக்களையுடைய மலையாகிய
தொல்லை மாலிருஞ் சோலை அதே - அநாதியான அந்த மாலிருஞ்சோலையேயாம்.

குறிப்பு:—பாண்டவர்கள், துரியோதநாதியரோடு ஆடினபொய்ச்சூதில், தங்கள்மனைவியான த்ரௌபதியையுங்கூடத் தோற்றதனால், குருடன்மகனை துச்சாஸநன் என்பானொரு முரட்டுப்பயல், ரஜஸ்வலையாயிருந்த இவளை மயிரைப்பிடித்திழுத்துக்கொண்டுவந்து மஹாஸபையிலே நிறுத்திப் பரிபவப் பேச்சுக்களைப்பேசித் துகிலை உரிந்தபோது, அவள்பட்ட வியஸநங்களையெல்லாம், கண்ணபிரான், துரியோதனாதியர் மனைவியர்க்கு ஆகும்படிசெய்தருளினன். அதாவது - அவர்கள் மங்கலநூல் இழந்தமை. "சந்தமல்குழலாளலக்கண் நூற்றுவர்தம் பெண்டிருமெய்தி நூலிழப்ப" என்றார் திருமங்கையாழ்வாரும். பாஞ்சாலி-பாஞ்சாலதேசத்தரசன்மகள். நூற்றுவர் - தொகைக் குறிப்பு.

பின்னடிகளின்கருத்து;-பிறப்பே பிடித்துப் பாட்டேயொழிய வேறொன்றறியாதவண்டுகள் இசைகளைப்பாடிக்கொண்டு தேன்பருகுகைக்குச் செழிப்பான சோலைகள் வேண்டும்; அவை நன்குவளருகைக்கு நீர்வேண்டும்; அதுக்கீடாக ஊற்றுக்கள் அத்திருமலையில் உள்ளமை கூறியவாறு. மது-மெயு-ம என்ற வடசொல் விகாரம். தோண்டல்—தொழிலாகு பெயர். திருவனந்தாழ்வானே திருமலையாய்வந்து நிற்கையாலே "தொல்லை மாலிருஞ்சோலை" என்கிறது. ... ... ... ... ... (சூ)

கனங்குழை யாள்பொருட்டாக் கணைபா ரித்தரக் கர்தங்கள்
இனங்கழு வேற்றுவித்த வெழில்தோ ளெம்மிரா மன்மலை
கனங்கொழி தெள்ளருவி வந்துசூழ்ந் தகன்ஞா லமெல்லாம்
இனங்குழு வாடும்மலை யெழில்மா லிருஞ்சோ லையதே. (எ)

கனம் - ஸ்வர்ணமயமான
குழையாள் பொருட்டா - காதணியையுடையளான பிராட்டிக்காக
கணை - அம்புகளை
பாரித்து - ப்ரயோகித்து
அரக்கர் தங்கள் இனம் } ராக்ஷஸகுலத்தை
கழு ஏற்றுவித்த - சூலத்தின்மேல் ஏற்றினவனும்
எழில் தோள் - அழகிய தோள்களையுடையவனும்
எம் - மெக்குத் தலைவனுமான
இராமன் - இராமபிரான் (எழுந்தருளியிருக்கிற)
மலை - மலையாவது;—
கனம் - பொன்களை
கொழி—கொழித்துக்கொண்டு வாராநின்ற
தெள் அருவி - தெளிந்த அருவிகளிலே,
அகல் ஞாலம் எல்லாம் } விசாலமானபூமியிலுள்ளாரெல்லாரும்
இனம் குழு - திரள் திரளாக
வந்து சூழ்ந்து - வந்து சூழ்ந்துகொண்டு
ஆடும் - நீராடப் பெற்ற
எழில்—அழகிய
மாலிருஞ் சோலை மலை அதே—.

குறிப்பு:—இராமபிரான், பிராட்டியை லங்கையினின்றும் மீட்டுக்கொணர்கைக்காக, ராவணன் முதலிய ராக்ஷஸர்களின் மேல் அம்புகளைச் செலுத்தி, அவர்களை முடித்தமையைக் கூறுவது, முன்னடிகள். கனம்-கநகம் என்ற வடசொற்சிதைவு. கனங்குழையாள் என்றது-பிராட்டியின் முன்புற்ற நிலைமைபற்றி. பாரித்தல்—பரப்புதல். கழுவேற்றுதல்—சூலாரோஹணஞ்செய்வித்தல்; தூக்கிலேற்றி உயிரை முடித்தல்; இதனால், கொன்றபடியைக் கூறியவாறு. அன்றி, கழு ஏற்றுவித்த—கழு என்னும் பறவைகள் ஏறி ஜீவிக்கும்படி பண்ணின என்று முரைக்கலாம்: இதனால், அரக்கர்களைப் பிணமாக்கினபடியைக் கூறியவாறு; பிணங்கள் கழுக்களுக்கு உணவாமிறே.

பின்னடிகளின் கருத்து;-திருமலையிலுள்ள நீரருவிகள் பொன்களைக் கொழித்துக்கொண்டு பெருகாநிற்க, அவற்றிலே லோகமெல்லாம் திரண்டு வந்து நீராடுகிறபடியைக் கூறியவாறும். இனம் எனினும், குழு எனினும், திரளுக்கே பெயர். ... ... ... ... (எ)

எரிசித றஞ்சரத்தா லிலங்கை யினைத்தன் னுடைய
வரிசிலை வாயிற்பெய்து வாய்க்கோட் டந்தவிர்த் துகந்த
அரைய னமரும்மலை யமர ரொடுகோ னுஞ்சென்று
திரிசுடர் சூழும்மலை திருமா லிருஞ்சோ லையதே. (அ)

எரி - நெருப்பை
சிதறும் - சொரியா நின்றுள்ள
சரத்தால் - அம்புகளினால்
இலங்கையினை - லங்கைக்கரசனான ராவணனை
தன்னுடைய - தன்னுடைய
வரி சிலை வாயில் பெய்து - நீண்ட வில்லின் வாயிலே புகுரச் செய்து
வாய் கோட்டம் - (அவனுடைய)வாக்கின் அநீதியை
தவிர்த்து - குலைத்து
உகந்த - (தான் வெற்றி பெற்றமையாலே) மகிழ்ந்தருளின
அரையன் - ஸ்வாமியான இராமபிரான்
அமரும் - எழுந்தருளியிருக்கிற
மலை - மலையாவது;—
அமரரொடு - தேவர்களோடுகூட
கோனும் - (அவர்களுக்குத்) தலைவனான இந்திரனும்
திரி - (இரவும்பகலும்) திரியாநின்ற
சுடர் - சந்த்ரஸூர்யர்களும்
சென்று - வந்து
சூழும் - பிரதக்ஷிணம்பண்ணப்பெற்ற
திருமாலிருஞ்சோலை மலை அதே—.

குறிப்பு:—இலங்கையினை என்றது-ஆகுபெயரால் அதிலுள்ள ராவணனையும் மற்ற அரக்கர்களையுங் காட்டும். "இலங்கையனை" என்றும் பாடம்; இலங்கைக்கரசனை என்பது பொருள். வரி—நீளம், கோடு, நெருப்பு; வரி சிலை—நெருப்பைச் சொரிகிறவில் என்றலுமொன்று. வாய்க்கோட்டம்—"த்விதா பஜ்யேயமப்யேவம் நநமேயம் து கஸ்யசித்" என்று—'ஒருவரையும் நான் வணங்கேன்' என்ற ராவணனுடைய வாய்க்கோணலைச் சொல்லுகிறது: கோட்டம்-அநீதி, கோணல். இந்திரன், சந்திரன், ஸூர்யன் முதலிய தேவர்களனைவரும் வந்து பிரதக்ஷிணம் பண்ணும்படிக்கீடான பெருமையையுடைய மலை என்பது, பின்னடிகளின் கருத்து. ... ... ... (அ)

கோட்டுமண் கொண்டிடந்து குடங்கையில் மண்கொண் டளந்
மீட்டுமே துண்டுமிழ்ந்து விளையா டும்விம லன்மலை
ஈட்டிய பல்பொருள்க ளெம்பி ரானுக் கடியுறையென்
றோட்டருந் தண்சிலம்பா றுடைமா லிருஞ்சோ லையதே. (௯)

மண் - (ஹிரண்யாக்ஷனாலே பாயாகச்சுருட்டிக்கொண்டு போகப்பட்ட)பூமியை,
(வராஹரூபியாய் அவதரித்து)
இடந்து - (அண்டபித்தியில் நின்றும்)ஒட்டுவிடுவித் தெடுத்து
கோடு - (தனது) திரு எயிற்றிலே
கொண்டு - ஏன்று கொண்டும்,
மண் - (மஹாபலியினால் தன் வசமாக்கிக் கொள்ளப்பட்ட) பூமியை
(வாமநரூபியாய் அவதரித்து)
குடங்கையில் - அகங்கையில்
கொண்டு - (நீரேற்று) வாங்கிக்கொண்டு
அளந்து - அளந்தருளியும்,
மீட்டும் - மறுபடியும் (அவாந்தர ப்ரளயத்திலே அந்தப்பூமி அழியப்புக,)
அது—அப் பூமியை
உண்டு—திருவயிற்றில் வைத்து நோக்கி,
(பின்பு பிரளயம் கழிந்தவாறே)
உமிழ்ந்து—(அதனை) வெளிப்படுத்தியும்
(இப்படிப்பட்ட ஆச்சரிய செயல்களாலே)
விளையாடும்—விளையாடா நின்றுள்ள
விமலன் - நிர்மல ஸ்வரூபியான எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
மலை - மலையாவது;—
ஈட்டிய - (பெருகி வரும்போது) வாரிக் கொண்டு வரப்பெற்ற
பல் பொருள்கள்-பலவகைப்பட்ட [பொன் முத்து, அகில் முதலிய) பொருள்கள்
எம் பிரானுக்கு—எம்பெருமானுக்கு
அடியுறை என்று - ஸ்ரீபாதகாணிக்கையென்று
ஓட்டரும்—(பெருகி) ஓடிவாரா நின்றுள்ள
தண் - குளிர்ந்த
சிலம்பாறு உடை - நூபுரகங்கையையுடைய
மாலிருஞ் சோலை அதே—.

குறிப்பு:—முன்னடிகளிற் கூறியகதைகள், கீழ்ப்பலவிடங்களில் விரித்துரைக்கப்பட்டன. [ஈட்டிய இத்யாதி.] "உத்யத்த்விஜேந்த்ர ஜநநந்த்யஹமீயம் ஸ்ரீரங்கவாஸ்த்ரீவாஸ:, ஸ்ரீரங்கேஶ்வர வஸதக்ஷமஹத்ஸஹஸ்ரகபாலயஶ்ரீதீவாஸ்ரா ஸ்ரா । வஸ்துஸ்வர்ணவஸ்த்ர உக்ஷநஸேஸகாரணிக்ஷேமக்ஷேத்ரக்ஷராது, காவேரீஸஹஸ்ரீக வேஷ்டிதஸ்ரீவயேந்தி வா வேஶ்யதாம் ॥" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவஸ்லோகத்தை ஒருபுடை ஒப்பிடுக.

ஈட்டுதல்—திரட்டுதல். 'அடியிறை' என்றும் பாடமுண்டென்பர்; பொருள் அதுவே. ஓட்டரும்—"ஓட்டந்தரும்" என்பதன் விகாரம். ... (கூ)

ஆயிரந் தோள்பரப்பி முடியா யிரமின் னிலக
ஆயிரம் பைந்தலைய வனந்த சயனனு ளும்மலை
ஆயிர மாறுகளுஞ் சுனைகள் பலவா யிரமும்
ஆயிரம் பூம்பொழிலு முடைமா லிருஞ்சோ லையதே. (கO)

ஆயிரம் - பலவாயிருந்துள்ள
தோள் - திருத்தோள்களை
பரப்பி - பரப்பிக்கொண்டும்
முடிஆயிரம் - ஆயிரந்திருமுடிகளும்
மின் இலக-(திருவபிஷேகத்திலுள்ள ரத்[னங்களினால்) மிகவும் விளங்கும்படியாகவும்
பை - பரந்த
ஆயிரம் தலைய - ஆயிரந்தலைகளையுடைய
அனந்தன் - திருவனந்தாழ்வான்மீது
சயனன்—பள்ளிகொண்டருளுமவனான [எம்பெருமான்
ஆளும்—ஆளுகின்ற
மலை - மலையாவது;—
ஆயிரம் ஆறுகளும் - பலநதிகளையும்
பல ஆயிரம் சுனைகளும் } அனேகமாயிரந் தடாகங்களையும்
ஆயிரம் பூ பொழிலும் உடை } பலபூஞ்சோலைகளையுமுடைய
மாலிருஞ்சோலை அதே—.

குறிப்பு:—முடிகள் ஆயிரமானால், தோள்கள் இரண்டாயிரமாமாதலால் "ஈராயிரந்தோள்பரப்பி" என்றருளிச்செய்ய வேண்டாவோ? என்ற சங்கைக்கு இடமறும்படி, ஆயிரமென்பதற்கு அனேகம் என்று பொருள் கூறைக்கப்பட்டதென்க. மின் இலக-மீமிசைச் சொல். ... ... (கO)

மாலிருஞ் சோலையென்னும் மலையை யுடைய மலையை
நாலிரு மூர்த்திதன்னை நால்வே தக்கட லமுதை
மேலிருங் கற்பகத்தை வேதாந் தவிழுப் பொருளில்
மேலிருந் தவிளக்கை விட்டுசித் தன்விரித் தனவே. (கக)

மாலிருஞ்சோலை என்னும் } திருமாலிருஞ்சோலை என்கிற
மலையை— திருமலையை
உடைய—(தனக்கு இருப்பிடமாக) உடை[யவனும்,
மலையை—ஒருமலைசாய்ந்தாற்போன்றுள்ள[வனும்
நால் இரு மூர்த்தி தன்னை } திருவஷ்டாக்ஷரஸ்வரூபியானவனும்
நால் வேதம் கடல் அமுதை } நான்குவேதங்களாகிற கடலில் ஸாரமான [அம்ருதம்போன்றவனும்
மேல் இருங் கற்பகத்தை—(ஸ்வர்க்கலோகத்திலுள்ளகல்பவ்ருக்ஷத்திலும்) மேற்பட்டதும் பெரிதுமான கல்பவ்ருக்ஷமாயிருப்பவனும்,
வேதாந்தம் - வேதாந்தங்களிற்கூறப்படுகி[ன்ற
விழுப்பொருளில்—சிறந்தஅர்த்தங்களுள்
மேல் இருந்த—மேற்பட்ட அர்த்தமாயிருப்[பவனும்,
விளக்கை—தனக்குத்தானே விளங்குமவனுமான எம்பெருமானைக்குறித்து [ரங்கள்.)
விட்டுசித்தன்—பெரியாழ்வார்
விரித்தன—அருளிச்செய்தவை (இப்பாசு

குறிப்பு:—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டா தொழிந்தது—இப்பாசுரங்களின் பொருளை அறிகையே இது கற்கைக்குப் பயனுமென்று திருவுள்ளம்பற்றி யென்க. [நாலிருமூர்த்தி தன்னை.] வாஸு தேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்று நால்வகையாகக் கூறப்பட்ட பெரிய வடிவை யுடையவனென்பதும் பொருளாம்; அப்போது, இரு என்பதற்கு-இரண்டு என்று பொருளன்று; இருமை—பெருமை. மூர்த்தி-வடசொல். "வ்ருக்ஷம்ஹி ஸமவாப்நோதி அஷ்டாக்ஷர நாராயணஸ்வயம் । அஷ்டாக்ஷர ஸ்வரூபேண ஸர்வவேதப்ரதிஷ்டிதே॥" என்றபிரமாணத்தின்படி 'அஷ்டாக்ஷரஸ்வரூபியானவனை' என்று உரைப்பதும் பொருந்துமென்க. நால்வேதக்கடலமுது என்று-திருமந்திரத்தைச் சொல்லிற்றாய், அதனால் கூறப்படுகிறவன் என்கிற காரணங்கொண்டு, ஆகுபெயரால் எம்பெருமானைக் குறிக்கின்றதென்றலுமொன்று: "மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய்" என்றதுகாண்க. [மேலிருங்கற்பகத்தை.] தேவலோகத்திலுள்ள கல்பவ்ருக்ஷமானது தன்னிடத்திலுள்ள பொருள்களைக் கொடுக்குமேயன்றி, தன்னைத் தாராது; எம்பெருமான் தன்னையுந் தருவானானமைபற்றி "மேலிருங் கற்பகத்தை" எனப்பட்டது; "எனக்கே தன்னைத் தந்தகற்பகம்" என்றார் நம்மாழ்வாரும். ... ... ... ... (௧௧)

அடி:—உருப்பிணி கஞ்சன் மன்னு மாவலி பல பாண்டவர் கனம் எரி கோட்டு ஆயிரம் மாலிருநா.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## நான்காந்திருமொழி.

## நாவகாரியம்.

---

அவதாரிகை:—கீழ் இரண்டு திருமொழிகளில் திருமாலிருஞ்சோலையை அநுபவித்த இவ்வாழ்வாருடைய திருவுள்ளம் திருக்கோட்டியூரிற்செல்ல, அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் படிகளை இவர் அநுபவிக்கும்போது, அவ்வநுபவத்தாற் பிறந்த ஆநந்தம் மீதூர்ந்து நடக்கப்பெற்று, அவ்வெம்பெருமான் திறத்தில் அன்பில்லாதபாவிகளைப் பழித்தும், அன்புள்ள பாகவதர்களைப் புகழ்ந்தும் போருகிறார், இத்திருமொழியில்.

திருமங்கையாழ்வாரும் பெரியதிருமொழியில் "முந்துறவுரைக்கேன்" "மூவரில் முன்முதல்வன்" என்ற இரண்டு திருமொழிகளால் திருமாலிருஞ்சோலையை அநுபவித்ததும், "எங்களெம்மிறை" என்ற திருமொழியால், திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கிற நிலையை அநுபவித்தருளினார்: பெரிய திருமடலிலும், "மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை" என்றவுடனே, "கொன்னவிலு மாழிப்படையானைக் கோட்டியூரன்னவுருவினரியை" என்றருளிச் செய்திருப்பதுங்காண்க.

பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாருமே திருக்கோட்டியூர் விஷயமாக ஒவ்வொரு பதிகமருளிச் செய்தவர்களென்பதும் உற்றுணரத் தக்கது. திருக்கோட்டியூர்-பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று; கோஷ்டீபுரமென்று வடசொற்பெயர் பெறும். ... ... ... ... ... *

நாவ காரியஞ் சொல்லி லாதவர் நாடொ றும்விருந் தோம்புவார்
தேவ காரியஞ் செய்து வேதம் பயின்று வாழ்திருக் கோட்டியூர்
மூவர் காரிய மூந்தி ருத்து முதல்வ னைச்சிந்தி யாதவப்
பாவ காரிக ளைப்ப டைத்தவ னெங்ங னம்படைத் தான்கொலோ. (௧)

நா அகாரியம்—நாவினாற் சொல்லவொண் [ணாதவற்றை
சொல்லிலாதவர்—(ஒருநாளும்) சொல்லி [யாத ஸ்ரீவைஷ்ணவர்கள்
நாள் தொறும்—நாடோறும்
விருந்து ஓம்புவார்—(ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு) விருந்தளித்துக்கொண்டும்
தேவர் காரியம் செய்து } பகவதாராதநம்பண்ணிக் கொண்டும்
வேதம்—வேதங்களை
பயின்று—ஓதிக்கொண்டும்
வாழ்—வாழுமிடமான
திருக்கோட்டியூர்—திருக்கோட்டியூரில் [(எழுந்தருளியிருப்பவனும்,)
மூவர்—பிரமன், ருத்ரன், இந்திரன் என்ற [மூவருடைய
காரியமும்—காரியங்களையும்
திருத்தும்—செய்துதலைக்கட்டுமவனும்,
முதல்வனை—(எல்லார்க்கும்) தலைவனுமான [எம்பெருமானை
சிந்தியாத—நெஞ்சாலும் நினையாத
அ பாவகாரிகளை—அப்படிப்பட்ட [மிகவுங்கொடிய] பாவஞ்செய்த பிராணிகளை
படைத்தவன்—ஸ்ருஷ்டித்தவன்
எங்ஙனம்—எதுக்காக
படைத்தான் கொல் ஓ—ஸ்ருஷ்டித்தானோ! (அறியோம்.)

குறிப்பு:—பொய் பேசுகை, பிறரைப் புகழுகை முதலிய துஷ்கர்மங்களில் அந்வயமற்றவரும், உள்ளூர் ஸ்ரீவைஷ்ணவர்களையும் அதிதிகளைப்போல் ஆதரிப்பவரும், பகவதாராதநம், வேதாத்யயநம் முதலிய ஸத்கர்மங்கள் செய்துகொண்டு போதுபோக்குமவர்களுமான பரமபாகவதர்கள் வாழுமிடமாகிய திருக்கோட்டியூரி லெழுந்தருளியிருக்கும் எம்பெருமானைப் பாவியாத பாவிகளைப் பிரமன் படைத்தது என்னபயனைக் கருதியோ? அறியோமென்கிறார். அகாரியம்—அகார்யம். தேவர்+காரியம், தேவகாரியம்; தெய்வகார்யம்: திருவிளக்கெரிக்கை, திருமாலை யெடுக்கை முதலியன கொள்க. மூவர்காரிய மாவது—மதுகைடபர்கள் கையில் பறிகொடுத்த வேதத்தை மீட்டுக் கொடுத்தருளியது, பிரமனுக்குச் செய்தகாரியம்; குருவும் பிதாவுமான பிரமனுடைய தலையைக் கிள்ளினமையால் வந்த பாபத்தைப் பிச்சையிட்டுப் போக்கியருளியது, ருத்ரனுக்குச் செய்தகாரியம்; மஹாபலி போல்வார்கையிற் பறிகொடுத்த ராஜ்யத்தை மீட்டுக் கொடுத்தருளியது, இந்திரனுக்குச் செய்தகாரியம். திருத்துகை—ஒழுங்குபடச் செய்கை. சிந்தியாத—சிந்தா என்ற வட சொல்லடியாப் பிறந்த எதிர்மறைப் பெயரெச்சம். பாவகாரி—பாபகாரீ. ... ... ... ... (௧)

குற்ற மின்றிக் குணம்பெ ருக்கிக் குருக்க ளுக்கனு கூலராய்ச்
செற்ற மொன்று மிலாத வண்கையி னார்கள் வாழ்திருக் கோட்டியூர்
துற்றி யேழுல குண்ட தூமணி வண்ணன் றன்னைத் தொழாதவர்
பெற்ற தாயர் வயிற்றி னைப்பெரு நோய்செய் வான்பிறந் தார்களே. (௨)

குற்றம் இன்றி–ஒருவகையான குற்றமுமில்லாமல்
குணம்–(சமம், தமம்முதலிய) குணங்களை
பெருக்கி–வளரச்செய்துகொண்டு
குருக்களுக்கு–(தம்தம்) ஆசாரியர்களுக்கு
அநுகூலர் ஆய்–(கைங்கரியம்பண்ணுவதற்குப்) பாங்காயிருப்பவர்களும்,
செற்றம் ஒன்றும் இலாத – பொறாமையென்பது சிறிதுமில்லாதவர்களும்
வண் கையினர்கள்–உதாரமான கையையுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள்
வாழ்–வாழுமிடமான
திருக் கோட்டியூர்–திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்,)
ஏழ் உலகு–ஸப்தலோகங்களையும்
துற்றி–ஒருகபளமாகத்திரட்டி
உண்ட–அமுதுசெய்தருளினவனும்
தூ–பழிப்பற்ற
மணி–நீலமணிபோன்ற
வண்ணன் தன்னை–நிறத்தையுடையனுமான எம்பெருமானை
தொழாதவர்–வணங்காதவர்கள்
பெற்ற–(தங்களைப்) பெற்ற
தாயர்–தாய்மாருடைய
வயிற்றினை–வயிற்றை
பெரு நோய் செய்வான் – மிகவும் நோவுபடுத்துகைக்காக
பிறந்தார்கள்–பிறந்தார்களத்தனை.

குறிப்பு:—உலகத்திற் பிறந்த பிள்ளைகள் திருக்கோட்டியூரெம்பெருமானை வணங்கினால்தான், அவர்களைப் பெற்ற தாய்மார் பேறு பெற்றாராவர்கள்; அல்லாவிடில், இப்பிள்ளைகளால் அந்தத் தாய்மார்கட்கு ஒருவகைப் பயனுமில்லாமையால், பிரஸவகாலத்திற் பட்ட வேதனையேமிகுந்ததாமென்றவாறு. ... ... ... ... (௨)

வண்ண நன் மணி யும்ம ரதக மும்ம ழுத்தி நிழலெழுந்
திண்ணை சூழ்திருக் கோட்டி யூர்த்திரு மால வன்றிரு நாமங்கள்
எண்ணக் கண்ட விரல்க ளாலிறைப் பொழுது மெண்ண கிலாதுபோய்
உண்ணக் கண்டதம் மூத்தை வாய்க்குக் கவள முந்துகின் றார்களே. (௩).

நல் வண்ணம்–நல்லநிறத்தையுடைய
மணியும் - ரத்நங்களையும்
மரதகமும் - மரதகங்களையும்
அழுத்தி - (ஒழுங்குபட) இழைத்ததனால்
நிழல் எழும்–ஒளிவிடாநின்றுள்ள
திண்ணை - திண்ணைகளாலே
சூழ்–சூழப்பெற்ற
திருக் கோட்டியூர் - திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருக்கிற)
திரு மால் அவன்–திருமாமகள்கொழுநனுடைய
திரு நாமங்கள் - திருநாமங்களை
எண்ண - (ஒன்று, இரண்டு என்று) எண்ணுகைக்காக
கண்ட–படைக்கப்பட்ட
விரல்களால் - விரல்களாலே (அந்தத்திருநாமங்களை)
இறை பொழுதும்–க்ஷணகாலமும்
எண்ண கிலாது - எண்ணமாட்டாமல்
போய் - புறம்பேசென்று
உண்ணக் கண்ட–(சரீரபோஷணார்த்தமாக) உண்ணுகின்ற
தம்–தங்களுடைய
ஊத்தை வாய்க்கு - அசுத்தமானவாயிலே
கவளம் - சோற்றுத்திரளைகளை
உந்துகின்றார்களே - (அவ்விரல்களினால்) தள்ளாநின்றார்களே!
(இதென்னகொடுமை!—)

குறிப்பு:—உலகத்தில் மனிசர்கட்குக் கை, வாய் முதலிய அங்கங்களைப் படைத்தது, அவற்றைப் பகவத்விஷயத்திலே உபயோகப் படுத்துவதற்காக

வேயாம்; அதற்கிணங்கக் கை விரல்களால் திருக்கோட்டியூரெம்பெருமானுடைய திருநாமங்களை எண்ணுகையும், வாயினால் அவற்றைச் சொல்லுகையுமே யாயிற்றுத் தகுவது!; இப்படியிருக்க, சிலபாவிகள் அக்காரியங்களிலே அக்கரணங்களைச் செலுத்தாது, வாயினால் தின்னவேண்டிய தென்றும், கைவிரல்களினால் சோற்றுக்கபளங்களை யெடுத்து அவ்வாயினுள் விடவேணுமென்றும் இவ்வளவே தமக்குக் காரியமாக ஏற்படுத்திக் கொண்டனரே, ஈதென்ன கொடுமை! என்று உள்வெதும்புகின்றனர். ஒருகாலாகிலும் அக்கரணங்களைக் கிரமமான விஷயத்தில் உபயோகித்தால் குறையுறும்; அதுவுமில்லை யென்பார், இறைப்போழுதும் என்கிறார். கவளம்—கபளம். "மணியும் மரதகமும் மழுத்தி" என்றவிடத்து, மகரவிரித்தல் இரண்டும் செய்யுளோசை நோக்கியது. .... ... ... (௩)

உரக மெல்லணை யான்கை யில்லுறை சங்கம் போல்மட வன்னங்கள்
நிரைக ணம்பரந் தேறுஞ் செங்கம லம்வ யல்திருக் கோட்டியூர்
நரக நாசனை நாவிற் கோண்டழை யாத மானிட சாதியர்
பருகு நீரு முடுக்குங் கூறையும் பாவஞ் செய்தன தான்கோலோ. (௪)

உரகம் - திருவனந்தாழ்வானை
மெல்—ஸுகுமாரமான
அணையான்—படுக்கையாகவுடைய எம்பெருமானது
கையில் உறை - திருக்கையில்உள்ள
சங்கம் போல்—ஸ்ரீபாஞ்சஜந்யம்போல்(வெளுத்த)
மட அன்னங்கள் - மடப்பம்பொருந்திய ஹம்ஸங்களானவை
நிரை கணம் பரந்து-திரள்திரளாகப்பரவி
ஏறும் - ஏறியிருக்கப்பெற்ற
செம்கமலம்—செந்தாமரைமலர்களையுடைய
வயல்—வயல்களாலேசூழப்பட்ட
திருக் கோட்டியூர்—திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்)
நரகம் நாசனை—(தன்னடியார்க்கு) நரகப்ரவேசத்தைஒழித்தருளுமவனுமான எம்பெருமானை
நாவில் கொண்டு—நாவினால்
அழையாத—அழைக்கமாட்டாத
மானிட சாதியர்—மநுஷ்யஜாதியிற்பிறந்தவர்கள்
பருகும் - குடிக்கின்ற
நீரும்—தண்ணீரும்
உடுக்கும்—உடுத்துக்கொள்ளுகிற
கூறையும் - வஸ்திரமும்
பாவம் செய்தன தான் கொல் ஓ } பாவஞ்செய்தனவோ தான்!

குறிப்பு:—நாமம், ரூபம் என்ற இரண்டையுமுடைய எல்லாப் பொருள்களிலும் ஒவ்வொருஜீவன் அதிஷ்டிதனா யிருக்கின்றானென்பதைப் பிரமாண பலத்தினாற் கொள்ளவேணும்; கம்பம், தும்பு முதலியவற்றில் உள்ள ஜீவாயிஷ்டானத்தை நாங்காணாதொழிவதற்குக் காரணம்-நமது கருமமடியாகப் பிறந்துள்ள ஞானச்சுருக்கமேயாம்; ஆகையாலே, "பருகு நீரு முடுக்குங் கூறையும் பாவஞ் செய்தனதான் கொலோ" என்பது பொருந்துமென்க. உலகத்தில் ஒருவன் நிஹீந புருஷனுக்கு ஆட்பட்டானாகில், அவன் நன்மையையிழந்து தீமையையே பெறுவதும், விலக்ஷண புருஷனுக்கு ஆட்பட்டவன் தீமையைத்தவிர்ந்து நன்மையையே பெறுவதும் சாஸ்திரங்களிற் கைகண்ட அர்த்தமாகும்; அப்படி தீமைக்கு ஹேதுவான நிஹீநபுருஷசேஷத்துவம்

நேருவதற்குக் காரணம் அவனுடைய பாபமே யென்பதும் சாஸ்திரஸித்தம்; ஆனதுபற்றி, திருக்கோட்டியூரெம்பெருமானை அநுஸந்திக்கமாட்டாத நிஹீந புருஷர்களுக்குச் சேஷப்பட்ட பருகுநீரும் உடுக்கும் கூறையும்பாவஞ் செய்தனவோ தான்! என்கிறார். "நஷ்டெளஷெவு,தஜ,ஷெஷிவெ,வெஷ விவஜீ-ிெத । தீயஜாநம ர சுசுக்ஜூஸிடுயாரு-ஷ்ஜு-தஸஞ்தமி ॥" என்ற ஸ்ரீ விஷ்ணுதர்மஸ்லோகம் இங்கு அறியற்பாலது. மிகவும் பெறுதற்கரிய மநுஷ்யஜந்மத்தைப் பெற்றுவைத்தும் அதன்பயனையிழப்பதே! என்ற வருத்தந் தோற்றக் கூறுகின்றார்—மானிடசாதியர் என்று.

செந்தாமரைமலர்களின்மேல் (வெளுத்த)அன்னப்பறவைகள் இருப்பது—எம்பெருமான் திருக்கையில் பாஞ்சசன்னியம் இருப்பதுபோலும் என முன்னடிகளில் உத்ப்ரேக்ஷித்தவாறு. உரகம்—உரக:. சங்கம்—ஶங்க:. அன்னம்—ஹம்ஸ:. கணம்—கண:. நரகநாசன்—நரகநாஶ:. மானிடசாதியர்—மாநுஷஜாதீயா:. "கையில்லுறை" என்றவிடத்து லகரவொற்று விரித்தலும், "செங்கமலம் வயல்" என்றவிடத்து மகரவொற்று விரித்தலும் செய்யுளோசை நோக்கியதென்க ... ... ... ... ... (௪)

ஆமை யின்முது கத்தி டைக்குதி கொண்டு தூமலர் சாடிப்போய்த்
தீமை செய்திள வாளை கள்விளை யாடு நீர்த்திருக் கோட்டியூர்
நேமி சேர்தடங் கையி னானை நினைப்பி லாவலி நெஞ்சுடைப்
பூமி பாரங்க ளுண்ணுஞ் சோற்றினை வாங்கிப் புல்லைத் திணிமினே. (௫)

இள - இளமைபொருந்திய
வாளைகள் - 'வாளை' என்னும் மீன்கள்
ஆமையின் - ஆமைகளினுடைய
முதுகத்திடை - முதுகின்மேல்
குதிகொண்டு—குதித்துக்கொண்டும்
தூ மலர்—நல்லபுஷ்பங்களை
சாடிப் போய் - உழக்கிக்கொண்டும்
தீமை செய்து—(க்ஷுத்ரஜந்துக்களைக்கலக்கி ஓட்டுகையாகிற) தீம்புகளைச்செய்துகொண்டும்
விளையாடு—விளையாடுமிடமான
நீர் - நீரையுடைய
திருக் கோட்டியூர் - திருக்கோட்டியூரில் [எழுந்தருளியிருப்பவனும்,)
நேமி - திருவாழியாழ்வானோடு
சேர் - சேர்ந்திருக்கிற
தட - பெரிய
கையினானை - திருக்கையையுடையனுமான [எம்பெருமானை
நினைப்பு இலா - (ஒருகாலும்) நினையாத
வலி நெஞ்சு உடை - கடினமானநெஞ்சை [உடையவர்களும்
பூமி பாரங்கள் - பூமிக்குச்சுமையாயிருப்ப [வர்களுமான பாவிகள்
உண்ணும் - உண்கிற
சோற்றினை - சோற்றை
வாங்கி - பிடுங்கிவிட்டு, (எறிந்து)
புல்லை - (அறிவற்ற பசுக்களுக்கு உணவா [ன) புல்லைக்கொண்டு
திணிமின் - (அவர்கள்வயிற்றைத்) துற்று [விடுங்கள்.

குறிப்பு:—உலகத்தில், அறிவுடையார் சோற்றை உண்ணவேணும், அறிவிலிகள் புல் முதலியவற்றை உட்கொள்ளவேணும் என்பது விவாதமற்ற விஷயம். திருக்கோட்டியூரெம்பெருமானை நெஞ்சாலும் நினையாத மனிதர் அறிவற்றவர்களாதலால், அவர்கள் புல்லைத்தான் தின்னவேணும்; அங்ங

னன்றி, அவர்கள் முறைதப்பித் தின்னுஞ் சோற்றைப் பிடுங்கி யெறிந்து விட்டு, அவர்கள் வயிற்றில் புல்லையிட்டு நிறையுங்கள் என்கிறார். முன்னடிக ளிற் கூறியது—தன்மை நவிற்சி. குதிகொண்டு=குதி—முதனிலைத் தொழிற் பெயர். சாடுதல்—அலைத்தல். நேமி—வடசொல். பூமிபாரம்—ஊ-ஞிலாரஃ. திணித்தல்—அடைத்தல், துறுத்தல். ... ... ... (௫)

பூத மைந்தொடு வேள்வி யைந்து புலன்க ளைந்து பொறிகளால்
ஏத மொன்று மிலாத வண்கையி ஞர்கள் வாழ்திருக் கோட்டியூர்
நாத னைநர சிங்க னைநவின் றேத்து வார்க ளுழக்கிய
பாத தூளி படுத லாலிவ் வுலகம் பாக்கியஞ் செய்ததே. (௬)

பூதம் ஐந்தொடு - பஞ்சபூதமயமாகியசரீரத்தினுலும்
ஐந்து வேள்வி - பஞ்சமஹாயஜ்ஞங்களினுலும்
ஐந்து புலன்கள் - (சப்தம் முதலிய) ஐந்துவிஷயங்களினுலும்
(ஐந்து) பொறிகளால் - பஞ்சேந்திரியங்களினுலும் (ஸம்பவிக்கக்கூடிய)
ஏதம் ஒன்றும் இலாத } குற்றமொன்று மில்லாதவர்களும்
வண்கையினர்கள் - உதாரமான கைகளையுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள்
வாழ் - வாழுமிடமான
திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்,)
நாதனை - (எமக்கு) ஸ்வாமியும்
நரசிங்கனை - நரஸிம்ஹஸ்வரூபியுமான எம்பெருமானை
நவின்று - அநுஸந்தித்து
ஏத்துவார்கள் - துதிக்குமவரானபாகவதர்கள்
உழக்கிய பாததூளி - திருவடிகளினுல் மிதித்தருளின தூளினுடைய
படுதலால் - ஸம்பந்தத்தினுல்
இ உலகம் - இந்தலோகமானது
பாக்கியம் செய்தது - பாக்யம்பண்ணினதாகக்கொள்ளப்படும்.

குறிப்பு:—ஒருவகைக்குற்றமும் தம்மிடத்து இல்லாத பரமோதாரர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுமிடமான திருக்கோட்டியூரி லெழுந்தருளி யிருக்கும் எம்பெருமான்பக்கல் அன்புபூண்ட பாகவதர்கள் பலர் இவ்வுலகத்தில் ஸஞ்சரியா நின்றமையால், அவர்களுடைய ஸ்ரீபாததூளியை வஹிக்கப்பெற்ற இவ்வுலகம் பெரும்பெருத்த பாக்கியம் பண்ணிவைத்த தென்கிறார்.

நிலம், நீர், தீ, கால், விசும்பு என்கிற பஞ்சபூதமயமாகிய சரீரத்தைப் பூதமைந்து என்றது - ஆகுபெயரால். "மண்ணும்நீ ரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம், புண்ணாராக்கை"என்ற பெரியதிருமொழி அறிக. வேள்விஐந்து. தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், பூதயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம், ப்ரஹ்மயஜ்ஞம் என்பவை. புலன்கள்ஐந்து-சப்தம், கந்தம், ரூபம், ரஸம், ஸ்பர்சம் என்பவை. பொறிகள்ஐந்து-செவி, வாய், கண், மூக்கு, உடல். இனி, "செவிவாய் கண் மூக்கு உடலென்றைம்புலனும்" என்றருளிச்செய்துள்ளமைக் கிணங்க, ஐம்புலன்கள் என்பதற்கு, செவிமுதலிய பஞ்சஇந்திரியங்கள் என்று பொருளுரைத்தலும் ஒக்கும். "பொங்கைம்புலனும் பொறியைந்துங் கருமேந்திரியம்" என்ற திருவாய்மொழியின் வியாக்கியானங்களைக் காண்க. இனி, இவற்றால்

ஏதமொன்றுமிலாமையாவது-தேஹத்தைத் தனக்கே சேஷமாக்கிக்கொள்ளுகை-சரீரத்தாலுண்டாகும் ஏதம்; அதை எம்பெருமானுக்குச் சேஷப்படுத்துகை-ஏதமில்லாமை; அதை எம்பெருமானடியார்களுக்குச் சேஷப்படுத்துகை-ஏதமொன்று மிலாமை. பஞ்சமஹாயஜ்ஞங்களை, ஸ்வர்க்கம் முதலிய உலகங்களைப் பெறுதற்கு ஸாதநமாக அநுஷ்டித்தல், ஐவேள்விகளால் உண்டாகும் ஏதம்; அவற்றை மோக்ஷஸாதநமாக அநுஷ்டித்தல், ஏதமிலாமை; பகவானுடையவும், பாகவதர்களுடையவும் முகமலர்த்திக்கென்று அநுஷ்டித்தல் ஏதமொன்றுமிலாமை. ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம், சப்தம் ஆகிற விஷயங்களைத் தனக்கு என்றிருக்கை-ஐம்புலன்களால்வரும் ஏதம்; இவற்றைப் பகவத்விஷயத்துக்கென்றிருக்கை—ஏதமிலாமை; பாகவதவிஷயத்துக்கென்றிருக்கை-ஏதமொன்றுமிலாமை. கண்முதலிய இந்திரியங்களை விஷயாந்தரங்களிற் செலுத்துகை-ஐம்பொறிகளால் வரும் ஏதம்; அவற்றை எம்பெருமான் விஷயத்திற் செலுத்துகை-ஏதமிலாமை; பாகவதவிஷயத்திற் செலுத்துகை-ஏதமொன்றுமிலாமை. எனவே, திருக்கோட்டியூரிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள், தங்கள் தேஹத்தைப்பாகவதவிஷயத்தில் ஆட்படுத்துமவர்கள் என்றும், பகவத்பாகவதர்களின் முகமலர்த்திக்காகப் பஞ்சயஜ்ஞாநுஷ்டாநம் பண்ணுமவர்கள் என்றும், பஞ்சஜ்ஞாநேந்திரியங்களையும் பாகவத விஷயத்தில் உபயோகப்படுத்துமவர்கள் என்றுங்கூறியவாறு. நாதனை என்று-திருக்கோட்டியூரில் கோயில்கொண்டிருக்கும் சோக்கநாராயணரைக்குறிக்கிறதென்றும், நரசிங்கனை என்று-தெக்காழ்வாரைக் குறிக்கிறதென்றும் ஸம்ப்ரதாயம். ... ... ... ... ... (௬)

குருந்த மொன்றொசித் தானொ டுஞ்சென்று கூடி யாடி விழாச்செய்து
திருந்து நான்மறை யோரி ராப்பக லேத்தி வாழ்திருக் கோட்டியூர்
கருந்த டம்முகில் வண்ண னைக்கடைக் கொண்டு கைதொழும் பத்தர்கள்
இருந்த வூரி லிருக்கும் மானிட ரெத்த வங்கள்செய் தார்கொலோ. (எ)

திருந்து—(எம்பெருமான் ஸ்வரூபங்களைப்பிழையறக் கூறுகையாகிற) திருத்தத்தை யுடைய
நால் மறையோர் - நான்கு வேதங்களையுமோதின ஸ்ரீவைஷ்ணவர்கள்,
ஒன்று குருந்தம் - ஒரு குருந்தமரத்தை
ஒசித்தானொடும்—முறித்தருளின கண்ணபிரானை
சென்று கூடி - சென்று சேர்ந்து
ஆடி - (அவனுடைய குணங்களிலே) அவகாஹித்து
விழா செய்து - (விக்ரஹ ஸேவையாகிற) உத்ஸவத்தை அநுபவித்துக்கொண்டு
இரா பகல் - இரவும் பகலும்
ஏத்தி-மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு
வாழ் - வாழுமிடமான
திருக் கோட்டியூர் - திருக்கோட்டியூரில் (எழுந்தருளி யிருப்பவனும்,)
கரு தட - கறுத்துப் பெருத்த
முகில் - மேகம் போன்ற
வண்ணனை - நிறத்தையுடையனுமான எம்பெருமானைக்குறித்து
கடைக் கொண்டு - நைச்சியாநுஸந்தானத்துடன்
கை தொழும் - அஞ்ஜலிபண்ணுகின்றுள்ள
பத்தர்கள் - பக்தியையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள்
இருந்த - எழுந்தருளியிருக்குமிடமான
ஊரில் - ஊரிலே
இருக்கும் - நித்யவாஸம் பண்ணுகிற
மானிடர் - மநுஷ்யர்கள்
எ தவங்கள் - எப்படிப்பட்டதபஸ்ஸுகளை
செய்தார் கொல் ஓ-அநுஷ்டித்தார்களோ! (அறியேன்.)

குறிப்பு:—திருக்கோட்டியூ ரெம்பெருமான் திருவடிகளில் அன்பு பூண்ட பாகவதர்கள் எழுந்தருளியிருக்கிற திவ்யதேசத்தில் வாஸமும், அரிய பெரிய தவங்களினாற் பெறவேண்டிய பேறு என்பதை வெளியிடுகிறது, இப்பாட்டென்க. எம்பெருமானெழுந்தருளி யிருக்குமிடத்தில் வாஸம் பெறுவதற்கு ஒருதபஸ்ஸே அமையும்; பாகவதர்களின் நகரத்தில் வாஸம் பெறுகைக்குப் பலதவங்கள் புரிய வேணும் என்பதும் தோன்றும்-எத்தவங்கள் என்ற பன்மையினால்.

கண்ணபிரான், யமுனையில் நீராடும் ஆயர்மங்கைகளின் துகிலையெடுத்துக்கொண்டு, அதன்கரையிலுள்ள குருந்தமரத்தின் மேலேறுகிறவழக்கத்தைக் கண்டிருந்தவனும், கம்ஸனால் ஏவப்பட்டவனுமான ஒரு அஸுரன், கண்ணனை நலிவதற்காக அக்குருந்த மரத்தை ஆவேசித்துக் கிடந்தான்; அதை அறிந்த கண்ணபிரான் அந்த மரத்தை முறித்துப் போகட்டானென்ற வரலாறு அறிக. "அரவமடல்வேழம் ஆன் குருந்தம் புள்வாய்" என்றபொய்கைப்பிரான் பாசுரமு மறிக. திருத்தம்—ஸௌஷ்வம். கடைக்கொண்டு = கடை—தாழ்வு; அதை அநுஸந்தித்துக்கொண்டு என்றபடி: "நீசனேன்நிறையொன்றுமிலேன்" என்றாற்போலச் சொல்லுகை. நான்முகன் திருவந்தாதியில், "குறைகொண்டு நான்முகன்" என்றபாட்டில் "குறைகொண்டு "என்ற பிரயோகத்தை ஒக்கும், இப்பிரயோகமும்; அதுவும் இப்பொருளதே. "கருந்தடம் முகில்" என்ற விடத்து, மகரவொற்று விரித்தல் விகாரம். (எ)

நளிர்ந்த சீலன் நயாச லன்னபி மான துங்கனை நாடோறுந்
தெளிந்த செல்வனைச் சேவ கங்கொண்ட செங்கண் மால்திருக் கோட்டியூர்
குளிர்ந்து றைகின்ற கோவிந் தன்குணம் பாடு வாருள்ள நாட்டினுள்
விளைந்த தானிய மும்மி ராக்கதர் மீது கொள்ளகி லார்களே. (அ)

நளிர்ந்த சீலன் - குளிர்ந்த ஸ்வபாவத்தையுடையவரும்
நய அசலன் - நீதிநெறி தவறாதவரும்
அபிமான துங்கனை - (இடைவிடாது எம்பெருமானை அநுபவிக்கையாலுண்டான) அஹங்காரத்தால் உயர்ந்தவரும்
நாள் தொறும் - நாடோறும்
தெளிந்த - தெளிந்துவாரா நின்றுள்ள
செல்வனை - கைங்கர்யஸம்பத்தை யுடையவருமான செல்வநம்பியை
சேவகம்கொண்ட-அடிமைகொண்டவனும்
செம் கண் - செந்தாமரை போன்ற கண்களையுடையனும்
மால் - (அடியார்பக்கல்) மோஹமுடையனும்
திருக் கோட்டியூர் - திருக்கோட்டியூரில்
குளிர்ந்து - திருவுள்ள முகந்து
உறைகின்ற—எழுந்தருளி யிருப்பவனான
கோவிந்தன் - எம்பெருமானுடைய
குணம் - திருக்கல்யாண குணங்களை
பாடுவார்-பாடுமவரான ஸ்ரீவைஷ்ணவர்கள்
உள்ள - எழுந்தருளியிருக்கிற
நாட்டினுள் - நாட்டிலே
விளைந்த - விளைந்த
தானியமும் - தாந்யத்தையும்
இராக்கதர் - ராக்ஷஸர்கள்
மீது கொள்ள கிலார்கள் - அபஹரிக்கமாட்டார்கள்.

குறிப்பு:—[நளிர்ந்தசீலன் இத்யாதி.] "அல்வழக் கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் அபிமானதுங்கன், செல்வனைப்போலத் திருமாலே நானு

முனக்குப்பழவடியேன்" என்ற அருளிச்செயல் இங்கு உணரத்தக்கது. நயாசலன்-வடசொல்விகாரம்; நயே அசல: –நீதிநெறியில் சலிப்பற்றவன். அபிமாநதுங்க:-ஸாத்விகாஹங்காரத்தாற்சிறந்தவன்.

சிறந்தகுணகணங்களமைந்த செல்வநம்பியை அடிமைகொண்டருளின திருக்கோட்டியூரெம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை வாயாரப்பாடும் ஸ்ரீவைஷ்ணவர்களெழுந்தருளியிருக்கும் நாட்டில் விளையும் தாந்யங்களைக்கூட ராக்ஷஸர் அபஹரிக்கவல்லரல்லர்; தமக்கும் தம் பந்துக்களுக்குமாகச் சேமித்த தாந்யமாகிலன்றோ ராக்ஷஸர் அபஹரிக்கலாவது என்பது உள்ளுறை. தானியம்-தாந்யம். தானியமும் என்ற உம்மை - இழிவுசிறப்பும்மை; வருத்தமின்றிக் கொள்ளைகொள்ளுகைக்குப் பாங்காக வயல்களில் விளைந்துள்ள தாந்யத்தையே கொள்ளைகொள்ளமாட்டாத அரக்கர், மற்றவற்றைக் கொள்ளையிட எங்ஙனே வல்லவராவர்? என்பது ஆராயத்தக்கது. "நயாசலன்னபிமானதுங்கனை" என்றவிடத்து, னகரவொற்றும், "தானியமும் மிராக்கதர்" என்ற விடத்து மகரவொற்றும், விரித்தல் விகாரம். (அ)

கோம்பி ஞர்பொழில் வாய்க்கு யிலினங் கோவிந் தன்குணம் பாடுசீர்ச்
செம்பொ ஞர்மதிள் சூழ்செ ழுங்கழ னியு டைத்திருக் கோட்டியூர்
நம்ப னைநர சிங்க னைநவின் றேத்து வார்களைக் கண்டக்கால்
எம்பி ரான்றன சின்னங் களிவ ரிவரென் றாசைகள் தீர்வனே. (௯)

கொம்பின் ஆர் - கிளைகளாலே நெருங்கின
பொழில் வாய் - சோலைகளிலே
குயில் இனம் - குயில்களின் திரள்
கோவிந்தன் - கண்ணபிரானுடைய
குணம் - சீர்மைகளை
பாடு - பாடாநிற்கப் பெற்றும்,
சீர் - சிறந்த
செம் பொன் ஆர் - செம்பொன்னாலே சமைந்த
மதிள் - மதிள்களாலே
சூழ் - சூழப்பட்டும்,
செழு - செழுமைதங்கிய
கழனி உடை - கழனிகளையுடையதுமான
திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருப்பவனும்)

நம்பனை - (ரக்ஷகன் என்று) விச்வஸிக்கக் கூடியவனும்
நரசிங்கனை - நரஸிம்ஹரூபியுமான ஸர்வேச்வரனை
நவின்று - அநுஸந்தித்து
ஏத்துவார்களை - துதிக்கும் பாகவதர்களை
கண்டக்கால் - (யான்) ஸேவிக்கப்பெறுவேனாகில்
இவர் இவர் - "இந்த இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள்
எம்பிரான் தன - எம்பெருமானுடைய
சின்னங்கள்-அடையாளமாயிருப்பவர்கள்"
என்று - என்று அநுஸந்தித்து
ஆசைகள் - (நெடுநாளாய்ப்பிறந்துள்ள) ஆசைகளை
தீர்வன் - தலைக்கட்டிக்கொள்வேன்.

குறிப்பு:—திருக்கோட்டியூரெம்பெருமானடியார்களை ஸேவிக்கும்போதே 'அவ்வெம்பெருமான் ஸாத்விகர்களினால் ஸேவிக்கப்படுமவன்' என்கிற லக்ஷணம் வெளியாமாதலால், 'இவர்கள் எம்பெருமானது சிறப்பைத் தெரிவிக்கவல்ல சின்னங்கள்' என்று அநுஸந்தித்து, யான் நெடுநாளாய்க்கொண்டுள்ள பலவகை ஆசைகளையுந் தீர்வேனென்கிறார். பாகவதர்களின் ஸேவை, பகவத்ஸேவையிலும் அரிது என்பார், கண்டக்கால் என்கிறார். "மெய்யடியார்கள்தம், ஈட்டங்கண்டிடக் கூடுமேல் அதுகாணுங் கண்பயனாவதே" என்ற குலசேகராழ்வார் பாசுரமுங்காண்க. எம்பிரான் தன = தன—தன் அ-ம்

அ-ஆறனுருபு. சின்னம்-விஹ்நம். இவர் இவர் என்ற இரட்டிப்புக்குக் கருத்து-ஒவ்வொரு பாகவதரையும் தனித்தனியே அநுஸந்திக்கை. காணவேணு மென்றும், கிட்டவேணுமென்றும், கூடவே இருக்கவேணுமென்றும் இப்படி ஆசைகள் பலவாதல்பற்றி, ஆசைகள் எனப் பன்மையாகக் கூறினர். இவ்வகை ஆசைகளெல்லாம், காண்கையொன்றினாலேயே தீருமென்றது-பாகவதஸேவாமாத்ரத்துக்குள்ள அருமையையுஞ் சிறப்பையுங் கூறியவாறு.

காசின் வாய்க்கரம் விற்கி லுங்கர வாது மாற்றிலி சோறிட்டுத்
தேச வார்த்தை படைக்கும் வண்கையி னார்கள் வாழ்திருக் கோட்டியூர்
கேச வாபுரு டோத்த மாகிளர் சோதி யாய்குற ளாவென்று
பேசு வாரடி யார்க ளேந்தம்மை விற்க வும்பெறு வார்களே. (௧௦)

காசின் வாய் - ஒருகாசுக்கு
கரம் - ஒருபிடிநெல்
விற்கிலும் - விற்கும்படியான துர்ப்பிக்ஷகா[லத்திலும்
கரவாது - (தமக்குள்ள பொருள்களை) ம[றைத்திடாது
மாறு இலி - பதில் உபகாரத்தை எதிர்பா[ராமல்
சோறு இட்டு - (அதிதிகளுக்கு) அன்னம[ளித்து
தேச வார்த்தை - புகழ்ச்சியான வார்த்தை[களை
படைக்கும் - ஸம்பாதித்துக் கொள்ளுமவ[ரும்
வண் கையினார்கள் - உதாரமான கையை[யுடையவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள்
வாழ் - வாழுமிடமான
திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில் (எழுந்தருளி யிருக்கிற)
கேசவா - கேசவனே !
புருடோத்தமா - புருஷோத்தமனே !
கிளர் சோதியாய் - மிகுந்த தேஜஸ்ஸையு[டையவனே !
குறளா - வாமநவேஷம்பூண்ட எம்பெருமா[னே !
என்று-என்றிப்படி
பேசுவார்-(எம்பெருமான் திருநாமங்களைப்) [பேசுமவரான
அடியார்கள்-பாகவதர்கள்
எந்தம்மை - அடியோங்களை
விற்கவும் பெறுவார்கள்-(தம் இஷ்டப்படி) [விற்றுக் கொள்ளவும் அதிகாரம் பெறுவார்கள்.

குறிப்பு:—“தத்ஸூக்திநிஷ்டநஸாம் க்ரயவிக்ரயாஹா:” “ஹரிஹஸ்தாஸ்ர வஸிகா: வரஹ்ஸம் க்ரயவிக்ரயாஹா-ஸ்ஶயாஸ்நூதே” இத்யாதி ஸ்ரீஸூக்திகள், இப்பாசுரமடியாகப் பிறந்தவையென்றுணர்க:—ஒருகாசுக்கு ஒருபிடி நெல் விற்கும்படியான காலத்தில் தம்வயிற்றைத் தாம் நிறைத்துக்கொள்வதே அரிது; தம்வயிற்றைப்பட்டினிகொண்டு பிறர்வயிற்றை நிறைப்பதென்றால் ஏதேனுமொரு ப்ரத்யுபகாரத்தைக் கணிசித்தாராகவேணும்; இது உலகத்தில் ஸாமாந்யஜநங்களின் இயல்பு; திருக்கோட்டியூரி லெழுந்தருளியிருக்கும் ஸ்வாமிகளோவென்றால், காசின்வாய்க்கரம்விற்குங்காலத்திலும், கைம்மாறுகருதாது அதிதிகளுக்கு அந்நதாநம்பண்ணி நாடெங்கும் புகழ்பெற்றிருப்பர்களாம். அப்படிப்பட்ட மஹாநுபாவர் வாழுமிடத்துள்ள எம்பெருமானது திருநாமங்களை அநுஸந்திக்குமவர்கள் அடியேனைத் தங்களிஷ்டப்படி உபயோகப்படுத்திக்கொள்ளுமாறு யான் உடன்பட்டிருக்கத்தட்டில்லையென்று-தம்முடைய சரமபர்வ நிஷ்டையின் பராகாஷ்டையை அருளிச்செய்தவாறு. ... ... ... ... ... (௧௦)

962
7053

சீத நீர்புடை சூழ்செ ழுங்கழ னியு டைத்திருக் கோட்டியூர்
ஆதி யானடி யாரை யும்மடி மையின் றித்திரி வாரையுங்
கோதில் பட்டர் பிரான்கு ளிர்புது வைமன் விட்டுணு சித்தன்சொல்
ஏத மின்றி யுரைப்ப வரிரு டீகே சனுக் காளரே. (கக)

சீதம் நீர் - குளிர்ந்த நீராலே
புடை சூழ் - சுற்றும் சூழப்பெற்ற
செழு - செழுமை தங்கிய
கழனி - உடை - கழனிகளையுடைய
திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில் (எழுந்தருளியிருக்கிற)
ஆதியான் - எம்பெருமானுக்கு
அடியாரையும் - அடிமை செய்யும் பாகவ[தர்களையும்
அடிமை இன்றி - அடிமை செய்யாமல்
திரிவாரையும் - திரிகின்ற பாவிகளையும் [குறித்து,
கோது இல் - குற்ற மற்றவரும்
பட்டர் பிரான் - அந்தணர்கட்குத்தலைவரும்
குளிர் - குளிர்ந்த
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு
மன் - நிர்வாஹகருமான
விட்டுணு சித்தன் - பெரியாழ்வார்
சொல் - அருளிச் செய்த இப்பாசுரங்களை
ஏதம் இன்றி - பழுதில்லாதபடி
உரைப்பவர் - ஓதுமவர்கள்
இருடீகேசனுக்கு - எம்பெருமானுக்கு
ஆளர் - ஆட்செய்யப் பெறுவர்.

குறிப்பு:—திருக்கோட்டியூரெம்பெருமானுக்கு அடிமைசெய்யும் பாகவதர்களைப்புகழ்ந்தும், அடிமைசெய்யாது விஷயங்களிலே மண்டித்திரியும் பாவிகளை இகழ்ந்தும் அருளிச்செய்த இவற்றை ஓதவல்லபிராக்கள், எம்பெருமானுக்கு நித்யகைங்கரியம் பண்ணப்பெறுவர்களென்று - பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு. சீதம் - வடசொல்திரிபு. ஆதியான்-முதல்வன். புதுவைக்குக் குளிர்த்தியாவது-ஸம்ஸார தாபங்களை ஆற்றுகை. ... ... (கக)

அடி:—நா குற்றம் வண்ணம் உரகம் ஆமை பூதம் குருந்தம் நளிர்ந்த கொம்பின் காசின் சீதநீர் ஆசை.

நான்காந்திருமொழிஉரை முற்றிற்று.

---

## ஐந்தாந்திருமொழி.
## ஆசைவாய்ச்சென்ற.

அவதாரிகை:—ஸம்ஸாரிகள், அவயவங்கள் உறுதியாயிருக்குங்காலங்களில் எம்பெருமானைச் சிந்தியாது விஷயங்களிலே மண்டித்திரிந்தால், பிறகுசரீரங் கட்டுக்குலைந்தகாலத்தில் பலதுன்பங்களையே அநுபவிக்கும்படியாய் எம்பெருமானைச் சிந்திக்க அவகாசம்பெறுமல் மரணமடையவேண்டிவருமாதலால், அவர்களுக்குப் பரலோகத்தில் அரிய பெரிய ஹிம்ஸைகள் படவேண்டிவருமென்றும், அவை நேராதபடி முந்துற முன்னமே எம்பெருமானைச்சிந்தித்தாற் பெரும்பேறு பெறலாமென்றும் பரோபதேசரூபமாக அருளிச்செய்கிறார், இத்திருமொழியில். ... ... ... *

ஆசை வாய்ச்சென்ற சிந்தைய ராகி யன்னை யத்தனேன் புத்திரர் பூமி
வாச வார்குழ லாளென்று மயங்கி மாளு மெல்லைக்கண் வாய்திற வாதே
கேச வாபுரு டோத்த மாவென்றுங் கேழ லாகிய கேடிலீ யென்றும்
பேசு வாரவ ரெய்தும் பெருமை பேசு வான்புகில் நம்பர மன்றே. (க)

ஆசை வாய் - (தயக்கு) ஆசையுள்ள விடத்
சென்ற - போய்ப் பதிந்த [திலே
சிந்தையர் ஆகி - நெஞ்சையுடையராய்க் கொண்டு
என் அன்னை - 'என்னுடைய தாய்
என் அத்தன் - என்னுடைய தகப்பன்
என் புத்திரர் - என்னுடைய பிள்ளைகள்
என் பூமி - என்னுடைய நிலம்,
வாசம் வார் - பரிமளம் வீசாநின்றுள்ள
என் குழலாள் - கூந்தலையுடையளான என் [மனைவி'
என்று - என்று சொல்லிக்கொண்டு
மயங்கி-(அவர்கள்பக்கல்) மோஹமடைந்து
(பழுதே பல பகலும் போக்கினாலும்,)
மாளும் எல்லைக்கண் - சரமஸமயத்தில்
வாய் திறவாதே - வாயைத்திறந்து (அவர் கள்பேரைச்) சொல்லியழையாமல்,
கேசவா என்றும்-'கேசவனே!' என்றும்
புருடோத்தமா என்றும் } 'புருஷோத்தமனே!' என்றும்
கேழல் ஆகிய கேடு இலீ என்றும் } 'வராஹ ரூபியாய் அவதரித்தவனும் அழிவில்லாதவனுமான எம்பெருமானே!' என்றும்
பேசுவார் அவர்—சொல்லுமவர்கள்
எய்தும் - அடையக்கூடிய
பெருமை - பெருமைகளை
பேசுவான் புகில் - பேசப்புக்கால்
நம் பரம் அன்று - நம்மால் பேசித்தலைக்க [ட்டப் போகாது.

குறிப்பு:—அஹங்காரமமகாரங்களை வளரச்செய்யக்கடவதான ஸம்ஸாரத்தில் ஆழங்காற்பட்டுப் பழுதேபலபகல்களைப் போக்கினாலும், உயிர்முடியுமளவிலாகிலும் அந்தஸம்ஸாரத்தில் நெஞ்சைச்செலுத்தாது எம்பெருமான் திருநாமங்களை வாய்விட்டுச்சொல்லுமவர்கள் மேலுலகத்திற்பெறும் பரிசுகளைச் சொல்லித்தலைக்கட்ட யாம் வல்லரல்லோமென்கிறார். வாழ்நாள்முழுவதையும் பகவந்நாமஸங்கீர்த்தநத்தாலேயே போக்கினவர்கள் பெறும் பெருமையை எம்பெருமான்றானும் பேசித்தலைக்கட்டவல்லனல்லனென்பது வெளிப்படை. "என்றுமயங்கி வாய்திறவாதே மாளுமெல்லைக்கண்" என இயைத்து, அம்மா, அண்ணா, பிள்ளை, பூமி, பெண்டாட்டி என்று சொன்னதும் மூர்ச்சையடைந்து, அவர்கள்பேரைச்சொல்லி யழைக்கவும் மாட்டாமல் மாள்வதற்குள் என்று பொருளுரைப்பாருமுளர். ... ... (௧)

சீயி னாற்செறிந் தேறிய புண்மேற் செற்ற லேறிக் குழம்பிருந் தெங்கும்
ஈயி னாலரிப் புண்டு மயங்கி யெல்லை வாய்ச்சென்று சேர்வதன் முன்னம்
வாயி னால்நமோ நார ணாவென்று மத்த கத்திடைக் கைகளைக் கூப்பிப்
போயி னாற்பின்னை யித்தி சைக்கென்றும் பிணைக்கோ டக்கிலும் போக வொட்டாரே. (௨)

சீயினால் - சீயாலே
செறிந்து ஏறிய - மிகவும் நிறைந்த
புண் மேல் - புண்ணின் மேல்
செற்றல் ஏறி—ஈ இருந்து முட்டையிட்டு
குழம்பிருந்து - அவைபுழுத்து நீராய்ப்பா [யுமளவில்
எங்கும்—உடல் முழுதும்
ஈயினால் - ஈயாலே
அரிப்புண்டு - அரிக்கப்பட்டு
மயங்கி - (வேதனை பொறுக்கமாட்டாமல்) [மூர்ச்சை யடைந்து
எல்லை வாய் சென்று சேர்வதன் முன்னம் } சரமகாலத்தைக் கிட் [டுவதற்கு முன்னே,
வாயினால் - வாயாலே
நமோ நாரணா என்று—'நமோ நாராயணா [ய' என்று சொல்லிக்கொண்டு
மத்தகத்திடை—உச்சியிலே
கைகளை கூப்பி - அஞ்ஜலிபண்ணி
(சரீர வியோகமான பின்பு)
போயினால்-(பரமபதம்) போய்ச்சேர்ந்தால்
பின்னை - பிறகு

*பிணைக் கொடுக்கிலும்* - (நித்யமுக்தர்கள்) 'நாங்கள் உத்தரவாதம் பண்ணுகி றோம்' என்றாலும்
*இ திசைக்கு* - (பூலோகமாகிற) இந்தத்திக் [கைக் குறித்து
*என்றும்* - ஒருநாளும்
*போக ஒட்டார்* - (இந்த முக்தர்களைப்)போ [கவொட்டார்கள்.

குறிப்பு:—"தீண்டாவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும், வேண்டாநாற்றமிகு முடலை" என்ற ஐயங்கார் பாசுரத்தின்படி-பற்பல அஸஹ்யங்களுக்கு ஆகரமான இவ்வுடம்பின் வேதனைக்கனத்தினால் மயக்கமுற்று மரணமடைவதற்குமுன், வாயாலே திருவஷ்டாக்ஷரத்தை அநுஸந்தித்துக் கொண்டு முடிமேல் கைகூப்பித்தொழுமவர்கள் பரமபதம்போய்ச் சேருவர்களென்பதில் இறையும் ஐயமில்லை; அப்படி அவர்கள் அங்குப்போய்ச்சேர்ந்த பின்னர், "இவர்கள் இரண்டுநாளைக்குப் பூமண்டலத்தில் இருந்து வரட்டும்; மீண்டுவருவர்களோ வாரார்களோ என்று ஸம்சயமுண்டாகில், நாங்கள் அதற்கு உத்தரவாதம் பண்ணக்கடவோம்" என்று சிலநித்யஸூரிகள், தங்களை ஈடுகாட்டினாலும், இவர்களை அவ்விடத்திலிருந்து இந்தப்பிரகிருதி மண்டலத்துக்கு அனுப்பவல்லார் யாருமில்லையென்கிறார்; இதனால், ✻ ஒழிவில்கால மெல்லா முடனாய்மன்னி, வழுவிலாவடிமை செய்யப்பெறுவர் என்றவாறு. "இத்தால், கர்மமடியாக மீட்சியில்லையென்றபடி" என்ற வியாக்கியானவாக்கியமும் அறியத்தக்கது.

நாரணு-சிதைவு. மத்தகம்-ஶிரஸ். திசை-திஶா. "புணைக்கொடுக்கிலும்" என்றும்பாடமென்பர்; அது, மோனையின்பத்துக்குச்சேர்ந்திருக்கும். பிணைக்கோடுத்தல்-ஈடுகாட்டுதல், ஜாமீன்தாரராய் நிற்றல்; ப்ராதிபாவ்யம், ப்ரதிபூத்வம். "போகவொட்டாரே" என்ற வினைக்கு எழுவாய் வருவிக்கவேண்டும்: பரமபதநாதனுக்கு மந்திரிகளாயிருப்பவர்கள் போகவொட்டார் என்னலாம். (௨)

சோர்வி னாற்பொருள் வைத்ததுண் டாகிற் சொல்லு சொல்லென்று சுற்று மிருந்து
ஆர்வி னவிலும் வாய்திற வாதே யந்த கால மடைவதன் முன்னம்
மார்வ மென்பதோர் கோயி லமைத்து மாதவ னென்னுந் தெய்வத்தை நாட்டி
ஆர்வ மென்பதோர் பூவிட வல்லார்க் கரவ தண்டத்தி லுய்யலு மாமே. (௩)

*சோர்வினால்* - "களவு வழியாலே
*பொருள் வைத்தது உண்டு ஆகில்* - (எங்கேனும் ஏதாவதொரு)பொருள்வை [க்கப் பட்டிருக்குமாகில்
*சொல்லு சொல் என்று* - (அதைச்) சொல்லு, சொல்லு" என்று
*சுற்றும் இருந்து* - சூழ்ந்துகொண்டு
*ஆர் வினவிலும்* - எப்படிப்பட்ட அன்பர் [கள் கேட்டாலும்
*வாய் திறவாதே* - (அவர்களுக்கு மறுமாற்றஞ் சொல்லுகைக்கும்) வாயைத்தி [றக்க மாட்டாதபடி
*அந்த காலம்* - மரணகாலமானது
*அடைவதன் முன்னம்* - வந்துகிட்டுவதற்கு [முன்னே,
*மார்வம் என்பது* - 'ஹ்ருதயம்' என்கிற
*ஓர் கோயில்* - ஒரு ஸந்நிதியை
*அமைத்து* - ஏற்படுத்தி (அந்த ஸந்நிதியில்)
*மாதவன் என்னும்* - 'திருமால்' என்கிற
*தெய்வத்தை* - தேவதையை
*நாட்டி* - எழுந்தருளப்பண்ணி (அத்தெய்வத்தைக் குறித்து)
*ஆர்வம் என்பது* - 'பக்தி' என்கிற
*ஓர் பூ* - ஒரு புஷ்பத்தை
*இட வல்லார்க்கு* - ஸமர்ப்பிக்க வல்லவர்க [ளுக்கு
*அரவ தண்டத்தில்* - யமபடர்களால்வரும் [துன்பத்தினின்றும்
*உய்யலும் ஆம்* - தப்பிப் பிழைக்கலாகும்.

குறிப்பு:—"துணையுஞ்சார்வுமாகுவார்போற் சுற்றத்தவர்பிறரும், அணை யவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போற் சுவைப்பர்" என்றபடி - இவன் கையிலிருந்தவற்றை ஒன்றுமிகாதபடி பறித்துக்கொண்ட பந்துக்கள்வந்து சூழ்ந்துகொண்டு, "எங்களுக்குத்தெரியாமல் எந்தமூலையிலாவது ஏதாகிலு மொரு பொருள்வைத்ததுண்டாகில், அதை எமக்குச்சொல்லு" என்றுபல வாறு நிர்ப்பந்தித்துக்கேட்டால், அவர்களுக்கு மறுமொழி சொல்லவும் மாட்டாதபடி மரணகாலம்வந்து கிட்டுவதற்குமுன்னமே, எம்பெருமானை நெஞ்சில்நிறுத்தி அன்புபூண்டிருக்கவல்லவர்கள், யமகிங்கரர்களுடைய ஹிம் சைகளுக்குத்தப்பிப்பிழைப்பர்களென்கிறார்.

சோர்வு-மறதியும், களவுமாம். ஆர்வினவிலும்-இளையாள் கேட்டாலும் என்க. அந்தகாலம்-அந்த்யகாலம். அரவதண்டத்தில்-ஐந்தாம்வேற்றுமை; ஏழாம் வேற்றுமையன்று. ... ... ... ... (௩)

மேலெழுந்ததோர் வாயுக் கிளர்ந்து மேல்மி டற்றினை யுள்ளெழ வாங்கிக்
காலுங் கையும் விதிர்விதிர்த் தேறிக் கண்ணு றக்கம தாவதன் முன்னம்
மூல மாகிய வொற்றை யெழுத்தை மூன்று மாத்திரை யுள்ளெழ வாங்கி
வேலை வண்ணனை மேவுதி ராகில் விண்ண கத்தினில் மேவலு மாமே ()

மேல் எழுந்தது ஓர் வாயு } ஊர்த்துவச்வாஸமானது
கிளர்ந்து—மேலெழப்பெற்று
மேல் மிடறு - நெஞ்சானது
உள் எழ வாங்கி - கீழே இடிந்துவிழப்பெற்று
காலும் கையும் - கால்களும் கைகளும்
விதிர்விதிர்த்து ஏறி - பதைபதைக்கப்பெற்று
கண் உறக்கம் அது ஆவதன் முன்னம் } தீர்க்க நித்திரையாகியமரணம் ஸம்பவிப்பதற்கு முன்னே,

மூலம் ஆகிய ஒற்றைஎழுத்தை } (ஸகலவேதங்களுக்கும்) காரணமாகிய 'ஓம்' என்ற பிரணவத்தை
மூன்று மாத்திரை உள் எழ வாங்கி } உச்சரிக்க வேண்டிய முறைப்படி உச்சரித்து,
வேலை வண்ணனை - கடல்போன்ற நிறத்தையுடையனான எம்பெருமானை
மேவுதிர் ஆகில் - ஆச்ரயித்தீர்களாகில்
விண் அகத்தினில்—ஸ்ரீவைகுண்டத்தில்
மேவலும் ஆம் - (அடியார்கள் குழாங்களை) உடன் கூடவும் பெறலாம்.

குறிப்பு:—உயிர் உடலைவிட்டு நீங்குவதற்குப் பூர்வக்ஷணத்திற் பிறக்கும் விகாரங்கள், ஒன்றரையடிகளாற் கூறப்படுகின்றன; அவையாவன—மேல்முக மாக சுவாஸம் [மூச்சுக்] கிளம்புதலும் நெஞ்சு இடிந்து விழுதலும், கைகால் கள்பதைபதைத்தலுமாம். இப்படிப்பட்ட விகாரங்களையடைந்து மாளுவதற் குமுன்னமே, ஸகலவேதஸாரமாகிய ஓம் என்னும் பிரணவத்தை உச்சரிக்க வேண்டிய முறைவழுவாது உச்சரித்து எம்பெருமானை இறைஞ்சினால், * களிப்புங்கவர்வுமற்றுப்பிறப்புப் பிணிமூப்பிறப்பற்று, ஒளிக்கொண்ட சோ தியுமாய் அடியார்கள் குழாங்களை உடன்கூடப் பெறலாமென்கிறார்.

"மே லெழுவதோர்வாயு" என்னவேண்டுமிடத்து, "மேலெழுந்ததோர் வாயு" என்றது-வழக்குபற்றிய வழுவமைதியாம். "மேல்மிடற்றினை" என்ற விடத்து, இன், ஐ-அசைச்சொற்கள்: அன்றி, உருபுமயக்கமுமாம். விதிர் விதிர்த்தல்-'படபட' என்றுதுடித்தல்: [மூலமாகிய இத்யாதி] பிரணவத்திற்கு

ஒருமாத்திரையும் உண்டு, இரண்டுமாத்திரையும் உண்டு, மூன்றுமாத்திரையும் உண்டு; ஒன்று இரண்டு மாத்திரைகளையுடையதாகப் பிரணவத்தை உச்சரிக்குமவர்களுக்கு க்ஷுத்ரபலப்ராப்தியேயுள்ளது; அதனை மூன்றுமாத்திரையுள்ளெழுவாங்குமவர்களுக்கேபரமபதப்ராப்தியுண்டு என்பதை ஸ்ரீபாஷ்யத்தில் ஈக்ஷதிகர்மாதிகரணத்தில் தெளியக்காணலாம்: "ஏகமாத்ரம் ப்ரணவமபித்யாயத ஐஹிகம் ஃபலம் ப்ரதிபாத்ய, த்விமாத்ரம் அபித்யாயத: ஆந்தரிக்ஷலோகப்ராப்திம் ப்ரதிபாத்ய, த்ரிமாத்ரேண ப்ரணவேந பரம்புருஷமபித்யாயத: பரம்புருஷப்ராப்திரூபம் ஃபலம் உச்யதே" என்பது ஸ்ரீபாஷ்யஸூக்தி. மூன்றுமாத்திரைகளிற் குறைவுபடாமல் உச்சரித்தலே மூன்றுமாத்திரையுள்ளெழுவாங்குதலாம். மேவுதிர் என்ற முன்னிலைப் பன்மைவினைமுற்றால், திவ்வியப்பிரபந்தங்களை ஓத அதிகாரம்பெற்றாரெல்லார்க்கும் பிரணவத்திலும் அதிகாரமுண்டென்பது பெறுவிக்கப்படும்; ஸ்திரீ சூத்ரர்களுக்கு இதில அதிகாரமில்லையென்னவொண்ணாது: இதன்விரிவை "ப்ரணவாதிகாரசததகோடி' என்னும்வடநூலிற் கண்டுகொள்க. அதனில் விரித்துரைத்தோம். (ச')

**மடிவழி வந்து நீர்ப்புலன் சோர வாயி லட்டிய கஞ்சியும் மீண்டே**
**கடைவழி வாரக் கண்ட மடைப்பக் கண்ணு றக்கம தாவதன் முன்னம்**
**துடைவழி யும்மை நாய்கள் கவரா சூலத்தா லும்மைப் பாய்வதுஞ் செய்யார்**
**இடைவழி யில்நீர் கூறையு மிழவீ ரிருடீ கேசனென் றேத்தவல் லீரே. (ரு)**

(யமகிங்கரர்களைக்கண்ட பயத்தினால்)
மடி புலன் வழி வந்து } லிங்கத்தின் வழியாக வந்[து
நீர் சோர-மூத்திரநீர் பெருகவும்,
வாயில் - வாயிலே
அட்டிய-பெய்த
கஞ்சியும் - பொரிக்கஞ்சியானது
கண்டம் அடைப்ப-கழுத்தை அடைக்கவும்,
மீண்டு - மறுபடியும்
கடை வழி-கடைவாய் வழியாலே [வும்
வார-(அந்தப் பொரிக்கஞ்சி) வழியாநிற்க
கண் உறக்கம் அது ஆவதன் முன்னம்—;
இருடீகேசன் என்று } 'ஹ்ருஷீகேசன்' என்று (எம்பெருமான் திருநாமத்[தைச் சொல்லி)
ஏத்த வல்லீர் - ஸ்தோத்திரம்பண்ண வல்ல[வர்களே!
நாய்கள்-(யமலோகத்திலுள்ள) செந்நாய்[களானவை
உம்மை - உங்களை
துடை வழி-தடையிலே
கவரா-கவ்வமாட்டா;
(யமகிங்கரர்கள்,)
உம்மை - உங்களை
சூலத்தால் - சூலாயுதத்தினால் [கள்;
பாய்வதும் செய்யார்-குத்தவும் மாட்டார்
நீர் - நீங்கள்
இடை வழியில்-நடுவழியில்
கூறையும் - வஸ்திரத்தையும்
இழவீர்-இழக்கமாட்டீர்கள்.

குறிப்பு:—மரணகாலம் கிட்டும்போது, கண்டவிடமெங்கும் யமகிங்கரர்கள் தென்படுவதாக நினைத்து, அதனாலுண்டான அச்சத்தினால் கிடந்தபடியே மூத்திரம்விட்டுக்கொள்ளுவர்கள்; வாயில்விட்ட பொரிக்கஞ்சி உள் இழியமாட்டாது கழுத்தையடைத்துக் கடைவாய்வழியாகப் பெருகும்; இப்படிப்பட்ட அவஸ்தைகள் பட்டுக்கொண்டு கிடக்கும்போதே, எம்பெருமான் பேர்சொல்லக்காலம்வாய்க்காது மாளப்பெற்றால், யமலோகம் போக

சேர்ந்து, வழியிடையிற் செந்நாய்களால் தொடை கவ்வப்பட்டும், யமகிங்கரர்களினால் சூலங்கொண்டு குத்தப்பட்டும், அரையிற் கூறையை இழக்கப்பெற்றும், இப்படி பல துன்பங்கள் படவேண்டிவருமாதலால், அவற்றுக்கெல்லாம் இடமறும்படி முந்துறமுன்னமே எம்பெருமானை ஏத்தப்பெறில் இடர்ப்பாடு ஒன்றும் படநேராது என்கிறார்.

மடிப்புலன் என்று-ஆண்குறியைக்குறித்தவாறு. அச்சத்தினால் மூத்திரம்விட்டுக்கொள்ளுதல் அனைவர்க்கும் அநுபவத்திற்கண்டதாகும். கண்டம்-கூறு. கவரா-பலவின்பாலெதிர்மறைவினைமுற்று. சூலம்—ஈட்டி. கூறையிழத்தல் என்பது-யாம்ய யாதனைகளில் ஒன்றும். "இருடீகேசனென்றேத்தவல்லீரேல்" என்று சிலர்க்குப் பாடமாம். ... ... (௫)

அங்கம் விட்டவை யைந்து மகற்றி யாவி மூக்கினிற் சோதித்த பின்னைச்
சங்கம் விட்டவர் கையை மறித்துப் பைய வேதலை சாய்ப்பதன் முன்னம்
வங்கம் விட்டுல வுங்கடற் பள்ளி மாய னைமது சூதனை மார்பில்
தங்க விட்டுவைத் தாவதோர் கருமஞ் சாதிப் பார்க்கென்றுஞ் சாதிக்க லாமே.

அவை ஐந்தும்-பஞ்ச பிராணன்களும்
அங்கம் விட்டு-உடலை விட்டு
அகற்றி - அகன்றுபோக,
(பின்பு,)
அவர் - அருகு உள்ளவர்கள்
மூக்கினில்-மூக்கில் (கையை வைத்து)
ஆவி சோதித்த பின்னை } 'பிராணன் இருக்கிறதா இல்லையா' என்றுசோதித்துப்பார்த்து, இல்லையென்றறிந்தபின்பு
சங்கம் விட்டு-(அவருடைய உயிரில்) ஆசையை விட்டு,
(அங்குள்ளாரை நோக்கி, 'இப்போதை நிலைமை என்?' என்று வந்தவர்கள் கேட்க;) (அவர்களுக்குப் பதிலாக)
கையை மறித்து - கையை விரித்துக்காட்டி
பைய-மெள்ள மெள்ள
தலை சாய்ப்பதன் முன்னம் } (தங்கள்) தலையைத்தொங்கவிட்டுக் கொள்வதற்கு முன்னே,--
வங்கம் - கப்பல்களானவை
விட்டு உலவும்-இடைவிடாமல் திரியப்பெற்ற
கடல்-கடலில்
பள்ளி-பள்ளிகொள்பவனும்
மாயனை-ஆச்சரிய சக்தியுக்தனும்
மது சூதனை - மதுவைக்கொன்றவனுமான எம்பெருமானை
மார்பில் - ஹ்ருதயத்தில்
தங்கவிட்டு வைத்து - அமைத்து,
ஆவது ஓர் கருமம்-ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததொரு (உபாயவரணமாகிற) காரியத்தை
சாதிப்பார்க்கு - ஸாதிக்குமவர்களுக்கு
என்றும் - எந்நாளும்
சாதிக்கலாம்-பலாநுபவம் பண்ணப்பெறலாம்.

குறிப்பு:—பிராணம், அபாநம், வியாநம், உதாநம், ஸமாநம் என்ற பஞ்சப்ராணன்களும் உடலைவிட்டொழிந்தபின்பு, அருகிலுள்ள பந்துக்கள் அந்தப் பிணத்தின்மூக்கில் கையைவைத்துப்பார்த்து 'ஆவி போயிற்று' என்று உறுதியாகத் தெரிந்துகொண்டு அவ்வுடலில் ஆசையைவிட்டிட்டு, யாரேனும் வந்து 'அவர்க்குத் திருமேனி எப்படியிருக்கின்றது? 'என்று கேட்கில், அதற்கு அவர்கள் வாய்விட்டு மறுமொழி சொல்லமாட்டாமல், 'உயிர்போயிற்று' என்பதைக்காட்டும்படி கையைவிரித்துக்காட்டிவிட்டு, ஒருமூலையிலிருந்துகொண்டு தலைகவிழ்ந்து அழும்படியான தசை நேரிடுவதற்குமுன், க்ஷீராப்திசாயியான எம்பெருமானை நெஞ்சால் நினைத்துக்கொண்டு ஸ்வரூபா

நிரூபமான ப்ரபத்தியை அநுஷ்டிப்பவர்கள், எந்நாளும் அநுபவிக்கக்கூடிய பேற்றைப் பெறுவர்களென்கிறார். [அகற்றி.] 'அகல' என்னும் செயவெனெச்சத்தின்திரிபாகிய 'அகன்று' என்றவினையெச்சம் பிரயோகிக்கவேண்டுமிடத்து, அகற்றி என்றார்; தன்வினையில்வந்த பிறவினை; "குடையுஞ் செருப்புங் குழலுந் தருவிக்க" என்றதுபோல. மூக்கினிற்கையைவைத்து ஆவியைச்சோதிப்பது, இப்போதும் வழக்கத்திலுள்ளமை அறிக. சங்கம் - ஆசைக்கும்பெயர்: அன்றி, ஸம்வஃ என்னும் வடசொற்றிரிபாகக்கொண்டு, கூட்டமென்று பொருள்கொண்டால், ஒவ்வொருவரும் தனித்தனியே பிரிந்துபோய் என்று கருத்தாம். ... ... ... ... ... (௬)

தென்ன வன்றமர் செப்ப மிலாதார் சேவ தக்குவார் போலப் புகுந்து
பின்னும் வன்கயிற் றாற்பிணித் தெற்றிப் பின்முன் னாக விழுப்பதன் முன்னம்
இன்ன வன்னினை யானென்று சொல்லி யெண்ணி யுள்ளத் திருளற நோக்கி
மன்ன வன்மது சூதன னென்பார் வான கத்துமன் றாடிகள் தாமே. (௭)

செப்பம் இலாதார்—ருஜுவான செய்கை [இல்லாதவர்களான

தென்னவன் தமர்—யமகிங்கரர்கள்

சே அதக்குவார் போல — எருதுகளை அதக்கி ஓட்டுமவர்கள் போல

புகுந்து—வந்து,

பின்னும்—அதற்கு மேல்

வல் கயிற்றால்—வலிவுள்ள பாசங்களினால்

பிணித்து - கட்டி

எற்றி—அடித்து

பின் முன் ஆக - தலைகீழாக

இழுப்பதன் முன்னம் — (யமலோகத்துக்கு) இழுத்துக்கொண்டு போவதற்கு முன்னே,—

மன்னவன் - (அந்தத் தென்னவனுக்கும்) [மன்னவனான எம்பெருமான்

இன்னவன் இனையான் என்று சொல்லி — இப்படிப்பட்டஸ்வரூபத்தை யுடையவன், இப்படிப்பட்ட ஸ்வபாவத்தை யுடையவன் என்று (அவனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களைச்) [சொல்லி

எண்ணி—(அவற்றை) நெஞ்சாலும் மநநம் [பண்ணி

உள்ளத்து இருள் அற — ஹ்ருதயத்திலுள்ள(அஜ்ஞாநமாகிற) அந்தகா [ரம் நீங்கும்படி

நோக்கி—(அவ்வெம்பெருமானை) ஸாக்ஷாத் [கரித்து,

மது சூதனன் என்பார் — (தேஹமுள்ளதனையும்) 'மதுஸூதநனே' என்று (அவன் திருநாமங்களையே) சொல்லிக் [கொண்டிருக்குமவர்கள்

வான் அகத்து - ஸ்ரீவைகுண்டத்திலே

மன்றாடிகள் தாம் - (எம்பெருமானோடே நித்யஸூரிகளின் கைங்கரியத்துக் [காக) மன்றாடப் பெறுவர்கள்.

குறிப்பு:—ஈரநெஞ்சு, இளநெஞ்சு அற்றவர்களான யமகிங்கரர்கள், தயாதாக்ஷிண்யமின்றி எருதுகளை அதக்குவார்போலவந்து கட்டியடித்து, செத்தநாய்களை இழுத்துக்கொண்டுபோவதுபோலத் தலைகீழாக இழுத்துக்கொண்டு யமலோகத்துக்குப்போம்படியான துர்த்தசை நேரிடுவதற்குமுன்னமே, அந்த யமனுக்கும் தலைவனான எம்பெருமானுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை வாயாற்சொல்லியும் நெஞ்சால் நினைத்தும், இவ்வகைகளாலே அவ்வெம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கப்பெற்று, மேலுள்ளகாலத்தையும் திருநாமஸங்கீர்த்தநத்தினாலேயே போக்கவல்லவர், பரமபதம்போய்ச்சேர்ந்து, நித்யஸூரிகளுடைய கைங்கரியத்தைத்தாம் பெறுதற்கு எம்பெருமானோடு மன்

றுடப் பெறுவர்கள் என்கிறார்; எனவே, பரமபத ப்ராப்தியில் ஸந்தேஹமில்லையென்றவாறு. தென்னவன்-தக்ஷிணதிக்குக்குத்தலைவன், யமன். செப்பம்-செவ்வை. ஏற்றுதல்-அடித்தல். "நாமடித்தென்னையனேக தண்டஞ்செய்வதா நிற்பர் நமன்றமர்கள்." [வானகத்துமன்றுடிகள்.] மன்றுதேல் - இரந்து கேட்டல். "வானகம் மன்றத்து ஆடிகள்"—என இயைத்து, பரமபதத்திலுள்ள நித்யஸூரி ஸபையில் ஸஞ்சரிக்கப்பெறுவர்கள் என்று பொருளுரைப்பாருமுளர். ... ... ... ... (எ)

**கூடிக் கூடியுற் றார்க ளிருந்து குற்றம் நிற்கநற் றங்கள் பறைந்து**
**பாடிப் பாடியோர் பாடையி லிட்டு நரிப்ப டைக்கோரு பாகுடம் போலே**
**கோடி மூடி யெடுப்பதன் முன்னங் கௌத்து வமுடைக் கோவிந்த னோடு**
**கூடி யாடிய வுள்ளத்த ராஞற் குறிப்பி டங்கடந் துய்யலு மாமே.** (அ)

(மரணமான பின்பு,)
உற்றார்கள்—பக்துக்களானவர்கள்
கூடி கூடி இருந்து-திரள்திரளாகக் கூடி[யிருந்துகொண்டு,
குற்றம் நிற்க-(செத்தவன்செய்த) குற்றங்கள் (பல) கிடக்க, (அவற்றை யெல்லாம் விட்டு விட்டு)
நற்றங்கள் - (சிறிது) நன்மையாகத் தோற்றும்படியான வற்றை
பறைந்து—சொல்லி,
பாடிப் பாடி—(அழுகைப்பாட்டுக்களைப் பலகால் பாடி
ஓர் பாடையில் இட்டு—ஒரு பாடையிலே படுக்க வைத்து
கோடி மூடி—வஸ்திரத்தையிட்டு மூடி
நரிப் படைக்கு ஒரு பாகுடம் போலே—நரிக்கூட்டத்துக்கு ஒரு பாகுக்குடத்தைப் பச்சையாகக் கொடுப்பது போல (இப்பிணத்தைக் கொடுக்கைக்காக,)
எடுப்பதன் முன்னம்-(சுடுகாட்டுக்குக் கொண்டுபோவதாக) எடுப்பதற்குமுன்னே,—
கௌத்துவம் - ஸ்ரீ கௌஸ்துபத்தை
உடை - (திருமார்பிலே) உடைய
கோவிந்தனோடு—எம்பெருமான் பக்கலில்
கூடி ஆடிய - சேர்ந்து அவகாஹித்த
உள்ளத்தர் ஆனல்—நெஞ்சை யுடையவர்களாக ஆனல்,
குறிப்பு இடம் - யமலோகத்தை
கடந்து—அதிக்ரமித்து, (பரமபதம் போய்ச்[சேர்ந்து)
உய்யலும் ஆம் – உஜ்ஜீவிக்கப் பெறலாம்

குறிப்பு:—உலகத்தில் ஒருவன் மரணமடைந்தானகில், அவனுடைய சுற்றத்தார்கள் அங்குக் கூட்டங்கூட்டமாக இருந்துகொண்டு, (அ)

அப்பா! நீ,—

காலையெழுந்து குளஞ்சென்றுநீராடி
மாலைவணங்கி மனமகிழ்ந்த மகனன்றோ?
பாகவதபாரதங்கள் பாஷ்யங்கள் பளபளவென்
றோதியுணர்ந்திவ்வுலகில் உகந்துய்ந்தமகனன்றோ?
சவைநடுவிற் சதிராகச்சென்றுநீ வாய்திறந்தால்
கவிகளெல்லாமாநந்தக் கண்ணீர் சொரியாரோ?
சேலத்துச்சேலையைநீ சீருறவேயுடுத்தக்கால்
ஞாலத்து மாதரெலாம் நெஞ்சுருகி நையாரோ?
அடியிணையுமங்கைகளு மகல்மார்புமந்தோளும்

முடியணியுமலரழகும் ஆர்க்கேனும் வாய்க்கும்மோ?
இரந்தவர்கட்கெப்பொருளுமில்லையெனச்சொல்லாதே
சுரந்துநீ பெற்றபுகழ் சொல்லித்தான் முடியும்மோ?
வெள்ளென்ற வேஷ்டியொடும் விளங்குபுரி நூலினொடும்
மெள்ளநீபுறப்பட்டால் மன்மதனும்மறையானே?

என்றாற்போல, அவன்விஷயமாகச்சில நன்மைகளை யேறிட்டுப் பாட்டுப்பாடிப் பின்பு பாடையிற்படுக்கவைத்து அதனை வஸ்திரத்தினால் மூடிக்கட்டிக் காட்டுக்கெடுத்துக்கொண்டு போவர்கள்; பின்பு பகவந்நாமஸங்கீர்த்தநத்துக்கு அவகாசம்பெறாது யமகிங்கரர்கையில் அகப்பட்டுத் திகைக்க வேண்டிவருமாதலால், மரணகாலத்துக்கு முன்னமே எம்பெருமான்பக்கலில் நெஞ்சைச் செலுத்தினால் யமலோகத்துக்குத் தப்பிப் பிழைக்கலாமென்றவாறு.

குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து—துஷ்கர்மங்கள் எத்தனைசெய்யப்பட்டிருந்தாலும், அவற்றிலொன்றையுஞ் சொல்லமாட்டார்கள்; ஸத்கர்மம் ஒன்றுசெய்யப்பட்டிருப்பினும், அதனைப் பலவாகப்பன்னிப்பகர்வர் என்க. [நரிப்படைக்கொரு பாகுடம்போலே.] வீட்டிலிருந்து பாடையை மூடிக்கொண்டு போவதைப்பார்த்தால், சுடுகாட்டிலுள்ள நரிப்படைகளுக்கு உணவாம்படி பாகுக்குடங்கொண்டுபோகிறார்களோ என்று சங்கிக்கும்படியாயிருக்குமென்க; அன்றி, 'யமலோகத்திற் பாபிஷ்டர்களை நலிவதற்கென்று ஏற்படுத்தப்பட்டுள்ள நரிப்படைகளுக்குப் பாகுக்குடம் கொண்டுபோவதுபோல' என்றும் உரைக்கலாமென்பர் சிலர்; பாகு—குடம், பாகுடம்; தொகுத்தல் விகாரம்: "ஒண்சங்கதை" போல. இனி, பாகுடம் என்கிறவிது-"ப்ராப்ருதம்" என்றவடசொல்லின் விகாரமென்றுங்கொள்ளலாம்; அப்போது, நரிப்படைகளுக்குப் பாதகாணிக்கை கொண்டுபோவதுபோல என்பதுபொருள்; ப்ராப்ருதம்—பாதகாணிக்கை; "ஸபாஜநப்ராப்ருததாம்" என்று தயாசதகத்தில் தூப்புல்பிள்ளை அருளிச்செய்தமைகாண்க. கௌத்துவம்-கௌஸ்துபம். குறிப்பிடம்—பாபங்களின்பலனை அநுபவிப்பதற்கென்று குறிக்கப்பட்ட இடம்; எனவே, யமலோகமாயிற்று. கடத்தல்—அங்குச்செல்லாதொழிதல். ... ... ... ... ... (அ

வாயொரு பக்கம் வாங்கி வலிப்ப வார்ந்த நீர்க்குழிக் கண்கள் மிழற்றத்
தாயொரு பக்கந் தந்தையொரு பக்கந் தார முமொரு பக்க மலத்தத்
தீயொரு பக்கஞ் சேர்வதன் முன்னஞ் செங்கண் மாலொடுஞ் சிக்கனச் சுற்ற
மாயொரு பக்கம் நிற்க வல்லார்க் கரவ தண்டத்தி லுய்யலு மாமே. (௯)

வாய்—வாயானது
ஒரு பக்கம் வாங்கி வலிப்ப—(வாயுவினாலே) ஒருக்கடுத்து வலிக்கவும் [இம்
வார்ந்த நீர்—பெருகாநின்ற நீரையுடைய
குழி—உள்ளே இடிய இழிந்ததுமான
கண்கள்—கண்ணானது
மிழற்ற—அலமந்து நிற்கவும்,
ஒரு பக்கம்—ஒரு பக்கத்தில்
தாய்—தாயாரும்
ஒரு பக்கம்—மற்றொரு பக்கத்தில்
தந்தை—தகப்பனாரும்
ஒரு பக்கம்—இன்னொரு பக்கத்தில்
தாரமும்—மனைவியும் (இருந்துகொண்டு)
அலத்த—கதறி அழவும்,

| | |
|---|---|
| ஒரு பக்கம்-மற்றொரு பக்கத்திலே | ஒரு பக்கம்-அவனொருவ னிடத்திலேயே [பக்ஷபாதமாய் |
| தீ - நெருப்பானது | நிற்கவல்லார்க்கு - நிலைத்து நிற்க வல்லவர் [களுக்கு |
| சேர்வதன் முன்னம் - (மார்வில் வந்து) சே [ருவதற்கு முன்னே | அரவதண்டத்தில்-யமதண்டனையில் நின் [றும் |
| செம் கண் மாலொடும்-புண்டரீகாக்ஷனை [எம்பெருமானை | உய்யலும் ஆம் - தப்பிப்பிழைக்கப் பெற [லாம் |
| சிக்கன சுற்றம் ஆய் - நிருபாதிக பந்துவா [கக் கொண்டு | |

குறிப்பு:—மரணஸமயத்தில் வாயுவிகாரத்தாலே வாய் ஒருக்கடுத்து வலிக்கும்; நெடுநாளாக ஆஹாரமற்றுக்கிடப்பதனால் உள்ளிழிந்துள்ள கண்கள் மருளமருளவிழிக்கும்; இவ்விகாரங்களைக்கண்டு தாயர், தந்தையர், மனைவியர் முதலானோர் மூலைக்கொருவராக உட்கார்ந்துகொண்டு கண்ணீர்விட்டுக் கதறி அழுவர்கள்; இப்படிப்பட்ட ஸந்நிவேசத்தில், உயிர்போயிற்றென்று சிலர்வந்து மார்பில் நெருப்பைக்கொட்டுவர்கள்; ஆனபின்பு, சரீரம் வலிவுற்றிருக்குங்காலங்களைப்பாழேகழித்தவர்கள் சரமஸமயத்திற்படும்பாடு இதுவாகையால், அப்போது பகவந்நாமஸங்கீர்த்தநத்துக்கு அவகாசம்பெறாமல் யமகிங்கரர் நலிவுக்கு ஆளாகவேண்டிவரும்; ஆதலால் சரீரம் கட்டுக்குலைவதற்கு முன்னமே எம்பெருமான்றன்னையே ஸர்வவிதபந்துவுமாகப் பற்றப்பெற்றால் யமதண்டனைக்குத்தப்பிப் பிழைக்கலாமென்றவாறு.

தாரம்-தாரா: என்றவடசொல்விகாரம். "சிக்கன நிற்கவல்லார்க்கு" என்று இயைப்பினுமாம்; த்ருடாத்யவஸாய யுக்தராயிருப்பவர்கட்கு என்று பொருளாம். ... ... ... ... (௯)

சேத்துப் போவதோர் போது நினைந்து செய்யுஞ் செய்கைகள் தேவ பிரான்மேல்
பத்த ராயிறந் தார்பெறும் பேற்றைப் பாழித் தோள்விட்டு சித்தன்புத் தூர்க்கோன்
சித்தம் நன்கொருங் கித்திரு மாலைச் செய்த மாலை யிவைபத்தும் வல்லார்
சித்தம் நன்கொருங் கித்திரு மால்மேற் சென்ற சிந்தை பெறுவர் தாமே. (௧௦)

| | |
|---|---|
| செத்துப் போவது ஓர் போது } இறந்துபோகுங் காலத்திலே | விட்டு சித்தன் - பெரியாழ்வார் |
| செய்யும்-(யமபடர்களால்) செய்யப்படுகிற | சித்தம்-(தம்முடைய) நெஞ்சை |
| செய்கைகள்-(கடுஞ்) செயல்களை | திரு மாலை - திருமால் திறத்தில் |
| நினைந்து-நினைத்து | நன்கு-நன்றாக |
| தேவபிரான் மேல் - தேவபிரான் பக்கலில் | ஒருங்கி-ஒருப்படுத்தி |
| பத்தர் ஆய்-அன்பு பூண்டவர்களாய் இரு [ந்து | செய்த-அருளிச் செய்த |
| இறந்தார்-(பின்பு) இறந்தவர்கள் | மாலை - சொல் மாலையாகிய |
| பெறும் பேற்றை- அடையக்கூடிய பலன் [களைக் குறித்து, | இவை பத்தும்-இப்பத்துப் பாட்டுக்களையும் |
| பாழி தோள்-(ஸம்ஸாரத்தை வென்ற) மிடுக்கையுடைய தோள்களை யுடைய [வரும் | வல்லார் - ஓதவல்லவர்கள், |
| புத்தூர் - ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு | சித்தம் நன்கு ஒருங்கி } (ஆழ்வார்க்குப்போல்) நெஞ்சு ஒருபடிப்படப்பெற்று |
| கோன்-தலைவருமான | திரு மால் மேல்-திருமால் பக்கலிலே |
| | சென்ற - குடிகொண்ட |
| | சிந்தை - மநஸ்ஸை |
| | பெறுவர்-உடையராவர், |

குறிப்பு:—'மரணகாலத்தில் யமபடர்கள் பொறுக்கவொண்ணுதபடிநலி வர்களே!' என்று நினைத்துத் தீவழியிற் செல்லாமல் எம்பெருமான்பக்கலில் அன்புபூண்டிருந்து, பின்பு இறப்பவர்கள் பெறும்பேற்றைக்குறித்துப் பெரியாழ்வாரருளிச்செய்த இப்பாசுரங்களை ஓதவல்லவர்கள், எம்பெருமானிடத்துக் குடிகொண்ட நெஞ்சையுடையராகப் பெறுவர்களென்று பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு. சித்தம்-வி-தீ0. ஒருங்கி ஒருக்கி என்றபடி. (௧0)

அடி:—ஆசை சீசோர்வு மேல் மடி அங்கம் தென்னவன் கூடி வாய் செத்து காசு.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## ஆறாந்திருமொழி.

### காசுங் கறையுடை.

அவதாரிகை:—விஷயாந்தரங்களிற் பற்றற்று எம்பெருமான் திருநாமங்களை இனிமையாகப் பேசவல்லாரல்லாதாரையும் ஒருவழியால் அவனது திருநாமத்திலே அந்வயிப்பித்து உய்வு பெறுவிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, ஒருபயனுக்குமுறுப்பாகாதபடி க்ஷுத்ரதேவதைகளின் பெயர்களைத் தங்கம் பிள்ளைகளுக்கு இடுமவர்களை விளித்து, 'எம்பெருமானது திருநாமத்தை நீங்கள் பெற்ற பிள்ளைகளுக்கு இட்டு வாயார வாழ்த்தினீர்களாகில் அப்பிள்ளைகளினுடைய தாய்மார் நற்கதிபெற்று உய்ந்து போவார்' என்று ஆழ்வார் உபதேசித்தருளுகிறார் இத்திருமொழியில்.

காசுங் கறையுடைக் கூறைக்கு மங்கோர் கற்றைக்கும்
ஆசையி னாலங் கவத்தப் பேரிடு மாதர்காள்
கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித் திருமினோ
நாயகன் நாரணன் தம்மன்னை நரகம்புகாள். (௧)

காசுக்கும் - ஒரு காசுக்காகவும்
கறை உடை-(தலைப்புகளில் நல்ல) கறைகளையுடைய
கூறைக்கும்-வஸ்திரத்திக்காகவும்
ஓர் கற்றைக்கும்-ஒரு கட்டுக் கற்றைக்காகவும் (உண்டான)
ஆசையினால் - ஆசையாலே
அவத்தம் - மிகவும் தீயதான
பேர்-(க்ஷுத்ர தேவதைகளின்) பெயர்களை
இடும் - (உங்கள் பிள்ளைகளுக்கு) இடுகிற
ஆதர்காள் - அறிவுகெட்டவர்களே!
நீங்கள்—;
கேசவன் - கேசவனென்னுந் திருநாமத்தை யுடையவனும்
நாயகன் - ஸர்வ சேஷியுமான
நாரணன் - நாராயணனுடைய
பேர் - திருநாமங்களை
இட்டு - (உங்கள் பிள்ளைகளுக்கு) இட்டு
தேனித்து இருமின்-மகிழ்ச்சி கொண்டிருங்கள்;
(அப்படி நாமகரணஞ் செய்தால்)
தம்மன்னை-(அப்பிள்ளைகளுடைய) தாய்மார்
நரகம் புகாள்-துர்க்கதியை அடையமாட்டார்கள்.

குறிப்பு:—உலகத்திற் பலர் தம்மக்களுக்கு இந்திரன், சந்திரன், குபேரன் என்றிவைபோன்ற பெயர்களை இடுவது-ஸ்வயம்ப்ரயோஜநமாகவுமன்று, ஆமுஷ்மிகமான பயனைக் கருதியுமன்று; பின்னை என்கொண்டென்

னில்; அப்பெயர்களை இட்டால் நாலுகாசுகிடைக்கும், நல்ல ஆடைகிடைக்கும், ஒருகட்டுக்கற்றைகிடைக்கும் என்றிப்புடைகளிலே உண்டான விருப்பத்தினுலாம். இவ்விருப்பங்கொண்டு அப்பெயர்களை இடுமவர்கள் இறையும் அறிவுள்ளவரல்லர்; அவர்கள் இடும்பெயர்களும் (ஸ்வரூபத்துக்குத்) தீங்கு விளைக்கத்தக்கவை; ஆதலால் அவற்றை ஒழித்து அப்பிள்ளைகளுக்கு எம்பெருமான் திருநாமங்களை இட்டால், அவர்களைப் பெற்ற தாய்தந்தையர் நமன்றமர்கையிலகப்பட்டு நலிவுபடாமல் உய்ந்து போவர் என்று உபதேசித்தருளியவாறு. இங்ஙனிடாதொழியில், அவர்கள் நரகம்புகுவரென்பது வெளிப்படை.

கூறைக்கும் என்றவிடத்துள்ள ஆறனுருபு, காசும் என்பதனோடுங் கூட்டியுரைக்கப்பட்டது. முதலடியிலும் இரண்டாமடியிலும் உள்ள 'அங்கு' என்பவை-அசைச் சொற்கள். கற்றை-கதிர்த்தொகுதி. அவத்தம்-அவத்யம் என்னும்வடசொல்விகாரம்; தீங்கு என்பது அதன்பொருள். அன்றி, அவ்யக்தம் என்னும்வடசொல்லின் விகாரமாமென்பது சிறவாதென்க: "அவத்தங்கள் விளையும்" என்ற திருவாய்மொழியையுங் காண்க. ஆதர்-குருடர்க்கும், அறிவில்லாதார்க்கும் பெயர்; 'அந்த:' என்றவடசொற்சிதைவு என்னலாம். "தேறித்திரிமினோ" என்பது, அத்யாபகபாடம். தம்மன்னை-'தமப்பன்' என்பது போல ஒருசொல்லாக வழங்குமென்க. இங்கு அன்னையைக்கூறியது பிதாவுக்கும் உபலக்ஷணமென்க. நரகம்-நாரக:.

நான்காமடியை அடைவே அந்வயித்துப் பொருள்கொள்ளுதலும் ஒக்கும்; நாயகனுகிய நாராயணனுடைய பெயர்பூண்ட பிள்ளையின் தாய் நரகம் புகாள் எனக் கருத்துக் காண்க. ... ... ... (௧)

அங்கோரு கூறை யரைக்கு டுப்பத னுசையால்
மங்கிய மானிட சாதிப் பேரிடு மாதர்காள்
செங்க ணெடுமோல் சிரீத ராவென் றழைத்தக்கால்
நங்கைகாள் நாரணன் தம்மன் னைநர கம்புகாள். (௨)

அங்கு - அந்த நீசரிடத்தில்
ஒரு கூறை - ஒரு வஸ்த்ரத்தை (ப்பெற்று)
அரைக்கு உடுப்பதன் ஆசையால் - அரையில் உடுக்க வேணுமென்னு மாசையினுல்
மங்கிய - கெட்டுக் கிடக்கிற
மானிட சாதி பேர் இடும் - மநுஷ்ய ஜாதியிற் பிறந்தவர்களுடைய பெயரை இடுகிற
ஆதர்காள்-குருடர்களே!
நங்கைகாள் - சொல்லிற்றை அறியவல்ல மதியினுல் நிறைந்தவர்களே!
(நீங்கள் உங்கள் பிள்ளையை)
செம் கண் நெடு மால் - புண்டரீகாக்ஷனை ஸர்வேச்வரனே!
சிரீதரா-ஸ்ரீ தரனே!
என்று-என்று [இப்பெயர்களை இட்டு]
அழைத்தக்கால் - அழைத்தீர்களாகில்
நாரணன் - நாராயண நாமத்தைப் பூண்ட அப்பிள்ளையினுடைய
தம்மன்னை - தாயானவள்
நரகம் புகாள்—,

குறிப்பு:—அஸத்கல்பமாய்க்கிடக்கிற மநுஷ்யஜாதியின் பெயரைச்சில அறிவுகேடர் தங்கள்பிள்ளைகளுக்கிடுவதற்குக்காரணம்யாதெனில்? 'இப்பெயரை இட்டால் சில தநிகர்கள் இதற்கு உகந்து, அரையிலுடுக்க ஆடைகொ

டுப்பர்கள், என்ற விருப்பமேயாம்; நல்ல அர்த்தத்தைத் தாமாக அறியமாட்டாதொழியினும், பிறர்சொல்லில் கேட்டுணரத்தக்க புத்தியினால் நிறைந்தவர்களே! உங்கள் பிள்ளைகளுக்கு எம்பெருமான் திருநாமத்தையிட்டழைத்தால் அப்பிள்ளைகளின்தாய் தந்தையர் நரகம்புகாதொழிவர் என்கிறார்.

"விரதங்கெட்டும் சுகம்பெறவில்லை" என்ற உலகநீதிப்படி-மேலுத்தரீயத்துக்காக மற்றொருவனைத் தேடியோடவேண்டிய அருமையுண்டென்பார், "ஒரு கூறை அரைக் குடுப்பதனுசையால்" என்றார். அங்கு என்பதை அசைச்சொல்லாகவுங் கொள்ளலாம். அரைக்கு-அரையில்; உருபுமயக்கம். மங்குதல்-கெட்டுப்போதல். "மானிடசாதியின்பேரிடும்" என்றும் பாடமுண்டு.

உச்சியி லெண்ணெயுஞ் சுட்டி யும்வளை யும்முகந்
தேச்சம் போலிந்தீர்கா ளென்செய் வான்பிறர் பேரிட்டீர்
பிச்சைபுக் காகிலு மெம்பி ரான்றிரு நாமமே
நச்சுமின் நாரணன் தம்மன் னைநர கம்புகாள். (௬)

எச்சம் பொலிந்தீர்காள் - ஸந்தானத்தினால் விளங்குமவர்களே!
உச்சியில்-உச்சியில் (தடவத்தக்க)
எண்ணெயும் - எண்ணெயையும்
சுட்டியும்-(நெற்றியில் தொங்கும்படி கட்டத்தக்க) சுட்டியையும்
வளையும் - (கையில் அணியத்தக்க) வளையையும்
உகந்து - விரும்பி
என் செய்வான் - ஏதுக்காக
பிறர் - (எம்பெருமானை யொழிந்த) மற்றவர்களுடைய
பேர் - பெயர்களை இட்டீர்கள்?
இட்டீர் - (உங்கள் பிள்ளைகளுக்கு) இட்
பிச்சை புக்கு ஆகிலும் } பிச்சை யெடுத்து ஜீவித்தாகிலும்
எம்பிரான் திரு நாமமே } எம்பெருமானுடைய திருநாமத்தையே
நச்சுமின் - விரும்பி இடுங்கள்; (அப்படி இட்டால்.)
நாரணன்***இத்யாதி பூர்வவத்.—

குறிப்பு:—ஸந்ததி பெற்றவர்கள் அந்தப்பிரஜைகளுக்கு உடம்பிலணியத்தக்க சில ஆபரணம் முதலியவற்றைப் பெறுவிக்கவேணுமென விரும்பி, அதற்குறுப்பாகப் பிறர்பெயரை இடுவர்கள்; அதனால் ஒரு பயனும் பெற முடியாது; மேலும் பின்பு நரகாநுபவமாகிற அநர்த்தமும் விளையும். எம்பெருமானது திருநாமத்தை உங்கள் பிரஜைகளுக்கு இட்டால், அதனால் ஒருவகை ஐச்வரியமும் கிடைக்கமாட்டாதென்று உங்களுக்குக் கருத்தாகில் ஆயிடுக; பிச்சையெடுத்துப் பிழைத்தாகிலும் பகவந்நாமத்தைப் பேணினால் பரலோகவாழ்ச்சிக்குப் பாங்காயிடுமென்று உபதேசித்தவாறு.

ஒரு அந்தணன் தன்மகனுக்கு நாமகரணகாலத்தில், "ஐச்வரியம் தரவல்லானொருவனுடைய பெயரை இப்பிள்ளைக்கு இடவேணும்" என்றெண்ணிக் 'குபேரன் பெயரை இடு' என்றவளவிலே, "ஐளிபிளி யென்று பேரிட்டழைத்து ஜீவிப்பதிற்காட்டிலும், நாராயணன் என்ற திருநாமத்தைச்சாத்திப் பிச்சைபுக்காகிலும் ஜீவிக்கவமையும்" என்றார் ஒரு ஆஸ்திகர் என்பதொரு கதை இங்கு அறியத்தக்கது. (ஐளிபிளி-குபேரன் பெயர்; ஐலவிலஃ என்பது வடமொழிப்பெயர்.) ... ... ... (௬)

மானிட சாதியில் தோன்றிற்றோர் மானிட சாதியை
மானிட சாதியின் பேரிட்டால் மறுமைக் கில்லை
வானுடை மாதவா கோவிந்தா வென்றழைத் தக்கால்
நானுடை நாரணன் தம்மன்னை நரகம்புகாள். (௪)

மானிட சாதியில் - மநுஷ்ய ஜாதியில்
தோன்றிற்று - உண்டான
ஓர் மானிட சாதியை } ஒரு மநுஷ்ய ஜந்துவை
மானிட சாதியின் பேர் இட்டால் } (கர்மபலன்களை அநுபவிக்கப் பிறந்த) மநுஷ்ய சாதியர்க்கு உரிய பெயரை [இட்டழைத்தால்
மறுமைக்கு இல்லை } அத்ருஷ்டபலம் [மோக்ஷம்] பெறுகைக்கு யாதொருவழியுமில்லை;

வான் உடை - பரமபதத்தை (விபூதியாக) [உடைய
மாதவா - ச்ரிய: பதியே!
கோவிந்தா - கோவிந்தனே!
என்று அழைத்தக்கால் } என்று (எம்பெருமான் திருநாமத்தையிட்டு) அ[ழைத்தால்,
நானுடை நாரணன் } எனக்கு நாதனான நாராயணனுடைய திருநாமத்தைப் பூ[ண்ட அப்பிள்ளையினுடைய
தம்மன்னை நரகம் புகாள்—.

குறிப்பு:—ஜீவாத்துமா, கருமங்களுக்கிணங்கத் தேவயோநிமுதலிய பல யோநிகள்தோறும் பிறக்கக்கடவனாகையாலே புண்ணியபாபங்களிரண்டையும் அநுபவித்தற்கும் ஸம்பாதிப்பதற்கும் உறுப்பாகவிறே மநுஷ்ய யோநியிற் பிறப்பது; இப்படிக் கருமத்துக்கு வசப்பட்டு மநுஷ்யஜாதியிற் பிறக்கும் பிராணியை, ஐஹிகமானதொரு பயனைவிரும்பிக், கர்மவச்யமான மநுஷ்யஜாதியில் ஒன்றின்பெயரையிட்டழைத்தால், இஹலோகத்திற்சில க்ஷுத்ர பலன்கள் கிடைக்கிலும் பரலோகப்பேற்றுக்கு யாதொருவழியுமில்லையாம்; இங்ஙனன்றி, எம்பெருமான் திருநாமத்தைச்சாத்தி யழைத்தால் அப்பேறு பெறக் குறையில்லையென்றவாறு. மறுமை-ஆமுஷ்மிகம்; (இம்மை ஐஹிகம்.) என்னுடை என்னவேண்டுமிடத்து, "நானுடை" என்றது, "மானிடசாதியில்" என்றெடுத்த முறைக்குச் சேரவேண்டுகையால்; எனவே, எதுகை நோக்கியதென்றபடி: திருமங்கையாழ்வாரும் பெரியதிருமொழியில் "ஊனுடைச்சுவர்வைத்து" என்றபாட்டின் ஈற்றடியில், எதுகைக்குச்சேர, "நானுடைத் தவத்தால்" என்றருளிச்செய்துள்ளமை காண்க. ... (௪)

மலமுடை யூத்தையில் தோன்றிற் றோர்மல வூத்தையை
மலமுடை யூத்தையின் பேரிட்டால் மறுமைக் கில்லைக்
குலமுடைக் கோவிந்தா கோவிந்தா வென்றழைத் தக்கால்
நலமுடை நாரணன் தம்மன்னை நரகம்புகாள். (௫)

மலம் உடை - மலத்தை யுடைய தும்
ஊத்தையில் - ஹேயமுமான சரீரத்தில் [நின்றும்
தோன்றிற்று ஓர்—தோன்றினதொரு
மலம் ஊத்தையை - (தானும் அப்படியே) மலமுடையதும் ஹேயமுமானசரீரத்தோடே கூடியிருக்கிற ஜந்து[வை

மலம் உடை - (கீழ்ச் சொன்ன படியே) [மலத்தை யுடையதும்
ஊத்தையின் - ஹேயமுமான சரீரத்தையு[டைய மற்றொருஜந்துவினுடைய
பேர் - பெயரை
இட்டால் - இட்டுஅழைத்தால்,

(அதனால் இம்மையிலே சில அல்பபலன் கிடைத்தாலும்,)
மறுமைக்கு - அத்ருஷ்ட பலத்துக்கு
இல்லை - ஒருவழியு மில்லையாம்;
குலம் உடை - நற்குலத்திற் பிறந்த
கோவிந்தா கோவிந்தா என்று அழைத்தக்கால் } கோவிந்தனே! கோவிந்தனே!
என்று (பகவந்நாமத்தையிட்டு) [அழைத்தால்,
நலம் உடை - (தன் திருநாமத்தைச் சொன்னவர்களை வாழ்விக்கையாகிற) [நன்மையை யுடைய
நாரணன் - எம்பெருமானுடைய திருநா[மம் பூண்ட அப்பிள்ளையினுடைய
தம்மன்னை நரகம் புகாள் —,

குறிப்பு:—"தீண்டாவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும், வேண்டாநாற்றம் மிகுமுடல்" என்றபடி மாம்ஸரக்தம் முதலிய மலங்களோடுகூடி ஹேயமாயிருக்கிற மாதாபித்ரு சரீரத்தினின்று தோன்றினதாயும், 'காரணவஸ்துவுக் கிணங்கவே கார்யவஸ்து பிறக்கும்' என்ற நீதியின்படி, மாதாபிதாக்களுடைய சுக்ல சோணிதங்களாலே பரிணதமாகையாலே தத்ஸ்வரூபமாகவே யிருக்கிற சரீரத்தோடே கூடினதாயு மிருக்கிற ஜந்துவைக், கீழ்ச்சொன்னபடியேமிகவும் ஹேயமாயிருந்துள்ள சரீரத்தைப்பூண்டு கொண்டிருக்கிற ஒரு கர்மவச்ய ஜந்துவின்பெயரையிட்டழைத்தால், இம்மையிற்சிலபயன் பெறினும் ஆமுஷ்மிகத்தில் ஒருபயனும் பெறமுடியாது என்பது முன்னடிகளின் கருத்து. மூன்றுமடியில், குலம்—இடைக்குலம். ()

நாடு நகரு மறிய மானிடப் பேரிட்டுக்
கூடி யழுங்கிக் குழியில் வீழ்ந்து வழுக்காதே
சாடிறப் பாய்ந்த தலைவா தாமோ தராவென்று
நாடுமின் நாரணன் தம்மன் னைநர கம்புகாள். (சு)

நாடும் - குக்ராமங்களிலுள்ள ஸாமாந்ய [ஜ்ஞானிகளும்
நகரும் - நகர வாஸிகளான விசேஷஜ்ஞா[னிகளும்
அறிய - ('இவன் உயர்ந்தவன்' என்று) [அறியும்படி,—
மானிடர் பேர் இட்டு } (க்ஷுத்ர) மநுஷ்யர்கள் பெயரை யிட்டு
கூடி - அவர்களோடு கூடி
அழுங்கி - ஒளி மழுங்கி
குழியில் வீழ்ந்து - (அவர்கள் விழுந்த) கு[ழியிலே விழுந்து
வழுக்காதே - தவறிப் போகாமல்,
சாடு - 'சகடாஸுரன்
இற - முறியும்படி
பாய்ந்த - உதைத் தருளின
தலைவா - பெரியோனே!' (என்றும்)
தாமோதரா என்று } 'தாமோதரனே!' என்றும்
நாடுமின் - வாழ்த்திக்கொண்டு திரியுங்கள்,
(இங்ஙனே யாகில்,)
நாரணன் தம்மன்னை நரகம் புகாள் —.

குறிப்பு:—"நாடு நகருமறிய" என்கிறவிது ஈற்றடியில், "நாடுமின்" என்ற வினை முற்றோடு இயையும். அழுங்கி ஆத்துமாவுக்கு இயற்கையாயுள்ள ஸ்வரூப ப்ரகாசம் மழுங்கி என்றபடி.

இப்பாட்டின் பெரியஜீயருரை அச்சுப்பிரதிகள் பலவற்றிலும், "அவர்களோடேகூடி அவர்கள்பக்கலிலே கால்தாழ்ந்து அவர்கள்விழுந்த குழியிலே விழுந்து தவற வர்த்தியாதே" என்று காணப்படுதலால், அழுங்கி என்பதற்கு, '(அவர்கள்பக்கலிலே) கால்தாழ்ந்து' என்பது பொருளாமென்று சிலர் மயங்குவர்; அதற்கு அதுபொருளல்ல; அவ்வச்சுப்பிரதிகளில், "கால்

தாழ்ந்து" என்றதற்குப்பின்" ஒளிமழுங்கி" என்கிறவர்க்கியம்விடுபட்டதென்றுணர்க. ப்ராசீந தாளகோசங்களில் அதனைக்காண்க. "அவர்கள்பக்கலிலே கால்தாழ்ந்து" என்கிறவிது, "அவர்களோடே கூடி" என்கிற ஸ்வவாக்யத்திற்கே விவரணமாய்க்கிடக்கிறது; இந்த ஶைலி, அநுபவத்தினால் அறியப் படவேண்டும். குழி—நரகக் குழி. ... — ... (௬)

மண்ணிற் பிறந்து மண்ணாகும் மானிடப் பேரிட்டங்
கெண்ணமொன் றின்றி யிருக்கு மேழை மனிசர்காள்
கண்ணுக் கினிய கருமுகில் வண்ணன் நாமமே
நண்ணுமின் நாரணன் தம்மன் னைநர கம்புகாள். (எ)

மண்ணில் பிறந்து - மண்ணில்நின்றுமுண்டாய்
மண் ஆகும் - பின்பு மண்ணாய் விடுகிற
மானிடர் - அல்ப மநுஷ்யர்களுடைய
பேர் இட்டு - பெயரை (த்தங்கள் பிள்ளைகளுக்கு) இட்டு,
அங்கு - ஆமுஷ்மிக பலத்தில்
எண்ணம் ஒன்று இன்றி இருக்கும் - ஒரு விசாரமுமற்றிருக்கிற
ஏழை மனிசர்காள் - அறிவற்ற மநுஷ்யர்களே!
கண்ணுக்கு - கண்ணால் காண்கைக்கு
இனிய - போக்யனாயும்
கரு முகில் - காளமேகம் போன்ற
வண்ணன் - நிறத்தை யுடையனாயுமுள்ள எம்பெருமானுடைய
நாமமே - திருநாமத்தையே
நண்ணுமின் - விரும்பி யிடுங்கள்;
நாரணன் தம்மன்னை நரகம் புகாள்—.

குறிப்பு:—"மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம் புண்ணாராக்கை" "மஞ்சுசேர்வானெரி நீர் நிலங் காலிவை மயங்கி நின்ற அஞ்சு சேராக்கை" என்றபடி-தேஹத்திற்குப் பஞ்சபூதங்களும் உபாதாநமாகிலும் அவற்றுள் பார்த்திவபாகமே [—அதாவது மண்பாகம்] அதிகமாயிருப்பது பற்றி, அம்மண்ணில் நின்றும் தேஹத்துக்கு உற்பத்தி யென்பார், "மண்ணிற் பிறந்து" என்றார்.

தேஹம் உருக்குலைந்தால், 'காரியத்திற்குக் காரணத்திலே லயமாகக்கடவது' என்ற முறைமையின்படி-மறுபடியும் மண்ணாய்ப்போகக் கடவதானமைபற்றி, "மண்ணாகும்" என்றார். அங்கு—பரமபதத்திலே என்றபடி. (எ)

நம்பி பிம்பியென்று நாட்டு மானிடப் பேரிட்டால்
நம்பும் பிம்புமெல் லாம்நாலு நாளி லழுங்கிப்போம்
செம்பெருந் தாமரைக் கண்ணன் பேரிட் டழைத்தக்கால்
நம்பிகாள் நாரணன் தம்மன் னைநர கம்புகாள். (அ)

நம்பி பிம்பி என்று - நம்பி என்றும் பிம்பி என்றும்
நாடு மானிடர் பேர் - க்ஷுத்ரமநுஷ்யர்களுடைய பெயரை
இட்டால்-(உங்கள்பிள்ளைகளுக்கு நீங்கள்) இட்டால்
நம்பும் பிம்பும் எல்லாம் - 'நம்பி' 'பிம்பி' என்னும் பெயர்களுக்கு அடியான முதன்மையெல்லாம்
நாலு நாளில் - நாலுநாளைக்குள்
அழுங்கிப்போம் - அழிந்துபோம்;
செம் பெரு தாமரை - சிவந்தும பெருத்துமிருக்கிற தாமரைப்பூப்போன்ற
கண்ணன் - திருக்கண்களையுடைய எம்பெருமானுடைய
பேர் இட்டு - திருநாமத்தை இட்டு
அழைத்தக்கால் - அழைத்தால்
நம்பிகாள் - (அறிவினால்) குறைவற்றவர்களே!
நாரணன் தம்மன்னை நரகம் புகாள்—.

குறிப்பு:—நம்பி என்னுஞ்சொல், 'குறைவற்றவன்' என்னும் பொருளையுடைய தாதல்பற்றி, 'இப்பெயரை நமது பிள்ளைக்கு இட்டால் ஒரு குறையுமின்றிப் பூர்ணனாயிருப்பன்' என நினைத்து அப்பெயரை இடுகிறவர்களைக் குறித்து ஏசுகிறார் இப்பாட்டில்.

பிம்பி என்பதற்கு (இங்கு) ஒரு பொருளுமில்லை. இச்சொல் எப்படி பொருளற்றதோ, அப்படியேதான் நீங்கள் விரும்பியிடுகிற நம்பி என்கிற சொல்லும் பொருளற்றது என்று க்ஷேபிக்கிற படியாய், நம்பிக்கு எதிர்த் தட்டாக ஒரு பிம்பியை அருளிச் செய்கிறாரென்க. இங்ஙனே வெறுப்புத் தோற்றச் சொல்லுமிடங்களிலெங்கும், கூட மற்றொரு சொல் பொருளின்றி வழங்கப்படுவது உலகவியற்கை; (உதாரணம்;) ஒருவன் 'உப்பு உளதோ?' என்று ஒருவனைக் கேட்டால், அதற்கு அவன் வெறுப்புக்கொண்ட காலத்தில் "உப்பு மில்லை, பப்பு மில்லை" என்று கூறுவான்; அது போலவே, இங்கும் நம்பி என்னும்பெயரில் வெறுப்புக்கொண்ட ஆழ்வார், பிம்பி என்ற மற்றொரு பொருளில்லாப் பெயரைக் கூட்டிணைத்துக் கூறுகின்றார்.

நெடுங்காலங் குறைவற்று வாழவேணுமென்னும் விருப்பத்தினால், நம்பி, பிம்பி, என்றாற்போலச் சிலநாட்டுமானிடப்பெயர்களைத் தங்கள்பிள்ளைகளுக்கு இட்டால், இதனால் அவர்கள் தங்கள் வாழ்நாளுள்ளளவளவுங் குறையொன்றுமின்றி யிருப்பர்கள் என்கிற எண்ணம் தமது மூடத்தனத்தினாலுண்டாவதேயாம்: "வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பரென்பதில்லை" என்ற ஆழ்வாரருளிச்செயலின்படியே அந்த வாழ்ச்சி நாலுநாளில் கெட்டுப்போம் என்கிறார்.

"நம்பும் பிம்புமெல்லாம்" என்றது-நம்பி, பிம்பி என்ற பெயர்களின் பகுதியை யெடுத்துக்காட்டியபடி. நம்பி என்பது, பண்பி; நம்பு என்பது, பண்புப்பெயர். நம்பி—நிறைந்தவன்; நம்பு—நிறைவு. 'நம்பி' என்னும் பெயர்க்கு 'நம்பு' என்பதைப்பகுதியாகக் கூறுவது-ஒருவகைக் கவிமரபு என்பர். இவ்வுபதேசம் வீண்போகாமைக்காக அவர்களைப்புகழ்ந்து விளிக்கிறார் 'நம்பிகாள்!' என்று. ... ... ... ... ... (அ)

ஊத்தைக் குழியி லமுதம் பாய்வது போலுங்கள்
மூத்திரப் பிள்ளையை யென்முகில் வண்ணன் பேரிட்டுக்
கோத்துக் குழைத்துக் குணால மாடித் திரிமினோ
நாத்தகு நாரணன் தம்மன்னை நரகம்புகாள். (௯)

ஊத்தைக் குழியில் - அசுத்தமானதொரு [குழியிலே
அமுதம் பாய்வது போல் } அம்ருதம்பாய்ந்தாற் போலே
உங்கள் - உங்களுடைய
மூத்திரப் பிள்ளையை - அசுத்தனான பிள் [ளைக்கு
என் - எனக்குத் தலைவனும்
முகில் வண்ணன் - காளமேகம்போன்ற திருநிறத்தையுடையனுமான எம்பெருமானுடைய
பேர் இட்டு - திருநாமத்தை நாமகரணம் [பண்ணி
(அதனால் அப்போதே நீங்கள் எம்பெருமானுடைய பரிக்ரஹமாகப் பெற்று)

| | |
|---|---|
| கோத்து குழைத்து - (அவ்வெம்பெருமா[னோடு) கூடிக்கலந்து (அதனாலுண்டாகும் ஆநந்தத்துக்குப்போக்குவீடாக) | திரியின் - திரியுங்கள்; (இப்படியாகில்,) |
| குனலம் ஆடி - குணலைக்கூத்தாடிக்கொ[ண்டு | நா தகு நாரணன் - நாவினால் துதிக்கத்தக்க நாராயணனுடைய பெயரைப் [பூண்ட அப்பிள்ளையினுடைய தம்மன்னை நரகம் புகாள்—. |

குறிப்பு:—பரமபாவநமாகிய எம்பெருமான் திருநாமத்தைப் பாமஹேயரான மானிடமக்களுக்கு இடுவது-அசுத்தமாகிய ஒரு எச்சிற்குழியில் அம்ருதத்தைப் பாய்ச்சுவதை ஒக்குமென்க. ஊத்தைக்குழியில் அமுதம் பாய்ந்தால், அவ்வமுதந்தானும் அத்தோடொக்க அசுத்தமாய் அபோக்யமாயொழியும்; எம்பெருமானுடைய திருநாமமோவென்றால் அங்ஙனன்றியே தனக்கு ஒருஸ்பர்சதோஷமில்லாதபடி தான் புகுந்தவிடத்தையும் பரிசுத்தமாக்கிவிலக்ஷணபரிக்ராஹ்யமாம்படி பண்ணுமென்று அமுதத்திற்காட்டில் திருநாமத்திற்கு வாசி அறியத்தக்கது.

இப்படி தமது பிள்ளைகளுக்கு எம்பெருமான் திருநாமத்தை நாமகரணம்பண்ணும்போதே தாம் அவ்வெம்பெருமானுக்கு அந்தரங்கபூதர்களாக ஆவதனால், அவனோடு கூடிக்கலந்து களித்துத் திரியப்பெறுவர். குணலைக் கூத்தாவது - ஆநந்தத்துக்குப் போக்குவீடாகத் தலைகீழாக ஆடுவதொரு கூத்து. ஆநந்தம் தலைமண்டைகொண்டால் மெய்மறந்து கூத்தாடும்படியாகுமென்பதைத் திருவாய்மொழியில் "மொய்ம்மாம் பூம்பொழிற்பொய்கை" என்றதிருமொழியினால் அறிக. கோத்துக்குழைத்து-ஒருபொருட்பன்மொழி; 'கூடிக்கலந்து" என்பதுபோல. குழைத்து என்கிறவிது-'குழைந்து' என்ற "தன்வினைப்பொருளில்வந்த பிறவினை. "நாத் தகும்" என்பதற்கு, ('பிள்ளைக்குத் திருநாமத்தையிட்டு அத்தைப்பலகாலுஞ் சொல்லுகையாகிறவிது) உங்கள் நாவுக்குச்சேரும்' என்று முரைப்பர். ... ... (௯)

சீரணி மால்திரு நாம மேயிடத் தேற்றிய
வீரணி தொல்புகழ் விட்டு சித்தன் விரித்த
ஓரணி யொண்டமி ழொன்பதோ டொன்றும் வல்லவர்
பேரணி வைகுந்தத் தென்றும் பேணி யிருப்பரே. (௧௦)

| | |
|---|---|
| சீர் - கல்யாணகுணங்களை | ஓர் அணி - (கற்பார்க்கு) ஒப்பற்ற ஆபர[ணம்போன்றவையும் |
| அணி - ஆபரணமாகவுடையனும் | ஒண் தமிழ் - அழகிய தமிழ்ப்பாஷையுமா[யிருந்துள்ள |
| மால் - (அடியார்பக்கல்) வ்யாமோஹமு[டையனுமான எம்பெருமானுடைய | ஒன்பதோடு ஒன்றும் - இப் பத்துப் பாட்டுக்களையும் |
| திருநாமமே - திருநாமத்தையே | வல்லவர் - ஓதவல்லவர்கள் |
| இட - (தம் தம் பிள்ளைகளுக்கு) இடும்படி | பேர் அணி - பெரியதும் அழகியதுமான |
| தேற்றிய - உபதேசித்தருளினவரும் | வைகுந்தத்து—ஸ்ரீவைகுண்டத்தில் |
| வீரம் அணி - (இந்திரியங்களை வெல்லுகையாகிற) வீரப்பாட்டை ஆபரணமாகவுடையவரும் | என்றும் - எந்நாளும் |
| தொல் புகழ் - சாச்வதமான கீர்த்தியையு[டையவருமான | பேணி இருப்பர் - (எம்பெருமானுக்கு)மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு வாழப்பெறுவர். |
| விட்டுசித்தன் - பெரியாழ்வார் | |
| விரித்த—விரிவாக அருளிச்செய்தவையும் | |

**குறிப்பு**—எம்பெருமானுடைய திருநாமங்களையே தந்தம்பிள்ளைகளுக்கு நாமகரணம்பண்ணும்படி நாட்டாரைநோக்கி உபதேசித்த பெரியாழ்வாரருளிச்செய்த இப்பத்துப்பாட்டையும் ஓதவல்லவர்கள் பரமபதத்தில் எம்பெருமானுக்குப் பல்லாண்டுபாடப்பெறுவர் என்று இத்திருமொழி கற்றூர்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகின்றூர். மால்-பெரியோனுமாம். தேற்றுதல்-அறிவித்தல், தெளிவித்தல். வீரம் + அணி; வீரணி; தொகுத்தல் விகாரம். (௧௦)

*அடி:—காசும் அங்கொரு உச்சி மானிட மல நாடு மண் நம்பி ஊத்தை சீரணி தங்கை.*

ஆறுந்திருமொழி உரை முற்றிற்று.

---

## ஏழாந்திருமொழி.

## தங்கையைமூக்கும்.

**அவதாரிகை**:—கீழ்த்திருமொழியில் சேதனர்திருந்துகைக்கு உறுப்பான ஹிதத்தை உபதேசித்தபின்பு, மறுபடியும் எம்பெருமான், உகந்தருளின திருப்பதிகளில் எழுந்தருளி நிற்கிற நிலையை அநுபவிக்கவேணுமென்னு மாசை கிளர்ந்து, கங்கைக்கரையிலுள்ள திருக்கண்டங்கடி நகரிலே பல அவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் நன்கு விளங்கும்படி எழுந்தருளி நிற்கிற புருஷோத்தமனை அநுபவியா நின்றுகொண்டு, அவ்வெம்பெருமானிற்காட்டில் அவன் எழுந்தருளியிருக்கிற தேசமே ப்ராப்யத்தில் சரமாவதியாகையாலே, அத்தேசத்தினுடைய வைபவத்தையும் பலபடியாகப்பேசி அநுபவிக்கிறூர், இத்திருமொழியில்.

தங்கையை மூக்குந் தமையனைத் தலையுந் தடிந்தவெந் தாசரதிபோய்
எங்குந் தன்புக ழாவிருந் தரசாண்ட வெம்புரு டோத்தம னிருக்கை
கங்கைகங் கையென்ற வாசகத் தாலே கடுவினை களைந்திட கிற்குங்
கங்கையின் கரைமேற் கைதொழ நின்ற கண்டமென் னுங்கடி நகரே. (௧)

தங்கையை - (இராவணனுடைய) தங்கையாகிய சூர்ப்பணகையினுடைய
மூக்கும்—மூக்கையும்
தமையனை - (அவளுடைய) தமையனான ராவணனுடைய
தலையும் - தலையையும்
தடிந்த—அறுத்தொழித்தவனும்
போய் - (அயோத்திமாநகர்க்கு) எழுந்தருளி
எங்கும் - நாடடங்கலும்
தன் புகழா - தன்னுடையகீர்த்தியேயாம்படி
இருந்து - (பதினோராயிரம்ஸம்வத்ஸரம்) எழுந்தருளியிருந்து
அரசு ஆண்ட - ராஜ்யபரிபாலநஞ்செய்தருளினவனும்
எம் - எமக்குத்தலைவனுமான
தாசரதி - இராமபிரானுகிய
எம் புருடோத்தமன்—எமது புருஷோத்தமப்பெருமானுடைய
இருக்கை - வாஸஸ்தாநமாம்.
கங்கை கங்கை என்ற வாசகத்தாலே - 'கங்கை, கங்கை' என்ற சப்தத்தைச்சொல்லுவதனுல்
கடு வினை—கடிநமான பாபங்களை
களைந்திட கிற்கும் - ஒழிக்கவல்ல
கங்கையின் - கங்காநதியினுடைய
கரை மேல் - கரையிலே
கை தொழ நின்ற - (பக்தர்கள்) கைகூப்பித் தொழும்படியாக நின்ற
கண்டம் என்னும்—'கண்டம்' என்னும் பெயரையுடைய
கடி நகர் - சிறந்தநகரமானது
(எது வென்னில்;—)

குறிப்பு:—தங்கைமூக்கைத்தடிந்த விவரமும், அதன்மேல் தோன்றும் ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரமும், கீழ்—என்னுதன் தேவியில் எட்டாம்பாட்டினுரையிற் கூறப்பட்டது. தாசரதி-வடமொழித் தத்திதாந்தநாமம். [எங்குந் தன்புகழா | இத்யாதி.] "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா: । ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி ॥" என்றச்லோகம் இங்கு நினைக்கத்தக்கது. புருடோத்தமன்—திருக்கண்டங்கடிநகரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய திருநாமம். இருக்கை—தொழிலாகுபெயர்.

பின்னடிகளின்கருத்து;—ஏதேனுமொரு குளத்தில் நீராடுமவர்கள் அந்த நீரைக் கங்கையாக நினைத்து, 'கங்கை, கங்கை' என்று உச்சரித்தால் உடனே அவர்களுடைய பெருப்பெருத்த பாபங்களையெல்லா மொழிக்கும்படியான பெருமைபொருந்திய கங்கையின் கரையிலுள்ள கண்டமென்கிற நகரவிசேஷமென்பதாம்.

திருக்கண்டங்கடிநகர்-வடநாட்டுத்திருப்பதிகள் பனிரண்டினுள் ஒன்று; கண்டம் என்னுமிவ்வளவே இத்திருப்பதியின்பெயர்; கடி என்னுஞ்சொல் இங்குச் சிறப்புப்பொருளது. "மத்தாற் கடல் கடைந்து வானோர்க் கமுதளித்த, அத்தா வெனக்குன்னடிப்போதில்-புத்தமுதைக், கங்கைக் கரைசேருங் கண்டத்தாய் புண்டரிக, மங்கைக் கரைசே வழங்கு" என்ற ஐயங்கார் பாடலில் "கண்டத்தாய்" என்றவிளி நோக்கத்தக்கது. ... (௧)

சலம்போதி யுடம்பில் தழலுமிழ் பேழ்வாய்ச் சந்திரன் வேங்கதி ரஞ்ச
மலர்ந்தெழுந் தணவு மணிவண்ண வுருவின் மால்புரு டோத்தமன் வாழ்வு
நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும் நாரணன் பாதத் துழாயுங்
கலந்திழி புனலாற் புகர்படு கங்கைக் கண்டமென் னுங்கடி நகரே. (௨)

நலம் திகழ் - (எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை வஹிக்கின்றமையாலுண்டான, நன்மை விளங்காநிற்கிற.
சடையான் - ஜடையையுடையனான சிவபெருமானுடைய
முடி - தலையில் (அணியப்பெற்றுள்ள)
கொன்றை மலரும் - (செந்நிறமுடைய) கொன்றைப்பூவோடும்
நாரணன் - (அச்சிவபிரானுக்குந் தலைவனான) நாராயணனுடைய
பாதத் துழாயும் - திருவடிகளிற்புனைந்த (பசுமைநிறமுடைய) திருத்துழாயோடும்
கலந்து - சேர்ந்து
இழி - ஆகாசத்தில் நின்றும் பூமியில் இழிந்து வெள்ளமிடாநின்ற
புனலால்—ஜலத்தினால்
புகர்படு - விளங்காநின்றுள்ள
கங்கை - கங்கைக்கரையிலுள்ள
கண்டமென்னும் கடி நகர்—;
சலம் - ஜலத்தை
பொதி - பொதிந்துகொண்டிருக்கிற
உடம்பின் - வடிவையுடைய
சந்திரன் - சந்திரனும்,
தழல்—நெருப்பை
உமிழ்—உமிழாநின்றுள்ள
பேழ் - பெரிய
வாய் - கிரணங்களையுடையனும்
வெம் - வெம்மையையே இயல்வாகவுடையனுமான
கதிர்—ஸூர்யனும்
அஞ்ச - அஞ்சும்படியாக
மலர்ந்து எழுந்து - மிகவும்பரம்பினசரீரத்தையெடுத்துக்கொண்டு கிளர்ந்து
அணவு - (அந்த சந்த்ரஸூர்யர்களுடைய இருப்பிடத்தைச்) சென்று கிட்டின.
மணி வண்ணம் உருவின் - நீலமணிபோன்ற நிறம் பொருந்திய வடிவையுடையவனும்.
மால் - (அடியார்பக்கல்) வ்யாமோஹமுடையவனுமான
புருடோத்தமன் - புருஷோத்தமன்
வாழ்வு—வாழுமிடம்.

**குறிப்பு:**—எம்பெருமான் மாவலிகையில் நீரேற்றுப்பெற்று உலகளக்கத் தொடங்கி ஓங்கியுயர்ந்த போது சந்த்ரஸூர்யர்கள் "இதுவென் புகுந்ததிங் கந்தோ" என்றாற்போல அஞ்சினராம்; அப்படி அவர்கள் அஞ்சும்படி விம்மி வளர்ந்த எம்பெருமான் பொருந்தியெழுந்தருளி யிருக்குமிடம் கண்டமென் னுங்கடிநகரென்க. சந்திரன் அம்ருதமயமான கிரணங்களையுடையவனாதலால், சலம்பொதியுடம்பினனாகக்கூறப்படுவன். பேழ்—பெருமை. "சலம்பொதியு டம்பிற் சந்திரன், தழலுமிழ்பேழ்வாய் வெங்கதிர்" என இயைத்துரைக்க ப்பட்டது.

பின் ஒன்றரையடிகளால், கங்கையை வருணிக்கின்றார்:—இக்கங்கை முத லில் எம்பெருமானது திருவடியினின்றும் பெருகிப்பின்பு சங்கரன்சடையி னில்தங்கி, ஆகாசத்தில் நின்றும் இலவுலகத்தில் பிரவஹித்தமையால், எம்பெ ருமானுடைய பாதத்துழாய் மலரோடும் சிவபிரானுடைய முடிக்கொன் றைமலரோடுங்கலந்து பசுமைநிறமும் செந்நிறமுமாகத் தோற்றுகின்ற நீர்ப் பெருக்கினால் விலக்ஷணமானதொருபுகரைப்பெறுமென்க. "நலந்திகழ்" என் பதைச்சடையோடும் இயைக்கலாம், சடையானோடும் இயைக்கலாம். எம்பெ ருமானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைத் தனக்குத்தூய்மை விளைக்குமதாகப்ரதி பத்திபண்ணித்தலையால் தரிக்கைக்கு மேற்பட்ட நன்மையில்லையிறே சடை யானுக்கு. ... ... ... ... ... (௨)

**அதிர்முக முடைய வலம்புரி குமிழ்த்தி யழலுமி ழாழிகோண் டெறிந்தங்**
**கெதிர்முக வசுரர் தலைகளை யிடற மெம்புரு டோத்தம னிருக்கை**
**சதுமுகன் கையிற் சதுப்புயன் றாளிற் சங்கரன் சடையினில் தங்கிக்**
**கதிர்முக மணிகோண் டிழிபுனற் கங்கைக் கண்டமேன் னுங்கடி நகரே.**

(எம்பெருமானுடைய திருவடியை விளக்குகிறபோது,)

சதுமுகன் கையில் } சதுர்முக ப்ரஹ்மாவினுடைய கையிலும்

சதுப் புயன் தாளில் } சதுர்ப்புஜனான எம்பெருமானுடைய திருவடியிலும்

(பின்பு,)

சங்கரன் சடையினில் } சிவபெருமானுடைய ஜடையிலும்

கதிர் - ஒளியை யுடையனவும்

முகம் - சிறந்தவையுமான

மணி—ரத்நங்களை

கொண்டு - கொழித்துக்கொண்டு

இழி—இழிகிற

புனல்—தீர்த்தத்தை யுடைய

கங்கை—கங்கைக் கரையிலுள்ள

கண்டமென்னும் கடி நகர்—;

அங்கு—உலகமளந்த அப்போது,

அதிர்முகம் உடைய } முழங்காநின்ற முகத்தையுடைய

வலம்புரி - ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும்

குமிழ்த்தி-திருப்பவளத்தில் வைத்து ஊதி

அழல் உமிழ்—நெருப்பை வீசாநின்றுள்ள

ஆழிகொண்டு எறிந்து } திருவாழியை யெடுத்துவிட்டெறிந்தும்,

எதிர்முகம்—(போர் செய்வதாக) எதிர்த்த முகத்தையுடைய

அசுரர்—அஸுரர்களுடைய

தலைகளை—தலைகளை

இடறும்—உருட்டியருளின

எம் புருடோத்தமன் இருக்கை } எமது புருஷோத்தமனுடைய வாஸஸ்தானமாகும்.

**குறிப்பு:**—திருமால் உலகமளந்த காலத்தில் மேலே ஸத்ய லோகத்திற் சென்ற அப்பிரானது திருவடியைப்பிரமன் தன் கைக்கமண்டலதீர்த்தத்தாற்

கழுவிவிளக்க, அந்த ஸ்ரீபாததீர்த்தமாகப்பெருகித் தேவலோகத்திலிருந்த ஆகாய கங்காநதியை, ஸூர்யகுலத்துப்பகீரத சக்ரவர்த்தி கபிலமுனிவனது கண்ணின் கோபத்தீக்கு இலக்காகி உடலெரிந்து சாம்பலாய் நற்கதியிழந்த தனது மூதாதையரானஸகரபுத்திரர் அறுபதினாயிரவரைநற்கதிபெறுவிக்கும் பொருட்டு நெடுங்காலந்தவஞ்செய்து மேலுலகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில், அவனது வேண்டுகோளாற்சிவபிரான் அந்நதியைமுடியின் மேலேற்றுச்சிறிது சிறிதாகப் பூமியில் விட்டனனென்றவரலாறு அறியத்தக்கது.

ஓங்கி உலகளந்தருளும்போது நமுசிமுதலிய அசுரர்கள் "என்னிது மாயமென்னப்பனறிந்திலன், முன்னையவண்ணமே கொண்டளவாய்" என்று தடைசெய்ய, அப்போது சங்கை முழக்கியும், ஆழியை எறிந்தும் அவர்களைத் துலைத்தருளினமை முன்னடிகளிற் கூறியது. "குமிழ்த்தி" "எறிந்து" என்றவினையெச்சமிரண்டும், "இடறும்" என்றபெயரெச்சத்தோடுஇயையும். இம்முன்னடிகளிற்கூறிய வரலாறு, ஸாதாரணமாகத் தேவாஸுரயுத்தகாலங்களில் நடந்ததாகக்கொள்ளவுங்கூடும். "தலைகளையிடறும்" என்றது அவர்களைத் துலைத்தமையைக் கூறியவாறு. ... ... ... (௫)

இமையவ ரிறுமாந் திருந்தர சாள வேற்றுவந் தெதிர்பொரு சேனை
நமபுரம் நணுக நாந்தகம் விசிறு நம்புரு டோத்தமன் நகர்தான்
இமவந்தந் தொடங்கி யிருங்கட லளவு மிருகரை யுலகிரைத் தாடக்
கமையுடைப் பெருமைக் கங்கையின் கரைமேற் கண்டமென் னுங்கடி நகரே.

இமவந்தம் தொடங்கி—இமயமலையின் உச்சிமுதற்கொண்டு
இரு கடல் அளவும் - பெரியகடல் வரைக்கும்
இரு கரை - இரண்டு கரையிலுமுள்ள
உலகு - உலகத்தவர்கள்
இரைத்து—ஆரவாரித்துக்கொண்டு
ஆட — நீராட,
கமை யுடை பெருமை } (அவர்களது பாபங்களைப்) பொறுக்கையால் வந்த பெருமையை யுடைய
கங்கையின் கரை மேல் } கங்கைக் கரையில்
கண்டம் என்னும் கடி நகர்—;
இமையவர்—(இந்திரன் முதலிய) தேவர்கள்

இறுமாந்து இருந்து - அஹங்காரப்பட்டுக்கொண்டிருந்து
அரசு ஆள - ராஜ்யம் நிர்வஹிப்பதற்காகவும்,
ஏற்றுவந்து எதிர் பொரு சேனை } துணிந்து வந்து (தன்மேலும் அத்தேவர்கள் மேலும்) எதிர்ந்து போர் செய்கிற (அஸுர ராக்ஷஸ) ஸேனையானது
நமபுரம் - யமலோகத்தை
நணுக—கிட்டுகைக்காகவும்
நாந்தகம் - நந்தகமென்னும் வாளை
விசிறு - வீசா நிற்குமவனும்
நம் - நமக்குத் தலைவனுமான
புருடோத்தமன்—புருஷோத்தமப் பெருமாளுடைய
நகர் - நகரமாகும்.

குறிப்பு:—அசுரர்களு மரக்கர்களும் இந்திரன்முதலிய தேவர்களைக்குடியிருக்கவொட்டாதபடி அலைத்து அடர்த்து எதிர்ந்து போர்புரியப்புக, அப்போது எம்பெருமான் இந்திராதிகளுக்குப் பக்ஷபாதி யாயிருந்து அவர்களை இடையூறின்றி அரசாள்விக்குமாறு அவ்வசுரர் மீது தனது நந்தகவாளைவீசியெறிந்து அவர்களையொழித்தமைமுன்னடிகளிற்கூறியது. இறுமாந்திருக்கை

யாவது—"கண்டவாற்றால் தனதேயுலகென நின்றான்றன்னை" என்றாற்போல வீற்றிருக்கை. "அரசாள—நாந்தகம்விசிறு" என இயையும். ஏற்றுவந்து—என்றுவந்து; அஹங்கரித்துவந்து. நாந்தகம்—நீட்டல் விகாரம். நகர்தான்=தான்—அசை.

இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும்—"ஆஸேதுஹிமாசலம்" என்பது வடசொல்வழக்கு. ஹிமவத்பர்வதத்தின் உச்சிதொடங்கிப்பெரிய கடலளவும் இரண்டு கரையிலுள்ள லோகத்தாருந்திரண்டு ஆரவாரித்துக்கொண்டு வந்து நீராட, அவர்களுடைய பாபங்களை யெல்லாம் பொறுத்து அவர்களைத்தூயாராக்கும் பெருமையையுடையது கங்கையென்க. கமை—க்ஷமா என்றவடசொல்திரிபு. "கமை பெருமை உடை"எனமாற்றி இயைத்து, (பாவங்களை) க்ஷமிக்கையாகிறபெருமையை யுடைய என்றுரைப்பாருமுளர்.

உழுவதோர் படையு முலக்கையும் வில்லு மொண்சுட ராழியுஞ் சங்கும்
மழுவொடு வாளும் படைக்கல முடைய மால்புரு டோத்தமன் வாழ்வு
எழுமையுங் கூடி யீண்டிய பாவ மிறைப்பொழு தளவினி லெல்லாம்
கழுவிடும் பெருமைக் கங்கையின் கரைமேற் கண்டமென் னுங்கடி நகரே. (௫)

எழுமையும் - ஏழு ஜந்மங்களில்
கூடி ஈண்டிய – சேர்ந்து திரண்ட
பாவம் எல்லாம்–பாபங்களை யெல்லாம்
இறைப் பொழுது அளவினில் – க்ஷணகாலத்துக் குள்ளே
கழுவிடும் - போக்கி விடும்படியான
பெருமை–பெருமையையுடைய
கங்கையின் கரைமேல்;
கண்டம் என்னும் கடி நகர்—;
உழுவது ஓர் படையும்–உழுவதற்கு உரிய [கருவியாகிய கலப்பையையும்
உலக்கையும் - உலக்கையையும்
வில்லும் - ஸ்ரீ சார்ங்கத்தையும்
ஒண் சுடர்–அழகிய தேஜஸ்ஸையுடைய
ஆழியும்-திருவாழியையும்
சங்கும்–ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும்
மழுவொடு–கோடாலியையும்
வாளும்–நந்தக வாளையும்
படைக்கலம் உடைய–ஆயுதமாக வுடையவ[னும்
மால்–ஸர்வேச்வரனுமான
புருடோத்தமன்–புருஷோத்தமப் பெருமா[ன்
வாழ்வு–எழுந்தருளி யிருக்குமிடம்.

குறிப்பு:—கலப்பையும் உலக்கையும்-பலராமாவதாரத்திலும், மழு-பரசுராமாவதாரத்திலுங்கொள்ளப்பட்ட ஆயுதங்களென்க. படைக்கலமுடைய=படை, கலம், உடைய என்று பிரித்து, (இவற்றை) ஆயுதமாகவும்ஆபரணமாகவுமுடைய என்று முரைக்கலாம்.

அநேக ஜந்மஸஞ்சிதமான பாவங்களனைத்தையும் ஒரு நொடிப்பொழுதில்ஒழித்துவிடும்படியான பெருமையையுடையது கங்கைஎன்பதுபின்னடி. கழுவிடும்—கழுவிவிடும். ... ... ... ... (௫)

தலைப்பெய்து குமுறிச் சலம்பொதி மேகஞ் சலசல பொழிந்திடக் கண்டு
மலைப்பெருங் குடையால் மறுத்தவன் மதுரை மால்புரு டோத்தமன் வாழ்வு
அலைப்புடைத் திரைவா யருந்தவ முனிவ ரவபிர தங்குடைந் தாடக்
கலப்பைகள் கொழிக்குங் கங்கையின் கரைமேல் கண்டமென் னுங்கடி நகரே.

அரு தவமுனிவர் - அரிய தவங்களைப்புரிந் [தமஹர்ஷிகள்
அலைப்பு உடை-அலைத்தலையுடைய [-கரை யெறியா நின்றுள்ள]
திரைவாய்-அலையிலே
அவபிரதம் குடைந்து ஆட } அவப்ருதஸ்நாநம் பண்ண,
(பிறகு பெருக்காறுய்)
கலப்பைகள் கொழிக்கும் - (யாகபூமியிலுண்டான) கலப்பை முதலிய உபகரணங்க ளெல்லாவற்றையும் எடுத்துத் தள்ளிக்கொண்டு போகா நி [ற்கிற
கங்கையின் கரை மேல்
கண்டம் என்னும் கடி நகர்—;

சலம் - (கடலிலுள்ள) ஜலத்தை
பொதி - பொதிந்து கொண்டிராநின்ற
மேகம்-மேகங்களானவை [து கிட்டி
தலைப் பெய்து-(திருவாய்ப் பாடியில்) வந்
குமுறி-கர்ஜனை பண்ணி [மை பொழிய
சல சல பொழிந்திட-சளசள வென்று ம
கண்டு - (அதைக்) கண்டு
மலை-கோவர்த்தந மலையாகிற
பெரு குடையால்-பெரிய குடையாலே
மறுத்தவன்-(அம்மழையைத்) தடுத்தருளி [னவனும்
மதுரை-திருவட மதுரையில்
மால்-விருப்ப முடையனுமான [மான்
புருடோத்தமன்-ஸ்ரீ புருஷோத்தமப்பெரு
வாழ்வு-எழுந்தருளி யிருக்குமிடம்.

குறிப்பு:—முன்னடிகளிற் கூறிய கோவர்த்தநோத்தரணவரலாறு கீழ்ப் பலவிடங்களில்விரித்துரைக்கப்பட்டது.சலசல—ஒலிக்குறிப்பு. மறைத்தவன் என்றும் பாடமுண்டென்பர்.

பின்னடிகளின் கருத்து;—தபஸ்விகளான மஹர்ஷிகள் பகவத்ஸமாராதநரூபங்களான யாகங்களைக்குறையற அனுட்டித்து, அந்திமதிநத்தில் அவப்ருதஸ்நாநஞ்செய்ய, அநந்தரம் பெருக்காறுய்ப்பெருகி யாகபூமியிலுள்ள கலப்பை முதலிய உபகரணங்க ளெல்லாவற்றையும் எடுத்துத்தள்ளிக் கொண்டு போகாநிற்குமதான கங்கைக்கரையிலுள்ள கண்டமென்னுங் கடிநகர் என்பதாம். அவபிரதம்—வேள்வியின் முடிவிற்செய்ய வேண்டிய ஸ்நாநம்; அவப்ருத்யம் என்ற வடசொல்விகாரம். ... ... (சு)

விற்பிடித் திறுத்து வேழத்தை முறுக்கி மேலிருந் தவன்றலை சாடி
மற்பொரு தெழப்பாய்ந் தரையனை யுதைத்த மால்புரு டோத்தமன்வாழ்வு
அற்புத முடையயிரா வத மதமு மவரிளம் படியரொண் சாந்துங்
கற்பக மலருங் கலந்திழி கங்கைக் கண்டமென் னுங்கடி நகரே. (எ)

அற்புதம் உடைய - ஆச்சர்யகரமான
ஐராவதம்-'ஐராவதம்' என்னும் (தேவேந் [திரனது) யானையினுடைய
மதமும் - மதநீரும்,
அவர்—அத்தேவர்கள் (விரும்பத்தக்க)
இள படியர் — இளம்பருவத்தை யுடையர்க [ளான தேவமாதர்கள் (அணிந்த)
ஒண் சாந்தும் - சிறந்த சந்தநமும்
கற்பகம்மலரும்—(அவர்களது குழலில்சொ [ருகியிருந்த) கற்பகப் பூக்களும்
கலந்து - ஒன்று சேர்ந்து
இழி—இழியா நின்றுள்ள
கங்கை - கங்கையின் கரையில்
கண்டம் என்னும் கடி நகர்—;
வில் பிடித்து இறுத்து } (கம்ஸனுடைய ஆயுதச் சாலையிலிருந்த) வில்லைப் பிடி [த்து முறித்தும்,

வேழத்தை—(குவலயாபீடம் என்ற) யானை [யை
முறுக்கி - பங்கப் படுத்தியும்,
மேல் இருந்தவன்—(அந்த யானையின்) மே [லிருந்த யானைப்பாகனுடைய
தலை - தலையை
சாடி - சிதறப் புடைத்தும்,
மல் - (சாணூரமுஷ்டிகாதி)மல்லர்களோடு
பொருது - போர் செய்தும்,
அரையனை—உயர்ந்த கட்டிலின்மேலிருந்த [அரசனாகிய கம்ஸனை
எழப் பாய்ந்து உதைத்த } அவன்மேற் பாய்ந்து (கீழே தள்ளித் திருவடிகளா [ல்) உதைத்தருளின
மால் புருடோத்தமன் வாழ்வு—.

குறிப்பு:—எவ்வகையினாலாவது கண்ணபிரானை நலிய நினைத்த கம்ஸன் தான் ஒரு தநுர்யாகஞ்செய்வதாக, அதற்கு அப்பிரானை உறவுமுறைமையால் அழைக்க, அவ்வண்ணமே கண்ணபிரான் அங்கேற எழுந்தளிச்செய்த செயல்களைக் கூறுவது, முன்னடி. ... ... ... (எ)

திரைபொரு கடல்சூழ் திண்மதிள் துவரை வேந்துதன் மைத்துனன் மார்க்காய்
அரசினை யவிய வரசினை யருளு மரிபுரு டோத்தம னமர்வு
நிரைநிரை யாக நெடியன யூபம் நிரந்தர மொழுக்குவிட் டிரண்டு
கரைபுரை வேள்விப் புகைகமழ் கங்கைக் கண்டமென் னுங்கடி நகரே. (அ)

நெடியன - நீண்டவையா யிராநின்றுள்ள
யூபம் - (பசுக்கள் கட்டுகிற) யூபஸ்தம்பங் [களானவை
நிரை நிரை ஆக - திரள் திரளாக
நிரந்தரம் - இடை விடாமல்
ஒழுக்கு விட்டு - நெடுக ஓடாநிற்பதும்,
இரண்டு கரை புரை - இருபக்கத்துக் கரைகளும் தம்மிலே ஒத்து
வேள்வி புகை கமழ் - யாகத்தி லுண்டாகும் புகைகளால் பரிமளியாநிற் [றுமான
கங்கை—கங்கைக் கரையில்
கண்டம் என்னும் கடி நகர்---;
திரை பொரு - அலையெறியாநின்றுள்ள
கடல் சூழ் - கடலால் சூழப்பெற்ற
திண் மதிள் — திண்மையான மதிள்களையு [டைய
துவரை—த்வாரகைக்கு
வேந்து—தலைவனும்,
தன் - தன்னுடைய
மைத்துனன்மார்க்கு - மைத்துனன்மார்க [ளான பாண்டவர்களுக்கு
ஆய் - பக்ஷபாதியாய் நின்று
அரசனை அவிய - துரியோதனாதி ராஜாக் [களை அழியச் செய்து
அரசினை - ராஜ்யத்தை
அருளும் - (அப்பாண்டவர்கட்குக்) கொடு [த்தருளினவனும்
அரி - (ஸகலபாபங்களையும்) போக்குமவனு [மான
புருடோத்தமன் - புருஷோத்தமப் பெரு [மான்
அமர்வு - பொருந்தி யெழுந்தருளியிருக்கு• [மிடம்.

குறிப்பு:—முன்னடிகளிற் குறித்த வரலாறு கீழ் "மெச்சூது சங்கமிடத்தான்" என்றபாட்டின் குறிப்புரையிற் காணத்தக்கது. அரி—ஹரி:. கங்கையிற்பற்பல யூபஸ்தம்பங்கள் இடைவிடாது நெடுக அடித்துக்கொண்டு ஓடுமென்பது, மூன்றாமடி. யூபம்—யாகப்பசுவைக்கட்டுந்தறி; வடசொல். நிரந்தரம்-வடசொல். இரண்டு கரைபொரு—இரண்டு கரைகளும் ஒருபடிப்பட; இரண்டு கரைகளிலும் என்றவாறு. ... ... ... (அ)

வடதிசை மதுரை சாளக்கி ராமம் வைகுந்தந் துவரை யயோத்தி
இடமுடை வதரி யிடவகை யுடைய வெம்புரு டோத்தம னிருக்கை
தடவரை யதிரத் தரணிவிண் டிடியத் தலைப்பற்றிக் கரைமரஞ் சாடிக்
கடலினைக் கலங்கக் கடுத்திழி கங்கைக் கண்டமென் னுங்கடி நகரே.(௯)

தட வரை - (மந்தரம் முதலிய)பெரியமலை [களானவை
அதிர - சலிக்கும் படியாகவும்
தரணி—பூமியானது [படியாகவும்
விண்டு இடிய - பிளவுபட்டு இடிந்துவிழும்
தலைப்பற்றி - (மரங்களினுடைய) தலையளவுஞ் செல்லக் கிளம்பி
கரை - கரையிலுள்ள
மரம் - மரங்களை
சாடி - மோதி முறித்தும்
கடல்—(ஒன்றாலுங் கலங்காத) கடலுங்கூட
கலங்க - கலங்கும்படி
கடுத்து - வேகங்கொண்டு
இழி - இழியா நின்றுள்ள

கங்கை—கங்கா தீரத்திலுள்ள
கண்டம் என்னும் கடி நகர்—;
வட திசை - வடதிக்கிலுள்ள
மதுரை - ஸ்ரீ மதுரையும்
சாளக் கிராமம் - ஸ்ரீ ஸாளக்ராமமும்
வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டமும்
துவரை - ஸ்ரீத்வாரகையும்
அயோத்தி - திருவயோத்யையும்
இடம் உடை - இடமுடைத்தான [-விசா லமான]
வதரி - ஸ்ரீ பதரிகாச்ரமமுமாகிற இவற்றை இடவகை உடைய வாஸஸ்தானமாகவுடை [யனை
எம் புருடோத்தமன் இருக்கை—.

குறிப்பு:—பகீரதசக்கரவர்த்தி தனது தபோபலத்தினால் கங்கையை இறக்கிக்கொண்டு வருகிறபோது வந்திழிகிற வேகத்தைச் சொல்லுவன, பின்னடிகள். கடுத்து = கடுமை—வேகம். ... ... ... (௬)

மூன்றெழுத் ததனை மூன்றெழுத் ததனால் மூன்றெழுத் தாக்கிமூன் றெழுத்தை
ஏன்றுகொண் டிருப்பார்க் கிரக்கநன் குடைய வெம்புரு டோத்தம னிருக்கை
மூன்றடி நிமிர்த்து மூன்றினில் தோன்றி மூன்றினில் மூன்றுரு வானான்
கான்றடம் பொழில்சூழ் கங்கையின் கரைமேற் கண்டமென் னுங்கடி நகரே. ()

கான் - நறுநாற்றம் கமழாநின்றுள்ள
தட - பெரிய
பொழில் - சோலைகளினால்
சூழ் - சூழப் பெற்ற
கங்கையின் கரை மேல் கண்டம் என்னும் கடி நகர்—;
மூன்று எழுத்ததனை—அகார, உகார, மகாரஸ்வரூபமான 'ஓம்' என்னும் பிர [ணவத்தை
மூன்று எழுத்ததனால் - ('நிருக்தம்' என்ற) மூன்றக்ஷரமான பெயரை யுடைத் [தான நிர்வசந ப்ரக்ரியையாலே
மூன்று எழுத்து ஆக்கி - (மூன்றுபதமாய் மூன்று அர்த்தத்திற்கு வாசகமாயிருக்கும்) மூன்றெழுத்தாகப் பிரி [த்து
மூன்று எழுத்தை-(அந்த) மூன்றெழுத்தை [-பிரணவத்தை]
ஏன்று கொண்டிருப்பார்க்கு (தஞ்சமாக நினைத்து) அநுஸந்திக்கு [மவர்கள் பக்கலில்
இரக்கம் நன்கு உடைய சிறந்த கருணையை யுடையவனும்,
மூன்று அடி நிமிர்த்து - (அந்த பிரணவத்தை நம: பதத்தோடும் நாராயணபதத்தோடுங் கூட்டி) மூன்று பத [மாக்கி [-திருவஷ்டாக்ஷரமாக்கி]
மூன்றினில் - (அந்த) மூன்றுபதங்களிலும்
தோன்றி - (ஆத்மாவினுடைய அநந்யார்ஹ சேஷத்துவம், அநந்ய சரணத்துவம், அநந்ய போக்யத்வமாகிற மூன்று ஆகாரங்களையும்) தோன்றுவி [த்து
மூன்றினில் - அந்த ஆகாரத்ரயத்துக்கும் [பிரதி ஸம்பந்தியாக
மூன்று உரு ஆனான் - (தானும்) சேஷித்வம், சரண்யத்வம், ப்ராப்யத்வம் என்கிற மூன்று ஆகாரங்களை யுடை [யனுமான
எம் புருடோத்தமன் இருக்கை—.

குறிப்பு:—ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களினின்றும் அடைவே, பூ:, புவ:, ஸுவ: என்ற மூன்று வ்யாஹ்ருதிகளையுந் தோன்றுவித்து, பொன்வாணியன் பொன்னைப் புடபாகம் வைப்பதுபோல எம்பெருமான் தனது ஸங்கல்பத்தினால் அவற்றை ஒடவைத்து, அவற்றில் நின்றும் அகார உகார மகாரங்களாகிற மூன்று அக்ஷரங்களைத் தோன்றுவித்து, அம்மூன்றையும் ஸந்திக்ரமத்தில் 'ஓம்' என்று ஏகாக்ஷரமாக்கி, இப்படி ஏகாக்ஷரமாக்கப்பட்ட மூன்றக்ஷரமாகிய பிரணவத்தை நிருக்திக்ரமத்தினால் [அதாவது—

ப்ரக்ரியை பண்ணும் க்ரமத்தினால்] மூன்றுபதமாய் மூன்று அர்த்தங்களுக்கு வாசகமாயிருக்கும் அகார உகார மகாரங்களாகிற மூன்றெழுத்தாகப்பிரித்து, அவற்றுள் அகாரம் ஜீவாத்துமாவுக்குள்ள பகவச்சேஷத்துவத்தைக்கூறுகையாலும், உகாரம் அவதாரணார்த்தத்தைக்கூறி, அதனால் கீழ்ச்சொன்ன சேஷத்துவம் ஸ்ரீமந்நாராயணன் பக்கலிலன்றி வேறிடத்துவஹிக்கத்தகாதது என்னுமிடத்தைத் தெளிவிக்கையாலும், மகாரம் "மந-ஜ்ஞாநே" என்கிற தாதுவினின்றும் பிறந்து ஞானத்தைக் கூறுமதாயும், அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு ஆச்ரயமான ஆத்துமா, தேஹம் முதலியவற்றிற் காட்டில் விலக்ஷணன் என்று புலப்படுத்துமதாயு மிருப்பதாலும், இம்மூன்றெழுத்தையுமே தமக்குத்தஞ்சமாக நினைத்து அநுஸந்திக்குமவர் பக்கலில் பரமகிருபையைச் செய்தருள்பவனும், அந்தப்ரணவத்தை நம:பதநாராயணபதங்களோடு கூட்டி மூன்றுபதமாகவளர்த்து, அம்மூன்று பதங்களிலும் ஆத்மாவினுடைய அநந்யார்ஹ சேஷத்துவம், அநந்ய சரணத்வம், அநந்யபோக்யத்வமாகிற மூன்று ஆகாரங்களையுந்தோன்றுவித்து, அவ்வாகாரங்களுக்கு எதிர்த்தட்டாகத்தான் சேஷித்வம், சரண்யத்வம், ப்ராப்யத்வம் என்கிறமூன்று ஆகாரங்களையுடையனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் கண்டமென்னுங்கடிநகராம்.

["மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி"] பிரித்துப்பார்த்தால் மூன்றெழுத்தாகத்தோற்றும்படியாய், ஸ்தூலதர்சநத்தில் ஏகாக்ஷரமாகத் தோற்றும்படியாயுள்ள 'ஓம்' என்கிற பிரணவத்தை நிர்வசநக்ரமத்தினால் மூன்றெழுத்தாகப்பிரித்து என்றபடி. "வஷவஸ்யிமஜோவ்யாக்ரியா நிவ-ஷெஜாஹ்யாம்" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவஸூக்தியின்படி நிர்வசநத்துக்குப் பதஸமதிகமஹேதுத்வ முண்டென்பது அறியத்தக்கது. இவ்விடத்தில் நிர்வசநமாவது- "ஊ-ஸிதிஜெஷாஜாயத। ஊவஸிதியஜ-வெஷாஸ। ஸ-வஸிதிவஸாஜெஷாஸ। தாநெகயாஸஹாதஜெதஜொதி॥" என்கிற சுருதி. "நிரூக்தம்" என்ற சொல் அக்ஷரத்ரயாத்மகமானது பற்றி 'மூன்றெழுத்ததனால்' என்றுரெனக' நிருக்தம்—வேதாங்கங்கள் ஆறனுள் ஒன்று. மூன்றுமடியில், தோன்றி—பிறவினையில் வந்த தன்வினை. ... ... (௧௦)

பொங்கொலி கங்கைக் கரைமலி கண்டத் துறைபுரு டோத்தம னடிமேல்
வெங்கலி நலியா வில்லிபுத் தூர்க்கோன் விட்டுசித் தன்விருப் புற்றுத்
தங்கிய வன்பால் செய்தமிழ் மாலை தங்கிய நாவுடை யார்க்குக்
கங்கையில் திருமாற் கழலிணைக் கீழே குளித்திருந் தகணக் காமே. (௧௦)

பொங்கு - (நீர்க்கொழிப்பால் வந்த) கிளர்த்தியை யுடையதும்
ஒலி - கோஷத்தை யுடையதுமான
கங்கைக் கரை - கங்கைக்கரையிலுள்ளதும்
மலி - எல்லாவகை ஏற்றங்களை யுடையதுமான
கண்டத்து - திருக்கண்டங் கடிநகரில்
உறை - நித்ய்வாஸம் பண்ணுகின்ற
புருடோத்தமன் - புருஷோத்தமப் பெருமானுடைய
அடி மேல் - திருவடிகளில்,—
வெம் கலி நலியா - கொடிய கலியினால் நலியப் பெறாத
வில்லிபுத்தூர் கோன் - ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத்தலைவரான
விட்டு சித்தன் - பெரியாழ்வார்

விருப்புற்று - ஆசைப்பட்டு
தங்கிய அன்பால் - நிலைநின்ற பக்தியினால்
செய் - அருளிச் செய்த
தமிழ் மாலை - தமிழ் மாலையாகிய இப்பாசு[ரங்கள்
தங்கிய–நிலை நின்றிருக்கப் பெற்ற
நா உடையார்க்கு - நாக்கையுடையவர்க[ளுக்கு
கங்கையில் - கங்காநதியில்
குளித்து - நீராடி
திரு மால் - ச்ரிய: பதியினுடைய
இணை - ஒன்றோடொன்றொத்த
கழல் கீழே - திருவடிகளின் கீழே
இருந்த கணக்கு ஆம் - நிரந்தரஸேவை பண்ணுகையாகிற பயன்பெற்ற[தாகும்.

குறிப்பு:—இதனால் இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித்தலைக் கட்டியவாறு. நலிவு—துன்பம் ... ... ... (௧௧.)

அடி:—தங்கை சலம் அதிர் இமையவர் உழு தலை வில் திரை வட மூன்று பொங்கு மாதவ.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று

---

## எட்டாந்திருமொழி
## மாதவத்தோன்.



**அவதாரிகை:**—திருவரங்கம் பெரியகோயிலில் ஸகலாவதாரகுணசேஷ்டிதங்களும் நன்கு விளங்கும்படி எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமாற்றை அநுஸந்தித்து ஆழங்காற்பட்டு அத்திருப்பதியையே ப்ராப்யத்தில் சரமாவதியாகக்கொண்டு அநுபவித்து இனியராகிறார் இத்திருமொழியில்.

மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா வுருவுருவே கொடுத்தானூர்
தோதவத்தித் தூய்மறையோர் துறைபடியத் துளும்பியெங்கும்
போதில்வைத்த தேன்சொரியும் புனலரங்க மென்பதுவே. (௧)

மறி–அலையெறியா நின்றுள்ள
கடல் வாய் போய் - கடலிற் புகுந்து
மாண்டான்–(முதலைவாயி லகப்பட்டு) உயி[ரொழிந்த
மாதவத்தோன் புத்திரனை - மஹாதபஸ்வியான ஸாந்தீபிநியினுடைய பிள்ளை[யை
ஓதுவித்த தக்கணையா - (ஸாந்தீபிநி தன்னை) அத்யயநம் பண்ணுவித்ததற்கு[தக்ஷிணையாக
உரு உருவே - (அப்புத்திரன் மரணமடையும் போதுள்ள ரூபம் மாறாதபடி)[யதாரூபமாக
கொடுத்தான் - (கொணர்ந்து) கொடுத்தருளின எம்பெருமானுடைய
ஊர் - திருப்பதியாவது;—
தோதவத்தி - பரிசுத்தமாகத் தோய்த்து உலர்த்தின வஸ்திரங்களை அணியா[நிற்பவரும்
தூய் மறையோர் - நிர்த்தோஷ ப்ரமாணமான வேதத்தைத் தமக்கு நிரூபகமாகவுடையவருமான ஸ்ரீவைஷ்ண[வர்கள்
துறை - காவேரித் துறைகளில்
படிய - அவகாஹிக்க,
(அதனால்)
எங்கும் - அக் காவேரி முழுதும்
துளும்பி - அலைமோதப்பெற்று
(அதனால் தாமரை மலர்களின் நாளங்கள் அலைய)
போதில் - (அந்தப்) பூக்களில்
வைத்த - இராநின்றுள்ள
தேன் - தேனானது
சொரியும் - பெருகப் பெற்ற
புனல் - நீரையுடைய
அரங்கம் என்பது - திருவரங்க மென்னுந்[திருப்பதியாம்.

குறிப்பு:—கண்ணபிரான் ஸாந்தீபிநி யென்னும் ப்ராஹ்மணோத்தமர் பக்கல் ஸகல சாஸ்திரங்களையும் அத்தியயநம் பண்ணின அநந்தரம் குரு தக்ஷிணை கொடுக்கத் தேடுகின்றவளவிலே, அவ்வாசாரியரும் இவனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களை அறிந்தவராகையாலே, 'பன்னிரண்டு வருஷங்களுக்குமுன்பு ப்ரபாஸதீர்த்தகட்டத்திற் கடலில் முழுகி இறந்துபோன என் புத்திரனைக் கொண்டுவந்து தரவேண்டும்' என்று அபேக்ஷிக்க, 'அப்படியே செய்கிறோம்' என்று, அப்புத்திரனைக் கொண்டுபோன சங்கின் உருவம்தரித்துச் சமுத்திரத்தில் வாஸஞ்செய்கின்ற பஞ்சஜநன் என்ற அஸுரனைக்கொன்று, யமபட்டணத்துக்கு எழுந்தருளி, அங்கு யாதனையிற்கிடந்த அக்குமாரனைப் பூர்வதேஹத்தில் ஒன்றும் விசேஷமறக்கொணர்ந்து கொடுத்தருளிய வரலாறு முன்னடிகளிற் கூறியது. "மாண்டானை" என்றவிடத்துள்ள இரண்டனுருபு, "புத்திரன்" என்ற பெயரோடு கூட்டியுரைக்கப்பட்டது. தக்கணை—தக்ஷிணா என்றவடசொல்விகாரம்.

பின்னடிகளின் கருத்து:— * கங்கையிற் புனிதமாய காவிரியில் பெரிய பெருமாளுடைய திருக்கண்நோக்கான திருமுகத்துறை முதலான பல துறைகளில் ஆசாரபரரான வைதிக ஸ்ரீவைஷ்ணவர்கள் திரள் திரளாகவந்து குடைந்து நீராட, அதனால் அக்காவேரியடங்கலும் அலைமோதப்பெற்று, அவ்வலைகளினால் தாமரைமலர்களின் நாளங்கள் அலைக்கப்பட, அதனால் அப்பூக்களினின்றும் தேன் பெருக, அத்துடன் சேர்ந்த தீர்த்தத்தையுடைய திருவரங்கமென்பதாம். தோதவத்தி-தௌதவஸ்த்ரீ என்ற வடசொல்விகாரம்.

பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்
இறைப்பொழுதிற் கொணர்ந்துகொடுத் தொருப்படுத்த வுறைப்பனூர்
மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார்
சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங்க மென்பதுவே. (௨)

பிறப்பு அகத்தே—ஸூதிகாக்ருஹத்திலேயே
மாண்டு ஒழிந்த - இறந்தொழிந்த
பிள்ளைகளை நால்வரையும் } வைதிக புத்திரர்கள் நால்வரையும்
இறைப் பொழுதில்—ஒரு நொடிப் பொழுதில்
கொணர்ந்து - (ஸ்ரீ வைகுண்டத்தினின்றும்) கொண்டு வந்து
கொடுத்து - (மாதாபிதாக்கள் கையில்) கொடுத்து
ஒருப்படுத்த - (இப்பிள்ளைகள் எம்பிள்ளைகள் தான் என்று) ஸம்மதி பண்ணுவித்த
உறைப்பன் - சக்தியுக்தன் (எழுந்தருளியிருக்கிற)
ஊர் - திருப்பதியாவது;—
மறை-வேதங்களிற் கூறப்பட்டுள்ள [-வைதிகமான]
பெருந் தீ - சிறந்த (மூன்று) அக்நிகளையும்
வளர்த்து இருப்பார் - (அவிச்சிந்நமாக) வளர்த்துக்கொண் டிருப்பவர்களும்
வரு - (தம்தம் திருமாளிகைக்கு) எழுந்தருளுகிற
விருந்தை - அதிதிகளான ஸ்ரீவைஷ்ணவர்களை
அளித்திருப்பார் - ஆதரித்துப்போருமவர்களும்
சிறப்பு உடைய - (இப்படிப்பட்ட) உத்கர்ஷங்களை யுடையவர்களுமான
மறையவர் - வைதிகர்கள்
வாழ் - வாழப் பெற்ற
திருஅரங்கம் என்பதுவே—.

**குறிப்பு:**—இதில் முன்னடிகளிற் கூறிய வரலாறு, இம் முதற்பத்தில் உய்யவுலகில், "துப்புடையாயர்கள் தம்" என்றபாட்டின் குறிப்புரையில் விரித்துரைக்கப்பட்டுளது. மூன்ருமடியில், விருந்து என்ற சொல் ஆகுபெயரால் விருந்தினரை உணர்த்திற்று. ... ... ... (௩)

மருமகன்றன் சந்ததியை யுயிர்மீட்டு மைத்துனன்மார்
உருமகத்தே வீழாமே குருமுகமாய்க் காத்தானூர்
திருமுகமாய்ச் செங்கமலந் திருநிறமாய்க் கருங்குவளை
பொருமுகமாய் நின்றலரும் புனலரங்க மென்பதுவே. (௩)

மருமகன் தன் - மருமகனான அபிமந்யுவி [னுடைய
சந்ததியை—புத்திரனான பரிக்ஷித்தை
உயிர் மீட்டு - மறுபடியும் பிழைப்பித்து,
மைத்துனன்மார் — மைத்துனன்மாரான [பாண்டவர்களுடைய
உரு - சரீரமானது [வே
மகத்து - (பாரதயுத்தமாகிற) நரமேதத்தி
வீழாமே - விழுந்து அழிந்துபோகாதபடி
குரு முகம் ஆய் - ஆசார்ய ரூபியாய்
(ஹிதோபதேசங்களைப்பண்ணி)
காத்தான் - ரக்ஷித்தருளின கண்ணபிரா [னுடைய

ஊர் - திருப்பதியாவது;— [வை
செம் கமலம் - செந்தாமரை மலர்களான
திரு முகம் ஆய் -(பெரிய பெருமாளுடைய) [திருமுகத்துக்குப் போலியாகவும்,
கரு குவளை - நீலோத்பல புஷ்பங்கள்
திரு நிறம் ஆய் - திருமேனி நிறத்துக்குப் [போலியாகவும்
பொரு முகம் ஆய் நின்று } (ஒன்றுக்கொன்று) எதிர் பொருகிற முகத்தையுடைத்தாய்க் கொண்டு
அலரும் - விகஸிக்கப் பெற்ற
புனல்—நீர்வளத்தை யுடைய
அரங்கம் என்பது—.

**குறிப்பு:**—பண்டு பாரதப்போரில், அர்ஜுநன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை என்பவளுடைய கருவைநோக்கி அசுவத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்திரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரிக்ஷித்] நீருயொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர் பெறுத்த வேணுமென்று ஸுபத்ரையினால் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரை மலர்போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீருக ஸ்பர்சித்தருள, உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர்பெற்ற வரலாறு முதலடியிற்கூறப்பட்டது. இவ்வரலாறு மஹாபாரதத்தில் ஆச்வமேதிகபர்வத்துக்கு உள்ளீடான அநுகீதாபர்வத்தில, ௬௬, ௬௭, ௬௮, ௬௯, ௭௦ அத்தியாயங்களிற் பரக்கக் காணத்தக்கது. அபிமந்யு என்பவன் கண்ணபிரானுக்கு உடன் பிறந்தவளான ஸுபத்ரையின் மகனுதலால்மருமகனுயினன். சந்ததி-வடசொல்விகாரம்.

"ஸஞ்ஜீவயந்நபி ஸுதம் குருதக்ஷிணாயா:
ஸாந்தீபநேர்த்விஜஸுதம் ஸுதாநயம்ஸ்த்
யாதே நிஜாம்ஸ்ச த்விஜஸுதாந் புநராநயஸ்த்வா
ஸ்வாமேவ தாம் தநுமஹோ கயஸாநயஸ்ஸ:?"

[அதிமாநுஷஸ்தவம் - ௫அ.] என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியும்,

"பாஷாணஸித்தி தபோதநயோஷிதாம்
ஸ்தந்யாபஹாரி தநுநந்தகுமாரபாவம் |
ஸம்வாஹிதம் த்ரிதஶநாத! ஶமீஹிஶ்ராம்
ஸாந்தீபநிப்ரியதமஸுதநீவநம் த்வீயம் ||"

[தேவநாயகபஞ்சாசத் - ௪௧.] என்ற வேதாந்த தேசிகன் ஸ்ரீஸூக்தியும் இங்கே அறியத்தக்கவை.

[மைத்துனன்மார் இத்யாதி.] பஞ்சபாண்டவர்களுக்குத் தான் துணையாய் நின்று, கௌரவர்களால் அவர்கட்கு ஒரு நலிவு நேராதபடி பலவகைகளால் காத்தருளினமையைக் கூறியவாறு. இரண்டாமடியில், "மகத்தே" என்றவிடத்து, மகம் - உவே மென்றவடசொல்விகாரம்; யாகமென்பதுபொருள்; சந்தர்ப்பம் நோக்கி, நரமேதயாக மென்று உரைக்கப்பட்டது; மநுஷ்யர்களைப்பலிகொடுத்து நடைபெறும் யாகம் - நரமேதயாகமெனப்படும். "எல்லாச்சேனையுமிருநிலத்தவித்த" என்றபடி உபயஸேனையிலும் பூமிக்குச்சுமையாயிருப்பவர்களை யெல்லாம் ஒழிப்பதாக நடத்தப்பட்டதும், * மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனுடைய திருவுள்ளத்திற்கு உகப்பாயிருப்பதுமான பாரதயுத்தத்தை நரமேதயாகமாகக் கூறுவது ஏற்குமென்க. பகவத்கீதை முதலியவற்றால் ஆசார்யத்வம் தோற்ற ஹிதோபதேசம் பண்ணினபடியைப்பற்றக் "குருமுகமாய்க் காத்தான்" என்றருளிச்செய்தனரென்க. குருமுகம் - [illegible].

பின்னடிகளின் கருத்து; திருவரங்கத்தைச்சூழ்ந்து பெருகாநின்ற காவிரிநீரில், பெரியபெருமாளது திருமுகம்போன்ற செந்தாமரைமலர்களும், அவரது திருமேனி நிறம்போன்ற கருநெய்தல் பூக்களும் பரபாகத்தாலே ஒன்றுக் கொன்று எதிர்பொருகிற முகத்தையுடைத்தாய்க் கொண்டு விகஸிக்குமென்று நீர்வளஞ் சொல்லியவாறு. [பொருமுகமாய்] குவளையுங் கமலமும் எம்பெருமானது திருநிறத்தோடும் திருமுகத்தோடும் போர்செய்யப் புகுவனபோல அலராநின்றபடியைக்கூறும் என்றுரைப்பாருமுளர். ... ... ... ... ... (௩)

கூன்றொழுத்தை சிதகுரைப்பக் கொடியவள்வாய்க் கடியசொற்கேட்
டீன்றெடுத்த தாயரையு மிராச்சியமு மாங்கொழியக்
கான்றொடுத்த நெறிபோகிக் கண்டகரைக் களைந்தானூர்
தேன்றொடுத்த மலர்ச்சோலைத் திருவரங்க மென்பதுவே. (௪)

கூன் - கூனையுடைய
தொழுத்தை - வேலைக்காரியாகிய மந்தரை [யானவள்
சிதகு - (ஸ்ரீராமபட்டாபிஷேக மஹோத்ஸவத்துக்கு விநாசகமான தீய சொ [ற்களை
உரைப்ப - சொல்ல,
(அச் சொற்களை அங்கீகரித்துக் காட்டுக்கு எழுந்தருளச் சொன்ன)
கொடியவள் - மஹாக்ரூரையான கைகேயி [யினுடைய
வாய் - வாயிலுண்டான
கடிய சொல் கேட்டு - கடினமான சொல்லைக் கேட்டு,
ஈன்று எடுத்த தாயரையும் - (தன்னைப்) பெற்றுவளர்த்த தாயான ஸ்ரீ கௌஸ [லையாரையும்
இராச்சியமும் - ராஜ்யத்தையும்
ஆங்கு ஒழிய - கைவிட்டு,
கான் தொடுத்த நெறி - காடுகள் அடர்ந்திரா நின்றுள்ள வழியே
போகி - (ஸ்ரீ தண்டகாரணியத்திற்கு) எழு [ந்தருளி
கண்டகரை - (முனிவர்களுக்கு) முள்போ [லப் பாதகராயிருந்த (ஜநஸ்தாந [வாஸிகளான) ராக்ஷஸரை
களைந்தான் - நிரஸித்தருளின எம்பெரு [மான் (எழுந்தருளி யிருக்கிற)
ஊர் - திருப்பதியாவது—;
தேன் தொடுத்த மலர் - தேன்மாறாத மலர்களையுடைய
சோலை - சோலைகளை யுடைத்தான
திரு அரங்கம் என்பது—,

குறிப்பு:—தண்டகாரணியத்தில் வைஜயந்த மென்ற பட்டணத்தில் வஸிப்பவனும் திமித்வஜன் என்று மறுபெயருள்ளவனும் இந்திரனை வென்றவனுமான சம்பராஸுரனை இந்திரனது வேண்டுகோளின்படி வெல்லுதற் பொருட்டுக் கைகேயியுடன் சென்ற தசரதசக்கரவர்த்தி அவ்வஸுரனை எதிர்த்துச்செய்த பெரும்போரில் அவனால் விரணப்பட்டு மூர்ச்சையடைந்த பொழுது, அச்சக்கரவர்த்தியை அசுரர்கள் வதைசெய்யாதபடி கைகேயி போர்க்களத்திலிருந்து எடுத்துச் சென்று பாதுகாக்க, மூர்ச்சை தெளிந்தவுடன் தசரதன் தனக்குக் கைகேயிசெய்த உயிருதவிக்காக மிகமகிழ்ந்து தான் அவட்கு அவள்வேண்டும் இரண்டு வரங்கள் கொடுப்பதாக வாக்களிக்க, அவள் அவற்றைப் பின்பு தனக்கு வேண்டும்பொழுது கேட்டுப் பெற்றுக்கொள்வதாகச் சொல்லியிருந்தாள்; அவ்வரங்களில் ஒன்றாகப்பரதனது பட்டாபிஷேகத்தையும், மற்றொன்றாக இராமபிரானது வநவாஸத்தையுங்கேட்கும்படி ஞாபகப்படுத்தி உபாயங்கூறித் தூண்டின கூனியின் சொற்படி தன்னைக்காட்டுக் கெழுந்தருளச் சொன்ன கைகேயியின் நியமனத்தின்படி ராஜ்யம் முதலியவற்றை யெல்லாந்துறந்து இராமபிரான் தண்டகாரணியத்திற்சென்று புகுந்து, அங்கு ஜநஸ்தாநத்தில் இருந்துகொண்டு ஸாதுக்களை நலிந்து திரிந்த அரக்கர்களை அழித்தருளினமை அறிக.

தொழுத்தை—அடிமைப்பெண். சிதகு - விபரீதம். தாயர் - பூஜையிற் பன்மை. இராச்சியம் - ராஜ்யம். கண்டகர் - முள்ளைப்போன்றவர்; "கண்டகம்" என்றவடசொல், முள் எனப்பொருள்படும். ... ... (௪)

பெருவரங்க ளவைபற்றிப் பிழக்குடைய விராவணனை
உருவரங்கப் பொருதழித்திவ் வுலகினைக்கண் பெறுத்தானூர்
குரவரும்பக் கோங்கலரக் குயில்கூவுங் குளிர்பொழில்சூழ்
திருவரங்க மென்பதுவே யென்றிருமால் சேர்விடமே. (௫)

குரவு - குரவ மரங்களானவை
அரும்ப - அரும்புவிடாநிற்க,
கோங்கு - கோங்கு மரங்களானவை
அலர - அலராநிற்க,
குயில் - குயில்களானவை
கூவும் - (களித்துக்) கூவும்படியான
குளிர் பொழில் சூழ் - குளிர்ந்த சோலைகளாலே சூழப்பெற்ற
திரு அரங்கம் என்பது - திருவரங்க மென்னுந்திருப்பதியானது;—
பெரு - பெருமை பொருந்திய
வரங்கள் அவை - வரங்களை
பற்றி - பலமாகக் கொண்டு
பிழக்கு உடைய - (தேவர் முனிவர் முதலாயினோரிடத்துப்) பிழை செய்கையையே இயல்வாகவுடைய
இராவணனை - இராவணனுடைய
உரு - உடலானது
அரங்க - சிந்நபிந்நமாம்படி
பொருது அழித்து - போர்செய்து (அவனைத்) தொலைத்து
இ உலகினை - இந்த லோகத்தை
கண் பெறுத்தான் - காத்தருளினவனும்
என் - எனக்குத் தலைவனும்
திரு மால் - ச்ரிய:பதியுமான எம்பெருமான்
சேர்வு இடம் - சேருமிடமாகிய
ஊர் - திருப்பதியாம்.

குறிப்பு:—பிரமன் முதலியோரிடத்துப் பெற்றவரங்களினால் தனக்கு எவ்வகையாலும் அழிவு நேராதென்று துணிந்து, நெஞ்சினால் நினைக்கவும் வாயினால் மொழியவுமொண்ணாத பற்பல பிழைகளைச் செய்து உலகத்தையெல்லாம் படவடித்துக்கிடந்து கூப்பிடும்படி பண்ணித்திரிந்த இராவண

னைக்கொன்று உலகத்தையெல்லாம் வாழ்வித்தருளின எம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடம் — நித்யவஸந்தமான சோலைகளையுடைய திருவரங்கமென்பதாம். வரம் - தற்சமவடசொல். பிழக்கு - பிழை. (௫)

கீழுலகி லசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே
ஆழிவிடுத் தவருடைய கருவழித்த வழிப்பனூர்
தாழைமட லூடுரிஞ்சித் தவளவண்ணப் பொடியணிந்து
யாழினிசை வண்டினங்க ளாளம்வைக்கு மரங்கமே. (௬)

கீழ் உலகில் - பாதாள லோகத்திலுள்ள
அசுரர்களை - அஸுரர்களை
கிழங்கு இருந்து - அடிக்கிடந்து
கிளராமே - கிளம்ப வொட்டாதபடி
ஆழி விடுத்து - திருவாழி யாழ்வானை ஏவி
அவருடைய - அவ்வசுரர்களுடைய
கரு - கர்ப்பமளவாக
அழித்த - அழித்தருளினவனும்
அழிப்பன் - சத்ருக்களைத் தொலைத்தருளுவதையே இயல்வாகவுடையனுமான எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
ஊர் - திருப்பதியாவது; —
யாழ் - வீணையினுடைய (ஓசை போன்ற)
இன் இசை - இனிய இசையையுடைய
வண்டு இனங்கள் - வண்டுகளின் திரள்களானவை
தாழை மடலூடு - (மலரத் தொடங்குகிற) தாழைமடலினுள்ளே
உரிஞ்சி - உடம்பை உரோசிக்கொண்டு (புகுந்து)
தவள வண்ணம் பொடி } (அம்மடலிலுள்ள) வெளுத்த நிறத்தையுடைய
அணிந்து - (உடம்படங்கலும்) அணிந்துகொண்டு
(அந்தக் களிப்பாலே)
ஆளம் வைக்கும் - தென, தென என்று ஆளத்திவைத்துப் பாடுமிடமான
அரங்கம் - திருவரங்கமாம்.

குறிப்பு:—பாம்புகளானவை புற்றுக்களில் பாங்காகக் கிடந்தவலிப்பது போல, அசுரர்களும் பாதாளலோகத்திற் பாங்காகக்கிடந்து, சிலசில காலங்களில் அங்குநின்றும் போந்து தேவர்களை அடர்த்துப் போர்செய்வர்கள்; அப்போது எம்பெருமான் அத்தேவர்கட்குத்துணையாய் நின்று அவ்வசுரரை அழித்தொழித்தருள்வன்; இவ்வாறு அவ்வசுரர்கள் பலகால்போர்புரியவருவதையும், அவ்வப்போதுகளிலெல்லாம் தான் அவர்களை ஒழிக்கவேண்டிய வருத்தத்தையும் நோக்கி, அவ்வசுரரைக் கிழங்கோடு களையவேணுமெனத் திருவுள்ளம்பற்றித் தனது திருவாழியைச் செலுத்தி அங்ஙனமே நிறைவேற்றிக்கொண்டானென்பது, முன்னடிகள். [கிழங்கு இருந்து கிளராமே.] மரத்தின் வேரைமாத்திரம் நிறுத்திவிட்டு மற்றபாகத்தை வெட்டினால், அவ்வேரடியாக மீண்டும் அம்மரம் செழிப்புற்றோங்கிவளரும்; அவ்வேர் தன்னையுமொழித்திட்டால் பின்பு ஒன்றுமின்றியொழியும்; இவ்வாறே எம்பெருமான் அசுரர்களை ஸமூலோந்மூலநம் பண்ணியருளினனென்க. கிழங்கு - வேரானது, இருந்து - மிகுந்திருந்து, கிளராமே - மறுபடியும் முன்போல முளைக்கவொட்டாதபடி யென்கை. கரு - ஸந்ததி; இதனால் மூலத்தைச் சொல்லியவாறு. அழிப்பன் - வடமொழியில் ஹரி: என்ற திருநாமம்போல.

செவிக்கினிய ஸ்வரத்தையுடைய வண்டுகள் திரள்திரளாகக்கூடி, விகாஸோந்முகமான தாழைமடலினுள் வருந்திப்புகுந்து அங்குப்புரண்டு அதிலுள்ள வெண்ணிறச் சுண்ணங்களைத்தம் உடலில்அணிந்து கொண்டு, தென, தென என்று ஆளத்திவைத்துப் பாடும்படியைக் கூறுவன - பின்னடிகள்.

[உரிஞ்சி.] நெருக்கமான த்வாரத்தில் நுழையவேண்டும்போது உடம்பு உராய்தல்இயல்பு. உரிஞ்சுதல்-உராய்தல்; ஸாக்ஷ-ம். தவளவண்ணம்-தவளவர்ண என்ற வடசொல்விகாரம். தாழைமடலினுள் வெளுத்தபொடிகள் உள்ளமை அறிக. "[illegible]" [ரகுவம்சம்] என்றச்லோகம் நோக்கத்தக்கது.

யாழின், இசை, என்று பிரிப்பதும் ஒக்கும். ஆளம் வைத்தல் — அநுஸ்வரஸமாக இசைத்தல்; ஆலாபனை எனப்படும். ... ... (௬)

கொழுப்புடைய செழுங்குருதி கொழித்திழிந்து குமிழ்த்தெறியப்
பிழக்குடைய வசுரர்களைப் பிணம்படுத்த பெருமானூர்
தழுப்பரிய சந்தனங்கள் தடவரைவா யீர்த்துக்கொண்டு
தெழிப்புடைய காவிரிவந் தடிதொழுஞ்சீ ரரங்கமே. (எ)

கொழுப்பு உடைய - கொழுப்பை யுடையதும்
செழு—செழுமை தங்கியதுமான
குருதி—ரக்தமானது
கொழித்து - ஊற்றுமாறுமல் கிளர்ந்து
இழிந்து - நிலத்தில் பரவி
குமிழ்த்து - குமிழி கிளம்பி
எறிய - அலை யெறியும்படி
பிழக்கு உடைய - (பரஹிம்ஸையாகிய) தீமைகளைச் செய்கின்ற
அசுரர்களை—அஸுரர்களை
பிணம் படுத்த - பிணமாக்கி யருளின
பெருமான் - எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
ஊர் - திருப்பதியாவது;—

தழுப்பு அரிய-(ஒருவரிருவரால்) தழுவமுடியாத
சந்தனங்கள் - சந்தனமரங்களை
தட வரை வாய் - பெரியமலைகளினின்றும்
ஈர்த்துக்கொண்டு வந்து } (வேரோடே பிடுங்கி) இழுத்துக் கொண்டுவந்து
(இவற்றைத் திருவுள்ளம் பற்றவேணும் என்று எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றதோ என்னலாம் படி)
தெழிப்பு உடைய - இரைச்சலை யுடைய
காவிரி - திருக்காவேரி நதியானது
அடி தொழும்—(எம்பெருமானது) திருவடிகளைத் தொழுகையாகிற
சீர்—சீர்மையைப் பெற்ற
அரங்கம் - திருவரங்க நகராம்.

குறிப்பு:—ஊட்டுப் பன்றிபோலே நிணங்கொழுக்கும்படி போஷகவஸ்துக்களை உட்கொண்டு உடலை வளரச்செய்து திரிகையாலே கொழுப்புடைத்தாயும் அழகியதாயுமிருக்கிற ரத்தமானது ஊற்றுமாறுமல் கிளர்ந்து அருவி குதித்தாற்போலே நிலத்திலே யிழிந்து குமிழிகிளம்பி அலையெறியும்படியாக உலகங்களையெல்லாம் நலிந்துதிரியும் பிழைகளையுடையரான அசுரர்களை நிரவயவிநாசமாக்கிவிட்டவாறு கூறுவன முன்னடிகள்.

[தழுப்பரிய இத்யாதி.] மலையினிடத்து வளர்ந்துள்ள பெருப்பெருத்த சந்தகவ்ருக்ஷங்களை வேரோடுகிளப்பி இழுத்துக்கொண்டு, "இவற்றைக் கைக்கொண்டருளவேணும்" என்று இரப்பதுபோல இரைச்சலிடாநின்ற காவேரியானது தான் கொணர்ந்த சாத்துப்படியைப் பெரியபெருமாளுக்கு ஸமர்ப்பித்துத் திருவடிகளைத் தொழாநிற்கும்படியைக் கூறியவாறு.

தழுப்பரிய - சந்தனமரம் சிறிதாயிருந்தால் ஒருவரிருவரால் தழுவமுடியும்; அளவிட்டுக்காட்ட வொண்ணாதபடி மிகவும் ஸ்தூலமாயிருப்பதனால் தழுவமுடியாமை கூறப்பட்டது; தழுவுதல் - கைகளால் அணைத்துக்கொள்

"[illegible] ஸ்ரீ [illegible]" [ஸ்ரீரங்கராஜஸ்தவம்.] என்ற ஸ்லோகத்தைப் பின்னடிகளோடு ஒருபுடை ஒப்பிடுக. ... ... ... (எ)

வல்லெயிற்றுக் கேழலுமாய் வாளெயிற்றுச் சீயமுமாய்
எல்லையில்லாத் தரணியையு மவுணனையு மிடந்தானூர்
எல்லியம்போ திருஞ்சிறைவண் டெம்பெருமான் குணம்பாடி
மல்லிகைவெண் சங்கூதும் மதிளரங்க மென்பதுவே. (அ)

வல் — வலிவுள்ள
எயிறு - பற்களையுடைய
கேழலும் ஆய் - வராஹமாய்த் திருவவதரி[த்தும்,]
வாள் - ஒளியை யுடைய
எயிறு - பற்களை யுடைய
சீயமும் ஆய் - நரஸிம்ஹமாய்த் திருவவதரி[த்தும்,]
எல்லை இல்லா - எல்லை யில்லாத
தரணியையும் - பூமியையும்
அவுணனையும் - ஹிரண்யாஸுரனையும்
இடந்தான் - கீண்டருளின எம்பெருமான் [(எழுந்தருளி யிருக்கிற)]
ஊர் - திருப்பதியாவது;—
இரு சிறை—பெரிய சிறகுகளையுடைய
வண்டு—வண்டுகளானவை
எல்லியம் போது - அந்திப் பொழுதிலே
எம் பெருமான் - பெரிய பெருமாளுடைய
குணம் - திருக் குணங்களை
பாடி - பாடிக்கொண்டு
மல்லிகை - மல்லிகைப் பூவாகிற
வெண் சங்கு - வெளுத்த சங்கை
ஊதும் - ஊதாநிற்கப் பெற்றதும்
மதிள் - திருமதிள்களை யுடையதுமான
அரங்கம் என்பது—.

குறிப்பு:—ஹிரண்யாக்ஷனையும் ஹிரண்யனையும் ஸம்ஹரித்தபடியைக் கூறுவன முன்னடிகள். வல்லெயிற்றுக் கேழலாய் தரணியை இடந்தான், வாளெயிற்றுச்சீயமாய் அவுணனை இடந்தான் என இயையும்; எனவே, நிரனிறைப்பொருள்கோளாம். இவ்வரலாறுகள் கீழ்ப்பலவிடங்களிலுங் குறிக்கப்பட்டுள்ளன. வராஹத்தின் எயிற்றுக்குப் பூமியைக் கீண்டெடுக்கும்படியான வன்மை இன்றியமையாததானது பற்றி "வல்லெயிற்றுக் கேழல்" என்றார்; நரஸிம்ஹத்தின் எயிறுகள் அழகுக்குறுப்பாதல் பற்றி "வாளெயிற்றுச் சீயம்" என்றார். தரணிக்கு எல்லை யில்லாமையாவது — கடல்களும் தீவுகளும் போலன்றி, எல்லாம் தன்னுள்ளேயாம்படி * பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையாயிருக்கை. அவுணனுக்கு எல்லை யில்லாமையாவது — தான் பெற்ற வரங்களுக்கீடாக எல்லையில்லாத தபஸ்ஸுகளை யுடையனாயிருக்கை.

வண்டுகள் அந்தியம் போதில் எம்பெருமான் குணங்களைப் பாடிக்கொண்டு திரிதலைக்கூறுவது, மூன்றமடி. கீழ் திருமாலிருஞ் சோலையைப் பாடும்போது "அறுகால் வரிவண்டுகள் ஆயிரநாமஞ்சொல்லிச், சிறுகாலைப் பாடும்" என்றார்; இங்கு "எல்லியம்போது" என்கிறார்; இதனால், திவ்விய தேசங்களிலுள்ள வண்டுகள் காலத்துக்கேற்பப் பண்களிலே பகவத்குணங்களை நியதமாகப் பாடும்படியைக் கூறியவாறு.

[மல்லிகை இத்யாதி.] ஸாயங்காலபுஷ்பமான மல்லிகைப்பூவில் வண்டு அமிழ்ந்து ஊதும்போது, அந்தப்பூவானது அலருவதுக்கு முன்பு தலைகுவிந்து மேல்பருத்துக் காம்படிசேர்ந்து வெளுத்த நிறத்தை யுடைத்தாய் சங்கைப் போன்றிருத்தலால் வெண்சங்கை ஊதுவது போல்வதுபற்றி இங்ஙனருளிச் செய்தாரென்க. மல்லிகை-மல்லிகா. ... ... ... (அ)

குன்றுடு கொழுமுகில்போல் குவளைகள்போல் குரைகடல்போல்
நின்றுடு கணமயில்போல் நிறமுடைய நெடுமாலூர்
குன்றூடு பொழில்நுழைந்து கொடியிடையார் முலையணவி
மன்றூடு தென்றலுலா மதிளரங்க மென்பதுவே. (கூ)

குன்று ஆடு - மலையினுச்சியிற்சார்ந்த
கொழு முகில் போல் - நீர் நிறைந்த மேகம்போலவும்.
குவளைகள் போல் - கருநெய்தல் பூப்போலவும்
குரை - ஒலிசெய்யாநின்ற
கடல் போல் - கடல் போலவும்
நின்று ஆடு - (களிப்பாலே) நின்று ஆடாநின்றுள்ள
மயில் கணம் போல் - மயில்களின் திரள் போலவும் (இராநின்ற)
நிறம் உடைய - வடிவழகையுடையனான
நெடு மால் - எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
ஊர் - திருப்பதியாவது;—
தென்றல் - தென்றல் காற்றானது
குன்று - (மலய) பர்வதத்திலுள்ள
பொழில் ஊடு - சோலைகளினிடையிலே
நுழைக்து - நுழைந்து
(அங்குள்ள பூக்களின் தாதுகளை அளைந்து பரிமளத்தைக் கொய்து கொண்டு)
கொடி இடையார் - கொடி போன்ற இடையையுடையரான பெண்களினுடைய
முலை - (கலவைச்சாந்தணிந்த) முலைகளை
அணவி - வியாபித்து
(அந்தப்பரிமளத்துடனே)
மன்றூடு - நாற்சந்திகளினூடே
உலா - உலாவப் பெற்ற
மதிள் அரங்கம் என்பது.—

குறிப்பு :—நிறம் என்று திருமேனிநிறந்தன்னையே சொல்லிற்றாகக் கொள்ளில், கண்ட கண் மயிர்க்குச்சி விடும்படியான குளிர்த்திக்கு – நீர் கொண்டெழுந்த காளமேகத்தின் நிறத்தையும், நெய்ப்புக்கு - குவளைப் பூவின் நிறத்தையும், இருட்சிக்கு – கடலின் நிறத்தையும், புகர்ப்புக்கு-மயில் கழுத்தின் நிறத்தையும் உவமைகூறுவதாக நியமித்துக் கொள்ளவேணும். எம்பெருமான் வடிவுக்கு ஒன்றே உபமானமாகப் போராமை இதனால் அறியத்தக்கது.

"தென்னன் பொதியில் செழுஞ்சந்தின் தாதளைந்து" என்றபடி மலய மலையில் சந்தநவ்ருக்ஷங்களையுடைய பொழில்களூடே நுழைந்து அங்குள்ள பூக்களின் தாதுகளை அளைந்து அவற்றின் பரிமளத்தைக் கொய்துகொண்டும், * வல்லிசேர் நுண்ணிடை மாதர்களுடைய சந்தநகுங்குமாதி அலங்கார மணிந்தமுலைகளை ஸ்பர்சித்து அங்குள்ளபரிமளத்தை அளைந்து கொண்டும் வருகின்றதென்றல் வெளிநிலத்திற் புறப்பட்டு நாற்சந்திகளில் வீசும்படியைக் கூறுவன, பின்னடிகள். இடைக்குக் கொடியுவமை - நேர்மையினும் நுடங்குதலினுமென்க. ... ... ... ... (கூ)

பருவரங்க ளவைபற்றிப் படையாலித் தெழுந்தானைச்
செருவரங்கப் பொருதழித்த திருவாளன் திருப்பதிமேல்
திருவரங்கத் தமிழ்மாலை விட்டுசித்தன் விரித்தனகொண்
டிருவரங்க மெரித்தானை யேத்தவல்லா ரடியோமே. (௧௦)

பரு வரங்கள் அவை பற்றி } (பிரமன் முதலியோரிடத் துப்பெற்ற) பெரிய வரங் [களைப் பலமாகக்கொண்டு
படை ஆலித்து எழுந்தானை } யுத்த விஷயமாகக் கோலாஹலஞ் செய்து வெளி [ப்புறப்பட்ட இராவணனை
செரு - யுத்தத்திலே
அரங்க - ஒழியும்படி
பொருது - போர் செய்து
அழித்த - ஒழித்தருளின
திரு ஆளன் - (வீர்யமாகிற) லக்ஷ்மியை த்தனக்கு நிரூபகமாக) உடையனு [ன எம்பெருமானுடைய
திருப் பதி மேல் - (திருவரங்கமென்னும்) [திருப்பதிவிஷயமாக
விட்டுசித்தன் - பெரியாழ்வார்
விரித்தன - அருளிச் செய்த
திரு அரங்கம் தமிழ் மாலை கொண்டு } (பாட்டுத்தோறும்) 'திருவரங்கம்' என்கிற திருநாமத்தையுடைய தமிழ் மாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையுங் [கொண்டு,
இருவர் அங்கம் எரித்தானை } (மதுகைடபர்களாகிற) இருவருடைய உடலை (த்திருவனந்தாழ்வானுடைய மூச்சு வெப்பத்தினால்) கொளுத்திப்போகட் [ட எம்பெருமானை
ஏத்த வல்லார் - துதிக்கவல்லவர்களுக்கு
அடியோம் - அடிமை செய்யக்கடவோம்.

குறிப்பு:—"தீதிலாத வொண்டமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும், ஓத வல்லபிராக்கள் நம்மை ஆளுடையார்கள் பண்டே" என்று - தம் அருளிச் செயலைக் கற்பார்க்குத் தாம் அடிமைசெய்வதாக அருளிச்செய்த நம்மாழ்வாரைப் போல், இவ்வாழ்வாரும் இப்பத்தையுங் கற்பார்க்கு அடிமைசெய்யப் பெறுவோம் யாமென்கிறார்.

வரங்கள் அவை = அவை - முதல்வேற்றுமைச் சொல்லுருபு. படை என்று - சேனைக்கும் பெயர், யுத்தத்துக்கும் பெயர். ஆலிப்பு-கோலாஹலம். அரங்கல் - அழிதல். [இருவரங்கமெரித்தானை.] "ஏயந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப - வாய்ந்த, மதுகைடபரும் வயிறுருகி மாண்டார்" என்றது காண்க. "தமிழ்மாலைகொண்டு ஏத்தவல்லார்" என இயையும் (௧௦)

அடி:--மாதவ பிறப்பு மருமகன் கூன் பெருநீழ் கொழுப்பு வல்லெயிறு குன்று பரு மரவடி.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

---

## ஒன்பதாந்திருமொழி.

### மரவடியை.



**அவதாரிகை:**—கீழ்த்திருமொழியில், ராமக்ருஷ்ணாதி அவதாரகுண சேஷ்டிதங்கள் நன்கு விளங்கும்படி எம்பெருமான் திருவரங்கம் பெரியகோயிலில் எழுந்தருளியிருக்கும்படியை ஒருபடி அநுபவித்தமாத்திரத்தால் தாம் பர்யாப்திபெறாமல், மீண்டும் மற்றொருபடியாக அத்திருப்பதிதன்னையே அநுபவிக்கிறார், இத்திருமொழியில்.

மரவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய் வானோர் வாழச்
செருவுடைய திசைக்கருமந் திருத்திவந் துலகாண்ட திருமால் கோயில்
திருவடிதன் திருவுருவுந் திருமங்கை மலர்கண்ணுங் காட்டி நின்ற
உருவுடைய மலர்நீலங் காற்றாட்ட வோசலிக்கு மொளிய ரங்கமே. (௧)

தம்பிக்கு - (சித்ரகூடத்தில் வந்து ப்ரபத்தி பண்ணின) பரதாழ்வானுக்கு
மர அடியை - ஸ்ரீபாதுகைகளை
வான் பணயம் வைத்து - நன்றாக நம்புகைக்கு உரிய அடகாக அளித்து
வானோர் வாழ - தேவர்கள் வாழும்படி
போய் - (சித்திர கூடத்தைவிட்டு அவ்வருகே) எழுந்தருளி
செரு உடைய திசை கருமம் - யுத்தத்துக்கு உரிய தெற்குத்திக்கில் செய்யவேண்டிய காரியங்களை
திருத்தி - குறையறச்செய்து முடித்துவிட்டு
வந்து - (பிராட்டியுடன் அயோத்திக்கு) எழுந்தருளி
உலகு ஆண்ட - ராஜ்யபரிபாலநம் செய்தருளின
திரு மால் - ச்ரிய: பதி (எழுந்தருளியிருக்கிற)
கோயில் - கோயிலாவது;—
திரு அடி தன் - ஸர்வ ஸ்வாமியான பெரிய பெருமாளுடைய
திரு உருவும் - திருமேனி நிறத்தையும்
திரு மங்கை - பெரிய பிராட்டியாருடைய
மலர் கண்ணும் - மலர்ந்த திருக்கண்களின் நிறத்தையும்
காட்டி நின்ற - பிரகாசிப்பியா நின்ற
உரு உடைய - அழகு பொருந்திய
நீலம் மலர் - கருநெய்தற் பூக்களானவை
காற்று ஆட்ட சலிக்கும் - காற்று அசைக்க அசைந்துகொண்டிருக்கப்பெற்ற
ஒளி - ஒளியையுடைய
அரங்கம் - திருவரங்கமாம்.

**குறிப்பு:**—"ஓசலிக்கும்" என்றவிடத்து, ஓ - உயர்வு சிறப்பு; அசையுமாம். "காட்டிநின்று" என்றபாடத்தில் செய்யுளோசை குன்றுதலாலும், வியாக்கியான விரோதமுண்டாகையாலும் "காட்டிநின்ற" என்றபாடங் கொள்ளப்பட்டது; "ப்ரகாசிப்பியாநின்ற அழகையுடைத்தான நீலமலரானது" (தாள கோச பாடம்) என்ற ஜீயருரைவாக்கிய மறியத்தக்கது.

இராமபிரான், தன்னை அயோத்திக்கு வந்து முடிசூடி அரசாளுமாறு சித்திரகூடத்திற் பணிந்து வேண்டின பரதாழ்வானை நோக்கி, 'தந்தை சொற் பழுதுபடாதபடி பதினான்குவருடம் வனவாசங்கழித்தன்றி யான் அரசாள மீளமாட்டேன்' என்றருளிச்செய்ய, பரதன் 'இனி நாம் நிர்ப்பந்திக்கலாகாது' என்றிசைந்து, "அடியேனுடைய பாரதந்திரியமே விளங்குகைக்கும், தேவர் மீண்டொழிந்தாரல்லீர் என்று நம்புவதற்கும் அடி என்?"

என்று கேட்க, அவ்விரண்டிற்கு முறுப்பாகப் பாதுகைகளை அளித்தருளின படியைக்கூறுவது, முதலடி. மரவடி—தாரு மயமான திருவடி; பாதுகை. பணயம் - அடகு; உலகத்தில் ஒருவர் ஒரு பொருளை மற்றொருவரிடத்து அடகுவைப்பது, நம்பிக்கைக்காகவிறே; அதுபோல இராமபிரானும் பரதனுடைய நம்பிக்கைக்காக அவனிடத்து இம்மரவடியை வைத்தருளினமையால் "பணயம் வைத்து" என்றார். வான் என்று பெருமையைச் சொன்னபடி; 'பணயம்' என்பதன் பொருளின் ஏகதேசமாகிய நம்பிக்கையில் அப்பெருமைக்கு அந்வயம்; இதனால், உறுதியான நம்பிக்கையைக் கூறியவாறு. பணையம் எனினும், பணயம் எனினும் ஒக்கும்.

ராவணாதி ராக்ஷஸரெல்லாருங் கூடிக்கொண்டிருப்பது தென்திசையிலாதலால், அதனைச் செருவுடையதிசை என்றார். இத்திசைக்கருமந்திருத்துகையாவது—ஜநஸ்தாநவாஸிகளான அரக்கரை அழித்ததும், ஸுக்ரீவனுக்குப்பகையறுத்து அரசாட்சி செய்வித்ததும், *இலங்கை பாழாளாகப் படைபொருததும், விபீடணனுக்கு அரசீந்ததும் முதலியன.

திருவடி என்று—ஸ்வாமிக்கும் பெயர். திருவரங்கச் சோலைகளில் அழகிய கருநெய்தற் பூக்கள் பூத்திருக்கின்றன வென்னவேண்டுவதை ஒருவகைச்சமத்காரமாகக் கூறுகின்றார்; எம்பெருமானது திருமேனி நிறத்துக்கும், உத்தமஸ்த்ரீகளுடைய கண்களுக்கும் கருநெய்தற்பூவை உவமை கூறுவது, கவிமரபு.

"திருமங்கை மலர்கண்ணும்" என்பதற்குப் "பெரியபிராட்டியாருடைய விகஸிதமான திருக்கண்களின் நிறத்தையும்" என்று மணவாளமாமுனிகளின் வியாக்கியான மாதலால் 'மலர்க்கண்' என்றபாடம் மறுக்கப்பட்டது; மலர் போன்ற கண் என்று பொருள் கூறப்படின், அப்பாடம் தகும்; (அப்போது, உவமத்தொகை.) 'மலர்ந்தகண்' என்னும்பொருளில், மலர் என்பது வினைத்தொகையாதலால் 'மலர்க்கண்' எனக்ககரமிரட்டாது, 'மலர்கண்' என இயல்வேயாம்; "வளர் பிள்ளை, உயர்தாமரை, உணர்பொருள், தாழ் குழல், ஆழ்கடல்" என்பவைகாண்க. மலர் நீலம்—"நீலம் மலர்" என மொழி மாற்றிப்பொருள் கொள்க. (௧)

**தன்னடியார் திறத்தகத்துத் தாமரையா ளாகிலுஞ் சிதகு ரைக்குமேல்**
**என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தா ரென்பர் போலும்**
**மன்னுடைய விபீடணற்கா மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்கண் வைத்த**
**என்னுடைய திருவரங்கற் கன்றியும் மற்றொருவர்க் காளா வரே. (௨)**

தன் அடியார் திறத்தகத்து } தன்னுடைய [எம்பெருமானுடைய] அடியவர்கள் [விஷயத்தில்

தாமரையாள் ஆகிலும் } (புருஷகாரம் பண்ணக்கடவளான) பெரியபிராட்டியார்தாமே

சிதகு - குற்றங்களை

உரைக்கும் ஏல் - கணக்கிட்டுச் சொல்லத் [தொடங்கினாலும்

என் அடியார் - "எனக்கு அடிமைப்பட்ட [வர்கள்

அது - அக்குற்றங்களை

செய்யார் - செய்யமாட்டார்கள்;
செய்தார் ஏல் - (செய்தகுற்றத்தைப்பொ [றுப்பதற்கு எம்பெருமானுண்டு என் [று சிலவற்றைச்) செய்தார்களாயினும்
நன்று செய்தார் என்பர் - (அவர்கள்) நன்மையையே செய்தார்களத்தனை" [என்று சொல்லா நிற்பவரும்,
மன் உடைய - ஐச்வரியம் பொருந்திய
விபீடணற்கா - விபீஷணாழ்வானுக்காக
மதிள் இலங்கை திசை நோக்கி - மதிளையுடைய லங்கை [யின் முகமாக
மலர் கண் வைத்த - மலர்ந்த திருக்கண்க [ளை வைத்தருளினவரும்
என்னுடைய - எனக்கு ஸ்வாமியுமான
திருஅரங்கர்க்கு அன்றியும் - பெரிய பெருமாளையொ [ழிய
மற்று ஒருவர்க்கு - வேறொருவர்க்கு
ஆள் ஆவரே - ஆட்படுவார் ஆரேனுமுண் [டோ

குறிப்பு:—" நீரிலே நெருப்புக்கிளருமா போலே குளிர்ந்த திருவுள்ளத்தில் அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக; திருவடியைப்பொறுப்பிக்கு மிவள் தன்சொல்வழிவருமவனைப் பொறுப்பிக்கச்சொல்லவேண்டாவிறே" (முமுக்ஷுப்படி) என்றருளிச் செய்தபடி—சேதநர் செய்த பிழைகளைக் கணக்கிட்டு அதற்குத் தக்கவாறு தண்டம் நடத்துவதாகச்சீற்றமுற்றிருக்கு மெம்பெருமானை எதிர்த்து "கிஶ்சித்நாபராத்யதி" இவ்வுலகிற்பிழைசெய்யாதார் ஆர்? என்றாற்போலச் சிலபேச்சுக்களைப்பேசி மயக்கி அக்குற்றவாளிகளை வாழ்விக்கக்கடவளான பிராட்டிதானே எம்பெருமானுடைய திருவுள்ளத்தைச் சோதிக்கக்கருதியோ, வேறுஏதேனுமொரு காரணங்கொண்டோ அப்பகவச்சேஷபூதர் சிறந்துச் சிலகுற்றங்களைஎம்பெருமானிடத்துக்கூறுவளேயாகில், அதுகேட்டுஎம்பெருமான், "இப்படிப்பட்டகுற்றங்களை உன்னடியார்செய்யத்துணிவர்களேயன்றி என்னடியார் ஒருகாலுஞ்செய்யமாட்டார்கள்" என்பன்; அவ்வளவிலும் பிராட்டியானவள், "நீர் இங்ஙன் சொல்லலாகாது, அவர்கள் குற்றவாளிகள் என்பதில் இறையும்ஐயமில்லை" என்று நிர்ப்பந்தித்துச்சொல்லில், அதற்கு எம்பெருமான் "உன்னடியார் செய்யுங் குற்றங்கள் உனக்குப் பொல்லாங்காகத்தோற்றக் கடவனவாகிலும், என்னடியார் செய்யுங்குற்றங்கள் எனக்குக் குணமாகவே தோற்றுகின்றன; இனி நீ ஒன்றும் எதிர்த்துப்பேசக் கடவையல்லை" என்றுவெட்டொன்று துண்டிரண்டாகக் கூறுவன் என்பது முன்னடிகளிற் போதரும். இதனால், பெருமாள், பிராட்டி, இருவரும் ஒருவர்க்கொருவர் போராடி அடியாரை நோக்கியருளுமாறு கூறியதாம். தாமரையாள்— இடமடியாய்ப்பிறந்த பெயர். குற்றத்தையும் நற்றமாகக் கூறவேண்டியவள் சிதகுரைப்பது பற்றித் "தாமரையாளாகிலும்" என்றார். "என்னடியார் குற்றஞ்செய்யார்கள்" என்று சொல்லவேண்டும் போதும், குற்றம் என்றசொல்லை எம்பெருமான் வாயாற் சொல்லுதற்குக்கூசி "என்னடியார் அது செய்யார்" என்பனும்; "பேதை பாலகன் அதாகும்" என்றதிருமாலையும், "ஸ்வபாவதோஷஹீவீக்ஷ்ய வாத்ஸல்யம் வதியசக்தி தவ்யங்கண ௪௨-வது। வஸிஷ்டாய ஸ்வவத ப்ரபந்நாந ப்ரஹ்லாதஸ்த்ரந்ருணாம் நவைஷ்ணவா நாம்॥" என்றச்லோகத்தில் கண ௪௩-வது என்றவிடத்துப் பூருவர்களின் வியாக்கியானமும் நோக்கத்தக்கது.

[செய்தாரேல் நன்று செய்தார்] "நாமுண்டு என்றும், ஒரு ப்ரமாணமுண்டுஎன்றும் நினைத்துச்செய்தார்களாகில் அழகிதாகச் செய்தார்கள்; ஒருதர்மாதர்மமும் பரலோகமும் இல்லை என்று செய்தார்களன்றே; ப்ராசீநிகத்து

க்கு நாமுளோம் என்றன்றோ செய்தது; அதாவது—மடலெடுக்கையும், காமன்காலிலே விழுகையும்.'' என்றவியாக்கியான வாக்கியம் அறியத்தக்கது. ''என்பர் போலும்'' என்றவிடத்து, போலும்—வாக்கியாலங்கார மென்னலாம். [மன்னுடைய இத்யாதி.] ''செல்வவிபீடணற்கு வேறாகநல்லானை'' என்றபடி விபீஷணாழ்வான் பக்கலிலுள்ள பக்ஷபாதாதிசயந்தோற்ற அவனது நகரத்தை நோக்கிக்கண்வளர்ந்தருளுகிறபடி; ''தென்திசையிலங்கை நோக்கி'' என்றார் திருமாலையிலும். மன்—பெருமை. கீழ்ப்பாட்டிற் போலவே இப்பாட்டிலும் ''மலர்கண்'' என்றவிடத்திற்கு, ''பெரிய பெருமாள் திருக்கண்கள் ஆச்ரிதரைக் கண்டவாறே மலர்ந்தபடி'' என்று ஆன்றோர் உரைத்தருளினமையால் ''மலர்க்கண்'' என்றபாடம் மறுக்கப்பட்டது; இனி, மலர்போன்றகண் என்று பொருள்கொள்வதிற் குற்றமில்லாமையால் அப்பொருளுக்குச்சேர ''மலர்க்கண்'' என்றபாடம் கொள்ளத்தகு மாயினும், அதுவியாக்கியானப் பொருத்தமற்றதெனத் துணிக.

[என்னுடைய இத்தியாதி.] இப்படி அடியாரைப் பரிந்து நோக்கவல்ல பெரிய பெருமாளைத் தவிர்த்து மற்று ஆர்க்கேனும் ஆட்செய்கை கூடுமோ? என்றவாறு. ''ஆளாவரே'' என்றது— ஆளாகமாட்டார் என்றபடி; ''பிரிநிலை வினா எண் ஈற்றசை தேற்றம், இசைநிறை என ஆறுஏகாரம்மே'' (நன்னூல்) என்ற சூத்திரத்தில் ஏகார இடைச் சொல்லுக்கு எதிர்மறைப்பொருள் கூறப்படா தொழியினும், ''புதியன புகுதல்'' என்பதனால் அப்பொருள் கொள்ளப்படு மென்றுணர்க. (உ)

கருளுடைய பொழில்மருதுங் கதக்களிறும் பிலம்பனையுங் கடிய மாவும்
உருளுடைய சகடினையும் மல்லரையு முடையவிட் டோசை கேட்டான்
இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூ டேற்றிவைத் தேணி வாங்கி
அருள்கொடுத்திட் டடியவரை யாட்கொள்வா னமருமூ ரணிய ரங்கமே.()

கருள் உடைய - (க்ருஷ்ணனை நலியவேணும் என்கிற) சீற்றத்தையுடையதும்
பொழில் - (மனமிழுப்புண்ணும்படி புறம்பே) சோலைசெய்து நிற்பதுமான
மருதும் - (இரட்டை) மருதமரங்களையும்
கதம் - மிக்க கோபத்தையுடைய
களிறும் - குவலயாபீடத்தையும்
பிலம்பனையும் - ப்ரலம்பாஸுரனையும்
கடிய - மிகவும் க்ரூரனான
மாவும் - குதிரைவடிவாய்வந்த கேசியையும்
உருள் உடைய - உருண்டுவந்த
சகடினையும் - சகடாஸுரனையும்
மல்லரையும் - மல்லர்களையும்
உடையவிட்டு - சிதறவித்தருளி
ஓசை கேட்டான் - கீர்த்திபெற்றவனும்
இருள் அகற்றும் - இருளைப் போக்காநின்ற
எறி கதிரோன் - வீசுகின்ற கிரணங்களையுடையனான ஸூர்யனுடைய
மண்டலத்தூடு - மண்டலத்தினுள்ளே
அடியவரை - அடியார்களை
ஏற்றி - ஏறச்செய்து
(அங்கு நின்றும் அர்ச்சிராதி மார்க்கமாகப் பரமபதத்திற்குக் கொண்டு போய்.)
வைத்து - (அங்கு அவர்களை) நிறுத்தி
ஏணி வாங்கி - தன்னுடைய உபாயத்வாகாரத்தைத் தவிர்த்து
அருள் கொடுத்திட்டு - (அவர்கள் அவ்விடத்தில் நின்றும் மீளாமைக்கும் கைங்கரியலாபத்திற்கு முறுப்பாக அவர்கள் பக்கல்) க்ருபைபண்ணி
ஆட்கொள்வான் - அடிமைகொள்ளுமவனுமான எம்பெருமான்
அமரும் - பொருந்தி எழுந்தருளியிருக்கிற
ஊர் - திருப்பதியாவது
அணி அரங்கம் - அழகிய திருவரங்கமாம்.

குறிப்பு:—யமளார்ஜுந பங்கம், குவலயாபீடவதம், ப்ரலம்பாஸுரப்ரளயம், கேசிஸம்ஹாரம், சகடாஸுரபஞ்சநம், மல்லநிரஸநம் என்னுமிவ்வாறு வ்ருத்தாந்தங்களும் முன்னடிகளிற் கூறப்படுவன; இவ்விவரம் கீழ்ப் பலவிடங்களிலும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. 'கறுப்பு' எனனும் பொருளைத் தருவதாகிய 'கருள்' என்னுஞ்சொல், "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள" என்றபடி சீற்றமென்னும் பொருளைத் தந்த தென்க. நளகூபரன், மணிக்ரீவன் என்ற குபேரபுத்திரரிருவரும் மஹர்ஷிசாபத்தினால் இரட்டை மருதமரங்களாய் நின்றனர் என்றிருக்க, அவற்றுக்குக் கண்ணபிரானை நலியக் கருத்துண்டென்கை சேருமோ? எனின்; கேட்பது உண்மையே; ஆயினும் அம்மருதமரங்களில், கண்ணனை நலியக்கருதின கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அசுரர்கள் ஆவேசித்துக் கிடந்தாரகளென்று கொள்ளவேணுமென்பவாகலின் ஒக்குமென்றுணர்க: "ஒருங்கொத்தவிணைமருத முன்னியவந்தவரை" "பொய்ம்மாய மருதானவசுரரைப் பொன்றுவித்து" என்று கீழுமருளிச்செய்துள்ளமை அறிக. "உருளுடைய சகடரையும்" என்பது அத்யாபக பாடம்; "சகடினையும்" என்பதே ஆன்றோர்பாடம்; இன்—இடைச்சாரியை. அஸுரனால் ஆவேசிக்கப்பெற்ற சகடம் உருண்டு வந்து கண்ணனை நலியப் புக்கதனால், "உருளுடைய" என்றார். உருள் - முதனிலைத் தொழிற் பெயர். மல்லரை முடித்தவரலாற்றின் விவரம் "நல்லதோர் தாமரைப்பொய்கை" என்றபாட்டின் குறிப்புரையிற் காணத்தக்கது. இந்தத் தீப்பப்பூடுகளனைத்தையும் கண்ணபிரான் ஆயாஸமின்றி எளிதிற்களைந்திட்டன னென்பது "உடையவிட்டு" என்ற சொல்நயத்தாற் போதருமென்பர்.

எம்பெருமான் தன்னை அடுத்தவர்களைப் பரமபதத்திலேற்றி நித்திய கைங்கர்யபராக்குமாறுகூறுவன, பின்னடிகள். பரமபதத்துக்குப் போவார் ஸூர்யமண்டலத்தைக் கீண்டுகொண்டு போவதாகக் கூறப்படுவதனால் "எறிகதிரோன் மண்டலத்தூடு" என்றார்; "தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு" என்று சிறிய திருமடலிலும், "மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள், அன்ன தோரில்லியினூடுபோய் வீடேன்னுந் தொன்னெறிக்கண் சென்றாரை" என்று பெரியதிருமடலிலும், "இந்தவுடல் விட்டிரவி மண்டலத்தூடேகி இவ்வண்டங் கழித்திடையிலாவரண மேழ்போய், அந்தமில்பாழ்கடந்தழகார் விரசைதனிற் குளித்தங்கமாநவனாலொளிக்கொண்ட சோதியும் பெற்றமரர், வந்தெதிர்கொண்டலங்கரித்து வாழ்த்தி வழிநடத்த வைகுந்தம்புக்கு மணிமண்டபத்துச்சென்று, நந்திருமாலடியார்கள் குழாங்களுடன் கூடும் நாளெனக்குக் குறுகும்வகை நல்கென்னெதிராசா" என்று ஆர்த்திப்பிரபந்தத்திலும் (மணவாளமாமுனிகள்) அருளிச்செய்துள்ளவைகாண்க. [ஏணிவாங்கி.] மேல் ஏறுகைக்குச் சாதனமாயிருப்பது எதுவோ அது ஏணி எனப்படும்; அதாவது இங்கு எம்பெருமானுடைய உபாயத்வம்; பரமபதமேறுமளவுமிறே எம்பெருமானுக்கு உபாயத்வமென்கிற ஆகாரமுள்ளது; ஏறின பிறகு இவன்றனக்கு உபேயத்வமென்கிற ஆகாரம் வருதலால் "ஏணி வாங்கி" என்றாரென்க. "த்வயோகஸித்ருவிஜஹதோ தாரூ த்வத்தாயநத்வம்" [ந்யாஸதிலகம்.] என்ற தேசிகனருளிச்செயலில் "உஜ்ஜஹத" என்றது நோக்கத்தக்கது. பரமபதத்தில் எம்பெருமான் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியா யிருகையாலே, அங்கு அவனுக்கு உபேயத்வமேயன்றி உபாயத்வமில்லை யென்க.

இப்பாட்டில் முன்னடிகளில் விரோதிநிவர்த்தகத்வஞ் சொல்லிப், பின்னடிகளில் மோக்ஷப்ரதத்வஞ் சொல்லப்படுகையால், "மோக்ஷப்ரதாநம் விரோதிநிரஸநபூர்வகம்" என்கிற அர்த்தம் அறியப்பட்டதாயிற்று. (௩)

பதினாறு மாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரை யென்னு
மதில்நா யகராகி வீற்றிருந்த மணவாளர் மன்னு கோயில்
புதுநாண் மலர்க்கமல மெம்பெருமான் பொன்வயிற்றிற் பூவே போல்வான்
பொதுநா யகம்பாவித் திறுமாந்து பொற்சாய்க்கும் புனல ரங்கமே. (௪)

துவரை என்னும் அதில் } ஸ்ரீத்வாரகையென்கிற பட்டணத்தில்
பதினாறு ஆம் ஆயிரவர் தேவிமார் } (ஆயர் மங்கைகளாகிய) பதினாறாயிரம் தேவிமார்
பணி செய்ய - கைங்கரியம்பண்ண,
நாயகர் ஆகி-(அவர்களுக்கு) நாயகராய்க் கொண்டு
வீற்றிருந்த-(அவர்களின் நடுவே) எழுந்தருளி யிருந்த
மணவாளர் - மணவாளப்பிள்ளை (அழகிய மணவாளப் பெருமாளாய்)
மன்னு - நித்யவாஸம் பண்ணுகிற
கோயில் - கோயிலாவது;—
புது நாள் கமலம் மலர் } அப்போதலர்ந்த செவ்வித் தாமரைப் பூவானது
எம் பெருமான் - எம்பெருமானுடைய
பொன் வயிற்றில்—அழகிய திருநாபியிலுள்ள
பூ போல்வான் - தாமரைப்பூவோடு ஸாம்யம் பெறுவதற்காக
பொது நாயகம் பாவித்து } ஸர்வநிர்வாஹகத்வத்தைப் பாவித்து
இறுமாந்து - (அப்பாவனையாலே) கர்வங்கொண்டு
பொன் சாய்க்கும்-(மற்ற தாமரைகளின்) அழகைத்தள்ளிவிடா நின்றுள்ள
புனல் - நீர்வளத்தை யுடைய
அரங்கம் - திருவரங்கமாம்.

குறிப்பு:—முன்னடிகளிற் குறித்தவரலாறு—கீழ் * கதிராயிரமிரவியின் ஆறும்பாட்டினுரையில் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. இத்தேவிமார் பதினாறாயிரத் தொருநூற்றுவர் என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற் காணப்படுகின்றது.

திருவரங்கமாநகரைச்சுற்றிச் சூழ்ந்துள்ள திருக்காவேரியில் எம்பெருமானது திருநாபிக் கமலம்போன்ற பலதாமரைமலர்கள் ஓங்கி விளங்குகின்றன வென்றும், அப்பூக்களோடொத்த அழகிய பூக்கள் மற்றோரிடத்திலுமில்லை யென்றுங்கூறுவன பின்னடிகள். வயிறு — திருநாபிக்கு இலக்கணை. "பூவே" என்றவிடத்து, ஏ — இசைநிறை. போல்வான் — வான்விகுதிபெற்ற வினையெச்சம். பொதுநாயகம் பாவித்து — லோகஸ்ருஷ்டிக்குக் காரணமாய் ஸர்வநிர்வாஹகமாயிருக்கிற இருப்பைத் தானுமுடையதாகப் பாவித்து என்றபடி. இறுமாந்து = இறுமா - பகுதி; இறுமாப்பு — கர்வம். (௪)

ஆமையாய்க் கங்கையா யாழ்கடலா யவனியா யருவ ரைகளாய்
நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த் தானு மானான்
சேமமுடை நாரதனார் சென்றுசென்று துதித்திறைஞ்சக் கிடந்தான் கோயில்
பூமருவிப் புள்ளினங்கள் புள்ளரையன் புகழ்குழறும் புனல ரங்கமே. (௫)

(ஸ்ரீநாரத மஹர்ஷிக்குத் தன்னுடைய ஸர்வாதிகத்துவத்தை விளங்கச் செய்வதற்காக)
ஆமை ஆய்-(முதலில் கர்ணஜலத்திற்குள்) [ஆமையாயும்
கங்கை ஆய் - (பின்பு அந்த ஆமைமுதலிய ஜந்துக்களுக்கு இருப்பிடமான) க [ங்கையாயும்
ஆழ் கடல் ஆய் - (பின்பு அக்கங்கை முதலிய நதிகளுக்குப் புகலிடமான) ஆ [ழ்ந்தகடலாயும்
அவனி ஆய் - (பின்பு அக்கடலுக்கு இருப் [பிடமான) பூமியாயும்
அரு வரைகள் ஆய் (பின்பு அப்பூமிக்கு ஆதாரமான) பெரியமலைகளா [யும்
நான்முகன் ஆய் (பின்பு அம்மலைகளுக்கு ஸ்ருஷ்டிகர்த்தாவான) சதுர்முக [னாயும்
நால் மறை ஆய் (பின்பு அச்சதுர்முகனுக்குத் தாரகமான) நான்குவேதங்க [ளாயும்
வேள்வி ஆய் - (பின்பு அவ்வேதங்களுக்கு [ப் பராயணமான) யாகங்களாகவும்
தக்கணை ஆய் - (பின்பு அந்த யாகங்களுக்கு வீர்யத்தைக் கொடுக்கவல்ல) [தக்ஷிணையாகவும்
தானும் ஆனான்-(அந்தத் தக்ஷிணைமுகமாக அனைவர்க்கும் அவரவர்கள் விரும்பின பலத்தைக் கொடுக்கவல்ல அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனா [ன) தானாகவும்,
சேமம் உடை-(ப்ரஹ்மபாவனையில் நிஷ்ட் [டையாகிற) க்ஷேமத்தையுடைய
நாரதனார் - ஸ்ரீநாரத பகவான்
சென்று சென்று-பலகாலும் எழுந்தருளி
துதித்து - ஸ்தோத்திரம் பண்ணி
இறைஞ்ச - வணங்கும்படி
கிடந்தான் - பள்ளி கொண்டருள்பவனாகவும் இராநின்ற எம்பெருமானு [டைய
கோயில்-கோயிலாவது;—
புள் இனங்கள் - (அன்னம் முதலிய) பற [வைக் கூட்டங்கள்
பூ - (நீர்ப்பூ முதலிய) பூக்களில்
மருவி - பொருந்தியிருந்து
புள் அரையன் - தங்கள் சாதிக்குத் தலைவ [னை பெரிய திருவடியினுடைய
புகழ் - கீர்த்தியை [பெற்றதும்
குழறும் - அக்ஷரஸமாகப் பேசாநிற்கப்
புனல் - நீர்வளத்தை யுடையதுமான
அரங்கம் - திருவரங்க நகராம்.

குறிப்பு:—துரியோதநாதியருடை யாகத்தில் வந்த அரசர்களனைவரும் ஸ்ரீத்வாரகையின் மஹிமையையும், அங்கு ஸ்ரீகிருஷ்ணன் எழுந்தருளியிருக்கிற மதிப்பையுமெல்லாம் துரியோதநாதிகளின் முகமாகக் கேட்டுத் தாங்கள் கண்ணபிரானோடு உறவு பண்ணிக்கொள்ள விரும்பி, அத்துரியோதநாதியருடனும் பாண்டவர்களுடனும் ஸபரிவாரராய்ப் புறப்பட்டு ரைவதகபர்வதத்திற்குப் போந்து, தாங்கள் க்ருஷ்ணஸேவார்த்தமாக வந்திருக்கிறபடியைக் கண்ணபிரானுக்குத் தெரிவிக்க, அதையறிந்தகண்ணனும், 'இவர்கள் பரிவாரங்களுடன் திரண்டுவருகைக்குக் காரணம் யாதோ' என்று சிந்தித்து, ஸ்ரீபலராமனையும் ஸாத்யகியையும் முன்னிட்டுக்கொண்டு ஸேனைகளுடனும் ஆயுதங்களுடனும் அவர்களிருப்பிடத்திற் கெழுந்தருளி எல்லாரையும் குசலங் கேட்டு, அவரவர்களுடைய வயஸ்ஸுக்கும் வலிவுக்கும் அறிவுக்கும் பெருமைக்கும் தக்கவாறு ஆஸநமிடுவித்துத் தானும் தனக்கேற்றதொரு சீரியசிங்காசனத்தில் எழுந்தருளியிராநிற்கச் செய்தே, ஸ்ரீநாரத மஹரிஷிவந்து வணங்கி ஸ்ரீகிருஷ்ணபகவானை நோக்கி "ஸர்வ தேவர்களிற் காட்டிலும் நீர் ஆச்சரியகாரும் தந்ய [யநஹ்ன்-க்ருதார்த்தன்.] ருமாகாநின்றீர்; இங்ஙனிருப்பார் இவ்வுலகில் வேறு யாருமில்லை" என்று விண்ணப்பஞ் செய்ய, கண்ணபிரான்

அதைக்கேட்டுப் புன்முறுவல் செய்து, "முனிவனே! தகவிணைகளோடுகூட நான் ஆச்சரியனுகவும் மந்றுகவும் சொல்லப்பட்டவன்" என்றருளிச்செய்ய, அதனைக் கேட்டமுனிவன் மிகவும் மனமகிழ்ந்து, "பிரானே! தேவர் அருளிச்செய்த வாக்கியத்தினுல் அடியேன் மிகவும் மகிழ்வுற்றேன்; இனி வந்த வழியே விடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பஞ்செய்து போகநினைத்தவளவில், அங்குள்ள அரசர்கள் இப்படி ஸ்ரீகிருஷ்ணனுக்கும் நாரதமுனிவற்கும் நடந்த ஸம்வாதத்தின் உட்பொருளைத் தாங்கள் அறியாமையாலே ஸ்ரீகிருஷ்ணனுடைய திருமுகமண்டலத்தை நோக்கி "நாரதமுனிவன் தேவரைக்குறித்துச் சொன்னவாக்கியமும், அதற்கு உத்தரமாகத் தேவர் அருளிச்செய்தவாக்கியமுமாகிற இந்த மஹாரஹஸ்யம் எங்களுக்கு இன்னதென்று விளங்கவில்லை, இதனை விரித்துரைக்கவேணும்" என்று பிரார்த்திக்க, கண்ணபிரானும் அம்முனிவன்றன்னையே கூறுமாறு நியமித்தருள, அம்முனிவன் அவ்வரசர்களை நோக்கி இவ்வண்ணம் கூறத்தொடங்கினன்;—

நான் ஒருகால் கங்கைக்கரையிலே த்ரிஷவண ஸ்நாநாதிகளைப்பண்ணி வர்த்தியாநிற்கச் செய்தே, ஒருநாள் இரவு கழிந்து சூரியனுதித்தவளவில், கூப்பீடுவழியளவு அகலமும் அதில் இரட்டி நீளமுமாய் நீரினுள்ளே நனைந்து உடம்பு முழுதும் பாசிபற்றிக் கண்ணுக்கு இனிதாயிருப்பதொரு ஆமையைக்கண்டு "இப்படி நீரினுள்ளே ஒன்றையும் சிந்தியாமல் சங்கையற்றுத் திரியாநின்ற நீ அற்புதமான சரீரத்தையுடையனுகா நின்றாய், தந்யனுகாநின்றாய் என்று யான் அறுதியிட்டிருக்கின்றேன்" என்று நான் சொல்ல; அதனைக்கேட்ட அந்த ஆமை என்னைப்பார்த்து, ஒரு மநுஷ்யன்சொல்வதுபோல, "வாரீர் முனிவரே! என்னிடத்தில் ஆச்சரியமேது? நான் எங்ஙனே தந்யனுகாநின்றேன்? என்னைப்போற் பதினுயிரம் ஸத்வங்கள் ஸஞ்சரிக்கப்பெற்ற கங்காநதியன்றோ அங்ஙனுவது" என்று சொல்ல; பிறகு நான் அக்கங்கையைக் குறித்து அங்ஙனே சொல்ல; அதுகேட்ட அக்கங்கையானது ஒரு வடிவு கொண்டு நின்று ஆமையைப் போலவே சொல்லி, "என்னைப்போற் பல்லாயிரம் நதிகள் சென்று சேர்தற்கிடமான கடலன்றோ ஆச்சரியமும் தந்யமுமாவது" என்று சொல்ல; பிறகு நான் அக்கடலை நோக்கி அங்ஙனே சொல்ல; அக்கடல் என்னைப்பார்த்து, "நீ சொன்னவையிரண்டும் எனக்கில்லை; யாதொரு பூமியின்மேல் நான் வாஸம்பண்ணுநிற்கிறேனே அப்பூமிக்கன்றோ அவையிரண்டுமுள்ளது" என்ன; பிறகு நான் பூமியை நோக்கிப் புகழ்ந்து கொண்டு "ஆச்சரியபூதையாகாநின்றாய், தந்யையாகாநின்றாய்" என்று சொல்ல; அதுகேட்ட பூமி "யான் அங்ஙனுள்ளவளல்லள், எனக்கு ஆதாரமாயிருக்கின்ற பர்வதங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன; பிறகு நான் அப்பர்வதங்களைக்கிட்டி அங்ஙனே சொல்ல; அவை என்னைப் பார்த்து "அப்படிப்பட்டவை நாம் அல்லோம், பிரஜாபதியான பிரமனன்றோ இவையிரண்டையுமுடையான்" என்ன, பிறகு நான் பிரமனைச்சென்று கிட்டி அடைவுபட அநுவர்த்தித்துப் புகழ்ந்து கொண்டு "பிரமனே! ஆச்சரியனுகாநின்றாய், தந்யனுகாநின்றாய், உன்னையொப்பார் ஆருமில்லை" என்ன; அதைக் கேட்ட

பிரமன் என்னைப்பார்த்து "இங்ஙனே என்னைப் புகழ்வதென்? ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்னும் பெயரையுடையனவும் தத்துவங்களை உணர்த்துவனவும், உலகங்களையும் என்னையும் தரியாநின்றனவுமான வேதங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன; பிறகு நான் வேதங்களைக்கிட்டி, "நீங்களன்றோ ஆச்சரியபூதரும் தந்யரும்" என்ன; அந்த வேதங்கள் என்னைப் பார்த்து "நாங்கள் யஜ்ஞார்த்தமாகப் படைக்கப்பட்டவர்களாதலால் எமக்குப் பராயணங்களான [பராயணம் - சிறந்த கதி.] அந்த யஜ்ஞங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன; பின்பு நான் அந்த யஜ்ஞங்களைப் பார்த்துப்புகழ்ந்து "உலகத்தில் உங்களிற்காட்டில் ஆச்சரியங்களுமில்லை, தந்யங்களுமில்லை" என்ன; அந்த யஜ்ஞங்கள் என்னைப்பார்த்து "ஆச்சரியசப்தமும் தந்யசப்தமும் எங்கள் பக்கலில் இல்லை; விஷ்ணுவிடத்தில் அவை உள்ளன; அவ்விஷ்ணுவே எங்களுக்குச் சிறந்த கதி; தீயில் ஹோமம்பண்ணப்பட்டு எம்மால் ஸ்வீகரிக்கப்படும் செய்யை அவ்விஷ்ணுதானே கொடுக்கிறார்" என்ன; அதனைக்கேட்ட யான் பூமியில் வந்து உங்கள் திரளின்நடுவே யெழுந்தருளியிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணபகவானைக்கண்டு ஸேவித்து "நீர் ஆச்சரியருமாகாநின்றீர், தந்யருமாகாநின்றீர்" என்று நான் விண்ணப்பஞ்செய்ததற்கு உத்தரமாக, — "தக்ஷிணையோடேகூட நான் ஆச்சரியனாகவும் தந்யனாகவுஞ்சொல்லப்பட்டவன்" என்று கண்ணபிரானருளிச்செய்த வார்த்தை என்னை மகிழ்வித்தது;

எங்ஙனே யென்னில்;—எல்லாயஜ்ஞங்களுக்கும் தக்ஷிணையோடே கூடியிருந்துள்ள ஸர்வேச்வரன் கதியாகையாலே, "தக்ஷிணையோடுகூட நான் ஆச்சரியனாகாநின்றேன், தந்யனாகாநின்றேன்" என்று கண்ணபிரான் அருளிச்செய்த இவ்வாக்கியத்தினால் என்னுடைய ப்ரச்நம் நிறைவேறிற்று என்று சொல்லி, முதலில் ஆமையினிடத்துச்சொல்லப்பட்டு, அநந்தரம் பரம்பரையாக இவ்வளவும் வந்த "ஆச்சரியனாகாநின்றாய், தந்யனாகாநின்றாய்" என்ற வாக்கியம் தக்ஷிணையோடுகூடின இக்கண்ணபிரானைக்குறித்து என்னால் பிரதிபாதிக்கப்பட்டது; இந்த ரஹஸ்யார்த்தத்தை உங்கட்கு நான் சொல்லித்தலைக்கட்டினேன், இனி நான் வந்தவழியே போகிறேன் என்று, ஸ்ரீஹரிவம்ச - விஷ்ணுபர்வத்தில் நூற்றுப்பதினோராவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டகதை இப்பாட்டிற் சுருங்க அருளிச்செய்யப்பட்டதென்க.

[ஆமையாய் இத்தியாதி.] நாரதமாமுனிவனுக்குத் தன்னுடைய வீறுடைமையை விளக்குதற்பொருட்டுக் கங்கைநீரினுள் பெரியவடிவுபடைத்ததொரு ஆமையாயும், அ[illegible] ஆற்றுக்கு வாழ்விடமான கங்கையாயும், அதுபோன்ற பல நதிகளுக்கு [illegible] ஆழ்கடலாயும், அதுதனக்கும் இருப்பிடமான பூமியாயும், அதுதலைகுத்த தாரகங்களான பெரியமலைகளாயும், அவற்றுக்கு உத்பாதகனான பிரமனையும், அவன்றனக்குப் பரமகதியான சதுர்வேதமாயும், அவற்றுக்குப் பராயணமான யாகங்களாயும், அவற்றுக்கு வீரியந் தரவல்ல பெருமையையுடைய தக்ஷிணையாயும், அத்தக்ஷிணைமுகமாக அனைவர்க்கும் அவரவர் வேண்டியவாறு எல்லாப் பலன்களையும்

கொடுக்கும் வீறுடையனாய் அஸாதாரண விக்ரஹவிசிஷ்டனானவன்—என்பது முன்னடிகளின் கருத்து.

நாரதனுக்குச் சேமமுடைமையாவது – கர்மபாவனையில் விருப்பமுற்றிருக்கை தவிர்ந்து, ப்ரஹ்மபாவனையில் நிஷ்ட்டை பெற்றிருக்கை. [சென்று சென்று] இப்படி ஆமைமுதலிய ஒவ்வொரு வஸ்துவினிடத்தும் தனித்தனியே சென்று என்றும் பொருள்கூறத்தகும்; அடிக்கடி எம்பெருமான்பக்கலில் விடைகொண்டு இங்ஙனே துதித்திறைஞ்சுவன் நாரதன் எனக்கருதுதல் சிறக்கும்; "இன்பத்தும்புருவும் நாரதனு மிறைஞ்சியேத்த" என்றும், "தும்புருநாரதர் புகுந்தனர்" என்றும் இத்திருவரங்கமாநகரில் நாரதமுனிவன் பலகால் வந்து வணங்குமாறு சொல்லிற்றிறே.

"நீர்ப்பூ நிலப்பூமரத்திலொண்பூ" என்று கூறப்படுகின்ற மூவகைப்பூக்களிலும் அவ்வவற்றுக்கு உரியபறவைகள் களித்திருந்து தம் குலத்துக்கு அரசனாகிய கருத்மானது புகழைப்பாடுமிடமும், நீர்வளத்தை யுடையதுமான திருவரங்கமென்பது, ஈற்றடி. ஒவ்வொரு சாதியரும் தமது சாதித்தலைவன் புகழைப்பாடவிரும்புதல் இயல்பே; "அடங்கச் சென்றிலங்கையை யீடழித்த அனுமன் புகழ்பாடித் தங்குட்டன்களைக், குடங்கைக்கொண்டு மந்திகள் கண்வளர்த்தும்" என்றதுங்காண்க. ... ... (ரு)

**மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித் தவர்களையே மன்ன ராக்கி**
**உத்தரைதன் சிறுவனையு முய்யக்கொண்ட வுயிராள னுறையுங் கோயில்**
**பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்த நாடும்**
**சித்தர்களுந் தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய் நிற்கின்ற திருவ ரங்கமே.** •

மைத்துனன்மார் - (தனது) மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய
காதலியை—பத்தினியாகிய த்ரௌபதியை
மயிர் முடிப்பித்து - விரித்த கூந்தலை முடியும்படி செய்தருளி
அவர்களையே—அப்பாண்டவர்களையே
மன்னர் ஆக்கி-அரசாள்வித் தருளியவனும்
உத்தரை தன் – (அபிமந்யுவின் மனைவியான) உத்தரை யென்பவளுடைய
சிறுவனை - மகனை (கருவிற் கரிக்கட்டையா யொழிந்த) பரிக்ஷித்தை
உய்யக்கொண்ட - உயிர்பெற் றெழுந்திருக்கும்படி செய்தருளியவனும்
உயிர் ஆளன் - எல்லா உயிர்கட்கும் தலைவனுமான எம்பெருமான்
உறையும் - எழுந்தருளி யிருக்கிற
கோயில் - கோயிலாவது;—
பத்தர்களும் - பக்தர்களும்
பகவர்களும் - ஸந்நியாசிகளும்
பழமொழி வாய் முனிவர்களும் - அநாதிவாக்காகிய வேதத்தை வாயிற்கொண்டுள்ள ரிஷிகளும்
பரந்த நாடும் - விசாலமான நாட்டிலுள்ள மற்றும் பலரும்
சித்தர்களும்—நித்திய முக்தர்களும்
தொழுது - அஞ்சலி பண்ணி
இறைஞ்ச - வணங்கும்படி
திசை விளக்கு ஆய் நிற்கின்ற - எல்லாத் தி[..]களுக்கும் விளக்காயிருக்கிற
திரு அரங்கம் - திருவரங்க நகராம்.

குறிப்பு:—பஞ்ச[..]ர் மனைவியாகிய த்ரௌபதியானவள் தான் ரஜஸ்வலையாயிருக்கும்போது தனைச்சபையில் மாநபங்கம்செய்ய மயிரைப் பிடித்திழுத்த துச்சாஸநன்மீதும், அவனுக்கு உபபலமாயிருந்த துரியோத

நாதியர்மீதும் கறுக்கொண்டு 'இவர்களை உயிர்மாள்வித்தன்றி நான் இவ்விரிந்தகூந்தலை முடிப்பதில்லை" என்று சபதம்பண்ணிக்கொண்டு பதினான்கு வருஷம் காட்டில் திரிந்தகாலத்தோடும், பின்பு நாட்டிற்சேர்ந்த காலத்தோடும் வாசியற விரித்ததலையுந் தானுமாகத் திரிகிறபடியைக்கண்ட கண்ணபிரான் "நாம் இவள் ஸங்கல்பத்தின்படியே காரியஞ் செய்துகொடுத்து இவளது கூந்தலை முடிப்பித்தாலன்றோ 'சரணாகதரக்ஷகன்' என்று நாம் படைத்துள்ள விருது பிழைக்கலாவது" என்றெண்ணி அவ்வண்ணமே செய்யக் கருதித் தூதுநடந்தும் தேர்முன்னின்றும் பாண்டவர்களுக்குத் துணைசெய்து, அவளது ஸங்கல்பத்தை ஈடேற்றிக் கூந்தலை முடிப்பித்து அப்பாண்டவர்தம்மையே அரசாள்வித்தவாறு கூறுவது, முதலடி.

கண்ணபிரான் தூது சென்றதும், தேர்முன் நின்றதும், ப்ரபத்தியுபதேசம்பண்ணினது மெல்லாம் பாஞ்சாலியின் கூந்தலை முடிப்பதற்காகவேயென்பது அறியத்தக்கது. "அர்ஜுநனுக்கு தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றுமிவளுக்காக" என்ற ஸ்ரீவசநபூஷண ஸூக்தியின் வியாக்கியாநத்தில் இதன் விவரம் காண்க; "பந்தார் விரலாள் பாஞ்சாலிகூந்தல் முடிக்கப் பாரதத்துக், கந்தார் களிற்றுக் கழன்மன்னர் கலங்கச்சங்கம் வாய்வைத்தான்" என்றார் திருமங்கையாழ்வாரும்.

மைத்துனன்மார் - பெண்கொடுத்துக் கொள்ளுதற்கு உரிய உறவுமுறைமையுடையாரை மைத்துனன்மாரென்பது மரபாதல்பற்றிப் பாண்டவர்கள் கண்ணபிரானுக்கு மைத்துனன்மாராகக் கூறப்படுகின்றன ரென்பது கேள்வி. **காதலி** – வடமொழியில், ப்ரியா, ப்ரேயஸீ என்ற சொற்கள் போலும்.

இரண்டாமடியிற் குறித்த வரலாறு-கீழ் "மருமகன்றன் சந்ததியை" என்ற பாட்டின் குறிப்புரையில் விரித்துரைக்கப்பட்டுள்ளது.

" ஐமவாந " என்ற வடசொல்லின் திரிபாகிய பகவன் என்றசொல்லின் பன்மையாகிய பகவர் என்பதற்குத் தேர்ந்தபொருள் – சிறந்தவர் என்பது; அச்சொல் இங்கு யதிகளைக்கூறிற்று. ஸந்நியாசிகளைச் சீயரென்பதும்இப்பொருள்பற்றியே யென்க; சீயர்-சிங்கம்போலச் சிறந்தவர். சித்தர் - ஸித்தர். (௯)

**குறட்பிரம சாரியாய் மாவலியைக் குறும்பதக்கி யரசு வாங்கி**
**இறைப்பொழுதிற் பாதாளங் கலவிருக்கை கொடுத்துகந்த வெம்மான் கோயில்**
**எறிப்புடைய மணிவரைமே லிளஞாயி றெழுந்தாற்போ லரவணை யின்வாய்ச்**
**சிறப்புடைய பணங்கள்மிசைச் செழுமணிகள் விட்டெறிக்குந் திருவ ரங்கமே.**

குறள் பிரம சாரி ஆய் – வாமந ப்ரஹ்மசாரியாய் (எழுந்தருளி)
மா வலியை - மஹாபலியினுடைய
குறும்பு அதக்கி - செருக்கை அடக்கி
அரசு-(அவனுடைய) ராஜ்யமாயிருந்த பூமியை
வாங்கி - (தன்னுடைய தாம்படி நீரேற்று[ப்]) பெற்று
இறைப் பொழுதில் - க்ஷணகாலத்திக்குள்
பாதாளம் - பாதாள லோகத்தை
கலவிருக்கை கொடுத்து – (அவனுக்கு) இருப்பிடமாகக் கற்பித்து

உகந்த-(இந்திரன் வேண்டுகோளைத் தலைக்கட்டினேம் என்று) மகிழ்ந்த
எம்மான் - எமது தலைவனான எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
கோயில்--கோயிலாவது;—
எறிப்பு உடைய—மிக்க ஒளியையுடைய
மணி வரை மேல் - நீலரத்ந பர்வதத்தின் மேல்
இள நாயிறு - பாலஸூரியர்கள்
எழுந்தால் போல் - உதித்தாற் போல,
அரவு அணையின் வாய் - திருவனந்தாழ்வானிடத்து
சிறப்பு உடைய - அழகு பொருந்திய
பணங்கள் மிசை - படங்களின் மேல்
செழு மணிகள் - செழுமை தங்கிய ரத்நங்களானவை
விட்டு எறிக்கும் - மிகவும் ஜ்வலியா நிற்கப்பெற்ற
திரு அரங்கம் - திருவரங்கமாம்.

குறிப்பு:—மாவலியினிடத்து மூன்றடிவாங்கி இரண்டடிகளால் கீழ் மேலுலகங்களனைத்தையுமளந்துகொண்டு, மூன்றுமடிக்கு இடம் கிடையாமையால் அதனைத் தருமளவும் சிறைவைப்பாரைப்போலே அவனைப் பாதாளத்திற்கிடக்கும்படி தள்ளியவாறு கூறுவன, முன்னடிகள். "கலவிருக்கை கொடுத்து' என்றது—அவ்விருப்பு சிறையிருப்பாகவன்றிக்கே ஸௌம்ய பூமியாகக் கொடுத்தபடியைப் பற்ற; கலவிருக்கையாவது—நெஞ்சு கலந்திருக்குமிருப்பிறே" என்ற வியாக்கியாநவாக்கிய மறியத்தக்கது. பிரமசாரி ப்ரஹ்மசாரீ. பாதாளம் - வடசொல்.

* பச்சைமாமலைபோல் மேனியனான அழகியமணவாளன் சாய்ந்தருளப் பெறுகையால் அத்திருமேனியினது நிழலீட்டாலே கறுத்துக்தோற்றுகின்ற திருவனந்தாழ்வானுடைய படங்களின்மேல் செழுமணிகள் ஒளிவிடாநிற்பது-ஒரு நீலரத்நபர்வதத்தின்மேல் பல இளஞ்சூரியர்சள் உதித்தாற்போலுமென்பது, பின்னடி: இது இல்பொருளுவமை. ... ... (எ)

உரம்பற்றி யிரணியனை யுகிர்நுதியா லொள்ளியமார் புறைக்க வூன்றிச்
சிரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க வாயலரத் தெழித்தான் கோயில்
உரம்பெற்ற மலர்க்கமல முலகளந்த சேவடிபோ லுயர்ந்து காட்ட
வரம்புற்ற கதிர்ச்சேந்நெல் தாள்சாய்த்துத் தலைவணக்குந் தண்ண ரங்கமே. ()

உரம் பற்றி - (தன்னுடைய) வலிவை நினைத்து(ச் செருக்குற்ற)
இரணியனை - ஹிரண்யாஸுரனுடைய
ஒள்ளிய மார்பு - அழகிய மார்பை
உகிர் நுதியால் உறைக்க ஊன்றி - நகங்களின் நுனிகள் உள்ளே பொதியும்படி (திருக்கைகளால்) பற்றிக்கொண்டு
முடி - (அவனது தலையிலுள்ள) கிரீடமானது
இடிய - பொடி படும்படியாகவும்
கண் - கண்களானவை
பிதுங்க—பிதுங்கும்படி யாகவும்
வாய் அலர - வேதனை பொறுக்கமாட்டாமல்) வாய் அலரும்படியாகவும்
சிரம் பற்றி - தலையைப் பிடித்து நெரித்து
தெழித்தான்—(ப்ரஹ்லாதனுடைய விரோதியை முடித்தோமென்னும் மகிழ்ச்சியினால்) ஆரவாரம் செய்தருளின எம்பெருமான் (எழுந்தருளி யிருக்கிற)
கோயில் - கோயிலாவது;—
உரம் பெற்ற - செழிப்புப் பொருந்திய
கமலம் மலர் - தாமரை மலர்களானவை

உலகு அளந்த - மேலுலகை அளப்பதாக | கதிர் - கதிரை யுடையதுமான
[உயர்ந்த | செந் நெல் - செந்நெலானது
சே அடி போல் - திருவடியைப்போல் | தாள் சாய்த்து - தாள்களை நீட்டி
உயர்ந்து காட்ட - உயரவளர்ந்து விளங்க, | தலை வணக்கும்-தலைவணங்கி நிற்கப்பெற்ற
வரம்பு உற்ற-வரம்பு சேர்ந்து விளைந்தி | தண் அரங்கம் - குளிர்ந்த திருவரங்கநக
[ற்பதும் | [ராம்.

குறிப்பு:—தேவர்களிடத்துப் பெற்ற வரங்களின் வலிவையும் தனது தோள்வலியையும் பெருக்கநினைத்து 'நமக்கு ஒருவராலும் ஓரழிவு நேராமாட்டாது' என்று துணிந்து, தனக்கு வரமளித்த தேவர்களோடு மற்றுள்ளாரோடு வாசியற அனைவரையும் நெருக்கித் தன்கீழாக்கித் 'தன்னுடைய நாமமொழிய எம்பெருமானது திருநாமம் நாட்டில் நடைபெறவொண்ணாது' என விலக்கி, பகவந்நாமம் சொன்னதுவேகாரணமாகப் * பள்ளியிலோதிவந்த தன் சிறுவனான ப்ரஹ்லாதனைப் பலவகைகளால் நலிந்தஹிரண்யன் ஒருநாள் 'பிள்ளாய்! நீ சொல்லுகிறவன் எங்கு உளன்?' என்று தன் மகனைநோக்கிக் கேட்க, அவன் 'எங்குமுளன்' என்று விடைகூற, அதுகேட்ட இரணியன் 'இத்தூணிலே உளனோ?' என்று தானளந்து கட்டிவைத்ததொரு தூணைப் புடைக்க, எம்பெருமான் தனது அடியவனுடையசொல்லை மெய்ப்பிக்கைக்காக அத்தூணில் நரசிங்கவுருவாய்ப் புறப்பட்டுத் தனது திரு உகிர்களையே ஆயுதமாகக்கொண்டு அவனுடையமார்வை மறுபாடுருவும்படி ஊன்றித் தலையிற்கிரீடம் பொடிபடும்படியாகவும், கண்கள் பிதுங்கும்படியாகவும், வேதனைகள் பொறுமல் வாய் விரியும்படியாகவும் தலையைப்பிடித்து நெரித்தமையைக் கூறுவன, முன்னடிகள்.

"உரம் பற்றி" என்ற விடத்து, பற்றி என்பதை வினையெச்சமாகக்கொள்ளாமல், இ விகுதிபெற்ற பெயர்ச்சொல்லாகக்கொண்டு, "(தேவர் கொடுத்த வரங்களினால்) வலிவு படைத்தவனை" என்று பொருளுரைப்பதும் பொருந்துமென்க. ஒள்ளியமார்பு - இரணியன் தனது மார்வை ஆபரணம் முதலியவற்றால் அலங்கரித்துப் பலகாலும் அழகு பார்த்துக்கொண்டிருந்ததனால், ஒள்ளிய என்கிறார். சிரம் — ஶிரஸ். பிதுங்குதல் - உள்ளடங்காமற் புறப்படுதல், தெழித்தல் என்று கோபங்கொள்ளுதற்கும் பேராதல் அறிக.

நான்காமடிக்கு உள்ளுறை பொருள்;—தேவர் முதலானோர் திரண்டு வந்து காலைநீட்டித் தலைவணக்கித் தண்டனிட்டுக் கிடக்குமாற்றைக் கூறியவாறும். ... ... ... ... ... (அ)

தேவுடைய மீனமா யாமையா யேனமா யரியாய்க் குறளாய்
மூவுருவி னிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான் கோயில்
சேவலொடு பெடையன்னஞ் செங்கமல மலரேறி யூச லாடிப்
பூவணைமேல் துதைந்தெழுசெம் பொடியாடி விளையாடும் புனல ரங்கமே ( )

தேவு உடைய - தேஜஸ்ஸை யுடைய | ஏனம் ஆய் - வராஹமாயும்
மீனம் ஆய் - மத்ஸ்யமாயும் | அரி ஆய் - நரஸிம்ஹமாயும்
ஆமை ஆய் - கூர்மமாயும் | குறள் ஆய்-வாமநனாயும்

மூ உருவின் இராமன் ஆய் } பரசுராமனும், தசரத ராமனும், [பலராமனும்
கண்ணன் ஆய் - ஸ்ரீ கிருஷ்ணனும்
கற்கி ஆய் - கல்கியாயும் (திருவவதாரங்களெடுத்து,)
முடிப்பான் - (விரோதிகளை) ஒழிக்கவல்ல எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற)
கோயில்-கோயிலாவது;—
பெடை அன்னம்-அன்னப்பேடையானது
சேவலொடு-(தனது) புருஷ ஹம்ஸத்தோடுகூட
செம் கமலம் மலர் ஏறி } செந்தாமரைப் பூவின்மேலேறி
ஊசல் ஆடி - (அம்மலரை அசைத்து) ஊசலாடி
பூ அணை மேல் - புஷ்ப சயநத்தின்மேல்
திளைத்து - ஒன்றோடொன்று புணருகையாகிற நெருக்கத்தைச் செய்து
எழு-(அதனால்) கிளர்ந்த
செம் பொடி ஆடி } (சுண்ணமாகிற) சிவந்தபொடியில் மூழ்கி
விளையாடும் - விளையாடா நிற்கப் பெற்ற
புனல்-நீர்வளத்தை யுடைய
அரங்கம் - திருவரங்க நகராம்.

**குறிப்பு:**—எம்பெருமானது தசாவதாரங்களை அடைவேகூறுவன முன்னடிகள். "தேவுடைய" என்ற அடைமொழி—ஆமை முதலிய எல்லாவற்றிலும் அந்வயிக்கக்கடவது. மீனம் - மீநம். [மூவுருவினிராமனாய்.] துஷ்டக்ஷத்ரியரை ஒழிப்பதற்கான பரசுராமாவதாரமும், ராவணாதிராக்ஷஸரை ஒழிப்பதற்கான ஸ்ரீராமாவதாரமும், ஆஸுரப்ரக்ருதிகளான க்ஷத்ரியாதிகளை ஒழிப்பதற்கான பலராமாவதாரமுமாகிற இம்மூன்று அவதாரங்களுள் நடுச்சொன்ன ஸ்ரீராமாவதாரம் ஸ்வரூபேண அவதரித்ததாகையால் முக்கியம்; மற்றவை இரண்டும் ஆவேசாவதாரங்களாகையால் அமுக்கியம். ஆயினும் அவ்விரண்டிற்கும் ஸ்வரூபாவேசரூபதயா உண்டான உயர்த்தி உள்ளமையால், அவை முக்கிய அவதாரங்களுடன் சேர்த்துக் கணக்கிடப்பட்டன. இவற்றில் பரசுராமாவதாரம் அஹங்காரயுக்தனான ஜீவனை அதிஷ்டாநம் பண்ணி நிற்பதனால் முமுக்ஷுக்களுக்கு அது உபாஸிக்கத்தக்கதன்று; பலராமாவதாரம் அஹங்கார லேசமுமற்றதாயும், எம்பெருமானுக்கு மிகவும் அபிமதவிஷயமாயுமிருப்பதனால் அது முக்கிய அவதாரங்களோடொக்க உபாதேயம். இனி, உபாஸிக்கத்தகாத பரசுராமாவதாரத்தை ஆழ்வார் அருளிச்செய்வானென்? எனில்; தசாவதாரங்களையும் அருளிச்செய்வதாகத் திருவுள்ளத்திற் கொண்டபடியாலும், அவ்வவதாரத்திற் பண்ணின விரோதிஸம்ஹாரம் தமக்கு அபிமதமாகையாலும் அருளிச்செய்தாரென்க; "மன்னடங்க மழுவலங்கைக்கொண்ட இராமநம்பி" என்பர் மேலும். "மூவுருவிலிராமனாய்" என்றும் பாடம்.

[**கற்கி.**] தருமநெறிமுறைகள் நிலைகுலைந்து பாவமே வெல்லுகின்ற காலமாகிய கலியுகமுடிவில் எம்பெருமான் கல்கி என்று குதிரைவடிவமான அவதாரமெடுத்து அத்தருமநெறி முதலியவற்றை நிலைபெறுத்தியருளப் போகிறார் என்று புராணங்கூறும்;

"தருமந்தவிர்ந்து பொறைகெட்டுச் சத்தியஞ்சாய்ந்து தயை,
தெருமந்து தன்பூசனைமுழுதுஞ் சிதையக் கலியே,
பொருமந்த காலக்கடையினி லெம்பொன்னரங்க னல்லால்,
அருமந்த கற்கியென் றூரேயவை நிலையாக்குவரே."

என்ற திருவரங்கத்துமாலை அறிக.

இவ்வவதாரம் இனி பவிஷ்யத்தாயிருக்க, "கற்கி ஆய்" என்றுற் பொருந்துமோ? எனின்; ஸ்வரூபயோக்யதையைக் கருதிக் கூறினரென்க. (௯)

சேருவாளும் புள்ளாளன் மண்ணாளன் செருச்செய்யு நாந்தக மென்னும்
ஒருவாளன் மறையாள னோடாத படையாளன் விழுக்கை யாளன்
இரவாளன் பகலாள னென்னையாள னேழுலகப் பெரும்புர வாளன்
திருவாள னினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கமே. (௧௦)

செரு ஆளும் - தானே போர் செய்யவல்ல
புள் ஆளன் - பெரிய திருவடிக்குத் தலைவனும்,
மண் ஆளன் - லீலாவிபூதியை ஆளுமவனும்,
செரு செய்யும் - (ஆச்ரித விரோதிகளை எதிர்த்துப்) பூசல் செய்யவல்ல
நாந்தகம் என்னும் - நந்தகம் என்கிற
ஒரு வாளன் - ஒப்பற்றதொரு கொற்றவாளை யுடையனும்
மறை ஆளன் - நான்கு வேதங்களையும் ஆளுமவனும்,
ஓடாத - (போர்க்களத்தில்) முதுகுகாட்டி ஓடாத
படை ஆளன் - ஸேனைகளை யுடையனும்,
விழு கை ஆளன் - சிறந்த ஔதார்ய முடையனும்,
இரவு ஆளன் - ராத்ரி காலத்துக்கு நியாமகனும்,
பகல் ஆளன் - பகற்போதுக்கு நியாமகனும்,
என்னை ஆளன் - அடியேனுக்குத் தலைவனும்
ஏழ் உலகம் பெரும் புரவு ஆளன் - ஸப்த லோகங்களாகிற பெரிய ஸுக்ஷேத்திரங்களை ஆளுமவனும்,
திரு ஆளன் - பெரிய பிராட்டியாரை (த் தேவியாக) ஆளுமவனுமான எம்பெருமான்
இனிது ஆக - திருவுள்ள முகந்து
திருக் கண்கள் வளர்கின்ற - திருக்கண் வளர்ந்தருளுகிற (கோயிலாவது;—)
திரு அரங்கம் - திருவரங்க நகராம்.

குறிப்பு:—அஸுரராக்ஷஸரோடு போர்புரியுமிடத்து, அந்த யுத்தத்தைப் பெரியதிருவடி தானே நடத்த, எம்பெருமான் அத்தைக் கண்டுகொண்டு அவன் தோளிலே இருக்குமத்தனையைப்பற்றச் செருவாளும்புள் என்றார்; "பாரிப்பாரியசுரர்தம் பல்குழாங்கள் நீறெழப்பாய்பறவை யொன்றேறி வீற்றிருந்தாய்" என்றாரிறே நம்மாழ்வார். நித்யஸூரிகளில் தலைவனான பெரிய திருவடியை வாஹநமாக வுடையவனென்றதனால் நித்யவிபூதிநாயகத்வம் சொல்லப்பட்டதாய், மேல் லீலாவிபூதிநாயகத்வஞ் சொல்லப்படுகிறது— மண்ணாளன் என்று. நாந்தகம் - நீட்டல் விகாரம். ஆயுதத்தினால் அழிக்கவொண்ணாத பாஹ்யகுத்ருஷ்டிமதங்களை அழிப்பதற்குப் பரிகரமான வேதங்களை ஆளுமவன் என்கிறது - மறையாளன் என்று. எனவே, விரோதிநிரஸநம்பண்ணுவது - சஸ்திரத்தாலும் சாஸ்த்ரத்தாலும் என்றபடி. ஓடாத படையாளன் - நாட்டில் வழங்காத ஆயுதவிசேஷங்களை யுடையவன் என்றலுமொன்று; "ஸ்வைவரூப்யநித்ய நிரவத்ய நிரதிசய கல்யாணதிவ்யாயுத!" என்றாரிறே எம்பெருமானார். விழுக்கையாளன் - "வரிஜநவரிலஹர்ஷணாந்த்யாயார்ப்யவாரண மணர்மூஜா நஸ்தாதயஸ்யவாஸ்வே ஷயோணாந்தாஹாஷா ஸா வாரவ்வஸலகஃ தஃ ஸ்ரீதாத" என்ற ஆழ்வானருளிச் செயலின்படி - தன்னையும் தனது பரிகரங்களையுமடங்கலும் அடியார்தமக்கே ஆக்கிவைக்குஞ் சீர்மையுடைமை சொல்லுகிறது: விழுமம்—சீர்மை.

ஞானத்தின் ஸங்கோசவிகாஸங்களுக்குக் காரணமாகிய இரவு பகல்களைத் தன் அதீநமாகவுடையவன் என்கிறது — இரவாளன் பகலாளன் என்று.

ஸ்ரீவைகுண்டம், திருப்பாற்கடல், ஸூரியமண்டலம், யோகிகளுடைய உள்ளக்கமலம் என்னும் இவையனைத்தினும் இனியதென்று திருமால் திருவுள்ளமுகந்து எழுந்தருளியிருக்குமிடமானதுபற்றி ரங்கம் என்று பெயர் பெற்ற இடத்தில், இனிதாகத்திருக்கண்வளர்கின்றானென்னத்தடையில்லாமையறிக; "ஸ்ரீரங்கே ஸ்ஹ்ருஷ்யாத்மா யோகிநாம் ஹ்ருதயாம்புஜே... ரதிம் மநோஹாரிணம் தத்ர க்ஷேத்ரே ரமதி ஹஸ்ருதயே" ... ... (௧௦)

கைந்நாகத் திடர்கடிந்த கனலாழிப் படையுடையான் கருதுங் கோயில்
தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கந் திருப்பதி யின்மேல்
மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டுசித்தன் விரித்ததமி ழுரைக்க வல்லார்
எஞ்ஞான்று மெம்பெருமா னிணையடிக்கீ ழிணைபிரியா திருப்பர் தாமே. (௧௧)

கை - பெரிய துதிக்கையையுடைய
நாகத்து - கஜேந்திராழ்வானுடைய
இடர் - துன்பத்தை
கடிந்த - போக்கின [ழியாழ்வானை
கனல் ஆழி - ஜ்வலியா நின்றுள்ள திருவா
படை - ஆயுதமாக [ள எம்பெருமான்
உடையான் - (திருக்கையில்) அணிந்துள்
கருதும் - விரும்பி யெழுந்தருளி யிருக்கப் [பெற்ற
கோயில் - கோயிலாய்,
தென் நாடும் - தென்னாட்டி லுள்ளாரும்
வட நாடும் - வடநாட்டி லுள்ளாரும்
தொழ நின்ற - ஸேவிக்கும்படி அமைந்த
திரு அரங்கம் திருப்பதியின் மேல் - திருவரங்கமென்னும் திருப்பதி விஷயமாக,

மெய் நாவன் - மெய்யே சொல்லா நின்ற [நாவையுடையரும்
மெய் அடியான் - பிரயோஜனத்தை விரும்பாது அடிமை செய்பவருமான
விட்டு சித்தன் - பெரியாழ்வார்
விரித்த - அருளிச் செய்த
தமிழ் - இத்தமிழ்ப் பாசுரங்களை
உரைக்க வல்லார் - ஓதவல்லவர்கள்
எம்பெருமான் - எனக்குச் சேஷியான பரம [பத நாதனுடைய
இணை - ஒன்றோடொன்று ஒத்த
அடி கீழ் - திருவடிகளின் கீழ்
எஞ்ஞான்றும் - எந்நாளும்
இணை பிரியாது - (நித்ய முக்தர்களின் தி [ரளாகிற) துணையைப் பிரியாமல்
இருப்பர் - (அவர்களோடு கூடி) வாழ்ந்திருக்கப் பெறுவர்.

குறிப்பு:—இத்திருமொழிகற்பார் * நலமந்தமில்லதோர் நாடுபுக்கு அடியார்கள் குழாங்களையுடன்கூடி வாழப்பெறுவர் என்று பலங்கூறியவாறு.

மெய்ந்நாவன் - "பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன்" என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்ததுபோல; இதனால் - இவரருளிச் செய்யும் பகவத்வைபவம், திருப்பதி வைபவம் முதலியவற்றில் இறையும் பொய்கலசாமை போதருமென்க. மெய்யடியான் - அடிமை செய்து விட்டு, தேஹி என்று மடியேற்குமவரல்லரென்கை.

கை + நாகம், கைந்நாகம். மெய் + நாவன், மெய்ந்நாவன். இணை-இரண்டு, உவமை, சகாயம், துணை. தாம், ஏ - அசைச்சொற்கள்.

அடி:—மரவடி தன் கருள் பதினறு ஆமை மைத்துனன் குறள் உரம் தேவு செரு கைந்நாக துப்பு.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

## பத்தாந்திருமொழி

## துப்புடையாரை.

**அவதாரிகை:**—கீழ்த்திருமொழியில் "இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூடேற்றிவைத் தேணிவாங்கி, அருள் கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வான்" என்று பெரிய பெருமாளுடைய மோக்ஷப்ரதத்வமாகிற திவ்யகுணத்தை அநுஸந்தித்தமையால், "இனி நாம் இவ்விருள் தருமாஞாலத்தைவிட்டு * நலமந்தமில்லதோர் நாட்டிற் புகுந்து ஒழிவில்கால மெல்லாமுடனாய்மன்னிவழுவிலாவடிமை செய்ய வேண்டும்" என்னும் ஆசைகிளர்ந்து, அதற்கு உறுப்பாக இச்சரீரஸம்பந்தம் அற்றுப்போகவேண்டும்படியை அநுஸந்தித்து, இப்பிரசங்கத்தில், ஸம்ஸாரிகளனைவர்க்கும் சரீரவியோககாலத்தில் யமகிங்கரர்களினால் நேரிடும் நலிவை நினைத்து, 'அப்படிப்பட்ட நலிவு நமக்கு நேராவண்ணம் எம்பெருமான்றானே காத்தருளவேணும்' என்று அறுதியிட்டு, 'அந்தப் பிரார்த்தனையை முன்னதாகவே எம்பெருமான் திருவடிகளில் விண்ணப்பஞ் செய்வோம்' என்று முயன்று, "சரமதசையில் கருமங்களுக் கேற்றவாறு யமகிங்கரர்வந்து என்னை நலியில் அவ்வருத்தத்தினால் அடியேன் தேவரது திருவடிகளை நினைக்கவும் ஒன்று சொல்லவும் வல்லவனல்லேன்; அப்போதைக்குச் சொல்லவேண்டுமவற்றை இப்போதே சொல்லிவைக்கிறேன்; ஆனபின்பு அப்போது அவர்கள் என்னை நலியாதபடி தேவர் காத்தருளவேணும்" என்று பெரிய பெருமாள் திருவடிகளில் சரணம் புகுந்து விண்ணப்பஞ்செய்கிறார், இத்திருமொழியில்.

இனி, 'ந [illegible] யமவிஷயம் [illegible]' [பாகவதர்கள் யமலோகம் போகமாட்டார்] என்று சாஸ்த்ரஞ்சொல்லுகையாலும், "வேண்டாமை நமன்றமர் என்றமரை வினவப் பெறுவாரலர்" என்று எம்பெருமான் நியமித்தருளினதாகவும், "வள்ளலே! உன்றமர்க்கென்றும் நமன்றமர் கள்ளர்போல்" என்றும் திருமங்கையாழ்வார் அருளிச்செய்கையாலும், "பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" [கிங்கரர்காள்! எம்பெருமானடியாரிடத்து நீங்கள் செல்லவேண்டா; அவர்களுக்கு நானகடவனல்லேன்] என்று யமன்றானே தனது கிங்கரர்களை நோக்கிக் கூறியிருக்கையாலும், பாகவதர்கள் யமகிங்கரர்களுக்கு வசப்படமாட்டார்கள் என்கிற விஷயம் ஐயமற்றிருக்க, இவ்வாழ்வார் நரகவேதனையை நினைத்து அஞ்சி, அதற்காக எம்பெருமானைச் சரணம் புகுதல் பொருந்துமாறு எங்ஙனே? எனின்;

ஆழ்வார்கள் * அயர்வறுமமரர்களதிபதியால் * மயர்வறமதிநலமருளப்பெற்று அவனை உள்ளபடி உணர்ந்து அநுபவியாநிற்கச் செய்தே, சிலகாலங்களில், நெடுநாளளவும் தம்மை எம்பெருமான் திருவடிகளினின்று மகற்றின ஊழ்வினைகளின் கொடுமையையும், அக்கருமங்களுக்கு ஏற்றபடி பந்தம், மோக்ஷம் என்ற துன்பவின்பங்களிரண்டையும் தரவல்ல எம்பெருமானது ஸ்வாதந்த்ர்யத்தின் கனத்தையும் நினைத்து, 'இப்படி ஸ்வதந்த்ரனான இவன் நம்மை இன்னம் பவக்குழியில்தள்ளிற் செய்வதென?' என்று அஞ்சி, அதற்குப்பரிஹாரமாக எம்பெருமான் திருவடிகளிற் சரணம் புகுதல் பொருந்துமென்க. "மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொலென்றின்னம் ஆற்றங்கரைவாழ் மரம்போலஞ்சுகின்றேன்" என்று திருமங்கையாழ்வாரும், "வைத்தசிந்தைவாங்குவித்து நீங்குவிக்க நீயின்னம், மெய்த்தன் வல்லை - உய்த்து நின் மயக்கினில் மயக்கலென்னை மாயனே" என்று திருமழிசைப்பிரானும் இங்ஙனே அஞ்சினமைகாணக. ஆகையால், இவ்வச்சமும் பிரார்த்தனையும் இவருடைய அதிசங்காமூலமான கலக்கமடியாக வந்ததாகையாலே கீழ்க்குறித்தவசநங்களோடு விரோதமில்லையென்றொழிக.

துப்புடை யாரை யடைவ தெல்லாஞ் சோர்விடத் துத்துணை யாவ ரென்றே
ஒப்பிலே னாகிலும் நின்ன டைந்தே னானைக்கு நீயருள் செய்த மையால்
எய்ப்பென்னை வந்து நலியும் போதங் கேதுநா னுன்னை நினைக்க மாட்டேன்
அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தே னரங்கத் தரவணைப் பள்ளி யானே

அரங்கத்து - திருவரங்கம் பெரியகோயிலில்
அரவு அணை - திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேல்
பள்ளியானே - பள்ளி கொள்ளா நின்றுள்ள எம்பெருமானே!
துப்பு உடையாரை அடைவது - (அடியாரைக் காப்பதில்) ஸாமர்த்திய முடைய தேவரீரை ஆச்ரயிப்பது
எல்லாம் சோர்வு இடத்து - "ஸர்வ இந்திரியங்களும் சிதிலமாய் விடுங்காலத்தில்
துணை ஆவர் என்றே - தேவர் துணையாயிருக்கும்" என்கிற எண்ணத்தினாலன்றோ?
ஒப்பு இலேன் ஆகிலும் - (இவ்வாறு துணைசெய்வதற்கு உரிய அதிகாரிகள் இன்னாரென்று தேவர் திருவுள்ளத்திற்கொண்டிருக்குமவர்களோடு) அடியேன் ஒப்பற்றவனாயினும்,
நீ ஆனைக்கு அருள் செய்தமையால் - தேவர் கஜேந்திராழ்வானைக் காத்தருளியவராதலால் (அவரைப்போல் அடியேனையுங் காத்தருள்வீரென்று)
நின் அடைந்தேன் - தேவரைச் சரணம் புகுந்தேன்;
எய்ப்பு - (வாதபித்த ச்லேஷ்மங்களினால் நெருக்குண்கையாலுண்டாகக் கடவதான) இளைப்பானது
என்னை - அடியேனை
வந்து நலியும் போது - கிட்டி வருத்துங் காலமாகிற
அங்கு - அச்சரமதசையில்
நான் - அடியேன்
உன்னை - தேவரீரை
ஏதும் - க்ஷணகாலமாயினும்
நினைக்க மாட்டேன் - நினைக்க முடியாதவனாவேன்.
அப் போதைக்கு - அக்காலத்துக்காக
இப் போதே - (கரண களேபரங்கள் தெளிவு பெற்றிருக்கிற) இப்போதே
சொல்லி வைத்தேன் - (என்னுடைய ப்ரார்த்தனையை) விண்ணப்பஞ் செய்துகொண்டேன்.

**குறிப்பு:—**"துப்புடையாயை யடைவதெல்லாஞ் சோர்விடத்துத்துணை யாவை யென்றே" என்று முன்னிலையாகக்கூற வேண்டியிருக்க, அங்ஙனங் கூறாது படர்க்கையாகக் கூறியது, இடவழுவமைதியின் பாற்படும்; முன்னிலைப்படர்க்கை என்க; "ஓரிடம்பிற இடந்தழுவலுமுளவே" என்பது நன்னூல். காத்தல்தொழிலில் வல்லமை எம்பெருமானுக் கன்றி மற்று ஆர்க்கேனும் அமையாதென்பது - ப்ரபந்நபரித்ராணம் முதலிய பிரபந்தங்களினால் அறுதியிடப்பட்டதாதலின், படர்க்கைப்பொருள் பொருந்தாதென்றுணர்க. "உடையாரை, துணையாவர்" என்ற பன்மை - பூஜையிற் போந்ததாம்.

ஆழ்வார் எம்பெருமானை நோக்கி, "திருமாலே! ரக்ஷணத்தில் ஸமர்த்தனான உன்னை அடியேன் ஆச்ரயிப்பது, 'செவி வாய் கண்மூக்கு முதலியவையெல்லாம் தளர்ச்சிபெற்று ஒருகாரியத்திற்கும் உதவப் பெறாதகாலத்தில் நீ துணையாவாய்' என்ற நிச்சயத்தினாலன்றோ" என்றருளிச்செய்ய; அதற்கு எம்பெருமான் "ஆழ்வீர்! ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே ஶரீரே ஸதி யோ நர:। தாதுஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விஶ்வரூபஞ்ச மாமஜம்॥ ததஸ்தம் ம்ரியமாணந்து காஷ்டபாஷாணஸந்நிபம்। அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாங்கதிம்॥" என்ற எனது ப்ரதிஜ்ஞைக்கு விஷயபூதர்களான அதிகாரிகளுக்கு நீர் ஒப்

போ?" என்று கேட்க; ஆழ்வார்; "அப்படிப்பட்ட அதிகாரிகளோடு எனக்கு ஒப்பு இல்லையாயினும், உனது நிர்ஹேதுகக்ருபையையே கணிசித்து, என்னுடைய துக்கம் பொறுக்கமாட்டாமல் உன்னை அடைந்தேன்" என்ன; "இப்படி நான் ஆரை ரக்ஷித்ததுகண்டு என்னை நீர் அடைந்தது?" என்று எம்பெருமான் கேட்க; "ஆர்த்தியும் அநந்யகதித்வமுமொழியவேறொரு யோக்யதையில்லாத ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு நீ அருள்புரிந்தது பிரஸித்தமன்றோ" என்று ஆழ்வார் அருளிச்செய்ய; அதுகேட்ட எம்பெருமான், "ஆனால் அந்த ஸ்ரீகஜேந்திராழ்வானைப்போல் நீர் உமக்குத் தளர்த்திவந்தபோது நினைத்தீராகில் அப்போது வந்து ரக்ஷிக்கிறோம்" என்ன; ஆழ்வாரும் அது கேட்டு, "வாதம், பித்தம், சிலேஷ்மம் என்ற மூன்று தோஷங்களும் ப்ரபலப்பட்டு வருத்துவதனாலுண்டாகும் இளைப்பானது என்னை நலியுங்காலத்தில் உன்னை நான் நினைப்பது எப்படிகூடும்!" என்ன; எம்பெருமான், "ஆனால் உம்மால் என்ன செய்யமுடியும்?" என்று கேட்க; ஆழ்வார், "சரமகாலத்துக்காக இப்போதே சொல்லிவைக்கமுடியும்; அதைத்தான் சொல்லிவைத்தேன்" என்ன; "இப்படி நீர்சொல்லிவைத்தால் இத்தை நான் நினைத்திருந்து உம்மை ரக்ஷிக்க வேண்டிய நிர்ப்பந்தமென்ன?" என்று எம்பெருமான் கேட்க; அதற்கு ஆழ்வார், "அப்படியா? ஸ்ரீவைகுண்டத்தையும் திருப்பாற்கடலையும் விட்டுக் கோயிலில் வந்து பள்ளிகொண்டருளினது இதற்காகவன்றோ" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாசுரம். ... ... ... ... (௧)

சாமிடத் தென்னைக் குறிக்கொள் கண்டாய் சங்கொடு சக்கர மேந்தி னனே
நாமடித் தென்னை யனேக தண்டஞ் செய்வதா நிற்பர் நமன்ற மர்கள்
போமிடத் துன்திறத் தெத்த னையும் புகாவண்ணம் நிற்பதோர் மாயை வல்லை
ஆமிடத் தேயுன்னைச் சொல்லி வைத்தே னரங்கத் தரவணைப் பள்ளி யானே.()

சங்கொடு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
சக்கரம் - ஸ்ரீஸுதர்சனாழ்வானையும்
ஏந்தினனே - திருக்கையில் அணிந்துகொண்டுள்ளவனே!
அரங்கத்து அரவு அணை பள்ளியானே!—;
நமன் தமர்கள் - யமபடர்கள்
நா மடித்து - (மிக்க கோபத்தோடு) நாக்கை மடித்துக்கொண்டு
என்னை - (மஹாபாபியான) அடியேனை
அனேக தண்டம் செய்வதா நிற்பர் - பலவகைகளால் தண்டிக்க நினையா நின்றவர்களாய்
போம் இடத்து - இழுத்துக்கொண்டுபோம்போது
(என்னுடைய நெஞ்சானது)
உன் திறத்து - உன் விஷயத்தில்
எத்தனையும் - சிறிதாயினும்
புகா வண்ணம் - அவகாஹிக்க மாட்டாதபடி
நிற்பது ஓர் மாயை வல்லை - மறைந்து நிற்கையாகிற ஒப்பற்றதொருமாயையைச் செய்வதில் (நீ) வல்லவனாயிராநின்றாய்;
(ஆதலால்,)
ஆம் இடத்தே - ஸர்வேந்திரியங்களும் தெளிவு பெற்றிருக்கையாகிற இக்காலத்திலேயே,
சாம் இடத்து என்னை குறிக்கொள் கண்டாய் (என்று) - "சரீரவியோக ஸமயத்தில் (உன்னை நினைக்கமாட்டாத) அடியேனைத் திருவுள்ளம்பற்றி யருளவேணும்" (என்று)
உன்னை - உன்னைக் குறித்து
சொல்லி வைத்தேன் - விண்ணப்பஞ் செய்து தொண்டேன்,

குறிப்பு:—"ஆமிடத்தே - சாமிடத்தென்னைக் குறிக்கொள் கண்டாய் (என்று) - உன்னைச் சொல்லிவைத்தேன்" என்று இயையும். கீழ்ப்பாட்டில் "எல்லாஞ்சோர்விடத்து" என்றதை விவரிக்கிறது - "சாமிடத்து" என்று.

எம்பெருமானே! எனது உயிர் உடலைவிட்டு நீங்கினபிறகு, யமகிங்கரா வந்து மிக்கசீற்றங்கொண்டு நாக்கைமடித்துப் பலவகைத் துன்பங்களைச் செய்வதற்காக யமலோகத்திற்கு இழுத்துக்கொண்டு போகும்போது, என் நெஞ்சினால் உன்னை நினைக்கமுடியாதபடி உன்னை என் நெஞ்சுக்கு விஷயமாக்காமல் மறைத்துக் கொள்ளும்படியான மாயச்செயல்களில் நீவல்லவனாதல் பற்றி அக்காலத்தில் உன்னை நினைக்கை அரிதென்று, இந்திரியங்கள் ஸ்வாதீநமாயிருக்கப்பெற்ற இப்போதே, "சரமஸமயத்தில் அடியேன் நலிவுபடாவண்ணம் திருவுள்ளம் பற்றியருளவேணும்" என்று உன்திருவடிகளில் விண்ணப்பஞ் செய்துகொண்டேன் என்கிறார்.

அநேகதண்டம் - வடசொல் தொடர். செய்வதா - செய்வதாக. நிற்பர்- முற்றெச்சம்; நின்று என்றபடி; செய்வதாநின்று - செய்வதாக மனத்திற்கொண்டு என்பது தேர்ந்தபொருள். அன்றி, நிற்பர் என்பதை வினைமுற்றாகக் கொள்ளுதலும் ஒன்று. ... ... ... ... (உ)

எல்லையில் வாசல் குறுகச் சென்றால் லெற்றி நமன்றமர் பற்றும் போது
நில்லுமி னென்னு முபாய மில்லை நேமியுஞ் சங்கமு மேந்தி னானே [டென்றும்
சொல்லலாம் போதேயுன் நாம மெல்லாம் சொல்லினே னென்னைக் குறிக்கொண்
அல்லற் படாவண்ணங் காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளி யானே. (ங)

நேமியும் - திருவாழியையும்
சங்கமும் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
ஏந்தினானே - கையில் அணிந்து கொண்டு [ள்ளவனே!
அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே!-;
எல்லையில் - (அடியேனுடைய வாழ்நாளி[ன்) எல்லையாகிய சரமதசையில்
வாசல் குறுகச் சென்றால் - (யமபுரத்துக்குப்)போம் வழியைக் கிட்டப்புகுந்[தால்
நமன் தமர் - யமகிங்கரர்கள்
எற்றி - அடித்து
பற்றும் போது - பிடிக்குங் காலத்தில்
நில்லுமின் என்னும்-"கடக்க நில்லுங்கள்" என்று (அவர்களைக்கிட்ட வரவொ[ட்டாமல்) தடுக்கும்படியான
உபாயம் இல்லை - ஒருபாயமும் (என்கையி[ல்) இல்லை;
(ஆதலால்,)
சொல்லலாம் போதே - வாய்விட்டுச் சொல்லுகைக்கு உரிய இப்போதே
உன் - உன்னுடைய
நாமம் எல்லாம்-திருநாமங்களை யெல்லாம்
சொல்லினேன் - சொன்னேன்;
(ஆகையால்,)
என்னை - அடியேனை
குறிக்கொண்டு - திருவுள்ளத்திற்கொண்டு
என்றும் - எப்போதும்
அல்லல்படா வண்ணம் - அநர்த்தப் படாதபடி
காக்க வேண்டும் - ரக்ஷித்தருளவேணும்.

குறிப்பு:—எல்லை என்று-மரணதசையைச் சொல்லுகிறது; ஆயுஸ்ஸுக்கு மரணம் எல்லையாதலால். வாசல்—'வாயில்' என்பதன் மரூஉ. எற்றுதல்-அடித்தல் உபாயம் - வடசொல்; ஸாதநம் என்பது பொருள். "நில்லுமினென்னவுபாயமில்லை" என்று சிலர் ஓதுவர்.

எம்பெருமானே! நான் சரமதசையில் கர்மபலாநுபவத்துக்காக யமபுரத்தின்வழியே சென்றால் அங்கு யமகிங்கரர்கள் வந்து என்னை அடித்துப் பிடிக்கும்போது, "நீங்கள் என்னருகில் வரக்கூடாது" என்று அவர்களைத் தடுக்க என்னால் முடியாது: ஆதலால், அப்படிப்பட்ட அநர்த்தம் அடியேனுக்கு விளையவொண்ணாமைக்கு உறுப்பாக இப்போதே உன் திருநாமங்களை யெல்லாம் அநுஸந்தித்துவிட்டேன்; இதுவே ஹேதுவாக என்னை நீ திருவுள்ளத்திற்கொண்டு காத்தருளவேணு மென்றவாறு. ... ... (௩)

ஒற்றை விடைய னும்நான் முகனு முன்னை யறியாப் பெருமை யோனே
முற்ற வுலகெல்லாம் நீயே யாகி மூன்றெழுத் தாய முதல்வ னேயோ
அற்றது வாணா ளிவற்கென் றெண்ணி யஞ்ச நமன்றமர் பற்ற லுற்ற
அற்றைக்கு நீயென்னைக் காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளி யானே. ()

ஒற்றை விடையனும் - ஒப்பற்ற ரிஷபவாஹநனான ருத்ரனும்
நான்முகனும் - ப்ரஹ்மாவும்
உன்னை - உன்னை
அறியா - (உள்ளபடி) அறியவொண்ணாமைக்கு உறுப்பான
பெருமையோனே - பெருமை பொருந்தியவனே!
முற்ற உலகு எல்லாம் - ஒன்றொழியாதபடி எல்லா உலகங்களும்
நீயே ஆகி - நீயே ஆய்
மூன்று எழுத்து ஆய - மூன்று அக்ஷரமான ப்ரணவ ஸ்வரூபியானவனும்
ஓ முதல்வனே - ஸர்வகாரண பூதனுமானவனே!
அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே! -;
நமன் தமர் - யமகிங்கரர்கள்
இவற்கு வாழ்நாள் அற்றது என்று எண்ணி - 'இவனுக்கு ஆயுஸ்ஸு முடிந்தது' என்று நினைத்து,
அஞ்ச - (பிடிக்கிற பிடியில்) அஞ்சும்படி
பற்றல் உற்ற அற்றைக்கு - பிடிக்கப் புகுகிற அன்றைக்கு
நீ என்னை காக்க வேண்டும் —.

குறிப்பு:—சிவபிரான் மற்றவர்களைப்போலன்றி, ப்ரஹ்மபாவனை தலையெடுத்தபோது "நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மானும்" என்னும்படி தத்துவத்தை உண்மையாக உணருகைக்கீடான ஸூக்ஷ்மஞான முடையனாதலால், ஒற்றை என்று சிறப்பித்துக் கூறப்பட்டனன். ஒன்று x விடையன், ஒற்றை விடையன்; "ஐயீற் றுடைக் குற்றுகர முமுளவே" என்பது நன்னூல். இனி, ஒற்றை என்பதை விடைக்கு அடைமொழியாக்கலுமாம். முதலடியில், உன்னை என்றது வார்த்தைப்பாடு. "யஸ்யாவதாரரூபாணி ஸமர்ச்சந்தி திவௌகஸ: அபஶ்யந்த: பரம் ரூபம் தஸ்மை விஷ்ணவே நம:" என்று விஷ்ணுவினுடைய பரமமான ஸ்வரூபத்தைப் பிரமனாகியதானும்சிவனும் மற்றுமுள்ள தேவர் முனிவர்களும் அறியார்களென்னு மிடத்தைப் பிரமன்றானே சொல்லிவைத்தானிறே. [முற்றவுலகெல்லாம் நீயேயாகி.] எம்பெருமானுக்குத் தன்னையொழிந்த ஸமஸ்தவஸ்துக்களும் ப்ரகார பூதங்கள்; எம்பெருமான் அவற்றுக்கு ப்ரகாரி என்றபடி: "ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:" "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்ற சுருதிவாக்கியங்களுங் காணத்தக்கன.

[மூன்றெழுத்தாய.] அகார, உகார, மகாரங்களாகிற [ஓம்] பிரணவத்துக்கு அர்த்தமாயிருப்பவன் என்க. "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" என்றது காண்க. இம்மூன்றெழுத்துகளில் முதலாவதான அகாரத்தின் ப்ரக்ருத்யர்த்

தமான ஸர்வகாரணத்வத்தைச் சொல்லுகிறது—முதல்வனே! என்று. ஓ, என்று இரக்கக்குறிப்புமாம். (மூன்றாமடியில்,) இவன்+கு, இவற்கு, இடையில் உகரச்சாரியைபெறில், இவனுக்கு என்றாகும். அற்றைக்கு – அப்போதைக்கு. — ... ... ... ... (ச)

பைய ரவின ணைப்பாற் கடலுள் பள்ளிகொள் கின்ற பரம மூர்த்தி
உய்ய வுலகு படைக்க வேண்டி யுந்தியில் தோற்றி னாய்நான் முகனை
வைய மனிசரைப் பொய்யென் றெண்ணிக் கால னையுமுட னேபடைத்தாய்
ஐய வினியென்னைக் காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளி யானே. (ரு)

பால்கடலுள் - திருப்பாற் கடலில்
பை அரவு இன் அணை - (பரந்த) படங்களையுடைய திருவனந் தாழ்வானாகிற இனிய படுக்கையின் மீது
பள்ளி கொள்கின்ற - திருக்கண்வளர்ந்தருளா நின்ற
பரம மூர்த்தி - பரம சேஷியானவனே!
உய்ய - (எல்லாவுயிர்களும் தன்னை அடைந்து) உஜ்ஜீவிக்கும்படி
உலகு-லோகங்களை
படைக்க வேண்டி-ஸ்ருஷ்டிக்க விரும்பி
உந்தியில் - திருநாபிக் கமலத்தில்
நான்முகனை - பிரமனை
தோற்றினாய் - தோற்றுவித்தவனே!
வையம் - பூமியிலுள்ள
மனிசர் - மநுஷ்யர்கள்
பொய் என்று எண்ணி - (நமதுகட்டளையாகிய சாஸ்த்ரமரியாதையில் நிற்க மாட்டாது) க்ருத்ரிமராய் நடப்பவர்களென்று நினைத்து
(அந்த விபரீதாசரணத்துக்குத் தக்க தண்டம் நடத்துதற்காக)
காலனையும் - யமனையும்
உடனே - கூடவே
படைத்தாய்-ஸ்ருஷ்டித்தருளினவனே!
ஐய-பரம பந்துவானவனே!
அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே!-; இனி என்னை காக்க வேண்டும் —.

குறிப்பு:—[பரமமூர்த்தி.] "மூர்த்தி சப்தம் - ஐச்வர்யத்துக்கும் விக்ரஹத்துக்கும் வாசகமாகையாலே, இவ்விடத்தில் ஐச்வர்யவாசகமாய்க்கொண்டு, சேஷித்வத்தைச் சொல்லுகிறது" என்ற வியாக்கியானவாக்கிய மறியத்தக்கது. மூன்றாமடியில், மனிசரை என்றவிடத்து, ஐ - அசை; அன்றி, உருபுமயக்கமுமாம். "பொய்யர்" என்கிறவித்தைப் பொய் என்று குறைத்துக்கிடக்கிறது. "ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா" என்றபடி தனதுகட்டளையான சாஸ்த்ரங்களைமீறி ஸ்வேச்சையாகக் கபடநடைகளில் ஒழுகுபவர்கள் இவ்வுலகத்தவர்கள் என்று எம்பெருமான் திருவுள்ளத்திற்கொண்டு, அவ்வக்காலங்களில் அவரவர்கள் செய்யும் பாபங்களுக்கீடாகத் தண்டம் நடத்தியாகிலும் இவ்வுலகைக்காக்கவேணுமென்ற கருணையினால், சிக்ஷைக்குக்கடவனான யமனையும் படைத்தருளினமை மூன்றாமடியில் விளங்கும். காலன் - வடசொல். தோற்றினாய், படைத்தாய் - விளி. ... .... ... ... (ரு)

தண்ணன வில்லை நமன்றமர்கள் சாலக் கொடுமைகள் செய்யா நிற்பர்
மண்ணொடு நீரு மெரியுங் காலும் மற்றுமா காசமு மாகி நின்றாய் [டென்றும்
எண்ணலாம் போதேயுன் நாம மெல்லா மெண்ணினே னென்னைக் குறிக்கொண்
அண்ணலே நீயென்னைக் காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளி யானே.()

மண்ணொடு - பூமியும்
நீரும் - ஜலமும்
எரியும் - தேஜஸ்ஸும்
காலும் - வாயுவும் [ளும்)
ஆகாசமும்—ஆகாசமும் (ஆகிறபஞ்சபூதங்க
மற்றும் ஆகி நின்றாய் } மற்றுமுள்ள பதார்த்தங்களுமாய் நின்றவனே!
அண்ணலே - ஸர்வ ஸ்வாமியானவனே!
அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே;—
நமன் தமர்கள்—யமகிங்கரர்கள்
தண்ணனவு இல்லை - இரக்கமற்றவர்களா [ய்க் கொண்டு
சால — மிகவும்
கொடுமைகள் - கொடிய சிக்ஷைகளை
செய்யா நிற்பர் — பண்ணுவர்கள்;
(அப்படிப்பட்ட சிக்ஷைகளுக்கு ஆளாகா தொழியும்படி,)
எண்ணலாம் போதே—அநுஸந்திக்கைக்கு உ [ரிய காலத்திலேயே
உன் நாமம் எல்லாம் } உன்னுடைய திருநாமங்களையெல்லாம்
எண்ணினேன் - அநுஸந்தித்தேன்;
(ஆதலால்,)
என்னை - அடியேனை
நீ — நீ
குறிக் கொண்டு- திருவுள்ளத்திற் கொண்டு
என்றும் - எப்போதும்
காக்க வேண்டும்—ரக்ஷித்தருள வேணும்.

குறிப்பு:—தண்ணனவு - குளிர்ச்சி; 'தண்ணெனவு' என்றலுந்தகுதி. ஈர நெஞ்சு அற்றவர்களென்றவாறு. அன்றி, 'தண்ணனவு' என்று - தணிதலைச் சொல்லிற்றாய் [தணிதல்—விராமம்.] நலிகையில் ஓழிவில்லாமையைக் கூறிய வாறுமாம். சால - உரிச்சொல். [மண்ணொடு இத்தியாதி.] இவ்வொற்றுமை - ப்ரகாரப்ரகாரிபாவ நிபந்தநம். ... .... ... (௬)

செஞ்சோல் மறைப்பொரு ளாகி நின்ற தேவர்கள் நாயக னேயெம் மானே
எஞ்சலி லேன்னுடை யின்ன முதே யேழுல குமுடை யாயென் னப்பா
வஞ்ச வுருவின் நமன்ற மர்கள் வலிந்து நலிந்தென் னைப்பற் றும்போ
தஞ்சல மென்றென்னைக் காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளி யானே (௭)

செம் சொல்-ருஜுவான சொற்களையுடைய
மறை—வேதத்துக்கு
பொருள் ஆகி நின்ற } அர்த்தமாயிருப்பவனும்
தேவர்கள் - நித்ய ஸூரிகளுக்கு
நாயகனே - தலைவனு மானவனே!
எம் மானே - எம் பெருமானே!
எஞ்சல் இல் - குறைவற்ற
இன் — பரம போக்யமான
என்னுடை அமுதே—எனக்கு (ரஸ்யமான) அம்ருதம் போன்றவனே!
ஏழ் உலகும் உடையாய் } உலகங்களுக் கெல்லாம் ஸ்வாமியானவனே!
என் அப்பா—எனக்கு உபகாரகனானவனே!
அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே!-;
வஞ்சம் — வஞ்சனை பொருந்திய
உருவின் - ரூபத்தை யுடையரான
நமன் தமர்கள் - யமகிங்கரர்கள்
என்னை - அடியேனை
வலிந்து - பலாத்கரித்து
நலிந்து - ஹிம்ஸித்துக் கொண்டு
பற்றும் போது - பிடிக்கும் போது
அஞ்சல் என்று-'அஞ்ச வேண்டா' என்று
என்னை காக்க வேண்டும்—.

குறிப்பு:—[செஞ்சோல் மறைப்பொருளாகி நின்ற.] "வேதைஶ்ச ஸர்வை-ரஹமேவ வேத்ய:" "ஸர்வவேதாய ஜ்ஞேயோ ரத்நம்" என்பன காண்க. அமுதத்திற்கு எஞ்சலில்லாமையாவது - "அப்பொழுதைக்கப் பொழுதென்னாராவமுதமே" என்றபடி அநுபவிக்க அநுபவிக்கக் குறைவின்றிப் பணைக்கை. வஞ்சவுருவின் நமன்றமர்கள்—தங்கள் வரவு ஒருவற்குந் தெரியாதபடி ரூபத்

தை மறைத்துக்கொண்டு வரும் யமபடர்கள் என்றபடி. வஞ்சம் - வஞ்சனா. அஞ்சல்— அஞ்சு என்ற வினைப்பகுதியடியாப் பிறந்த எதிர்மறை யொருமை யேவல்: அம் - சாரியை. ... ... ... ... (எ)

நானேது முன்மாய மொன்ற றியேன் நமன்றமர் பற்றி நலிந்திட் டிந்த
ஊனே புகேயென்று மோதும் போதங் குன்னைநா னொன்று நினைக்க மாட்டேன்
வானேய் வானவர் தங்க ளீசா மதுரைப் பிறந்தமா மாய னேயென்
ஆனாய் நீயென்னைக் காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளி யானே. (அ)

வான் ஏய் - பரமபதத்திற் பொருந்தியிரா [நின்ற
வானவர் தங்கள்-நித்ய முக்தர்களுக்கு
ஈசா-தலைவனே!
மதுரை - திருவடமதுரையில்
பிறந்த - அவதரித்த
மா மாயனே - மிக்க ஆச்சரிய சக்தியையு [டையவனே!
என் ஆனாய் - (பாகனுக்கு வசப்பட்டொழு குகின்ற) யானைபோல் எனக்கு வச [ப்பட்டிருப்பவனே!
அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே;
நான் – அடியேன்
உன் மாயம் - உன் மாயைகளில்
ஏது ஒன்றும் - யாதொன்றையும்
அறியேன் - அறியமாட்டேன்;
நமன் தமர் - யமகிங்கரர்கள்
பற்றி – (என்னைப்) பிடித்து
நலிந்திட்டு - (இந்தச் சரீரத்தோடே) பண் ணவேண்டிய ஹிம்ஸைகளை யெல் [லாம் பண்ணிவிட்டு, (பின்பு,)
ஊன் } 'இந்த
புகு என்று } [ஸ்ரீரே பிரவேசி' என்று
மோதும் போது - அடிக்கும்போது
அங்கு - அவ்விடத்தில்
உன்னை நான் ஒன்றும் நினைக்க மாட்டே [ன்;—
நீ என்னை காக்க வேண்டும்.—

குறிப்பு:—"அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன்" என்றும் பாட முண்டு. "நானேதுமுன்மாய மொன்றறியேன்" என்ற விடத்தில், (கீழ் இரண் டாம்பாட்டில்,) "போமிடத்துன் திறத்தெத்தனையும் புகாவண்ணம் நிற்ப தோர் மாயைவல்லே" என்றதை நினைக்க. இந்த ஊன்—விட்ட சரீரத்திற்காட் டில் பிரவேசிக்கிற சரீரத்தின் கொடுமையைச் சுட்டிக்காட்டுகிறது, இந்த என் று. நரகத்தில் அதி தீவ்ரமான வேதனைகளை அநுபவிப்பதற்காக யமகிங்கரர் களினால் பூட்டப்படும் சரீரத்திற்கு 'யாதநாசரீரம்' என்று பெயர் அறிக. ஊனே, புகே – ஏ இரண்டும் இசைநிறை என்னலாம். (அ)

குன்றெடுத் தாநிரை காத்த வாயா கோநிரை மேய்த்தவ னேயெம் மானே
அன்று முதலின் றறுதி யாக வாதியஞ் சோதி மறந்த றியேன்
நன்றுங் கொடிய நமன்ற மர்கள் நலிந்து வலிந்தென் னைப்பற் றும்போ
தன்றங்கு நீயென்னைக் காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளி யானே. (கூ)

குன்று-கோவர்த்தநமலையை
எடுத்து - (குடையாக) எடுத்து (ப்பிடித்து)
ஆ நிரை - பசுக்களின் திரளை
காத்த - ரக்ஷித்தருளின
ஆயா - ஆயனே! [- கோபாலனே!]
கோ நிரை - மாடுகளின் கூட்டத்தை
மேய்த்தவனே - மேய்த்தருளினவனே!
எம்மானே - எனக்கு ஸ்வாமியானவனே!
அரங்கத்து அரவு அணைப் பள்ளியானே;-
அன்று முதல் - (உனக்குப் பல்லாண்டு பாடு மவனுக்கிக் கொண்ட) அந்நாள் [தொடங்கி

இன்று அறுதி ஆக - இன்றளவாக
ஆதி - ஸர்வகாரணபூதனான உன்னுடைய
அம் சோதி - விலக்ஷண தேஜோரூபமான [திவ்யமங்கள விக்ரஹத்தை
மறந்து அறியேன் - (அடியேன்) மறந்ததில்லை;
நன்றும் கொடிய - மிகக்கொடுமை பொருந்திய
நமன் தமர்கள் - யமகிங்கரர்கள்
என்னை - என்னை
நலிந்து - ஹிம்ஸித்து
வலிந்து - பலாத்கரித்து
பற்றும்போது அன்று - பிடிக்குங்காலமாகிய அத்தருணத்தில்
அங்கு - அவ்விடத்தில்
நீ என்னை காக்க வேண்டும்:—

குறிப்பு:—அன்று முதல்—கர்ப்பவாஸம் முதலாக என்றுங்கொள்வர். அறுதி—முடிவு. "அன்றுமுதலின்றறுதியா" என்பது அத்யாபகபாடம்; அது செய்யுளின்பத்துக்கு மிகமாறுபாடாம். அன்றுமுதல் இன்றளவாக ஆதியஞ்சோதியை மறந்தறியேன் என்றுநின்றுகொண்டு, "நன்றுங்கொடியநமன்றமர்கள்நலிந்து வலிந்தென்னைப்பற்றும்போதன்றங்குநீயென்னைக்காக்கவேண்டும்' என்றால் விருத்தமன்றோவென்னில்; அதிசங்காமூலமான கலக்கத்தினால் வந்த அச்சத்தாலே இங்ஙனே வேண்டுகிறபடி. (இத்திருமொழியின் அவதாரிகையில் இதுவிரியும்.) "பற்றும்போது அங்கு என்னைக் காக்கவேண்டும்" என்றிவ்வளவே போதுமாயிருக்க, அன்று என்று அதிகமாக ஒரு சொல் சொன்னது அவ்வவஸ்தையின் கொடுமையைக் கருதியாமென்க. கோ—மொ. (௯)

மாய வனைமது சூத னனை மாத வனைமறை யோர்க ளேத்தும்
ஆயர்க ளேற்றினை யச்சு தனை யரங்கத் தரவணைப் பள்ளி யானை
வேயர் புகழ்வில்லி புத்தூர் மன் விட்டுசித் தன்சொன்ன மாலை பத்தும்
தூய மனத்தன ராகி வல்லார் தூமணி வண்ணனுக் காளர் தாமே. (௧௦)

மாயவனை - ஆச்சரியசக்தியை யுடையவனும்
மது சூதனனை - மது என்ற அசுரனை ஒழித்தருளினவனும்
மாதவனை - பெரிய பிராட்டியார்க்கு வல்லபனும்
மறையோர்கள் - வைதிகர்களினால்
ஏத்தும் - துதிக்கப்படுமவனும்
ஆயர்கள் ஏற்றினை - இடையர்களுக்குத்தலைவனும்
அச்சுதனை - (அடியாரை ஒருநாளும்) நழுவவிடாதவனும்
அரங்கத்து - கோயிலில்
அரவு அணை - சேஷசயநத்தில்
பள்ளியானை - கண்வளர்ந்தருள்பவனுமான எம்பெருமானை நோக்கி
வேயர் - தாம் திருவவதரித்த குடியிலுள்ளாரெல்லாராலும்
புகழ் - புகழப்பட்டவரும்
வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு
மன் - நிர்வாஹகருமான
விட்டு சித்தன் - பெரியாழ்வார்
சொன்ன - அருளிச்செய்த
மாலை - சொல்மாலையான
பத்தும் - இப்பத்துப்பாசுரங்களையும்
தூய மனத்தனர் ஆகி - நிர்மலமானநெஞ்சையுடையராய்க்கொண்டு
வல்லார் - ஓதவல்லவர்கள்
தூ மணி வண்ணனுக்கு - பழிப்பற்ற நீலமணிபோன்ற வடிவையுடைய எம்பெருமானுக்கு
ஆளர் - அடிமைசெய்யப் பெறுவர்.

[தாம், ஏ - அசை.]

குறிப்பு:—இப்பாட்டால், இத்திருமொழி கற்பார்க்குப்பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார். மேன்மைக்கு "அமரரேறு" என்பது போல, நீர்மைக்கு "ஆயர்களேறு" என்பதாம். நம்பூருவாசாரியர்கள் பெரியபெருமாளைக் கிருஷ்ணாவதாரமாக அநுஸந்தித்துப் போருவர்கள்; "கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் என்னுள்ளங் கவர்ந்தானை, அண்டர் கோனணியரங்கன் என்னமுதினை" என்றார் திருப்பாணாழ்வார். திருப்பவளத்தைமோந்துபார்த்தால் இப்போதும் வெண்ணெய் மணக்கும் என்றருளிச் செய்வர். "[illegible]" என்று - யசோதைப்பிராட்டி பின்னைப் பணியாகச் சாத்தின திருவாபரணம் இப்போதும் பெரிய பெருமாள் திருக்கழுத்திற் கிடக்கிறதென்று நேரில்கண்டநுபவித்து அருளிச்செய்தார் பட்டரும்.

பெரியாழ்வார் அவதரித்தது - வேயர்குலத்தில்; "வேயர்தங்கள்குலத்துதித்தவிட்டுசித்தன்" என்பர்மேல். தூயமனத்தனராகி வல்லார்-அநந்யப்ரயோஜநராக ஓதவல்லவர்கள் என்றபடி; இதனால், சோறுகூறைகளையே முக்கியபிரயோஜநமாகநச்சி ஓதுமவர்களை வியாவர்த்திக்கின்றதென்க. (௧௦)

அடி:—துப்பு சாமிடம் எல்லை ஒற்றை பை தண்ணனவு செஞ்சொல் நான் குன்றுமாய வாக்கு.

பத்தாந்திருமொழி உரை முற்றிற்று.

———

நான்காம் பத்து உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து - முதல்திருமொழி.

### வாக்குத் தூய்மை.

—oo:o:oo—

**அவதாரிகை:**—பெரிய பெருமாளுடைய போக்யதையில் தமது மனமொழி மெய்களாகிற கரணத்ரயமும் மேல்விழுகிறபடியை அருளிச்செய்கிறார், இத்திருமொழியில்.

**வாக்குத் தூய்மை யிலாமையி னாலே மாதவா வுன்னை வாய்க்கோள்ள மாட்டேன்**
**நாக்கு நின்னையல் லாலறி யாது நான தஞ்சுவ னென்வச மன்று**
**மூர்க்குப் பேசுகின் றானிவ னென்று முனிவா யேலுமென் நாவினுக் காற்றேன்**
**காக்கை வாயிலுங் கட்டுரை கோள்வர் கார ணாகரு ளக்கோடி யானே. (௧)**

மாதவா - ச்ரிய: பதியானவனே!
காரணா - (உலகங்கட்கெல்லாம்) ஆதிகாரணமானவனே!
கருளன் - பெரிய திருவடியை
கொடியானே - த்வஜமாகவுடையவனே!
வாக்கு - (என்னுடைய) வாய்மொழிக்கு
தூய்மை இலாமையினாலே - பரிசுத்தி இல்லாமையால்
உன்னை - (ஹேயப்ரதிபடனான) உன்னை
வாய் கொள்ள மாட்டேன் - வாய் கொண்டு துதிக்க யோக்யதை அற்றவனாயிராநின்றேன்;
(வெறுமனே கிடப்போமென்று பார்த்தாலும்,)
நாக்கு - (ரஸமறிந்த எனது) நாக்கானது
நின்னை அல்லால் - உன்னை யொழிய (மற்றொருவரை
அறியாது-(வாய்க்கொள்ள) அறியாது;
அது-அசுத்தமான நாக்கு இங்ஙனே உன் பக்கல் ஈடுபடா நின்றதைக் குறித்து
நான் அஞ்சுவன் - நான் அஞ்சுகின்றேன்;
(அது) - அந்த நாக்கானது
என் வசம் அன்று - எனக்கு வசப்பட்டு நிற்பதன்று;
இவன் மூர்க்கு பேசுகின்றான் என்று - "இவன் மூடர் பேசும் பேச்சைப் பேசாநின்றான்" என்று திருவுள்ளம் பற்றி
முனிவாய் ஏலும் - நீ சீறியருளினாலும்
என் நாவினுக்கு ஆற்றேன் - என்னுடைய நாக்கின் பதற்றத்தை நான் ஸஹிக்க வல்லேனல்லேன்;
காக்கை வாயிலும்-காக்கையினுடைய வாயிலுண்டான சொல்லையும்
கட்டுரை - நற்சொல்லாகக் கொள்வர்-(அறிவுடையார்) கொள்ளுவர்.

குறிப்பு:—"எம்பெருமான் ஸந்நிதியிற் பொய் சொல்லுகை, க்ஷுத்ர ப்ரயோஜநங்களை விரும்புகை, க்ஷுத்ரர்களைப் புகழ்கை முதலியவையாகிற அசுத்திகள் என்னுடைய வாய் மொழிக்கு அளவற்றிருப்பதனால், அவ்வாய்மொழிகொண்டு உன் பெருமைகளைப் புகழுகைக்கு நான் அர்ஹனல்லனென்று ஒழிந்தாலும், நாக்கு ரஸமறிந்ததாகையால், உன்னைத்தவிர்த்து மற்றொருவரை வாயிற்கொள்ள அறியமாட்டாது" என்று எம்பெருமானை நோக்கி ஆழ்வார் அருளிச் செய்ய; அதுகேட்டு எம்பெருமான், "ஆழ்வீர்! ஆகில் நீரும் அந்த நாக்குடன்கூடிச் சொல்லும்" என்று நியமிக்க; அதற்கு ஆழ்வார் "நாக்கின் தோஷத்தை நினைத்து நான் அஞ்சாநின்றேனே" என்ன; அதற்கு எம்பெருமான், "ஆழ்வீர்! நாக்கு ரஸமறிந்ததாகை

யாலே மேல்விழாநின்றது; அதன் தோஷத்தை அறிந்துள்ள நீர் அது மேல் விழாதபடி அதை உமக்கு வசப்படுத்தி நியமித்துக்கொள்ளும்" என்ன; அதுகேட்டு ஆழ்வார், "அந்த நாக்கு எனக்கு வசப்பட்டிருந்தாலன்றோ அதை நான் நியமிக்கவல்லேன்! அதுதான் உனக்கு வசப்பட்டுவிட்டதே" என்ன; அதற்கு எம்பெருமான், "ஆழ்வீர்! சால அழகிதாயிருந்தது; 'உன்னைவாய்க் கொள்ளமாட்டேன்' என்கிறீர், 'நாக்கு நின்னையல்லா லறியாது' என்கிறீர், 'நானதஞ்சுவன் என்வசமன்று' என்கிறீர், இவ்வாக்கியங்கள் ஒன்றோடொன்று சேருவது எங்ஙனே? ஆராய்ந்துபார்த்தால், நீர்பேசும் பேச்சுக்களெல்லாம் மூர்க்கர்பேசும் பேச்சாயிராநின்றன' என்ன; அதற்கு ஆழ்வார், "அது உண்மையே; என்னுடைய பேச்சுக்கள் மூர்க்கப்பேச்சுக்களாகத் தோற்றும்; அதனால் உனக்குச் சீற்றமும் பிறக்கும்; ஆகிலும் அச்சீற்றத்தை ஒருவாறு என்னால் ஸஹிக்கமுடியும்; இந்நாக்குப் படுத்துகிறபாடு அப்பப்ப! ஸஹிக்கவேமுடியவில்லையே" என்ன; அதற்கு எம்பெருமான், "அந்நாக்கைக்கொண்டு என்னை நீர் புகழத்தொடங்கினீராகில், அது எனக்கு அவத்யாவஹமாய்த் தலைக்கட்டுமே!" என்ன; அதற்கு ஆழ்வார் "எம்பெருமானே! மூர்க்கர் பேசும் பாசுரங்கள் அறிவுடையார்க்குக் குற்றமாகத் தோற்றுதவளவேயன்றிக் குணமாகவுந் தோற்றும்; காக்கை ஓரிடத்திலிருந்துகொண்டு தனக்குத் தோன்றினபடி கத்திவிட்டுப் போனாலும், அதனை அறிவுடையார் கேட்டு, 'இது நமக்கு (உறவினர் வரவாகிற) நன்மையைச் சொல்லாநின்றது' என்று கொள்ளக் காணாநின்றோமிறே; அதுபோல அடியேன் நாவினுக்கு ஆற்றமாட்டாமல் வாய் வந்தபடி சிலவற்றைப் பிதற்றினாலும் அவற்றை நீ நற்றமாகவே கொள்ள வேணும்' என்றருளிச்செய்ய; எம்பெருமான், "ஆழ்வீர்! அப்படியாகிலும் குற்றத்தை நற்றமாகக் கொள்ளவேண்டியகடமை எனக்கு என்ன உண்டு?" என்று கேட்க; [காரணம்] அது கேட்டு ஆழ்வார், "அப்படியா! நன்று சொன்னாய்; உலகங்களை யெல்லாம் படைத்தவனல்லையோ நீ? ரக்ஷிக்கிறேனென்று கொடிகட்டிக் கிடக்கிறாயில்லையோ நீ?" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாட்டு.

வாக்கு - வாக் என்ற வடசொல் திரிபு. மூர்க்கு - 'மூர்க்ஷ' என்றவடசொல் லடியாப் பிறந்தது; மூடத்தனம் என்பது பொருள். மூனிதல் - கோபித்தல். "நாவினுக்கு ஆற்றேன்" என்றது - நாவினுடையபதற்றத்துக்கு ஆற்றேன் என்றபடி. காக்கைவாயிலும் - காக்கைவாயில் நின்றும்; ஐந்தாம் வேற்றுமை. கட்டுரை - ஏற்றசொல், பொருளுள்ள சொல். கருளன் - ஶரண்யஃ என்ற வடசொல்விகாரம். ... ... ... (க)

சழக்கு நாக்கொடு புன்கவி சொன்னேன் சங்கு சக்கர மேந்துகை யானே
பிழைப்ப ராகிலும் தம்மடி யார்சொல் பொறுப்ப துபெரி யோர்கட னன்றே [ரு
விழிக்குங் கண்ணிலேன் நின்கண்மற் றல்லால் வேறொ ருவரோ டென்மன மூற்
றுழைக்கோர் புள்ளி மிகையன்று கண்டா யூழி யேழுல குண்டுமிழ்ந் தானே(உ)

சங்கு சக்கரம் ஏந்து கையானே!—;
ஊழி - பிரளய காலத்தில்
ஏழ் உலகு - எல்லா வுலகங்களையும்
உண்டு—திருவயிற்றில் வைத்துநோக்கி
(பின்பு பிரளயம் கழிந்தவாறே,)
உமிழ்ந்தானே - (அவற்றை) வெளிப்படுத் [தினவனே!
சழக்கு நாக்கொடு—பொல்லாத நாக்கினால்
புன் கவி - அற்பமான பாசுரங்களை
சொன்னேன் - நான் சொன்னேன்;
பிழைப்பர் ஆகிலும்-(தாஸபூதர்கள்) பிழை [செய்தார்களே யாகிலும்
தம் அடியார் - தமக்கு அடிமைப்பட்ட அ [வர்களுடைய
சொல் - சொல்லை
பொறுப்பது - பொறுத்தருளுகை
பெரியோர் கடன் அன்றே } பெருந்தன்மை யுடையவர்களுக்குக் கடமை [யன்றோ?
நின் கண் அல்லால் - உன்னுடைய கடா [க்ஷமொழிய
மற்று விழிக்கும் கண் இலேன் } வேறொருவருடைய கடாக்ஷத்தை(ரக்ஷகமாக) [உடையேனல்லேன்;
(அன்றியும்,)
வேறு ஒருவரோடு - மற்று ஒருவர் பக்கலி [லும்
என் மனம்—எனது நெஞ்சானது
பற்று - பொருந்த மாட்டாது;
உழைக்கு - புள்ளிமானுக்கு
ஓர் புள்ளி மிகை அன்று கண்டாய் } ஒரு புள்ளி (ஏறுவது) குற்றமன்றன்றோ?

குறிப்பு:—“எம்பெருமானே! நீ கையுந்திருவாழியுமாயிருக்கிற இருப்புக்கண்ட நான் உன்னைக் கவிபாடாதிருக்கமாட்டாமல் எனது பொல்லாத நாக்கினால் சில அற்பமான பாசுரங்களைப்பாடினேன்” என்று ஆழ்வார் அருளிச்செய்ய: அதற்கு எம்பெருமான் “ஆழ்வீர்! நமது பெருமையையும் உமது சிறுமையையும் பார்த்தால், இங்ஙனே பாசுரம் பேசவும் உமக்கு யோக்யதையுண்டோ?” என்ன; அதற்கு ஆழ்வார், “அநந்யார்ஹசேஷபூதர்கள் பேசும் பாசுரம் அவத்யாவஹமாயிருந்தாலும் அதனைப் பொறுக்கவேண்டிய கடமை பெரியோர்க்கு உளதன்றோ?” என்ன; அதுகேட்டு எம்பெருமான், “ஆழ்வீர்! அப்படி நான் பொறுக்கும்படி நீர் அநந்யார்ஹசேஷபூதரோ?” என்று கேட்க; அதற்கு ஆழ்வார், “உன்னுடைய கடாக்ஷமொழிய மற்றொருவருடைய கடாக்ஷத்தையும் நான் ஒரு பொருளாக மதிப்பவனல்லேன்; உன்னைப் போல் ரக்ஷகனும் இனியனுமானவன் மற்றொருவன் உண்டாகிலும், உன்னிடத்தில் எனக்குள்ள தாஸ்யம் குணமடியாகப் பிறந்ததன்றி ஸ்வரூபப்ரயுக்தமானதனால், அவர்களிடத்து என் மனம் பொருந்தாது” என்ன; அதற்கு எம்பெருமான், “உமக்குப் புறம்பு போக்கில்லையாகில் ஆயிடுக; பலகுற்றங்களுக்குக் கொள்கலமான உம்மைக் கைப்பற்றினால் அது எனக்கு அவத்யாவஹமாகாதோ?” என்ன; அதுகேட்டு ஆழ்வார், “எம்பெருமானே! புள்ளிமானுக்கு உடம்பில் ஒரு புள்ளி ஏறினால் என்? குறைந்தால் என்? எல்லா உயிர்களுடையவும் அபராதங்களைப் பொறுப்பதற் கென்றே காப்புக்கட்டிக் கொண்டிருக்கிற உனக்கு என் னொருவனுடைய அபராதத்தைப் பொறுத்தருளுகை அவத்யாவஹமாய் விடப்போகிறதோ?” என்ன; அதற்கு எம்பெருமான், “இப்படி நான் அங்கீகரித்தவிடம் உண்டோ?” என்று கேட்க; ஆழ்வார், “ஸம்ஸாரிகளில் உனக்கு அபராதம் பண்ணாதிருப்பார் யாரேனுமுண்டோ? அவர்களது அபராதங்களைப் பாராதே அவர்களை நீவயிற்றில் வைத்துக் காத்தருளினவனல்லையோ? அப்படியே அடியேனையும் அங்கீகரித்தருளவேணும் என்பதாய்ச்செல்லுகிறது, இப்பாட்டு.

[உழைக்கோர் புள்ளி மிகையன்று கண்டாய்.] உடம்பு முழுவதும் புள்ளிமயமாயிருக்கிற மானுக்கு ஆரோபிதமாக ஒரு புள்ளி ஏறி அதிகமாகத் தோற்றினால், அதனால் அந்த மானுக்கு ஒரு குற்றமுமில்லை; அது போல, அபராதஸஹத்வமேவடிவாயிருக்கிற உனக்கு என்னொருவனுடைய அபராதத்தைப் பொறுப்பதனால் ஒரு குற்றமும் வாராது என்றவாறு. இவ்வகைப்பொருளில், உழையின் ஸ்தானத்தில் எம்பெருமான் நின்றதாகப் பெறலாகும்; அன்றி, அந்த ஸ்தானத்தில் ஆழ்வாரே நின்றதாகவுங் கொள்ளலாம்; புள்ளிமானுக்கு ஒருபுள்ளி அதிகமானால், அதனால் அதற்கொரு குற்றமில்லாத வாறுபோல, அபராதமயனான அடியேனுக்கு ஒரு அபராதமேறினால், அதனால் உன்னுடைய அங்கீகாரத்திற்கு ஒரு குறையுமில்லை காண் என்றவாறும். முன்னர் உரைத்தபடியே வியாக்கியானப் போக்குக்கு ஒக்குமென்க. மிகை – குற்றத்துக்கும் பெயர்; "மிகையே குற்றமுங் கேடுந் துன்பமும், மிகுதியும் வருத்தமுமைம்பொருட்டாகும்" என்பது நிகண்டு. இனி, இங்கு மிகை என்பதற்கு, கேடு என்று பொருள் கொள்ளுதலும் பொருந்துமென்க. ... ... ... ... (௨)

நன்மை தீமைக ளொன்று மறியேன் நார ணுவென்னு மித்தனை யல்லால்
புன்மை யாலுன்னைப் புள்ளுவம் பேசிப் புகழ்வா னன்றுகண் டாய்திரு மாலே
உன்னு மாறுன்னை யொன்று மறியே னோவா தேநமோ நாரணு வென்பன் டாயே
வன்மை யாவதுன் கோயிலில் வாழும் வைட்டணவ னென்னும் வன்மைகண்

திரு மாலே - ச்ரிய: பதியானவனே!
நாரணு என்னும் இத்தனை அல்லால் } 'நாராயணு!' என்று கூப்பிடுகையாகிறஇ[வ்வளவொழிய
நன்மை தீமைகள் ஒன்றும் } (வேறு) நன்மைதீமை ஒன்றையும்
அறியேன் - அறிகிறேனில்லை;
புன்மையால் - (எனக்கு இயற்கையாக உ[ள்ள) அற்பத்தனத்தினால்
உன்னை - உன்னைக் குறித்து
புள்ளுவம் பேசி - வஞ்சகமான சொற்களை[ச் சொல்லி
புகழ்வான் அன்று கண்டாய் } புகழுமவனல்லன் (அடியேன்);
உன்னை - உன்னை
உன்னும் ஆறு - இடைவிடாது ஸ்மரித்து[க் கொண்டிருக்கத்தக்க வழிகளில்
ஒன்றும் - ஒரு வழியையும்
அறியேன் - அறிகிறேனில்லை;
ஓவாதே - (ஒரு நொடிப்பொழுதும்) ஒழிவின்றி [-எப்போதும்]
நமோ நாரணு என்பன் } 'நமோ நாராயணுய' என்று நின்றேன்;
வன்மை ஆவது – (அடியேனுக்கு) மிடுக்கா[வது
உன் கோயிலில் வாழும் வைட்டணவன் என்னும் வன்மை } 'உன்னுடைய கோயிலில் வாழா நின்றுள்ள வைஷ்ணவன்' என்னுமாகாரத்தா[லுண்டான மிடுக்கேயாம்.
[கண்டாய்—முன்னிலையசைச்சொல்.]

குறிப்பு:—"எம்பெருமானே! அடியேன் 'நாராயணு! நாராயணு!' என்று இத்திருநாமத்தையிட்டுக் கூப்பிடுகையாகிற இதொன்றை மாத்திரம் அறிவேனே யொழிய, இத்திருநாமஞ் சொல்லுகை நன்மையாய்த்தலைக்கட்டுகிறதோ, அன்றித்தீமையாய்த் தலைக்கட்டுகிறதோ என்பதையும் நான் அறிகின்றிலேன்" என்று ஆழ்வார் அருளிச்செய்ய; அதற்கு எம்பெருமான், "ஆழ்வீர்! என்ன பயனை விரும்பி நீர் இங்ஙனே திருநாமஞ் சொல்லாநின்றீர்? பிரயோஜநாந்தரபரராய் எனிப்படி கபடம்பேசுகின்றீர்?" என்று

கேட்க; அதுகேட்டு ஆழ்வார், "அப்பனே! பிரயோஜநத்தைப் பேணுகை யாகிற அற்பத்தனத்தினால் நான் 'நாராயணா!' என்று சொல்லி உன்னைக் கபடமாகப் புகழுமவனல்லன் காண்" என்ன; அதுகேட்டு எம்பெருமான், "நீர் ஒரு பிரயோஜனத்தையும் மெய்யே விரும்பினீரில்லை யாகில், மோக்ஷமாகிறபரமபுருஷார்த்ததைத விரும்பி, அது பெறுகைக்கு உறுப்பான வழிகளில் முயலப்பாரீர்" என்ன; அதுகேட்டு ஆழ்வார், "நாரணனே! மோக்ஷப்ராப்திக்குடலாக நிரந்தர ஸ்மரணாதிகள் வேண்டுமென்று சாஸ்திரங்களிற் சொல்லியபடி அடியேன் அநுஷ்டிக்க வல்லவனல்லன்; ஒரு நொடிப்பொழுதும் வாய்மாறாமல் திருவஷ்டாக்ஷரத்தையே அடியேன் அநுஸந்திக்கவல்லேன்; ஒருக்ஷணம் அது மாறினாலும் எனக்கு ஸத்தை குலையுமே" என்ன; அது கேட்டு எம்பெருமான், "ஆழ்வீர்! நீர் சொல்வதெல்லாம் சால அழகிதாயிருந்தது; ஒருக்ஷணம் திருநாமம் சொல்லாதொழியில் ஸத்தை குலையுமென்கிறீர், 'என்வாயாற் சொல்லில் உனக்கு அவத்யாவஹமாகும்' என்றுஞ் சொல்லா நின்றீர்; இதெல்லாம் பெருத்த மிடுக்காயிருந்ததே!" என்ன; அதற்கு ஆழ்வார், "மிடுக்கா? அந்த மிடுக்குக்கு என்ன குறை? உன்னுடைய அபிமாநம் குறைவற்றிருக்கும்படி உன்கோயில் வாசலிலேயே வாழப்பெற்ற வைஷ்ணவன் என்கிற ஆகாரத்தினாலுண்டான மிடுக்குக்குக் குறைவில்லை" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாட்டு. நன்மை—ஸ்வரூபாநுரூபம். தீமை - அவத்யாவஹம். புள்ளுவம் - வஞ்சகம். வைட்டணவன் - வைஷ்ணவ என்றவட சொல்விகாரம். வன்மை—திண்ணிதான அத்யவஸாய மென்றுங்கொள்க. ... ... (௯)

நெடுமை யாலுல கேழு மளந்தாய் நின்ம லாநெடி யாயடி யேனைக்
குடிமை கொள்வதற் கையுற வேண்டா கூறை சோறிவை வேண்டுவ தில்லை
அடிமை யென்னுமக் கோயின்மை யாலே யங்கங் கேயவை போதருங் கண்டாய்
கொடுமைக் கஞ்சனைக் கொன்றுநின் தாதை கோத்த வன்றளைக் கோள்விடுத்
[தானே

நெடுமையால் - (குறியமாணுருவைமாற்றி நெடிக வளர்ந்ததனால்
உலகு ஏழும் - எல்லா வுலகங்களையும்
அளந்தாய் - அளந்தருளினவனே!
நின்மலா - பரிசுத்தனானவனே!
நெடியாய் - (அனைவர்க்கும்) தலைவனானவனே!
கொடுமை கஞ்சனை - கொடிய கம்ஸனை
கொன்று—உயிர்க்கொலை செய்து,
நின் தாதை கோத்த வன் தளை கோள் விடுத்தானே - உனது தந்தையாகிய வஸுதேவருடைய காலில் பூட்டப்பட்டிருந்த வலிய விலங்கின் பூட்டைத் தறித்துப்போகட்டவனே!
அடியேனை - (உனக்கு) அடிமைப் பட்டுள்ள என்னை
குடிமை கொள்வதற்கு - கிங்கரனைக்கொள்வதற்கு
ஐயுற வேண்டா—ஸந்தேஹிக்க வேண்டியதில்லை;
கூறை சோறு இவை - இக்கூறையையுஞ் சோற்றையும்
வேண்டுவது இல்லை - (நான் உன்னிடத்து) விரும்புகிறேனில்லை;
அடிமை என்னும் - அடிமை யென்கிற
அ கோயின்மையாலே - அந்த ராஜகுல மாஹாத்மியத்தினால்
அவை - அக்கூறை சோறுகள்
அங்கு அங்கு - அவ்வவ் விடங்களில்
போதரும் - பெறலாகும்.
[கண்டாய்-முன்னிலையசைச் சொல்.]

குறிப்பு:—நெடுக வளர்ந்த திருவடியினால் அளந்தாய் என்னாமல், "நெடுமையால் அளந்தாய்" என்றது - ஒரு வகைச் சமத்காரமென்க. அவிகாரஸ்வரூபனான தன்னைச் சிறியனாகவும் பெரியனாகவும் ஆக்கிக்கொண்டவிதனால் தனக்கொரு கொத்தையுமில்லை யென்பார், நின்மலா! என்று விளிக்கின்றார். ஐச்வரியத்தை விரும்பின தேவேந்திரனது வேண்டுகோளாற் செய்த உலகளப்பையிட்டு விளித்தது-'அவ்விந்திரனைப்போல் நான் ஐச்வரியத்தை விரும்பி வேண்டுகிறேனில்லை' என்று ஸ்வஸ்வரூபத்தின் வாசியைத் தெரிவித்தவாறும். அன்றி, உனது திருவடிஸ்பர்சத்தில் விருப்பமற்றிருந்தார்தலையிலும் திருவடியை வைத்தருளினநீ, உன் திருவடியையே பரமப்ராப்யமாக ப்ரதிபத்திபண்ணியிருக்கிற அடியேனை ஆட்படுத்திக்கொள்ளாதொழிவது தகுதியன்றென்று உணர்த்துகிறவாறுமாம்.

"திரிவிக்கிரமாபதாநத்தில் அனைவரையு மடிமை கொண்டநீ அடியேனையுமடிமை கொள்ள வேணும்" என்று ஆழ்வார் பிரார்த்திக்க; அதற்கு எம்பெருமான், "உம்முடைய ஸ்வரூபத்தின் உண்மை எனக்கு விளங்கவில்லையே" என்ன; அதற்கு ஆழ்வார், "அடியேனுக்கு ஸ்வாதந்திரியமும் ஸ்வப்ரயோஜநபரத்வமும் உண்டென்று நீ ஸந்தேஹிக்கவே வேண்டியதில்லை. அடியேன் அநந்யப்ரயோஜநன்" என்ன; அதுகேட்டு எம்பெருமான், "நீர் அநந்யப்ரயோஜநன் என்றால், அதை நான் எங்ஙனே ஏற்றுக்கொள்வேன்; நீர் தேஹமுடையவரன்றோ? அத்தேஹத்திற்குத் தாரகமாயுள்ளவற்றில் உமக்கு விருப்பமின்றி யொழியுமோ?" என்ன; அதற்கு ஆழ்வார், "தேஹதாரகமான சோறு கூறை முதலியவற்றை நான் உன்னிடத்துப்பெற விரும்புகிறிலேன்" என்ன; "ஆகில் அவை பெறுவதற்காகச் சில அரசர்களைத் தேடி ஓடுகிறீரோ?" என்று எம்பெருமான் கேட்க; அதற்கு ஆழ்வார், "அவற்றை நான் அபேக்ஷித்துப் பெறவேண்டிய அருமையில்லை, அவற்றுக்காகக் குக்கர்களைத் தேடிநான் ஓடவேண்டியதில்லை; 'உனக்கு நான் அடிமைப்பட்டவன்' என்கிற சிறப்பு என்னிடத்துள்ளதாதலால் ஆங்காங்கு அவரவர்கள் தாமாகவே என்னை அழைத்து அவற்றைத் தந்திடுவர்கள்; ஆகையால் நான் பிரயோஜநாந்தரத்தை நச்சித் திரிபவனல்லன்; அநந்யப்ரயோஜநனே; இனி அடியேனை அடிமைகொண்டருள வேணும்" என்பதாய்ச்செல்லுகிறது, இப்பாட்டு.

இனி, "கூறை சோறிவை வேண்டுவதில்லை" என்பதற்கு, * உண்டியே உடையே உகந்தோடுகின்ற இம்மண்டலத்தவர்களால் விரும்பப்படுகிற கூறையும்சோறும் எனக்குத் தாரகங்களல்லாமையாலே, இவை எனக்கு வேண்டியதில்லை என்று கருத்தாமிடத்து, மூன்றாமடிக்கு வேறுவகையாகப் பொருள் கொள்ள வேணும்; அதாவது;-அடிமை என்னும் அக்கோயின்மையாலே-, அங்கு அங்கு- அந்த அந்தக் கைங்கரியங்களுக்குள்ளே, அவை-அக்கூறை சோறுகள், போதரும்- அந்தர்ப்பவிக்கும்; என்று. இதன் கருத்து; * ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னிவழுவிலா வடிமை செய்கையே எனக்குக் கூறையுடுக்கையும் சோறு உண்கையு மென்கிறார் என்பதாம். "உண்ணுஞ்சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங்கண்ணன்" என்றது இங்கு நினைக்கத்தக்கது.

ஆழ்வார் தம்மை அடிமை கொள்ளுகையாவது - பிரகிருதி ஸம்பந்தத்தையும் ஊழ்வினைத் தொடர்களையும் ஒழித்தருளுகையே யென்பதை, ஈற்றடியிலுள்ள இரண்டு ஸம்போதந வாக்கியங்களினால் ஸூசிப்பிக்கிறார்; கஞ்சனைக்கொன்றது போலப் பிரகிருதி ஸம்பந்தத்தைக் கொல்லவேணும்; தந்தைகாலில் விலங்கையறுத்ததுபோல ஊழ்வினைத்தொடர்களை அறுக்கவேணு மென்றவாறு.

தாதை கோத்தவன்றளைக்கோள் விடுத்தது முன்னும், கஞ்சனைக்கொன்றது பின்னுமாயிருக்க, மாறுபடக்கூறியது - கிரமவிவக்ஷையில்லாமையாலாம்; அன்றி, கண்ணபிரான் திருவவதரித்தருளினவன்றே கம்ஸன் ஜீவச்சவமானமையால் அங்ஙன் கூறக்குறையில்லை யெனினுமாம். தாதை-தாதஃ; இங்குத் தாதை யென்றது, தாய்க்குமுபலக்ஷணம். கோள் - முதனிலை திரிந்த தொழிற் பெயர். "வன்றளை கோள்விடுத்தானே" என்றும் ஓதுவர்.

தேவகியினுடைய அஷ்டமகர்ப்பம் தனக்கு விநாசகமென்றறிந்த கம்ஸனால் விலங்கிட்டுச் சிறைவைக்கப்பட்டிருந்த தேவகி வஸுதேவர்களுடைய கால்விலங்குகள் கண்ணபிரான் அவதரித்தவுடனே இற்றுமுறிந்தொழிந்தமை அறிக. ... ... ... ... ... (ச)

தோட்ட மில்லவ ளாத்தொழு வோடை துடவை யுங்கிண றும்மிவை யெல்லாம்
வாட்ட மின்றியுன் பொன்னடிக் கீழே வளைப்ப கம்வகுத்துக்கொண்டிருந்தேன்
நாட்டு மானிடத் தோடெனக் கரிது நச்சு வார்பலர் கேழலொன் றாகிக் [னே.
கோட்டுமண் கொண்ட கொள்கையி னானே குஞ்சரம் வீழக் கொம்பொசித் தா

கேழல் ஒன்று ஆகி - ஒப்பற்ற வராஹரூபியாய்க்கொண்டு
கோடு - (தனது) கோரப்பல் நுனியில்
மண் கொண்ட-பூமியைத் தாங்குகையாகிற
கொள்கையினானே - ஸ்வபாவத்தை யுடையவனே!
குஞ்சரம் - (குவலயாபீட மென்ற) யானையானது
வீழ - முடியும்படி
கொம்பு-(அதன்) தந்தத்தை
ஒசித்தானே-முறித் தெறிந்தவனே!
தோட்டம்-தோட்டமும்
இல்லவள் - மனைவியும்
ஆ - பசுக்களும்
தொழு - மாட்டுத் தொழுவமும்
ஓடை - குளமும்
துடவையும்-விளை நிலமும்
கிணறும் இவை எல்லாம் - கிணறுமாகிற இவையெல்லா வற்றையும்
வாட்டம் இன்றி-குறைவில்லாமல்
அகம் - அடியேன்
உன் பொன் அடிக்கீழே - உனது அழகிய திருவடியிலே
வளைப்ப வகுத்துக் கொண்டிருந்தேன் - திரள வகுத்துக்கொண்டிரா நின்றேன்;
எனக்கு - (எல்லாம் உன் திருவடியே என்றிருக்கிற) எனக்கு
நாடு மானிடத்தோடு - நாட்டிலுள்ள மநுஷ்யரோடு
அரிது - (ஸஹவாஸம் செய்வது) அஸஹ்யம்;
பலர்-பலபேர்
நச்சுவார் - (இந்த ஸஹவாஸத்தை) விரும்புவர்கள்.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில், தாரகபதார்த்தம் [- சோறு] கைங்கர்யரஸத்தில் அந்தர்ப்பூதமென்றார்; இப்பாட்டில், போஷக பதார்த்தங்களும் உன் திருவடிகளை அநுபவிக்கையாகிற ரஸத்தில் அந்தர்ப்பூதங்களென்கிறார்.

தோட்டம்முதலிய போஷக வஸ்துக்களனைத்தும் உன் திருவடிகளே யென்று அறுதியிட்டிராநின்றேன் என்பது முன்னடிகளின் தேர்ந்த கருத்து. இல்லவள் - வடமொழியில் 'க்ருஹிணீ' என்ற சொல்லின் பொருள் கொண்டது. துடவை - ஸுக்ஷேத்ரம். வளைப்ப + அகம், வளைப்பகம்; தொகுத்தல்விகாரம். தோட்டம் முதலியவற்றைப் பொன்னடிக்கீழ் வளைப்பவகுத்துக்கொண்டிருக்கையாவது - எம்பெருமான் திருவடியை ஏழுவகுப்பாகப் பிரித்து, ஒருவகுப்பைத் தோட்டமாகவும், மற்றொருவகுப்பை இல்லவளாகவும்,..........மற்றொரு வகுப்பைக் கிணறாகவும் பிரதிபத்தி பண்ணுகையேயாம். எம்பெருமானது திருவடியையொழிய வேறொன்றைப் போஷகமாக மதிப்பதில்லை யென்றவாறு.

இனி, முன்னடிகளுக்கு வேறுவகையாகவும் பொருள் கொள்ளத்தகும்; அதாவது;—தோட்டம்.......கிணறுமாகிய இவையெல்லாம், வளைப்பு அகம் - சூழ்ந்திருக்குமிடம், உன் பொன் அடிக்கீழ் - உனது திருவடிநிழலே (என்று), வகுத்துக்கொண்டிருந்தேன் (என்நெஞ்சினால் அத்திருவடியைச்) சூழ்த்துக்கொள்ளாநின்றேன், என்பதாம். உன் திருவடி நிழலையே எல்லாப் பொருளுமாக ப்ரதிபத்திபண்ணி, அத்திருவடியை நெஞ்சினால் வளைத்துக் கொண்டேன் என்பது கருத்து. "உன்பாதநிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்குங் காண்கின்றிலேன்" என்று மேல் அருளிச்செய்வது காண்க. இப்பொருளில், அகம் என்பதற்கு, 'இருப்பிடம்' என்று பொருள். (தொகுத்தல் விகாரமுமில்லை.)

இங்ஙனருளிச்செய்த ஆழ்வாரைநோக்கி எம்பெருமான், "ஆகில் இனி உமக்கு ஒருகுறையுமில்லையே" என்றுகேட்க; அதற்கு ஆழ்வார், "என் அப்பனே! பிறர் பொருள்தாரமென்றிவற்றை நம்பி அலைந்தோடுகின்ற பிராகிருதர்களின் நடுவே எனக்கு இருக்கமுடியவில்லை. இவ்விருப்பை ஒழித்தருளவேணும்" என்றுவேண்ட; அதுகேட்டு எம்பெருமான், "ஆழ்வீர்! நீர் இங்ஙனே வேண்டலாகாது, இவ்வுலகவிருப்பை வேண்டுவார் எத்தனை பேருளர் பாரீர்; அவர்களோடொக்க நீரும் இவ்விபூதியிலேயே இருந்தால் குறையென்?" என்ன; அதற்கு ஆழ்வார், ஜோகோஹிநாநாருசிஃ ஆகையால் பலர் இவ்விருப்பை விரும்பினார்களாகிலும், எனக்குப் *பாய்போடொரு கூறையிலே பயின்றாற்போலிராநின்றது; ஆகையால் இவ்விருப்பை ஒழித்தேயருளவேணும்" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாசுரம்.

ஸம்ஸாரஸாகரத்தினின்றும் அடியேனை எடுத்து, ஸ்வஸ்தாநமான உன் திருவடிகளிற் சேர்த்துக்கொள்ள வல்ல வல்லமையும், அச்சேர்த்திக்கு விரோதியான கருமங்களை யொழித்தருளவல்ல வல்லமையும் உனக்கு உண்டென்பார், "கேழலொன்றாகிக் கோட்டுமண்கொண்ட கொள்கையினானே" என்றும், "குஞ்சரம்வீழக் கொம்பொசித்தானே" என்றும் விளிக்கின்றார்; ஸாஹிவ்ராயஸம்வோயநமென்றபடி. ஹிரண்யாக்ஷனால் பாயாகச் சுருட்டிக்கடலினுள் கொண்டுபோகப்பட்ட பூமியைத் "தானத்தே வைத்தானால்" என்றபடி.. வராஹாவதாரமெடுத்து ஸ்வஸ்தாநத்தில் வைத்தருளியது

போல, அடியேனையும் இப்பிறவிக்கடலினின்று மெடுத்து ஸ்வஸ்தாநமாகிய உன் திருவடிகளில் வைத்தருளவேணும்; கம்ஸனுடைய ஏற்பாட்டுக்கிணங்க வஞ்சனை வகையாற் கொல்ல நினைத்தெதிர்ந்த குவலயாபீடத்தைக் கொன்றருளியவாறுபோல, எனது ஊழ்வினைகளையும் கொல்லவேணுமென வேண்டியவாறு. குஞ்சரம் - வடசொல. "சாவ" என்னாமல், வீழ என்றது - மங்கல வழக்கு; துஞ்ச என்பதுபோல. ... ... ... ... (௫)

**கண்ணா நான்முகனைப் படைத் தானே காரணா கரி யாயடி யேன்நான்**
**உண்ணா நாள்பசி யாவதொன் றில்லை யோவா தேநமோ நார ணாவென்று**
**எண்ணா நாளு மிருக்கெசுச் சாம வேத நாண்மலர் கொண்டுன பாதம்**
**நண்ணா நாளவை தத்துறு மாகி லன்றெ னக்கவை பட்டினி நாளே.** (௬)

காரணா - (லோகஸ்ருஷ்டிக்குக்) காரணமானவனே!
நான் முகனை – பிரமனை
படைத்தானே - (உந்திமேல்) படைத்தருளினவனே!
கண்ணா - கண்ணபிரானே!
கரியாய் – (காளமேகம்போல்) கறுத்தநிறத்தையுடையவனே!
அடியேன் நான் – (உனக்கு) சேஷபூதனான நான்
உண்ணா நாள் - உண்ணாதொழிந்தபோது
பசி ஆவது ஒன்று இல்லை – பசியென்பது ஈஷத்துமுண்டாவதில்லை;
ஓவாதே - இடைவிடாமல்
நமோ நாரணா என்று – 'நமோநாராயணாய' என்று
எண்ணா நாளும் – அநுஸந்திக்கப்பெறாத நாளும்
இருக்கு எசுசாம வேதம் – ருக், யஜுஸ், ஸாமம் என்கிற வேதங்களை (ச்சொல்லிக்கொண்டும்)
நாள் மலர் கொண்டு - அப்போதலர்ந்த [புதிய] பூக்களைஎடுத்துக்கொண்டும் (வந்து)
உன பாதம் – உன் திருவடிகளை
நண்ணா நாள் – கிட்டப்பெறாதநாள்களும்
அவை - (எனக்கு) அந்த உண்ணாதொழிந்த நாள்களாம்;
அவை-அந்த வேதாநுஸந்தாநமும், புஷ்பஸமர்ப்பணமும்
தத்துறும் ஆகில் – தட்டுப்படுமாகில்
அன்று - அந்த நாளானது
எனக்கு - எனக்கு
பட்டினி நாள் - உண்ணாதொழிந்த நாளாகும்.

குறிப்பு:—'தாரகபோஷகங்களெல்லாம் எம்பெருமானது திருவடிகளே' என்று கீழ் அருளிச்செய்ததை இப்பாட்டில் விசதமாக்கி நிகமித்தருளுகிறார். இவ்வுலகத்திலுள்ளாரனைவரும் ஒரு பொழுது உண்ணாதொழிந்தால், பசியினால் மிகவுந்தளர்ந்து வருந்துவர்கள்; அடியேனுடைய இயல்வு அங்ஙனொத்ததன்று; திருமந்திரத்தை அநுஸந்திக்கப் பெறாத நாளும், * தொழுது முப்போது முன்னடி வணங்கித்தூமலர் தூய்த்தொழுது ஏத்தப்பெறாத நாளுமே அடியேனுக்கு உண்ணாநாள்; இவ்விரண்டும் அடியேனுக்கு வாய்க்கப்பெற்ற நாள் உண்டுகளிக்கப்பெற்ற நாளேயாம். 'சோற்றால் வயிற்றை நிரப்பின நாள் உண்டநாள், அப்படி நிரப்பாதநாள் பட்டினிநாள்' என்கிற வ்யவஸ்தை என்னிடத்தில்லை; நான் வயிறார உண்டபோதிலும், திருமந்த்ராநுஸந்தாநமும் ஸ்ரீபாதஸேவையும் தட்டுப்பட்டதாகில், அந்நாள் எனக்குப்பட்டினி நாளே என்றவாறு.

இருக்கெசுச் சாமவேதம்—ருக்யஜுஸ்ஸாமவேத மென்றவடமொழித்தொடரின் விகாரம். தத்துறுதல் - வாய்க்கப்பெறாதொழிதல். ... (௬)

வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை மெத்தை யாக விரித்ததன் மேலே
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கங் காண லாங்கொலென் னாசையி னாலே
உள்ளஞ் சோர வுகந்தெதிர் விம்மி யுரோம கூபங்க ளாய்க்கண்ண நீர்கள்
துள்ளஞ் சோரத் துயிலணை கொள்ளேன் சொல்லா யானுன்னைத் தத்துறுமாறே.

வெள்ளை - நிர்மலமான
வெள்ளத்தின் மேல் - ஜலத்தின்மேல்
ஒரு பாம்பை - ஒப்பற்ற திருவனந்தாழ்வானை
மெத்தை ஆக விரித்து } படுக்கையாக விரித்து
அதன் மேலே - அப்படுக்கையின் மீது
கள்ளம் நித்திரை கொள்கின்ற மார்க்கம் } (நீ,)யோகநித்திரை செய்தருளும்படியை
காணலாம் கொல் என் ஆசையினாலே } காணக்கூடுமோ என்கிற விருப்பத்தினால்,
உள்ளம் சோர - நெஞ்சு அழிய
உகந்து எதிர் விம்மி } மகிழ்ச்சியின் மிகுதியால் (வார்த்தை சொல்லவொண்ணாதபடி) எதிரேவிம்மி
உரோம கூபங்கள் ஆய் } (உடம்பு முழுவதும்) மயிர்க்குழியெறியப்பெற்று
கண்ணநீர்கள் - கண்ணீர்
துள்ளம் சோர - துளிதுளியாகச்சோரப்பெற்று
அணை - படுக்கையில்
துயில் கொள்ளேன் - உறங்கப் பெறுகிறேனில்லை;
யான் - (இப்படிப்பட்ட) அடியேன்
உன்னை - உன்னை
தத்துறும் ஆறு - கிட்டும்வழியை
சொல்லாய் - அருளிச்செய்யவேணும்.

**குறிப்பு:**—பிராகிருதமான உணவு அடியேனுக்கில்லை என்றாற் போல, உறக்கமுமில்லையென்கிறார், இப்பாட்டில். திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது சயனித்துக்கொண்டு யோக நித்திரை செய்தருளுங் கிரமத்தை ஸாக்ஷாத் கரிக்கப்பெறலாமோ வென்னுமாவல் கொண்டு, ("பாலாழி நீ கிடக்கும் பண்பையாங் கேட்டேயும், காலாழும் நெஞ்சழியுங்கண் சுழலும்" என்றபடி.) அவ்வநுஸந்தாநமடியாக நெஞ்சு அழியப்பெற்று, ப்ரீதியதிசயத்தினால் வாய்திறந்து ஒரு பேச்சுப்பேச வொண்ணாதபடி ஏங்கி உடம்பெல்லாம் ரோமாஞ்சிதமாகப் பெற்று, 'நமது மநோரதம் தலைக்கட்டவில்லையே' என்ற அவஸாதத்தினால் கண்ணீர் துளிதுளியாகச் சோரப்பெறுகையால் இதுவே சிந்தையாய்ப் படுக்கையிற் சாய்ந்தால் கண்ணுறங்கப் பெறாத அடியேன் உன்னை எவ்வாறு கிட்டுவேனோ, அவ்வழியை அருளிச்செய்யாய் என்கிறார்.

எம்பெருமான் திருவனந்தாழ்வான்மீது உறங்குவான்போல் யோகு செய்கின்றனாதலால், கள்ளநித்திரை எனப்பட்டது. நித்திரை-நித்ரா. மார்க்கம் - மார்க்க:. உரோமகூபம் - ரோமகூபமென்ற வடமொழித் தொடர் விகாரப்பட்டது; ரோமம் - மயிர்; கூபம் - குழி. தத்துறுதல் என்பதற்குக் கீழ்ப்பாட்டில் "தட்டுப்படுதல்" என்று பொருள் கூறப்பட்டது; இப்பாட்டில், அச்சொல்லுக்கே, கிட்டுதல் என்று பொருள் கூறப்படுகின்றது. ஒரு சொல்லுக்குப் பலபொருள் கொள்ளக்கூடுமிறே. அன்றி, கீழ்ப்பாட்டிற் போலவே இப்பாட்டிலும் தத்துறுதல் என்று மாறுபாட்டையே சொல்கிற்றாய், கிட்டுதல என்பது தாத்பர்யப்பொருளாகவுமாம்; உள்ளஞ் சோர்தலும், உகந்தெதிர்விம்முகையும், கண்ணநீர்துள்ளஞ் சோர்தலும், துயிலணை கொள்ளாமையும் மாறுபடுவதே எம்பெருமானைக் கிட்டுகை என்று கருத்து. இனி, உண்மைப்பொருளை வல்லார்வாய்க் கேட்டுணர்க. ()

வண்ண மால்வரை யேகுடை யாக மாரி காத்தவ னேமது சூதா
கண்ண னேகரி கோள்விடுத் தானே கார ணாகளி றட்ட பிரானே
எண்ணு வாரிட ரைக்களை வானே யேத்த ரும்பெருங் கீர்த்தியி னானே
நண்ணி நானுன்னை நாடோறு மேத்தும் நன்மை யேயருள் செய்யெம் பிரானே.

காரணா - (உலகங்கட்குக்) காரணமானவனே!
எண்ணுவார் இடரை களைவானே } (எப்போதும் உன்னையே) நியனிப்பவர்களுடைய துன்பங்களைப் போக்குமவனே!
மது சூதா - மதுவைக் கொன்றவனே!
கரி கோள் விடுத்தானே } கஜேந்திராழ்வானுடைய துக்கத்தை நீக்கினவனே!
கண்ணனே!—;
வண்ணம் - (பலவகைப்பட்ட) தாதுக்களையுடையதும்
மால் - பெரிதுமான
வரை - கோவர்த்தன மலையை
குடை ஆக - குடையாக (எடுத்து),
மாரி - மழையினின்றும்
காத்தவனே - (பசுக்களையும் இடையரையும்) காத்தருளினவனே!
களிறு - (குவலயாபீடமென்னும்) யானையை
அட்ட - முடித்த
பிரானே - உபகாரகனே!
ஏத்த அரு பெரு கீர்த்தியினானே } துதிக்கமுடியாத அளவற்ற கீர்த்தியையுடையவனே!
எம்பிரானே - எமக்குத் தலைவனே!
நான் - அடியேன்
உன்னை - உன்னை
நாள் தொறும் - தினந்தோறும்
நண்ணி - ஆச்ரயித்து
ஏத்தும் நன்மை - துதிக்கையாகிற நன்மையை
அருள் செய் - அருள்செய்யவேணும்.

குறிப்பு:—வண்ணம்--செங்காவி; மலையில் இது விசேஷமாக உண்டு. அட்ட-அடு என்ற குறிலிணைப்பகுதியடியாப் பிறந்த பெயரெச்சம். ஏத்த அரு, ஏத்தரு; தொகுத்தல் விகாரம். "நன்மையே அருள் செயயும் பிரானே" என்றும் பாடமுண்டு; "அருள் செய்யும்" என்பதற்குப் பொருளதுவே: "பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லாதாகுஞ் செய்யுமென் முற்றே" என்ற இலக்கணத்தின்படி 'நீர் செய்யும்' என முன்னிலையிற் பன்மையேவலாய் வருதல் ஒவ்வாதாயினும், இது * புதியன புகுதலெனக் கொள்க. ... ... ... ... ... ... (அ)

நம்ப னேநவின் றேத்தவல் லார்கள் நாத னேநர சிங்கம தானாய்
உம்பர் கோனுல கேழு மளந்தா யூழி யாயினா யாழிமுன் னேந்திக்
கம்ப மாகரி கோள்விடுத் தானே கார ணாகட லைக்கடைந் தானே
எம்பி ரானென்னை யாளுடைத் தேனே யேழை யேனிட ரைக்களை யாயே.

நம்பனே - (ரக்ஷகன் என்று) நம்பத்தகுந்தவனே!
நவின்று ஏத்த வல்லார்கள் நாதனே } (ஸ்தோத்ரங்களை) வாயாரச் சொல்லிப் புகழவல்லவர்களுக்கு ரக்ஷகனே!
நரசிங்கம் அது ஆனாய் } நரஸிம்ஹாவதாரஞ்செய்தருளினவனே!
உம்பர் - நித்யஸூரிகளுக்கு
கோன் - தலைவனே!
உலகு ஏழும் - எல்லா வுலகங்களையும்
அளந்தாய் - (திரிவிக்கிரமாவதாரத்தில்) அளந்து கொண்டவனே!
ஊழி ஆயினாய் - காலம் முதலிய பதார்த்தங்களுக்கெல்லாம் நிர்வாஹகனானவனே!
முன் - முன்னே

ஆழி - திருவாழி யாழ்வானை
ஏந்தி - (திருக்கையில்) ஏந்திக்கொண்டு (எழுந்தருளி)
மா கம்பம் - மிக்க நடுக்கத்தை அடைந்த
கரி - கஜேந்திராழ்வானுடைய
கோள் - சிறையை
விடுத்தானே - விடுவித்தருளினவனே!
காரணா - ஜகத்காரண பூதனே!
கடலை - (திருப்பாற்) கடலை
கடைந்தானே - (தேவர்கட்காகக்) கடைந் [தருளினவனே!
எம்பிரான் - எம்பிரானே!
என்னை - அடியேனை
ஆளுடை - ஆட்படுத்திக் கொண்டவனும்
தேனே - தேன்போல் இனியனுமானவனே!
ஏழையேன் - (உன் திருநாமங்களில்) சாபல்யமுடைய என்னுடைய
இடரை - துன்பத்தை
களையாய் - களைந்தருள வேணும்.

குறிப்பு:—உன் திருவடிகளில் நிரந்தர ஸேவை பண்ணுதற்கு விரோதியான பாபங்களைப் போக்கியருளவேணுமென்று எம்பெருமானை இரக்கிறார். கம்பம்-கம்பம் என்றவட சொல் விகாரம். ... ... ... (கூ)

காமர் தாதை கருதலர் சிங்கங் காண வினிய கருங்குழற் குட்டன்
வாம னனேன் மரதக வண்ணன் மாத வன்மது சூதனன் றன்னைச்
சேம நன்கம ரும்புது வையர்கோன் விட்டு சித்தன் வியந்தமிழ் பத்தும்
நாம மேன்று நவின்றுரைப் பார்கள் நண்ணு வாரோல்லை நாரண னுலகே. (க0)

காமர் தாதை - மன்மதனுக்குத்தந்தையும்
கருதலர் - (தன்னை) நினையாதவர்களுக்கு
சிங்கம் - சிங்கம்போல அணுகமுடியாதவனும்
காண - (தன்னைப்பற்றினோர்) ஸேவிப்பதற்கு
இனிய - இனியனானவனும்
கரு குழல் குட்டன் - கறுத்த குழலையுடைய சிறுக்கனானவனும்
வாமனன் - வாமநாவதாரம் செய்தருளிய
என் - எனக்குத்தலைவனும்
மரதகம் வண்ணன் - மரதகப்பச்சைபோன்ற வடிவையுடையவனும்
மாதவன் - பிராட்டிக்குக் கணவனும்
மது சூதனன் தன்னை - மதுவைக் கொன்றவனுமான எம்பெருமானை (விஷயமாகக்கொண்டு), —
சேமம் - க்ஷேமமானது
நன்கு - நன்றாக [குறைவின்றி]
அமரும் - அமைந்திருக்கப்பெற்ற
புதுவையர் கோன் - ஸ்ரீ வில்லிபுத்தூரிலுள்ளார்க்குத் தலைவரான
விட்டு சித்தன் - பெரியாழ்வார்
வியந்த தமிழ் பத்தும் - அருளிச்செய்த (இத்) தமிழ்ப்பாசுரங்கள் பத்தையும்
நாமம் என்று - (எம்பெருமானது) திருநாமங்களாக ப்ரதிபத்திபண்ணி
நவின்று - கற்று
உரைப்பார்கள் - ஓதுமவர்கள்
ஒல்லை - விரைவாக
நாரணன் உலகு - ஸ்ரீ வைகுண்டத்தை
நண்ணுவார் - கிட்டப்பெறுவர்கள்.

குறிப்பு:—மற்றைத் திருமொழிகளிற் காட்டில் இத்திருமொழியில் எம்பெருமானுடைய திருநாமங்கள் விசேஷமாக அருளிச் செய்யப்பட்டிருப்பதனால், இத்திருமொழியை ஸஹஸ்ரநாமாத்யாயத் தோடொக்கப் பிரதிபத்திபண்ணுதல் ஏற்குமென்க. [காமர் தாதை] ருக்மிணிப் பிராட்டியினிடத்து மன்மதனுடைய அம்சமாகப் பிறந்த ப்ரத்யும்நனுக்குக் கண்ணு

பிரான் தந்தையாதல் அறிக. மரதகவண்ணன் - வடசொற்றொடர்த்திரிபு. "மதுசூதன்றன்னை" என்றும் ஓதுவர். சேமம் நன்கு அமருகையாவது - எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுவதில் மிக்க ஆவல்கொண்டிருக்கை. வியந்த + தமிழ், வியந்தமிழ்; "ஒண்சங்கதை" போல. வியந்த - கொடுத்த என்றபடி. "வியன்றமிழ்" என்றுபாடமாகில், அற்புதமான தமிழ் என்று பொருளாம். ... ... .... ... ... (௧௦)

அடி:—வாக்கு சழக்கு நன்மை நெடுமை தோட்டம் கண்ணு வெள்ளை வண்ணம் நம்பன் காமர் நெய்.

## முதல்திருமொழி உரை முற்றிற்று.

---

## இரண்டாந்திருமொழி.

## நெய்க்குடத்தை.

**அவதாரிகை:**—எம்பெருமான், ஆழ்வார்க்குத் தன் பக்கலில் அமைந்த அவாவின் மிகுதியைப் பலவகைகளாலறிந்து, அவருடைய திருவுள்ளத்தைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டருளினபடியையும், அதனால் ஆழ்வார், இனி நோய்கள் முதலியவை தம்மை அணுகவொண்ணாதபடி, அவற்றை ஒறுத்தருளுகிறபடியையுங் கூறுவது, இத்திருமொழி.

"ஓங்காரவட்டத்து மாசுணப்பாயி லுலோகமுண்ட
பூங்கார்விழிக்குப் புலப்பட்டதாலெப் பொழுதுமென்னை
நீங்காதிடர்செய்யுந் தீவினைகாளினி நின்றுநின்று
தேங்காது நீருமக் காணிடத்தேசென்று சேர்மின்களே."

[திருவரங்கத்துமாலை - ௧௦௨] என்ற ஐயங்கார் பாசுரத்தை இத்திருமொழியோடு ஒருபுடை ஒப்பிடலாகும்.

நெய்க்குடத் தைப்பற்றி யேறு மெறும்புகள் போல்நிரந் தெங்குங்
கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் காலம் பெறவுய்யப் போமின்
மெய்க்கொண்டு வந்து புகுந்து வேதப் பிரானார் கிடந்தார்
பைக்கொண்ட பாம்பணை யோடும் பண்டன்று பட்டினங் காப்பே. (௧)

நெய் குடத்தை - நெய்வைத்திருக்குங் குடத்தை
பற்றி - பற்றிக்கொண்டு
ஏறும் - (அக்குடத்தின்மேல்) ஏறுகின்ற
எறும்புகள் போல் - எறும்புகளைப் போல்
எங்கும் நிரந்து - என்னுடைய உடம்பு முழுவதும் பரவி
கைக்கொண்டு - (என்னை) வசப்படுத்தி
நிற்கின்ற - (என்னையே இருப்பிடமாகக் கொண்டு) நிலைத்து நிற்கிற
நோய்காள் - வியாதிகளே!
காலம் பெற - விரைவாக
உய்ய - (நீங்கள்) பிழைக்க வேண்டி
போமின் - (என்னை விட்டு வேறிடத்தைத் தேடிச்) செல்லுங்கள்;

வேதம் பிரானார் - (பிரமனுக்கு) வேதத்தை உபகரித்தருளின எம்பெருமான்
பைக் கொண்ட - பரம்பின படங்களையுடைய
பாம்பு அணையோடும் - திருவனந்தாழ்வானாகிற படுக்கையோடுங்கூட
வந்து புகுந்து - எழுந்தருளி
மெய் - (எனது) சரீரத்தை
கொண்டு - (தனக்கு இனிதாகத்) திருவுளம்பற்றி
கிடந்தார் - (என் சரீரத்தினுள்ளே) பள்ளிகொண்டிராநின்றார், (ஆதலால்,)
பட்டினம் - (அவ்வெம்பெருமானுடைய) பட்டணமாகிய இவ்வாத்துமா
பண்டு அன்று - பழைய நிலைமையையுடையதன்று;
காப்பு - (அவனால்) காக்கப் பெற்றது.

குறிப்பு:—அக்நிஹோத்ரஸமாராதநாதிகளுக்கு உதவும்படி சேமித்து வைக்கப்பட்டிருக்கும் நெய்க்குடத்தை எறும்புகள் ஏறி ஆக்கிரமிப்பது போல, எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுகைக்கென்று சேமிக்கப்பட்டிருக்கின்ற எனது உடலை ஆக்கிரமித்துக்கொண்டு, நான் உங்களுக்கு வசப்பட்டு ஒழுகும்படி என்னைக் கையாளாக்கிக்கொண்டு சாச்வதப்ரதிஷ்டையாக நிற்கின்ற நோய்களே! இனி இவ்வாத்துமா உங்களுடைய ராஜ்யமன்று; இத்தனை நாளும்போலல்ல இந்நாள்; எம்பெருமான் தனது படுக்கையோடுங் கூடவிரும்பிப் பள்ளிகொண்டிருக்குமிடமாயிற்று இன்று இவ்வாத்துமா; ஆனபின்பு, அவனது காவலில் அகப்பட்ட இவ்வுடலிடத்து இனி உங்களுக்குப் பிழைத்திருக்க வழியில்லை; இன்னுஞ் சில நாளளவும் பிழைத்திருக்க வேணுமென்றவிருப்ப முங்களுக்கு உளதாகில், இவ்விடத்தைவிட்டுச் சடக்கென ஓடிப்போங்கள் என்கிறார்.

"எறும்புகள்போல் நிறைந்து" என்பது பாடமன்று. நிரந்து - பரவி. "மெய்கொண்டு" "பைகொண்ட" என இயல்வாக நிற்கவேண்டியிருக்க, அங்ஙனம் நில்லாது, "மெய்க்கொண்டு" "பைக்கொண்ட" எனக் ககர ஒற்றுமிக்கது - "நெய்க்குடத்தை" என்றெடுத்த எதுகை நயத்தின்பொருட்டாமென்க. (அன்றி, வேறுவகையுமுண்டென்பர்.) "பாம்பணையோடும வந்து புகுந்துகிடந்தார்" என்றதனால், நித்யவாஸத்துக்காக எழுந்தருளினமை போதரும். பட்டினம் - பத்தநமென்ற வடசொல்விகாரம்; ராஜதாநி என்பது பொருள்: ஆத்துமா எம்பெருமானுடைய ராஜதானியாதலறிக. (க)

சித்திர குத்த னெழுத்தால் தென்புலக் கோன்பொறி யொற்றி
வைத்த விலச்சினை மாற்றித் தூதுவ ரோடி யொளித்தார்
முத்துத் திரைக்கடற் சேர்ப்பன் மூதறி வாளர் முதல்வன்
பத்தர்க் கமுத னடியேன் பண்டன்று பட்டினங் காப்பே. (உ)

சித்திரகுத்தன் - சித்ரகுப்தனென்கிற (யமலோகத்துக்) கணக்குப்பிள்ளையானவன்
தென் புலம் கோன் - தெற்குத்திசைக்குத் தலைவனான யமனுடைய
பொறி ஒற்றி - மேலெழுத்தை இலச்சினை வைத்து (?) 
எழுத்தால் வைத்த - (தான்) எழுதிவைத்த
இலச்சினை - குறிப்புச்சீட்டை
தூதுவர் - யமகிங்கரர்கள்

மாற்றி - கிழித்துப் போகட்டுவிட்டு
ஓடி ஒளித்தார் — (கண்ணுக்குத் தெரியாத இடந்தேடி) ஓடி ஒளித்துக்கொண்டார்கள்;
முத்து - முத்துக்களை (க்கொண்டு வீசுகிற)
திரை - அலைகளையுடைய
கடல் - கடலில்
சேர்ப்பன் - கண்வளர்ந்தருளுமவனும்,
மூது அறிவு ஆளர் — முதிர்ந்த அறிவையுடைய நித்யஸூரிகளுக்கு
முதல்வன் - தலைவனும்,
பத்தர்க்கு - அடியார்களுக்கு
அமுதன் - அம்ருதம்போல் இனியனுமான எம்பெருமானுக்கு
அடியேன் - (யான்) தாஸனாயினேன்;
பண்டு அன்று பட்டினம் காப்பு.—

குறிப்பு:—கீழ் "துப்புடையாரை" என்ற திருமொழியில், "எல்லையில் வாசல்குறுகச் சென்றாலெற்றி நமன்றமர்பற்றும்போது, நில்லுமினென்னு முபாயமில்லை" என்ற குறைதீர இன்று அச்சங்கெட்டபடியை அருளிச் செய்கிறார், இப்பாட்டில். யமலோகத்தில், இந்நிலவுலகத்தின்கணுள்ள ஸர்வாத்மாக்களினுடையவும் பாபங்களைக் கணக்கிட்டு எழுதுவதற்காக நியமிக்கப்பட்டுள்ள சித்ரகுப்தனென்னுங் கணக்குப்பிள்ளை ஒரு சுவடியில் என் தீவினைகளையெல்லா மெழுதி, அதன்மேல் யமனுடைய மேலெழுத்தையு மிடுவித்து அதனைப் பாதுகாவலாய் வைத்திருக்க, அதனை யமதூதர்கள் எடுத்துச் சுட்டுப்போகட்டு ஓடி ஒளிந்துகொண்டனர்; இதற்கு அடி என்னெனில்; அயர்வறுமமரர்களதிபதிக்கு நான் அடிமைப்பட்டதேயாகும். அது காரணமாக எனது ஆத்துமா அவ்வெம்பெருமானுடைய பாதுகாப்பைப் பெற்றிருக்கின்றமையால் அவ்யமதூதர்கட்கு என்னை அணுகும்வழி எங்ஙனேயாமென்றவாறு.

"தரணியின் மன்னியயனார் தனித்தவங் காத்தபிரான்
கருணையெனுங் கடலாடித் திருவணை கண்டதற்பின்
திரணமெண்ணிய சித்திரகுத்தன் தெரித்துவைத்த
சுருணையிலேறிய சூழ்வினைமுற்றுந் துறந்தனமே."

(தேசிகப்ரபந்தம்.) என்ற பாசுரமிங்கு நினைக்கத்தக்கது. சித்திரகுத்தன் — ஷி௹ம௯ு. புலம் என்று இசைக்கும் பெயர். இலச்சினை.'லக்ஷணம்' என்ற வடசொல்விகாரம். [தூதுவரோடியொளித்தார்.] "வள்ளலே! உன்றமர்க்கென்றும் நமன்றமர்கள்ளர்போல்" "நமன்றமராலாராயப் பட்டறியார் கண்டீர் அரவணைமேற் பேராயற்காட்பட்டார் பேர்" என்ற அருளிச் செயல்களுமறிக. ... ... ... ... ... (உ)

வயிற்றில் தொழுவைப் பிரித்து வன்புலச் சேவை யதக்கிக்
கயிற்றுமக் காணி கழித்துக் காலிடைப் பாசங் கழற்றி
எயிற்றிடை மண்கொண்ட வெந்தை யிராப்பக லோதுவித் தென்னைப்
பயிற்றிப் பணிசெய்யக் கொண்டான் பண்டன்று பட்டினங் காப்பே. (௩)

(வராஹரூபியாய்த்திருவவதரித்தபோது,) எயிற்றிடை - (தனது) கோரப்பல்மேல் மண் - பூமியை கொண்ட - தாங்கியருளின எந்தை - எம்பெருமான், (அடியேனுக்கு) வயிற்றில் தொழுவை - வயிற்றினுள் விலங்கிட்டுக்கொண்டிருக்கையாகிற [கர்ப்பவாஸத்தை பிரித்து - கழித்தருளியும், புலம் - இந்திரியங்களாகிற வல் சேவை - கடுமையான ரிஷபங்களை அதக்கி - (பட்டி மேய்ந்து திரியவொட்[டாமல்) நெருக்கியும் கயிறும் - நரம்புகளும் அக்கு - எலும்புகளுமே யாயிராநின்ற ஆணி - சரீரத்தில் (ஆசையை) கழித்து - ஒழித்தருளியும் பாசம் - (யமதூதர்களுடைய) பாசங் காலிடை கழற்றி - காலிலே கட்டி இழு[க்கவொண்ணாதபடி பண்ணியும், இரா பகல் - இரவும் பகலும் ஓதுவித்து - (எனக்கு) ஸ்வரூபசிக்ஷைபண்[ணி பயிற்றி - (கற்பித்தவற்றை) அநுஷ்டாந[பர்யந்தமாக்கி, பணி செய்ய - நித்தியகைங்கரியம் பண்[ணும்படி என்னை கொண்டான் - அடியேனைக் கைக்[கொண்டருளினான்; பண்டு அன்று பட்டினம் காப்பு—.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் "பத்தர்க்கமுதனடியேன்" என்று எம்பெருமானுக்குத் தம்மை அடிமைப்பட்டவராக அருளிச்செய்து, இப்பாட்டில் அவ்வெம்பெருமான் தம்மை அடிமைகொண்ட ப்ரகாரங்களை அருளிச்செய்கிறார். அவன் செய்தருளின உபகாரபரம்பரைகளைக் கூறுகின்றவாறு. [வயிற்றில் இத்யாதி.] இனி யான் கருவிருத்தக்குழியில் விழாதபடி செய்தருளினான்; அப்படி கர்ப்பவாசம் நேராமைக்குடலாக, இந்திரியங்களாகிற காளைகளைப் பட்டிமேய்ந்துதிரிய வொட்டாமல் பாதுகாத்தருளினான்; நீண்டவழும்புஞ்செந்நீருஞ்சீயு நரம்புஞ் செறிதசையும் வேண்டாநாற்றமிகு முடலில் விருப்பமொழியும்படி செய்தருளினான்; இப்படியெல்லாம் அருள் செய்கையினால், யமபடர் கையும்பாசமுமாய் வந்து புகுந்து பாசங்களைக் காலிலே துவக்கி முகங்கீழ்படத்தள்ளி இழுத்து நலிகையாகிற பரலோகஹிம்சைகளுக்கும் ஆளாகாதபடி அருளினவாறாயிற்று; இவ்வகை அருள்களைச் செய்தபடி எங்ஙனே யென்னில்? இரவும் பகலும் ஓய்வின்றி என் நெஞ்சிற்குடிகொண்டிருந்து ஸ்வரூபஞானத்தைப்பிறப்பித்து, அதன் பிறகு அறிந்தபடியே அநுஷ்டிக்கும்படியாகவுங் கற்பித்து, அநவரதம் அடியேன் தனது திருவடிகளின் கீழ் அடிமைகளையே செய்து உய்யும்படி செய்தருளினனாதலால் இவ்வகை நன்மைகள் எனக்கு வாய்த்தன என்பதாக விரிந்த கருத்தறிக.

குற்றஞ் செய்தவர்களைத் தொழுமரத்தில் அடைப்பதும் விலங்கிடுகையேயாதலாலும், வயிற்றிற்கிடப்பது விலங்கிடுவதைப்போல்வதனாலும், கர்ப்பவாஸத்தை "வயிற்றில் தொழு" என்றனரென்க. இரண்டாமடியில் எதுகைநயம் நோக்கி "கயிற்றும்" என வலித்துக்கிடக்கிறதென்க. கயிறு - நரம்பு; அக்கு - எலும்பு. ஆணி - சரீரத்துக்கும் பெயர். ஆணி கழித்தல் - சரீரத்தில் நசையை ஒழித்தல். "காலிடைப் பாசங்கழற்றி" என்பதற்கு நான்குவகையாகப் பொருள் கூறுவர்; அவற்றுள் ஒன்று பதவுரையிற் கூறப்பட்டது. இனி, இரண்டாவது பொருள்:—கால் என்று காற்றாய், அதனால் பிராண

வாயுவைச் சொன்னபடியாய், பாசம் என்று ஆத்துமாவைக் கட்டிக்கொண்டிருக்கிற ஸூக்ஷ்மசரீரத்தைச் சொல்லுகிறதாய், பஞ்சவ்ருத்திப்ராணனாலே ப்ரேரிதமான ஸூக்ஷ்மசரீரத்தில் நசையறுத்தபடி சொல்லுகிறது; எனவே, கீழ் 'கயிற்றுமக்காணி கழித்து' என்றது - ஸ்தூலசரீரத்தில் நசையறுத்தபடியைச் சொல்லியவாறும். "ஹ்ரு-ஷீகேஶ-ஸ்ஸூந்-ஸம் விஸ்ருஜ" என்ற ஸூக்தி இங்கு நினைக்கத்தக்கது. இனி மூன்றாவது பொருள்:—காற்கட்டான புத்ரதாரக்ருஹக்ஷேத்ராதிகளிலுள்ள பற்றைபோக்கினபடி சொல்லுகிறது. இனி, நான்காவது பொருள்:—"ஹரிணீவ-மாயா-தேஜ உந்ணா ஸோஹிதம்ஜமகு" என்றபடி - உலகமுழுவதையும் மயக்கக்கூடியதும் இரண்டு காலினிடையிலுள்ளதுமான ஹேயஸ்தாநத்தின் விருப்பத்தை ஒழித்தபடி சொல்லுகிறதும்; உலகத்தை மோஹத்தினாற் கட்டுண்டது போலச் செய்கின்ற அதனைப் பாச மென்றல் பொருந்தத் தட்டில்லையே. ()

மங்கிய வல்வினை நோய்கா ளுமக்குமோர் வல்வினை கண்டீர்
இங்குப் புகேன்மின் புகேன்மி னெளிதன்று கண்டீர் புகேன்மின்
சிங்கப் பிரானவ னெம்மான் சேருந் திருக்கோயில் கண்டீர்
பங்கப் படாதுய்யப் போமின் பண்டன்று பட்டினங் காப்பே. (௪)

மங்கிய - (உருத்தெரியாதபடி) மழுங்கிக் கிடக்கிற
வல் வினை — வலிய பாவங்களின் மூலமாக வளர்ந்த
நோய்காள் — வியாதிகளே!
உமக்கும் - உங்களுக்குங் கூட
ஓர் வல் வினை - ஒரு கடினமான நிலைமை (நேர்ந்தபடியை)
கண்டீர் - (இன்று) பாருங்கள்;
இங்கு — இவ்விடத்தில்
புகேன்மின் புகேன்மின் (இனி) வரவேண்டா, வரவேண்டா;
(இனிநீங்கள் என்னைக்கிட்டவேண்டா;)
எளிது அன்று - சுலபமான காரியமன்று;
புகேல் மின் - (ஆதலால் இனி இங்கு) வரவேண்டா;
(என்று ஆத்துமா,)
சிங்கப் பிரான் - நரஸிம்ஹாவதாரமெடுத்து உபகரித்தருளினவனும்
எம்மான் அவன் — எமக்குத்தலைவனுமான எம்பெருமான்
சேரும் — எழுந்தருளியிருப்பதற்கிடமான
திரு கோயில் கண்டீர் - திருக்கோயிலாக அமைந்தபடியைப் பாருங்கள்;
பங்கப் படாது - பரிபவப்படாமல்
உய்ய போமின் - பிழைத்துப் போங்கள்.
பண்டு அன்று பட்டினம் காப்பு—.

குறிப்பு:—"ஜந்தூநாம் க்ருதம் வாவம் வ்யாயிரூபேண பாயதே" என்றபடி வியாதிகளின் அநுபவத்திற்கு ஊழ்வினைகள் ஹேதுவாதலால், அவ்வூழ்வினைகளை விளித்து, 'ம்ருத்யுவுக்கும் ம்ருத்யுவந்தான்' என்பது போல, உங்களுக்கும் ஒரு வினைவந்தது, இனி நீங்கள் உறைப்பான காவல்பெற்ற என்னிடம் தங்கமுடியாது; தங்கினால் பரிபவமேபலிக்கும்; வேறிடந்தேடி ஓடினால் பிழைக்கலாம் என்கிறார். மங்கிய வல்வினை — வேறுபடுத்தவொண்ணாதபடி உருத்தெரியாமல் ஆத்துமாவோடு ஒட்டிக் கொண்டிருக்கிற வினைகாள்! என்றபடி. "சார்ந்த விருவல்வினைகள்" என்றது காண்க. பங்கம் - ஊறு மென்ற வடசொற்றிரிபு. 'புகேல்மின் புகேல்மின் புகேல்மின்' என்ற அடுக்

குத்தொடர், விரைவுபற்றியது; "அசை நிலை பொருள் நிலை இசைநிறைக் கொருசொல், இரண்டு மூன்று நான் கெல்லைமுறை அடுக்கும்" என்பது நன்னூல். ... ... ... ... (௪)

மாணிக் குறளுரு வாய மாயனை யென்மனத் துள்ளே
பேணிக் கொணர்ந்து புகுத வைத்துக்கொண் டேன்பிறி தின்றி
மாணிக்கப் பண்டாரங் கண்டீர் வலிவன் குறும்பர்க ளுள்ளீர்
பாணிக்க வேண்டா நடமின் பண்டன்று பட்டினங் காப்பே. (௫)

மாணி - அழகுபொருந்திய
குறள் உரு ஆய - வாமனனாய் அவதரித்தவனும்
மாணிக்கப் பண்டாரம் - மாணிக்கநிதி போல் இனியனும்
மாயனை - ஆச்சரிய பூதனுமான எம்பெருமானை
பேணி - ஆசைப்பட்டு
கொணர்ந்து - எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து
என் மனத்துள்ளே - என் நெஞ்சினுள்ளே
புகுத - புகுந்திருக்கும்படி
பிறிது இன்றி - வேற்றுமையில்லாமல்
வைத்துக் கொண்டேன் - அமைத்துக்கொண்டேன்;
வலி வல் குறும்பர்கள் உள்ளீர் - மிகவுங்கொடிய குறும்புகளைச் செய்கிற இந்திரியங்களே!
நடமின் - (வேறிடந்தேடி) ஓடுங்கள்;
பாணிக்க வேண்டா - தாமசிக்கவேண்டியதில்லை,
பண்டு அன்று பட்டினம் காப்பு—.

குறிப்பு:—தேவேந்திரனுடைய வேண்டுகோளை நிறைவேற்றுதற் பொருட்டுக்குறட் பிரமசாரியாய் மாவலியைக்குறும்படக்கி அரசுவாங்கி ஓங்கியுலகளக்கும்போது, அநபேக்ஷிகள் தலையிலும் திருவடியை வைத்தருளின பரமகாருணிகஸ்வபாவனும், தனது நிர்ஹேதுககிருபையினாலன்றிப் பெறுதற்கரியனும், மாயச்செயல்களில் வல்லவனுமான எம்பெருமானை நான் இன்று எனது ஹ்ருதயத்தில் நிலைநிறுத்தினேனாதலால், பொல்லாத இந்திரியங்களே! இனி நீங்கள் இங்கு நசைவைத்திட வேண்டியதில்லை என்கிறார். இந்திரியங்கள் அசேதநங்களாயினும் கொடுமைபுரிவதிற் சேதநரில் விஞ்சியிருத்தலால் "குறும்பர்களுள்ளீர்" என உயர்திணையாகக் கூறினரென்க. "உண்ணிலாவிய ஐவரால்" "கோவாய் ஐவர் என் மெய்குடியேறி" என்பனகாண்க. இந்திரியங்களை வேறிடந்தேடி ஓடச்சொன்னது - கூறைசோறிவைதாவென்று குமைக்கையாகிற உங்கள் தொழில்களைச் செய்யாதொழியுங்கள் என்றவாறு. வலிவல் - மீமிசைச்சொல். [உள்ளீர்.] எம்பெருமான் எனது நெஞ்சில் வந்து குடிகொண்டவுடனே நீங்கள் ஓடிப்போகவேண்டியது ப்ராப்தம்; அப்படியன்றி இன்னும் ஓடாதிருந்தீர்களாகில் என்பது சமத்காரப் பொருள்.

மாணி - அழகுக்கும்பெயர்; 'பிரமசாரி' என்றபடியுமாம். உரு - வடிவு. பிறிது இன்றி - இரண்டு பொருளாகத்தோற்றாமல், ஏகவஸ்து என்னலாம்படி பொருந்தச் செய்து என்றபடி. எம்பெருமானை மாணிக்கப்பண்டார மென்றது - அதுபோல் பெறுதற்கரியவன் என்றவாறு. "ஸு3ா லபோ4 ..."

ஸ நஷ நாஜிஹி ஸூ-ஹ-ஷ-ஹ ஹஷுஜ தெ நாஷ-ஷ-ஹா" என்ற ஆழ்வான் அருளிச்செயல் இங்கு நினைக்கத்தக்கது. சரணிக ஹணாா மென்ற வட சொல் திரிபு. ... ... ... ... ... (ரு)

உற்ற வுறுபிணி நோய்கா ளுமக்கொன்று சொல்லுகேன் கேண்மின்
பெற்றங்கள் மேய்க்கும் பிரானூர் பேணுந் திருக்கோயில் கண்டீர்
அற்ற முரைக்கின்றே னின்ன மாழ்வினை காளுமக் கிங்கோர்
பற்றில்லை கண்டீர் நடமின் பண்டன்று பட்டினங் காப்பே. (கூ)

உற்ற - (என்னை நலியவேணுமென்ற கொ [மையினால்) கிட்டியிருக்கிற
நோய்காள் - நோய்களே!
உறு பிணிகாள் - பொருக்கியிரா நின்ற [நோய்களே!
உமக்கு - உங்களுக்கு
ஒன்று - ஒருவார்த்தை
சொல்லுகேன் - சொல்லுகிறேன்;
கேண்மின் - கேளுங்கள்;
(நீங்கள் இப்போது குடியிருக்கிற எனது இவ்வுடலானது,)
பெற்றங்கள் மேய்க்கும் பிரானூர் பேணும் } பசுக்களை மேய்த்தருளிய கண்ணபிரான் விரும்பி எழுந்தருளியிருக் [கைக்கு இடமான
திருக்கோயில் - திருக்கோயிலாயிற்று;
கண்டீர் - (முன்புள்ள நிலைமையிற்காட்டில் இன்றுள்ள நிலைமையின் வா [சியைப்) பாருங்கள்;
ஆழ் - (ஸம்ஸாரஸமுத்ரத்தில் என்னை [ஆழ்ங்காற்படுத்தின
வினைகாள் - ஓ கொடுமைகளே!
இன்னம் - மறுபடியும்
அற்றம் உரைக்கின்றேன் } அறுதியாகச் சொல்லு [கிறேன்;
உமக்கு - உங்களுக்கு
இங்கு - இவ்விடத்தில்
ஓர் பற்று இல்லை - ஒருவகை அவலம்ப [மும் கிடையாது;
(ஆதலால்,)
நடமின் - (இனி இவ்விடத்தை விட்டு) [நடவுங்கள்,
பண்டு அன்று பட்டினம் காப்பு—,

குறிப்பு:—நோய் என்றாலும், பிணி என்றாலும் வியாதிக்கே பெயரா யிருக்க, 'உற்ற நோய்காள்! உறு பிணிகாள்!' என இங்கு வெவ்வேறாக விளித்தது — அவற்றின் கொடுமைத்திறத்தின் மிகுதியைப்பற்ற; 'கள்ளப் பயலே! திருட்டுப்பயலே!' என்பதுபோல. மூன்றாமடியில் இந்நோய்க்கு அடியான பாபங்களை விளிக்கின்றார், ஆழ்வினைகாள்! என்று. "பாபம் வ்யா யிா-ஒவெணஹாயடெக" என்றதிறே. ஆழ்வார் இங்ஙனே நோய்களையும் வினைகளையும் விளித்து, 'எனது ஆத்துமா இத்தனைநாளும்போலல்லாமல், இன்று எம்பெருமானுடைய விருப்பத்திற்கு உறைப்பான கோயிலாக அமைந் ததனால், இனி இங்கு உங்கட்குத்தங்க இடமில்லை; வேறிடம் நோக்கி நடவுங் கள், இதில் ஐயமில்லை' என ஒறுத்து அருளிச் செய்கின்றனரென்க. முத லடியில், "உறுபிணி" என்றவிடத்து, உறு என்கிற வித்தை வினைப்பகுதியா கக் கொண்டால் "உறுப்பிணி" என வலித்தலன்றி, "உறுபிணி" என இயல் வேயாம்; அங்ஙனன்றி, மிகுதிக்கு வாசகமான உரிச்சொல்லாகக் கொண் டால், வலித்தலும் ஒக்கும், இயல்பாதலும் ஒக்கும். அற்றம் அறுதியிடுதல்; நிச்சயம். கண்டீர்—முன்னிலைப் பன்மையசை. (கூ)

கொங்கைச் சிறுவரை யென்னும் பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி
அங்கோர் முழையினிற் புக்கிட் டழுந்திக் கிடந்துழல் வேனை
வங்கக் கடல்வண்ண னம்மான் வல்வினை யாயின மாற்றிப்
பங்கப் படாவண்ணஞ் செய்தான் பண்டன்று பட்டினங் காப்பே. (எ)

*சிறு வரை – சிறிய மலைபோன்ற*
*கொங்கை என்னும் – முலைகளாகிற*
*பொதும்பினில் - பொந்தில்*
*வழுக்கி வீழ்ந்து - வழுக்கி விழுந்து,*
*அங்கு ஓர் முழையினில் புக்கிட்டு - (நரகமென்கிற, பரலோகமாகிய ஒரு குகையினுள் புகுந்து*
*அழுந்தி கிடந்து - (அங்கு நின்றும் கால் பேர்க்கவொட்டாமல் அங்கேயே) அழுந்தியிருந்து*
*உழல்வேனை - திரியப்போகிற என்னுடைய*
*வல் வினை ஆயின - தீவினைகளா யிருப்பவைகளை,*
*வங்கம் கடல் வண்ணன் அம்மான் - கப்பல்களையுடைய கடல்போன்ற திருநிறத்தனை எம்பெருமான்*
*மாற்றி - போக்கியருளி*
*பங்கப்படா வண்ணம் – பரிபவப்படாதபடி*
*செய்தான் - செய்தருளினன்;*
*பண்டு அன்று பட்டினம் காப்பு—.*

குறிப்பு:—"வாணிலாமுறுவல் சிறுநுதல் பெருந்தோள் மாதரார்வன முலைப்பயனே பேணினேன்" என்றபடி விஷயாந்தரங்களில் ஆழங்காற் படுத்திப் பின்பு அதற்குப்பலமாக நரகங்களிலுங் கொடுபோய் அழுத்தக் கடவனவான எனது கருமங்களையெல்லாம் எம்பெருமான் ஒழித்தருளி, பரிபவங்களுக்கு ஆளாகாதபடி செய்தருளிப் பாதுகாத்தருளினனென்கிறார்.

["கொங்கைச்சிறுவரை யென்னும் பொதும்பு."] முலைக்கு மலை உவமைகூறுதல், கவிமரபு; "முலைமலைமேல் நின்று மாறுகளாய்" என்ற திருவிருத்தங்காண்க. மலைபோற் கிளர்ந்துள்ள கொம்மைமுலையைப் 'பொதும்பு' [பொந்து] என்னலாமோ? எனின்; தன்னிடத்து ஆழங்காற்படுத்திக் கொள்ளுந்தன்மையின் ஒற்றுமைபற்றி அங்ஙனங் கூறினரென்க. இனி, "கொங்கைச்சிறுவரை யென்றும்" என்று பாடமாகில், "சிறுவரை" என்பதை, சிறு அரை எனப்பிரித்து, 'கொங்கை என்றும், சிறு அரை என்றும்' என இயைத்து, இதொருமுலையிருந்தபடியே! என்றும், இதொரு சிற்றிடையிருந்தபடியே! என்றும் (மயங்கிச்) சொலலிக்கொண்டு (விஷயாந்தரத்தில் மூண்டு) ஹேயஸ்தாநமாகிய பொந்தில் வழுக்கி வீழ்ந்து எனப் பொருள் கொள்ளலாமென்பர். முழை என்று குகைக்குப் பெயர்; அதுபோல் பயங்கரமான நரகத்தைச் சொல்லுகிறது இங்கு. உழல்வேனை-எதிர்காலம்; நிகழ்காலமன்று. இவ்விடத்தில் இப்போது கொங்கைச் சிறுவரை யென்னும் பொதும்பினில் வழுக்கி வீழ்கிறதற்குப் பலமாக, பின்பு நரகத்திற்புகுந்து அங்கு உழலப் போகிற என்னுடைய என்றவாறு, ["வங்கக்கடல் வண்ணன்."] தன் திருமேனியினழகை எனக்குக் காட்டியருளினமாத்திரத்தினால் ஊழ்வினைகளெல்லாம் தன்னடையே ஒழிந்தன என்பது உள்ளுறை. பங்கப் படாவண்ணம்-*தென்னவன்தமர் செப்பமிலாதார் சேவதக்குவார் போலப் புகுந்து, பின்னும்வன்கயிற்றாற் பிணித்தெற்றிப் பின்முன்னாகவிழுக்கை முதலிய பரிபவச் செயல்களுக்குப் பாத்திரமாகாதபடி என்கை. (எ)

ஏதங்க ளாயின வெல்லா மிறங்க லிவேித்தேன் னுள்ளே
பீதக வாடைப் பிரானூர் பிரம குருவாகி வந்து
போதிற் கமலவன் னெஞ்சம் புகுந்துமென் சென்னித் திடரில்
பாத விலச்சினை வைத்தார் பண்டன்று பட்டினங் காப்பே (அ)

பீதக ஆடை பிரானார் } திருப்பீதாம்பரத்தையுடையனை எம்பெருமான்
பிரம குரு ஆகி வந்து } ப்ரஹ்மோபதேசம் பண்ணக்கடவனான ஆசாரியனாய் எழுந்தருளி
போது இல் - அறிவுக்கு இருப்பிடமானதும்
வல் - (அந்தர்யாமியையும் அறியவொட்டாத) வன்மையையுடையதுமான
நெஞ்சம் கமலம் - ஹ்ருதயகமலத்தினுள்
புகுந்து - பிரவேசித்து
என் உள் - எனது (அந்த) ஹ்ருதயத்தில்
ஏதங்கள் ஆயின எல்லாம் } தோஷங்களாக இருப்பவற்றையெல்லாம்
இறங்கலிவேித்து - நீக்கி
என் - என்னுடைய
சென்னித் திடரில் - தலையின்மீது
பாத இலச்சினை - ஸ்ரீபாத முத்திரையை
வைத்தார் - ஏறியருளப் பண்ணினான் ;
பண்டு அன்று பட்டினம் காப்பு—.

குறிப்பு:—ஸர்வேச்வரத்வத்திற்கும் புருஷோத்தமத்வத்திற்கும் இலக்கணமாகிய திருப்பீதாம்பரத்தைத் திருவரையில் அணிந்துள்ள ஸர்வேச்வரன் ஞாநோபதேசம் பண்ணுகிற ஆசாரியனாக என் நெஞ்சினுள் வந்து புகுந்து, தேஹாத்மாபிமாநம், ஸ்வாதந்திரியபுத்தி, அந்யசேஷத்வபுத்தி, ஸ்வரக்ஷணபரத்வம், ஸ்வப்ரயோஜநபரத்வம் முதலிய மனக்குற்றங்களை ஒழித்து, அவ்வளவிலும் பர்யாப்திபெறாமல்; தனது திருவடிகளை இலச்சினை படும்படி என்தலைமேல் அமைத்து இவ்வாறு பரமோபகாரம் பண்ணியருளினனாதலால், இவ்வாத்துமா பண்டுபோலன்றி இப்போது குறைவற்ற காப்பை அடைந்திராநின்றதென்கிறார்.

இறங்கலிவேித்து - (தான் இருந்த இடத்தில் நின்றும்) இறங்கச்செய்து என்றபடி. பிரமகுரு ப்ரஹ்மகுரு. பிரமம் என்று இங்கு ஞானத்தைச் சொல்லுகிறது. "உத்தாலகப்ரஹ்மவிதோ ப்ரஹ்மஶ்ரீயாநுப்ரஹ்மவிதா" என்றது உணரத்தக்கது. மூன்றாமடியில், போது - போத: என்ற வடசொற் சிதைவு. புகுந்தும் என்றவிடத்து உம்மை - இசை நிறையென்க. அன்றி, நெஞ்சிற் புகுந்ததுமன்றிச் சென்னித் திடரில் பாதவிலச்சினையையும் வைத்தார் என்றவாறுமாம். திடர்-மேடு. திருவடிகள் ஏறவொண்ணாதமேட்டில் அத்திருவடிகளை ஏற்றியருளினன் என்ற சமத்காரந்தோற்றச் "சென்னித் திடரில்" என்றனரென்க. [பாதவிலச்சினை வைத்தார்.] தோளுக்குத் திருவாழியிலச்சினை யிட்டதுபோலத் தலைக்குத் திருவடியிலச்சினை யிட்டனனென்க. இனி, திருவாழியிலச்சினை தலையிலுமுண்டென்க; "ஒரு காலிற்சங்கொருகாலிற்சக்கரமுள்ளடி பொறித்தமைந்த, இருகாலுங் கொண்டங்கெழுதினாற்போலிலச்சினை படநடந்து" என்றதும், "ஸவ்யாம்ஶ சக்ர ஜாநவிதாங்க ஸவஜ்ராங்குஶ — ஶரணாம்பஜம்" என்றதும் அறியத்தக்கது. ... ... ... ... ... ... (அ)

உறக லுறக லுறக லொண்சுட ராழியே சங்கே
அறவெறி நாந்தக வாளே யழகிய சார்ங்கமே தண்டே
இறவு படாம லிருந்த வெண்ம ருலோகபா லீர்காள்
பறவை யரையா வுறகல் பள்ளி யறைகுறிக் கொண்மின். (௯)

ஒண் சுடர் - அழகிய தேஜஸ்ஸையுடைய
ஆழியே - திருவாழி யாழ்வானே!
சங்கே - ஸ்ரீபாஞ்சஜந் யாழ்வானே!
அற-(ஆச்ரிதவிரோதிகளின் உடல்) அறு [ம்படி
எறி - (எம்பெருமானால்) வீசப்படுகிற
நாந்தக வாளே-நந்தகமென்கிற திருக்குற் [றுடைவாளே!
அழகிய - அழகு பொருந்திய
சார்ங்கமே - சார்ங்கமென்கிற தநுஸ்ஸே!
தண்டே - (கௌமோதகி என்கிற) கதை [யே!
இருந்த - (எம்பெருமானுடைய நியமனத் [திற்கு ஆட்பட்டு) இராநின்ற
எண்மர் உலோக பாலீர்காள் } அஷ்டதிக்குப் பாலகர் [களே!
இறவு படாமல் - தப்பிப்போகாமல்
உறகல் உறகல் உறகல் } உறங்காதிருங்கள், உறங் காதிருங்கள், உறங்காதி [ருங்கள்;
பறவை அரையா - பறவைகளுக்குத் தலை [வனான பெரிய திருவடியே!
உறகல்-உறங்காதிரு;
(நீங்கள் எல்லாரும் விழித்துக் கொண்டிருந்து,)
பள்ளி அறை-(எம்பெருமானுக்குத்) திருப்பள்ளி யறையாகிய என் சரீரத் [தை
குறிக் கொள்மின்-நோக்கிக் காத்திடுங்கள்.

குறிப்பு:—இவ்வாழ்வார் மற்றை ஆழ்வார்களைப் போலன்றி, 'எம்பெருமானுக்கு என்வருகிறதோ!' என்று அஸ்தாநேபயசங்கைபண்ணிப் பல்லாண்டு பாடுமவராதலால், இதுவரை தம்மை எம்பெருமானால் காக்கப் பட்டவராக அநுஸந்தித்துப் போந்தவிவர், அவனுக்குங் காவல் தேடுகிறார், இப்பாட்டில். எம்பெருமானுடைய திவ்வியாயுதங்களையும், அட்டதிக்பாலகர்களையும், வாஹநத்தையும் விளித்து, நீங்களெல்லாருமாகச் சேர்ந்து உறங்காமல் கண்விழித்துக் கொண்டிருந்து எம்பெருமானுடைய படுக்கைப்பற்றை நோக்கிக் கொண்டிருங்களென்கிறார்.

உறகல் - உறங்கவேண்டா என்ற பொருளையுடைய உறங்கல் என்னும் எதிர்மறை யேவலொருமைவினைமுற்றின் சிதைவு. 'உறகல் உறகல் உறகல்' என்ற அடுக்குத்தொடர், அச்சம் பற்றியது. 'இறவுபடாமல் உறகல்' என இயையும்; அன்றி, 'இறவுபடாமல் இருந்த' என அடைவே இயைத்து, என்றும் இறவாமல் வாழ்கின்ற என்று பொருள் கொள்வாருமுளர். [எண்மருலோகபாலீர்காள்.] "இந்திரனங்கி யமனிருதி வருணன், வந்தவாயு குபேரனீசானன், என்ன வெண்டிசை யுலோகபாலகர்" என்பது திவாகரம்.

அரவத் தமளியி னோடு மழகிய பாற்கட லோடும்
அரவிந்தப் பாவையுந் தானு மகம்படி வந்து புகுந்து
பரவைத் திரைபல மோதப் பள்ளிகொள் கின்ற பிரானைப்
பரவுகின் றான்விட்டு சித்தன் பட்டினங் காவற் பொருட்டே. (௧௦)

அரவத்து அமளியினோடும் - திருவனந்தாழ்வானாகிற படுக்கையோடும் கூட,
அழகிய - அழகு பொருந்திய
பால் கடலோடும் - திருப்பாற் கடலோடுங்
அரவிந்தப்பாவையும் தானும் - செந்தாமரைமலர் மகளாகிய பெரிய பிராட்டியாரும் தானுமாக
வந்து - எழுந்தருளி
அகம் படி - (எனது) ஹ்ருதயத்தினுள்
புகுந்து - பிரவேசித்து,
பரவை - (அந்தத்) திருப்பாற்கடலினுடைய
பல திரை - பல அலைகள்
மோத - தளும்ப
பள்ளி கொள்கின்ற - திருக்கண் வளர்ந்தருளாநின்ற
பிரானை - உபகாரகனான எம்பெருமானை
விட்டு சித்தன் - பெரியாழ்வார்
பட்டினம் காவல் பொருட்டு - ஆத்மரக்ஷண நிமித்தமாக
பரவுகின்றான் - போற்றுகின்றார்.

குறிப்பு:—“பைக்கொண்ட பாம்பணையோடும் - மெய்க்கொண்டு வந்து புகுந்து - கிடந்தார்” என்று உபக்ரமத்தில் அருளிச்செய்தபடியே நிகமித்தருளுகிறார். எம்பெருமானுக்குத் திருப்பாற்கடலிலும் திருவனந்தாழ்வானிடத்தும் மிக்க அன்பாதலால் அவற்றைவிட்டுப் பிரிந்துவரமாட்டாமல் அவற்றையும் உடன்கொண்டெழுந்தருளினனென்க. இது, மற்றுமுள்ள நித்யஸூரிகளோடுங் கூட எழுந்தருளினமைக்கு உபலக்ஷணமென்பர். அமளி - படுக்கை. அரவிந்தம் - வடசொல். பாவை - உவமையாகுபெயர். அகம்படிவந்து புகுந்து—அந்தரங்கபரிஜநங்களோடு கூடவந்து புகுந்து என்று முரைப்பர். பரவை - கடல்; எம்பெருமான் அழைத்துக்கொண்டுவந்த திருப்பாற்கடல். “பட்டினம் காவல் பொருட்டுப் பரவுகின்றான்” - (இப்படி) ஆத்துமாவைக்காத்தருளின உபகாரத்திற்காகப்போற்றுகின்றான் என்றபடி.

அடி:—நெய் சித்திர வயிற்றில் மங்கிய மாணி உற்ற கொங்கை ஏதம் உறகல் அரவத் திக்க.

## இரண்டாந்திருமொழி உரை முற்றுப்பெற்றது.

---

## மூன்றாந்திருமொழி,

## துக்கச் சுழலை.

---

அவதாரிகை:—எம்பெருமான் தமது திருவுள்ளத்திற் புகுந்து தம்மைப் பாதுகாத்தருளினபடியைப் பரக்க அருளிச்செய்த ஆழ்வாரை நோக்கி, எம்பெருமான், “ஆழ்வீர்! நாம் வந்த காரியம் குறையறத் தலைக்கட்டிற்றன்றோ? இனி நாம் இருப்பிடத்தேறப் போகலாமிறே” என்ன; அதற்கு ஆழ்வார் “ஆ! ஆ! ஆ! இங்ஙனே அருளிச்செய்யலாமோ? இனி என்னை விட்டுப்போகை யென்று ஒரு பொருளுண்டோ! போகவொண்ணாது போகவொண்ணாது” என்று தடுத்து வளைப்பதாய்ச் செல்லுகிறது, இத்திருமொழி.

அன்றி, இதுவரை நோய்களறும்படி செய்தருளினமையால், அநிஷ்ட நிவாரணம் செய்ததாயிற்று; இனி இஷ்டப்ராபணமுஞ் செய்தருளவேணுமெனப் பிரார்த்திக்கிறபடியுமாம். [ரக்ஷணமாவது - அநிஷ்டங்களைத் தவிர்த்தருளுதலும், இஷ்டங்களை அளித்தருளுதலும் என்பது அறியத்தக்கது.]

கீழ் நான்காம்பத்தில் இரண்டு திருமொழிகளினால், எம்பெருமான் திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருக்குமிருப்பை அநுபவித்தவிவர், மீண்டும் அவ்வநுபவத்தை விரும்பி நிற்கின்றமையும் இத்திருமொழியிற் பெறப்படும்.

துக்கச் சுழலையைச் சூழ்ந்து கிடந்த வலையை யறப்பறித்துப்
புக்கினிற் புக்குன் னைக்கண்டு கொண்டே னினிப்போக விடுவதுண்டே
மக்க ளறுவரைக் கல்லிடை மோத விழந்தவள் தன்வயிற்றில்
சிக்கன வந்து பிறந்துநின்றாய் திருமா லிருஞ்சோலை யெந்தாய். (க)

மக்கள் அறுவரை - (உனக்கு முன்பிறந்த) ஆறு பிள்ளைகளையும்
கல் இடை மோத - (கம்ஸனானவன்) கல்லில் மோதிமுடிக்க, (அதனால்)
இழந்தவள் தன்-(அம்மக்களறுவரையும்) இழந்தவளான தேவகியினுடைய
வயிற்றில்-திருவயிற்றில்
சிக்கன வந்து - சடக்கென வந்து
பிறந்து நின்றாய்-திருவவதரித்தருளினவனே!
திருமாலிருஞ் சோலை எந்தாய் (எல்லார்க்கும் எளியனாம்படி) திருமாலிருஞ் சோலையில் (எழுந்தருளியிருக்கிற) எம்பெருமானே!,
புக்கினில் புக்கு - (நீ) புகுந்தவிடங்களிலெல்லாம் (நானும்) புகுந்து
உன்னை - உன்னை
கண்டு கொண்டு-ஸேவித்து,
துக்கம் சுழலையை சூழ்ந்து கிடந்த - துக்கங்களாகிற சுழலாற்றைச் சுற்றுமதிளாகக் கொண்டிருக்கிற
வலையை - வலைபோன்ற சரீரத்தில் நசையை
அற - அறும்படி
பறித்தேன்-போக்கிக்கொண்ட அடியேன்
இனி-(உன்னைப்) பிரயாஸப்பட்டுப்பெற்ற பின்பும்
போக விடுவது உண்டே - (வேறிடத்திற்குப்) போகும்படி விடுவது முண்டோ?

குறிப்பு:—இரண்டாமடியில், "கண்டுகொண்டேன்" என்றவிடத்துள்ள ஏன் விகுதியைப்பிரித்து, முதலடியிறுதியிலுள்ள 'பறித்து' என்பதனோடுகூட்டி யுரைக்கப்பட்டது. இனி, இருந்தபடியே அந்வயித்துப் பொருள் கொள்ளுதலும் ஒருவாறு ஒக்குமென்க.

பரத்துவம், அந்தர்யாமித்துவம், வியூஹம், விபவம், அர்ச்சாவதாரம் என்று சொல்லப்படுவனவும், உன்னுடைய பிரவேசமுள்ளனவுமான விடங்களிலெல்லாம் தட்டித்திரிந்து உன்னை ஸேவித்து, பலவகைத் துன்பங்களுக்கு இடமான இச்சரீரத்தில் விருப்பை ஒழித்துக்கொண்ட அடியேன் இனி ஒரு நொடிப்பொழுதும் உன்னை விட்டகலகில்லேன் என்கிறார், முன்னடிகளால். சுழலை - சுழன்று சுழன்று வருகிற ஆறு. துக்கங்கள் இச்சரீரத்தைச் சூழவளைந்துகொண்டிருப்பதனால், அவற்றைச் சுழலையாக உருவகப்படுத்தினர். அன்றி, 'சுழலையை' என்றவிடத்துள்ள இரண்டனுருபைத் 'துக்கம்' என்பதனோடுகூட்டி, 'சுழலைத் துக்கத்தை' என இயைத்து, சுழன்று சுழன்று வருதலையுடைய துக்கத்தை என உரைத்தலுமொன்று. 'சூழ்ந்து கிடந்த' என்பதைச் சூழ்த்துக்கிடந்த என வலிக்க; பிறவினையில் வந்த தன்வினை. வலை என்றசொல் ஆகுபெயரால் உடலை உணர்த்திற்று, "வலை என்றகிது, தப்பவொண்ணாமையைப்பற்ற; வலையாவது கயிறும்பிணியுமாயிருப்பதொன்று; இதுவும் நரம்பு மெலும்புமாயிருப்ப தொன்றிறே" என்ற வியாக்கியானவாக்கியமிங்கு அறியத்தக்கது.

இனி, 'துக்கச் சுழலை' என்று — துக்கங்கள் சுழல்வதற்கு இடமான ஆத்துமாவைச் சொல்கிறாய், அதைச் சூழ்ந்துகிடந்தவலை என்று - அவித்யாகர்மவாஸநாருசிகளைச் சொல்லுகிறதாகவுங் கொள்ளலாம்.

புக்கினில் - 'புக்கவதனில்' என்பதன் மரூஉ. பரத்வ, அந்தர்யாமித்வ, வ்யூஹ, விபவ, அர்ச்சாவதாரங்களளவாகப் புக்குக்காண்கையாவது - அந்த அந்த நிலைகளைப் ப்ரத்யக்ஷஸமாநாகாரமான மாநஸஸாக்ஷாத்காரத்தினால் அநுபவித்துப் பாடுகை.

[மக்களறுவரை இத்யாதி.] வஸுதேவனும் தேவகியும் கம்ஸனாற் சிறையிலிருத்தப்பட்டு வடமதுரையில் தளைபூண்டிருக்கையில், திருமால் தேவகியினிடம் எட்டாவது கருப்பத்திற் கண்ணனாய் அவதரித்தபடி சொல்லுகிறது. கம்ஸன் தனது உடன் பிறந்தவளாகிய தேவகியை வஸுதேவர்க்கு விவாஹஞ்செய்வித்து, அவ்விவாஹம் முடிந்தபின் அவளை வஸுதேவர் மாளிகையிற் கொண்டுவிடுகைக்காகத் தேரேற்றிக்கொண்டு, தான் தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரைநடத்திக் கொண்டு வரும்போது, ஆகாயத்தில், "அறிவு கேடனே! நீ யாரிடம் அன்பு பூண்டிருக்கின்றனையோ அத்தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப் போகிறது" என்றொரு அசரீரிவாக்குப் பிறக்க, அதனைக் கேட்ட கம்ஸன் மிகவுந் திடுக்கிட்டு, 'இனி நாம் தப்பவழி யாது' என்று யோசித்து, 'இவள் பிழைத்திருந்தாலன்றோ இவளுடைய எட்டாவதுபிள்ளை நம்மைக் கொல்லப் போகிறது, இப்போதே இவளைக் கொன்றுவிடுவோம்' என்றறுதியிட்டுக் கத்தியை உருவிக்கொண்டு தேவகியைக் கொலைசெய்யப்புக, வஸுதேவர் அவனுக்குப் பலதருமங்களையும் காலகதியையும் பரக்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஒரே பிடிவாதமாய் நிற்க, பின்பு வஸுதேவர், 'அப்பா! உனக்கு இவள் கையால் சாவு இல்லை, இவளுடையபிள்ளை கையினாலல்லவோ சாவு நேரிடப்போகிறது, இவளுக்குப்பிள்ளை பிறந்தவுடன் உன்னிடம் அப்பிள்ளைகளைக் கொடுத்துவிடுகிறேன், நீ அவற்றைக் கொன்றுவிடு என்று சொல்ல, அதைக் கம்ஸன் யுக்தமென்று கொண்டு இத்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான்; சிலநாள் கழிந்தபின் தேவகி கர்ப்பந்தரித்துப் பிள்ளை பெற்றாள்; வஸுதேவர் அப்பொழுதே அப்பிள்ளையைக் கம்ஸனிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிட, அவன் அதைக் காலைப்பிடித்துக் கல்மேல் அறைந்து கொன்றுவிட்டான்; இம்மாதிரி ஆறுபிள்ளைகளைக் கொன்றான். அவ்வரலாறு இதில் மூன்றாமடியிற் கூறப்படுகின்றது. (இனி, ஏழாவது கர்ப்பத்தின் வரலாறு:—எம்பெருமானால் நியமிக்கப்பட்ட யோகநித்திரை யெனப்படும் மாயை, நந்தகோபருடைய கோகுலத்திலிருந்த வஸுதேவபத்தினியான ரோஹிணியின் வயிற்றிலிருந்த வாயுரூபமான ஆறுமாதத்துக் கர்ப்பத்தைக் கலைத்துவிட்டு வஸுதேவருடைய மற்றொருபத்தினியான தேவகியின் வயிற்றிலிருந்த ஆதிசேஷாம்சமான கர்ப்பத்தைக் கொண்டுபோய் அந்த ரோஹிணியின் வயிற்றிற்சேர்த்திட, இங்ஙனம் வஸுதேவபத்தினிகளுள் தேவகியின் கர்ப்பத்தில், (ஏழாவது கருவாக,) ஆறு

மாஸமும், ரோஹிணியின் கர்ப்பத்தில் மற்றோர் ஆறுமாஸமும் இருந்து பல ராமன் பிறந்தனன்.) பின்பு எட்டாவது கர்ப்பத்திற் கண்ணபிரான் திருவவதரித்தனன்.

ஆழ்வார் இவ்விருத்தாந்தத்தை இங்குக் கூறியது - இங்ஙனம் இழந்த தேவகியைப் பேறுபெறுவித்தாற்போல், அடியேனையும் இழக்கவொட்டாதபடி அருள்செய்யவேணும் என்று பிரார்த்திக்கின்றவாறும். கல்லிடைமோத - கல்மேல் அறைய என்றபடி. ... ... ... (௧)

வளைத்துவைத் தேனினிப் போகலொட்டே னுன்ற னிந்திர ஞாலங்களால்
ஒளித்திடில் நின்திரு வாணைகண்டாய் நீயொரு வர்க்கும் மெய்யனல்லை
அளித்தெங்கும் நாடு நகரமுந் தம்முடைத் தீவினை தீர்க்கலுற்றுத்
தெளித்து வலஞ்செய்யுந் தீர்த்தமுடைத் திருமா லிருஞ்சோலை யெந்தாய். (௨)

நாடும்-நாட்டிலுள்ளாரும்
நகரமும் - நகரத்திலுள்ளாரும்
எங்கும் - மற்றெங்குமுள்ளவர்களும்
அளித்து - நெருங்கி
தம்முடை - தங்கள் தங்களுடைய
தீ வினை - துஷ்கர்மங்களை
தீர்க்கல் உற்று - ஒழிப்பதில் விருப்புற்று
தெளித்து - ஆரவாரித்துக்கொண்டு
வலம் செய்யும் - பிரதக்ஷிணஞ் செய்யப் [பெற்ற
தீர்த்தம் உடை - தீர்த்த விசேஷங்களையு [டைய
திருமாலிருஞ் சோலை - திருமாலிருஞ்சோ [லையில்
(எழுந்தருளியிருக்கிற)
எந்தாய்-எம்பெருமானே!
வளைத்து வைத்தேன் - (உன்னைச்) சூழ்த் [துக் கொண்டேன்;
இனி-இனிமேல்
போகல் ஒட்டேன் - (நீ வேறிடந்தேடிப்) போவதை (நான்) ஸம்மதிக்க மாட்டேன்;
உன் தன்-உனக்கு உள்ள
இந்திர ஞாலங்களால்-மாயச்செய்கையில் [வல்லமையினால்
ஒளித்திடில் - (உன்னை நீ) ஒளித்துக்கொ [ண்டால்
நின் திரு ஆணை - உனது பிராட்டியின் [மேலாணை
(அப்படி ஒளிக்கலாகாது;)
நீ - நீ
ஒருவர்க்கும் - ஒருவரிடத்திலும்
மெய்யன் அல்லை - உண்மையான உக்தி அனுட்டானங்களை யுடையவனல்லை.

குறிப்பு:—ஏழைகளாயிருப்பவர் செல்வர் மாளிகைவாசலைப் பற்றிக்கொண்டு 'யாம் வேண்டுகின்றவற்றை நீதந்தாலன்றி உன்னைவிடமாட்டோம்' என்ற உறுதியுடன் அவர்களை வளைத்துக் கொண்டிருப்பது போலவும், பரதாழ்வான் சித்திரகூடத்தேறப் போந்து இராமபிரானை வளைத்துக் கொண்டாற்போலவும் நான் உன்னை வளைத்துக்கொண்டேன்; உன்னால் தப்பிப் போகவொண்ணாது என்று எம்பெருமானை நோக்கி ஆழ்வார் அருளிச்செய்ய; அதற்கு எம்பெருமான், "ஆழ்வீர்! 'மம மாயா து³ரத்யயா' என்று என் மாயையில் உலகமுழுவதையும் பிணிப்புண்டிருக்கச் செய்யவல்ல யான், உம்முடைய வளைப்பில் நின்றும் என்னைத் தப்பவைத்துக் கொள்ளவல்லேனல்லேனோ" என்ன; அதற்கு ஆழ்வார், 'உன் பிராட்டியின்மேலாணை' நீ தப்பிப்போய், உன்னை ஒளித்துக்கொள்ளலாகாது" என்று ஆணையிட; எம்பெரு

மான், "ஆழ்வீர்! இது என்காணும்? ஆணையிடுவதற்கு இப்போது என்ன பிரஸக்தி?" என்று கேட்க; அதற்கு ஆழ்வார், "எம்பெருமானே! 'நமே ஜயம் கபாசவந' [(அடியார்களை) ஒருபடியாலும் கைவிடமாட்டேன்] என்று நீ ஓதிவைத்ததெல்லாம் பொய்யாய்த்தலைக்கட்ட நேரிட்டதே என்று ஆணையிடுகிறேன்" என்பதாய்ச் செல்லுகிறது, இப்பாட்டின் முன்னடி. "என்னெஞ்சத் துள்ளிருந்திங்கினிப்போய்ப் பிறரொருவர், வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன்வளைத்து வைத்தேன்" என்ற கலியனருளிச்செயல், முதல் அரையடியோடு ஒப்புநோக்கத்தக்கது. இந்த்ரஜாலம் - கண்கட்டு வித்தை. ஒளித்திடில் - நீ மறைந்தாயாகில் என்றபடி. [நின்திருவாணைகண்டாய்.] "மாயஞ்செய்யேலென்னை உன் திருமார்வத்துமாலைநங்கை, வாசஞ்செய்பூங்குழலாள் திருவாணை நின்னாணைகண்டாய்" என்ற திருவாய்மொழி அறிக. ஆணையிட்டால் அதை மறுக்கமுடியாதென்று கருத்து. [நீ ஒருவர்க்கும் மெய்யனல்லை.] "கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித்தாங்கே ஒருத்திதன்பால், மருவிமனம்வைத்து மற்றொருத்திக்குரைத்து ஒருபேதைக்குப் பொய்குறித்துப், புரிகுழன்மங்கை யொருத்தி தன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை, மருதிறுத்தாயுன் வளர்த்தியோடே வளர்கின்றதாலுன்றன் மாயைதானே" என்ற பெருமாள் திருமொழியை நினைக்க. அல்லை - முன்னிலையொருமை வினைமுற்று.

பின்னடிகளின் கருத்து:—உலகத்தாரனைவருந் திரண்டு, தம்முடைய பாவங்களையெல்லாம் தொலைத்துக்கொள்ள விரும்பிப் பேராரவாரஞ் செய்துகொண்டு திருமாலிருஞ்சோலையிலுள்ள சிலம்பாறுமுதலிய பலதீர்த்த விசேஷங்களைப் பிரதக்ஷிணம்செய்வதைக் கூறியவாறு. வலஞ்செய்தலைக் கூறியது - மற்றுள்ள வழிபாடுகளுக்கெல்லாம் உபலக்ஷணமென்க. இனி, வலஞ்செய்வதற்கு உரியதும், தீர்த்தவிசேஷங்களை யுடையதுமான திருமாலிருஞ்சோலைமலை யென்று பொருள் கொள்ளினுமாம்; அப்பொருளில் "வலஞ்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை, வலஞ்செய்துநாளும்மருவுதல் வழக்கே" என்ற திருவாய்மொழி நினைக்கத்தக்கது. பின்னடிகளுக்கு வேறுவகையாகவும் பொருளருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை. (௨)

உனக்குப் பணிசெய் திருக்குந்தவ முடையே னினிப்போ யொருவன்
தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கைநின் சாயை யழிவுகண்டாய்
புனத்தினைக் கிள்ளிப் புதுவவிக் காட்டியுன் பொன்னடி வாழ்கவென்
றினக்கு றவர்பு தியதுண்ணு மெழின்மா லிருஞ்சோலை யெந்தாய். (௩)

இனம் குறவர் - திரள் திரளாய்ச் சேர்ந்துள்ள குறவர்கள்
புனம் - புனத்திலுண்டான
தினை - தினைகளை [தாந்ய விசேஷம்.]
கிள்ளி - பறித்து
புது அவி காட்டி - (அதை எம்பெருமானுக்குப்) புதிய ஹவிஸ்ஸாக அமுது செய்தருளப்பண்ணி (அதற்காகப் பிரயோஜநாந்தரத்தை விரும்பாமல்)
உன் பொன் அடி வாழ்க என்று } "உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்று (மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு)
புதியது - புதிதாகிய அத்தினையை
உண்ணும் - உண்ணுதற்கு இடமான

எழில் - அழகு பொருந்திய
மாலிருஞ் சோலை - திருமாலிருஞ் சோலை [மலையில் (எழுந்தருளியிருக்கிற)
எந்தாய் - எம்பெருமானே!
உனக்கு - (சேஷியாகிய) உனக்கு
பணி செய்து இருக்கும் தவம் உடையேன் } கைங்கரியம் பண்ணிக்கொண் [டிருக்கையாகிற (உனது) அநுக்ரயன்
இனி - இனிமேல்

போய் - புறம்பே போய்
ஒருவன் தனக்கு பணிந்து } ஒரு க்ஷுத்ரபுருஷனைப் பற்றி
கடைத் தலை - (அவனுடைய) வீட்டு வாச [லிலே
இற்கை - (கதிதேடி) இற்பதானது
நின் சாயை அழிவு கண்டாய் } உன்னுடைய மேன்மைக்குக் குறையன்றோ?

குறிப்பு:—மகரந்தமமர்ந்த அரவிந்தத்தின் சுவையறிந்த வண்டு மீண்டொரு முள்ளிப்பூவைத்தேடி ஓடாதவாறுபோல, உன்னுடைய கைங்கரியரஸமறிந்த அடியேன், இனி மற்றொருவன் வாசலைத்தேடி ஓடமாட்டேன்; அப்படி என்னை நீ ஓடவிட்டால் அது உன்றன் மேன்மைக்கே குறையாமத்தனை; ஆதலால் அடியேனை நெறிகாட்டிநீக்காது திருவுள்ளம் பற்றியருளவேணுமென்று பிரார்த்திக்கின்றமை முன்னடிகளிற் போதருமென்க. தவம்-தபஸ். ஒருவன்றனக்குப் பணிந்து — ஒருவன்றன்னைப் பணிந்து என்றவாறு; உருபுமயக்கம். கடை - வாசல்; தலை-ஏழனுருபு: வாசலிலே என்றபடி. சாயை - தேஜஸ்ஸு; அதாவது — ஸர்வாதிகத்வம். ச்சாயா என்ற வடசொல் திரிந்தது.

கீழ் நான்காம்பத்தில், இரண்டாந்திருமொழியில், இரண்டாம் பாட்டில், "எல்லாவிடத்திலுமெங்கும்பரந்து பல்லாண்டொலி, செல்லாநிற்குஞ்சீர்த் தென்திருமாலிருஞ்சோலையே" என்றதை விவரிக்கின்றன, இவ்வடிகள். இத்திருமலையிலுள்ள குறவர்கள் கொல்லைகளில் வளர்ந்துள்ள தினைக்கதிர்களைப் பறித்து அவற்றைப் பரிஷ்கரித்து எம்பெருமானுக்கு அமுது செய்வித்து, 'தாங்கள் அநந்யப்ரயோஜநர்' என்னுமாகாரம் வெளியாம்படி "உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்று மங்களாசாஸநம் செய்துகொண்டு, அந்தப் புதியதினைமாவை உண்பராம். தினை — ஓர்சாமை. இதனை மாவாக்கி உண்பது குறவர்முதலியோரது சாதியியல்பு. "யதந்ந: புருஷோ பவதி ததந்நாஸ்தஸ்ய தேவதா:" என்பவாகலின், தமக்கு ஏற்ற உணவையே எம்பெருமானுக்கு மிட்டனரென்க. குலசேகரப்பெருமாளுடைய அனுட்டானமுமறியத்தக்கது. இங்குத் தினை என்ற சொல், அதன் கதிர்களைக் குறிக்கும்; பொருளாகுபெயர். "புனத்தினைகிள்ளி" என்றபாடம் சிறக்குமென்க. அவி - 'ஹவிஸ்' என்னும் வடசொல்விகாரம்; தேவருணவு என்பது பொருள்; அவிக்காட்டி என்றது — எம்பெருமானுக்குப் போஜ்யமாம்படி காட்டி என்றபடி. வாழ்க - வியங்கோள்வினைமுற்று. இனம் - கூட்டம். புதியதுண்கை - கல்யாணச்சாப்பாடாக உண்கை என்றுமாம் (௩)

காதம் பலவுந் திரிந்துழன்றேற் கங்கோர் நிழலில்லை நீரில்லையுன்
பாத நிழலல் லால்மற்றோ ருயிர்ப்பிடம் நானெங்குங் காண்கின் றிலேன்
தூதுசென் றாய்குரு பாண்டவர்க்கா யங்கோர் பொய்ச்சுற்றம் பேசிச்சென்று
பேதஞ் செய்தெங்கும் பிணம்படுத்தாய் திருமா லிருஞ்சோலை யெந்தாய். (௪)

குரு - குருவம்சத்திற் பிறந்த
பாண்டவர்க்காய் - பாண்டவர்களுக்காக
ஓர் பொய் சுற்றம் பேசிச் சென்று } ஒரு பொய்யுறவைப் பாராட்டிக் கொண்டு
அங்கு - துரியோதனனிடத்து
தூது சென்றாய் - தூதுபோய்
பேதம் செய்து - (இரண்டு வகுப்பினர்க்கும் கலஹத்தை மூட்டி
(பின்பு பாரதயுத்தங் கோடித்து, அந்த யுத்தத்தில்)
எங்கும் - துரியோதனனியரில் ஒருவர்தப்பாமல்
பிணம் படுத்தாய் - பிணமாக்கி | யொழித்தருளினவனே!
திருமாலிருஞ்சோலை எந்தாய்! —;
காதம் பலவும் - பலகாத தூரமளவும்

திரிந்து உழன்றேற்கு - திரிந்து அலைந்த எனக்கு
அங்கு - அவ்விடங்களில்
ஓர் நிழல் இல்லை - (ஒதுங்குகைக்கு) ஒரு நிழலுங் கண்டதில்லை;
(அன்றியும்,)
நீர் - (தாபமாற்றக் கடவதான) தண்ணீரும்
இல்லை - கண்டதில்லை;
(ஆராய்ந்து பார்த்தவிடத்தில்)
உன் பாதம் நிழல் அல்லால் } உனது திருவடி நிழலொழிய
மற்று ஓர் - மற்றொரு
உயிர்ப்பு இடம் - ஆச்வாஸ ஹேதுவான இடத்தை
நான் எங்கும் காண்கின்றிலேன் } நான் ஓரிடத்தும் காண்கிறேனில்லை.

குறிப்பு:—"அங்கோர் நிழலில்லை நீருமில்லை" என்ற அத்யாபகபாடத்தில் செய்யுளோசை விகாரப்படுதல் காண்க. "இலங்கதிமற்றொன்று......நலங்கழலவனடி நிழல் தடமன்றியாமே" என்ற திருவாய்மொழியை ஒக்கும் முன்னடிகள். இந்த ஸம்ஸாரபூமிக்குள் கண்ணுக்கும் நெஞ்சுக்கும் எட்டினவிடம் எத்தனை யோஜனைதூரமுண்டோ, அவ்வளவும் அடியேன் தட்டித் திரிந்தாயிற்று; ஓரிடத்திலும் ஒதுங்க ஒருநிழல் பெற்றிலேன்; குடிக்கத் துளிதண்ணீரும்பெற்றிலேன். (லௌகிகர்கள் ஒதுங்குகிற நிழலும், அவர்கள் பருகும் நீரும் அடியேனுக்கு விஷவ்ருக்ஷத்தின் நிழலாகவும் நச்சுநீராகவும் தோற்றாநின்றன.) ஆதலால், உனது திருவடிநிழலைத்தவிர்த்து மற்றொன்றை நான் ப்ராணதாரகஸ்தலமாக நெஞ்சிற்கொண்டிலேன், கண்ணிலுங்காண்கின்றிலேன் என்கிறார். திரிந்து உழன்றேற்கு-உழன்று திரிந்தேற்கு என விகுதிபிரித்துக் கூட்டுதலுமாம். உழல்தல்-ஆயாஸப்படுதல். [உன்பாத நிழலல்லால்] "வாஸுதேவதருச்சாயா நாதிஶீதா நகர்மதா। நரகாங்காரஶமநீ ஸாகிமர்த்தம் நஸேவ்யதே?" என்றது அறிக. உயிர்ப்பு - மூச்சுவிடுதல்.

கீழ்ப்பாட்டில், "இனிப்போயொருவன்றனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின்சாயையழிவுகண்டாய்" என்று ஆழ்வாரருளிச் செய்தவாறே, எம்பெருமான் ஆழ்வாரை நோக்கி, 'ஆழ்வீர்! நீர் புறம்புபோய்நிற்பது என் சாயைக்கு அழிவானால் ஆகட்டும்; அப்படி நிற்கும்படியாகப்புறம்பே ஓரிடமுமக்கு உளதோ?" என்று கேட்க; வேறு ஓரிடமுங் கிடையாதென்கிறார், இப்பாட்டால்.

[தூதுசென்றாய் இத்தியாதி.] "உறவு சுற்றமொன்றொன்றிலாவொருவன்" என்றபடி ஒருவனைச் சுற்றமுமற்றவனை கண்ணபிரான் பாண்டவர் பக்கலில் பந்துத்வம் பாராட்டியது - "இன்புறு மிவ்விளையாட்டுடையான்" என்றதற்கேற்ப லீலாநுகுணமாக ஆரோபிதாகாரமாதலால் "பொய்ச்சுற்

றம்'' எனப்பட்டது. 'பேசிச்சென்று' என்றது - வார்த்தைப்பாடாய் பாராட்டி என்றபடியென்பர். இனி, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான அச்சுப்பிரதிகள் சிலவற்றில், "பொய்ச்சுற்றம் - உங்களோடு பாண்டவர்களோடு வாசியில்லை யென்று" என்றொரு வாக்கியங் காணப்படுதலால் அதற் கேற்பப் பொருள் கொள்ளுதலும் ஒன்று; ஆனால் கண்ணபிரான் துரியோதநாதியரை நோக்கி, 'எனக்கு உங்களிடத்திலும் பாண்டவர்களிடத்திலும் ஒரு நிகரான பக்ஷபாதமே உள்ளது'' என்று அருளிச் செய்ததாகச் சொல்லப்படுகிற விருத்தாந்தம் பாரதம் முதலிய முதனூற்களிற் காணப்படுகின்றதா வென்பது ஆராயத்தக்கது. கண்ணபிரான் தூது செல்லும் போது வழியிடையில் விதுரர்திருமாளிகையில் அமுது செய்துவிட்டு வந்தமை கண்ட துரியோதநன், 'புண்டரீகாக்ஷனே! பீஷ்மரையும் துரோணரையும் என்னையும் ஒருபொருளாக மதியாமல் ஏதுக்காக பள்ளிப்பயலிட்டசோற்றை உண்டனை?' என்று கேட்டதற்கு, கண்ணபிரான் 'எனக்கு உயிர் நிலையாயிரா நின்றுள்ள பாண்டவர்கள் திறத்து நீ பகைமை பூண்டிருக்கின்றமையால் எனக்கும் பகைவனாயினை; பகைவனது சோற்றை யுண்பது உரியதாகுமோ?' என்று உத்தரங் கூறினதாக மஹாபாரதத்திற் காணப்படுகின்றமையால், அதற்கு விருத்தமாக இங்ஙனே பொய்ச்சுற்றம் பேசினதாகக் கூறப்படுமோ? ஒருகாற்பேசியிருந்தாலும் துரியோதநாதியர் அப்பேச்சை ஏற்றுக்கொள்வரோ? ஒரு க்ஷணத்திற்கு முன் எம்மை நீ பகைவராகப் பேசினையே' என்று மடிபிடித்துக் கொள்ளார்களோ? என்று சிலர் சங்கிப்பர்கள்; அதற்குப் பரிஹாரம் வருமாறு:— கண்ணபிரான் துரியோதநாதியரைப் பகைவராகக்கூறியது முதல் முதலாக அவர்களைக்கண்டபோது; பொய்ச்சுற்றம் பேசியது-பிறகு ஸமாதாநம் பேசுங்காலத்தில்; முன்புபகைவராகச் சொன்ன பேச்சைத்துரியோதநன் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வல்லவனல்லன்; "உன்முகம் மாய மந்திரந்தான் கொலோ" என்றபடி கண்ணபிரானது முகவழகில் மயங்காதாரில்லையாதலால், துரியோதனனும் அதில் மயங்கி, முந்தியபேச்சை மறந்துவிடுவான்; "கிமர்த்தம் புண்டரீகாக்ஷ ... ம்?" என்று பழிக்கப் புக்கபோதும், "புண்டரீகாக்ஷ!" என்று - கண்ணழகில் மயங்கித் தோற்று விளித்தவனிறே துரியோதநனென்பவன். இப்பன்னியுரைக்குங்காற் பாரதமாம்.' பேதம் செய்து - 'பிணங்காதொழியப்றில் எங்களுக்கு ஒரூரமையும்' என்ற பாண்டவர்களைப் பத்தூர் கேட்கும் பண்ணி, அதுவேஹேதுவாக இரண்டுவகுப்பினர்க்கும் வைரத்தைவளர்த்து அவர்களுறவைக்குலைத்து என்றவாறு. அன்றி, ஆச்ரிதரென்றும் அநாச்ரிதரென்றும் இங்ஙனே ஒரு வாசியைக் கற்பித்து என்று முரைப்பர். பேதம் - பேதஃ என்ற வடசொல் திரிபு. எங்கும் - கண்ணுற் கண்டவிடமெங்கும் என்றுமாம். "கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப்போர், எல்லாச்சேனையும் இருநிலத்து அவித்தவெந்தாய்'' என்ற திருவாய்மொழி இங்கு நோக்கத்தக்கது. பிணம் - சவம். ... ... ...

காலு மெழாகண்ண நீரும்நில் லாவுடல் சோர்ந்து நடுங்கிக்குரல்
மேலு மெழாமயிர்க் கூச்சு மறுவென தோள்களும் வீழ்வொழியா
மாலுக ளாநிற்கு மென்மன மேயுன்னை வாழத் தலைப்பெய்திட்டேன்
சேலுக ளாநிற்கும் நீள்சுனைசூழ் திருமா லிருஞ்சோலை யெந்தாய். (௫)

சேல் - மீன்களானவை [இடமான உகளா நிற்கும் - துள்ளி விளையாடுதற்கு நீள் சுனை சூழ் - பெரிய தடாகங்களாலே [சூழப்பெற்ற திருமாலிருஞ் சோலை - திருமாலிருஞ்சோ [லையில் (எழுந்தருளியிருக்கிற) எந்தாய் - எம்பெருமானே! (எனக்கு உன்னிடத்துள்ள அன்பு மிகுதியினால்) என - என்னுடைய காலும் - கால்களும் [கின்றனவில்லை; எழா - (வைத்த விடத்தை விட்டுப்) பேர் கண்ணநீரும் - கண்ணீரும் நில்லா - உள்ளே தங்குகின்றன வில்லை; உடல் - சரீரமானது [யதனால் சோர்ந்து நடுங்கி - கட்டுக்குலைந்து நடுங்கி குரலும் - குரலும் மேல் எழா - கிளம்புகின்றதில்லை; மயிர் கூச்சும் அறு - மயிர்க்கூச்செறிதலும்ஒழி கின்றதில்லை; தோள்களும் - தோள்களும் வீழ்வு ஒழியா - விழுந்துபோவதில் நின் றும் ஒழிந்தனவில்லை [ஒரு வியா பாரமும் செய்யமுடியாமல் விழுந் [தொழிந்தன]; என் மனம் - எனது நெஞ்சானது மால் உகளாநிற்கும் - வியாமோஹத்தை [அடைந்திரா நின்றது; (இப்படிகளால்) உன்னை வாழ தலைப் பெய்திட்டேன் - உன்னால் வாழும்படி [முடிசூடப் பெற்றவனாயினேன்.

குறிப்பு:—மெய்யடியார்கள் பகவத்விஷயத்தில் அவகாஹிக்க வேணு மென்று நெஞ்சில் நினைத்த போதே "காலாழும் நெஞ்சழியுங் கண்சுழலும்" என்றபடி ஸர்வேந்திரியங்களுக்கும் சோர்வு பிறக்குமாதலால், அப்படிப் பட்ட நிலைமை எம்பெருமானருளால் தமக்கு வாய்த்தபடியைக் கூறி, இப்படி மெய்யடியார்களுக்குப் பிறக்கக்கடவதான நிலைமை அடியேனுக்கும் பிறந்த மையால் நான்வாழ்ச்சியில் தலைமைபெற்றேன்என்கிறார், மூன்றடிகளால்; வைத்த அடியை எடுத்து வைத்து நடக்கத் தொடங்கினால், கால் கிளம்புகின் றதில்லை; ஆநந்த பாஷ்பம் இடை விடாது பெருகாநின்றது; சரீரம் கட்டழி ந்துநடுங்காநின்றமையால் வாய்திறந்து ஒருபேச்சுப் பேசமுடியவில்லை; மயிர் க்கூச்சு ஓய்கிறதில்லை; (உன்னைத் தோளாலணைப்போமென்று பார்த்தால்,) தோள்கள் ஒருவியாபாரம் பண்ணவும் வல்லமையற்றுச் சோர்வையடைந்தன; நெஞ்சு பிச்சேறிக்கிடக்கிறது. நாயனே இத்தளர்ச்சிகளைச்சொல்லி அடியேன் வருந்துகிறேனென்று நினைக்கவேண்டா; எனக்கு வாழ்ச்சியாவது இப்படிப் பட்ட அவஸ்தைகள் பிறக்கையே யாதலால், இவ்வவஸ்தைகளைப்பெற்ற அடி யேன் 'உன்னை அநுபவித்து வாழுமவன்' என்று விருதாம்படி முடிசூடப் பெற்றேனென்றவாறு.

வீழ்வொழியா என்பதற்கு, "நிர்விகாரமாய்" என்றிவ்வளவே பெரிய வாச்சான்பிள்ளை பொருளுரைத்ததாக அச்சுப்பிரதிகளிற் காண்கிறது; அது பொருத்த மற்றது; "நிர்வ்யாபாரமாம்" என்றிருந்ததை, "நிர்விகாரமாய்" எனமயங்கி அச்சிடுவித்தனர் என்பர்சிலர்; வீழ்வு-சோர்வு; அதுஒழியாமை யாவது-எப்போதும்சோர்வுற்றிருக்கை. அதாகிறது-நிர்வ்யாபாரத்வம்.இனி, "நிர்விகாரமாய்" என்ற அச்சுப்பிரதிப்பாடத்தை,"நிர்விகாரமாம்" எனத்

திருத்திக்கொண்டு, "நிர்வ்யாபாரமாம்" என்ற பாடத்தின் பொருளையே அதற்குக் கொள்ளுதல் பொருந்து மென்பது கற்றோர் கருத்து. மனமே என்றவிடத்து, ஏகாரம்-இசைநிறை. "உன்னைவாழத் தலைப்பெய்திட்டேன்" என்ற விடத்திற்கு, "உன்னையநுபவித்து வாழுகையிலே மூர்த்தாபிஷிக்தனானேன்" என்று பெரியவாச்சான்பிள்ளை உரைசெய்தருளினராதலால், அதற்கேற்ப "உன்னி வாழத்தலைப் பெய்திட்டேன்" என்று பாடமோதவேணும்; உன்னி - மாநஸாநுபவம் பண்ணி, என்று பொருள், என்று சிலர் கூறினர். அக்கூற்று பொருத்த முற்றதாகத் தோற்றுமாயினும், பெரியோர்களின் திருவுள்ளத்திற்கு அப்பாடம் பொருந்தாமையால் அது எம்மாற் கொள்ளப்படவில்லை. அன்றியும், உன்னைவாழ என்றபாடத்தில் வியாக்கியாநவிரோதமும் இல்லை; உருபுமயக்கமாகக் கொண்டு, 'உன்னால் வாழ' என்று பொருள் கொள்க; உன்னைக்கொண்டுவாழ என்றபடி. இப்பொருளைத்தான் தாத்பர்யமர்யாதையில் உரைத்தருளினர் பெரியவாச்சான் பிள்ளை. ... ... (௫)

எருத்துக் கொடியுடை யானும் பிரமனு மிந்திர னும்மற்றும்
ஒருத்தரு மிப்பிற வியென்னும் நோய்க்கு மருந்தறி வாருமில்லை
மருத்துவ னாய்நின்ற மாமணி வண்ணா மறுபிறவி தவிரத்
திருத்தியுன் கோயில் கடைப்புகப்பெய் திருமா லிருஞ்சோலை யெந்தாய். (௬)

திருமாலிருஞ் சோலை எந்தாய்!—;
எருது கொடி உடையானும் - வ்ருஷபத்வஜனான ருத்திரனும்
பிரமனும் - (அவனுக்குத் தந்தையான) ப்ரஹ்மாவும்
இந்திரனும் - தேவேந்திரனும் வரும்
மற்றும் ஒருத்தரும் - மற்றுள்ள எந்தத் தேவரும்
இ பிறவி என்னும் நோய்க்கு - இந்த ஸம்ஸாரமாகிற வியாதிக்கு
மருந்து அறிவார் இல்லை - மருந்து அறியவல்லவரல்லர்;
மருத்துவன் ஆய் நின்ற - (இப்பிறவி நோய்க்கு) மருந்தை அறியுமவனான
மா மணி வண்ணா - நீலமணிபோன்ற வடிவை யுடையவனே!
மறு பிறவி தவிர - (எனக்கு) ஜந்மாந்தரம் நேராதபடி
திருத்தி - (அடியேனை) சிக்ஷித்து
உன் கோயில் கடை புக பெய் - உன் கோயில் வாசலில் வாழும்படி அருள்புரிய வேணும்.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் "உன்னைவாழத்தலைப் பெய்திட்டேன்" என்று ஆழ்வார் களித்துக் கூறியதைக்கேட்டு எம்பெருமான், "ஆழ்வீர்! உமக்கு அபேக்ஷிதமான புருஷார்த்தம் ஸித்தித்த தன்றோ? இனி ஒரு குறையுமில்லையே" என்ன; அதற்கு ஆழ்வார், "எம்பெருமானே! ஸம்ஸாரநிலத்தில் இக்களிப்பு ஒருபடிப்பட நீடித்து நடவாது; ஸுக்ருததுஷ்க்ருதங்கள் மாறி மாறி நடக்கும்; இப்படியே ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கிக்கிடப்பதற்கு என்னிடத்தாக் கைம்முதலுண்டு; அடிக்கடி உனக்குச் சிரமங்கொடாமல் ருத்ராதிதேவர்களை அடுத்து இப்பிறவிநோயைக் கழித்துக்கொள்வோமென்று பார்த்தால் உன்னையொழியவேறொருவர்க்கும் பிறவிநோயின் மருந்தை அறிவதற்குரிய வல்லமையில்லை; அதனை அறியுமவன் நீயேயாகையால், அந்நோயைநீக்கி என்னை உன் கோயில்வாசலைக் காக்கவல்ல அடியவனாக அமைத்தருளவேணும்" என்று பிரார்த்திக்கிறபடியாய்ச் செல்லுகிறது, இப்பாசுரம்.

எருது + கொடி, எருத்துக்கொடி. அறிவாரும் என்றவிடத்து, உம்மை இசைநிறை யென்னலாம். அன்றி, மருந்து தரவல்லாரில்லாமையே யன்றி அறியவல்லாருமில்லை யென்றவாறுமாம். மருத்துவன் - வைத்தியன்; இங்கு ஆசாரியன் என்பது உள்ளுறை. "ஔஷதமாகவிருந்து ..." என்பது அறியற்பாலது. எம்பெருமான் மருந்துமாவன், மருத்துவனுமாவன்; "மருந்தும் பொருளு மமுதமுந்தானே" "அறிந்தனர்நோய்களறுக்கும் மருந்தே" "மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கென்று, பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரான்" "அருமருந்தாவதறியாய்" என்ற அருளிச் செயல்களை அறிக. உலகத்தில் நோய்க்கு மருந்து வேறு, வைத்தியன்வேறு; அடியாருடைய பிறவி நோய்க்கு மருந்தும் மருத்துவனும் எம்பெருமா னொருவனேயாவன் அன்றியும், அம்மருந்து பலகால் கொள்ளப்படவேணும்; வேறுவகை மருந்துகளின் ஸம்பந்தத்தையும் அது ஸஹிக்கும்; பலன் கொடுப்பதில் ஸந்தேஹமும் அதற்குண்டு; இம்மருந்து அங்ஙனன்றியே, ஸக்ருத்ஸேவ்யம்; தன்னைப் போன்ற வேறொருமருந்தையும் உடைத்தாகாது; பலப்ரதாநத்தில் திண்ணியதுமாம். அந்தமருந்துகள் மலைமேல் வளர்வதுபோல், இதுவும் (திருமாலிருஞ்சோலை) மலையில் வளருவதாம்.

[கோயில் கடைப்புகப்பெய்.] "உன் கடைத்தலையிருந்து வாழுஞ் சோம்பர்" என்ற விடத்திற்கு உதாஹரணமாகக் காட்டப்பட்ட திருக்கண்ண மங்கையாண்டான் நிலைமையை அடியேனுக்கு அருள்செய்ய வேணுமென்கிறார். "திருக்கண்ண மங்கையாண்டான், ஒருஸம்ஸாரி தன்வாசலைப் பற்றிக்கிடந்தொருநாயை நலிந்தவனைவெட்டத் தானுங் குத்திக்கொண்டபடியைக்கண்டு ஒரு தேஹாத்மாபிமாநியினளவு இதுவானால், பரமசேதநனான ஈச்வரன் நம்மை யமாதிகள் கையில்காட்டிக் கொடானென்று திருவாசலைப்பற்றிக் கிடந்தாரிறே" என்ற திருமாலை வியாக்கியானம் காண்க. பெய் - முன்னிலை யொருமை வினைமுற்று.

நஸாநாவ்யஷஸ்வஜா நவவாநவெயாநவெஜௌந்நவா வ நூ: கொவிஜநாஸ்ய ஸஂஸ்ரூதி உஷாரொாமஸ்ய வெதுளஷயஂ। ஷாமிநெவஷ்ணெ! உண்வூஷ! வாநஜநாவநீயாஸ்யஜஂ யாஷநூஷிாவாவ நஂகாாஷரொ! ஸ்ரீ காநநாதீவஹொ ॥

அக்கரை யென்னு மனத்தக் கடலு ளழுந்தியுன் பேரருளால்
இக்கரை யேறி யிளைத்திருந் தேனையஞ் சேலென்று கைகவியாய்
சக்கர முந்தடக் கைகளும் கண்களும் பீதக வாடையோடும்
செக்கர் நிறத்துச் சிவப்புடையாய் திருமா லிருஞ்சோலை யெந்தாய். (௬

சக்கரமும் - திருவாழியாழ்வானும்
தட கைகளும் - பெரிய திருக்கைகளும்
கண்களும் - திருக்கண்களும்
பீதகஆடையொடும் - திருப்பீதாம்பரமும்
செக்கர் நிறத்து சிவப்புஉடையாய் - செவ்வானத்தின் நிறம்போன்ற நிறத்தையுடையவையாயிருக்கப்பெற்றவனே!
அக்கரைஎன்னும் - ஸம்ஸாரமென்கிற
அனர்த்தம் கடலுள் - அநர்த்தஸமுத்ரத்தினுள்ளே
அழுந்தி - (நெடுநாள்) அழுந்திக்கிடந்து
இளைத்திருந்து - (அதில்) வருத்தப்பட்டுக்கொண்டிருந்து
(பின்பு,)
உன் பேர் அருளால் - உனதுபரமகிருபையினால்
இக்கரை ஏறினேனை - இக்கரை யேறின அடியேனைக்குறித்து
அஞ்சேல் என்று கை கவியாய் - அபயப்ரதானமுத்ரையைக் காட்டியருளவேணும்.

குறிப்பு:— இளைத்திருந்தேனை என்றவிடத்துள்ள இரண்டனுருபைப் பிரித்து, ஏறி என்ற வினையெச்சத்தோடு கூட்டியுரைத்தோம். இருந்தபடியே அந்வயித்துப் பொருள்கொள்ளுதலு மொன்று. ஸம்ஸார ஸாகரத்தில் ஆழ்ந்துகிடந்து அலமருகைக்கிடான அஜ்ஞாநத்தை நீக்கி ஞானத்தைப் பிறப்பித்தருளியவாறு போல, உன்திருவடியோட்டைச் சேர்த்தியையும் பண்ணியருளவேணுமென்று வேண்டுகின்றார் இப்பாட்டால். அக்கரை என்று பாபத்துக்குப் பெயராதலால், கருவியாகு பெயரால் ஸம்ஸாரத்தை உணர்த்திற்று; [கருவியாகு பெயராவது-காரணத்தின் பெயர் காரியத்துக்கு ஆகுவது; இங்கு, காரணம் பாபம்; காரியம் - ஸம்ஸாரம்.] அனர்த்தம்-அபாயம்; அநர்த்த மென்னும் வடசொல் திரிந்தது. "ஸம்ஸார ஸாகரம் கோரம் அநந்த க்லேச பாஜநம்" என்பதனாலும் இஸ்ஸம்ஸாரத்தின் கொடுமையை அறிக. இக்கரையேறி-அப்பிறவிக் கடலினின்றும் வெளிப்பட்டு என்றவாறு. ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்று துளங்கின அடியேன் உனது நிர்ஹேதுக கிருபையினால் அக்கடலைக் கடந்தேனாகிலும், நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தைச் சிக்கனப் பிடித்தாலன்றி என்அச்சம் தீராதாகையால், 'ஸ்வதந்திரனான ஈச்வரன் மீண்டும் நம்மை ஸம்ஸாரக்கடலில் தள்ளினால் செய்வதென்?' என்று மிகவும்பயப்படாநின்றேனாகையால், இவ்வச்சந் தீரும்படி அபயப்ரதானம் பண்ணியருளவேணுமென்றவாறு. இதனால், ஸம்ஸாரதசை என்றும், ஸம்ஸாராதுத்தீர்ணதசை என்றும், பரமபதப்ராப்திதசை யென்றும் மூன்று தசைகள் உண்டென்பதும், அவற்றுள் இப்போது ஆழ்வார்க்குள்ள தசை மத்யமதசையென்றும் பெறுவிக்கப்பட்டதாகும்.

உன்பேரருளால் என்றவிடத்து, "ஸ்வாபாவிகாநவதிகாதிசயேசிதத்வம் நாராயண த்வயி நம்ருஷ்யதி வைதிக: க:" என்பது அநுஸந்திக்கத்தகும். [அஞ்சேலென்று கைகவியாய்.] "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:" என்று அர்ஜுநனை நோக்கி அருளிச் செய்தபடி அடியேனையும்நோக்கி அருளவேணுமென்கிறாரெனக் கொள்க. "ஸஜாயா: க்ருபயா யோ ந: ப்ரபந்நாந்விபரீதகான், ஸர்வாந்ஸம்ருத்யாந்ருசம்ஸ்யம் அபயம் ஸர்வதா ததௌ" என்று பரதன் கூறிய

அபயமுத்ராலக்ஷணச்லோகத்தில், "ஊர்த்வாங்குளிருந்நதஃ" என்றதனால், கைவிரல்கள் மேல்முகமாக விரிந்திருக்க வேண்டுவது அபயமுத்திரையின் இலக்கணமாகத் தெரிதலால், இங்குக் கைகவியாய் என்கிறவிதனை அதற்குச்சேர ஒருவாறு ஔபசாரிகமாக நிர்வஹித்துக்கொள்ள வேணும்; அஞ்சேலென்று கைகவியாய்-அபயமுத்திரையைக் காட்டியருளாய் என்று இங்ஙனே திரண்டபொருள் கொள்வது ஏற்குமெனக; அன்றி வேறுவகை உண்டேல் உற்றுணர்க. ("ஸாபேக்ஷமஸமர்த்தம்" என்ற நியாயத்தின்படி) அஞ்சேல் என்னும்போதைக்கு அச்சம் இன்றியமையாததாகையால், அவ்வச்சமாவது - "மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொலென்றஞ்சி" "கொள்ளக்குறையாத இடும்பைக்குழியில் தள்ளிப்புகப் பெய்திகொலென்றதற்கஞ்சி" என்றிப்புடைகளிலே திருமங்கையாழ்வார்க்குப் பிறந்த அச்சம் போன்ற அச்சம் எனக்கொள்க.

[சக்கரமும் இத்தியாதி] செவ்வானம் போற் செந்நிறமுடைய ஜ்யோதிஸ்ஸையுடையதான திருவாழியாழ்வானையும், (செந்தாமரை போல்) சிவந்த திருக்கை, திருக்கண்களையும், (இவற்றுக்கெல்லாம் நிறத்தைத்தரவல்ல) பீதாம்பரத்தையு முடையவனே! என விளித்தவாறு. .... ... (எ)

எத்தனை காலமு மெத்தனை யூழியு மின்றொடு நாளையென்றே
இத்தனை காலமும் போய்க்கிறிப் பட்டே னினியுன்னைப் போகலொட்டேன்
மைத்துனன் மார்களை வாழ்வித்து மாற்றலர் நூற்றுவ ரைக்கெடுத்தாய்
சித்தநின் பால தறிதியென்றே திருமா லிருஞ்சோலை யெந்தாய். (அ)

மைத்துனன்மார்களை - பாண்டவர்களை
வாழ்வித்து - வாழச்செய்து
மாற்றலர் நூற்றுவரை - (அவர்களுக்குச்) சத்திருக்களாகிய துரியோதநாதியர் நூறுபேரையும்
கெடுத்தாய் - ஒழித்தருளினவனே!
திருமாலிருஞ்சோலை எந்தாய்!—;
இன்றொடு நாளை என்றே - இன்றைக்கு, நாளைக்கு என்று சொல்லிக்கொண்டே (கழித்தகாலம்)
எத்தனை காலமும் எத்தனை ஊழியும் - எத்தனைகாலமும்எத்தனை கல்பங்களுமுண்டோ,
இத்தனை காலமும் - இத்தனை காலமுழுவதும்
போய் கிறிப்பட்டேன் - (ஸம்ஸார மாகிற) யந்திரத்தில் அகப்பட்டுக்கொண்டிருந்தேன்;
இனி - அதில்நின்றும் விடுபட்டு ஞானம் பெற்ற இன்று முதலாக
போகவிடுவது உண்டே - (உன்னை)வேறிடத்திற்குப் போகஸம்மதிக்க(என்னால்) முடியுமோ?
சித்தம் - (எனது) நெஞ்சானது
நின்பாலது - உன்திறத்தில் ஈடுபட்டுள்ளமையை
அறிதி அன்றே - அறிகின்றாயன்றோ?

குறிப்பு:—இன்றைக்கென்றும், நாளைக்கென்றும், நேற்றைக்கென்றும் இப்படிசொல்லிக்கொண்டு கழித்தகால முழுவதையும் பாழேபோக்கினேன்; ஏதோ சிறிது ஸுக்ருதவிசேஷத்தினால் இன்று உன்னைப் பிடித்தேன்; இனி நீ என்னை விட்டுப்புறம்பு போகப் புக்கால், அதற்கு நான் எள்ளளவும் இசைய மாட்டேன்; எனக்கு உன்திறத்து இவ்வகை அபிநிவேசம் பிறக்கைக்கீடாக,

என் நெஞ்சு உன்னைவிட்டு மற்றொன்றை நினைப்பதேயில்லை யென்னுமிடத்தை ஸர்வஜ்ஞனை நீ அறியாநின்றாயன்றோ? என்கிறார். "பழுதே பல பகலும் போயின வென்றஞ்சி அழுதேன் அரவணை மேற் கண்டு தொழுதேன்" என்ற பொய்கையார் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

[இன்றுபோய் நாளையென்றே] 'நேற்றுப்போனேன், இன்றுவந்தேன், நாளைக்குப் போகப் போகிறேன்' என்றிப்படிவ்யவஹரித்துக்கொண்டு கழிக்கும் காலத்திற்குக் கணக்கில்லையிறே. "கிறியே மாயம்" என்ற நிகண்டின்படி, கிறி என்ற சொல் மாயப்பொருளதாகையால், 'கிறிப்பட்டேன்' என்பதற்கு, ஸம்ஸாரத்தில் அகப்பட்டேன் என்று உரைத்தது ஒக்கும்; ஸம்ஸாரம் எம்பெருமானது மாயையிறே. "மமமாயா துரத்யயா" என்ற கீதை காண்க.

மூன்றாமடி - ஸாபிப்ராயஸம்போதநம்; ஆச்ரிதர்களான பாண்டவர்களை விட்டுப்பிரியாதிருந்து அவர்களை வாழ்வித்தவாறு போல அடியேனையும் வாழ்வித்தருள வேணுமென்று வேண்டியவாறு. மாற்றலர்—கண்ணபிரானுக்கே சத்துருக்கள் என்றலுமாம்; "த்விஷந்நம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவபோஜயேத்। பாண்டவாந் த்விஷஸேராஜந் மம ப்ராணாஹி பாண்டவா:॥" என்றானிறே கண்ணபிரான். நாற்றுவர்—தொகைக் குறிப்பு. அறிதி—முன்னிலை யொருமைவினை முற்று. அன்றே - அன்றோ என்றபடி. ... (௮)

அன்று வயிற்றிற் கிடந்திருந்தே யடிமை செய்ய லுற்றிருப்பன்
இன்றுவந் திங்குன்னைக்கண்டு கொண்டே னினிப்போக விடுவதுண்டே
சென்றங்கு வாணனை யாயிரந் தோளுந் திருச்சக் கரமதனால்
தென்றித் திசைதிசை வீழச்செற்றாய் திருமா லிருஞ்சோலை யெந்தாய் (௯)

அங்கு—சோணித புரத்திற்கு
சென்று - எழுந்தருளி
வாணனை - பாணாஸுரனுடைய
ஆயிரம் தோளும்—ஆயிரந்தோள்களும்
திசை திசை - திக்குகள்தோறும்
தென்றி வீழ - சிதறிவிழும்படி
திருச் சக்கரம் அதனால்-சக்ராயுதத்தினால்
செற்றாய்-நெருக்கியருளினவனே!
திருமாலிருஞ்சோலை எந்தாய்!—;
வயிற்றில் கிடந்திருந்து } கர்ப்பவாஸம்
அன்றே } பண்ணுகை யாகிற அன்றுமுதற்கொண்டே

அடிமை செய்யல்—(உனக்குக்) கைங்கரியம் பண்ணுவதில்
உற்றிருப்பன்.-அபிநிவேசங்கொண்டிருந்த நான்
இன்று - இப்போது
இங்கு வந்து - இத்திருமாலிருஞ்சோலை மலையில் வந்து
உன்னை — (அனைவர்க்கும் எளியனான) உன்னை
கண்டு கொண்டேன் - ஸேவித்துக்கொண்டேன்;
இனி போக விடுவது உண்டே:—

குறிப்பு:—(பத்நீஸம்ச்லேஷத்தில் வேண்டினபடி பாரித்துக்கொண்டிருந்த பிரமசாரி, பின்னை அவளைப் பெற்றால் ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியமாட்டாததுபோல,) அடியேன் கர்ப்பவாஸம் பண்ணிக்கொண்டிருந்த போதே உனக்குப்பணி செய்யவேணுமென்று பாரித்துக்கொண்டிருந்து, பிறந்தபின்பு நெடுநாள் ஸம்ஸாரத்தி லீடுபட்டால் உன் அநுபவத்தை இழந்

திருந்து, விஷயாந்தரபரனாய்க் கண்டவிடங்களிலுந் தட்டித்திரிந்துகொண்டு வரும்போது தைவவசமாக இன்று இத்திருமாலிருஞ் சோலையைக்கிட்டி இங்கு உன்னைக் காணப்பெற்ற பின்பு இனிவிட்டுப் பிரியமாட்டேனென்கிறார். அடிமைசெய்யல் உற்றிருப்பன் - கைங்கரியமே புருஷார்த்தம் என்று துணிந்திருந்தேன் என்றபடி. 'அன்றே அடிமை செய்யலுற்றிருப்பன்' என்றதனால், இன்று அடிமைசெய்ய விரும்புவதில் ஸம்சயலேசமு மில்லையென்பது போதரும். பின்னடிகளிற் குறித்தவரலாறு - கீழ் நான்காம் பத்து, மூன்றாந்திருமொழி, நான்காம் பாட்டினுரையிற் கூறப்பட்டுள்ளது.

சென்றுல கங்குடைந் தாடுஞ்சுனைத் திருமா லிருஞ்சோலை தன்னுள்
நின்ற பிரானடி மேலடிமைத் திறநேர் படவிண் ணப்பஞ்செய்
பொன்றிகழ் மாடம் பொலிந்துதோன்றும் புதுவைக் கோன்விட்டு சித்தன்
ஒன்றினோ டொன்பதும் பாடவல்லா ருலக மளந்தான் தமரே. (௧௦)

உலகம் - உலகத்தாரெல்லாரும்
சென்று (தங்கள்தங்க ளிருப்பிடத்தில் நின்றும்) போய்
குடைந்து - அவகாஹித்து
ஆடும் - நீராடா நிற்கப்பெற்ற
சுனை - தீர்த்தங்களையுடைய
திருமாலிருஞ்சோலை தன்னுள் } திருமாலிருஞ்சோலைமலையில்
நின்ற பிரான் - எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய
அடி மேல் - திருவடிகளில்
அடிமைத் திறம் - கைங்கரிய விஷயமாக
பொன்திகழ் - ஸ்வர்ணமயமாய் விளங்காநின்ற
மாடம் - மாடங்களினால்
பொலிந்து தோன்றும் - நிறைந்து விளங்காநின்ற
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு
கோன் - தலைவரான
விட்டு சித்தன் - பெரியாழ்வார்
நேர்பட - பொருந்தும்படி
விண்ணப்பம் செய் - அருளிச்செய்த
ஒன்றினோடு ஒன்பதும் - இப்பத்துப் பாசுரங்களையும்
பாட வல்லார் - பாடவல்லவர்கள்
உலகம் அளந்தான் தமர் } திரிவிக்கிரமாவதாரஞ் செய்தருளின எம்பெருமானுக்குச் சேஷபூதர்களாகப் பெறுவர்.

குறிப்பு:—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார் இப்பாட்டால். இத்திருமொழியில், "இனிப்போகவிடுவதுண்டே" "இனிப்போகலொட்டேன்" "ஒளித்திடில் நின்திருவாணைகண்டாய்" என்றிப்புடைகளிலே பல சொல்லித்தடுப்பது வளைப்பதாயிருந்தது - 'நமது கைங்கரியங்களை எம்பெருமான் உடனிருந்துகொள்ள வேணும்' என்றவிருப்பத்தினாலாதலால், "அடிமைத்திறம்...விண்ணப்பஞ் செய்" எனப்பட்டது. தன்னடையே வருகைக்கும் நேர்பாடு என்று பெயராதலால், நேர்பட என்பதற்கு, தன்னடையே என்றும் பொருள் கொள்ளலாமென்பர்; ஆயாஸமில்லாமலென்றபடி. "ஶோக: ஶ்லோகத்வமாகத:" என்றாற்போல. "புதுவைக்கோன் விட்டுசித்தன் சொல்" என்றுசிலர் ஓதுவர்; அப்போது, விண்ணப்பஞ்செய் என்பது, விட்டுசித்தன் என்பதற்கு அடைமொழியாம். (௧௦)

அடி:— திக்க வளைத்து உனக்கு காதம் காலும் எருத்து அச்சரை எத்தனை அன்று சென்று சென்னி.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

## நான்காந் திருமொழி,

# சென்னியோங்கு.



**அவதாரிகை.**—சேதநரைத்திருத்துகைக்கும் திருந்தினரை அடிமை கொள்ளுகைக்கும் பரவ்யூஹவிபவாந்தர்யாம்யர்ச்சாவதாரங்களான இடங்களில் எழுந்தருளியிரா நின்ற எம்பெருமானுடைய ஸகல குணங்களும் இருட்டறையில் விளக்குப்போலே விளங்குவது உகந்தருளின திருப்பதிகளிலாகையால், திருவேங்கடமலையில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற இருப்பில் ஸௌசீல்ய ஸௌலப்யாதி குணங்களையெல்லாம் விசதமாக அநுபவித்து, விரோதிகளில் அருசியையும் பேற்றில் ருசியையும் பெற்று, "அவாவற்று வீடுபெற்றகுருகூர்ச்சடகோபன்" என்ற நம்மாழ்வார் நிலைமையையும் ஒருவாறு பெற்றதாகக்கொண்டு பரமஸந்துஷ்டராயிருந்த ஆழ்வாரைக்கண்டு எம்பெருமான் 'இவர்க்குச் செய்யவேண்டிய காரியங்களை நாம் முற்றச்செய்து தலைக்கட்டவில்லையே' என்று பதற, அதனைக்கண்ட ஆழ்வார் 'எம்பெருமானே! விரோதிகளெல்லாம் அடங்கக் கழிந்தன; அபேக்ஷிதாம்சங்களும் அடையப்பெறப்பட்டன; இனி நீ எனக்காகச் செய்யவேண்டுவது யாதொன்றுமில்லை யாகையால் இங்ஙன் பதற வேண்டா' என்று கூறி, அப்பதற்றத்தைத் தவிர்க்கிறபடியாய்ச் செல்லுகிறது, இத்திருமொழி.

சென்னி யோங்குதண் திருவேங் கடமுடை யாயுலகு
தன்னை வாழநின் றநம்பீ தாமோத ராசதிரா
என்னையுமென் னுடைமையையுமுன் சக்கரப் பொறியொற் றிக்கொண்டு
நின்னரு ளேபுரிந் திருந்தே னினியென் திருக்குறிப்பே. (க)

சென்னி ஓங்கு – கொடு முடியானது (ஆகாசத்தளவும்) உயர்ந்திருக்கப்பெற்ற
தண் - குளிர்ந்த
திரு வேங்கடம் – திருவேங்கட மலையை
உடையாய் – (இருப்பிடமாக) உடையவனே!
உலகு தன்னை - உலகத்தவர்களை
வாழ - வாழ்விப்பதற்காக
நின்ற - எழுந்தருளியிராநின்ற
நம்பீ – (கல்யாண குணங்களால்) நிறைந்தவனே!
தாமோதரா – தாமோதரனே!
சதிரா – (அடியாருடைய குற்றத்தைக் கண்ணெடுத்துப் பாராத) சதிரையுடையவனே!
என்னையும் – எனது ஆத்துமாவுக்கும்
என் உடைமையையும் - என் உடைமையான சரீரத்திற்கும்
உன - உன்னுடைய
சக்கரப் பொறி ஒற்றிக்கொண்டு – ஸுதர்சனுமாழ்வானுடைய திருவிலச்சினையை இடுவித்து
நின் – உன்னுடைய
அருளே - கருணையையே
புரிந்திருந்தேன் – (ஸ்வயம்ப்ரயோஜநமாக) விரும்பியிராநின்றேன்;
இனி-இப்படியானபின்பு
திருக்குறிப்பு – திருவுள்ளக்கருத்து
என் – எதுவாயிருக்கின்றது?

குறிப்பு:—எம்பெருமானே! நெடுநாளாய் உன்திறத்தில் விமுகனாய் விஷயாந்தரங்களை நச்சி அங்கு மிங்கும் அலைந்து திரிந்த அடியேனை, உனது திவ்ய

கல்யாண குணகணங்களைக்காட்டி வசப்படுத்திக்கொண்டு, ஆத்மாத்மீயங்களையெல்லாம் உனக்கே சேஷப்படுத்திவிட்டு உன் அருளையே புருஷார்த்தமாகப் பிரதிபத்திபண்ணிக்கொண்டிருக்கும்படியான நிலைமையையும் அடியேனுக்கு அமைத்தருளினாய்; இதனால் உன் அபேக்ஷிதமும் தலைக்கட்டிற்று, என் அபேக்ஷிதமும் தலைக்கட்டிற்று; இனிச் செய்யவேண்டுவதொன்றில்லை; இன்னும் என்செய்யவேணுமென்று உன்திருவுள்ளத்தில் ஓடுகிறது என்று கேட்கிறபடி.

திருவேங்கடத்துக்குத் தண்மை—ஸம்ஸார தாபங்களை ஆற்றவற்றாயிருக்கை. உடையாய்—உடையான் என்பதன் ஈறு திரிந்தவிளி. வாழ—பிறவியில் வந்த தன்வினை; [illegible] என்பர் வடநூலார். 'உலகுதன்னை' என்பதை உருபுமயக்கமாகக் கொண்டால், உலகத்தவர்கள்வாழும்படி நின்ற நம்பீ! என்று உரைக்கலாம். தாமோதரன்—* கண்ணிநுண் சிறுத்தாம்பினாற் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனாதலால், அத்தாம்பின் தழும்பு திருவயிற்றில் தோன்றப்பெற்றவனென்றபடி. சதிர்—ருஜுவாயிருக்குந் தன்மை. கீழ் திருப்பல்லாண்டில், "தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின், கோயிற்பொறியாலே யொற்றுண்டு நின்று" என்றதை, இப்பாட்டில் மூன்றுமடியால் விவரிக்கிறார். ஆத்துமாவுக்குச் சக்கரப்பொறியொற்றுகையாவது-அநந்யார்ஹ சேஷத்வ ஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கை. அது பிறந்தமை தோற்றவிறே தோளுக்குத் திருவிலச்சினையிடுவது. 'நின்னருளே புரிந்திருந்தேன்' என்றது-உபாயாந்தரத்திலும் ருசிகுலையப் பெற்றேன் என்றபடி. ... ... ... ... ... (க)

பறவையேறு பரம்புரு டாநீ யென்னைக்கைக் கோண்டபின்
பிறவியேனுங் கடலும்வற் றிப்பெரும் பதமா கின்றதால்
இறவுசெய்யும் பாவக் காடு தீக்கோளீஇ வேகின்றதால்
அறிவையென்னு மமுத வாறு தலைப்பற்றி வாய்க்கோண்டதே. (உ)

பறவை ஏறு - பெரிய திருவடிமேல் ஏறுமவனான

பரம்புருடா - புருஷோத்தமனே!

நீ - (ஸர்வரக்ஷகனான) நீ

என்னை - (வேறு கதியற்ற) என்னை

கைக்கொண்டபின் - ஆட்படுத்திக்கொண்ட பிறகு

பிறவி என்னும் கடலும் - ஸம்ஸாரமாகிற ஸமுத்ரமும்

வற்றி - வரண்டுபோய் (அதனால்)

பெரும் பதம் ஆகின்றது - பெரிய தரம் பெற்றதாகிறது.

இறவு செய்யும் - (இவ்வாத்துமாவை) முடிக்கிற

பாவக் காடு - பாபஸமூஹமானது

தீக் கொளீஇ - நெருப்புப்பட்டு

வேகின்றது - வெந்திட்டது;

அறிவை என்னும் - ஞானமாகிற

அமுத ஆறு - அம்ருதநதியானது

தலைப்பற்றி வாய்க் கொண்டது - மேன் மேலும் பெருகிச் சொல்லாநின்றது.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில், "இனியென் திருக்குறிப்பே" என்று—எனக்குச் செய்யவேண்டுவதெல்லாம் செய்து தலைக்கட்டியானபின்பு இனிப்பதறு

வானென்?' என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், 'ஆழ்வீர்! நீர் எல்லாம் பெற்றீரோ? உம்மை நெடுநாளாகப் பற்றிக்கிடக்கிற கருமங்கள் கிடக்கின்றனவே; ப்ராப்திக்கு உறுப்பான பரமபக்தி பிறக்கவில்லையே'' என்ன; இவையித்தனையும் தமக்குப் பிறந்தபடியை அருளிச்செய்கிறார்.—நீ பொருளல்லாதவென்னைப் பொருளாக்கின பிறகு ஸம்ஸாரஸாகரமானது நிச்சேஷமாக வற்றிப்போனமையால், அடியேன் பெருத்தபாக்கியம் பண்ணினேனாகிறேன்; இஸ்ஸம்ஸாரத்துக்கு மூலமான பாபராசிகளும் தீயினிற்பட்ட தூசுபோல உருமாய்ந் தொழிந்தன; ஞானப்ரஸரத்திற்குப் பிரதிபந்தகங்களா யிருந்த இவையெல்லாம் இங்ஙனொழிந்தமையால் ஞானம் குறைவற்று வளரப்பெற்றது என்றவாறு.

எம்பெருமான் ஆழ்வாரைத் திருநாட்டுக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதாகப் பெரிய திருவடியின்மேலேறிக்கொண்டு வந்து தோன்றினனாதலால் "பறவையேறு பரம்புருடா" என விளிக்கின்றார். 'பெரும்பதமாகின்றது' என்பதற்கு முன், எனக்கு என வருவிக்கவேணும்;பெரியபதவியை யான் பெறுகின்றேன் என்றபடி. இன்றளவும்பிறவிக்கடலில் ஆழங்காற்பட்டுக் கிடந்தமையால் நிஹீநபதவியிலிருந்த நான், இன்று அதனை வென்றமையால் உத்தமபதவியைச் சேர்ந்தேன் எனவிரிக்க.

ஆல் இரண்டும் மகிழ்ச்சிக் குறிப்பிடைச்சொல். தீக்கோளீஇ—தீக்கொண்டு; சொல்லிசையளபெடைடம் வூடீத; "போயபிழையும் புகுதருவான் நின்றனவும், தீயினில் தூசாகும்" என்ற திருப்பாவை இங்கு நினைத்தத்தக்கது. அறிவை என்ற சொல்லில், ஐ-சாரியை. இவ்விடத்தில் அறிவையென்று பரமபக்தியைச் சொல்லுகிறதென்பர். பிறவிக்கடலில் ஆழ்ந்திருந்தநான்,அதனை வென்று வெளிக்கிளம்பி நின்றால், ஞானமாகிற ஒரு அமுதவாறு வாயையும் தலையையும் அளாவிச்சென்று என்னை அமுக்கா நின்றது என்றொரு சமத்காரப்பொருள், சொல்நயத்தாற் போதருமென்க. தலைப்பற்றி வாய்க்கொள்ளுதல்—மேல்மேல் வளர்ந்து பெருகிச் செல்லுதல். (உ)

எம்மனா வென்குல தேய்வமே யென்னுடை நாயகனே
நின்னுளே னாய்ப்பெற்ற நன்மையிவ் வுலகினி லார்பெறுவார்
நம்மன் போலவீழ்த் தமுக்குநாட் டிலுள்ள பாவமெல்லாம்
சும்மெனா தேகைவிட் டோடித் தூறுகள் பாய்ந்தனவே. (ங)

எம் மனா - எமக்குத்தலைவனே!
என் குலதெய்வமே - என் குடிக்குப் பர[தேவதையானவனே!
என்னுடை நாயகனே - எனக்கு நாதனான[வனே!

(அடியேன்)
நின்னுளேன் ஆய் - உன் அபிமானத்தில்[ஒதுங்கினவனாய்
பெற்ற நன்மை - பெற்ற நன்மையை
இ உலகினில் - இந்த உலகத்திலுள்
ஆர்பெறுவார்-மற்று யார்தான்பெறுவர்?

நம்மன் போல - பூதப்ரேதபிசாசங்களைப் போல் (உருத்தெரியாமல் ஒளிந் [து வந்து)
வீழ்த்து அமுக்கும் - கீழேதள்ளி மேலே [அமுக்காநின்றுள்ள

நாட்டில் உள்ள பாவம் எல்லாம் - உலகத்திலுள்ள எல்லாருடைய [பாவங்களும்
சும்மெனாது - மூச்சுவிடவும் மாட்டாமல்
கைவிட்டு-ஸ்வாஸ்ஸமாக விட்டிட்டு
ஓடி - ஓடிப்போய்
தூறுகள் – புதர்களில்
பாய்ந்தன - ஒளிந்துகொண்டன.

குறிப்பு:—கீழ் "பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்ற தால், இறவுசெய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்" என்று தம்மு டைய விரோதிகள் ஒழிந்தமையையும் அபேக்ஷிதம் தலைக்கட்டினமையை யும் அருளிச்செய்த ஆழ்வாரைநோக்கி எம்பெருமான், "ஆழ்வீர்! நீரொரு வர் மாத்திரம் பேறுபெற்றால் அது என்னாகும்? உம்மோடு ஸம்பந்தமுடை யார்க்கும் விரோதிகழிந்தாலன்றோ நீர் பேறுபெற்றீராவது" என்ன; அத ற்கு ஆழ்வார், "என் நாயனே! நான் உன்னுடைய பொருளாக வாய்ந்தபின்பு என்னைப்போல் நன்மைபெற்றார் இவ்வுலகில் யாரேனுமுண்டோ? என்னு டைய விரோதிகள் கழிந்ததன்றி என்னோடுஸம்பந்தம்பெற்றாருடைய விரோ திகள் கழிந்தது மன்றி, இந்நாட்டிலுள்ள ஜனங்களுடையவும் விரோதிகளு மன்றோ கழிந்தன; இதற்கு மேற்படவும் ஒருநன்மையுண்டோ?" என்பதாய்ச செல்லுகிறது, இப்பாட்டு.

எம்மனா—எம் மன்னா; தொகுத்தல்; 'மன்னன்' என்றசொல்லின் ஈறுதிரி ந்த்விளி. "எம்மனாவென் குலதெய்வமே" என்றும் ஒருபாடம்; அப்போது, எம் அனாய் எனப்பிரியும். அனாய்—அன்னை என்பதன்விளி; தொகுத்தல்; என க்குத் தாய்போலப் பிரியமே நடத்துமவனே! என்றபடி.

குலதேய்வம்—வடமொழித்தொடர். 'நம்மன்போல வீழ்த்தமுக்கும்" என்ற-பாவங்களின் கொடுமையைக் கூறியவாறு. "நாட்டுள பாவமெலாம்" என்றும் பாடமுண்டென்பர். ("நிஜிஷிதம்கைஃ கஷவிொகெ ஸஹஸா மொ யதூயா வ்யாயி" என்ற ஆளவந்தாரருளிச்செயல் இங்கு அநுஸ ந்தேயம்.) [சும்மெனாதே.] 'கப் சிப், வாயைத்திறவாமல் ஓடிப்போய்விட் டான்' என்பதுபோல; போவது பிறர்க்குத் தெரியாதபடி போயினவென்க. [தூறுகள் பாய்ந்தன.]"வானே மறிகடலோ மாருதமோ தீயகமோ, கானே ஒருங்கிற்றுங் கண்டிலமால்—ஆனீன்ற, கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த் தார் தாள் பணிந்தோம், வன்றுயரை யாவாமருங்கு" என்றார் நம்மாழ்வார். "இவ்விடத்தில், தூறு என்கிறது ஸம்ஸாரிகளை" என்றருளிச் செய்வராம் திருக்கோட்டியூர் நம்பி. தூறென்று செடியாய், கிளைவிட்டுக்கிடக்கிற ஸம் ஸாரத்தைச் சொல்லக்கடவதிறே. "முற்றவிம் மூவுலகும் பெருந்தூறாய்த் தூ ற்றிற்புக்கு" என்ற திருவாய்மொழிகாண்க. ... ... (ந)

கடல்கடைந் தமுதங் கொண்டு கலசத்தை நிறைத்தாப்போல்
உடலு ருகிவாய் திறந்து மடுத்துன்னை நிறைத்துக்கொண்டேன்
கொடுமை செயுங்கூற் றமுமென்கோ லாடி குறுகப்பெறா
தடவரைத் தோட்சக் கரபாணீ சார்ங்கவிற் சேவகனே. (ச)

தட வரை—பெரிய மலைபோன்ற
தோள் - தோள்களை யுடையவனும்
சக்கரபாணி—திருவாழி யாழ்வானைத் தி [க்கையிலுடையனு மானவனே!
சார்ங்கம் வில் — சார்ங்கத்தை வில்லாகக் [கொண்ட
சேவகனே - வீரனே!,—
கடல்—திருப்பாற் கடலை [கடைந்து
கடைந்து - (மந்தர மலையாகிற மத்தினால்)
அமுதம் கொண்டு — (அக்கடலினின்றும்) [அம்ருதத்தை யெடுத்து
கலசத்தை - கலசத்தில்
நிறைத்த ஆ போல்—(நீ) நிறைத்ததுபோல

(அடியேன்)
உடல் உருகி—உடல் உருகப்பெற்று
வாய்திறந்து—வாயைத் திறந்துகொண்டு
உன்னை - (ஆராவமுதாகிய) உன்னை
மடுத்து நிறைத்துக் கொண்டேன் — உட்கொண்டு தேக்கிக்கொண்டேன்;
(இனி,)
கொடுமை செய்யும்-கொடிய தண்டங்களை [நடத்துமவனான
கூற்றமும் — யமனும் [லுமிடங்களில்
என் கோல் ஆடி—எனது செங்கோல்செல்
குறுகப் பெறா—அணுகவல்லவனல்லன்.

குறிப்பு:—முன்னொருகாலத்தில் (இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள) விஷ்ணுலோகத்துச்சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை பிரஸாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதரமகள் மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவருகையில், துர்வாசமாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவ்விஞ்சை மங்கை அம்மாலையை அம்முனிவனுக்குஅளித்திட்டாள்; அதன்பெருமையை உணர்ந்து அதனைச்சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆநந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது, அங்கு வெகு உல்லாசமாக ஐராவதயானையின்மேற் பவனிவந்து கொண்டிருந்த இந்திரனைக்கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி அந்தயானையின் பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதவிலங்கு அதனைத் துதிக்கையாற் பிடித்து இழுத்துக்கீழெறிந்து காலால்மிதித்துத் துவைத்தது; அது கண்டுமுனிவன் கடுங்கோபங்கொண்டு இந்திரனை நோக்கி, 'இவ்வாறு செல்வச் செருக்குற்ற நினது ஐசுவரியமெல்லாம் கடலில் ஒளிந்துவிடக்கடவன' என்றுசபிக்க, உடனே தேவர்செல்வம் யாவும் ஒழிந்தன; ஒழியவே அசுரர்வந்து பொருது அமரரை வெல்வாராயினர்; பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து, அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி, அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி, வாசுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப்பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர்; அப்போது அக்கடலினின்றும் அமுதம் பிறந்ததென்ற வரலாற்றை நினைக்க.

அப்படி கடலைக்கடைந்தெடுத்த அமுதத்தைக் கலசத்தினுள் நிறைத்த வாறுபோல, உன்னை நான் என்னுள்ளே நிறைத்துக்கொண்டேன் என்கிறார் முன்னடிகளால். ஸம்ஸாரமாகியகடலினுள் ஈச்வரனாகிற அமுதத்தைத்தேர் ந்தெடுத்து ஆத்மாவாகிற கலசத்தில்ஆழ்வார் நிறைத்துக்கொண்டனரென்க. கலசம்—தற்சமவடசொல்; பாத்திரமென்று பொருள். நிறைத்தாப்போல் = நிறைத்த, ஆ, போல், எனப்பிரியும்; ஆறு என்றசொல, ஆஎனக்குறைந்துகிட க்கிறது; ஆறு—பிரகாரம். நிறைத்த + ஆ, நிறைத்தவா எனச்சந்தியாகவேண்டு மிடத்து, அங்ஙனாகாதது, தொகுத்தல் விகாரம். இனி, "நிறைத்தாற் போல்" என்ற பாடமும் கொள்ளத்தக்கதே; நிறைத்தால் போல் எனப் பிரிக்க.

[உடலுருகி இத்யாதி.] பகவதநுபவாதிசயத்தினால் ஆத்துமா வெள்ளக் கேடு படாமைக்காக இட்ட கரைபோன்ற சரீரமும் உருகப்பெற்றதுஎனவே, இவ்வாழ்வார்க்குப் பகவத்விஷயத்திலுள்ள அவகாஹம் அற்புதமென்பது போதரும். "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்து உகும்"என்று உருவற்ற நெஞ்சே உருகுகிறதென்றால் உடலுருகச் சொல்லவேணுமோ? "ஆராவமுதே! அடியேனுடலம் நின்பாலன்பாயே, நீராயலைந்து கரையவுருக் குகின்ற நெடுமாலே!" என்ற திருவாய்மொழியையுங் காண்க.

'உடலும் நெஞ்சுமுருகப் பெற்றதாகில், பின்னை இவ்வமுதத்தைத்தேக் கிக்கொள்வது எங்ஙனே?'என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க; §'விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலன்' என்பராதலால், அவ்வமுதம் வியா பித்த விடமெங்கும் திருவுள்ளம் வியாபிக்குமெனக் கொள்வீர்" என்று பட் டர் அருளிச் செய்தனராம்.

[கோடுமை செய்யும் இத்தியாதி.] கீழ்ப்பாட்டில், "என்னுடைய பாவங் கள் கழிந்தவளவேயன்றி, நாட்டிலுள்ள எல்லாருடைய பாவங்களும் கழிந் தன என்றார்; இதில், 'என்னுடைய ஆணை செல்லுமிடங்களில் யமனுங்கூட அணுக வல்லவனல்லன்' என்கிறார். 'கூற்றமும்...குறுகப்பெறாது' என்ன வேண்டியிருக்க, அங்ஙனங் கூறாது 'குறுகப் பெறா' எனக்கூறியது பொருந் துமோ? எனின்; 'குறுகப்பெறாது' என்பதன் கடைக்குறையாகக் கொள்க; 'கூற்றமுஞ் சாரா" என்ற விடத்திற்போல. (குறுகப் பெறா - பலவின்பாலெ திர்மறைவினைமுற்று. [ வஹுவசநக்ரியாபதம்] கூற்றம்-உடலையுமுயி ரையும் வேறு கூறாக்குபவனென்று காணப் பெயராம். கோலாடி – ஆஜ்ஞை செல்லுமிடம். கோல் - செங்கோல். ... ... ... (ச)

§ பெரியாழ்வார்க்கு விட்டுசித்தன் என்று திருநாமம்; அதன்பொருள் - 'விஷ்ணுவை நெஞ்சிற்கொண்டுள்ளவர்' என்பது; விஷ்ணு என்ற திருநாமத்திற்கு 'வியாப ன்' என்று பொருள். வியாபகனை எம்பெருமானைத் தன்னிடத்து அமைத்துக் கொள்ளவேண்டிய இவரது திருவுள்ளமும் அவ்வெம்பெருமானுடைய விரிவுக்கு ஏற்ப விரியும் என்பது ஸமாதான தாத்பரியம்.

பொன்னைக்கொண் டுரைகல் மீதே நிறமெழ வுரைத்தாற்போல்
உன்னைக்கொண் டென்னு வகம்பால் மாற்றின்றி யுரைத்துக்கொண்டேன்
உன்னைக்கொண் டென்னுள் வைத்தே னென்னையு முன்னிலிட்டேன்
என்னப்பா வென்னிரு டீகேசா வென்னுயிர் காவலனே. (௫)

என் அப்பா-எனக்குத் தந்தையானவனே! என் இருடீகேசா - எனது இந்திரியங்களை (உன் வசப்பட்டொழுகும்படி) நியமிக்க வல்லவனே! என் உயிர் - என் ஆத்மாவை காவலனே - (அந்யசேஷ மாகாதபடி) காக்கவல்லவனே! பொன்னை—ஸுவர்ணத்தை நிறம் எழ - நிறமறிய [-நிறத்தைப் பரீக்ஷிப்பதற்காக] உரைகல் மீது கொண்டு } உரைகல்லில் இட்டு உரைத்தால் போல் - உரைப்பது போல

உன்னை - (பரமபோக்யனான) உன்னை என் நா அகம் பால் கொண்டு } என் நாவினுட்கொண்டு மாற்று இன்றி - மாற்று அழியும்படி உரைத்துக் கொண்டேன்—உரைத்துக்கொண்டேன். உன்னை - (யோகிகட்கும் அரியனான) உன்னை என்னுள் - என் நெஞ்சினுள் கொண்டு வைத்தேன் - அமைத்தேன்; என்னையும்—(நீசனான) அடியேனையும் உன்னில் இட்டேன் - உனக்குச் சேஷப்படுத்தினேன்.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில், எம்பெருமானுக்கு அம்ருதத்ருஷ்டாந்தங் கூறினர்; இப்பாட்டில் ஸ்வர்ணத்ருஷ்டாந்தங் கூறுகின்றனர். உலகத்தில் பொன்னைப்பரீக்ஷிக்க விரும்புமவர்கள், அதனை உரைகல்லில் இட்டு உரைத்துப் பார்ப்பர்கள்; அதுபோல், பொன்போன்ற உன்னை, அற்பசாரங்களில் மண்டின என் நாக்காகிற உரைகல்லில் இட்டு உரைத்தேன்; நல்ல பொன்னைக் கெட்ட கல்லிலிட்டுரைத்தால் அப்பொன்னினுடைய மாற்றுக்குறைவது போல், நீ என்றன் சழக்கு நாக்கிலிட் டுரைக்கப்பட்டமையால் மாற்று அழியப்பெற்றாய் என்பது, முன்னடிகளின் கருத்து. உரைகல்—உரைத்துப் பார்ப்பதற்கு உரிய இடமாகிய கல்; நிகஷோபலம் மென்பர். நிறமெழ—நிறமறிவதற்காக, என்றேபொருளாகும்; 'நிறமுண்டாம்படி' என்பது பொருளன்று; பொல்லாப்பொன்னை உரைகல்லிலே உரைத்த மாத்திரத்தினால் அதற்கு நல்ல நிறமுண்டாகமாட்டாதே; உள்ளமாற்றேயன்றோ காணப்படுவது, நல்லபொன்னையும் பொல்லாப் பொன்னையும் உரைகல்லில் நிறம்பார்க்கவிறே உரைப்பது. ஆதலால், நிறமெழ என்பதற்கு, 'நிறமறியும்படி' என்றே பொருள்கொள்க. "உன்னை—வேதங்களாகிற உரைகல்லிலே உரைத்தாலும்'நிறமுயர்கோலமும்'என்கிறபடியே அவ்வருகான உன்னை" என்பது ஆன்றோர் வியாக்யானம். 'உன்னைக்கொண்டு' இத்தியாதி இரண்டாமடி நைச்யாநுஸந்தானம். ஒருவராலும் துதிக்கவொண்ணாத விஷயத்தை ஒருவன் துதிக்கத் தொடங்குவது-அவ்விஷயத்தைத் தூஷிப்பதுபோ லாகுமேயன்றி, பூஷிப்பதாக மாட்டாதானமைபற்றி, மாற்றின்றி என்கிறார். இங்கு, இன்றி என்பதற்கு-'இல்லாமற்போம்படி' எனப்பொருள் கொள்ளவேணும். "மாற்றின்றி உரைத்துக்கொண்டேன்—மாற்றழியும்படி பேசிக்கொடு நின்றேன்,

நல்லபொன்னை நல்லகல்லிலே உரைத்தாலிறேமாற்று அறியலாவது; தரமல்லாத கல்லிலே உரைப்பாரைப்போலே, உன்னை என்நாக்காலே தூஷித்தேன்; பொன் என்கிறது-ஈச்வரனை; கல் என்கிறது-நாக்கை" என்ற வியாக்கியான வாக்கியம் காணத்தக்கது.

"[illegible]" [பிராட்டி! உன்கீர்த்திகளை அடியேன் வாய்கொண்டு துதிப்பதனால் அவற்றுக்கு ஒரு கொத்தையும் வாராது; கங்கைத்தீர்த்தத்தை நாய் நக்குவதனால் அத்தீர்த்தத்திற்கு தோஷமொன்றும் வாராதிறே.] என்று ஆழ்வான் அருளிச்செய்தபடிக்கு இது மாறுபடாநின்றதன்றோ? எனின்; ஆழ்வான் அருளிச்செய்த அர்த்தமே தத்துவம்; "[illegible]" என்றார் ஸ்ரீ வைகுண்டஸ்தவத்திலும்; இப்பாட்டில் ஆழ்வார் இங்ஙனருளிச்செய்வது நைச்சியாநுஸந்தாந சைலியில் ஒருவகைச் சமத்காரமாம்; கவிமரபு; "[illegible]?" என்றார் ஸ்ரீபராசரபட்டரும். ஆழ்வாராதியர்கள் எம்பெருமானுடைய ஸௌசீல்ய ஸௌலப்யவாத்ஸல்யாதி குணங்களை அநுஸந்திக்குங் காலங்களில் அவனை அணுகினைப்பதும், தங்களுடைய அநந்த ஜந்மஸஞ்சிதமான துஷ்கருமம் முதலியவற்றை ஆராயுங்காலங்களில் அகல நினைப்பதுமாயிருப்பதுபோல, ஸ்தோத்திர விஷயத்திலும் இவ்வனேகவிந்யாஸ விகற்பங்கள் விளைகின்றனவென்று ஞானப்பிரான் வார்த்தை. "கேழ்த்த சீரரன்முதலாக் கிளர்தெய்வமாய்க் கிளர்ந்து, சூழ்த்தமரா துதித்தால் உன் தொல்புகழ் மாசூணாதே" "மாசூணாவான் கோலத்தமரர்கோன் வழிப்பட்டால், மாசூணாவுனபாதமலர்ச் சோதிமழுங்காதே"என்ற நம்மாழ்வாரருளிச்செயல்கள் இங்கு அநுஸந்திக்கத் தக்கவை. (இனி, "மாற்றின்றி உரைத்துக்கொண்டேன்" என்பதற்கு, ஒன்றும் தப்பாதபடி சொன்னேன் என்பதும் ஒருபொருளாமென்ப.)

இப்படி அருளிச்செய்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், "ஆழ்வீர்! இன்றளவும் நான் உமக்குச் செய்துவந்த நன்றிகளுக்கு ஓரளவில்லை; 'நெய்க்குடத்தைப் பற்றி' என்ற திருமொழியில் அந்நன்றிகளை நீர்தாமே பரக்கப் பேசியிருக்கிறீர்; இப்படி நான் உம்மைப் பரமபாவநராக்கி யிருக்கச்செய்தேயும், உம்மைநீர் மிகவும் அசுத்தராகப்பாவித்து, என்னை நாவிற்கொண்டு தூஷித்து விட்டதாகப் பேசுகிறீரே, இஃது என்ன கொடுமை! உமக்கு மேற்பட்ட நன்றிகெட்டார் இவ்வுலகில் இல்லைகாணும்" என்ன; அது

கேட்ட ஆழ்வார் மிகவும் அஞ்சி அவ்வெம்பெருமான் திருவடிகளில் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகிறார், பின்னடிகளால்; "நன்றாக, நானுன்னை யன்றி யிலேன் கண்டாய் நாரணனே!, நீயென்னை யன்றியிலை" என்றாற்போல நாராயண சப்தார்த்தம் பின்னடிகளில் விவரிக்கப் பட்டதாகுமென்று ஞானப் பிரான் பணிக்கும். ... ... ... ... (ரு)

உன்னுடை யவிக்கி ரமமொன் றொழியா மலெல்லாம்
என்னுடை யநெஞ்ச கம்பால் சுவர்வழி யெழுதிக்கொண்டேன்
மன்னடங் கமழு வலங்கைக் கொண்ட விராமநம்பீ
என்னிடை வந்தெம் பெருமா னினியெங்குப் போகின்றதே. (சு)

மன் - (துஷ்ட) க்ஷத்திரியர்கள்
அடங்க - அழியும்படி
மழு - மழு என்னும் ஆயுதத்தை
வலங் கை கொண்ட - வலக்கையில் ஏந்தி [யிராநின்றுள்ள
இராமன் - பரசுராமனாய்த் திருவவதரித்த
நம்பீ - குணபூர்த்தியையுடையவனே!
உன்னுடைய - உன்னுடைய
விக்கிரமம் - வீரச் செயல்களில்
ஒன்று ஒழியாமல் - ஒன்று தப்பாமல்
எல்லாம் - எல்லாவற்றையும்
என்னுடைய - என்னுடைய
நெஞ்சகம் பால் - நெஞ்சினுள்ளே
சுவர்வழி எழுதிக் கொண்டேன் - சுவரில் சித்திரமெழுதுவதுபோல எழுதிக் கொண்டேன்;
எம் பெருமான் - எமக்குத் தலைவனே!
என்னிடை வந்து - என்பக்கலில் எழுந் [தருளி
இனி - இனிமேல்
போகின்றது - போவதானது
எங்கு - வேறு எவ்விடத்தைக்குறித்து?

குறிப்பு:—கீழ்ப்பாட்டில், "உன்னைக்கொண் டென்னுள் வைத்தேன்" என்றார்; இப்பாட்டில், வைத்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறார். முதற் பாட்டில் "மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா" என்று தொடங்கினமையால், அந்த மல்லவதம் முதலிய சிறுச்சேவகங்களை யெல்லாம் என்நெஞ்சில் நன்கு அமைத்தேன் என்கிறா ரென்க. "உன்னுடைய விக்கிரமம் எல்லாம்" என்னுமளவே போதுமாயிருக்க, "ஒன்றொழியாமல்" என்று விசேஷித்துக் கூறினமைக்குக் கருத்து என்னெனில்; வியாஸர், வான்மீகிமுதலிய முனிவர்கட்கும் விஷயமாகாத விக்கிரமங்கள் தமக்கு விஷயமான படியைக் குறித்தவாறு; கீழ் இரண்டாம் பத்தில் ஏழாந்திருமொழியில் "சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டாய்" என்றருளிச்செய்த விருத்தாந்தமும், மூன்றாம்பத்தில் பத்தாந் திருமொழியில், "எல்லியம் போதினி திருத்தலிருந்ததோரிட வகையில், மல்லிகை மாமாலை கொண்டங்கார்த்தது மோரடையாளம்" என்றருளிச்செய்த விருத்தாந்தமும் மற்ற முனிவர்கட்கன்றி இவ்வாழ்வார் ஒருவர்தமக்கே ஞானவிஷயமாயினவாறு காண்க.

விக்கிரமம்—விக்ரமம் என்ற வடசொற்றிரிபு. [சுவர் வழி எழுதிக்கொண்டேன்.] சுவரில் சித்திரமெழுதினால் அது கண்ணுக்குத் தோற்றுவது போல, உன் விக்கிரமங்களாகிற சித்திரங்களை எனது நெஞ்சென்னுஞ் சுவ

சில் அமைத்து விளக்கிக்கொண்டே யென்றபடி. ஆழ்வார் எம்பெருமானால் * மயர்வற மதிநலமருளப் பெற்றமையால், அவனுடைய விக்கிரமங்களனைத்தையும் குறையறக்கண்டு அநுபவித்தன ரென்றுணர்க.

"மன் நடுங்க" என்றும் ஓதுவர். எம்பெருமானே! நீ பரசுராமனாய் அவதரித்தபோது "இருபத்தோர் காலரசுகளைகட்ட, வென்றி நீண்மழுவா" என்றபடி க்ஷத்ரியகுலமடங்கலும் பாழ்பட்ட வாறுபோல, உனது விக்கிரமங்களை ஸாக்ஷாத்கரிக்கப் பெற்ற என்னுடைய ஊழ்வினைகளடங்கலும் பாழ்த்துப்போயினஎன்பது மூன்றாமடியின் உட்கருத்து. ஆழ்வார் திருவுள்ளத்தில் குடியிருந்து நாம் செய்யவேண்டிய காரியம் செய்து தலைக்கட்டினமையால் இனி இங்கு நின்றும் பெயர்ந்து செல்வோம் என்று எம்பெருமான் கருதியதாகக்கொண்டு, அங்ஙனம் போகவொண்ணாதென்று வளைத்துத் தடுக்கிறார், நான்காமடியால். "மன்னஞ்ச வாயிரந்தோள் மழுவின்றுணித்த மைந்தா, என்னெஞ்சத் துள்ளிருந்து இங்கினிப்போய்ப் பிறரொருவர், வன்னெஞ்சம் புக்கிருக்க வொட்டேன் வளைத்துவைத்தேன்" என்று தடுத்தாரிறே திருமங்கையாழ்வாரும். போகின்றது—தொழிற் பெயர். "ஆக, இப்பாட்டால், அவன் வந்து புகுந்த ப்ரகாரத்தையும், அவன் போனால் தாம் முடியும்படியான அவஸ்தை பிறந்தபடியையும், அவனுக்குப் போக்கின்றிக்கே நிற்கிற நிலையையும், நிர்ஹேதுகமாக விஷயீகரித்த ப்ரகாரத்தையுஞ் சொல்லுகிறது" என்ற வியாக்கியானவாக்கிய மறியத்தக்கது. ... ... ... (௬)

பருப்பதத் துக்கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல்
திருப்பொ லிந்தசே வடியென் சென்னியின் மேற்பொறித்தாய்
மருப்பொசித் தாய்மல் லடர்த்தா யென்றென்றுன் வாசகமே
உருப்பொ லிந்தநாவி னேனை யுனக்குரித் தாக்கினையே. (௭)

பருப்பதத்து - மஹாமேருபர்வதத்தில்
கயல் – (தனது) மகரகேதனை
பொறித்த - நாட்டின
பாண்டியர் குலபதி போல் - பாண்டிய வம்சத்து அரசனைப்போல்,
திரு பொலிந்த - அழகு விளங்காநின்றுள்ள
சே அடி - செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை
என் சென்னியின் மேல் - என் தலையின்மீது
பொறித்தாய் என்று - நாட்டியருளினவனே! என்றும்,
மருப்பு ஒசித்தாய் என்று - (குவலயாபீடத்தின்) கொம்பை முறித்தவனே! என்றும்,
மல் - மல்லரை
அடர்த்தாய் என்று - நிரஸித்தவனே! என்றும் (இவ்வாறான)
உன் வாசகம் - உனது செயல்களுக்கு வாசகமான திருநாமங்களின் அநுஸந்தானத்தினால்
உரு பொலிந்த நாவினேனை - தழும்பேறின நாக்கையுடைய அடியேனை
உனக்கு - உனக்கு
உரித்து ஆக்கினையே - அநந்யார்ஹசேஷனாக ஆக்கிக்கொண்டாயே.

குறிப்பு:—கீழ்ப்பாட்டில், "உன்னுடைய விக்கிரமமொன் றொழியாம லெல்லாம், என்னுடைய நெஞ்சகம்பால் சுவர்வழி யெழுதிக்கொண்டேன்" என்றது எம்பெருமானுடைய நிர்ஹேதுக கருணையினால் என்பதை இப்பாட் டாலருளிச் செய்கிறார். பரமபதத்தை இருப்பிடமாகவுடைய எம்பெருமான் அங்கு நின்றும் இவர்பக்கலிலே வருமளவு முண்டான பாவக்காடுகளைப் பா ழாக்கியும், விரோதிகளைப் போக்கியும், இவருடைய சென்னித்திடரில் பாத விலச்சினை வைத்தருளினமைக்கு ஒரு த்ருஷ்டாந்தங் காட்டுகிறார், முதலடி யில். பாண்டியகுலத்துத் தலைவனாயிருந்த ஒரு அரசன் தனது நாட்டில் நின் றும் மஹாமேருகிரியளவும் வழியிலுள்ள காடுகளைக்களைந்து, பகைவர்களைப் பாற்றி, தனக்கும் தனது பரிஜநங்களுக்கும் நடை எளிதாம்படி பெருவழி யாக்கிக்கொண்டு சென்று, தனது வெற்றி தோற்றும்படி அம்மேருகிரியின் சிகரத்தில் தனது மகரகேதுவை நாட்டிப்போயின னென்ற வரலாறு அறிக. பாண்டியர் குலபதி கயல்பொறித்த இடமாகிய பருப்பதத்தை இங்கு உவமை கூறியதனால், பெறுதற்கரிய இப்பேற்றைப் பெறுதற்காகத் தாம் ஒரு முயற் சியும் செய்திலர் என்பது போதரும். பருப்பதம்—வட-பர்வதம்; ஊவ-பரீ என்றவடசொல், உருப்பசி எனத்திரிவ தொக்கும். கயல்—மீன்; இது, மன் மதனுக்குக் கேதுவானதுபோல, பாண்டியர் குலபதிக்கும் கேதுவாயிருந்த தென்க. சே அடி—ருஜுவான திருவடி என்றுமாம்; செம்மை + அடி, சேவடி. செம்மை—செந்நிறமுமாம்; ருஜுவாயிருக்குந் தன்மையுமாம். பொறித்தாய், ஒசித்தாய், அடர்த்தாய் என்றமூன்றும் விளி. மூன்றாமடியிறுதியில், ஏ-இசை நிறை. "உன்வாசகமேய் உருப்பொலிந்த நாவினேனை" என்றும் ஓதுவர்; உன் வாசகம் ஏய்—உன் விஷயமான தோத்திரங்களால் நிறைந்த எனறபடி. "உருப்பொலிந்த" என்று—எம்பெருமானைத் துதிப்பதனால் நாவுக்குப்பிறந்த புனிப்பைக் கூறியவாறுமாம். "[உருப்போலிந்த நாவினேனை.] செவ்வாய்க் கிழமையை 'மங்களவாரம்' என்னுமாபோலே விபரீதலக்ஷணை; இதரவிஷயங் களிலேயிறே என் நாக்கு உருப்பொலிந்தது" என்பது ஆன்றோருரைவாக் கியம்.

பகவத் ஸந்நிதிகளில் ஸ்ரீசடகோபன் ஸாதிக்கும்போது இப்பாசுரத் தை அநுஸந்திப்பது ஸம்ப்ரதாயம். ... ... ... (எ)

அனந்தன்பா லுங்கரு டன்பாலு மைதுநொய் தாகவைத்தென்
மனந்தனுள் ளேவந்து வைகி வாழச்செய் தாயெம்பிரான்
நினைந்தெனுள் ளேநின்று நெக்குக் கண்க ளசும்பொழுக
நினைந்திருந் தேசிர மந்தீர்ந்தேன் நேமி நெடியவனே. (அ)

நேமி - திருவாழியாழ்வானையுடைய
நெடியவனே - ஸர்வாதிகனே!
எம்பிரான் - எனக்குப் பரமோபகாரகனானவனே!
அனந்தன் பாலும் - திருவனந்தாழ்வானிடத்திலும்
கருடன் பாலும் - பெரிய திருவடியினிடத்திலும்
ஐது நொய்தாக வைத்து } (அன்பை) மிகவும் அற்பமாக வைத்து
என் மனம் தன் உள்ளே - எனது ஹ்ருதயத்தினுள்ளே
வந்து வைகி - வந்து பொருந்தி

வாழ செய்தாய் – (என்னை) வாழ்வித்தருளினாய்;
(இப்படி வாழ்வித்த உன்னை,)
என் உள்ளே - என் நெஞ்சில்
நினைந்து நின்று - அநுஸந்தித்துக்கொண்டு
நெக்கு : (அதனால்) நெஞ்சு சிதிலமாகப் பெற்று
கண்கள் அசும்பு ஒழுக } கண்களினின்றும் நீர் பெருகும்படி
நினைந்து இருந்தே – (நீ செய்த நன்றிகளை) அநுஸந்தித்துக்கொண்டே
சிரமம் தீர்ந்தேன் . இளைப்பாறப் பெற்றேன்.

குறிப்பு:—எம்பெருமான் தனது அந்தரங்க கிங்கரர்களான நித்யஸூரிகளிவரிடத்தும் அன்பைக்குறைத்து, அவ்வன்பு முழுவதையும் தம்மொருவர் பக்கலில் அமைத்தருளின பரமோபகாரத்தைப் பேசுகின்றார், இப்பாட்டில். "சென்றால் குடையாம்" என்றபடி பலவகைப் பணிவிடைகளையுஞ் செய்யவல்ல திருவனந்தாழ்வானிடத்தும், உவந்தேறுகைக்குரிய பெரிய திருவடியினிடத்துமே அன்பு குறைந்ததென்றால், மற்றையோரிடத்துக் குறையுற்றது, கைமுதிக நியாயத்தாற் பெறலாகுமென்க. ஐது எனினும், நொய்து எனினும் அற்பமென்றே பொருள்; இங்கு ஒருபொருட்பன்மொழியாய், 'மிகவும் அற்பமாக' என்று பொருள்படும்.

இப்படி "வாழச்செய்தாய் எம்பிரான்!" என்ற ஆழ்வாரை நோக்கி, எம்பெருமான், "ஆழ்வீர்! இன்று வாழ்ந்ததாகக் கூறுகின்ற நீர் நெடுநாளாக இவ்விருள்தருமா ஞாலத்தில் தட்டித்திரிந்து அலமந்து மிகவும் இளைத்தீரே" என்ன; அதற்கு ஆழ்வார், "ஐயனே! உன்னை இன்று நெஞ்சார நினைந்து, பிறகு 'நெஞ்சழியும்' என்றபடி மநச்சைதில்யமும் பெற்று, கண்களும் நீர்மல்கப்பெற்று, பிறகு, இவ்வாறான பரிபாகங்கள் பிறக்கைக்கடியாக நீ செய்தருளின நன்றிகளை மநநம் பண்ணிக்கொண்டே ஸகலதாபங்களும் தவிரப் பெற்றேனாகையால், என் சிரமத்தைப்பற்றி உனக்குச் சிந்திக்கவேண்டிய கடமையில்லை" என்கிறார், பின்னடிகளில். அசும்பு—கண்ணீர்; 'அஶ்ருவம்பு' என்ற வடசொல் திரிபு. [அஶ்ரு+அம்பு, அஶ்ருவம்பு; கண்ணீர்.] சிரமம்—ஶ்ரமம் என்ற வடசொல் திரிபு. கையுந் திருவாழியுமான அழகைக் கண்டபின்பும் இளைப்பாறக் கேட்கவேணுமோ என்பார் 'நேமி நெடியவனே!' என விளிக்கின்றார். ... .. ... ... ... ... (அ)

பனிக்கட லிற்பள்ளி கோளைப் பழகவிட் டோடிவந்தேன்
மனக்கட லில்வாழ வல்ல மாய மணாளநம்பீ
தனிக்கட லேதனிச் சுடரே தனியுல கேயென்றென்
னைக்கிட மாயிருக் கவென்னை யுனக்குரித் தாக்கினையே. (௯)

பனி - குளிர்ந்த
கடலில் - திருப்பாற்கடலில்
பள்ளிகோளை - பள்ளிகொள்ளுதலை
பழகவிட்டு – மறந்துவிட்டு
ஓடி வந்து - (அங்கு நின்றும்) ஓடி வந்து
என் – என்னுடைய

மனம் கடலில் - ஹ்ருதயமாகிற கடலில்
வாழ வல்ல - வாழவல்லவனும்
மாயம் - ஆச்சரிய சக்தியையுடையவனும்
மணாள - (பெரிய பிராட்டியார்க்குக்) கண [வனும்
நம்பி-குணபூர்ணனுமானஎம்பெருமானே!
தனி கடல் என்று - ஒப்பற்ற திருப்பாற் [கடலென்றும்
தனி சுடர் என்று - ஒப்பற்ற ஆதித்யமண் [டலமென்றும்
தனி உலகு என்று - ஒப்பற்ற பரமபத மென்றும் (சொல்லப்படுகிற இவை)

உனக்கு இடம் ஆய் இருக்க - உனக்கு (உற்ற) வாஸஸ்தானமாயிருக்கச்செய்தே [யும்
(அவற்றை உபேக்ஷித்துவிட்டு)
என்னை - (மிகவும் நீசனான) அடியேனை
உனக்கு - உனக்கு
உரித்து ஆக்கினையே - உரிய வாஸஸ்தானமாக அமைத்துக்கொண்டருளினையே! (இஃது என்ன வௌஸீல் [யம்!)

குறிப்பு:—எம்பெருமான், தன்னை அநுபவிக்குமவர்களான நித்யஸூரிகளை உபேக்ஷித்துவிட்டு, என்னிடத்து அன்புபூண்டு, என்னையே போக்தாவாகக் கொள்ளவந்தான் என்றார், கீழ்ப்பாட்டில்; இப்பாட்டில், அவ்வெம்பெருமான் தன்னுடைய போக (ஸ்தான) ஸ்தானங்களையும் உபேக்ஷித்து விட்டு வந்து என் நெஞ்சையே தனக்கு உரிய இடமாக அங்கீகரித்தருளினானென்கிறார்.

"ஔதந்வதே மஹதி ஸத்மநி ஸாஸநோ ... வாஸம் ..." [வரதராஜபஞ்சாசத்-] என்ற தூப்புற்பிள்ளையி னருளிச்செயல், இப்பாசுரத்தை ஒருபுடை அடியொற்றிய தென்றுணர்க. 'பள்ளிகோள்'என்றவிடத்து, கோள்—முதனிலை திரிந்த தொழிற் பெயர். பழகவிட்டு-பழகும்படிவிட்டு; அதாவது—'எம்பெருமானுக்குப் பணிக்கடலில் பள்ளி கொள்ளுதல் எப்போதோ பழையகாலத்தில் இருந்த சங்கதி' என்னும்படியாகவிட்டு என்றபடி; பழகுதல்-பிராசீநமாதல். மனத்தைக் கடலாகக் கூறியது-குளிர்ச்சி, இடமுடைமை முதலிய தன்மைகளின் ஒற்றுமை பற்றி. "த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ" என்பதனால், எம்பெருமான் ஸூர்ய மண்டலத்தை இருப்பிடமாகக் கொண்டவனென்பது அறியற்பாற்று. (௯)

தடவரை வாய்மிளிர்ந் துமின்னுந் தவள நெடுங்கொடிப்போல்
சுடரொளி யாய்நெஞ்சி னுள்ளே தோன்றுமென் சோதிநம்பி
வடதட மும்வைகுந் தமும் மதிள்துவ ராபதியும்
இடவகைக ளிகழ்ந்திட் டென்பா லிடவகை கொண்டனையே. (௧௦)

தட வரை வாய்-பெரிய பர்வதத்தில்
மிளிர்ந்து மின்னும்-மிகவும் விளங்காநின் [றுள்ள
தவள நெடுங் கொடி போல் - பரிசுத்தமான பெரியதொரு கொடி [போல,
சுடர் ஒளி ஆய்-மிக்க தேஜஸ் ஸ்வரூபி [யாய்

என் நெஞ்சின் உள்ளே-எனது ஹ்ருதயத் [தினுள்
தோன்றும்-விளங்காநின்றுள்ள
சோதி நம்பீ - தேஜஸ்விஞல் பூர்ணனான [வனே!

வட தடமும்-வடதிசையிலுள்ள திருப்பாற்கடலும்
வைகுந்தமும்-ஸ்ரீவைகுண்டமும்
மதிள்-மதில்களையுடைய
துவராவதியும்-த்வாரகையும் (ஆகிற)
இடவகைகள்-(நல்ல) இடங்களையெல்லாம்
இகழ்ந்திட்டு-உபேக்ஷித்துவிட்டு,
என்பால்-என்னிடத்தில்
இடவகை கொண்டனையே- வாஸஸ்தான புத்தியைப் பண்ணியருளினையே! (இஃது என்ன வாத்ஸல்யம்!)

குறிப்பு:—கீழ்ப்பாட்டில் எம்பெருமான் திருப்பாற்கடல் முதலிய திவ்யஸ்தானங்களைமறந்துவிட்டுத் தம்மிடம் போந்தபடியைப்பேசியருளினார்; ஒரு பொருளைமறதியினால் விட்டவர்கள் மீண்டு ஒருகால் அப்பொருள் நினைவுக்கு வரும்போது அதனை அங்கீகரிப்பது போல, எம்பெருமானும் இப்போது திருப்பாற்கடல் முதலிய விடங்களை மறந்து விட்டானேனும், பின்பொருகால் அவை நினைவுக்குவரின், அவற்றை அங்கீகரித்தருள்வானன்றோ? என்று சிலர் சங்கிப்பதாகக்கொண்டு, அச்சங்கைக்குப்பரிஹாரம்பிறக்குமாறு இப்பாட்டை அருளிச்செய்கின்றாரென்க. "இடவகைகள் இகழ்ந்திட்டு" என்றதில் நோக்கு. ஒருவன் தன் மனைவியை மறந்து மற்றொருத்தியைக் காதலித்தானாகில், பின்பு ஒருகாலத்தில் மனைவியை ஸ்மரித்து, அவளோடு புணரக் கருதக்கூடும்; அவன்றானே அவளிடத்துச் சில குற்றங்குறைகாரணமாக அவளை இகழ்ந்து விட்டிட்டானாகில், மீண்டு ஒருகாலும் அவளை நெஞ்சினும் நினையான்; அது போல, எம்பெருமான், திருப்பாற்கடல், பரமபதம், ஸ்ரீத்வாரகாபுரி முதலிய இடங்களைத்தானே புத்திபூர்வகமாக இகழ்ந்துவிட்டு வந்தனனாதலால், இனி அவ்விடங்களை ஒருகாலும் நினைக்கவும் மாட்டான் என்பது திருவுள்ளக் கருத்து.

. பெரியதொரு மலையின் கொடுமுடியில் நிர்மலமாக விளங்குகின்ற ஒரு கொடி எல்லார்க்கும் காண எளிதாயிருக்குமாறுபோல, என்னுடைய ஹ்ருதய கமலத்தினுள்ளே ஸுஸ்பஷ்டமாகப் பளபளவென்று விளங்காநின்ற தேஜஸ் ஸ்வரூபியே! என்று எம்பெருமானை விளிக்கின்றார், முன்னடிகளில். மிளிர்ந்து மின்னும்—மீமிசைச்சொல். தவளம்—தவளம் மென்ற வடசொல் திரிபு. இரண்டாமடியில், சுடர், ஒளி, சோதி என்ற இம் மூன்று சொற்களுக்கும், முறையே, திவ்யாத்மஸ்வரூபம், திவ்யமங்கள விக்ரஹம், திவ்யகல்யாண குணம் எனப் பொருள்வாசிகாண்க. மூன்றாமடியில், வடதட மென்பதை, வடதட மென்னும் வடசொல்லின் விகாரமாகக் கொண்டு, ஆலிலை யென்று பொருள் கூறுவாருமுளர்; (தளம்=தடம்; ளயயோரபேதம்) துவராவதி—த்வாராவதீ. இகழ்ந்திதேல்—வெறுப்புக்கொள்ளுதல். என்பால்=பால்—ஏழனுருபு. இடவகை—இடம். "கொண்டனையே" என்றதற்குப்பின், இப்படியுமொரு ஸௌசீல்யமிருப்பதே! இப்படியுமொரு ஸௌலப்ய மிருப்பதே! இப்படியுமொரு வாத்ஸல்ய மிருப்பதே! எனக் கூட்டி உபந்யஸிக்க.

"'உனக்குரித்தாக்கினையே' 'என்பாலிடவகை கொண்டனையே' என்று—'இப்படிசெய்தாயே!' என்று அவன்திருவடிகளிலே விழுந்துகூப்பிட,

இவரை யெடுத்து மடியிலேவைத்துத் தானும் ஆச்வஸ்தனானபடியைக்கண்டு ப்ரீதராய்த் தலைக்கட்டுகிறார். 'அதனிற் பெரிய வென்னவா' என்று நம்பாழ்வாருக்குப் பகவத்விஷயத்திற் பிறந்த அபிநிவேசமெல்லாம், இப்பெரியாழ்வார் பக்கலில் ஈச்வரனுக்குப் பிறந்தபடி இத்திருமொழி" என்ற ஆன்றோருரையிலருளிச் செயல் இங்கு அறியற்பாலது. ... ... (கo)

வேயர்தங் கள்குலத் துதித்த விட்டுசித் தன்மனத்தே
கோயில் கொண்டகோ வலனைக் கொழுங்குளிர் முகில்வண்ணனை
ஆய ரேற்றையமரர் கோவையந் தணர்த மமுதத்தினைச்
சாயை போலப் பாடவல் லார்தாமு மணுக்கர்களே. (கக)

வேயர் தங்கள்-வேயர்களுடைய
குலத்து-வம்சத்தில்
உதித்த-அவதரித்த
விட்டு சித்தன்-பெரியாழ்வாருடைய
மனத்து-ஹ்ருதயத்தில்
கோயில் கொண்ட-திருக் கோயில்கொண் [டெழுந்தருளியிருக்கிற
கோவலனை-கோபாலனும்,
கொழு குளிர் முகில் வண்ணனை } கொழுமையும் குளிர்ச்சியும் பொருந்திய மேகம் போன்ற [நிறத்தையுடையவனும்,
ஆயர் ஏற்றை - இடையர்களுக்குத் தலைவ [னும்,
அமரர் கோவை - நித்யஸூரிகளுக்கு நிர் [வாஹகனும்,
அந்தணர்தம்-(ஸநகர் முதலிய) மஹர்ஷி [களுக்கு
அமுதத்தினை-அம்ருதம்போல் இனியனு [மான எம்பெருமானை
பாட வல்லார்தாம்-( இத்திருமொழியினா [ல்) பாட வல்லவர்கள்
சாயை போல-நிழல்போல
அணுக்கர்கள் } (எம்பெருமானை எப்போதும்) அணுகியிருக்கப்பெறு [வர்கள்.

குறிப்பு:—இப்பாட்டால், இத்திருமொழி கற்பவர்களுக்குப் பலஞ் சொல்லித்தலைக்கட்டுகிறார். விஷ்ணுசித்தர் என்கிற ஆழ்வார் திருநாமத்திற்கு வ்யுத்பத்தி இப்பாட்டில் விசதமாகும். 'விஷ்ணுவை ஹ்ருதயத்தில் அமையப் பெற்றுள்ளவர்'என்ற அத்திருநாமத்தின்பொருள் ஒன்றரையடிகளால் விரிக்கப்பட்டது.

[வேயர் இத்தியாதி.] பெரியாழ்வாருடைய திருவம்சத்திற்கு வேயர்குலமென்று திருநாமமென்பர்; இதன் பொருள் இன்னதென்று விளக்கத் துணிகின்றிலோம். "முன்னை வினையகல மூங்கிற்குடியமுதன்" என்று—இராமாநுச நூற்றந்தாதி அருளிச்செய்த திருவரங்கத்தமுதனார் மூங்கிற்குடியார் என்றது போல, இவர் வேயர்குடியார் என்கிறது. இனி, வேயர் என்பதை 'வேதியர்' என்பதன் சிதைவாகக்கொண்டு, ப்ராஹ்மணகுலம்' என்று உரைப்பதைப் பெரியோர் இசைகின்றில ரென்பதும் அறியத்தக்கது.

எம்பெருமான் இடைக்குலத்திற் பிறந்து அனைவர்க்கும் எளியனானது போல ஆழ்வார்தமக்கும் எளியனானபடியைக் கோவலனை யென்பது குறிக்கு

மென்க. எம்பெருமான் ஆழ்வார்நெஞ்சிற்புகுந்தபின் புவிலக்ஷணமானதொரு புகரைப்பெற்றன னென்பதைப் பெறுவிக்கும், "கொழுங்குளிர் முகில்வண்ணனை" என்பது. கோழுமை—செழுமை. எம்பெருமானுடைய ஔதார்யத்திற்கு முகிலை உவமை கூறினரென்றுங் கொள்வர். ஆயரேறு—இடைக்குலத்திற் பிறக்கப்பெற்றோமென்னும் மகிழ்ச்சியினால் காளைபோலச் செருக்குற்றிருப்பவன். ஆழ்வார் திருவுள்ளத்திற் புகப்பெற்றமகிழ்ச்சியினாலும் அங்ஙனமே செருக்குற்றானென்க. அந்தணர்—ஆசிரியர் நச்சினார்க்கினியர் "அந்தத்தை அணவுபவர்" [வேதாந்தத்தைச் சார்பவர்] எனவிரித்துக் காரணப்பொருளுரைத்தனர்; "அணவுபவர்" என்றது அணர் எனவிகாரப்பட்டது. "ஆரணத்தின்சிரமீதுறை" என்றசடகோபரந்தாதிச் சிறப்புப்பாயிரச் செய்யுளின் ஈற்றடியில் "கார் அணனைக் கம்பனினைவாம்" என்றவிடம் நோக்கத்தக்கது. அந்தம்+அணர், அந்தணர்; தொகுத்தல். இனி, 'அம் தண் அர்' எனப்பிரித்துப் பலவாறாகப்பொருள்கொள்வாருமுளர். "அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுக லான்" என்ற திருவள்ளுவர் திருக்குறளும், அவ்விடத்துப் பரிமேலழகருரையும் நோக்கத்தக்கது. "நூலேகரகம் முக்கோல்மணையே, ஆயுங்காலை அந்தணர்க்குரிய" என்றதொல்காப்பிய மரபியற்சூத்திரத்தின் கருத்தை நோக்கினால், அந்தணரென்றசொல் யதிகளைக்குறிக்குமென்பது தெற்றென விளங்கும்.

அமுதத்தினை—அத்து, இன் என்ற இரண்டும் சாரியை; 'அந்தணர்தம் அமுதை' என்றபடி; உவமையாகுபெயர். சுவையின் மிகுதிபற்றியும், பெறற்கருமைபற்றியும், விபுதர்கட்கே போக்யமாயிருக்குந் தன்மைபற்றியும், பருகினவர்களை மயக்குந்தன்மை பற்றியும் எம்பெருமானை அமுதமாகக் கூறுதல் ஏற்குமென்க.

ஈற்றடியில் ஒரு ஐதிஹ்யம்:— பண்டு எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பியைத்திருவடிதொழுவதற்கென்று அங்கு எழுந்தருளின காலத்தில், சிலர் எம்பார் என்ற ஆசிரியரிடம் வந்து "'சாயைபோலப்பாடவல்லார்'என்ற அடியின் கருத்தை அருளிச்செய்யவேணும்" என்று பிரார்த்திக்க, எம்பார், எம்பெருமானாரிடத்தில் இதன் பொருளை நான் கேட்டுணர்ந்ததில்லை; இப்போது அவரைக்கேட்டு உங்களுக்குச்சொல்லுவோ மென்றுபார்த்தால், அவர் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளியிருக்கிறார்; ஆகிலும் நான் உங்களுக்கு இப்போதே சொன்னேனாகவேணும்" என்று, எம்பெருமானாருடைய திருவடி நிலைகளையெடுத்துத் தம்திருமுடியின்மீது வைத்துக்கொண்டு, "இப்போது உடையவர் எனக்கு அருளிச்செய்தார், சொல்லுகிறேன் கேளுங்கள்" என்று, "'அந்தணர்தம் அமுதத்தினைப் பாடவல்லார்-சாயைபோல அணுக்கர்கள்' என அந்வயித்துப் பொருள் கொள்ளுங்கள்' என்றருளிச்செய்தனராம். தம்முடைய நிழல் தம்மை விட்டு அகலாதவாறு போல, எம்பெருமானைப் பாடுமவர்கள் அவ்வெம்பெருமானைவிட்டு இறையும் அகலாது அவன்றனக்கே அத்தாணிச் சேவகராகப்பெறுவர் என்றவாறு. இனி, 'சாயைபோல - குளிர்த்

தியுண்டாம்படி, பாடவல்லார்தாம்-, அணுக்கர்கள்' என்றும் சிலருரைப்ப ரென்ப. சாயை-ஊாயா.

இப்பாசுரம் - இப்பதிகத்தின் பயனுரைத்தது. இது திருநாமப்பாட்டென்றும், பலச்ருதி யென்றும் வழங்கப்படும்: பதிகம், பாயிரம் என்றசொற்களால் இதனை வழங்குதலு முண்டு. இது, ஆழ்வார் தம்மைத்தாமே பிறர் போலக் கூறியது. பிரயோக விவேக நூலார் "இது, தன்னைப்பிறன் போலும் நாந்தி கூறுகின்றது" "இனிச்சம்பந்தர் சடகோபர் முதலாயினரும் திவாகரரும் பதினெண் கீழ்க்கணக்குச் செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங் கூறுவதுங்காண்க" என்றவை இங்கு அறியத்தக்கன. இது, ஒருவகைக் கவிசமயமாதலால் தற்புகழ்ச்சியாகாது, தற்சிறப்புப்பாயிரமெனப்படும். (கக)

அடி:—சென்னி பறவை எம்மனா கடல் பொன் உன் பருப்பதம் அனந்தன் பனி தடவரை வேயர் மார்கழி.

நான்காந் திருமொழி உரை முற்றுப் பெற்றது.

பெரியாழ்வார் திருமொழி உரை முற்றிற்று.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்திருவடிகளே சரணம்.

# உரைகாரர் விண்ணப்பம்.



ஆசிரியர்காள்! இன்றளவும் பலபுலவர்களால் அச்சிடப்பட்டுள்ள நாலாயிரதிவ்யப்ரபந்த மூலப்பிரதிகள் பலவற்றிலும் ஒவ்வொரு திருமொழியின் தலையிலும், இது எண்சீராசிரிய விருத்தம், இது கலிவிருத்தம், இது கலித்தாழிசை, இதுகொச்சகக்கலிப்பா என்று விருத்தம் முதலியன குறிக்கப்பட்டுள்ளமையை அனைவரு மறிவர். அவ்வவற்றின் இலக்கணம் இன்னதென்று அறிந்து கொள்ளாமல் விருத்தங்களின் பெயரைமாத்திர மறிந்துகொள்வதனால் பெறுவதொரு பேறின்மையின், அவ்விலக்கணவகையையும் எளியநடையில் எடுத்துக்காட்டவேணுமென்ற விருப்பம் அடியேனுக்கிருந்தமையை முன்முகவுரையினிறுதியில், "பதிப்புக்குறிப்பு" என்றதலைப்பின்கீழ் மூன்றாவது பகுதியாக வெளியிட்டுளேனாதலால், அந்தப்பிரதிஜ்ஞையை அடியொற்றி, யாப்பிலக்கணச்சுருக்கமும், அதன்பின், திருப்பல்லாண்டினுடையவும், பெரியாழ்வார்திருமொழியில் ஒவ்வொருதிருமொழியினுடையவும் விருத்தவகையாராய்ச்சியும் பதிப்பிக்கத் தொடங்கப்படுகின்றன..................

## யாப்பிலக்கணச் சுருக்கம்.



யாப்பாவது—பலவகைச் சொற்களாற் பொருட்கு இடமாகக் கற்று வல்ல புலவர்களால் அணிபெறப் பாடப்படுவது.

இதற்கு-எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என உறுப்பு ஆறும்.

எழுத்தாவன—நன்னூல் முதலியவற்றிற் கூறப்பட்ட அக்ஷரங்கள்.

அசையாவது—எழுத்தினலாக்கப்பட்டுச் சீருக்கு உறுப்பாய் வருவது.

அது - நேரசை நிரையசை என இருவகையாம்.

நேரசையாவது—ஒரு குறிலாவது ஒரு நெடிலாவது தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருவது.

(உதாரணம்) முறையே 'ஆழி' என்பதில் நெடிலும் குறிலும் தனித்தும், 'சொல்வாங்' என்பதில் குறிலும் நெடிலும் ஒற்றடுத்தும் நேரசையாயின.

நிரையசையாவது—குறிலிணையாவது குறில்நெடிலாவது தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருவது.

(உ-ம்) 'அணி' - குறிலிணை தனித்தும், 'கலம்' - குறிலிணை ஒற்றடுத்தும், 'நிலா' - குறில்நெடில் தனித்தும், 'படாம்' - குறில் நெடில் ஒற்றடுத்தும் நிரையசையாயின.

('அ ஆ' என்பதுபோல விட்டு இசைத்தா லல்லது, தனிக்குறில், சீரின் முதலில் நேரசையாகாது.)

**சீராவது**—அந்த அசைகள் சிறுபான்மை தனித்தும், பெரும்பான்மை இரண்டு முதல் நான்கு வரையில் தொடர்ந்தும் வருவது.

அது-ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என நான்காம்.

**ஓரசைச்சீராவது**—நேரசையாயினும் நிரையசையாயினும் தனித்து நின்று சீராய் வருவது. உதாரண வாய்பாடு: நேர்—நாள்; நிரை—மலர். இவை பெரும்பாலும் வெண்பாவினீற்றில் வரும். இவற்றை, அசைச்சீ ரென்பர்.

**ஈரசைச்சீராவது**—நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை என இரண்டு அசை கூடிவரும் இந்நான்குமாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| (உ-ம்) | நேர்நேர்—தேமா<br>நிரைநேர்—புளிமா | இவை மாச்சீர். | நிரைநிரை—கருவிள<br>நேர்நிரை —கூவிள | இவை விளச்சீர். |

இவை-இயற்சீர் எனவும், அகவற்சீர் எனவும், ஆசிரியவுரிச்சீர் எனவும் படும்.

**மூவசைச்சீராவது**—மேற்சொல்லப்பட்ட ஈரசைச்சீர் நான்கின் இறுதியிலும் நேரசையும் நிரையசையும் தனித்தனி கூடிவருதலா லாகிய எட்டாம்.

| | | | |
|---|---|---|---|
| நேர்நேர்நேர் - தேமாங்காய்<br>நிரைநேர்நேர் - புளிமாங்காய்<br>நிரைநிரைநேர்-கருவிளங்காய்<br>நேர்நிரைநேர்-கூவிளங்காய் . | இவை காய்ச்சீர். | நேர்நேர்நிரை - தேமாங்கனி<br>நிரைநேர்நிரை-புளிமாங்கனி<br>நிரைநிரைநிரை-கருவிளங்கனி<br>நேர்நிரைநிரை-கூவிளங்கனி | இவை கனிச்சீர். |

இவை - உரிச்சீர் எனவும், இவற்றுள் காய்ச்சீர்கள் - வெண்சீர் எனவும், கனிச்சீர்கள் - வஞ்சிச்சீர் எனவும் படும்.

**நாலசைச்சீராவது**—அம்மூவசைச்சீர் எட்டின் இறுதியிலும் நேரும் நிரையும் தனித்தனி அடுத்துவருதலா லாகிய பதினாறுமாம். (உ - ம்.)

| | |
|---|---|
| நேர்நேர்நேர்நேர் - தேமாந்தண்பூ | நேர்நேர்நேர்நிரை - தேமாந்தண்ணிழல் |
| நிரைநேர்நேர்நேர் - புளிமாந்தண்பூ | நிரைநேர்நேர்நிரை - புளிமாந்தண்ணிழல் |
| நிரைநிரைநேர்நேர் - கருவிளந்தண்பூ | நிரைநிரைநேர்நிரை-கருவிளந்தண்ணிழல் |
| நேர்நிரைநேர்நேர்-கூவிளந்தண்பூ | நேர்நிரைநேர்நிரை-கூவிளந்தண்ணிழல் |
| நேர்நேர்நிரைநேர்-தேமாநறும்பூ | நேர்நேர்நிரைநிரை-தேமாநறுநிழல் |
| நிரைநேர்நிரைநேர்-புளிமாநறும்பூ | நிரைநேர்நிரைநிரை-புளிமாநறுநிழல் |
| நிரைநிரைநிரைநேர்-கருவிளநறும்பூ | நிரைநிரைநிரைநிரை - கருவிளநறுநிழல் |
| நேர்நிரைநிரைநேர்-கூவிளநறும்பூ | நேர்நிரைநிரைநிரை-கூவிளநறுநிழல். |

(இவை, வெண்பாவில் வாரா. கலிப்பாவிலும், ஆசிரியப்பாவிலும் சிறுபான்மை குற்றியலிகரவுகரங்கள் வந்த இடத்துவரும்; வஞ்சிப்பாவில் வருதல் பெரும்பான்மை.)

(பொருளியைபுக்கு ஒவ்வாமற் சீர்பிரிவது, வகையுளி யெனப்படும்.)

**தளையாவது**—நின்றசீரின் ஈற்றசையோடு வருஞ்சீரின்முதலசை ஒன்றியாயினும், ஒன்றாமலாயினும் கூடிநிற்பது. ஒன்றுதலாவது - நேர்முன் நேரும், நிரைமுன் நிரையும் வருவது. ஒன்றாமையாவது - நேர்முன் நிரையும், நிரைமுன் நேரும் வருவது.

அத்தளை - நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, வெண்சீர்வெண்டளை, இயற்சீர்வெண்டளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை, கலித்தளை என எழுவகைப்படும்.

நேரொன்றாசிரியத்தளை - மாமுன்நேர்வருவது; (நாள் முன் நேர்வருவதும் அது.)
நிரையொன்றாசிரியத்தளை - விளமுன் நிரை வருவது; (மலர்முன் நிரை வருவதும் அது.)

வெண்சீர்வெண்டளை—காய்முன் நேர்வருவது; (பூமுன்நேர்வருவதும்அது.)

இயற்சீர்வெண்டளை—மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவன; (நாள்முன் நிரை வருவதும், மலர்முன் நேர்வருவதும் அது.)

ஒன்றியவஞ்சித்தளை - கனிமுன் நிரைவருவது; (நிழல்முன் நிரைவருவதும்அது.)
ஒன்றாவஞ்சித்தளை—கனிமுன்நேர்வருவது; (நிழல்முன்நேர்வருவதும்அது.)

கலித்தளை—காய்முன் நிரைவருவது; (பூமுன் நிரைவருவதும் அது.)
அடியாவது—மேற்சொல்லிய தளைகள் ஒன்றும் பலவும் அடுத்துவருவது.

அவ்வடி - குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என ஐந்து வகைப்படும். குறளடி - இருசீராலும், சிந்தடி-முச்சீராலும், அளவடி - நாற்சீராலும், நெடிலடி - ஐஞ்சீராலும், கழிநெடிலடி - ஆறு முதலிய சீர்களாலும் வருவன. (அளவடி, நேரடி யெனவும் படும்.)

தொடையாவது—பல அடிகளிலாயினும், பலசீர்களிலாயினும் எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது.

அது - எதுகை, மோனை, முரண், அளபெடை, இயைபு என்பவற்றால் ஐந்து வகைப்படும். அந்தாதித்தொடை யென்றும் ஒன்று உண்டு.

எதுகைத்தொடையாவது—அடிதோறும் முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டு முதலிய எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது. சிறுபான்மை இனவெழுத்துக்களும் எதுகையாம்.

மோனைத்தொடையாவது—பல அடிகளிலாவது, ஓரடியின் பல சீர்களிலாவது முதலெழுத்து ஒற்றுமைப் பட்டுவரத் தொடுப்பது. அ ஆ ஐ ஔ, இ ஈ எ ஏ யா, உ ஊ ஒ ஓ; ஞ ந, ச த, ம வ இவை ஒன்றற்கு ஒன்று மோனையாய் வருதலும்உண்டு. சிறுபான்மை இனவெழுத்துக்களும் மோனையாம். ஓரடியின் சீர்களிலெல்லாம் மோனை வந்தால், முற்றுமோனை யெனப்படும்.

முரண்தொடையாவது—சொல்லாலும்பொருளாலும்மறுதலைப்படத்தொடுப்பது.

அளபுத்தொடையாவது—உயிரளபெடையாயினும் ஒற்றளபெடையாயினும் ஒன்றிவரத் தொடுப்பது.

இயைபுத்தொடையாவது—ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.
(இத்தொடைகள் அமையாதிருப்பது, செந்தொடை எனப்படும்.)

**அந்தாதித்தொடையாவது**—முன்நின்ற பாட்டின் இறுதியிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் பின் வரும் பாட்டின் முதலாகப் பாடுவது. இங்ஙனம் பாடும் நூலின் இறுதிச் செய்யுளின் அந்தமே முதற் செய்யுளின் ஆதியாக அமைவது மண்டலித்தல் எனப்படும்:

இவ்வுறுப்புக்களைப்பெற்றுவருகிற பா-வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நால்வகைப்படும். 'மருட்பா' என்றும் ஒன்று உண்டு. இப்பா நான்கிற்கும் - துறை, தாழிசை, விருத்தம் என இனம் மூன்று. இவற்றுள்,

**வெண்பாவாவது**—ஈற்றடி முச்சீரடியாகவும் மற்றையடி நாற்சீரடியாகவும் பெற்று, காய்ச்சீரும் மாச்சீர் விளச்சீர்களும் இருவகை * வெண்டளைகளுங்கொண்டு, மற்றைச் சீருந்தளையும் பெறாமல், நாள் மலர் என்ற வாய்பாடுகளுள் ஒன்றினாலாவது, காசு பிறப்பு என்ற உகரவீற்றுவாய்பாடுகளுள் ஒன்றினாலாவது முடிந்து, ஒருவிகற்பத்தாலாயினும் இருவிகற்பத்தாலாயினும் வருவது. [ஒருவிகற்பமாவது - பல அடிகள் ஓர் எதுகையாய் வருவது; இருவிகற்பமாவது - அவ்வடிகள் இருவகை எதுகையாய் அமைவது.]

அவ்வெண்பா - குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா என ஐந்துவகைப்படும்.

**குறள்வெண்பா** - இரண்டடியாய் வருவது.

**சிந்தியல்வெண்பா** - மூன்றடியாய் வருவது.

**நேரிசைவெண்பா** - நான்கு அடிகளாய் இரண்டாம் அடியின் இறுதிச்சீர் முதலிரண்டு அடிகளின் எதுகைக்கு ஏற்ற தனிச்சொல்லாய் வர நிற்பது.

**இன்னிசை வெண்பா** - நான்கு அடிகளாய்த் தனிச்சொல் இன்றி வருவது. (தனிச்சொற்பெற்றாலும், பலவிகற்பத்தால் வரின், இன்னிசை வெண்பாவேயாம்.

இரண்டாம் அடி யொழிந்த அடிகளில் தனிச்சொற் பெற்று வருவதும் இதுவே.)

**பஃறொடைவெண்பா** - ஐந்து அடி முதல் பன்னிரண்டு அடியளவும் வருவது. (பன்னிரண்டடிக்கு மேற்படின், கலிவெண்பாவாம்.)

**ஆசிரியப்பா**வெனினும், **அகவற்பா**வெனினும் ஒக்கும். இதில் பெரும்பாலும் ஈரசைச்சீர்கள் பயிலும்.

**நேரிசையாசிரியப்பா** - ஈற்றயலடி முச்சீரடியும், மற்றையடிகளெல்லாம் நாற்சீரடிகளுமாக வருவது.

**நிலைமண்டிலவாசிரியப்பா** - எல்லாவடிகளும் நாற்சீரடிகளாய் வருவது.

**ஆசிரியவிருத்தம்** - அளவொத்த கழிநெடிலடிநான்கினால் வருவது. அளவொத்தலாவது - ஓரடியில் ஒருசீர் எந்தச்சீராக அமைந்துள்ளதோ; அச்சீர் அந்தச்சீராகவே எல்லா அடிகளிலும் அமைவது.

---

* "காய்முன் நேரும் மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது வெண்டளை."

**கலிப்பா** - காய்ச்சீர்கள் மிகப்பெற்று நாற்சீரடிகளால் வரும்.

**தரவுகொச்சகக்கலிப்பா** - நாற்சீரடிகளால் தனித்துவருவது.

**கலிவிருத்தம்** - அளவொத்த அளவடி நான்கினால் வருவது;

**கலித்துறை** - அளவொத்த நெடிலடி நான்கினால் வருவது; இவை - கலிநிலைத் துறை யென்றும், காப்பியக்கலித்துறை யென்றும், விருத்தக்கலித்துறை யென்றும் வழங்கப்படும்.

**கட்டளைக்கலித்துறை** - பெரும்பாலும் முதல் நான்கு சீர்கள் ஈரசைச் சீர்களும் ஐந்தாஞ்சீர் விளங்காய்ச்சீருமான நெடிலடி நான்கு கொண்டு அடிதோறும் வெண் டளை பிறழாமல், நேரசைமுதலாயின் ஓரடிக்கு ஒற்றொழிந்த எழுத்துப் பதினாறும், நிரையசைமுதலாயின் அவ்வெழுத்துப் பதினேழுமாய் ஏகாரவீற்றதாய் வருவது.

**வஞ்சிப்பா**-இருசீரடிகளாலும், முச்சீரடிகளாலும் வரும்.

**வஞ்சிவிருத்தம்**-முச்சீரடி நான்கு கொண்டு வரும்.

**வஞ்சித்துறை**-இருசீரடி நான்கு கொண்டு தனித்துவரும்.

(இதுவேஒருபொருள்மேல் மூன்றடுக்கிவந்தால், வஞ்சித்தாழிசையாம்.)

**மருட்பா**-வெண்பாவாகத் தொடங்கி ஆசிரியப்பாவாக முடிவது.

குற்றியலிகரம் குற்றியலுகரம் அளபெடை என்பவை, இடத்துக்கேற்ப அலகு பெறாமலும் நிற்கும். ஆய்தவெழுத்து-சிலவிடத்து உயிராகவும் சிலவிடத்து மெய்யாக வும் இடத்துக்கு ஏற்பக் கருதப்படும். ஐகார ஔகாரக் குறுக்கங்கள்-இடத்துக்கு ஏற்பக் குற்றெழுத்தேபோலக்கொண்டு அலகிடப்படும். சிறுபான்மை மெய்யெழுத்துகளை ஒழித்து அலகிடுதலும் உண்டு. அளபெடைகள், மாத்திரைக்கு ஏற்ப அலகிடப்படும்.

மற்றவை சிறுபான்மையன. அவற்றின் இலக்கணங்களையெல்லாம் தொல்காப்பி யம், இலக்கணவிளக்கம், யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலம் முதலிய பரந்த நூல்களிற் கண்டுகொள்க.



# திருப்பல்லாண்டு.

[விருத்தவகையாராய்ச்சி.]

இதில் முதற் பாசுரம்:—

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பல்கோடி நூறு யிரமும்,

மல்லாண்ட திண்டோள் மணிவண் ணவுன்
சேவ்வடி சேவ்விதிருக் காப்பு."

என்பதாம்.

இதனைக், குறள் வெண் செந்துறை என மூலப் பிரதிகளிற் பதிப்பித்துள்ளார். செந்துறைவெள்ளை எனினும், குறள் வெண் செந்துறை எனினு மொக்கும்.

"அந்தமில் பாத மளவிரண்டொத்து முடியின் வெள்ளைச்
செந்துறையாகுந்திருவே! அதன் பெயர், சீர் பலவாய்
அந்தங் குறைனவுஞ் செந்துறைப்பாட்டி னிழிபுமங்கேழ்
சந்தஞ் சிதைந்த குறளுங் குறளினத் தாழிசையே."

என்ற யாப்பருங்கலக் காரிகையினுரையில், "நாற்சீரின் மிக்க பல சீரான் வந்து அடி யிரண்டாய் ஈற்றடி குறைந்து வருவன குறட்டாழிசை யெனப்படும்" என்றதனுலும், செய்யுளிலக்கணச் சுருக்கத்தில், "அளவொத்த அளவடி யிரண்டாய் விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையுமாய் வருவது, செந்துறை வெள்ளை, அல்லது, குறள் வெண் செந்துறை" என்றதனுலும், அளவொத்த நாற் சீரடிகளிரண்டு கொண்டுவருவதையே குறள் வெண் செந்துறையாகக் கொள்ள வேண்டியதாகின்றது: இப்பாசுரம் எழு சீர்கொண்ட இரண்டடிகளா லமைந்தமையான் இதனைக் குறள் வெண் செந்துறை யெனக் கொள்ளுதல் கூடுமாறு எங்ஙனே? என்பர் சிலர்; "ஒழுகிய லோசையினொத்தடி யிரண்டாய், விழுமிய பொருளது வெண் செந்துறையே" என்ற யாப்பருங்கலச் சூத்திரத்தில், சீர் இத்தனை யென்று வரையறுத்துக் கூறப்படாமையின் அளவடியாகவே அமையவேண்டு மென்ற நிர்ப்பந்தங் கொள்ளற்பாற்றன் றென்பர் சிலர். மேற்கூறிய சூத்திரத்தில் "ஒத்தடி யிரண்டாய்" என்றமையாலும், ஒத்தடி யெனினும் அளவடி யெனினும் ஒக்குமாகையாலும், சீர் இத்தனை யென்று வரையறுத்துக் கூறப்பட்டதாகவே யாகின்றதென்றுர் சிலர். இவ்வகைகளை ஆராயுமிடத்து, "பல்லாண்டு பல்லாண்டு" என்கிற இப்பாசுரத்தின் யாப்பிலக்கணம் இன்னதென்று விளங்கக்கூற முடியாததா யிருக்கின்றதென்பர். இலக்கணப் புலமையிற் சிறந்த சீரியர்கள் பலர் பரிசோதித்துப் பதிப்பித்த நாலாயிர மூலப்பிரதிகள்

பலவற்றிலும் இப்பாசுரத்தின் மேல் "குறள் வெண் செந்துறை" என்றே பதிப்பிக்கப் பட்டுள்ளமையால் அதனை மறுத்துக் கூறுதல் யாருக்கும் அழகின்று. இலக்கணநதிகளை ஆய்ந்து நோக்குழி இப்பாசுரத்தைக் குறள் வெண் செந்துறை யெனக் கூறுவது தகுதியேயாம் யாப்பருங் கலக்காரிகையில் செய்யுளியலில் " அந்தமில் பாதம்" என்ற ஆரும்பாட்டின் உரையில், "சீர் வரையறையில்லாமையால் எனைத்துச் சீரானும் அடியானும் வரப் பெறும் எனக்கொள்க" என்றும், இலக்கண விளக்கத்திற் பொருளதிகாரத்துச் செய் யுளியலில், "ஒழுகியவோசையி னொத்தடி யிரண்டாய், விழுமிய பொருடரும் வெண்செந்துறையும்,அந்தடிகுறைநவுஞ் செந்துறைச் சிதைவும்,சந்தடிகுறளு மாந்தாழிசைக் குறளும், குறட்பாவினமாங் கூறுங்காலே" என்ற நாற்பத் தோராம் பாட்டின் உரையில், "சீர் வரையறுத்திலாமையால் எனைத்துச் சீரானும் அடியாய் வரப்பெறும்" என்றும் இலக்கணப் புலவர்களால் எழு தப்பட்டுள்ள வாக்கியங்கள் இதற்குப் பிரமாணமாகக் கொள்ளத்தகும்.

ஆகவே; இப்பாசுரம்-குறள் வெண் செந்துறையே யாமெனக் கோள்க.

"அடியோமோடும்" என்று தொடங்கி "பல்லாண்டேன்று பவித்திரனை" என்ற நீருகவுள்ள பாசுரங்கள் பதினொன்றும்,

அறுசீர்க்கழி நேடிலடி ஆசிரிய விருத்தம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழி.



இப்பிரபந்தத்துள்,

**கலி விருத்தத்தினல் அமைந்த திருமொழிகள், ௩.**

அவையாவன:—வண்ண மாடங்கள் [க - க.], நெறிந்த கருங்குழல் [௩ - ௧௦], மாதவத்தோன் [௪ - அ] ஆகிய இத்திருமொழிகளாம். (க)இவற் றுள், "வண்ணமாடங்கள்" என்ற திருமொழி, பெரும்பாலும் முதற் சீர் மாச்சீரும், மற்ற மூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலி விருத்தம். இதில், நேரசை முதலான பாட்டுக்கள் பெரும் பாலும் ஒற்றொழித்துப் பதினோரெழுத்தாகவும், நிரையசை முதலான பாட் டுக்கள் ஒற்றொழித்துப் பன்னிரண்டெழுத்தாகவும் அமைந்துள்ளவாறு காண்க. (உ) "நெறிந்த கருங்குழல்" என்ற திருமொழி, பெரும்பாலும் நாற்சீர்களும் காய்ச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்டது. (௩) "மாத வத்தோன் புத்திரன் போய்" என்ற திருமொழியும் அவ்வாறே. இனி, இவ் விரண்டு திருமொழிகளைத் தரவுகோச்சகக் கலிப்பா வென்பதே உரியதா மென்பது முரியதே.

### வெண்டளையால் வந்த கலித்தாழிசையிலமைந்த திருமொழிகள்—௧௦.

அவையாவன :—சீதக்கடல் [௧. ௨], மாணிக்கங் கட்டி [௧. ௩], மாணிக்கக் கிண்கிணி [௧. ௬], பொன்னியற் கிண்கிணி [௧. ௮], வட்டுநடுவே [௧. ௯] மெச்சூது சங்கம் [௨. ௧], பின்னை மணாளனை [௨. ௫], வேலிக்கோல் வெட்டி [௨. ௬], ஆற்றிலிருந்து [௨. ௧௦], என்னாதன் தேவிக்கு [௩. ௯], ஆகிய இத்திருமொழிகளாம். இவற்றில் ஒவ்வொரு திருமொழியிலும் இறுதிப் பாட்டொன்று மாத்திரம் பெரும்பாலும் வெண்டளையால் வந்த தரவு கொச்சகக் கலிப்பாவா லமைந்தது.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தத்தாலமைந்த திருமொழிகள்—௧௩.

அவையாவன :—தொடர் சங்கிலிகை [௧. ௭], வெண்ணெ யளைந்த [௨. ௪], ஆநிரைமேய்க்க [௨. ௭], இந்திரனோடு பிரமன் [௨. ௮], வெண்ணெய்விழுங்கி [௨. ௯], சீலைக்குதம்பை [௩. ௩], தழைகளும் [௩. ௪], ஐயபுழுதி [௩. ௭], நல்லதோர் தாமரை [௩. ௮], கதிராயிர மிரவி [௪. ௧], மரவடியைத் தம்பிக்கு [௪. ௯], நெய்க்குடத்தைப் பற்றி [௫. ௨], துக்கச் சுழலையை [௫. ௩], ஆகிய இத்திருமொழிகளாம். இவற்றுள், (௧) "தொடர் சங்கிலிகை" என்ற திருமொழி, பெரும்பாலும் முதற்சீரும் இரண்டாஞ்சீரும் மாச்சீர்களாகவும், மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களாகவும், நான்காஞ் சீரும் ஐந்தாஞ் சீரும் விளச்சீர்களாகவு மமைந்த கழி நெடிலடி நான்கு கொண்டது, (௨) "வெண்ணெயளைந்த குணுங்கும்" என்ற திருமொழி, பெரும்பாலும் ஒன்று, இரண்டு, மூன்று, ஆறாஞ் சீர்கள் மாச்சீர்களாகவும், நான்கு, ஐந்தாஞ்சீர்கள், விளச்சீர்களாகவு மமைந்த கழி நெடிலடி நான்கு கொண்டது. (௩) "ஆநிரை மேய்க்க நீபோதி" என்ற திருமொழியும், (௪) "இந்திரனோடு பிரமன்" என்ற திருமொழியும், பெரும்பாலும் ஒன்று, இரண்டு, நான்கு, ஐந்தாஞ்சீர்கள் விளச்சீர்களாகவும், மூன்று, ஆறாஞ்சீர்கள் மாச்சீர்களாகவு மமைந்த கழி நெடிலடி நான்கு கொண்டவை. இனி, மற்ற திருமொழிகளின் சீர் வகையையும் இவ்வண்ணமே ஆராய்ந்துணர்க.

### எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த திருமொழிகள்—௪.

அவையாவன:—போய்ப்பாடுடைய [௨. ௩], தன்னேராயிரம் [௩. ௧], நாவகாரியம் [௪. ௪], தங்கையை மூக்கும் [௪. ௭], ஆகிய இவைகளாம்.

### எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்த திருமொழிகள்—௭.

அவையாவன:—உய்யவுலகு [௧. ௫], அரவணையாய் [௨. ௨], அட்டுக் குவி சோறு [௩. ௫], நாவலம் பெரிய [௩. ௬], ஆசைவாய்ச் சென்ற [௪. ௫], துப்புடையாரை [௪. ௧௦], வாக்குத் தூய்மை [௫. ௧], ஆகிய இவைகளாம். இவற்றினுள், "அரவணையாய்" என்ற திருமொழியைக் கலிவிருத்தத்தில் அமைந்ததாகக் கொண்டு, அதற்கேற்பச் சீர்பிரிக்கவும் இடமுண்டு.

### கலித்துறையில் அமைந்த திருமொழிகள்—௬.

அவையாவன:—தன் முகத்துச் சுட்டி [௧-௪], அஞ்சன வண்ணனை [௩-௨], அலம்பா வெருட்டா [௪-௨], உருப்பிணி நங்கைதன்னை [௪-௩], காசுங் கறையுடைக் கூறை [௪-௬], சென்னியோங்கு [௫-௪], ஆகிய இவைகளாம். (இக்கலித்துறை, கலி நிலைத்துறை யென்றும், காப்பியக் கலித்துறை யென்றும், விருத்தக் கலித்துறை யென்றும் வழங்கப்படுமென்ப.)



முக்கிய அறிவிப்பு:—இலக்கண நூற்களில் யாப்பிலக்கணங் கூறுமிட மெங்கும் "அளவொத்த அடிகளால் அமையவேண்டும்" என நியதி கூறப் பட்டுள்ளது; அளவொத்தலாவது—ஓரடியில் ஒரு சீர் எந்தச்சீராக அமைந் துள்ளதோ, அச்சீர் அந்தச் சீராகவே எல்லா அடிகளிலும் அமைவது என் றும் உரைக்கப்பட்டுளது:

"போதலர்ந்த பொழிற்சோலைப் புறமெங்கும் பொருதிரைகள்
தாதுதிர வந்தலைக்குந் தடமண்ணித் தென்கரைமேல்
மாதவன்றா னுறையுமிடம் வயல்நாங்கை வரிவண்டு
தேதெனவென் றிசைபாடுந் திருத்தேவ னார்தொகையே"
[பெரிய திருமொழி-௪-௧. ௧.]

இப்பாட்டில், முதலடியிலுள்ள நான்கு சீர்களும் விளங்காய்ச் சீர்க ளாக அமைந்துள்ளமைக்கு ஏற்ப, மற்ற மூன்றடிகளிலுமுள்ள சீர்களும் அவ்விளங்காய்ச் சீர்களாகவே அமைந்துள்ளவாறு காண்க. இந்நியதியைப் பெரும்பாலும் தமிழ்க்கவிகள் அடியொற்றிச் செல்லுகின்றிலர்; இதற்குச் சில உதாரணங்களுங் காண்க;

(௧)

"வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ண மெதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றங் கலந்தளறாயிற்றே."
[பெரியாழ்வார் திருமொழி—க.௨,க.]

இப்பாட்டில், முதலடியில் முதற்சீர் ஒன்று மாத்திரம் மாச்சீராகவும், இரண்டாஞ்சீர் காய்ச்சீராகவும், மற்ற இரண்டு சீர்கள் விளச்சீராகவும் அமைந்துள்ளன. இதே அளவாக மற்ற மூன்று அடிகளும் அமைய வேண்டியிருக்க, அங்ஙனமமையாது ஒவ்வோரடியிலும் ஒவ்வொரு வகையாக மாறிமாறி அமைந்துள்ளது.

(௨.)

"செழுக்கமலத் திரளனகின் சேவடி சேர்ந்தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல் விஞானமிலா
வழுக்கு மனத்தடியே னுடையாயுன் னடைக்கலமே."

இது சைவசமயாசிரியராகிய மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகத்தில் "அடைக்கலப்பத்து" என்ற பதிகத்தின் முதற்பாட்டு. இதில் முதலடியில், ஒன்று, இரண்டு, நான்காஞ்சீர்கள் காய்ச்சீராகவும், மூன்றாஞ்சீர் விளச்சீராகவும் அமைந்து நிற்க, மற்ற மூன்று அடிகளிலும் இவ்வளவை ஒவ்வாமற் சீர்கள் வெவ்வேறு வகையாக அமைந்துள்ளன. தேவாரம் முதலிய மற்றும்பல சைவசமயப் பிரபந்தங்களில் இவ்வாறாகக் காணப்படுகின்ற செய்யுட்கட்கு ஓர் வரையறையில்லை.

(ங)

"அஞ்சிலே யொன்றுபெற்றா னஞ்சிலே யொன்றைத்தாவி
அஞ்சிலே யொன்றாறாக வாரியற் காகவேகி
அஞ்சிலே யொன்றுபெற்ற வணங்கைக்கண் டயலாரூரில்
அஞ்சிலே யொன்றைவைத்தா னவனெம்மை யளித்துக்காப்பான்."
[கம்பராமாயணம்-அநுமான் துதி.]

இப்பாட்டில், முதலடியில் முதற்சீரும் மூன்றாஞ் சீரும் விளச்சீராகவும், இரண்டாஞ்சீர் காய்ச்சீராகவும், நான்காஞ்சீர் பூச்சீராகவும் அமைந்து நிற்க, இவ்வளவு மற்ற அடிகளில் ஒத்து வாராமை காண்க.

இனி, இவ்வாறான மாறுபாட்டினால் இலக்கணக் குறை சங்கிக்க இடமுண்டாகின்றதே எனின்;—கற்றுணர்ந்த பேரியோர் இவ்வகைப் பாவை இசைத் தமிழ்ப்பாவெனவும், ஆனதுபற்றியே எல்லா அடிகளிலும் இயற்றமிழ்ப்பாவிற்கு ஏற்ப ஓசை ஒத்துவாராமல் சிற்சில விடங்களில் மிக்குங் குறைந்தும் வருகின்றதெனவுங் கூறுவராதலால் ஒன்றுங் குறையில்லை யென்றுணர்க. எனவே, இயற்றமிழ்ப்பா, இசைத் தமிழ்ப்பா, நாடகத்தமிழ்ப்பா என மூன்று வகுப்பாக வகுக்கப்பட்டுள்ள தமிழ்ப்பாக்களுள் இத்திவ்யப் பிரபந்தங்கள் இசைத் தமிழ்ப்பாவாகக் கருதப்படவேண்டுமென்றதாயிற்று. ஆனபின்பு இவற்றின் சீர்களின் மாறுபாடடியான ஓசைவேற்றுமைபற்றிக் குறை கூறுதல் கொள்ளற்பாலதன்றென்றுணர்க. இனி, இதுபற்றி விபுலமாகவும் விசதமாகவும் உணரவேண்டும் விஷயங்களைக் கசடறக்கற்ற கல்வியாளர்பாற் கேட்டுணர்க.

கம்பநாட்டாழ்வார் இயற்றிய சடகோபரந்தாதியில், "பாவொடுக்குந் நுண்ணிசையொடுக்கும் பலவும்பறையும், நாவொடுக்குந் நல்லறிவொடுக்கும் மற்று நாட்டப்பட்ட—, தேவொடுக்கும் பரவாதச் செருவொடுக்குங் குருகூர்ப், பூவொடுக்கும் மழுதத்திருவாயிரம் போந்தனவே" என்ற மூன்றாம் பாட்டிலும், "தோன்றுவுபநிடதப் பொருள்" என்ற ஆறாம்பாட்டின் மூன்றாமடியிலும் கண்ணைச் செலுத்துக. மேற்கூறிய இரண்டு செய்யுட்களிலும், இயல், இசை, நாடகமென்னும் மூன்றுவகைத் தமிழிலக்கணங்களுமமைந்த திவ்ய ப்ரபந்தங்களை ஆழ்வார் அருளிச்செய்தன ரென்பது கூறப்பட்டுள்ளமைகாண்க.

"பா ஒடுக்கும்—'எழுத்துப் பதின்மூன்றிரண் டசைசீர் முப்பதேழ் தளையைந், திழுக்கிலடிதொடை நாற்பதின் மூன்றைந்து பாவினம் மூன், றொழுக்கிய வண்ணங்கள் நூறொன்பதோண்பொருள் கோளிருமூ, வழுக்கில் விகாரம் வனப்பெட்டு யாப்புள் வகுத்தனவே.' என்று தொகுத்து உணர்த்தப்படும் இயற்றமிழ்ப் பாவின் இலக்கணங்கள் பலவற்றையும் தம்முள்ளே சுருங்கக்கொண்டு காட்டும் என்றபடி. நண் இசை ஒடுக்கும்—குறிஞ்சி, செருந்தி, இந்தளம், கொல்லி, காமரம், தக்கேசி, பஞ்சமம், கைசிகம், காந்தாரம், பாலையாழ் முதலிய பண்களாதியவற்றைத் தம்முள்ளே கொண்டு காட்டுமென்றபடி; "பண்ணிற் பன்னிரு நாமப்பாட்டு" என்று திருவாய்மொழியில் வருவதுங் காண்க. 'பலவும் பறையும் நாவொடுக்கும்' என்றதற்கும் இங்ஙனமே கண்டு கொள்க. ............இயலுக்கும் இசைக்கும் பொதுவாதல் பற்றி நாடகம் 'நா' எனப்பட்டது; நா=நடு" என்ற மூன்றும் பாட்டினுரை வாக்கியங்களும் நோக்கத்தக்கன. நம்மாழ்வாரருளிய திவ்யப்ரபந்தங்கட்குக் கூறியது—மற்ற ஆழ்வார்களருளிய பிரபந்தங்கட்குங் கூறியவாறே; உபலக்ஷணமென்க. இனி, முதலாழ்வார்கள் மூவரும் அருளிசெய்த திருவந்தாதிப் பிரபந்தங்கள் மூன்றும் வெண்பாவாதலாலும், திருமழிசைப்பிரான் அருளிச் செய்த பிரபந்தங்கள் இரண்டனுள் ஒன்று வெண்பாவாகவும், மற்றொன்று பெரும்பாலும் அளவொத்த எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியச்சந்த விருத்தமாகவும் அமைந்திருத்தலாலும், அந்நால்வருடைய திவ்யப்ரபந்தங்களிலும் யாப்பிலக்கணப் பொருத்தத்தைப் பற்றிப் பிரயாசங் கொள்ளவேண்டிய கடமையில்லை யென்பதும் இங்கு அறிவிக்கத்தக்கது.

"அருளிச்செயல் ஸம்ஸ்கிருத வேதத்தோடொத்த தமிழ் வேதமென்பதேயன்றி, அவ்வடமொழி வேதத்தினுஞ் சிறிது எனப் போற்றிக்கொள்ளப் பெறுவதாதலின், இதன் செய்யுட்களின் எழுத்து, அசை, சீர், தளைமுதலிய இலக்கணங்களைத் தொல்காப்பியம் முதலிய முன்னூல்களாலும், நன்னூல் முதலிய பின்னூல்களாலும் ஆராய்தல் சால்புடைத்தன்று என்றும், இதன் பிரயோக விசேஷங்களை வேதத்திலுள்ள பிரயோகங்கள் போலவே கொள்ளல் வேண்டுமென்றும் ஸம்ப்ரதாய சாஸ்த்ரஜ்ஞரான சான்றோர் கூறுவரேனும், இக்காலத்திசையில் அமைத்துப் பாட விரும்புவார்க்குப் பயன்படும்பொருட்டு விருத்தங்களின் பெயர்கள் ஒருவாறு அமைக்கவேண்டி வந்தன. இவ்விஷயம் சைவத் திருமுறைகளினுள்ளு முண்டென்பதைக் கண்டறியலாம். சீவகசிந்தாமணி முதலிய சில சங்கநூல்களிலும் ஓசை முதலியவற்றின் குறைபாடுகள் உள்ளன வெனினும் அவை நல்லிசைப் புலவர் செய்த தொல்பெருநூல்களாதலிற் போற்றிக்கொள்ளப் பெறுகின்றனவன்றே."

"தமிழிலக்கண விதிகளோடு நன்று பொருந்தற்கு இயலாத பிரயோகங்களை, வேத வேதாங்கங்களில் 'சாந்தஸம்' 'ஆர்ஷம்' என்பதுபோலக்கொள்ளுதலேதக்கது. வடமொழி வேதம்போல, திவ்யப்ரபந்தத்தைத் 'தமிழ்

வேதம்' எனவும் ('சந்தங்களாயிரம்' எனவும்), ஆழ்வாரை 'முநி' எனவும் 'ரிஷி' எனவும் நம் பூருவராகிய சீரியோர் கூறுப. 'ஸம்ஸ்க்ருதஸ்ய தஸ்யோய ஷுக்ஷ த்ராவிடஸ்ய தயைவ ச। நிதாநம்ஸகல் ஷட்வர்ண்யதே' என மார்க்கண்டேய புராணமுங் கூறுகின்றது'' என்றவை உணர்க.

''செந்திறத்த தமிழ் என்கையாலே ஆகஸ்த்யமும் அநாதி. வடமொழி மறையென்றது தென்மொழி மறையை நினைத்திறே வேதசதுஷ்டயாங் கோபாங்கங்கள் பதினாலும்போலே இந்நாலுக்கும் இருந்தமிழ் நூற்புலவர் பனுவலாறும் மற்றை யெண்மர் நன்மாலைகளும். ஸகல வித்யாதிக வேதம் போலே இதுவும் திவ்யப்ரபந்த ப்ரதாநம். வேதநூல் இருந்தமிழ் நூல் ஆஜ்ஞை ஆணை வசையில் ஏதமில் சுருதி செவிக்கினிய ஓதுகின்றதுண்மை பொய்யில் பாடல் பண்டை நிற்கும் முந்தை அழிவில்லா வென்னும் லக்ஷணங்கள் ஒக்கும். சொல்லப்பட்ட வென்றவிதில் கர்த்த்ருத்வம் ஸ்ம்ருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தா னென்றதுபோலே. நால்வேதங்கண்ட புராண ருஷி மந்த்ரதர்சிகளைப்போலே இவரையும் ரிஷி முநி கவி யென்னும். படைத்தான் கவி யென்றபோதே இதுவும் யதாபூர்வகல்பநமாமே........இயற்பா மூன்றும் வேதத்ரயம்போலே; பண்ணார்பாடல் (திருவாய் மொழி) பண் புரையிசைகொள் வேதம்போலே. ருக்கு ஸாமத்தாலே ஸரஸமாய் ஸ்தோபத்தாலே பரம்புமாபோலே சொல்லார் தொடையல் (திருவிருத்தம்) இசை கூட்ட அமர்சுவையாயிரமாயிற்று. சந்தோகனென்று ஸாமாந்யமாகாமல் முதலிலே பிரித்து யாழ்பயில் ஞாந ஸ்வரூபியைப் பாலையாகியென்று விசேஷிக்கையாலே வேதகீதச்சாமி நானென்ற ஸாமந்தோன்ற உத்கீத ப்ரணவத்தை ப்ரதமத்திலே மாமுடி, சாமகதி முடிவாகத்தொண்டர்க்கமுதென்ன ஷைவாங்நமாக்கி மஹா கோஷநல்வேத வொலிபோலே மஹாத்யயநமென்னப் பாடுகையாலே இத்தைச் சாந்தோக்ய ஸமமென்பர்கள்'' என்ற ஆசார்ய ஹ்ருதயஸூக்திகளையும், அவற்றுக்கு விசதவாக் சிகாமணியான மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வியாக்கியானத்தையுங் கண்டு தெளிக.

இனி, இவ்வாறாக நெஞ்சிற்றோன்றும் விஷயங்களனைத்தையும் இங்கு எழுதப்புகின் விரிவு பெரிதாடைத்தாமென்று அஞ்சி இவ்வளவோடு ஒழியலாயினேன்.

''நல்லார் பிறர்குற்றம் நாடார் நலந்தெரிந்து
கல்லார் பிறர்குற்றங் காண்பாரே.''

''குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.''

மகா[illegible], டாக்டர்
உ. வே. சா[illegible] நிலைய[illegible]க்ஷணம்:
அ[illegible] ப்ரதிவாதிபயங்கரம், அண்ணங்கராசாரியன்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழிகளின்

# செய்யுள் முதற் குறிப்பகராதி.




| செய்யுள். | பக்கம். |
|---|---|
| **அ.** | |
| அக்கரை யென்னும் ... | ௪௦௯ |
| அக்காக்காய் நம்பிக்கு ... | ௧௩௧ |
| அங்கமலக் கண்ணன் றன்னை ... | ௧௯௨ |
| அங்கமலப் போதகத்தில் ... | ௧௦௨ |
| அங்கம் விட்டவையைந்தும் ... | ௩௧௯ |
| அங்கொரு கூறை ... | ௩௨௨ |
| அஞ்சன வண்ணனை ... | ௧௭௩ |
| அஞ்சுடராழியுன் ... | ௧௮௪ |
| அடியோமோடும் ... | ௧௧ |
| அடைந்திட்டமரர்கள் ... | ௯௫ |
| அட்டுக்குவி சோற்று ... | ௨௦௦ |
| அண்டக்குலத்துக்கு ... | ௧௩ |
| அண்டத்தமரர்கள் சூழ ... | ௧௩௮ |
| அண்டத்தமரர் பெருமான் ... | ௨௪௯ |
| அதிருங்கடல் நிறவண்ணனை ... | ௩௦ |
| அதிர்முகமுடைய வலம்புரி ... | ௩௩௧ |
| அப்பங்கலந்த சிற்றுண்டி ... | ௧௧௭ |
| அம்மைத் தடங்கண் ... | ௨௦௩ |
| அரவணையாயாயரேறே ... | ௯௭ |
| அரவத்தமளியினோடும் ... | ௩௯௫ |
| அரவில் பள்ளிகொண்டு ... | ௨௧௩ |
| அலம்பாவெருட்டா ... | ௨௮௩ |
| அல்லியம்பூ மலர்க்கோதாய் ... | ௨௬௪ |
| அல்வழக் கொன்றுமில்லா ... | ௧௭ |
| அவ்வவ்விடம் புக்கு ... | ௧௭௯ |
| அழகிய பைம் பொன்னின் ... | ௩௫ |
| அழகிய வாயிலமுதவூறல் ... | ௪௫ |
| அளந்திட்ட தூணை ... | ௯௪ |
| அனந்தன் பாலும் ... | ௪௨௧ |
| அன்றுவயிற்றில் கிடந்து ... | ௪௦௯ |
| அன்னமும் மீனுருவும் ... | ௫௮ |
| **ஆ.** | |
| ஆசைவாய்ச் சென்ற ... | ௩௧௧ |
| ஆட்கொள்ளத் தோன்றிய ... | ௯௯ |
| ஆநிரை மேய்க்க நீபோதி ... | ௧௩௨ |
| ஆமையாய்க் கங்கையாய் ... | ௩௫௩ |
| ஆமையின் முதுகத்திடை ... | ௩௦௫ |
| ஆயர் குலத்தினில் வந்து ... | ௭௩ |
| ஆயிரந் தோள்பரப்பி ... | ௩௦௦ |
| ஆய்ச்சியர் சேரி ... | ௧௫௮ |
| ஆய்ச்சியன்றாழிப்பிரான் ... | ௮௮ |
| ஆலத்திலையான் ... | ௧௨௯ |
| ஆற்றிலிருந்து ... | ௧௫௫ |
| ஆனாயர் கூடியமைத்த ... | ௨௮௫ |
| **இ.** | |
| இடவணரையிடத்தோளொடு ... | ௨௧௫ |
| இந்திரனோடு பிரமன் ... | ௧௩௯ |
| இமையவரிறுமாந்து ... | ௩௩௨ |
| இருங்கொடு நீர் ... | ௧௪௩ |
| இருங்கைம்மதகளிறு ... | ௨௯ |
| இருட்டிற் பிறந்து ... | ௯௨ |
| இருமலைபோ லெதிர்ந்த ... | ௧௦௧ |
| இன்பமதனையுயர்த்தாய் ... | ௧௪௩ |
| **உ.** | |
| உச்சியிலெண்ணெயும் ... | ௩௨௩ |
| உடுத்துக் களைந்த ... | ௧௯ |
| உடையார் கனமணியோடு ... | ௩௭ |
| உந்தியெழுந்த வுருவ ... | ௧௨௫ |
| உய்யவுலகு படைத்து ... | ௪௯ |
| உரகமெல்லணையான் ... | ௩௦௪ |
| உரம்பற்றி யிரணியனை ... | ௩௫௯ |
| உருப்பிணி நங்கைதன்னை ... | ௨௯௨ |
| உருப்பிணி நங்கையை ... | ௨௫௩ |
| உழந்தாள் நறுநெய் ... | ௨௭ |
| உழுவதோர் படையும் ... | ௩௩௩ |
| உறகலுறகலுறகல் ... | ௩௩௫ |
| உறியை முற்றத்து ... | ௨௨ |
| உற்றவுறுபிணி நோய்காள் ... | ௩௯௨ |
| உனக்குப் பணிசெய்திருக்கும் ... | ௪௦௦ |

| செய்யுள் | பக்கம் |
|---|---|
| உன்னுடைய விக்கிரமம் | ... ௪௧௯ |
| உன்னையு மொக்கலையில் | ... ௫௯ |
| **ஊ** | |
| ஊத்தைக் குழியில் | ... ௩௨௭ |
| **எ.** | |
| எட்டுத் திசையும் | ... ௨௯௧ |
| எண்ணெய்க் குடத்தை | ... ௧௧௮ |
| எத்தனை காலமும் | ... ௪0௮ |
| எந்தப்பிரானார் | ... ௩௮ |
| எந்தை தந்தை தந்தை | ... ௧௩ |
| எத்தொண்டை வாய்ச்சிங்கம் | ... ௩௩ |
| எந்நாளெம்பெருமான் | ... ௧௯ |
| எம்மனா வென்குல தெய்வமே | ... ௪௪௩ |
| எரிசிதறுஞ் சரத்தால் | ... ௨௯௮ |
| எருதுகளோடு பொருதி | ... ௧௩௫ |
| எருத்துக் கொடியுடையானும் | ... ௪0௫ |
| எல்லையில் வாசல் குறுக | ... ௩௯௭ |
| எழிலார் திருமார்பிற்கு | ... ௩௯ |
| என் குற்றமே யென்று | ... ௧0௯ |
| என் சிறுக்குட்டன் | ... ௪௩ |
| என் வில் வலிகண்டு | ... ௨௫௨ |
| என்று மெனக்கினியானை | .. ௧௭௯ |
| என்னாதன் தேவிக்கு | ... ௨௫௧ |
| என்னிது மாயம் | ... ௮0 |
| **ஏ.** | |
| ஏடு நிலத்திலிடுவதன் | ... ௧௨௪ |
| ஏதங்களாயின வெல்லாம் | ... ௩௯௭ |
| ஏவிற்றுச் செய்வான் | ... ௨௮ |
| ஏழை பேதையோர் பாலகன் | ... ௨௩0 |
| **ஐ.** | |
| ஐயபுழுதி யுடம்பளைந்து | ... ௨௨௭ |
| **ஒ.** | |
| ஒருகாலிற் சங்கொருகாலில் | ... ௭0 |
| ஒரு மகள் தன்னையுடையேன் | ... ௨௪௩ |
| ஒரு வாரணம் பணிகொண்டவன். | ௨௮௯ |
| ஒற்றைவிடையனும் | ... ௩௯௮ |
| ஒன்றுமறி வொன்றில்லாத | ... ௨௪௧ |
| ஒன்றேயுரைப்பான் | ... ௧௨௮ |
| **ஓ.** | |
| ஓடவோடக் கிண்கிணிகள் | ... ௧0௨ |
| ஓடுவார் விழுவார் | ... ௨௧ |
| ஓதக்கடலில் | ... ௪0 |
| **க.** | |
| கச்சொடு பொற்சுரிகை | ... ௪௧ |
| கஞ்சனுங் காளியனும் | ... ௨௯௩ |
| கஞ்சன் கறுக்கொண்டு | ... ௧௪௨ |
| கஞ்சன் புணர்ப்பினில் வந்த | ... ௧௧௭ |
| கஞ்சன் றன்னால் புணர்க்கப்பட்ட. | ௯௯ |
| கடல்கடைந்தமுதங்கொண்டு | ... ௪௧௫ |
| கடியார் பொழிலணி | ... ௧௮௨ |
| கடுவாய்ச் சினவெங்கண் | ... ௨0௫ |
| கண்ட கடலும் மலையும் | ... ௮0 |
| கண்டார் பழியாமே | ... ௧௨௯ |
| கண்ணா நான்முகனை | ... ௩௮௨ |
| கண்ணில் மணல்கொடு | ... ௧௪௧ |
| கண்ணைக் குளிரக் கலந்து | ... ௧௧௨ |
| கதிராயிர மிரவி | ... ௨௭௨ |
| கத்தக்கதித்துக் கிடந்த | ... ௮௪ |
| கரிய முகில் புரைமேனி | ... ௨௮௧ |
| கருங்கண் தோகை மயில் | ... ௨௨௪ |
| கரும்பார் நீள் வயல் | ... ௧௯௭ |
| கருவுடை மேகங்கள் | ... ௧௩௩ |
| கருளுடைய பொழில் மருதும் | ... ௩௫௧ |
| கலக்கியமா மனத்தனனாய் | ... ௨௯௫ |
| கழல் மன்னர் சூழ | ... ௭௯ |
| கள்ளச் சகடு மருதும் | ... ௪௨ |
| கறந்த நற்பாலும் | ... ௧௧௯ |
| கறுத்திட் டெதிர்நின்ற | ... ௧௨௮ |
| கற்பகக்காவு கருதிய | ... ௮௮ |
| கற்றினம் மேய்த்து | ... ௧௨௩ |
| கனங்குழையாள் பொருட்டா | ... ௨௯௮ |
| கன்றினை வாலோலைகட்டி | ... ௧௧௯ |
| கன்றுகளில்லம்பு குந்து | ... ௧௪0 |
| கன்றுகளோடச் செவியில் | ... ௧௧௯ |
| கன்னலிலட்டுவத்தோடு | ... ௧௫௧ |
| கன்னற் குடந்திறந்தால் | ... ௯௯ |
| கன்னி நன்மாமதிள் சூழ் | ... ௧௮௧ |
| **கா.** | |
| காசின்வாய்க் கரம் | ... ௩௧0 |
| காசுங் கறையுடை | ... ௩௨௧ |
| காடுகளூடுபோய் | ... ௧௮௨ |
| காதம் பலவுந் திரிந்து | ... ௪0௧ |
| காமர்தாதை கருதலர் | ... ௩௮௫ |
| காயமலர் நிறவா | ... ௫௪ |
| காயு நீர்புக்கு | ... ௮௨ |
| காரார் கடலையடைத்திட்டு | ... ௨௯௧ |
| காரார்மேனி நிறத்து | ... ௧௭௨ |

| செய்யுள் | பக்கம் |
|---|---|
| காரிகையார்க்கு முனக்கும் | ... ௧௧௧ |
| கார்மலி மேனி நிறத்து | ... ௧௨௦ |
| காலுமெழா கண்ணநீரும் | ... ௪௦௩ |
| காளியன் பொய்கை | ... ௨௫௮ |
| காறை பூணும் கண்ணாடி | ... ௨௩௫ |
| காணார் நறுந்துழாய் | ... ௪௦ |
| **கி.** | |
| கிடக்கில் தொட்டில் | ... ௨௪ |
| கிண்கிணி கட்டி | ... ௮௩ |
| கிழக்கில் குடிமன்னர் | ... ௧௨௪ |
| **கீ.** | |
| கீழுலகி லசுரர்களை | ... ௩௪௩ |
| **கு.** | |
| குடங்களெடுத்து | ... ௧௩௬ |
| குடியிற் பிறந்தவர் | ... ௨௪௬ |
| குடையுஞ் செருப்பும் | ... ௧௭௮ |
| குண்டலந் தாழ | ... ௧௫௬ |
| குமரி மணஞ்செய்து | ... ௨௪௨ |
| கும்மாயத்தொடு வெண்ணெய் | ... ௧௬௫ |
| குரக்கினத்தாலே | ... ௬௪ |
| குருந்தமொன் றொசித்தான் | ... ௩௦௭ |
| [illegible] மரத்த | ... ௪ |
| குழலிருண்டு சுருண்டேறிய | ... ௨௨௫ |
| குறட் பிரமசாரியாய் | ... ௩௫௮ |
| குறுகாத மன்னரை | ... ௨௮௯ |
| குற்றமின்றிக் குணம்பெருக்கி | ... ௩௦௨ |
| குன்றூடு கொழுமுகில்போல் | ... ௩௪௬ |
| குன்றெடுத்தாநிரைகாத்தபிரான், | ௧௯௩ |
| குன்றெடுத்தாநிரைகாத்தவாயா.. | ௩௭௧ |
| **கூ.** | |
| கூடிக்கூடியுற்றார்களிருந்து | ... ௩௧௮ |
| கூன்தொழுத்தை சிதகு | ... ௩௪௧ |
| **கே.** | |
| கேசவனே யிங்கே போதராயே... | ௧௫௧ |
| கேட்டறியாதன கேட்கின்றேன்.. | ௧௮௭ |
| **கை.** | |
| கைத்தலத்துள்ள மாடழிய | ... ௨௩௭ |
| கைந்நாகத் திடர்கடிந்த | ... ௩௬௩ |
| கையுங்காலும் நிமிர்த்தி | ... ௨௩ |
| **கொ.** | |
| கொங்குங் குடந்தையும் | ... ௧௨௭ |
| கொங்கைச் சிறுவரை | ... ௩௯௩ |
| கொங்கைவன் கூனிசொல் | ... ௯௫ |
| கொடியேறு செந்தாமரை | ... ௨௧௨ |
| கொண்டதாளுறி | ... ௨௨ |
| கொண்டல் வண்ணா | ... ௧௪௭ |
| கொம்பினார் பொழில்வாய் | ... ௩௦௯ |
| கொலையானைக் கொம்பு | ... ௨௭௪ |
| கொழுப்புடைய செழுங்குருதி | ... ௩௪௪ |
| **கோ.** | |
| கோட்டு மண்கொண்டு | ... ௨௯[illegible] |
| கோளரியின் னுருவங்கொண்டு | ... ௫௦ |
| **ச.** | |
| சக்கரக்கையன் | ... ௪௪ |
| சங்கின் வலம்புரியும் | ... ௩௮ |
| சந்திரமேந்தி | ... ௮௬ |
| சலமாமுகில் பல்கணப்போர் | ... ௨௦௬ |
| சலம்பொதி யுடம்பின் | ... ௩௩௦ |
| சழக்கு நாக்கொடு | ... ௩௭௫ |
| **சா.** | |
| சாமிடத்தென்னை | ... ௩௬௧ |
| சாலப் பன்னிரைப்பின்னே | ... ௧௯௬ |
| **சி.** | |
| சித்திரகுத்தனெழுத்தால் | ... ௩௮௧ |
| சித்திரகூடத் திருப்ப | ... ௩௬௧ |
| சிந்தப் புடைத்து | ... ௨௯௦ |
| சிந்துரப் பொடிக்கொண்டு | ... ௧௯௭ |
| சிந்துரமிலங்க | ... ௧௯௫ |
| சிறியனென்றென் | ... ௪௬ |
| சிறுவிரல்கள் தடவி | ... ௨௨[illegible] |
| **சீ.** | |
| சீதக்கடலுள் | ... ௨௬ |
| சீதநீர் புடைசூழ் | ... ௩௧௧ |
| சீமாலிகனவனோடு | ... ௧௩௬ |
| சீயினற் செறிந்தேறிய | ... ௩௧௨ |
| சீரணிமால் திருநாமமே | ... ௩௨௮ |
| சீரொன்று தூதாய் | ... ௧௨௯ |
| சீலைக்குதம்பை | ... ௧௮௦ |
| **சு.** | |
| சுரிகையுந் தெறிவில்லும் | ... ௧௯௨ |
| சுருப்பார்குழலி | ... ௩௬ |
| சுற்றி நின்றாயா | ... ௧௯௪ |
| சுற்றுமொளிவட்டம் | ... ௪௪ |

| செய்யுள் | பக்கம் |
|---|---|
| **செ.** | |
| செக்கரிடை நுனி | ... ௬௭ |
| செங்கமலக் கழலில் | ... ௫௭ |
| செங்கமலப் பூவில் | ... ௭௫ |
| செஞ்சொல் மறைப்பொருள் | ... ௩௭௦ |
| செண்பக மல்லிகை | ... ௧௩௮ |
| செத்துப் போவதோர் | ... ௩௨௦ |
| செந்நெலரிசி சிறுபருப்பு | ... ௧௫௦ |
| சென்றுலகங் குடைந்தாடும் | ... ௪௪௦ |
| சென்னியோங்கு | ... ௪௧௧ |
| செந்நெலார் வயல்சூழ் | ... ௨௫ |
| செப்பாடுடைய திருமாலவன் | ... ௨௦௭ |
| செப்பிள மென் முலை | ... ௯௪ |
| செப்போது மென்முலை | ... ௪௪௦ |
| செம்பெருந்தடங்கண்ணன் | ... ௨௧௯ |
| செருவாளும் புள்ளாளன் | ... ௩௬௨ |
| **சே.** | |
| சேப்பூண்ட சாடு | ... ௯௩ |
| **சொ.** | |
| சொல்லிலரசிப்படுதி | ... ௧௫௨ |
| **சோ.** | |
| சோத்தம்பிரானென்று | ... ௧௦௭ |
| சோர்வினாற் பொருள் | ... ௩௧௬ |
| **ஞா.** | |
| ஞாலமுற்றுமுண்டாலிலை | ... ௨௩௬ |
| **த.** | |
| தக்கார் மிக்கார்களை | ... ௨௮௫ |
| தங்கையை மூக்கும் | ... ௩௨௯ |
| தடம்படு தாமரை | ... ௧௫௬ |
| தடவரைவாய் மிளிர்ந்து | ... ௪௨௩ |
| தண்டொடு சக்கரம் | ... ௪௫ |
| தண்ணமா வில்லை நமன் | ... ௩௬௯ |
| தத்துக்கொண்டாள் | ... ௯௪ |
| தந்தம் மக்களழுது சென்றால் | ... ௯௮ |
| தம்மாமன் நந்தகோபாலன் | ... ௨௪௪ |
| தலைப்பெய்து குமுறி | ... ௩௩௩ |
| தழைகளுந் தொங்கலும் | ... ௪௯௦ |
| தள்ளித் தளர்நடையிட்டு | ... ௧௫௮ |
| தன் முகத்துச் சுட்டி | ... ௪௩ |
| தன்னடியார் திறத்தகத்து | ... ௩௪௯ |
| தன்னேராயிரம் பிள்ளை | ... ௧௬௩ |
| **தா.** | |
| தாய்மார் மோர் விற்க | ... ௧௭௦ |
| தாரித்து நூற்றுவர் | ... ௬௩ |
| தார்க்கிளந்தம்பிக்கு | ... ௨௫௯ |
| தாழியில் வெண்ணெய் | ... ௫௭ |
| தாழை தண்ணாம்பல் | ... ௧௬௦ |
| **தி.** | |
| திக்குநிறை புகழாளன் | ... ௨௭௦ |
| திண்ணக் கலத்து | ... ௪௨௨ |
| திண்ணார் வெண்சங்கு | ... ௧௮௮ |
| திரண்டெழுதழைமழை | ... ௨௨௩ |
| திருவுடைப் பிள்ளைதான் | ... ௪௪௬ |
| திரைநீர்ச் சந்திரமண்டலம் | ... ௭௩ |
| திரைபொரு கடல் சூழ் | ... ௩௩௫ |
| **தீ.** | |
| தீயபுந்திக்கஞ்சன் | ... ௯௯ |
| தீயிற் பொலிகின்ற | ... ௧௪ |
| **து.** | |
| துக்கச் சுழலையை | ... ௩௯௭ |
| துப்புடையாயர்கள் தம் | ... ௫௫ |
| துப்புடையாரை யடைவது | ... ௩[illegible]௫ |
| துன்னிய பேரிருள் | ... ௮௧ |
| **தூ.** | |
| தூவிலா முற்றத்தே | ... ௬௨ |
| **தெ.** | |
| தெருவின்கண் நின்று | ... ௧௩௪ |
| தென்னவன்றமர் | ... ௩௧௭ |
| தென்னிலங்கை மன்னன் | ... ௧௩௧ |
| **தே.** | |
| தேவுடைய மீனமாய் | ... ௩௬௦ |
| தேனுகனாவி செகுத்து | ... ௧௫௭ |
| தேனுகன் பிலம்பன் | ... ௨௧௮ |
| **தொ.** | |
| தொடர் சங்கிலிகை | ... ௬௭ |
| தொத்தார் பூங்குழல் | ... ௧௭௧ |
| **தோ.** | |
| தோட்டமில்லவள் | ... ௩௮௦ |
| தோயம் பரந்த நடுவு | ... ௨௭௫ |
| **ந.** | |
| நச்சுவார்முன்னிற்கும் | ... ௮௨ |

